ஸ்ரீ

பிள்ளை லோகாசார்யர்

# ஸ்ரீவசன பூஷணம்

மணவாள மாமுனிகள்

## வியாக்கியானம் - தமிழ் ஆக்கம்



வெளியிடுவோர்

தி. கி. நாராயணசாமி நாயடு

2 சீதாராமநகர் - கடலூர் - 1

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

    

பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த

# ஸ்ரீ வசன பூஷணம் மூலமும்

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# வியாக்கியானத்தின் தமிழ் ஆக்கமும்


பண்டித வித்துவான்

B. R. புருஷோத்தம நாயடு

இயற்றியது



வெளியிடுவோர்:

தி. கி. நாராயணசாமி நாயடு

2, சீதாராமநகர்

கடலூர்-1





1970

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# முன்னுரை

வாய்க்க தமியேற்கு ஊழிதோறு
    ஊழி ஊழி, மாகாயாம்
பூக்கொள் மேனி நான்குதோள்
    பொன்னாழிக்கை என்னம்மான்
நீக்க மில்லா அடியார்தம்
    அடியார் அடியார் அடியார்எம்
கோக்கள், அவர்க்கே குடிகளாய்ச்
    செல்லும் நல்ல கோட்பாடே.

—நம்மாழ்வார்

ஸ்ரீவசனபூஷணம்: இது ஸ்ரீமத் பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்த பதினெட்டு இரகசிய நூல்களுள் ஒன்று. இதனை அப்பெரியார் ஞானம் முதிர்ந்து கனிந்த உயர்நிலையில் நின்று அருளிச்செய்திருத்தல் வேண்டும் என்று கருதப்படுகிறது. இது, வேத வேதாந்தங்களின் கருத்துப் பொருளையும் பெரியோர்களுடைய பொன்மொழிகளையும் அவர்கள் நடந்து காட்டிய ஒழுக்கங்களையும் தொகுத்துக் கூறுவது. கற்றோர் தம்முயிர்க்குக் கலன் போன்று அழகு செய்வது. ஆதலின், வசனபூஷணம் எனப் பெயர் பெற்றது. திருவாய்மொழி, திருப்பாவை என்பவற்றிலுள்ள 'திரு'வைப்போன்று 'ஸ்ரீ' என்பது இதனுடைய சீர்மையை உணர்த்த வந்த அடைமொழி.

அன்ன புகழ்முடும்பை அண்ணலுல காசிரியன்
இன்னருளால் செய்தகலை யாவையினும்—உன்னில்
திகழ்வசன பூடணத்தின் சீர்மைஒன்றுக்கில்லை
புகழலவிவ் வார்த்தைமெய்யிப் போது.

முன்னம் குரவோர் மொழிந்த வசனங்கள்
தன்னைமிகக் கொண்டுகற்றோர் தம்முயிர்க்கு—மின்னணியாச்
சேரச் சமைத்தவரே சீர்வசன பூடணமென்
பேரிக் கலைக்கிட்டார் பின்.

—உபதேச ரத்தினமாலை, 53, 54

என்றார் பெரியாரும்.



திரு அரங்கம் – மணவாள மாமுனிகள்

இந்நூல் புருஷகார உபாய வைபவம், உபாயம், அதிகாரி நிஷ்டை, ஆசாரிய அநுவர்த்தனம், பகவந்நிர்ஹேதுக கிருபை, சரமபர்வ நிஷ்டை என ஆறு பிரிவுகளையுடையது. இனிப் புருஷகார உபாயவைபவம், உபாயம், உபாயாந்தர தோஷம், சித்தோபாய நிஷ்டர் வைபவம், பிரபந்ந தினசர்யை, சதாசார்ய லக்ஷணம், சச்சிஷ்ய லக்ஷணம், பகவந் நிர்ஹேதுக விஷயீகாரம், சரம பிராப்பியப் பிராபகம் என ஒன்பது பிரிவுகளாகவும் பிரித்தல் தகும். இவ்விரு பிரிவுகளும் பெரியோர்க்கு உடன்பாடாதலைப் 'பேறு தருவிக்குமவள்தன் பெருமை', 'திருமாமகள் தன் சீரருள் ஏற்றம்' என்ற இரண்டு சிறப்புப் பாயிரச் செய்யுள்களாலும், ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் அருளிச்செய்த உரைப் பாயிரத்தாலும், ஒவ்வொரு பிரகரணத்தின் இறுதியிலும் அதுகாறும் கூறியவற்றைத் தொகுத்து உரைக்கும் தொகுப்புரையாலும் அறிதல் தகும்.

இந்நூல் சொல்லாழம், பொருளாழம் உடையது ஆதலின், இதன் நுண்பொருளை அறிதல் அரிது என்றும், ஒருவாறு அறியினும் இது கூறியவாறு நிற்றல் அதனினும் அரிது என்றும் பெரியோர் கூறுவர்.

'ஆர்வசன பூடணத்தின் ஆழ்பொருளெல் லாமறிவார்
ஆர்அதுசொல் நேரில் அநுட்டிப்பார்—ஓர்ஒருவர்
உண்டாகில் அத்தனைகாண் உள்ளமே எல்லார்க்கும்
அண்டாத தன்றோ அது?' (55)

என்பது உபதேச ரத்தினமாலைத் திருவாக்கு.

இத்தகைய நூலுக்கு வியாக்கியானங்கள் மூன்று அமைந்துள்ளன. ஒன்று, இந்நூலாசிரியரான ஸ்ரீமத் பிள்ளை லோகாசாரியருக்கு மாணுக்கரும் உரையாசிரியரான ஸ்ரீமத் மணவாள மாமுனிகளுக்கு ஆசாரியரும் ஆன திருவாய்மொழிப்பிள்ளை அருளிச்செய்தது. இவ்வுரை இதுகாறும் அச்சில் வந்திலது. இவ்வியாக்கியானம் ஒன்று உண்டு என்பதனைத் திருமழிசை ஸ்ரீமத் அண்ணு அப்பங்கார் ஸ்வாமிகள் 267ஆம் சூத்திர விளக்கவுரையில் எழுதியிருத்தல் கொண்டு அறிதல் தகும். இரண்டாவது, திருநாராயணபுரத்து ஆய் என்னும் பெரியார் அருளிச்செய்த வியாக்கியானம். மூன்ருவது, விசதவாக்சிகாமணியாகிய சுவாமி மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியானம். இவ்விரு வியாக்கியானங்களும் அச்சில்

வந்துள்ளன. இவ்விரண்டனுள் மணவாள மாமுனிகள் வியாக்கியானமே பண்புடைய பலராலும் மிக்குப் பயிலப்பட்டு வருவது.

இவ்வியாக்கியானத்திற்கு விளக்கவுரைகளும் மூன்று அமைந்துள்ளன. ஒன்று, திருமழிசை ஸ்ரீமத் அண்ணா அப்பங்கார் ஸ்வாமிகள் அருளிச்செய்தது. இது மிக விரிவாய் உள்ளது. இவ்விளக்கவுரையால் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியானத்தின் திட்ப நுட்பங்களும் அருமை பெருமைகளும் இனிது விளங்குகின்றன. மற்றொன்று, ஸ்ரீபெரும்பூதூர் பரமஹம்ச எம்பார் ஜீயர் ஸ்வாமிகள் அருளிச்செய்தது. இதில் அவர்தம் திருவுள்ளக்கருத்துகள் பலவும் பொலிவுற்று விளங்குகின்றன. இவ்விளக்கவுரை 223 சூத்திரங்கள் வரையில்தான் உள்ளது. பிறிதொன்று எழுதினார் பெயர் தெரிந்திலது. இது மிகவும் சுருக்கமாய் இருக்கின்றது. இதுவும் 55 சூத்திரங்கள் வரையில்தான் இருக்கின்றது.

இவையெல்லாம் வடமொழியும் தென்மொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் உள்ளன. தமிழ் மக்களுக்கும் பயன்படும் வகையில் இவற்றைத் தமிழ் ஆக்கம் செய்ய வேண்டும் என்று பெரியோர்கள் பணித்தவாறு திருவாய்மொழிஈடு முப்பத்தாறாயிரப்படி, ஆசாரிய ஹிருதய வியாக்கியானம் என்னும் இவற்றைத் தமிழ் ஆக்கம் செய்தது போன்று, இந்நூலுக்கு உள்ள வியாக்கியானங்கள் மூன்றனுள் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் வியாக்கியானத்தை மட்டும் தமிழ் ஆக்கம் செய்துள்ளேன். திருமழிசை அண்ணா அப்பங்கார் ஸ்வாமிகள் விளக்கவுரையை அடி ஒற்றிக் குறிப்புரை ஒன்றும் எழுதி அவ்வச்சூத்திரங்களின் அடியில் தந்துள்ளேன்.

'குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.'

இந்நூலின் வியாக்கியானத்தைத் தமிழ் ஆக்கம் செய்துழி வியாக்கியானத்திற்கியைய்ச் செப்பஞ்செய்யப்பட்ட சூத்திரங்களும் சில உள. அவற்றை வந்துழி வந்துழிக் காட்டுவன். ஆங்கு ஆங்கு உணர்க. ஈண்டும் இரண்டு காட்டுகின்றேன். 'இதிகாச சிரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது; மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது.' இது இரண்டு சூத்திரங்களாக இருத்தல் வேண்டும். முன்னைய அச்சுப்புத்தகங்களில் ஒரு

சூத்திரமாகத் தரப்பட்டுள்ளது. இது பிழை. வியாக்கியானத்தை நோக்குக. 'இவ்வர்த்தம் இதிகாச புராணங்களிலும் பயிலும் சுடரொளி நெடுமாற்கடிமையிலும் கண்சோர வெங்குருதியிலும் நண்ணாத வாளவுணரிலும் தேட்டருந்திறல் தேனிலும் மேம்பொருளுக்கு மேலில் பாட்டுகளிலும் விசதமாகக் காணலாம்' என்ற சூத்திரத்துப் 'பயிலும் சுடரொளியிலும் நெடுமாற்கடிமையிலும்' என்று இருத்தல் வேண்டும். இன்றேல், 'பயிலும் சுடரொளி நெடுமாற்கடிமைகளிலும்' என்று இருத்தல் வேண்டும். சூத்திரத்தின் முன்னும் பின்னும் உள்ள வாக்கியத் தொடரை நோக்குக.

இந்நூலை யான் எழுதிவருங்காலத்து வறுமையால் வாடி வருந்தாமல், இந்நூல் முற்றுப்பெறும் வரையிலும் வேண்டிய அளவு பொருள் உதவிசெய்து வந்த தில்லியிலுள்ள பல்கலைக்கழக மானியக்குழுத் தலைவர் அவர்கட்கு என் நன்றி என்றும் உரித்தாகும்.

இதன் கையெழுத்துப்படியை ஒரு முறை முற்றும் நோக்கிச் செய்ய வேண்டிய திருத்தங்களையும் செய்து தந்த சென்னையிலுள்ள பிரபந்த வித்வான் ஸ்ரீமத் R. வேங்கட ராமாநுஜ ஸ்வாமிகட்கு அடியேன் வணக்கம் என்றும் உரியதாகும்.

இதனை அச்சிடுதற்குப் பல வழிகளையும் யான் நாடியிருந்துழி, இந்நூலின் அருமை பெருமைகளைக் கருதித் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு இது பயன்படல் வேண்டும் என்ற குறிக்கோள் ஒன்றனையே உளங்கொண்டு, வேறொரு கைம்மாறுங் கருதாது, தாமே மனம் உவந்து இதனை அச்சிடுதற்கு முன்வந்து நல்ல முறையில் அச்சிடுவித்த இறைநெறித் தமிழ்ச்செல்வர் ஸ்ரீமாந் தி. கி. நாராயணசாமி நாயடு அவர்கட்கு இத்தமிழ் உலகம் என்றென்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது. நாயடவர்கள் வாழ்க! வாழ்க அவர்தம் தோன்றல்கள்!!

ஆதியில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் யான் தமிழ்ப் பணியை ஏற்றகாலத்து இத்தெய்வத் தமிழ்ப்பணியைச் செய்யப் பணித்ததும் நாராயணன். இறுதியில் அப்பணியை முடிப்பதும் நாராயணன் ஆவதே! இறைவன் திருவருள் இருந்தவாறு என்னே!

இதனை அச்சிடுங்காலத்து ஒரு முறையே 'புரூப்' பார்க்க நேர்ந்தது; இரண்டாம் முறை 'புரூப்' பார்க்க என் நோய்



ஆழ்வார் திருநகரி – இராமாநுஜர்

உற்ற உடல் நிலை இடம் தந்திலது; அக்குறையை நீக்கிய என் அருமை நண்பர் மதிப்பிற்குரிய மகாவித்துவான் உயர்திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கட்கும் மற்றுமுள்ள நண்பர்கட்கும் என் நன்றி உரியதாகும்.

இத்தொண்டினை, தோன்றாத்துணையாக உள்ளிருந்து இயக்கி வரும் அடியேன் பெரிய தந்தையார் ஸ்ரீமத் புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி ஸ்வாமிகட்கு உரிமையாக்குகிறேன்.

இப்பதிப்பு ஸ்ரீமத் மணவாள மாமுனிகளின் அறுநூறாவது அவதார ஆண்டின் ஐப்பசி மூலத்திருநாளின் (3–11–70) வெளியீடாக வெளியிடப்படுகின்றது.

47, சஞ்சீவி நாயடு தெரு
திருப்பாதிரிப் புலியூர்
கடலூர்–2

இங்ஙனம்
B. R. புருஷோத்தம நாயடு

உய்ய நினைவுடையீர்! உங்களுக்குச் சொல்லுகின்றேன் :
வய்யகுரு முன்னம் வாய்மொழிந்த—செய்யகலை
ஆம்வசன பூடணத்தின் ஆழ்பொருளைக் கற்றதற்கு
ஆம்நிலையில் நில்லும் அறிந்து. (56)

சீர்வசன பூடணத்தின் செம்பொருளைச் சிந்தைதன்னால்
தேரிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம்—ஆரியர்காள்!
என் றனக்கு நாளும் இனிதாக நின்றதையோ
உந்தமக்கெவ் வின்பமுள தாம். (59)

ஞானமனுட் டானமிவை நன்றாக வேயுடையன்
ஆன குருவை அடைந்தக்கால்—மாநிலத்தீர்!
தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
தானேவை குந்தம் தரும். (61)

உய்யநினை வுண்டாகில் உங்குருக்கள் தம்பதத்தே
வய்யுமன்பு தன்னையிந்த மாநிலத்தீர்!—மெய்யுரைக்கேன்
பையரவின் மாயன் பரமபதம் உங்களுக்காம்
கையிலங்கு நெல்லிக் கனி. (62)

முன்னோர் மொழிந்த முறைதப்பா மற்கேட்டுப்
பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே—தன்னெஞ்சில்
தோற்றினதே சொல்லியிது சுத்தவுப தேசவர
வாற்றதென்பர் மூர்க்கரா வார். (71)

—உபதேச ரத்தினமாலை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

மாறன் மலரடி வாழ்க!

## நூலாசிரியர் வரலாற்றின் சுருக்கம்

பிள்ளை லோகாசாரியர் என்னும் இப்பெரியார், நம்பிள்ளைக்கு மாணுக்கரும் திருவாய் மொழிக்குப் பகவத் விஷயம் என்று எல்லாராலும் கொண்டாடப்பெறும் ஈடு முப்பத்தாருயிரப்படி என்னும் வியாக்கியானத்தைச் செய்தவரும் மகாவிரக்தருமான வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளையினுடைய மூத்த குமாரர். திருத்தாயார் ஸ்ரீரங்கநாச்சியார். அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் இவர் திருத்தம்பியார். இவர் வன்பெருவானகம் உய்ய அமரர் உய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசர் உய்யத் துன்ப மிகுதுயர் அகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகம்மகிழும் தொண்டர் வாழ அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும் அணியரங்கன் திருவரங்கத்தில் அவதரித்தவர்; அவ் வூரிலேயே வடக்குத் திருவீதியில் நித்திய வாசம் செய்தவர்; பிரமசரிய நிலையினர்.

இவருக்கு ஆசாரியர் நம்பிள்ளை. திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்கள், ஈடு முதலான வியாக்கியானங்கள், ஸ்ரீபாஷ்யம் முதலான கிரந்தங்கள் சாதித்தவர் திருத்தமப்பனுரான வடக்குத் திருவீதிப்பிள்ளை.

இவருக்கு மாணுக்கர்கள்: கூரகுலோத்தமதாசர், திருவாய் மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப் பிள்ளை, மணல்பாக்கத்து நம்பியார், திகழக் கிடந்தார் அண்ணன் முதலாயினேர்.

இவர் இவ்வுலகத்தை அலங்கரித்துக்கொண்டு எழுந்தருளியிருந்த காலம் பதினுன்காம் நூற்ருண்டு.

இவர் அருளிச்செய்த நூல்கள்:

1. தனிப்பிரணவம்: பெரிய திருமந்திரமான திருவெட்டெழுத்தின் பொருளை விவரித்து உரைப்பது.

2. **தனித்துவயம் :** மந்திரரத்தினமான துவயத்தின் பொருளை விரித்து உரைப்பது.

3. **தனிச்சரமம் :** சரமச் சுலோகத்தின் பொருளை விரித்து உரைப்பது.

4. **யாத்ருச்சிகப்படி :** திருமந்திரம், துவயம், சரமச் சுலோகம் என்னும் மூன்று மந்திரங்களின் பொருள்களைச் சுருக்க மாகக் கூறுவது.

5. **பரந்தபடி :** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள்களையே மிகமிக விரிவாகப் பேசுவது. இவ்வுரையில் நாம் பல விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம்.

6. **ஸ்ரீயஃ பதிபடி :** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள்களையே மிகச் சுருக்கமும் இன்றி மிக விரிவும் இன்றி இடை நிகர்த்ததாய்ப் பேசிக்கொண்டு செல்வது. ஆனால், இதில் வடசொற்கள் மிக அதிகம்.

7. **முமுட்சுப்படி :** மேற்கூறிய மூன்று மந்திரங்களின் பொருள்களையே சூத்திரவடிவில் மிகச் சுருக்கமும் இன்றி மிக விரிவும் இன்றி வடமொழிக்கலப்பும் அதிகம் இன்றிப் பத்துவகை அழகும் பொருந்தக் கூறுவது. மிக அரியதொரு நூல். இதற்கு மணவாள மாமுனிகள் வியாக்கியானம் அமைந்திருக்கின்றது. இவற்றுள் யாத்ருச்சிகப்படி, ஸ்ரீயஃ பதிபடி, முமுட்சுப்படி இம்மூன்றும் முதற்குறிப்பால் பெயர் பெற்றவை. பரந்தபடி தன்மையாற் பெயர்பெற்றது.

8. **தத்துவத்திரயம் :** சித்து அசித்து ஈச்வரன் என்னும் தத்துவங்கள் மூன்றனுடைய விளக்கத்தை விரித்துக் கூறுவது. சூத்திர யாப்பில் அமைந்தது. இதற்கு மணவாள மாமுனி களுடைய வியாக்கியானம் அமைந்திருக்கின்றது.

9. **அர்த்தபஞ்சகம் :** ஐந்து பொருள்களின் தன்மையைப் பற்றி விரித்துக் கூறுவதால் இப்பெயர் பெற்றது. ஐந்து பொருள் களின் தன்மைகளாவன : தன்னுடைய தன்மை, இறைவனுடைய தன்மை, தான் பெறும் பயனை அடைவிக்கும் வழியின் தன்மை, பயனை அடைய ஒட்டாமல் தடுக்கும் தடையின் தன்மை, பேற்றின் தன்மை என்பனவாம்.

**10. தத்துவ சேகரம்:** திருமகள் கேள்வனே பரம்பொருள் என்பதனை, வேதம் முதலிய பல நூல்களிலிருந்து பிரமாணங்கள் காட்டி உறுதிப்படுத்துவது. தத்துவம்—திருமால். சேகரம்—ஓர் அணி விசேடம். இதனுள் உயிர் நிலை முதலிய ஏனைய பொருள்களின் தன்மைகள் கூறப்பட்டிருப்பினும் இறைநிலை கூறுதலே மிகுதியாதலின், இப்பெயர் பெற்றது. இதனை ‘இறையனார் களவியல்’ என்று பெயர் அமைந்தது போன்று கொள்க.

**11. பிரபந்நபரித்ராணம்:** தன்னை அடைந்தவர்களைப் பாதுகாத்தல் திருமகள் கேள்வன் ஒருவனுக்கே இயல்பாய் அமைந்தது. ஏனையோர் காத்தற்கு உரியர் அல்லர் என்பதனைப் பல உதாரணங்கள் காட்டி மக்களுடைய மருட்சியைப் போக்கும் ஓர் உயரிய நூல்.

**12. நவவிதசம்பந்தம்:** இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள பிதா புத்திர, இரக்ஷக இரக்ஷிய, சேஷ சேஷி, பர்த்துரு பார்யா, ஞாத்ரு ஞேய, ஸ்வ ஸ்வாமி, ஆதார ஆதேய, சரீர சரீரி, போக்துரு போக்கிய என்ற ஒன்பது வகைப்பட்ட சம்பந்தங்களை விளக்கிக் கூறும் நூல்.

**13. நவரத்தினமாலை:** ஒன்பது வித இரத்தினங்களாலாய மாலை போன்று ஒன்பது வகையான பொருள்களைப் பற்றிக் கூறுவது. அதாவது, தன்னையும் தனக்குப் பகையாய் நிற்கும் உடலையும் உடலினைப்பற்றி நிற்கும் உறவினர்களையும் உண்மை ஞானம் இன்றி வினையியல் பிறப்பிலே அழுந்திக்கிடக்கும் மக்களையும் பிற தெய்வங்களையும் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் ஆசாரியனையும் பிராட்டியையும் இறைவனையும் ஆக, ஒன்பதின்மர்களையும் ஒருவன் நினைத்திருக்க வேண்டிய விதத்தைத் தெளிவாகக் கூறுவது.

**14. சாரசங்கிரகம்:** சாரமான துவயத்தின் பொருளைச் சுருக்கிக் கூறுகின்ற காரணம் பற்றி இந்நூலுக்கு இப்பெயர் அமைந்தது. துவயம் வேதசாரம் எனப்படும். அதில் பத்துப் பதங்கள் உள்ளன; அந்தப் பத்துப் பதங்களின் பொருள் களையும், திருவாய் மொழியில் உள்ள பத்துகளுள் ஒவ்வொரு பத்திற்கும் ஒவ்வொரு பொருளாக நிரலே சேர்த்து அமைத்துக் கூறுவது.

15. பிரமேயசேகரம் : இறைவனுடைய திருவருளைப் பெற்ற ஓர் உயிர் அடையத்தக்க பயன், இறைவனுடைய திருவடிகளில் செய்யும் தொண்டே என்பதனை முறைப்படி விளக்கிக் கூறுவது. பிரமேயம்—பிரமாணத்தால் அறியப்படுவது. இங்குப் பிரமாணம் என்பது உண்மையறிவினைப் பிறப்பிக்கும் நூல்களைக் குறிக்கின்றது.

16. சம்சார சாம்ராஜ்யம் : இதற்குச் சம்சாரமாகிற அரசியலைப் பற்றிக் கூறுவது என்பது பொருள். அரசனுக்குப் படைவீடு போல்வது இவனுக்கு இந்த உடல். இது முற்றுருவகம். இந்த உடலில் இருந்துகொண்டு அரசு புரியும் ஆன்மாவைத் தன்னுடைய திருவருளாலே திருத்திச் சேர்த்துக்கொள்ளுவான் இறைவன் என்று இறைவனுடைய திருவருளை விரித்துக் கூறுகின்றது.

17. அர்ச்சிராதி கதி : இது ‘அர்ச்சிஸ்’ எனப்படும் தேவன் முதலான தேவர் பலர் எதிர் கொள்ளப் போம் வழியான முத்தி நெறியைப் பற்றி விரித்துக் கூறுவது. பிரமேய சேகரத்தில் சுருங்கக் கூறியதை இந்நூலில் மிக விரித்துப் பேசுகிறார். திருவாய் மொழியில் ‘சூழ்விசும்பணி முகில்’ என்று தொடங்கும் திருப்பதிகம் இந்த அர்ச்சிராதிகதியைப் பற்றிக் கூறுவதேயாம்.

18. ஸ்ரீ வசனபூஷணம் : இச்சொற்றொடரின் பொருளையும் இது தோன்றியதற்கு உரிய காரணத்தையும் இந்நூல் உரைப் பாயிரத்தில் (பக். 15-17) காணல் தகும்.

இவற்றை அஷ்டாதச ரஹஸ்யம் என வழங்குவர். சைவத்தில் 14 சித்தாந்த சாஸ்திரங்கள் இருப்பன போன்று, இவை வைஷ்ணவ மதத்திற்கு அமைந்திருக்கின்றன. இவற்றில் கூறப்பட்டிருப்பவை முற்றும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களின் கருத்துப் பொருளும் வேதாந்தங்களின் நுண்பொருளுமாம்.

ஶ்ரீ:
ஶ்ரீமதே ராமாநுஜாய நம:
மாறன் மலரடி வாழ்க!

## உரையாசிரியரைப் பற்றிய சில குறிப்புகள்

விண்வாழ்வை வேண்டித் தொழுவார்க்குத் தீவினை வேரறுத்திம்
மண்வாழ்வை மாற்று மணவாள மாமுனி வண்கழல்என்
கண்வாழும் என்புன் சிரம்வாழும் வாழுமென் காதுநிறைந்து
எண்வாழும் என்னிரு தோள்வாழும் வாழும் எனைக்கலந்தே.

—மணவாள மாமுனி நூற்றந்தாதி

பரம வைதீக சித்தாந்தமாய்த் தமிழ்ப்பெருமக்களின் மதமாய வைணவ மதத்தின் தத்துவங்களை உலகிற்கு உபதேசித்து எங்கும் பரவச்செய்து அதனை வளர்த்த பெரியோர்களை ஆழ்வார்கள் என்றும் ஆசாரியர்கள் என்றும் வழங்குவர். மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையும் ஒன்றத்திரித்துத் திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களை அருளிச்செய்து தீதில் நன்னெறியாகிய ஞானச்சுடர்விளக்கினை ஏற்றினவர்கள் ஆழ்வார்கள் என்று பேசப்படுபவர். ஸ்தோத்திர ரத்தினம் முதலான தோத்திரங்கள் மூலமாகவும் தங்கள் ஞான அநுஷ்டானங்கள் மூலமாகவும், ஆழ்வார்கள் ஏற்றிய அந்த ஞானச் சுடர்விளக்கினை உலகமக்கள் எல்லாருடைய உள்ளங்களிலும் பிரகாசிக்கச் செய்தவர்கள் ஆசாரியர்கள் என்று பேசப்படுவர்.

ஆழ்வார்களுள் முதல்வராய் எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு உலகில் வந்த நம் சடகோபரே ஆசாரிய பரம்பரைக்கும் முதல்வர் ஆவர். இவருடைய சிஷ்யர், ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் அமுதத் திருவாய்மொழி ஈரத்தமிழின் சீரைப் பயின்று உய்யும் சீலம்கொள் நாதமுனி ஆவர். இவர் அந்தணர் மரபினர்; ஒன்பதாம் நூற்றுண்டில் இருந்தவர். இவருடைய சிஷ்யர் உய்யக்கொண்டார். இவருடைய சிஷ்யர் மணக்கால் நம்பி. இவருடைய சிஷ்யர் ஸ்ரீ ஆளவந்தார். இவருடைய சிஷ்யர்



ஆழ்வார் திருநகரி – மணவாள மாமுனிகள்

பெரிய நம்பி. இவருடைய சிஷ்யர் இராமாநுஜர். இவருடைய சிஷ்யர் எம்பார். இவருடைய சிஷ்யர் பட்டர். இவருடைய சிஷ்யர் நஞ்சீயர். இவருடைய சிஷ்யர் நம்பிள்ளை. இவருடைய சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. இவருடைய சிஷ்யர் இந்நூலாசிரியராகிய பிள்ளை லோகாசாரியர். இவருடைய சிஷ்யர் திருவாய்மொழிப்பிள்ளை. இவருடைய சிஷ்யர் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள். இவருடைய காலம் பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியும் பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியும் (கி. பி. 1370–1443) ஆகும். இவரோடு பூர்வாசாரியர்கள் பரம்பரை முடிவுறுகின்றது. சந்தான பரம்பரையில் ஆசாரியர்களுள் முதல்வர் நம்மாழ்வார். கடைக்குட்டி ஆசாரியர் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள்.

ஆக, ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு இறுதியாக உள்ள இந்த ஏழு நூற்றாண்டுகளும் இப்பெரியார்கள் ஒருவர் பின் ஒருவராகத் திருவரங்கம் பெரிய கோயிலில் நித்தியவாசம் செய்துகொண்டு தீதில் நன்னெறியாகிய வைணவ நெறியினை மக்கட்கு ஓதி, ஆழ்வார்கள் ஏற்றிய ஞானச்சுடர் விளக்கின் பேரொளி எண்திக்குகளிலும் பரவும்படி செய்து வந்தமையால், திருவரங்கம் பெரிய கோயிலானது உலகிற்கே ஒரு நடுநிலைத் தீபமாகப் 'பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடும் சித்தர்களும் தொழுது இறைஞ்சத் திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே' என்ற பெரியாழ்வார் திருப்பாசுரத்தின் பொருளை மெய்ப்பித்துக் கொண்டு விளங்கிற்று. தமிழ் நாட்டிற்கு – ஏன் – இத்தேசத்திற்கே இக்காலம் பொற்காலமாகும்.

ஆசாரிய பரம்பரையில் கடைக்குட்டி ஆசாரியரான ஸ்ரீமத் மணவாள மாமுனிகளே இந்நூலுக்கு உரைவகுத்த பேராசிரியர். இவர், திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த ஆழ்வார்திருநகரி என வழங்கப்படுகின்ற திருக்குருகூர் என்கிற திவ்வியதேசத்திலே அவதரித்தவர். திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதர் அண்ணருடைய திருக்குமாரர். திருத்தாயார் ஸ்ரீரங்க நாச்சியார். இவர் அந்தணர் மரபினர். அழகிய மணவாளன் என்பது இவருடைய இயற்பெயர். இப்பெரியார், சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவராய், மறம் திகழும் மனம் ஒழித்து வஞ்சமாற்றி

வன்புலன்கள் அடக்கி இடர்ப்பாரம் துன்பம் துறந்து இருமுப் பொழுதும் ஏத்தி எல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டராய் இல்லறத்தில் வாழ்ந்து வருங்காலத்தில் இவருக்கு ஒரு திருக்குமாரர் அவதரித்தார். அக்குழந்தைக்கு ஆசாரியர் நியமனத்தின்படி 'இராமாநுசப்பிள்ளை' என்ற திருப்பெயரைச் சூட்டினர். ஜீயர் நயினர் என்றும் ஆசாரியபௌத்திரர் என்றும் பிரசித்தராய் மகாபண்டிதோத்தமராய் விளங்கினவர் இவருடைய பௌத்திரர் ஆவர்.

பிள்ளைலோகாசாரியருடைய சிஷ்யரும் ஆழ்வாருடைய ஈரச்சொற்களிலே ஈடுபட்ட பக்தி காரணத்தால் திருவாய்மொழிப் பிள்ளை என்ற சிறப்புப்பெயர் பெற்றவருமான '**திருவாய்மொழிப் பிள்ளை**' என்ற பெரியார் இவருடைய ஆசாரியர் ஆவர். அவரும் இவரை 'ஆம்முதல்வன்' என்று குளிரக் கடாக்ஷித்துத் தம் திருவடி வாரத்திலே நிழலும் அடிதாறும் போன்று வைத்திருந்து தம்முடைய சேமவைப்பான அர்த்த விசேடங்கள் எல்லாவற்றையும் முறையாக உபதேசித்தருளினர். இவரும் தேவு மற்றறியாது அவர் திருவடிகளிலே செய்கின்ற அத்தாணிச் சேவகத்தையே போது போக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

இங்ஙனம் இருக்கும் நாளில் ஆசாரியரான திருவாய்மொழிப் பிள்ளை, புகழ் மலிந்த பாமன்னுமாறன் அடி பணிந்து உய்ந்தவரான இராமாநுசருக்குத் திருக்குருகூரிலே குன்றம் அன்னதொரு கோயிலை எடுப்பித்து, இராமாநுச சதுர்வேதிமங்கலம் என்ற ஒரு வீதியையும் உண்டாக்கி, இராமாநுசரைத் தொழும் பெரியோர்களை அங்கே குடியேறச்செய்து, அக்கோயில் நிர்வாகம் அனைத்தையும் தம் சிஷ்யரான ஸ்ரீமத் மணவாளமாமுனிகளிடத்திலேயே ஒப்படைத்தார்.

இவரும் இராமாநுசரிடத்தில் மிக்க ஈடுபாடு உடையவராய் அக்கோயில் நிர்வாகம் அனைத்தையும் திறம்பட நடத்தி வந்தார். நடத்தி வந்த இவருடைய ஈடுபாட்டினைக் கண்ட ஆசிரியர், இவருக்கு '**யதீந்திரப் பிரவணர்**' என்ற திருப்பெயரைச் சூட்டி, 'இராமாநுசர் விஷயமாக ஒரு நூல் இயற்றுக' என்று கட்டளை இட, அக்கட்டளையைச் சிரமேற்றுங்கி, '**எதிராஜ விம்சதி**' என்றதொரு நூலை அப்பொழுதே இவர் அருளிச்செய்தனர். இது, திருக்குருகூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இராமாநுசர் விஷயமாகச் செய்யப்பட்டதொரு வடமொழி நூல்;

இருபது சுலோகங்களையுடையது. எதிராசர் - துறவிகட்குத் தலைவர் ; இராமாநுசர். விம்சதி - இருபது.

மேலும், ஆசிரியராகிய திருவாய்மொழிப்பிள்ளை தம் மாணாக்கராகிய ஸ்ரீமத் மணவாள மாமுனிகளைப் பார்த்து, "வாரீர் அழகிய மணவாளரே! ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை முதலான நம் முன்னோர்கள் எல்லாச் சாஸ்திரங்களையும் முற்றும் உணர்ந்தவர்களாயிருந்தும், ஆழ்வார்களுடைய ஈரச்சொற்களின் அநுபவங்களிலே ஊன்றியிருந்து அவற்றை உலகில் பரப்புவதனையே சிறந்த தொண்டாகக் கொண்டு வாழ்ந்து வந்ததனை நீர் அறிவீரே! 'முற்படத் துவயத்தைக் கேட்டு, இதிகாச புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷ பிரதிக்ஷேபத்துக்கு உடலாக நியாய மீமாம்சாதிகளையும் அதிகரித்து, போது போக்கும் அருளிச்செயலிலே யாம் நம்பிள்ளையைப் போன்று' (பெரிய திரு. 5. 8 : 7.) என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருப்பதனையும் நீர் அறிவீரே! ஆதலால், சம்ஸ்கிருத கிரந்தங்களில் பலகாலும் கண் வையாமல் ஸ்ரீபாஷ்யத்தை ஒருக்கால் கேட்டு, நமக்கும் எம்பெருமானார்க்கும் பிரியமாகத் திருவாய்மொழி முதலிய அருளிச்செயல்களிலே அநவரதம் பரிசீலனம் பண்ணிக்கொண்டு, தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்தி வைத்து, மறையதனிற் பொருளனைத்தும் வாய் மொழிந்து, மாறன் உரை செய்த தமிழ் மறையை வளர்த்து, இந்த லீலா விபூதியை நித்திய விபூதியாகவே ஆக்கிக்கொண்டு, நம் முன்னோர்களைப் போலவே திருவரங்கம் பெரிய கோயிலில் நித்தியவாசம் செய்துகொண்டு பெருமாளுக்கு மங்களாசாசன பரராய் வாழக் கடவீர்" என்று ஆசிரியர் இட்ட ஆணையை அப்படியே நிறைவேற்றியவர். இதனை இவர்தம் திருவாக்காலும்,

தென்னரங்கர் சீரருளுக் கிலக்காகப் பெற்றோம்
    திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோம்
    மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுளப் பெற்றோம்
    முழுதுநமக் கவைபொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில்நெஞ்சு பேராமை பெற்றோம்
    பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும்பெற் றோமே. (55)

—ஆர்த்தி பிரபந்தம்

செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருல காரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடுநாள்
மந்த மதிப்புவி மானிடர் தங்களை வானில் உயர்த்திடுநாள்
மாசறு ஞானியர் சேரெதி ராசர்தம் வாழ்வு முளைத்திடுநாள்
கந்த மலர்ப்பொழில் சூழ்குரு காதிபன் கலைகள் விளங்கிடுநாள்
காரமர் மேனி அரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில் சீர்மண வாள முனிப்பரன் அவதா ரஞ்செயுநாள்
அழகு திகழ்ந்திடு மைப்பசி யில்திரு மூலம தெனுநாளே. (26)
—வாழித் திருநாமம்

சேற்றுக் கமல வயல்சூழ் அரங்கர்தம் சீர்தழைப்பப்
போற்றித் தொழுநல்ல அந்தணர் வாழஇப் பூதலத்தே
மாற்றற்ற செம்பொன் மணவாள மாமுனி வந்திலனேல்
ஆற்றில் கரைத்த புளியல வோதமிழ் ஆரணமே?

எனப் பிறர் கூறிய கூற்றுகளாலும் அறிதல் தகும். மேலும், முதற்செய்யுளில் இப்பெரியாருடைய குணபூர்த்தியையும் மன நிறைவினையும் மனவடக்கத்தையும் நாம் காண்கிறோம்.

பூதூரில் வந்துதித்த புண்ணியனோ, பூக்கமழும்
தாதார் மகிழ்மார்பன் தானிவனோ,—தூதூர
வந்தநெடு மாலோ, மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார்?

என்ற செய்யுளால் இவர் ஓர் அவதார விசேடம் என்பதனை அறிகிறோம். இது திருநாராயணபுரத்து 'ஆய்' என்னும் பெரியார் பாடியது. இவர் சமகாலத்தவர்.

நாயனாரும், 'தேவரீர் அவதார விசேஷம் என்பதனை நிச்சய மாக அறிந்தேன். எனக்கு அத்தை ஒளிக்கவேண்டா. உள்ளபடி காட்டவேண்டும்' என்று அருளிச்செய்ய, 'ஆகில், ஆசாரியராய் இருக்கிற தேவரீருக்கு ஒளிக்க ஒண்ணாதே; பெரிய பெருமா ளுடைய ரஹஸ்ய நியோகத்தை ஒருவரும் அறியவேண்டா என்று விண்ணப்பம் செய்துகொண்டு, ஏகாந்த ஸ்தலத்திலே மங்கள தீபத்தை ஸ்புரித்து அஞ்சாமல் இருக்க' என்று விண் ணப்பம் செய்து, அஹிபதி நிஜாகாரத்தைக் காட்டக் கண் டருளிப் பீதியுக்தராய் 'இத்தை உபசம்ஹரிக்க வேணும்' என்று அபேக்ஷிக்க, உபசம்ஹரித்து, எப்போதும் போலே நாயனார் எழுந்தருளியிருக்க' என்பது போன்ற இவருடைய சரித்திரப் பகுதிகள் இவர் ஆதிசேஷ அவதாரம் என்பதனை மெய்ப்பித்துக் காட்டுகின்றன.

திவ்வியதேச யாத்திரை செய்ய விரும்பித் திருவரங்கம் பெரியகோயிலினின்றும் புறப்பட்டுப் பல திவ்விய தேசங்களையும் சேவித்துக்கொண்டு காஞ்சீபுரத்தை அடைந்து, அங்கு எழுந்தருளியுள்ள வரதராஜனைச் சேவித்து, அவன் வடிவழகில் ஈடுபட்டு, அவன் விஷயமாக 'ஸ்ரீ தேவராஜ மங்களம்' என்றதொரு நூலையும் அருளிச்செய்து, அங்கு எழுந்தருளியிருக்கும் காலத்தில், ஸ்ரீபாஷ்யம் பாடம் கேட்பதற்கு விரும்பிய அங்குள்ள பெரியார் பலருடைய வேண்டுகோட்கு இணங்கி, ஒரு வருட காலம் அங்குத் தங்கியிருந்து, அவர்கட்கு ஸ்ரீபாஷ்யத்தைப் பிரவசனம் செய்தார் என்று சரித்திரம் கூறுகின்றது. 'ஸ்ரீதேவ ராஜ மங்களம்' என்ற நூல் வடமொழியில் உள்ளது.

"ஸ்ரீரங்கநாதர், 'நமக்கு அழகிய மணவாள மாமுனியிடத்திலே திராவிட வேதமான நாலாயிரத் திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களைக் கேட்க அபிநிவேசமாயிருக்கிறது. ஆகையால், இந்த மணவாளமாமுனியைக் கருடமண்டபமான பெரிய திரு மண்டபத்திலே அழைப்பியும்' என்று அர்ச்சகரிடத்திலே ஆவிஷ்டராய்ச் சந்தோஷத்துடனே அருளிச்செய்து, தாமும் அங்கே எழுந்தருளிச் சமஸ்த ஜனங்களோடே கூடியிருந்து ஒரு சம்வத்சரம் இப்படியே வியக்தமாக ஜீயர் அருளிச்செய்த கிரமத்திலே கேட்டருளினார்," என்றும், ஜீயரைத் தனித்து அருள்பாடிட்டருளி, ஸ்ரீசடகோபனையும் பிரசாதித்தருளி, 'நாளை முதலாக நம்முடைய பெரிய திருமண்டபத்திலே பெரிய வண்குருகூர்நகர் நம்பியான ஆழ்வாருடைய திருவாய்மொழிப்பொருளை ஈடு முப்பத்தாறாயிரத்துடனே நடத்தும்' என்றும் கூறி, அதற்குமேல் நூல் முடிவு பெறும் அன்று அரங்கநகர் அப்பன் ஆசாரியரான மணவாளமாமுனிகட்குக் குருதக்ஷிணை கொடுத்த வகையினையும் விரிவாகக் கூறுகின்றது யதீந்திரப் பிரவணர் பிரபாவம் என்ற நூல். இதனால், நல்லாசிரியருக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் முற்றும் நிறையப்பெற்றவர் இப்பெரியார் என்பதனை நாம் அறிதல் தகும்.

இறைவன் குரு தக்ஷிணையாகக் கொடுத்த சுலோகம் இதுவாகும் :

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்தியாதி குணார்ணவம்
யதீந்த்ரப்பிரவணம் வந்தே ரம்யஜாமாதரம்முநிம்"

இது, திருவரங்கநாதன் ஒரு குழந்தை வடிவாய் வந்து,

காலக்ஷேபம் நடக்கும் அவையின் நடுவே நின்றுகொண்டு அருளிச்செய்தது.

இப்பெரியார்க்குச் சரீரம் காரணமாக வந்த உறவினர் பலர். பெருமாள் சேவையும் கிரந்த காலக்ஷேபங்களும் அடிக்கடி ஏற்படுகிற உறவினர்கள் சூதகம் காரணமாகத் தடைபட்டு வந்தன. இல்லறம் காரணமாக இத்தடைகள் வருவதனால் இல்லறத்தினின்றும் நீங்கித் துறவறத்தை மேற்கொள்ளத் திருவுள்ளங்கொண்டனர். (சந்நியாசிகளுக்கு உறவினர்கள் காரணமாக வருகின்ற சூதகம் இல்லை.) அக்காலத்தில் திரு வரங்கத்தில் மிகப் பிரசித்தராய் ஞான அநுட்டானங்களில் சிறந்தவராய் விளங்கிய ஸ்ரீசடகோப ஜீயர் என்ற பெரியாரை யடைந்து, தமது எண்ணத்தைத் தெரிவித்து, அவர் தரத் துரியாச்சிரமத்தை — துறவறத்தை — மேற்கொண்டனர். அது முதற்கொண்டு இவருக்கு '**அழகிய மணவாள மாமுனிகள்**' என்ற திருப்பெயர் வழங்கலாயிற்று.

திக்குற்றகீர்த்தி இராமாநுசரைப் போன்றே இப்பெரியாரும் திருவரங்கம் பெரியகோயிலில் வாழ்ந்தருளுங்காலத்தில் இவரை ஆசாரியராக வரித்து உய்ந்தவர் பற்பலர் ஆவர். அவர்களுள் முக்கியமானவரென எண்ணத் தக்கவர் எண்மர். அவர்கள் **அஷ்டதிக்குக் கஜங்கள்** என்று சிறப்பித்துப் பேசப்படுவார்கள். அவர்கள் ஆவார்,

1. வானமாமலை ஜீயர்,
2. பட்டர்பிரான் ஜீயர்,
3. திருவேங்கட ஜீயர்,
4. கோயில் அண்ணன்,
5. பிரதிவாதிபயங்கரம் அண்ணன்,
6. எறும்பியப்பா,
7. அப்பிள்ளை,
8. அப்பிள்ளார்

எனப்படுவர். இவர்களுள் முதல் மூவர் துறவியர். மற்றை ஐவரும் இல்லறத்தார்.

**இவர் செய்த வேறு நூல்கள் :**

பிள்ளைலோகாசாரியர் அருளிச்செய்த பதினெட்டு நூல் களுள் தத்துவத்திரயம், முமுக்ஷுப்படி என்னும் இரண்டு நூல்களுக்கு வியாக்கியானம், ஆசாரிய ஹிருதயத்திற்கு வியாக்கியானம், பெரியாழ்வார் திருமொழியில் முதல் 401 திருப்பாசுரங்களுக்கு வியாக்கியானம்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் அருளிச்செய்த ஞான சாரம், பிரமேய சாரம் என்னும் இரு நூல்களுக்கும் பொருத்தமான புராண சுலோகங்கள்.

ஈடு முப்பத்தாறுயிரப்படிக்கும் தாம் அருளிச்செய்த இரஹஸ்ய கிரந்தங்களின் வியாக்கியானங்களுக்கும் பிரமாணத் திரட்டு.

எதிராஜ விம்சதி, ஸ்ரீதேவராஜ மங்களம், உபதேசரத்தின மாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி பிரபந்தம் என்பனவாம்.

**வியாக்கியானத்தின் பெருமை:** ஸ்ரீ வசன பூஷணம் முதலிய இரஹஸ்ய கிரந்தங்களுக்கு இவருடைய வியாக்கியானங்கள் இன்றேல், அவற்றின் ஆழ்பொருள்களையெல்லாம் அறிந்து அநுபவித்துப் பயன் துய்க்க இடமே இராது. இவருடைய வியாக்கியானம் அமுதிலும் ஆற்ற இனியது. படிக்கப்படிக்கத் தெவிட்டாதது. 'கங்கையின் பெருக்கோ! அல்லது கங்கையிற் புனிதமாய காவிரியின் பெருக்கோ!' என்று சொல்லத்தக்க நடையோடு கூடியது; எளிமையும் தெளிவும் உடையது; பொருட் செறிவும் அழகும் மிக்கது. வேத வேதாந்தங்களிலும் இதிகாச புராணங்களிலும் அருளிச்செயல்களிலும் இவ்வுரையாசிரியருக்கு இருக்கும் பரந்த புலமைக்கு இவ்வுரைகளே தக்கதொரு சான்றாம்.

**அவற்றுள், இந்த ஸ்ரீ வசன பூஷணத்தின் வியாக்கியான அமைப்பு:** நூலின் தொடக்கத்தில் ஒரு முன்னுரை அமைந்திருக்கின்றது. அது நூலின் பொருளைச் செவ்வன் ஆடியிற் செறித்து இனிது விளக்கிக்கொண்டு அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமான திங்களும் ஞாயிறும் போல நிற்கின்றது. ஒவ்வொரு சூத்திரத்தின் தொடக்கத்திலும் ஒரு முன்னுரை அமைந்திருக்கின்றது. அது பொருத்தமான அளவில் அமைந்து சூத்திரப் பொருளை நன்கு அறிந்துகொள்ளுதற்குத் தகுதியாகப் படிப்பவரின் உள்ளத்தை அமைத்துவிடுகிறது. ஒரு சூத்திரத்திற்கும் அதன் பின்வரும் சூத்திரத்திற்கும் உள்ள தொடர்பினை விளக்கிக் காட்டுகிறார். இங்ஙனம் விளக்கிக் காட்டுவது படிப்பவருடைய அறிவு தைலதாரை போன்று இடையறாது செல்வதற்கு ஏதுவாய் நிற்கிறது. மேலும், ஒரு பொருள் முடிவுறும்போது அதுகாறும் கூறிய கருத்துகளைத் தொகுத்துக் காட்டுகிறார். இங்ஙனம் காட்டுவது படித்தவற்றைத் தெளிவாக உள்ளத்தில்

இருத்திக்கொண்டு மேலே செல்லுதற்கு நமக்குப் பேருதவி செய்கின்றது. அழகிய உவமைகள் இடை இடையே அமைந் திருக்கின்றன.

சில சூத்திரங்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களும் கூறப்படுகின்றன. அவ்விடங்களில் முதலிற்கூறிய பொருளுக் கும் இரண்டாவதாகக் கூறும் பொருளுக்கும் உள்ள வேற்றுமை நுணுகி அறியத் தக்கதாய் உள்ளது. சில இடங்களில் இவர் எழுதும் பதசாரம் படிப்பவர்களுடைய மனங்களைப் பேரின்பத் தில் மூழ்கச் செய்கின்றது. இத்திறங்களையெல்லாம் இந்நூலைக் கற்பார் ஆங்காங்குப் பலகாலும் கண்டு மகிழ்வர் என்ற துணிவுடையேனாதலின், தனியே இங்கே எடுத்துக்காட்டுகள் தாராது அமைகின்றேன்.

இவர் அவ்வக்காலத்துப் பாடிய தனிப்பாடல்களுள் சில வற்றை ஆசாரிய ஹிருதயப் பதிப்பில் (பக்கம் 24 முதல் 26 வரை) காண்க.

'வாதுசெய என்றுசில வாதியர்கள் வந்துமிக
மனமுரிய நிற்பர் ஒருபால்
வாழியென வேபெரிய சாபமற நின்றுசிலர்
வந்தனைகள் செய்வர் ஒருபால்
போதுமினி வாதமுன பாதமருள் என்றடி
புகழ்ந்துசிலர் நிற்பர் ஒருபால்
பொங்கிவரு மெங்கள்வினை மங்கவரு ளென்றுசிலர்
போற்றிசெய்து நிற்பர் ஒருபால்
ஈதிவை கிடக்கமறை நூல்தமிழ் தெரிந்துசிலர்
இன்பமுற வாழ்வர் ஒருபால்
ஏதமற ஆதுலர்கள் பேதையர் மயக்கமற
இறைஞ்சியயல் நிற்பர் ஒருபால்
மாதகவி ஞனுலக மேழையு மளிக்கவென
வந்தவெதி ராச னடிசேர்
மாமுனிவர் தீபமரு ளாளுமண வாளமுனி
மன்னுமடம் வாழும் வளமே.'

இது, ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் திருவரங்கத்தில் எழுந் தருளியிருந்த மடத்தின் சிறப்பைக் கூறுவது. இது, அவர் காலத்து இருந்த ஒருவர் கூறிய செய்யுள்.

இப்புவியில் அரங்கேசர்க் கீடளித்தான் வாழியே
　　எழில்திருவாய் மொழிப்பிள்ளை இணையடியோன் வாழியே.
ஐப்பசியில் திருமூலத்து அவதரித்தான் வாழியே
　　அரவரசப் பெருஞ்சோதி அனந்தனென்றும் வாழியே
எப்புவியும் ஸ்ரீசைலம் ஏத்தவந்தோன் வாழியே
　　ஏராரும் எதிராசர் எனவுதித்தான் வாழியே
முப்புரிநூல் மணிவடமுக் கோல்தரித்தான் வாழியே
　　மூதரிய மணவாள மாமுனிவன் வாழியே. (25)

—அப்பிள்ளை வாழித் திருநாமம்

சீர்வசன பூடணமாம் தெய்வக் குளிகைபெற்றோம்
பாருலகைப் பொன்னுலகாப் பார்க்கவல்லோம்—தேரில்நமக்
கொப்பார் இனியார்! உலகா சிரியனருள்
தப்பாமல் ஏறியபின் தான்.

—தனிப்பாடல்—மணவாள மாமுனிகள்

மன்னுயிர்காள் இங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன். (74)

—எறும்பியப்பா—உபதேச ரத்தினமாலை

பாவங்கள் பற்றறும் பாசங்கள் பற்றறும் பற்றிவைகும்
ரோகங்கள் பற்றறும் குற்றங்கள் பற்றறும் கோடிசன்மத்
தாபங்கள் பற்றறும் தண்ணரங் கன்புகழ் சாந்தகுணத்
தீபன் கருணை மணவாள யோகியைச் சிந்திக்கவே.

சீரூற்ற செஞ்சொல் திருவாய் மொழிப்பிள்ளை செம்முகமும்
ஏரூற்ற மார்பும் தளிரேய் பதங்களும் தன்மனத்துப்
பூரித்து வாழும் மணவாள மாமுனி பொன்னடிகள்
பாரில் தனித்த அடியேன் சரணென்று பற்றினனே.

—கோயில் கந்தாடை அண்ணன்

மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!

மாறன் மலரடி வாழ்க!

# பொருட்குறிப்பு



திரு அரங்கம் – இராமாநுஜர்

## 6. சரமபர்வ நிஷ்டை

இந்நூல் ஒன்பது பிரகரணங்களாகப் பிரிக்கப்படுகின்ற காலத்தில் பிரகரணங்களின் எண்ணும் பெயர்களும் சூத்திரங்களின் பாகுபாடுகளும் பின் வருமாறு :

பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த

# ஸ்ரீ வசன பூஷணம் மூலமும்

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# வியாக்கியானத்தின் தமிழ் ஆக்கமும்

மணவாள மாமுனிகளின்
600ஆம் அவதாரத் திருநாளின் வெளியீடு



திரு அரங்கம் — மணவாள மாமுனிகள்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

பிள்ளை லோகாசார்யர்

அருளிச்செய்த

# ஸ்ரீவசனபூஷணம்



## தனியன்கள்

[1] ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர பிரவணம் வந்தே ரம்யஜாமாத்ரமுநிம். 1

[2] லக்ஷ்மீநாத சமாரம்பாம் நாதயாமுந மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம். 2

[3] யோநித்ய மச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோகதஸ் ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைக சிந்தோ
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் பிரபத்யே. 3

[1] இது, திருவரங்கநாதன் அருளிச் செய்தது; மணவாள மாமுனிவரைக் குறித்தது. இதன் பொருள் :—ஸ்ரீசைலேச தயா பாத்ரம் - திருமலையாழ்வாருடைய திருவருளுக்குப் பாத்திரமானவரும், தீபக்த்யாதி குண அர்ணவம் - ஞானம் பக்தி முதலான குணங்களுக்குக் கடல் போன்றவரும், யதீந்த்ரப்ரவணம் - இராமாநுசரிடத்தில் அன்புள்ளவரும், ரம்யஜாமாத்ரம் - அழகிய மணவாளர் என்ற பெயரையுடையவருமான, முநிம் - முனிவரை, வந்தே - வணங்குகிறேன் என்றவாறு.

[2] இது, கூரத்தாழ்வான் அருளிச்செய்தது. இ - ள் :—லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் - திருமகள் கேள்வன் முதலாக, நாத யாமுந மத்யமாம் - நாதமுனிகளும் ஆளவந்தாரும் நடுவாக, அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் - என்னுடைய ஆசாரியன் இறுதியாக வருகின்ற, குருபரம்பராம் - குருபரம்பரையை, வந்தே - வணங்குகிறேன் என்றவாறு.

[3] இதுவும் கூரத்தாழ்வான் அருளிச்செய்தது. இ - ள் :—ய: - எந்த இராமாநுசர், நித்யம் - எப்பொழுதும், அச்யுத - அழிவில்லாதவனை எம்பெருமானுடைய, பதாம்புஜயுக்ம - இரண்டு திருவடித்தாமரை

[1] மாதா பிதா யுவதய: தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதே: வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா. 4

[2] பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிஶ்ரான்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் பிரணதோஸ்மி நித்யம். 5

---

களாகிற, ருக்ம - பொன்னினிடத்தில், வியாமோஹத: - வைத்த ஆசையினால், தத் - அந்தப் பகவானுக்கு, இதராணி - வேறான விஷயங்களை, த்ருணாய - துரும்பாக, மேநே - நினைத்தாரோ, அஸ்மத் குரோ: - அப்படிப்பட்ட என்னுடைய ஆசாரியரும், பகவத: - எல்லாக் குணங்களும் நிறைந்தவரும், தயைக சிந்தோ: - அருட்கடலானவருமான, அஸ்ய - இந்த, ராமாநுஜஸ்ய - இராமாநுசருடைய, சரணௌ - இரண்டு திருவடிகளையும், ஶரணம் - உபாயமாக, பிரபத்யே - பற்றுகிறேன் என்றவாறு.

[1] இது ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்தது. இ - ள் :—மாதா - தாய், பிதா - தந்தை, யுவதய: - இளம்பருவமுள்ள பெண்கள், தநயா: - புத்திரர்கள், விபூதி: - செல்வம், ஸர்வம் - ஆகிற இவை எல்லாப் பொருள்களும், நியமேந - முறையாக, யதேவ - எந்தத் திருவடிகள் ஆகின்றனவோ, ந: - எங்களுடைய, குலபதே: - குலத்திற்குத் தலைவராகிய, ஆத்யஸ்ய - முதல்வருடைய, வகுள அபிராமம் - வகுள மலர்களால் அலங்கரிக்கப்பட்ட, ஸ்ரீமத் - பக்தியாகிற திருவையுடைய, தத் - அந்த, அங்க்ரியுகளம் - இரண்டு திருவடிகளை, மூர்த்நா - தலையாலே, பிரணமாமி - சேவிக்கிறேன் என்றவாறு. இது நம்மாழ்வாரைப்பற்றிய துதி.

[2] இது பட்டர் அருளிச் செய்தது. இ - ள் :—பூதம் - பூதத்தாழ்வாரையும், சரச்ச - பொய்கையாழ்வாரையும், மஹதாஹ்வய - பேயாழ்வார், பட்டநாத - பெரியாழ்வார், ஸ்ரீபக்திசார - திருமழிசையாழ்வார், குலசேகர - குலசேகர ஆழ்வார், யோகிவாஹாந் - திருப்பாணாழ்வார் என்னும் இவர்களையும், பக்தாங்க்ரி ரேணு - தொண்டரடிப் பொடியாழ்வார், பரகால - திருமங்கையாழ்வார், யதீந்த்ரமிச்ரான் - பூஜிக்கத்தக்கவரான இராமாநுசர் என்னும் இவர்களையும், ஸ்ரீமத்பராங்குசமுநிம் - பக்தியாகிற திருவையுடைய நம்மாழ்வாரையும், நித்யம் - எப்பொழுதும், பிரணத: அஸ்மி - வணங்குகிறவன் ஆகிறேன் என்றவாறு.

இச்சுலோகத்தில் ஆழ்வார்களுடைய திருப்பெயர்களை அமைத்திருக்கும் முறை வைப்பிற்கும் ஆசாரியர்களுள் நடுநாயக மணியாய் விளங்கும் இராமாநுசரை இங்குச் சேர்த்திருப்பதற்கும் பெரியோர்கள்

## சிறப்புத் தனியன்கள்

[1] லோககுரும் குருபிஸ்ஸஹ பூர்வை:
கூர குலோத்தம தாஸமுதாரம்
ஸ்ரீ நகபதி அபிராம வரேஶௌ
தீப்ரசயாந குருஞ்ச பஜேஹம். 6

கூறும் காரணத்தை ஈண்டு எழுதுகிறேன்: ஆழ்வார்களுள் பிரதாநரான நம்மாழ்வாரை அவயவியாகவும், மற்றை ஆழ்வார்களையும் இராமாநுசரையும் அவயவங்களாகவும் கொண்டு, பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கையாழ்வார் பேயாழ்வார்களை இரண்டு திருக்கண்களாகவும், பெரியாழ்வாரைத் திருமுகமாகவும், திருமழிசைப்பிரானைத் திருக்கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் இரண்டு திருக்கரங்களாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கையாழ்வாரைத் திருவுந்தியாகவும், இராமாநுசரைத் திருவடியாகவும் உருவகம் செய்து நம்மாழ்வாரைப் போற்றியுள்ளார்கள் முன்னோர்கள். இதனைத் திருவுள்ளம் பற்றியே பட்டரும் இச்சுலோகத்தில் இம்முறையில் பெயர்களை அமைத்தனர் என அறிதல் தகும்.

இதுகாறும் மேலே காட்டப்பெற்ற ஐந்து தனியன்களும் வைணவ நூல்கள் எல்லாவற்றிற்கும் பொதுவாதலின் பொதுத்தனியன்கள் எனப் பெறும். இனி வருவன, ஸ்ரீவசனபூஷணம் என்னும் இந்நூல் ஒன்றற்கே உரிய தனியன்கள் ஆதலின் சிறப்புத் தனியன்கள் எனப்பெறும்.

[1] இது மணவாளமாமுனிகள் அருளிச்செய்தது. இ - ள் :— பூர்வை: - முன்னோர்களான, குருபிஸ்ஸஹ - ஆசாரியர்களோடுகூட, லோககுரும் - பிள்ளை லோகாசாரியரையும், உதாரம் - பெருவள்ளலான, கூரகுலோத்தமதாஸம் - கூரகுலோத்தம தாசரையும், ஸ்ரீநகபதி - திருவாய்மொழிப்பிள்ளை என்னும் திருமலையாழ்வார், அபிராமவரேஶௌ - அழகியமணவாளப்பெருமாள் பிள்ளை ஆகிய இருவரையும், தீப்ரசயாநஞ்ச - திகழக்கிடந்தானையும், அஹம் - நான், பஜே - வணங்குகிறேன்.

கூரகுலோத்தமதாசர்: இவர், பிள்ளை லோகாசாரியருக்கு மாணாக்கரும் திருவாய்மொழிப் பிள்ளைக்கு ஆசாரியருமாவர். திருமலையாழ்வார்: இவர், பிள்ளை லோகாசாரியருக்கும் கூரகுலோத்தம தாசருக்கும் மாணாக்கர்; மணவாளமாமுனிகளுக்கு ஆசாரியர். அழகிய மணவாளப் பெருமாள் பிள்ளை: இவர், பிள்ளை லோகாசாரியருக்கு மாணாக்கர்; மணவாளமாமுனிகளுடைய திருத்தாயாரைப் பெற்ற பாட்டனார். திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான்தாதர் அண்ணர் என்னும் பெயரை நாமைகதேசநாமக்கிரஹணத்தால் ‘திகழக்கிடந்தான்’ என்று குறித்தனர். இவர், மேலே கூறிய அழகிய மண

[1] லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே
ஸம்சார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாதவேநம: 7

[2] லோகாசார்ய க்ருபாபாத்ரம் கௌண்டின்ய குலபூஷணம்
ஸமஸ்தாத்ம குணுவாஸம் வந்தே கூர குலோத்தமம். 8

[3] நம: ஸ்ரீசைலநாதாய குந்தீநகர ஜந்மநே
ப்ரஸாதலப்த பரம ப்ராப்ய கைங்கர்ய சாலிநே. 9

[4] லோகாசார்ய பதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம்
ஜ்ஞாந வைராக்யஜலதிம் வந்தே ஸௌம்யவரம் குரும். 10

---

வாளப் பெருமாள் பிள்ளைக்கு மாணுக்கரும் மருகரும் ஆவார்; மணவாளமாமுனிகளுக்குத் திருத்தமப்பணுர்.

1 இது ஈயுண்ணி பத்மநாபர் அருளிச்செய்தது. இ - ள் :— கிருஷ்ணபாதஸ்ய - வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு, ஸூநவே - திருக்குமாரராயும், ஸம்சார - ஸம்சாரமாகிற, போகி - பாம்பினுல், ஸந்தஷ்ட - கடிக்கப்பட்ட, ஜீவ - சீவான்மாக்களுக்கு, ஜீவாதவே - மருந்தாக விருப்பவரும் ஆன, லோகாசார்யாய குரவே - பிள்ளைலோகாசாரியர் என்கிற ஆசாரியருக்கு, நம: - வணக்கம்.

2 இது திருவாய்மொழிப்பிள்ளை அருளிச்செய்தது. இ - ள் :— லோகாசார்ய - பிள்ளைலோகாசாரியருடைய, கிருபா - அருளுக்கு, பாத்ரம் - பாத்திரமானவரும், கௌண்டின்யகுலபூஷணம் - கௌண்டின்ய குலத்திற்கு ஆபரணம் போன்றவரும், ஸமஸ்த ஆத்மகுண ஆவாஸம் - ஆத்மகுணங்கள் எல்லாவற்றிற்கும் இடமாயும் இருக்கிற, கூரகுலோத்தமம் - கூரகுலோத்தம தாசரை, வந்தே - வணங்குகிறேன் என்றவாறு.

3 இது மணவாள மாமுனிகள் அருளிச்செய்தது. இ - ள் :— பிரசாத - (ஆழ்வாருடைய) அருளால், லப்த - அடையப்பட்ட, பரம - மேலானதாய், பிராப்பிய - அடையத்தக்கதான, கைங்கர்ய சாலினே - கைங்கர்யத்தால் விளங்குபவராய், குந்தீ நகர - குந்தீ நகரத்தில், ஜந்மனே - அவதரித்தவருமான, ஸ்ரீசைலநாதாய - திருமலையாழ்வார் என்கிற திருவாய்மொழிப்பிள்ளைக்கு, நம: - வணக்கம் என்றவாறு.

4 இதுவும் மணவாளமாமுனிகள் அருளிச்செய்தது. இ - ள் :— லோகாசார்ய - பிள்ளை லோகாசாரியருடைய, பதாம்போஜ - திருவடித் தாமரையில், ராஜஹம்ஸாயித அந்தரம் - அரசவன்னத்தைப்போன்று இடைவிடாமல் இருக்கிற மனத்தையுடையவராயும், ஞாநவைராக்கிய - ஞானத்திற்கும் வைராக்கியத்திற்கும், ஜலதிம் - கடலாயிருப்பவரு

[1] ஸ்ரீஜிஹ்வா வததீசதாஸ மமலமஶேஷசாஸ்த்ர விதம்
சுந்தரவரகுரு கருணாகந்தளித ஜ்ஞாநமந்திரம் கலயே. 11

[2] † அகுண்ட உத்கண்ட வைகுண்ட ப்ரியாணாம் கண்ட பூஷணம்,
குருணா ஜகதாம் உக்தம் வ்யாப்தம் வசந பூஷணம். 12

[3] ஸாங்காகில த்ரவிட ஸம்ஸ்கிருத ரூபவேத
ஸாரார்த்த ஸங்க்ரஹ மஹாரஸ வாக்யஜாதம்
ஸர்வஜ்ஞ லோககுரு நிர்மிதம் ஆர்யபோக்யம்
வந்தே ஸதா வசநபூஷண திவ்யசாஸ்த்ரம். 13

---

மான, ஸௌம்யவரம் குரும் - (கோட்டியூர்) அழகிய மணவாளப் பெருமாள் பிள்ளையை, வந்தே - வணங்குகிறேன் என்றவாறு.

[1] இதுவும் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தது. இ - ள் :— சுந்தரவரகுரு - கோட்டியூர் அழகிய மணவாளப் பெருமாள்பிள்ளையினுடைய, கருணா - அருளாலே, கந்தளித - வளர்ந்த, ஞானமந்திரம் - தத்துவஞானத்திற்கு இடமாயிருப்பவரும், அமலம் - குற்றமற்றவரும், அசேஷ சாஸ்த்ரவிதம் - எல்லாச் சாஸ்திரங்களையும் அறிந்தவருமான, ஸ்ரீஜிஹ்வா வததீச தாஸம் - திருநாவீறுடைய பிரான்தாசரை, கலயே - துதிக்கிறேன் என்றவாறு.

திருநாவீறுடைய பிரான்தாசர் என்றது, மேலே கூறிய திகழக்கிடந்தான் திருநாவீறுடைய பிரான்தாதர் அண்ணரைக் குறித்தது. திகழக்கிடந்தான் என்பது திருக்குடந்தை ஆராவமுதன் திருப்பெயர்; திருநாவீறுடைய பிரான் என்பது நம்மாழ்வாருடைய திருப்பெயர்; தாதர் என்பது அவருடைய அடியவர் என்னும் பொருளது. அண்ணர் என்பது இவருடைய இயற்பெயர். இத்தனையும் சேர்ந்து ஒரு பெயராய் நின்று ஒருவரைக் குறிக்கிறது.

[2] இ - ள் :—அகுண்ட - அழியாத, உத்கண்ட - நிறைந்த, வைகுண்டப்ரியாணாம் - வைகுண்டத்திலே இச்சையையுடைய அடியார்களுக்கு, கண்ட பூஷணம் - கழுத்திற்கு ஆபரணம் போன்றதும், வியாப்தம் - எங்கும் பரவியுள்ளதும் ஆன, வசநபூஷணம் - ஸ்ரீவசன பூஷணம் என்னும் இந்த நூலானது, ஜகதாம்குருணா - உலகங்களுக்குக் குருவாகிய பிள்ளை லோகாசாரியராலே, உக்தம் - சொல்லப்பட்டது என்றவாறு.

[3] இ - ள் :—சாங்க - அங்கங்களோடு கூடின, அகில திரவிட சம்ஸ்கிருத ரூப வேத - தென்மொழி வடமொழி இவற்றின் வடிவமான

† 'ஆகண்ட' என்பதும் பாடம்.

[1] புருஷகார வைபவஞ்ச ஸாதனஸ்ய கௌரவம்
தததிகாரி க்ருத்யம் அஸ்ய ஸத்குரூபஸேவநம்
ஹரிதயா மஹேதுகீம் குரோருபாய தாஞ்சயோ
வசந பூஷணேவதத் ஜகத்குரும் தமாஶ்ரயே. 14

[2] பேறுதரு விக்குமவள் தன்பெருமை யாறுபெறு
வான்முறையவன்
கூறுகுரு வைப்[†]பணிதல் கொள்வதிலை யாகியகு
ளிர்ந்தவருள்தான்
மாறில்புகழ் நற்குருவின் வண்மையொடெ லாம்வசன
பூடணமதில்
தேறிடந மக்கருள்மு டும்பைஇறை வன்கழல்கள்
சேரென்மனனே. 15

எல்லாவேதங்களினுடைய, சாரார்த்த - நுண்ணிய கருத்துப்பொருளை, சங்க்ரஹ - சுருக்கமாகத் தெரிவிக்கிற, மதுரரஸ வாக்ய ஜாதம் - மிக இனிமை பொருந்திய வாக்கியங்களின் கூட்டத்தையுடையதும், சர்வஜ்ஞ லோககுரு நிர்மிதம் - முற்றறிவினரான பிள்ளை லோகாசாரிய ராலே செய்யப்பட்டதும், ஆர்யபோக்யம் - அறிஞர்களுக்கு இனிமை யானதுமான, வசன பூஷண திவ்யசாஸ்திரம் - ஸ்ரீவசன பூஷணம் என்கிற உயர்ந்த சாஸ்திரத்தை, சதா - எப்பொழுதும், வந்தே - வணங்குகிறேன் என்றவாறு.

[1] இ - ள் :—புருஷகாரவைபவஞ்ச - புருஷகாரத்தைச் செய்யும் பிராட்டியினுடைய பெருமையையும், ஸாதனஸ்ய கௌரவம் - சித்தோ பாயத்தின் சிறப்பையும், தத்அதிகாரி க்ருத்யம் - அந்தச் சித்தோபாயத் தில் நிலை நின்ற அதிகாரியினுடைய ஒழுக்கத்தையும், அஸ்ய - இவ னுடைய, சத்குரு உபசேவநம் - சதாசாரிய அநுவர்த்தன முறையை யும், அஹேதுகீம் ஹரிதயாம் - எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான கிருபையின் பெருமையையும், குரோர் உபாயதாஞ்ச - ஆசாரியனுடைய உபாயத்வத்தையும், வசனபூஷணே - ஸ்ரீவசனபூஷணத்தில், யஃ - எவர், அவதத் - அருளிச்செய்தாரோ, தம் - அந்த, ஜகத்குரும் - பிள்ளை லோகாசாரியரை, ஆஶ்ரயே - பற்றுகிறேன்.

'புருஷகாரவைபவஞ்ச' என்றதிலே உள்ள சகாரத்தால் - உம்மை யால், உபாயவைபவத்தைக் கோடல் வேண்டும்; ஆக, புருஷகார உபாயவைபவத்தைக் கூறியபடி.

[2] இ - ள் :—பேறு தருவிக்குமவள்தன் பெருமை - பேற்றினைக் கொடுக்கச் செய்கின்ற பெரிய பிராட்டியினுடைய பெருமையையும்,

† 'பனுவல்' என்பதும் பாடம்.

[1] திருமா மகள்தன் சீரருள் ஏற்றமும்,
திருமால் திருவடி சேர்வழி நன்மையும்,
அவ்வழி ஒழிந்தன அனைத்தின் புன்மையும்,
மெய்வழி ஊன்றிய மிக்கோர் பெருமையும்,
ஆரணம் வல்லவர் அமருநன் னெறியையும்,
நாரணன் தாள்தரு நற்குரு நீதியும்,
† சோதி மாமலர் தொல்லருள் குருவின்
பாத மாமலர் பணிபவர் தன்மையும்,

ஆறு - உபாயத்தின் (சித்தோபாயம்) சிறப்பினையும், பெறுவான் முறை - பேற்றினைப் பெறுகின்ற அதிகாரி நிலையினையும், அவன்கூறு குருவைப் பணிதல் - அவ்வதிகாரி நூல்களால் சிறப்பித்துக் கூறப்படுகின்ற ஆசாரியனிடத்தில் நடந்துகொள்ளுகின்ற முறையினையும், கொள்வது இலையாகிய குளிர்ந்த அருள்தான் - பயன் கருதாது செய்கின்ற எம் பெருமானுடைய நிர்ஹேதுகமான கிருபையின் பெருமையையும், மாறில் புகழ் நற்குருவின் வண்மையொடு - ஒப்பு இல்லாத புகழை யுடைய சிறந்த ஆசாரியனே உபாயமாகவிருக்கும் தன்மையையும், எலாம் - மற்றும் எல்லாப் பொருள்களையும், வசனபூடணமதில் - ஸ்ரீவசன பூஷணம் என்னும் இந்த நூலில், தேறிட - நாம் தெளியும்படியாக, நமக்கு அருள் - நமக்கு அருளிச்செய்த, முடும்பை இறைவன் - பிள்ளை லோகாசாரியருடைய, கழல் - திருவடிகளை, என் மனனே சேர் - என் னுடைய மனமே அடைவாயாக.

'பேறு தருவிக்குமவள்தன் பெருமை'யைக் கூறியது, பேறு தருமவ னுடைய பெருமைக்கும் உபலக்ஷணம். முடும்பை - பிள்ளை லோகா சாரியருடைய முன்னோர்கள் இருந்த ஊர். மேலே கூறிய 'புருஷகார வைபவஞ்ச' என்ற சுலோகமும், 'பேறுதருவிக்குமவள்' என்ற இச் செய்யுளும் இந்நூல் ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்படுமதனைக் கருதி எழுந்தவையாம்.

[1] இ - ள் :—திருமாமகள்தன் சீர் அருள் ஏற்றமும் - புருஷகார உபாய வைபவத்தையும், திருமால் திருவடி சேர்வழி நன்மையும் - சித்தோபாயத்தின் சிறப்பையும், அவ்வழி ஒழிந்தன அனைத்தின் புன்மையும் - அந்தச் சித்தோபாயம் ஒழிந்தனவான கர்மம் ஞானம் பக்தி என்னும் மற்றைய உபாயங்களின் தாழ்வினையும், மெய்வழி ஊன்றிய மிக்கோர் பெருமையும் - உண்மையான அந்தச் சித்தோபாயத் தில் நிலை நின்ற பெரியோர்களுடைய பெருமையையும், ஆரணம் வல்லவர் அமரும் நன்னெறியையும் - வேதங்களிலே வல்லவர்களான பிரபந்நர்கள் ஒழுகும் ஒழுக்கத்தையும், (இதனால் பிரபந்ந தினசரியை

† 'சோதி வானருள் தூயமா குருவின்' என்பதும் பாடம்.

தீதில் வானவர் தேவன் உயிர்களை
ஏதும் இன்றி எடுக்கும் படியையும்,
மன்னிய இன்பமும் மாகதி யும்குரு
என்னும் நிலைபெறும் இன்பொருள் தன்னையும்,
அசைவிலா வேத மதனுள் அனைத்தையும்
வசன பூஷண வழியால் அருளிய
மறையவர் சிகாமணி வண்புகழ் முடும்பை
இறையவன் எங்கோன் ஏருல காரியன்
தேமலர்ச் சேவடி சிந்தை செய்பவர்
மாநிலத் தின்பமது எய்திவாழ் பவரே. 16

---

யைக் குறித்தபடி) நாரணன் தாள் தரு நற்குரு நீதியும் - சதாசாரிய னுடைய இலக்கணத்தையும், சோதிமாமலர் தொல்லருள் குருவின் பாத மாமலர் பணிபவர் தன்மையும் - நல்ல சிஷ்யனுடைய இலக்கணத்தை யும், தீதில் வானவர் தேவன் உயிர்களை ஏதுமின்றி எடுக்கும்படியை யும் - குற்றமில்லாத நித்திய சூரிகளுக்குத் தலைவனை எம்பெருமான் உயிர்களுக்கு ஒருவிதக் காரணமும் பற்றாமல் செய்யும் கிருபையின் பெருமையையும், மன்னிய இன்பமும் மாகதியும் குரு என்னும் நிலை பெறும் இன்பொருள்தன்னையும் - நிலைபெற்ற பேரின்பமும் அதனைப் பெறுதற்குரிய உபாயமும் ஆசாரியனே என்கிற நிலையைப் பெறுதலாகிற சிறந்த பொருளையும், அசைவிலா வேதம் அதனுள் அனைத்தையும் - தளர்ச்சியில்லாத வேதத்தின் பூர்வபாகம் உத்தரபாகம் என்னுமிவற்றில் உள்ள எல்லாப் பொருள்களையும் (என்றது, இந்நூலின் பாயிரத்தில் கூறியுள்ளவதனைக் குறித்தபடி), வசனபூடணவழியால் அருளிய - வசன பூஷணம் என்னும் இந்நூல் வழியாக உதவி செய்த, மறையவர் சிகாமணி - அந்தணர்களுக்கு முடி மணி போன்றவரும், வண்புகழ் முடும்பை இறையவன் எங்கோன் ஏர் உலகாரியனுமான பிள்ளைலோகா சாரியருடைய, தேன் மலர்ச் சேவடி - தேன் நிறைந்த மலர் போன்ற திருவடிகளை, சிந்தை செய்பவர் - தியானிப்பவர்கள், மாநிலத்து இன்பமது எய்தி வாழ்பவர் - இவ்வுலகத்தில் பேரின்பத்தை அடைந்து வாழ்வார்கள் என்றபடி.

'திருமாமகள்தன் சீர் அருள் ஏற்றம்' என்பதனைத் 'திருமாமகள் தன் அருள் ஏற்றம்' என்றும், 'திருமாமகள்தன் சீர் அருள் ஏற்றம்' என்றும் தனித்தனியே கூட்டுக. திருமாமகள்தன் சீர் - திருமால். 'திருவுக்கும் திருவாகிய செல்வா' என்பது பெரியதிருமொழி, 7:7:1. 'சோதி மாமலர் தொல்லருள் குருவின் பாதமாமலர் பணிபவர் தன்மை யும்' என்றதனை, 'தொல்லருள் குருவின் பாதமாமலரைச் சோதி மாமலரைக் கொண்டு பணிபவர் தன்மையும்' என்று கூட்டுக. தொல்

[1] லோகாசார்ய க்ருதே லோகஹிதே வசந பூஷணே
தத்வார்த்த தர்சிநோ லோகே தந்நிஷ்டாஸ்ச
ஸுதுர்லபா: 17

[2] ஜகதாசார்ய ரசிதே ஸ்ரீமத் வசந பூஷணே
தத்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்டாம் தேஹி நாத யதீந்த்ரமே. 18

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

லருள் - இயல்பாகவமைந்த அருள். இந்நூலை ஒன்பது பகுதிகளாகப் பிரிப்பதனை நோக்கி, இச்செய்யுள் எழுந்தது.

[1] இ - ள் :—லோகஹிதே - உலகத்தாரின் நன்மையின்பொருட்டு, லோகாசார்ய க்ருதே - பிள்ளை லோகாசாரியராலே செய்யப்பட்ட, வசன பூஷணே - ஸ்ரீவசனபூஷணத்தில், தத்வார்த்த தர்சிநः - உண்மைப் பொருளை அறிந்தவர்களும், தந்நிஷ்டாஸ்ச - அதன்படி ஒழுகுகின்றவர்களும், லோகே - உலகத்தில், ஸுதுர்லபாः - மிக அரியர்கள்.

[2] இ - ள் :—யதீந்த்ர - எதிராசரே, நாத - சுவாமியே, ஜகதாசார்ய - பிள்ளை லோகாசாரியராலே, ரசிதே - செய்யப்பட்ட, ஸ்ரீமத் வசனபூஷணே - ஸ்ரீமத் வசனபூஷணம் என்னும் திவ்விய சாஸ்திரத்தில், தத்வ ஜ்ஞாநஞ்ச - உண்மை ஞானத்தையும், தந்நிஷ்டாஞ்ச - அதிற்கூறியவாறு ஒழுகும் ஒழுக்கத்தையும், மே - எனக்கு, தேஹி - கொடுத்தருள வேண்டும் என்றவாறு.

## முடிக்கும்போது சொல்ல வேண்டிய தனியன்கள்

[1] கோதில்உல காசிரியன் கூரகுலோத் தமதாதர்
தீதில்திரு மலையாழ்வார் செழுங்குரவை மணவாளர்
ஓதரிய புகழ்த்திருநா வுடையபிரான் தாதருடன்
போதமண வாளமுனி பொன்னடிகள் போற்றுவனே. 1

[2] வாழியுல காசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பையெனும் மாநகரம்—வாழி
மனம்சூழ்ந்த பேரின்பம் மல்குமிகு நல்லார்
இனம்சூழ்ந் திருக்கும் இருப்பு! 2

[3] ஓதும் முடும்பை யுலகா சிரியன்அருள்
ஏதும் மறவாத எம்பெருமான்—நீதி
வழுவாச் சிறுநல்லூர் மாமறையோன் பாதம்
தொழுவார்க்கு வாரா துயர். 3

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

---

1 இப்பாட்டில் கூறியுள்ள திருப்பெயர்களின் விளக்கத்தை மேலே உள்ள 'லோககுரும்' என்ற ஆறுவது சுலோகத்திற்கு எழுதியுள்ள குறிப்பிற்காண்க. 'குரவை மணவாளர்' என்பதில் குரவை என்பது குடிப்பெயர். குரவை என்ற குடியிலே அவதரித்த அழகிய மணவாளப் பெருமாள் பிள்ளை என்றபடி. போதமணவாளமுனி - ஞானத்தை யுடைய மணவாளமாமுனிகள்.

2 'சூழ்ந்த பேரின்பம் மல்கு மனம்மிகு நல்லார் இனம் சூழ்ந்திருக் கும் இருப்பு வாழி!' எனக் கூட்டுக.

3 எம்பெருமானாகிய மாமறையோன் என்க. மாமறையோன் - கூரகுலோத்தமதாதர். சிறுநல்லூர் - அவருடைய ஊர்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
மாறன் மலரடி வாழ்க!

# மணவாளமாமுனிகள்

அருளிச்செய்த

# உரைப்பாயிரம்



வேதமனைத்திற்கும் சுருக்கமான திருமந்திரத்தில்[1] மூன்று பதங்களாலும் சொல்லப்படுகின்ற மூன்று தன்மைகளும் எல்லாவுயிர்களுக்கும்[2] பொதுவாகையாலே, [3] 'எந்தப் பரமபதத்தில் முன்பும் புதியவர்கள், பார்க்கிறவர்கள், முன்பு உள்ளவர்கள், யாவர்' என்கிற நித்திய சூரிகளைப் போன்று, சுத்தசத்துவமயமான பரமபதத்திலே என்றும் மழுங்காத ஞானத்தையுடையவர்களாய் இடையீடு இன்றி இறைவனை அநுபவித்தலால் உளதாகும் எல்லையற்ற பேரானந்தத்தாலே மனம் நிறைவுபெற்றவர்களாய் இருப்பதற்குத் தகுதியுடையவர்களாகவிருந்தும்,

[1] 'மூன்று பதங்கள்' என்றது, ஓம், நமஃ, நாராயணாய என்னும் மூன்று பதங்களையும். 'மூன்று தன்மைகள்' என்றது, அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்வம், அநந்யபோக்யத்வம் என்பனவற்றை. இவை மூன்றும், மேலே கூறிய மூன்று பதங்களாலும் முறையே சொல்லப்படுகின்றன. அநந்யார்ஹசேஷத்துவமாவது, இறைவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல். இது, 'ஓம்' என்ற பிரணவத்தால் கூறப்படுவது. அநந்ய சரணத்வமாவது, இறைவன் ஒருவனையே உபாயமாகப்பற்றியிருத்தல். இது 'நமஃ' என்ற பதத்தால் பெறப்படுவது. அநந்யபோக்யத்வம் - அவனையே இனிய பொருளாகக் கொண்டிருத்தல். இது 'நாராயணாய' என்ற பதத்தால் பெறப்படுவது.

[2] 'பொதுவாகையாலே' என்பதனை மேலே வருகின்ற 'தகுதியுடையவர்களாகவிருந்தும்' என்றதனோடு சேர்க்க.

[3] அந்தத் தகுதியை ஓர் உவமைமுகத்தால் விளக்குகிறார், 'எந்தப் பரமபதத்தில்' என்று தொடங்கி. 'யத்ர ர்ஷயஃ ப்ரதமஜாயே புராணாஃ' என்பது யஜுர் வேதம்.

[1] ‘அநாதியான மாயையினாலே உறங்குகின்றவன்’ என்கிறபடியே, [2] ‘எள்ளில் நெய் போலவும் கட்டையில் நெருப்புப் போலவும்’ பிரித்து அறிய முடியாததாய் முக்குணங்களோடு கூடியதாய், இறைவனைத் தவிர ஏனையோரால் போக்க முடியாததாய் உள்ள அநாதியான பகவன் மாயையினாலே மறைக்கப்பட்ட ஆன்ம தர்மங்களையுடையவர்களாய், [3] அநாதியான [4] அவித்யையினாலே ஈட்டப்பெற்ற எல்லை இல்லாத நல்வினை தீவினைகட்குத் தகுதியாகத் தேவ, மனித, விலங்கு, தாவரம் என்னும் இப்பிறவிகள்தோறும் [5] ‘மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து’, [6] தேகாத்மாபிமானமும் ஸ்வாதந்தரியமும் அந்யசேஷத்துவமுமாகிற படுகுழிகளிலே விழுந்து, அவ்வவற்றிற்குத் தக்கனவான சாதனங்களிலும் அந்தச் சாதனங்களால் பெறுகின்ற பேறுகளிலும் மண்டி, [7] ‘யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை’ ஏறிட்டுக்கொண்டு, [8] வகுத்த சேஷி

[1] அத்தகுதியிருந்தும், அதற்குத் தக ஒழுகாது, மக்கள் படுகின்ற அவலநிலையை அருளிச்செய்கிறார், ‘அநாதியான’ என்றது முதல் ‘அநுபவித்துத் திரிகிற இவ்வுலக மக்களுள்’ என்றது முடிய.

“அநாதி மாயயா ஸுப்தஃ” என்பது மாண்டுக்கிய உபநிடதம்.

[2] “திலதைலவத் தாருவஹ்நிவத்” என்பது பிரமாணம்.

[3] அவலநிலையை அடைதற்குரிய காரணங்களை அடைவே விவரிக்கிறார், ‘அநாதியான’ என்று தொடங்கி.

[4] அவித்யை - அறியாமை. அதாவது, சரீரத்தையே ஆன்மாவாக நினைத்தலும், தன்னோடு சம்பந்தமில்லாத பொருளைத் தன்னதாக நினைத்தலும்.

[5] திருவாய்மொழி, 2. 6 : 9.

[6] தேகாத்மாபிமானம் - சரீரத்தையே ஆன்மாவாக நினைத்தல். ஸ்வாதந்தரியம் - தனக்கே தான் உரியவனாக நினைத்தல். அந்யசேஷத்துவம் - பிறர்க்கு அடிமைப்பட்டிருத்தல்.

[7] திருவிருத்தம், 95.

[8] சேஷி - கைங்கரியத்தை ஏற்றுக்கொள்ளுகிறவன்; அதாவது, இறைவன். ‘மேலான பிராப்பியனும் பிராபகனும்’ என்றது, தன்னைக்காட்டிலும் மேலான பேறு இல்லாதவனுமாய், சாதனத்திலும் தன்னைக்காட்டிலும் மேலான சாதனம் இல்லாதவனுமாய் என்றபடி. ‘வகுத்த சேஷியாய் மேலான பிராப்பியனும் பிராபகனும் உள்ள சர்வேச்வரன்’ என்பது திருமந்திரத்தின் பொருளைக் கூறியவாறு.

யாய் மேலான பிராப்பியனும் பிராபகனும் உள்ள சர்வேஸ்வரன் பக்கல் சிறிதும் ருசியில்லாதவர்களாய், கருவிலே தங்கியிருத்தல், பிறத்தல், இளமை, யௌவனம், முதுமை, இறத்தல், நரகம் என்னும் எழுவகைப்பட்ட நிலைகளிலே இடையீடில்லாமல் பரந்திருக்கின்ற பல வித மான எல்லையில்லாத துக்கங்களை அநுபவித்துத் திரிகிற இவ்வுலக மக்களுள், [1]ஒரு சிலர்க்குப் பிறக்கின்ற காலத் திலேயே இறைவனுடைய திருவருளால் இராசதம் தாமதம் என்னும் இரண்டு குணங்களும் தலைமடிந்து சத்துவ குணம் தலையெடுத்து மோக்ஷத்திலே ருசி உண்டாகா நிற்கும்.

[2]அங்ஙனம் உண்டாகிலும் [3]தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்னும் இவற்றை உள்ளபடி உணர்ந்தே அதனைப் பெறவேண்டியிருத்தலாலும், அவற்றைச் சாத்திரங்கள் முகத்தால் அறியப் பார்க்குமளவில் சாத்திரங்களில் தலையாய வேதமானது [4]'வேதங்கள் எல்லை இல்லாதவை' என்கிறபடியே எல்லை இல்லாததாய், தன் பொருளை நிச்சயம் செய்வதற்குச் [5]'சர்வ சாகாப் பிரத்தியய நியாயம்' முதலான நியாயங்கள் வேண்டு வதாய் இருக்கையாலே சிற்றறிவினர்க்கு அதிலே புகுந்து பொருளை நிச்சயம் செய்தல் அரிதாயிராநின்றது.

---

1 அங்ஙனம் உழன்று திரிகிற மக்களுள் ஒரு சிலர்க்கு மோக்ஷத்திலே ருசி உண்டாவதற்கு உரிய காரணத்தை அருளிச்செய் கிறார், 'ஒரு சிலர்க்கு' என்று தொடங்கி.

2 ருசி உண்டாகிலும் மோக்ஷத்தைப் பெறுதற்குரிய வழியின் அருமையை அருளிச்செய்கிறார், 'அங்ஙனம் உண்டாகிலும்' என்று தொடங்கி.

3 தத்துவம் - பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கிற ஆன்மாவின் சொரூபம். ஹிதம் - உபாயம். புருஷார்த்தம் - விரோதி நீங்குதல் முன்னாகப் பகவானை அடைந்து செய்யும் கைங்கரியம்.

4 'அநந்தாவை வேதா:' என்பது, யஜுர் வேதம்.

5 'சர்வ சாகாப்பிரத்யய நியாயம்' என்றதன் பொருளை மேலே பாயிரவுரையிற்காண்க.

[1]அவ்வருமையைக் கருதி, அந்த வேதங்களைக் கரைகண்டவர்களும் தங்கள் யோகத்தின் பெருமையாலே காணப்பெற்றபரம்பொருளையும்தாழ்ந்தமற்றைப் பொருள்களையும் வேறுபடுத்தி உணர்ந்தவர்களுமான வியாசர் முதலான பரமரிஷிகளாலே செய்யப்பட்டவையாய், வேதங்களின் பொருளை விரித்துக் கூறுவனவான ஸ்மிருதி இதிகாச புராணங்களும், சாரத்தையும் அசாரத்தையும் பகுத்தறியும் ஆற்றலையுடைய நுண்மாண் நுழைபுலமுடையோர்க்கு அல்லது ஏனையோர்க்கு அவற்றின் கருத்துப் பொருள் அறிதற்கு இயலாதனவாய் இராநின்றன.

[2]அவை போல அல்லாமல், இவ்வுலக மக்கள் கரைமரம் சேர்வதிலே நோக்கமுடைய சர்வேச்வரன், தானே ஆசாரியனாய் நின்று வெளிப்படுத்தின எல்லா வேதங்களின் உட்பொருளான மூன்று இரகசியங்களும், மிக்க சுருக்கமாகவிருக்குமுகத்தால் உட்பொதிந்துள்ள நுண்பொருள்கள் அறிதற்கு அரியனவாய் இராநின்றன.

[3]இறைவனுடைய நிர்ஹேதுகமான திருவருளாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்று, வேதங்கள் எல்லாவற்றினுடைய கருத்துப் பொருள்களையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று கண்கூடாகக் காணப்பெற்ற பராங்குசர், பரகாலர் முதலான ஆழ்வார்கள் செய்தருளிய செந்தமிழ் வேதங்களும் அவற்றின் அங்கங்களும்

---

[1] மஹருஷிகள் அருளிச்செய்த உபகாரத்தை அருளிச்செய்கிறார், 'அவ்வருமையை' என்று தொடங்கி.

[2] இறைவன் செய்த உபகாரத்தை அருளிச்செய்கிறார், 'அவை போல' என்று தொடங்கி. தானே ஆசாரியனாய் நின்று வெளிப்படுத்தின ......மூன்று இரகசியங்கள் - திருமந்திரம், துவயம், சரமச் சுலோகம் என்பன. இவை முறையே, பதரிகாச்ரமத்திலே நரனுக்கும், ஸ்ரீவைகுண்ட லோகத்திலே பிராட்டிக்கும், போர்க்களத்தில் திருத்தேர்த்தட்டிலே நின்று அருச்சுனனுக்கும் உபதேசித்தவை.

[3] பின்னர் ஆழ்வார்கள் செய்த உபகாரத்தை அருளிச்செய்கிறார், 'இறைவனுடைய' என்று தொடங்கி. நிர்ஹேதுகம் - ஒரு காரணமும் பற்றாதது. செந்தமிழ் வேதங்கள் - நம்மாழ்வார் அருளிச்செய்த

உபாங்கங்களுமான திவ்வியப்பிரபந்தங்களும், அளவிலிகளால் பொருள்காண்டற்கு ஒண்ணுதனவாய் இருந்தன.

[1]இங்ஙனம் இருக்கையாலே ருசி பிறந்த மக்கள் இழந்துபோம்படி இருந்தது. அங்ஙனம் இழந்துபோகாதபடி, ஆழ்வாருடைய நிர்ஹேதுகமான திருவருளாலே திவ்விய ஞானத்தைப் பெற்ற நாதமுனிகள் தொடக்கமான, [2]சத்சம்பிரதாய நெறியில் ஞானத்தையும் துணிவையும் அன்பையும் ஒழுக்கத்தையும் அடைந்தவர்களாய் எல்லாச் சாத்திரங்களிலும் வல்லவர்களாய்ப் பேரருளாளர்களுமான முன்பிருந்த ஆசாரியர்கள், அந்த வேத முதலான சாத்திரங்களின் பொருளைச் சுருக்கிச் சிற்றறிவினர்களும் அறியலாம்படி பிரபந்தங்களைச் செய்து, அவற்றின் மூலமாகவும் உபதேச மூலமாகவும் வெளியிட்டுப் போந்தார்கள்.

[3]அப்படியே, இவ்வுலக மக்களுடைய இழவு பொறுக்க மாட்டாத பரம கிருபையாலே, அவர்கள் பேறு பெறும் பொருட்டுத் தாமும்[4] பல பிரபந்தங்களை அருளிச்செய்த

---

நான்கு பிரபந்தங்கள். அங்கங்கள் - திருமங்கையாழ்வார் அருளிச் செய்த ஆறு பிரபந்தங்கள். உபாங்கங்கள் - மற்றை எண்மரும் செய்த நன்மாலைகள். அளவிலிகள் - ஞானம் இல்லாதவர்கள்.

1 பூர்வ ஆசாரியர்கள் செய்த உபகாரத்தை அருளிச் செய்கிறுர், ‘இங்ஙனம்’ என்று தொடங்கி.

2 சத்சம்பிரதாயம் - தாயம் - தானம்; கொடை. பிரதாயம் - முதன்மையான கொடை. சம்பிரதாயம் - சிறந்த முதன்மையான கொடை. அது, இங்கே, சிறந்த முதன்மையான உபதேசத்தைக் குறித்தது. என்றது, உபதேசிக்கிறவர்கள் உண்மைத் தன்மையையுடையவர்களாய் உபதேசித்துப் போந்தபடியைத் தெரிவித்தவாறு. சத் - பிரமத்தை அறிந்தவர்களுள் தலைவர். ஆக, பரம்பொருளை அறிந்தவர்களுள் தலைவரான ஒருவராலே உபதேசிக்கப்பட்டு வந்த உபதேசம் என்றவாறு.

3 இந்நூலாசிரியர் இந்நூலை அருளிச்செய்தற்கு உரிய காரணத்தை அருளிச்செய்கிறுர், ‘அப்படியே’ என்று தொடங்கி.

4 ‘பலபிரபந்தங்களை’ என்றது, முமுக்ஷுப்படி, பரந்தபடி, ஸ்ரீயஃபதிபடி, யாத்ருச்சிகப்படி, தத்துவத்திரயம், தத்துவ சேகரம், நவவித சம்பந்தம், அர்ச்சிராதிகதி முதலான பதினேழு பிரபந்தங்களை.

பிள்ளை லோகாசாரியர், ஆசாரியர்களுடைய பரம்பரையிற் சொல்லப்பட்டு வந்த அர்த்தங்களுள், அவர்கள் அர்த்தங்களின் பெருமை பற்றி மறைபொருளாக உபதேசித்துப் போந்தவையும் அவற்றின் அருமை பெருமைகளை நோக்கித் தாமும் இதற்கு முன்பு வெளிப்படுத்தாமல் அடக்கிக்கொண்டு போந்தவையுமான அர்த்த விசேடங்கள் எல்லாவற்றையும், பின்புள்ளாரும் இழக்கவொண்ணாது என்கிற தம்முடைய பரம கிருபைக்கு மேலே, திருவரங்கநாதனும் கனவிலே வந்து கூறியருளுகையாலே, '**ஸ்ரீ வசனபூஷணம்**' என்கிற இப்பிரபந்த மூலமாக அவ்வர்த்த விசேடங்களை எல்லாம் வெளியிட்டருளுகிறார்.

[1]முன்னரே பேரருளாளப் பெருமாள், தம்முடைய நிர்ஹேதுகமான திருவருளாலே, மணல்பாக்கத்து இருப்பார் [2]நம்பியார் ஒருவரைத் திருவருள் செய்து, தஞ்சமாயிருப்பன சில அர்த்த விசேடங்களையும் தாமே அவர்க்குக் கனவின் மூலமாக அருளிச்செய்து, 'நீர் போய் [3]இரண்டு ஆற்றிற்கும் நடுவே வதியும்; இன்னம் இவ்வர்த்தங்களையெல்லாம் தெளிவாக நாம் அங்கே உமக்குச் சொல்லுகிறோம்,' என்று அருள் செய்கையாலே, அவர் இங்கே வந்து பெருமாளைச் சேவித்துக்கொண்டு, தமக்கு முன்பு அங்கு அருளிச்செய்த அர்த்தங்களையும் அயலார் அறியாதபடி சிந்தித்துக்கொண்டு, புறம்பே தனித்து இருக்கிற காட்டழகியசிங்கர் சந்நிதியிலே வசித்துக் கொண்டிருக்க;

[4]பிள்ளை, தம்முடைய திருவடிகளில் அணுக்கத் தொண்டர்களான முதலிகளும் தாமுமாக ஒருநாள் எதிர்

1 மேலே தொகுத்து அருளிச்செய்ததை விரித்து அருளிச்செய்கிறார், 'முன்னரே' என்று தொடங்கி. பேரருளாளப் பெருமாள் - காஞ்சீபுரத்து அத்திகிரியில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன்.

2 நம்பியார் - நிறைந்த ஞானமுடையவர். அவர் பெயருமாம்.

3 இரண்டு ஆற்றிற்கும் நடு - திருவரங்கம்.

4 பிள்ளை - இந்நூலாசிரியரான பிள்ளை லோகாசாரியர். முதலிகள் - முதன்மையையுடையவர்கள்; இங்கு மாணுக்கர்கள்.

பாராதபடி[1] அங்கே எழுந்தருளி, அவ்விடம் ஏகாந்தமாய் இருக்கக் கண்டு, அங்குத் தம்முடைய சிஷ்யர்களுக்கு மறை பொருள்களை எல்லாம் அருளிச்செய்துகொண்டு எழுந்தருளியிருக்க ;

அவை, தமக்குப் பேரருளாளர் அருளிச்செய்த அர்த்த விசேடங்களாய் இருக்கையாலே [2]அவர் மிகவும் ஈடுபட்டவராய், உள்ளேநின்று புறம்பே வந்து பிள்ளை திருவடிகளிலே விழுந்து எழுந்து, 'அவரோ நீர் ?' என்ன, 'ஆவது ஏது ?' என்று பிள்ளை கேட்டருள, பேரருளாளப் பெருமாள், தமக்கு இவ்வர்த்த விசேடங்களை எல்லாம் கூறியபடியையும், சென்று திருவரங்கத்தே இருக்கச் சொன்னபடியையும், 'இன்னம் உமக்குத் தெளிவாக அங்குச் சொல்லுகிறோம்' என்று அருளிச்செய்தபடியை யும் விண்ணப்பம் செய்ய, கேட்டருளி மிக உவந்தவராய் அவரையும் அங்கீகரித்தருள, அவரும் அங்குத்தைக்கு அந்தரங்கராய் வசிக்கிற நாளில், திருவரங்கநாதன் அவர் கனவிலே தோன்றி, 'இவ்வர்த்தங்கள் மறந்து போகாத படி இவற்றை ஒரு பிரபந்தம் ஆக்கச் சொன்னோம் என்று நீர் பிள்ளைக்குச் சொல்வீர்,' என்று திருவுள்ளமாயருள, அவரும் பிள்ளை திருவடிகளிலே சென்று, இப்படிப் பெருமாள் அருளிச் செய்தார் என்று விண்ணப்பம் செய்ய, 'ஆனால், அப்படியே செய்வோம்,' என்று திரு வுள்ளம் பற்றிப் பின்னர் இப்பிரபந்தம் செய்தருளினார் என்பது பிரசித்தமிறே.

[3]இரத்தினங்கள் மிகுந்துள்ள ஆபரணத்திற்கு 'இரத்தினாபரணம்' என்று பெயராமாறு போலே, முன் பிருந்த ஆசாரியர்களுடைய வசனங்களே மிகுதியாய், இதனைப் படிப்பவர்களுக்குப் பேரொளியைத் தருவதாக

---

1 அங்கே - காட்டழகிய சிங்கர் சந்நிதியில்.

2 அவர் - நம்பியார்.

3 நூலின் பெயர்க்காரணத்தை விளக்குகிறார், 'இரத்தினங்கள்' என்று தொடங்கி.

இருப்பதனாலேயே இந்நூலுக்கு '**வசனபூஷணம்**' என்று திருப்பெயராயிற்று.

[1]இந்நூலில் 'வேதார்த்தம்' என்றது முதல் 'அத்தாலே அது முற்பட்டது' (சூத். 1-4) என்றது முடிய, நூலில் சொல்லப்படுகின்ற பொருள்களை நிச்சயம் பண்ணுதற்கு உரிய பிரமாணங்களைக் கூறுகையாலே இந் நூலுக்குப் பாயிரமாகும்.

'இதிகாச சிரேஷ்டமான' என்றது முதல், 'பிரபத்தி உபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக' என்ற சூத்திரம் முடிய, குற்றங்களோடு கூடிய இம்மக்களுடைய எல்லாக் குற்றங்களையும் சர்வேச்வரனைப் பொறுப்பித்துக் காப்பாற்றச்செய்தலையே தன் தன்மையாகவுடையளான [2]புருஷகாரவைபவமும், அந்தப் புருஷகாரமும் மிகையாம் படியான உபாய வைபவமும் சொல்லுகிறது.

'பிரபத்திக்கு' என்றது முதல் 'ஏகாந்தீவியபதேஷ்டவ்ய:' என்ற சூத்திரம் முடிய, இவ்வுபாயத்தைப் பற்றுதலாகிற பிரபத்தியினுடைய தேசநியமமின்மை, காலநியமமின்மை, பிரகார நியமமின்மை, அதிகாரி நியமமின்மை, பல நியமமின்மை, விஷயநியமம், பிரபத்தி செய்யும் அதிகாரிகளுடைய வேறுபாடு, பிரபத்தியைச் சாதனமாக்கில் வரும் குற்றம், இந்தப் பிரபத்தியினுடைய சொரூப அங்கங்கள் முதலானவற்றை ஒரு சேரச்

---

[1] இனி, இந்நூலில் கூறப்பட்டுள்ள பொருளைப் பாகுபடுத்திக் காட்டுகிறார், 'இந்நூலில்' என்று தொடங்கி.

[2] புருஷகார வைபவம் - பிராட்டியினுடைய பெருமை. இறைவனுடைய பொறுமை முதலான குணங்களைப் பிரகாசப்படுத்திக்கொண்டு, அவன் செய்யும் இரக்ஷணத்திற்குத் தான் காரணமாகவிருப்பவளின் பெருமை என்பதாம். இறைவனையும் சேதனனையும் புருஷனாகச் செய்பவள் என்பது பொருளாம். இறைவனைப் புருஷனாகச் செய்தலாவது, குணபூர்ணனாகவும், கொடுப்பவனாகவும், இரக்ஷிக்கின்றவனாகவும் செய்தல். சேதனனைப் புருஷனாகச் செய்தலாவது, இறைவன் முன்னே செல்லுமவனாகச் செய்தல். 'உபாய வைபவம்' என்றது இறைவனுடைய பெருமையை என்றபடி.

சொல்லி, பிரபத்திக்கு விஷயமான இறைவனே உபாயம் என்று கூறுகின்றமையால், இவை முற்கூறிய உபாயத்தைச் சார்ந்தவைகளாகையால் உபாயப் பிரகரணமாகும். இவற்றுள், 'பிராப்திக்கு உகப்பானும் அவனே,' என்ற சூத்திரம் முடிய, சொல்லப்புகுந்த முக்கியப் பொருள். அதற்குமேல் ஒன்பது சூத்திரங்களாலும் சொல்லப்படும் பொருள் [1]பிராசங்கிகம்.

'உபாயத்திற்கு' என்றது முதல் 'உபேய விரோதிகளுமாயிருக்கும்' என்ற சூத்திரம் முடிய, இந்த [2]உபாயத்தைக் கொண்டு உபேயத்தைப் பெறுவதற்குரிய ஒரு மகனுக்கு உபாய உபேய அதிகாரத்திற்கு இன்றியமையாமல் வேண்டப்படுவனவற்றையும் மற்றைய உபாயங்களை விடுதற்குத் தக்க காரணங்களையும் மற்றும் தவிர்வனவும் செய்வனவுமாகவுள்ளனவற்றையும் விரிவாகச் சொல்லுகையாலே அதிகாரி நிஷ்டையின் முறையைச் சொல்லுகிறது.

'தான் ஹிதோபதேசம் பண்ணும்போது' என்றது முதல் 'உகப்பும் உபகார ஸ்மிருதியும் நடக்கவேணும்' என்ற சூத்திரம் முடிய, நலத்தை உபதேசிக்கும் சமயத்தில் தன்னுடைய ஆசாரியனுக்குத் தான் பரதந்திரப்பட்டிருத்தல் முதலான நல்லாசிரியன் இலக்கணம், நன்மாணாக்கன் இலக்கணம், அவ்விருவருடைய நடைமுறைகள், தீமனம் கெடுத்த தன் ஆசாரியன் விஷயத்தில் மாணாக்கனுடைய செய்ந்நன்றியறிதலின் முறை என்னும் இவற்றைச் சொல்லுகையாலே [3]சித்தோபாயத்தில் நிலை நின்ற அதிகாரி, தன்னுடைய ஆசாரியனிடத்தில் தான் நடந்துகொள்ளும் முறையைச் சொல்லுகிறது.

---

[1] பிராசங்கிகம் - இடைப்பிற வரல். அவ்விடத்தில் சொல்ல வேண்டும் என்று நினைவிற்கு வந்ததனைச் சொல்லுதல்.

[2] உபாயம் - வழி. உபேயம் - பேறு; பலம்.

[3] சித்தோபாயம் - எப்பொழுதும் சித்தமாகவிருக்கும் உபாயம்; இறைவன்.

'ஸ்வதோஷ அநுசந்தானம் பயஹேது' என்றது முதல் 'நிவர்த்தக ஞானம் அபயஹேது' என்ற சூத்திரம் முடிய, இவ்வதிகாரிக்கு வெறுப்பின்மை உண்டாதல் முதல் இறைவனை அடைதலின் பலமான கைங்கரியம் இறுதியாக உண்டான பேறுகளுக்கெல்லாம் காரணமாய், தன்னுடைய வினை காரணமாக வந்த அச்சத்தை நீக்குகின்ற பகவானுடைய [1]நிர்ஹேதுகமான கிருபையின் பெருமை சொல்லுகிறது.

'ஸ்வதந்தரனை உபாயமாகப் பற்றின போதிறே' என்றது முதல் அதற்குமேல் உள்ளனவெல்லாம், மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருளான [2]சரமபருவ நிலையை வெளியாகச் சொல்லுகிறது.

ஆக, 'வேதார்த்தம் அறுதியிடுவது' என்று தொடங்கிச் 'சரமபருவ' நிலையிலே தலைக்கட்டுகையாலே, இந்நூலின் இறுதிப் பிரகரணத்திற் சொல்லப்பட்ட பொருள், வேதத்தின் கருத்துப் பொருள் என்பது விவாதம் இன்றிச் சித்தித்ததாம்.

[3]ஸ்ரீ கீதைக்குச் சரமச் சுலோகம் போலவே ஆயிற்று, இந்நூலுக்கு இறுதிப் பிரகரணம். அங்குச் சேதனனால் செய்யப்படும் உபாயங்களைச் சொல்லிக்கொண்டு போந்து, தனது சுவாதந்தரியத்திற்கு அஞ்சினவனுக்கு, அவற்றைத் தள்ளிச் சித்தோபாயம் காட்டப்பட்டது.[4] இங்குச்

---

1 நிர்ஹேதுகமான - ஒரு காரணத்தையும் பற்றி வாராத.

2 சரமபருவம் - உபாயத்திலே முடிவான எல்லை நிலம்; அதாவது, ஆசாரியனையே உபாயமாகப் பற்றியிருப்பது.

3 இந்நூலைப் பகவத்கீதையோடு ஒப்புமைப்படுத்தி, அதற்கும் இதற்கும் உள்ள பொருள் ஒற்றுமையைக் காட்டுகிறார், 'ஸ்ரீ கீதைக்கு' என்று தொடங்கி.

4 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:' என்பது சரமச் சுலோகம். 'எல்லாத் தர்மங்களையும் அடியோடு விட்டு என்னையே உபாயமாகப் பற்று; நான் உன்னை எல்லாப் பாவங்களினின்று விடுவிப்பேன்; வருந்தாதே,' என்பது இதன் பொருள்.

சித்தோபாயத்தைச் சொல்லிக்கொடு போந்து, இறைவ னுடைய சுவாதந்தரியத்திற்கு அஞ்சினவனுக்குப் [1]பிரதமபர்வத்தைத் தள்ளிச் சரமபர்வம் காட்டப் பட்டது.

ஆக, இப்படி ஆறு பிரகரணங்களாய் ஆறு பொருள் களைக் கூருநிற்கும்.

இனி, 'ஒன்பது பிரகரணங்களாய் ஒன்பது பொருள் களைக் கூறுகின்றது' என்னலுமாம். அங்ஙனம் பிரிக்கு மிடத்தில் முதல் பிரகரணம் முன்னையது போன்றதே யாம். 'பிரபத்திக்கு' என்றது முதல் 'பகவத் விஷயப் பிரவிருத்தி சேரும்' என்ற சூத்திரம் முடிய, முன் பிரகரணத்தில் சொல்லப்பட்ட உபாயத்திற்கு உறுப் பானவை ஆகையாலே, உபாயப்பிரகரணம்.

'பிராபகாந்தர பரித்தியாகத்துக்கும்' என்றது முதல் 'ஆகையாலே சுகரூபமாய் இருக்கும்' என்ற சூத்திரம் முடிய, [2]உபாயாந்தரதோஷப் பிரகரணம். இப் பிரகரணத்தில் பிரபத்தியுபாயத்தினுடைய சிறப்பினைச் சொல்லுதல் பிராசங்கிகம்.

'இவன் அவனைப்பெற நினைக்கும்போது' என்றது முதல் 'இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யும்படியா யிருக்கும்' என்ற சூத்திரம் முடிய, [3]சித்தோபாய நிஷ்ட னுடைய வைபவப் பிரகரணம்.

'இப்படிச் சர்வப் பிரகாரத்தாலும்' என்றது முதல் 'உபேய விரோதிகளுமாயிருக்கும்' என்ற சூத்திரம் முடிய, [4]பிரபந்ந தின சர்யை பிரகரணம்.

[1] பிரதம பர்வம் - இறைவனை உபாயமாகப் பற்றும் நிலை.

[2] உபாயாந்தரம் - பக்தி முதலான மற்றைய உபாயங்கள்.

[3] சித்தோபாய நிஷ்டன் - சித்தோபாயத்தில் நிலை நின்றவன்; இறைவனையே உபாயமாகப் பற்றியிருப்பவன்; பிரதமபர்வ நிஷ்டன்.

[4] பிரபந்ந தினசர்யை - பிரபத்தி நெறியில் நிலை நின்ற ஓர் அதிகாரி நாடொறும் நடத்தவேண்டிய ஒழுக்கங்கள்.

'தான் ஹிதோபதேசம் பண்ணும்போது' என்றது முதல் 'சேதனனுடைய ருசியாலே வருகையாலே' என்ற சூத்திரம் முடிய, [1]சதாசார்ய லக்ஷணப் பிரகரணம்.

[2]'சிஷ்யன் என்பது' என்றது முதல் 'உபகார ஸ்மிருதியும் நடக்கவேணும்' என்ற சூத்திரம் முடிய, சச்சிஷ்ய லக்ஷணப்பிரகரணம்.

'ஸ்வதோஷ அநுசந்தானம்' என்றது முதல் 'நிவர்த்தகஞானம் அபயஹேது' என்ற சூத்திரம் முடிய, பகவானுடைய நிர்ஹேதுக விஷயீகாரப் பிரகரணம்.

'ஸ்வதந்தரனை' என்றது முதல் மேல் உள்ளன வெல்லாம் [3]சரமப் பிராப்பியப் பிராபகப் பிரகரணம்.

இங்ஙனம் ஆறுவகையாகவும் ஒன்பது வகையாகவும் பிரிக்கப்படும் காரணத்தாலேயே [4]"பேறு தருவிக்குமவள் தன் பெருமை', 'திருமாமகள்தன் சீரருள் ஏற்றமும்' என்ற தனியன்கள் இரண்டும் அவதரித்தன. ஆகையால், இரண்டு வகையாகவும் சொல்லக் குறையில்லை.

[5]இப்பிரபந்தந்தான், தீர்க்க சரணாகதியான திருவாய்மொழி போன்று, 'துவயம்' என்னும் மந்திரத்தின்

---

[1] சதாசாரியன் - சத் ஆசாரியன்; நல்லாசாரியன்.

[2] சச்சிஷ்யன் - சத் சிஷ்யன்; நன்மாணாக்கன்.

[3] சரமப் பிராப்பியப் பிராபகம் - முடிந்த நிலமான ஆசாரியனே பேறும் பேற்றினையடைதற்குரிய வழியும்.

[4] இந்த இரண்டு தனியன்களும், இவற்றிற்குப் பொருள்களும் மேலே எழுதப்பட்டுள்ளன. ஆண்டுக் காண்க.

[5] துவயத்தின் பொருள் இந்நூலில் கூறப்படுகின்றது என்பதனை ஓர் உவமை முகத்தால் விரித்துக் கூறுகிறுர், 'இப்பிரபந்தந்தான்' என்று தொடங்கி. 'சரணாகதி' என்பது, துவயமந்திரம். 'தீர்க்க சரணாகதி' என்பது திருவாய்மொழி. சில்வகை எழுத்துக்களாலாய அம்மந்திரம் போலாது, பல பல திருப்பாசுரங்களால் அம்மந்திரத்தின் பொருளை விரித்துக் கூறுதலின், அப்பெயர்த்தாயிற்று. அம்மந்திரம் இறைவனுடைய பிரீதிக்கு விஷயமாய் அமைந்தது போன்று இதுவும் இறைவனுடைய பிரீதிக்கு விஷயமாயமைந்தது.

விளக்கமாகவிருக்கும். 'யாங்ஙனம்?' எனின், [1]திருவாய்மொழியிலே முதல் மூன்று பத்துக்களாலே துவயத்தின் பின் வாக்கியத்தின் பொருளையும், மேல் மூன்று பத்துக்களாலே [2]துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருளையும், மேல் நான்கு பத்துக்களாலும் அந்த உபாயத்திற்கு வேண்டுவனவான குணங்களையும், ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் தமக்கு நசையற்றபடியையும், அவனோடு தமக்குண்டான நிருபாதிக சம்பந்தத்தையும், தாம் வேண்டியவாறே பெற்றபடியையும் சொல்லுகையாலே, துவயத்திற்குத் தகுதியான அர்த்தங்களைச் சொல்லித் தலைக்கட்டியிருப்பது போன்று, இந்த நூலிலும், முதலில் புருஷகாரத்தையும், அதன்பின் உபாயத்தையும், அதன்பின் இந்த உபாய அதிகாரியின் நிலையினையும் சொல்லுகையாலே, துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருளையும், அதிகாரியின் நிலையினைச் சொல்லுகிறவளவில் உபேயத்தைப் பெறுதற்குரிய அதிகாரத்திற்கு வேண்டப்படுவனவற்றைச் சொல்லுகிற இவ்விடத்தில் பின் வாக்கியத்தின் பொருளையும் சொல்லி, அதற்கு மேலே உள்ள மூன்று பிரகரணத்தாலும் அந்தத் துவயமந்திரத்தை உபதேசித்த ஆசாரியனிடத்தில் இவனுக்கு உண்டாக வேண்டிய எண்ணங்களின் வகையினையும் ஒழுகவேண்டிய முறையினையும், இவனுக்கு மகாவிசுவாசம் உண்டாவதற்குக் காரணமான இறைவனுடைய நிர்ஹேதுகமான கிருபையின் பெருமையினையும், இரண்டு வாக்கியங்களால் சொல்லப்பட்ட உபாய உபேயங்களினுடைய எல்லை நிலத்தையும் சொல்லித் தலைக்கட்டுகையாலே.

[3]இனி ஒன்பது பொருள்களைச் சொல்லுகிறது என்று கொண்டு ஒன்பது பிரகரணங்களாகப் பிரிக்குமிடத்திலும்

[1] இதன் விளக்கத்தைத் திருவாய்மொழி முதற்பத்து அவதாரிகையில் இரண்டாவது 'ஸ்ரீயஃபதி'யில் காணல் தகும்.

[2] 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:' என்பது துவயமந்திரம்.

[3] இனி, ஒன்பது பிரகரணங்களாகப் பிரிக்கப்படும் போதும் அப்பொருள் சொல்லப்படுமாற்றை விவரிக்கிறார், 'இனி ஒன்பது' என்று தொடங்கி.

துவயத்தின் முன் வாக்கியத்தில் உள்ள 'பிரபத்யே-பற்றுகிறேன்' என்ற வினைச்சொல்லால் சொல்லப்படுகின்ற பிரபத்தியானது வேறு உபாயங்களைத் தவிர்தல் முன்னாகவல்லது இராமையாலும், 'தினசரி'யையும் அச்சொல்லிற் சொல்லப்படுகிற அதிகாரிக்கே உள்ளது ஒன்றாகையாலும், நல்லாசிரியன் இலக்கணம் துவயத்தை உபதேசிக்கின்ற ஆசாரியன் படியைச் சொல்லுகிறதாகையாலும் துவயத்தின் விளக்கமாகக் கூறுதற்குக் குறையில்லை.

இப்படித் துவயத்தின் விளக்கமாகவிருக்கின்ற இந்நூலிலே, மற்றைய திருமந்திரம் சரமச்சுலோகம் என்னும் இரண்டு மறைகளின் பொருள்களும் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. 'யாங்ஙனம்?' எனில், [1]'அஹமர்த்தத்துக்கு' என்றது முதல் 'அடியான் என்றிறே' என்றது முடிய உள்ள சூத்திரங்களாலும் 'சொரூபப் பிரயுக்தமான தாஸ்யமிறே பிரதானம்' என்ற சூத்திரத்தாலும் பிரணவத்தின் பொருள் சொல்லப்பட்டது. 'ஸ்வயத்ந நிவிருத்தி' என்ற சூத்திரத்தாலும் 'தன்னைத் தானே முடிக்கையாவது' என்றது முதல் 'இப்படிச் சர்வப் பிரகாரத்தாலும்' என்ற சூத்திரத்திற்கு முன் சூத்திரம் முடிய மேலே உள்ள சூத்திரங்களாலும் 'நம:' பதத்தின் பொருள் சொல்லப்பட்டது. 'பரப்பிரயோஜனப் பிரவிருத்தி' என்ற சூத்திரத்தாலும் 'உபேயத்துக்கு இளைய பெருமாளையும்' என்ற சூத்திரத்தாலும் 'கைங்கரியந்தான் பக்தி மூலம் அல்லாத போது' என்ற சூத்திரத்தாலும் 'நாராயணாய' என்ற பதத்தின் பொருள் சொல்லப்பட்டது.

[2]'அஞ்ஞானத்தாலே' (சூத். 46)' என்ற சூத்திரத்தாலும் 'பிராபகாந்தர பரித்யாகத்துக்கும்' என்ற

---

[1] 'ஓம் நமோ நாராயணாய' என்ற திருமந்திரத்தின் பொருள் இந்நூலில் சுருங்கக் கூறப்படுவதனை விளக்குகிறார், 'அஹமர்த்தத்துக்கு' என்று தொடங்கி.

[2] இனி, சரமச் சுலோகத்தின் பொருள் இந்நூலில் சுருக்கமாகச் சொல்லப்படுவதனை விளக்குகிறார், 'அஜ்ஞானத்தாலே' என்று தொடங்கி.

சூத்திரத்தாலும் மற்றை உபாயங்களைத் தவிர்தலைத் தவிர்தற்குரிய காரணத்தோடு சொல்லுகையாலே, அவ் வுபாயங்களை விடுதலையும் விடுதலின் வகையினையும் சொல்லுகிற 'சர்வ தர்மாந் பரித்தியஜ்ய' என்னும் இரண்டு பதங்களின் பொருள்கள் சொல்லப்பட்டன. 'இது தனக்கு ஸ்வரூபம்' என்ற சூத்திரத்தாலும் 'பிராப்திக்கு உபாயம் அவன் நினைவு' என்ற சூத்திரத் தாலும் 'மாமேகம் சரணம்' என்ற பதங்களின் பொருள்கள் சொல்லப்பட்டன. 'பிரபத்தியுபாயத்துக்கு' என்ற சூத்திரத்தால் 'விரஜ' என்ற பதத்தின் பொரு ளான பற்றுதலின் சிறப்புச் சொல்லப்பட்டது. 'அவன் இவனை' என்றது முதல் 'ஸ்வாதந்தரியத்தாலே வரும் பாரதந்தரியம் பிரபலம்' என்ற சூத்திரம் முடிய, எல்லாப் பாவங்களையும் தள்ளி அங்கீகரிக்கும் இறைவனுடைய சுவாதந்தரியத்தையும், 'கிருபா பலமும் அநுபவித்தே அறவேணும்' என்ற சூத்திரத்தாலே பலத்தைப் பெறு வதில் கண்ணழி வில்லாமையும் சொல்லுகையாலே, 'அஹம் த்வா சர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மாசுச:' என்ற பின் பகுதியின் பொருள் சொல்லப் பட்டது.

**உரைப்பாயிரம் முற்றிற்று.**

மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

ஶ்ரீ:

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# ஶ்ரீவசனபூஷண மூலமும் வியாக்கியானமும்

## பாயிரம்

### 1

**வேதார்த்தம் அறுதியிடுவது ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே.**[1]

என்பது சூத்திரம்.

அவதாரிகை :—[2]பிரமாதாவானவன் பிரமாணத்தைக் கொண்டிறே பிரமேயத்தை அறுதியிடுவது. [3]அந்தப் பிரமாணத்தைப் பிரத்யக்ஷம் முதலாக ஐதிஹ்யம் ஈறாக எட்டு வகையாகச் சொல்லுவார்கள். அவற்றுள், [4]"பிரத்யக்ஷம் ஒன்றையே உலோகாயதர்கள் சொல்லுகிறார்கள்' என்று தொடங்கும்

[1] இந்நூலாசிரியர் பரமவைதிகராகையாலே வேதம் தலைசிறந்த பிரமாணம் என்பதனை உடன்பட்டாராய், அவ்வேதத்தின் பொருளை அறுதியிட்டு அறிதற்கு வேண்டிய முறைகளை இச்சூத்திரத்தில் அருளிச் செய்கிறார்.

[2] பிரமாதா - உண்மை அறிவினைத் தேடிக்கொள்ளுமவன். பிரமாணம் - உண்மை அறிவிற்குக் கருவியாயிருப்பது. பிரமேயம் - பிரமாணத்தால் அறியப்படும் பொருள்.

[3] பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அர்த்தாபத்தி, அபாவம், சம்பவம், ஐதிஹ்யம் என்பன.

[4] பிரத்யக்ஷம் ஏகம் சார்வாகா: கணாதசுகதௌ புந:, அநுமாநஞ்ச தச்சாத ஸாங்க்யா: ஶப்தஞ்சதேஅபி. அர்த்தபத்தயா ஸஹைதாநி சத்வார்யாஹ ப்ரபாகர:, ந்யாயைக தேஶிநோப்யேவம் உபமாநம் ப்ரசக்ஷதே. அபாவ ஷஷ்டாந்யேதாநி பாட்டா வேதாந்திநஸ் ததா, ஸம்பவைதிஹ்ய யுக்தாநிதாநி பௌராணிகாஜகு: என்பன அச்சுலோகங்கள். சார்வாககர் பிரத்யக்ஷத்தையும், வைசேடிகர்களும் பௌத்தர்களும் பிரத்யக்ஷத்தையும் அநுமானத்தையும், சாங்கியர்களும்

பொருள் அமைந்த சுலோகத்திற்சொல்லுகிற [1]பாஹ்யகுத்ருஷ்டிகளைப் போல அன்றியே, [2]பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்னும் மூன்றனையும் பிரமாணங்களாக அங்கீகரித்து, உபமானம் முதலாய [3]ஏனை ஐந்தனையும் எது எதிலே அடங்குமோ அதனை அதிலே அடக்குவித்து, அவற்றுள், [4]பிரத்யக்ஷம், இந்திரியங்களோடு சம்பந்தப்படுதற்குரிய பொருள்களிலும், அநுமானம், இந்திரியங்களால் உண்டான சம்பந்த ஞானத்திற்கு அநுகுணமாக இந்திரியங்களுக்குப் புலனாகாத சில பொருள்களிலும் பிரமாணங்களாகவும், இந்திரியங்களால் காண

---

நையாயிகர்களுள் ஒரு சாராரும் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்னும் மூன்றையும், பிரபாகரர் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி என்னும் ஐந்தனையும், பாட்டர்களும் மாயாவாதிகளும் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமாநம், அருத்தாபத்தி, அபாவம் என்னும் ஆறனையும், பௌராணிகர்கள் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம், சம்பவம், ஐதிஹ்யம் என்னும் எட்டனையும் பிரமாணமாகக் கொள்ளுவர். நையாயிகர்களுள் ஒரு சாரார் உபமானத்தையும் சேர்த்து நான்கனைப் பிரமாணமாகக் கொள்வர்.

1 பாஹ்யர் - வேதத்தின் கொள்கைக்குப் புறம்பானவர்கள். குத்ருஷ்டி - வேதவாக்கியங்களுக்கு நேர்மாறாகப் பொருள் கொள்ளுகின்றவர்கள். கு-த்ருஷ்டி - மாறுபட்ட அறிவினையுடையவர். பாஹ்யர் ஆவார்: - சார்வாகர்களும், வைசேஷிகர்களும், பௌத்தர்களும், சாங்கியர்களும், நையாயிகர்களும். குத்ருஷ்டிகள் ஆவார்: - பிரபாகரரும், மாயாவாதிகளும், பௌராணிகர்களும்.

2 மூன்றனையும் பிரமாணமாக அங்கீகரித்தவர், பிள்ளை லோகாசாரியரான இந்நூலாசிரியர்.

3 'ஏனை ஐந்தனையும் இம்மூன்றிலே அடக்குவித்து' என்றது, உபமானம், அருத்தாபத்தி, சம்பவம் என்னும் இம்மூன்றும் அநுமானத்தில் அடங்கும். அபாவம், பிரத்யக்ஷத்தில் அடங்கும். ஐதிஹ்யம், ஆகமத்தில் அடங்கும் என்றவாறு.

4 பிரத்யக்ஷத்தைப் பிரமாணமாகக் கொள்ளும்போது கண் முதலிய இந்திரியங்களைக் கொண்டே அறிய வேண்டியதாயும், அநுமானம் பிரமாணம் ஆகும்போது இதற்கு முன்பு தான் பிரத்யக்ஷமாகப் பொருள்களைக் கண்டு வைத்த அந்த ஞானத்தாலே காணப்படாத வேறு சில பொருள்களை அறியவேண்டியதாயும், இப்படிப் பிரத்யக்ஷத்திற்கும் அநுமானத்திற்கும் எட்டாத விஷயங்களைச் சாஸ்திரங்களைக்கொண்டே நிச்சயம் செய்யவேண்டியதாயும் இருக்கின்றது என்றபடி.

முடியாத பொருள்களில் சாஸ்திரமே பிரமாணமாகவும் அறுதியிட்டு, [1]அவற்றுள்ளும் 'செய்தவனும் அவன் காரணமாகவரும் குற்றங்களும் இல்லாமையால், ஸ்மிருதி இதிகாச புராணங்களைக் காட்டிலும் வலியுடைத்தான வேதமானது தேவரீரைச் சொல்லுவதாக நிச்சயிக்கப்பட்ட போது, அந்த வேதத்திற்கு வேருன ஸ்மிருதி இதிகாச புராணங்கள் எல்லாம் அந்த வேதத்தை மூலமாகவுடையனவாய்க்கொண்டு பிரமாணங்கள் ஆகின்றன,' என்கிறபடியே தாம் பிரமாணம் ஆவதற்கு வேறே ஒரு மூலப் பிரமாணத்தை விரும்பி நிற்பனவான, புருஷர்களால் செய்யப் பட்ட [2]மற்றைய சாஸ்திரங்களை நோக்க, தனக்கு வேறென்று பிரமாணமாக வேண்டாது தானே பிரமாணமாகும் தன்மையையுடைய வேதமே பிரபல பிரமாணமாகவும் அறுதியிட்டிருக்கும் பரம வைதிகராகையாலே, இப்பிரபந்தத்தில் தாம் அருளிச் செய்யும் பொருள்கள் எல்லாம் வேதத்திலே சொல்லப்பட்ட பொருள் என்னுமிடம் தோற்ற, முதலிலே வேதத்தைப் பிரமாணமாக அங்கீகரித்துக்கொண்டு, அந்த வேதத்தினுடைய பொருளை அறுதியிடும் முறையை இச்சூத்திரத்தால் அருளிச் செய்கிருர்.

வியாக்கியானம் :—வேதம்-[3]அகிலஹேயப் பிரத்யநீகத்வம் கல்யாணைகதாநத்வம் என்னும் இவ்விரண்டாலும் ஈச்வரன் [4]எல்லாப் பொருள்களிலும் வேறுபட்டவனுயிருக்குமாறு

[1] இந்தச் சாஸ்திரங்களுள் வேதமே தலைசிறந்த பிரமாணம் என்பதற்கு மேற்கோள் காட்டுகிருர். 'அவற்றுள்ளும்' என்று தொடங்கி. 'வேதே கர்த்ராத் யபாவாத் பலவதிஹி நயைः த்வந்முகே நீயமாநே தந்மூலத்வேந மாநம் ததிதரதகிலம் ஜாயதே' என்பது ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தரச. 14.

[2] மற்றைய சாஸ்திரங்கள் - இதிகாசபுராணங்களும் ஸ்மிருதிகளும். புருஷர்கள் - முனிவர்கள்.

[3] வேதம் எல்லாச் சாஸ்திரங்களைக்காட்டிலும் வேறுபட்ட சிறப்பினையுடையது என்பதனை உவமை முகத்தால் விளக்குகிருர், 'அகிலஹேயப்பிரத்யநீகத்வம்' என்று தொடங்கி. அகிலஹேயப்பிரத்தியநீகத்வம் - தான் குற்றம் இல்லாதவனுய்ப் பிறருடைய குற்றங்களையும் போக்குமவனுயிருக்கும் தன்மை. கல்யாணைகதானத்வம் - தனக்கும் பிறர்க்கும் அநுகூலமாகவிருக்கும் தன்மை. அநுகூலமாவது - ஆனந்தம்.

[4] 'எல்லாப் பொருள்கள்' என்றது, மூன்றுவித சேதனர்களையும் மூன்றுவித அசேதனங்களையும். மூன்று வித சேதனர்கள் - நித்தியர்,

போலேயிறே, புருஷனாலே செய்யப்படாத தன்மையாலும் நித்தியமாகவிருக்கும் தன்மையாலும் வேதம் எல்லாப் பிரமாணங்களிலும் வேறுபட்டதாயிருக்கும்படி. [1]வேதத்தினுடைய புருஷனாலே செய்யப்படாத தன்மையும், நித்தியமாகவிருக்கும் தன்மையும் [2]'அழகுள்ளவனே, நித்தியமான வேதத்தால்' என்பது போன்ற சுருதியாலும், 'எந்த வேதம் அடியாக எல்லாப் பொருள்களும் படைக்கப்படுகின்றனவோ, (அப்படிப்பட்ட) ஆதலும் அழிதலும் அற்றதாய், திவ்வியமாயிருக்கிற வேதமயமான வாக்கானது சுயம்புவான பகவானாலே ஆதியிலே வெளியிடப்பட்டது' என்பது போன்ற ஸ்மிருதியாலும் சொல்லப்படாநின்றனவிறே. [3]இந்தச் சுருதியும், ஸ்மிருதியும் வேதம் நித்தியமாகவிருக்கும் தன்மையைச் சொல்லுகையாலே, அந்த வேதத்தினுடைய, புருஷனாலே செய்யப்படாத தன்மையும் தானே போதரும். [4]ஆகையால், பிரமம் விப்ரலம்பம் பிரமாதம்

---

முக்தர், பத்தர். மூன்றுவித அசேதனங்கள் - சுத்தசத்வம், மிச்ரசத்வம், சத்வசூந்யம். சுத்தசத்வம் - பரமபதம், மிச்ரதத்வம் - லீலாவிபூதி, சத்வசூந்யம் - காலம்.

[1] அகிலஹேயப்பிரதியநீகத்வத்தைப்போன்றது, புருஷனாலே செய்யப்படாத தன்மை; கல்யாணைகதானத்வத்தைப் போன்றது, நித்தியமாகவிருக்கும் தன்மை. நித்தியமாயிருக்கும் தன்மையாவது, எல்லாக் காலத்திலும் சம்பந்தப்பட்டிருத்தல். அதாவது, முன்னே முன்னே சொல்லிக்கொண்டு செல்லப் பின்னே பின்னே சொல்லிக்கொண்டு வருதல்.

[2] வேதம் நித்தியமாகவிருப்பது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார். 'அழகுள்ளவனே' என்று தொடங்கியும், 'எந்த வேதம்' என்று தொடங்கியும்.

'வாசா விரூப நித்யயா' என்பது சுருதி.

'அநாதி நிதநாஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா, ஆதௌ வேதமயீ திவ்யா யதஸ் ஸர்வாঃ ப்ரஸூதயঃ' என்பது ஸ்மிருதி.

[3] மேலே காட்டிய பிரமாணங்கள் இரண்டாலும் நித்யத்வம் பெறப்பட்டமையால், அதனைக்கொண்டே புருஷனால் செய்யப்படாத தன்மையை உறுதிப்படுத்துகிறார், 'இந்தச் சுருதியும்' என்று தொடங்கி.

[4] ஆதலால், வேதம் உள்ளதை உள்ளவாறே அறிந்து, அறிந்தவாறே உரைக்கும் தன்மை வாய்ந்தது என்பதனைக் காட்டுகிறார் 'ஆகையால்' என்று தொடங்கி. பிரமம் - மயக்க உணர்வு. விப்ரலம்பம் - வஞ்சனை, வஞ்சித்தல். பிரமாதம் - குறிக்கோள் இன்மை.

அசக்தி என்னும் நால்வகையான குற்றங்களும் உண்டாதல் சிறிதும் இல்லாதபடியாயிருக்கும். [1]புருஷனுல் செய்யப்படும் தன்மை அன்ரே அக்குற்றங்கள் வருகைக்கு மூலம்? இப்படி இருக்கையாலே இதற்கு மேற்பட்டது ஒரு சாஸ்திரம் இல்லை. ஆகையாலேயிறே [2]'ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே, வேத ஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி நதைவம் கேஶவாத் பரம்' என்று இதிகாசத்தை அறிந்தவராலும் புராணத்தை அறிந்தவராலும் [3]ஏககண்டமாகச் சொல்லப்பட்டது.

இதன் ஏற்றமெல்லாம் திருவுள்ளம்பற்றியிறே [4]'சுடர் மிகுசுருதி' என்று நம்மாழ்வார் அருளிச்செய்தது. அவரைப் பின் செல்லுமவராய் [5]அபியுக்தர்களுள் தலைவரான பட்டரும் 'ஆதௌவேதாஃ [6]பிரமாணம் - முதலடியிலே। வேதங்கள் பிர மாணம் ஆகின்றன,' என்ருரிறே. இத்தை 'வேதம்' என்கிறது 'வேதயதி இதிவேதஃ' என்கிற வியுத்பத்தியாலே, அறிந்து கொள்ளவேண்டும் என்ற விருப்பமுள்ளவர்களாய் ஆஸ்திகர்களா யிருப்பார்க்குத் தன் பொருளைக் காண்பிக்கையாலே. இப்படி

---

அசக்தி - கரணங்களின் வலியின்மை. இங்குக் கூறிய நால்வகைக் குற்றங்களுள் பிரமம், பிரமாதம் என்பன இன்மையைக் கூறியவதனுல் உள்ளதை உள்ளவாறு அறிதல் தெரிவிக்கப்பட்டது. விப்ரலம்பம், அசக்தி என்பன இல்லாமையைக் கூறியவதனுல் அறிந்தவாறே உரைக்கும் ஆற்றல் தெரிவிக்கப்பட்டது.

[1] அவை இல்லாமைக்குக் காரணம் அருளிச்செய்கிருர், 'புருஷனுல்' என்று தொடங்கி.

[2] வேதத்தைக்காட்டிலும் உயர்ந்த சாஸ்திரம் இல்லை என்பதற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'ஸத்யம்' என்று தொடங்கி. இதன் பொருள், சத்தியம், சத்தியம்; மீளவும் சத்தியம்; கைகளைத் தூக்கிக் கொண்டு சொல்லுகிறேன், வேதசாஸ்திரத்தைக்காட்டிலும் உயர்ந்த சாஸ்திரம் கிடையாது; வேதமே உயர்ந்தது என்றபடி. கேசவனைக் காட்டிலும் உயர்ந்த பரம்பொருள் கிடையாது; கேசவனே உயர்ந்த பரம்பொருள் என்பதாம். இது, ஹரிவம்சம்.

[3] ஏக கண்டம் - ஒரே விதமான சொற்கள்.

[4] திருவாய்மொழி, 1 : 1 : 7.

[5] அபியுக்தர் - நூல்களில் உள்ள குணதோஷங்களை உள்ளவாறு அறிந்தவர்கள். வேதம் பிரமாணமாகவிருக்கும் தன்மையை விசாரிப்பதில் ஈடுபட்டிருப்பவர்கள் எனலுமாம்.

[6] ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தரசதகம், 19.

யிருந்துள்ள வேதந்தான், தன்னிடத்தில் சொல்லப்படுகிற பொருள் விசேடத்தாலே இரண்டு பாகங்களையுடையதாகவிருக்கும். அவ்விரண்டு பாகங்களையும், இவ்விடத்தில் இரண்டு பாகங்களையும் பொதுவாகக் குறிக்கின்ற 'வேதம்' என்ற சொல்லாலே சொல்லுகிறது.

[1]'அர்த்தம்' என்றது, முன்பாகத்தில் சொல்லப்படுவதான கர்மத்தையும், பின்பாகத்தில் சொல்லப்படுவதான பரம்பொருளையும் சொல்லுகிறது. [2]பூர்வமீமாம்சையில் 'அதாதோ தர்ம ஜிஜ்ஞாஸா-வேதம் ஓதியபின், அந்தக் காரணத்தால் தர்மத்தை அறிய ஆசைப்பட வேண்டும்,' என்றும், உத்தரமீமாம்சையில் 'அதாதோ பிரஹ்ம ஜிஜ்ஞாஸா-தர்மத்தை அறிந்த பின்பு, அறிந்த அக்காரணத்தால் பரம்பொருளை அறிய ஆசைப்படவேண்டும்,' என்றுமிறே தொடங்கப்பட்டுள்ளன. ஆகையாலே, இரண்டு பாகங்களிலும் சொல்லப்பட்ட பொருள், ஆராதன வடிவமான கர்மமும், ஆராதிக்கப்படும் பொருளான [3]பிரஹ்மமுமாம்.

கர்மங்கள், பகவானுடைய ஆராதன வடிவமாக இருக்கும் தன்மை, [4]'அந்தப் பரம்பொருள் உயிர்; ஏனைய எல்லாத் தேவர்களும் சரீரங்கள்.' என்று அக்நி, இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் பகவானுக்குச் சரீரமாகவிருக்கின்றார்கள் என்று சாஸ்திரம் சொல்லுகையாலே போதருகின்றதன்றோ? இந்தத் தன்மையை அறிந்து, அக்நி, இந்திரன் முதலான தேவர்களுக்கு அந்தர்யாமியாகவிருக்கிற பகவானுக்கு நாம் செய்யும் ஆராதனம் சேர்கின்றது என்று செய்கின்றவர்களிடத்தில்,

---

[1] 'அர்த்தம்' என்பது சாதியொருமை.

[2] தாம் கூறிய பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பூர்வமீமாம்சையில்' என்று தொடங்கி. மீமாம்சை என்பதற்கு விசாரிப்பது, ஆராய்வது என்பது பொருள்.

[3] பிரஹ்மம் - தன்னை ஒழிந்த மற்றைய எல்லாப் பொருள்களைக் காட்டிலும் எல்லா வகையிலும் பெரியது; பரம்பொருள்.

[4] கர்மங்கள் எல்லாம் பகவானுடைய ஆராதனத்தில் முடிகின்றமைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அந்தப் பரம்பொருள்' என்று தொடங்கி.

'ஸ ஆத்மா அங்காநி அந்யா தேவதா:' என்பது தைத்திரீய உப.

'கர்மங்கள் பகவானுடைய ஆராதனமாகவிருக்கும் தன்மை' மிகத் தெளிவாகவிருக்கும். இத்தன்மை அறியாதார் அந்த அந்தத் தேவர்களை மாத்திரம் குறிக்கொண்டு செய்யும் கர்மங்களும், அவ்வப்பொருள்களின் இயல்பால் பகவானுக்குச் செய்யும் ஆராதனமாகத் தலைக்கட்டும். [1]'எவர்கள் பிதிரர்களையும் தேவர்களையும் அக்நியோடு கூடிய பிராமணர்களையும் பூஜிக்கிறார்களோ, அவர்கள், எல்லா உயிர்களுக்கும் அந்தர்யாமியாக விருக்கிற விஷ்ணுவையே பூஜிக்கிறார்கள்' என்னக்கடவதிறே. [2]'ஓ அருச்சுனா, எவர்-சிலர், வேறு தெய்வங்களிடத்தில் பக்தியுடையவர்களாய்க்கொண்டு முயற்சியுடையவர்களாய், அவ்வத் தேவர்களை பூஜிக்கிறார்களோ அவர்களும் என்னுடைய ஆராதனம் என்று அறியாதவர்களாய் என்னையே ஆராதிக்கிறார்கள்' என்று தானே அருளிச் செய்தானிறே. ஆகையாலே, எல்லாப் படிகளாலும் கர்மங்கள் பகவானுக்கு ஆராதனமாந்தன்மை சித்தமிறே.

[3]இப்படி, ஆராதன வடிவமாகிற கர்மமும் ஆராதிக்கப்படும் பொருளான பரம்பொருளும் ஆகிற இரண்டு பொருள்களையும் அறியவே, விடத்தக்கனவும் பற்றத்தக்கனவுமான எல்லாப் பொருள்களையும் அறியலாயிருக்கையாலே, வேதத்தினுடைய பூர்வபாகத்தாலும் உத்தரபாகத்தாலும் சொல்லப்படும் பொருள்கள் கருமமும் பரம்பொருளுமாம்.

---

[1] அறியாதார் செய்யும் கர்மங்கள் பகவானுடைய ஆராதனமாகத் தலைக்கட்டுவதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'எவர்கள்' என்று தொடங்கியும், 'ஓ அருச்சுனா' என்று தொடங்கியும்.

[1]'யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந்
ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே'
என்பது தக்ஷஸ்மிருதி.

[2]'யேப்யந்ய தேவதாபக்தா யஜந்தே ஶ்ரத்தயாந்விதா:
தேபி மாமேவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம்'
என்பது ஸ்ரீ கீதை, 9 : 23.

[3]'ஆயின், இவ்விரு பொருள்களையும் தவிர, ஏனைய பொருள்களைப்பற்றி வேதத்தில் சொல்லப்படவில்லையோ? அவற்றை நாம் அறியுமாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

[1]'எங்ஙனே ?' என்னில், கர்மந்தான், இன்பத்திலே இச்சையுடையவர்களுக்கு ஐச்வரியத்திற்குச் சாதனமாய், முமுக்ஷுக்களுள் பக்தி நெறியில் நிலை நின்றவர்களுக்குப் பக்தியைச் செய்வதற்கு அங்கமாய், பிரபந்நர்க்குக் கைங்கரியத்தின் வடிவமாயிறே இருப்பது.

[2]இப்படியிருந்துள்ள கர்மத்தின் வேஷத்தை உள்ளபடி அறியவே, அளவற்றதாய் அழியாததாயிருக்கிற பலமான பரம்பொருளை அடைவதற்கு விரும்புகிற பக்தி நிஷ்டர்க்கு, இந்தக் கர்மமானது அவர்களுடைய பக்திக்கு அங்கமாகச் செய்யத்தக்கதாம்; செல்வத்தை விரும்புகிறவர்கள் மேற்கொள்ளுகின்ற தன்மையாலே விடத்தக்கது என்று அறியலாம். சித்தோபாயத்தில் நிலை நின்றவர்களுக்கு, இக்கர்மத்தால் அடைய வேண்டிய பயன் ஒன்று இல்லாமையாலே, கைங்கரிய வடிவத்தில் செய்யத் தக்கதாம்; பக்தியில் நிலை நின்றவர்கள் மேற்கொள்ளுகிற வழியாலே இவர்களுக்கு விடத்தக்கது என்று அறியலாம்.

[3]பரம்பொருளை அறியும்போது, அப்பரம்பொருளுடைய சொரூபம், உருவம், குணம், விபூதி என்னும் இவற்றை எல்லாம் அறியவேண்டுகையாலே, விபூதியாகவிருக்கிற உயிர்ப் பொருள்கள், உயிரில் பொருள்களின் சொரூபத்தை அறியலாம். அவற்றுள், ஞானம், ஆனந்தம் இவற்றின் வடிவமான உயிர்ப் பொருள்களின் சொரூப [4]வைலக்ஷண்யம் அடியாக வருகிற

---

1 மேலே கூறியவற்றை விளக்குகிறார் 'எங்ஙனே? என்னில்' என்று தொடங்கி.

2 ஐச்வர்யகாமர், பக்திநிஷ்டர், பிரபந்நர் என்னும் இம்மூவரும் கர்மத்தைச் செய்யத்தக்க முறையையும் விடத்தக்க முறையையும் விளக்குகிறார் 'இப்படியிருந்துள்ள' என்று தொடங்கி. வேஷம் - விசேஷமான தன்மை.

3 பரம்பொருளை அறியவே எல்லாவற்றையும் அறிந்ததாம் வகையை அருளிச் செய்கிறார் 'பரம்பொருளை' என்று தொடங்கி. விபூதி - அவனால் ஆளப்படும் பொருள்; செல்வம்.

4 வைலக்ஷண்யம் அடியாக - வைலக்ஷண்ய ஞானத்தின் அடியாக வருகிறதாகையாலே என்றபடி. என்றது, இந்த ஞானம் அடியாக வருகிற ஆத்ம அநுபவத்தில் உண்டான இச்சையினாலே சாதன அநுஷ்டானத்தைச் செய்து அதனாலே பெறப்படுகையினாலே என்றபடி. கைவல்யவேஷம் - ஆத்மாநுபவத்தின் நித்தியத்வம் முதலான தன்மை.

தாகையாலே கைவல்யத்தின் வேஷம் அறியலாம். [1]பரம்பொருளினுடைய சேஷித்வத்தையும் பிராப்பியத்வத்தையும் அறியவே, அவனை அனுபவிக்கும் அனுபவமும் அவனுக்குச் செய்யும் கைங்கரியமும் புருஷார்த்தம் என்று அறியலாம். [2]பரம்பொருளினுடைய உபாஸ்யத்வத்தையும் சரண்யத்வத்தையும் அறியவே, அவனை அடைவதற்குரிய சாதன விசேஷங்களை அறியலாம். [3]சாத்யாந்தரத்தினுடைய தியாச்சியத்வத்தை, பரம்பொருளினுடைய எல்லையில்லாத இனிமையை அறியவே, தெளிவாக அறியலாம். [4]சாதனாந்தரங்களினுடைய தியாச்சியத்வத்தை, பரம்பொருளினுடைய அநந்யசாத்யத்வத்தையும் அப்பரம்பொருளுக்குச் சரீரமாய்க்கொண்டு பரதந்தரமாயிருக்கிற ஆன்மாவினுடைய சொரூபத்தையும் அறியவே தெளிவாக அறியலாம்.

ஆக, இப்படியிருக்கையாலே, வேதத்தினுடைய பூர்வபாகத்தில் சொல்லப்படும் பொருள் ஆராதனவடிவமான கர்மமும்,

[1] பரம்பொருளினுடைய சேஷித்வத்தை அறியவே, அவனுக்குச் செய்யும் கைங்கரியம் புருஷார்த்தம் என்று அறியலாம் என்றும், பரம்பொருளினுடைய பிராப்பியத்வத்தை அறியவே, அவனை அனுபவிக்கும் அனுபவம் புருஷார்த்தம் என்று அறியலாம் என்றும் இவ்வாக்கியத்தை நிரல் நிறையே கூட்டிக்கொள்க. சேஷித்வமாவது, கைங்கரியத்தைக் கொள்ளுதற்கு உரியனாயிருக்கை. பிராப்பியத்வம் - அனுபவிக்கப்படுமவனாயிருக்கை.

[2] பரம்பொருளினுடைய உபாஸ்யத்தை அறியவே, அவனை அடைதற்குரியதான பக்தியாகிற சாதன விசேஷத்தை அறியலாம் என்றும், பரம்பொருளினுடைய சரண்யத்வத்தை அறியவே, அவனை அடைதற்குரிய பிரபத்தியாகிற சாதன விசேஷத்தை அறியலாம் என்றும், 'அவனை அடைதற்குரிய சாதனவிசேஷம்' என்பதனை இரண்டற்கும் கூட்டுக. உபாஸ்யம் - பக்திக்கு விஷயமாகவிருத்தல். அவனை அடைதற்குரிய சாதன விசேஷம் - பக்தி. சரண்யத்வம் - பக்தி நெறியில் சக்தியில்லாதவர்களுக்கு இறைவன் நிரபேக்ஷ உபாயமாகவிருத்தல். அவனை அடைதற்குரிய சாதனவிசேஷம் - பிரபத்தி. இறைவன் என்றுமாம்.

[3] சாத்தியாந்தரம் - வேறுபலன்கள்; ஐச்வரியமும் கைவல்யமும். தியாச்சியத்வம் - விலக்கப்படும் தன்மை.

[4] சாதனாந்தரங்கள் - வேறுசாதனங்கள்; அவை கர்மம், ஞானம், பக்தி என்னும் இவைகள். அநந்யசாத்யத்வம் - வேறு சாதனங்களால் சாதித்துக்கொள்ள முடியாமை.

உத்தரபாகத்தில் சொல்லப்படும் பொருள் ஆராதிக்கப்படும் பொருளான பரம்பொருளும் என்னக் குறையில்லை. [1]'வேதத்தினுடைய பூர்வபாகமானது உன்னுடைய ஆராதன விதியில் முடிகின்றது; உத்தரபாகமானது, உன்னுடைய படைத்தல் முதலான செயல்கள், அதற்குத் தகுதியான ஞானசக்திகள், விபூதிகள் ஆகிய இவற்றை நன்ருகத் தெரிவிப்பதனுல் உன்னுடைய திருவடிகளைச் சேர்வதில் முடிகிறது,' என்றிறே பட்டர் அருளிச் செய்தது.

இப்படி இரண்டு பாகங்களிலும் சொல்லப்படுகிற இவ்வர்த்தங்களை அறுதியிடுகையாவது, கர்மத்தினுடைய தன்மையையும் அங்கத்தையும் பலன் முதலானவைகளையும், பரம்பொருளினுடைய சொரூப ரூப குண விபூதிகளையும் ஐயம்திரிபுஅற நிச்சயித்தல். அங்ஙனம் செய்யும்போது, [2]சகலசாகாப் பிரத்யய நியாயத்தாலும், சகல வேதாந்தப் பிரத்யய நியாயத்தாலும் நிச்சயம் செய்யவேண்டும்.

சகல சாகாப் பிரத்யய நியாயமாவது, ஒரு வாக்கியத்திலே ஒரு பொருளைச் சொன்னுல், [3]அதனுடைய அங்கம், உபாங்கம் முதலானவற்றை நேராக அறிகைக்காக, மற்றைய சாகைகள் எல்லாவற்றிலும் சென்று, அவற்றில் சொல்லுகிற பொருள்களிலும் ஞானம் பிறந்து, அப்பொருள்களில் ஒன்றற்கு ஒன்று உள்ள முரண்பாடுகளையும் நீக்கி, தனக்கு விருப்பமான அங்கியோடே சேருமவற்றைச் சேர்த்தல். சகல வேதாந்தப் பிரத்யய நியாயமாவது, ஓர் உபநிடதத்திலே ஒரு வாக்கியம் ஒரு பொருளைச்

---

[1] தாம் கூறிய பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிருர் 'வேதத்தினுடைய' என்று தொடங்கி. "த்வத் அர்ச்சாவிதிம் உபரி பரீக்ஷயதே பூர்வபாக:, ஊர்த்வோபாக: த்வதீஹாகுண விபவ பரிஜ்ஞாபநை: த்வத்பதாப்தௌ" என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர. 19.

[2] சாகை - கிளை; பிரிவு. பிரத்யயம் - அறியப்படுவது. நியாயம் - ஐயம் திரிபு முதலியவற்றைப் போக்குவது. சகல சாகாப் பிரத்யய நியாயம், பூர்வபாகத்தின் பொருளை அறிவதற்குக் கருவி. சகல வேதாந்தப் பிரத்யய நியாயம் - இது உத்தர பாகத்தின் பொருளை அறிவதற்குக் கருவி.

[3] அதனுடைய - அந்தக் கர்மத்தினுடைய. அங்கம் - பிரயாஜம், அநுயாஜம் என்பன போல்வன. உபாங்கம் - நெல்குற்றல், நீர்தெளித்தல் முதலாயின.

சொன்னால், மற்றைய உபநிடதங்களிலும் சென்று, அவற்றில் சொல்லுகிற பொருள்களுக்கும் இதற்கும் விரோதம் வாராதவாறு, தனக்கு விருப்பமான அர்த்தங்களோடு சேருமவற்றைச் சேர்த்தல்.

[1]மேற்கூறிய நியாயங்களைக் கொண்டு பொருள் நிச்சயம் செய்தல், பேரறிஞர்களான மஹரிஷிகளுக்கு ஒழிய, மற்றையோர்க்குச் செய்யப் போகாமையால், [2]உபபிருமணங்களைக் கொண்டே நிச்சயிக்கவேண்டும். ஆகையாலே, அவற்றை நிச்சயம் செய்தற்கு உரிய நூல்களை அருளிச்செய்கிறார் 'ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே' என்று.

ஸ்மிருதிகளாவன :—[3]ஆப்தர்களான மநு, அத்திரி, விஷ்ணு, ஹாரிதர், யாஜ்ஞவல்கியர் முதலானவர்களாலே சொல்லப்பட்டனவான தர்மசாஸ்திரங்கள். இதிகாசங்களாவன :—முன் நடந்தனவற்றைச் சொல்லுகின்றவைகளான ஸ்ரீமத் ராமாயணம், மகாபாரதம் முதலானவைகள். [4]புராணங்களா

---

[1] 'வேதார்த்தத்தை ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே அறுதியிடவேண்டும்,' என்று அருளிச்செய்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'மேற்கூறிய' என்று தொடங்கி.

[2] உபப்பிருமணம் - வேதத்தின் பொருளை விரித்துக் கூறும் நூல்கள்; நிச்சய ஞானத்தை உண்டுபண்ணுவன.

[3] ஆப்தர் - உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்து உணர்ந்தவாறே உரைக்கவும் வல்லவர்கள். ஸ்மிருதிகள் மனுஸ்மிருதி, பிரகஸ்பதிஸ்மிருதி, தக்ஷஸ்மிருதி, இயமஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, அங்கிரஸ்ஸ்மிருதி, யாஜ்ஞவல்கியஸ்மிருதி, பிரசேதஸ்மிருதி, சாதாதப ஸ்மிருதி, பராசரஸ்மிருதி, சம்வர்த்தஸ்மிருதி, உசனஸ்மிருதி, சங்க ஸ்மிருதி, லிகிதஸ்மிருதி, அத்திரிஸ்மிருதி, விஷ்ணுஸ்மிருதி, ஆபஸ் தம்பஸ்மிருதி, ஹாரீதஸ்மிருதி எனப் பதினெட்டு வகைப்படும்.

[4] புராணங்கள் :—பிரம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், பாகவத புராணம், சைவ புராணம், பவிஷ்யத்புராணம், நாரதீய புராணம், மார்க்கண்டேய புராணம், ஆக்நேய புராணம், பிரமகைவர்த்த புராணம், இலிங்க புராணம், வராக புராணம், காந்த புராணம், வாமன புராணம், கூர்ம புராணம், மச்ச புராணம், காருட புராணம், பிரமாண்ட புராணம் எனப் பதினெட்டு வகையாம். மேலே கூறியவற்றுள், சாத்வீக புராணங்களும் ஸ்மிருதிகளும் பிரமாணங்களாம். இராஜச தாமச புராணங்களுள்ளும் ஸ்மிருதிகளுள்ளும் வேதத்திற்கு மாறுபடாத பொருள்கள் பிரமாணங்களாம்.

வன :—படைப்பு, அழிப்பு, வம்சம், வம்ச அநுசரிதம், மந்வந் தரம் என்னும் இவ்வைந்து தன்மைகளேயும் சொல்லுகிற பிரம புராணம், பாத்ம புராணம், விஷ்ணுபுராணம் முதலானவைகள்.

வேதார்த்தம் அறுதியிடுவது இவற்ருலே என்று இப்படி வரையறுத்து அருளிச்செய்தது, இவற்ருல் ஒழியத் தன் புத்தியால் நிச்சயம் பண்ணுமளவில், சிற்றறிவினனுக்கு மாறுபட்ட ஞானம் வருமாகையாலே, வேதங்களினுடைய பொருளேக் காண்பதற்குத் தடையாக உள்ள கலக்கத்திற்குக் காரணமாம் என்று நினைத்து. இந்த நியமந்தான்,[1] 'வேதமானது சிற்றறிவுள்ளவனைக் கண்டு 'இவன் என்னை வஞ்சிப்பான்,' என்று அஞ்சுகிறது; இதிகாசங்களாலும் புராணங்களாலும் வேதத்தை விரிக்க வேண்டும்,' என்று பாருஹஸ்பத்திய ஸ்மிருதியிலும் மகாபாரதத்திலும் சொல்லப்பட்டதிறே.

இங்ஙனம் தொடங்கிய இந்த வாக்கியத்தின் முறையாலே, புருஷகாரவைபவம் முதல் ஆசாரிய அபிமானம் முடிய, இப் பிரபந்தத்தில் இவர் அருளிச்செய்கிற வேதப்பொருள்கள் எல்லாம் உபப்பிருமணங்களைக் கொண்டே நிச்சயித்து அருளிச் செய்கிருர் என்னுமிடம் தோற்றுகிறது. இதனை அந்த அந்தப் பொருள்களை அருளிச்செய்கிற இடங்களிலே தெளிவாகக் காணலாம். ஆக, இச்சூத்திரத்தால் எல்லாப் பிரமாணங்களிலும் வேதமே வலிமை சான்ற பிரமாணம் என்னுமிடமும், அதன் பொருளை நிச்சயம் பண்ணும் முறையும் சொல்லிற்ருயிற்று. (1)

## 2

**[2]ஸ்மிருதியாலே பூர்வ பாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது; மற்றை இரண்டாலும் உத்தர பாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது.**

என்பது சூத்திரம்.

---

1 'இதிஹாஸ புராணுப்யாம் வேதம் ஸமுப ப்ரும்ஹயேத்
பிபேதி அல்ப ஶ்ருதாத் வேதாமாமயம் ப்ரதரிஷ்யதி.'
என்பது பிரமாணம்.

2 ஸ்மிருதி - வேதத்தை நினைத்துச் செய்யப்பட்டது. பூர்வபாகம் - வேதத்தின் முன் பாகம். மற்றை இரண்டு - இதிகாசமும் புராணமும். உத்தர பாகம் - வேதத்தின் பின் பாகம்.

அவ :—'இவற்றுள், எதனாலே எந்தப் பாகத்தின் பொருள் அறுதியிடக்கடவது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே விரித்துப் போரப்படுகின்ற வேதத்திற்கு, அதில் சொல்லப்படுகிற பொருள் விசேடத்தாலேயிறே பிரிவு வேற்றுமை உண்டாயிற்று. அப்படியே உபப்பிருமணங்களுக்கும் சொல்லப்படுகிற பொருள் விசேடத்தாலே வேற்றுமை உண்டிறே. அவற்றுள், ஸ்மிருதிகள், வேதத்தின் பூர்வபாகத்தின் உபப்பிருமணங்களாகவும், இதிகாச புராணங்கள், வேதத்தின் உத்தரபாகத்தின் உபப்பிருமணங்களாகவும் செய்யப்பட்டவையாகையாலே, அது அதற்கு உரிய உபப்பிருமணங்களைக்கொண்டே வேதத்தில் அந்த அந்தப் பிரிவுகளின் பொருள்களை நிச்சயம் பண்ணவேண்டியிறே இருப்பது. அதனைத் திருவுள்ளம் பற்றி, 'ஸ்மிருதியாலே பூர்வ பாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது,' என்கிறார். என்றது, [1] ஒழுக்கம் வழக்குத் தண்டம் முதலானவற்றைச் சொல்லுமவையான தர்மசாஸ்திரங்களாலே, வேதத்தில் கர்மங்களைப் பற்றிச் சொல்லுகிற பூர்வபாகத்தில் அர்த்தம் நிச்சயம் பண்ணக்கடவது என்றபடி. 'மற்றை இரண்டாலும் உத்தரபாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது,' என்றது, பகவானுடைய சொரூப ரூபகுண விபூதிச் செயல்களைச் சொல்லுகின்றனவான இதிகாசமும் புராணமும் ஆகிற மற்றை இரண்டாலும், பரம்பொருளைப் பற்றிச் சொல்லுகிற உத்தரபாகத்தின் பொருள் நிச்சயம் பண்ணக்கடவது என்றபடி.

இப்படி இரண்டுவகையான உபப்பிருமணங்களாலே வேதத்தின் இரண்டு பாகங்களின் பொருள்களையும் அறுதியிடுகையாவது, அத்யயனம் செய்யப்படாத மற்றைய சாகைகளிலே

[1] "அவற்றுள், அறமாவது - மநு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்; அஃது ஒழுக்கம் வழக்குத் தண்டம் என மூவகைப்படும்; அவற்றுள், ஒழுக்கமாவது - அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளினின்று அவற்றிற்கு ஓதிய அறங்களில் வழுவாது ஒழுகுதல்; வழக்காவது - ஒரு பொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற்செல்வது; அது கடன் கோடல் முதல் பதினெட்டுப் பதத்ததாம்; தண்டமாவது - அவ்வொழுக்க நெறியிலும் வழக்கு நெறியிலும் வழீஇயினாரை

உள்ள அர்த்தங்களுக்கும் விளக்கம் கூறுகிற இவற்ருலே, அத்யயனம் செய்த சாகைகளின் அர்த்தங்களை வேண்டுவனவான விசேஷங்களோடே கூட நிச்சயித்தல்.

[1]ஸ்மிருதிகளிலே பரம்பொருளைப்பற்றிச் சொல்லப்பட்டனவும், இதிகாச புராணங்களிலே கர்மத்தைப் பற்றிச் சொல்லப் பட்டனவும் இருந்தனவேயாகிலும், ஸ்மிருதிகளில் பரம் பொருளைப் பற்றிச் சொல்லுதல், கர்மங்கள் அவனைப் பற்றிய ஆராதன வடிவமாக அமைந்தவை என்று தெரிவித்தற்பொருட்டும், இதிகாச புராணங்களில் கர்மங்களைப் பற்றிச் சொல்லுதல், கர்மங்கள் பக்திக்கு அங்கமாக அமைந்தவை என்று தெரிவித்தற் பொருட்டும் ஆம். ஆகையால், இப்படி வகை இட்டுச் சொல்லக் குறை இல்லை. [2]'வேதத்தினுடைய பூர்வபாகத்தின் பொருளைப் பெரும்பாலும் ஸ்மிருதிகளைக்கொண்டே நிச்சயம் செய்ய வேண்டும்; உத்தரபாகத்தின் பொருளை இதிகாச புராணங்களைக் கொண்டே பெரும்பாலும் நிச்சயிக்கவேண்டும்,' என்னக்கடவதிறே. (2)

## 3

இவை இரண்டிலும் வைத்துக்கொண்டு
இதிகாசம் பிரபலம்.

என்பது சூத்திரம்.

அவ:—'வேதத்தினுடைய உத்தரபாகத்தின் பொருளை விரித்துக்கூறுகிற இதிகாசம் புராணம் என்னும் இரண்டனுள் ஏற்றத்தாழ்வுகள் உண்டோ? அன்றி, அவையிரண்டும் தம்முள்

---

அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல்,'' என்ற பரிமேலழகர் உரைப்பாயிரம் இங்கு நினைத்தல் தகும்.

1 'ஆயின், ஸ்மிருதிகளில் பரம்பொருளைப் பற்றியும், இதிகாச புராணங்களில் கர்மங்களைப்| பற்றியும் சொல்லப்பட்டுள்ளனவே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'ஸ்மிருதிகளிலே' என்று தொடங்கி.

2 மேலே கூறப்பட்ட பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிருர் 'வேதத்தினுடைய' என்று தொடங்கி.

'ப்ராயேண பூர்வபாகார்த்த பூரணம் தர்மசாஸ்த்ரதः
இதிகாச புராணப்யாம் வேதாந்தார்த்தः பிரகாஶ்யதே.
என்பது, பார்ஹஸ்பத்ய ஸ்மிருதி.

ஒக்குமோ?" என்ற வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால். அன்றிக்கே, உத்தரபாகத்தின் பொருளை விரித்துக் கூறுகின்ற இதிகாசம், புராணம் என்ற இரண்டனுள் இன்னது சிறந்தது என்னுமதனையும் காட்டவேண்டும் என்று திருவுள்ளம்பற்றித் தாமே அருளிச்செய்கிறார் ஆகவுமாம்.

**வியாக் :**—'இவை இரண்டிலும் வைத்துக்கொண்டு இதிகாசம் பிரபலம்,' என்றது, சிறந்த பாகமான உத்தர பாகத்தை விரித்துக் கூறுவதனாலே வந்த சேர்த்தியையுடைத்தான இவை யிரண்டிலும் வைத்துக்கொண்டு, பிரமாணம் ஆகும் தன்மையில் வந்தால் புராணத்திலும் இதிகாசத்திற்கு உயர்வு உண்டு என்றபடி.

புராணத்தைக்காட்டிலும் இதிகாசத்திற்கு ஏற்றம் நூல்களிலே எடுத்துப் பேசப்படுதல், நடுநிலைமை, நூலை இயற்றியவருடைய [1]ஆப்ததமத்வம் ஆகிற இவற்றாலே. இவற்றுள், நூல்களிலே எடுத்துப்பேசப்படுதலாவது—[2]'வேதங்களாலே அறியப்படுமவனான பரமபுருடனான நாராயணன், தசரதனுக்குப் புத்திரனாக அவதரித்த போது, வேதங்களானவை பிரசேதசின் குமாரனான வால்மீகி முனிவரிடத்தினின்றும் ஸ்ரீராமாயண வடிவமாகத் தோன்றியது,' என்றும், [3]'எந்த வேதவியாசராலே, வேதங்களாகிற சமுத்திரத்தைத் தம் அறிவாகிற மத்தை இட்டுக் கடைய, உலகத்தாரின் நன்மையின்பொருட்டு அவ்வேதத்தினின்றும் மகாபாரதம் ஆகிற சந்திரன் தோன்றியது,' என்றும், [4]'வேதமாகிற மலையினின்றும் பிறந்ததும், அதர்மமாகிற

[1] ஆப்ததமத்வம் - நம்பத்தகுந்தவர்களுள் உயர்ந்தவனாக இருக்கும் தன்மை. ஆப்தன் - நம்பத்தக்கவன். தமன் - உயர்ந்தவன்.

[2] இதிகாசம், புராணங்களிலே எடுத்துப் பேசப்பட்டிருப்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'வேதங்களாலே' என்று தொடங்கி.

'வேதவேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா.'

என்பது, காந்தபுராணம்.

[3] 'மதிமந்தாந மாவித்ய யேநாஸௌ ஶ்ருதி சாகராத்
ஜகத் ஹிதாய ஜநிதோ மஹாபாரத சந்த்ரமா:'

என்பது, சைவபுராணம்.

[4] 'வியாச வாக்ய ஜலௌகேந குதர்மதரு ஹாரிணா
வேதசைலாவதீர்ணேந நீரஜஸ்கா மஹீக்ருதா.'

என்பது, மார்க்கண்டேய புராணம்.

மரங்களை அழிப்பதுமான வேதவியாசருடைய வாக்கியங்களாகிற வெள்ளத்தால் மக்களுடைய அகவிருளாகிற அழுக்கு அற்றதாகச் செய்யப்பட்டது,' என்றும், [1]'கொடிய மருந்தினை உட்கொள்ளு வதற்கு அஞ்சுவதைப் போன்று, சாஸ்திரங்களில் உட்புகுவதற்கு எந்த மனிதனும் அஞ்சுகிறன்; ஆகையால், சாஸ்திரங்களின் சாரமான மகாபாரதமானது காப்பிய ரூபமாகச் செய்யப் பட்டது,' என்றும், [2]'ஸ்ரீமந்நாராயணனிடத்திலும் அவனைப் பற்றித் தெரிவிக்கிற வேதங்களிடத்திலும் அவற்றின் பொருள் களை அறிந்தவர்களிடத்திலும் அவற்றை உபதேசிக்கிற ஆசாரிய னிடத்திலும் பிரமநிஷ்டர்களிடத்திலும் நலத்தைச் செய்கிற பக்தியானது மகாபாரதத்தாலே உண்டாகிறது,' என்றும் புராண விசேடங்களிலே இதிகாசம் சிறப்பித்துப் பேசப்படா நின்றதிறே.

[3]நடுநிலைமையாவது—[4]'எந்த நாளிலே, பிரமனாலே, எந்தக் குணம் தலையெடுத்த போது எந்தப்புராணம் சொல்லப் பட்டதோ, அந்த அந்த சாத்வீக, இராஜச, தாமச தேவதை களுடைய பெருமையானது, அந்தஅந்தக் குணங்களுக்குத் தகுதி யாகவே புனையப்பட்டது,' என்கிறபடியே எல்லாப் புராணங் களையும் சொன்னவன் பிரமனாய், அவனுக்கு யாதொரு நாளிலே, முக்குணங்களில் யாதொரு குணம் விஞ்சியிருந்தது, அந்தக் குணத்திற்குத் தகுதியான தேவதையினுடைய பெருமையைப் புராணத்திலே சொல்லுகையாலே பக்ஷபாதத்தோடு கூடியிருக் கும் புராணங்களைப் போலன்றிக்கே, உலகநெறி, வேதநெறி இவை சம்பந்தமான பொருள்களை நிச்சயம் செய்வதில்

---

1 'பிபேதி கஹநாச் சாஸ்த்ராந் நர: தீவ்ராதிவ ஔஷதாத்
பாரதஸ் ஶாஸ்த்ர ஸாரோயமத: காவ்யாத்மநா க்ருத:'
என்பது, பவிஷ்யத் புராணம்.

2 'விஷ்ணௌ வேதேஷு வித்வத்ஸு குருஷு ப்ராஹ்மணேஷு ச
பக்திர் பவதி கல்யாணீ பாரதாதேவ தீமதாம்.'
என்பது, பவிஷ்யத் புராணம்.

3 இனி, இதிகாசத்தினுடைய நடுநிலைமையை அருளிச்செய்கிறர் 'நடுநிலைமையாவது' என்று தொடங்கி.

4 'யஸ்மிந் கல்பேது யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா
தஸ்ய தஸ்யது மாஹாத்மியம் தத் ஸ்வரூபேண வர்ண்யதே.'
என்பது, மச்ச புராணம்.

நோக்குள்ளவைகள் ஆகையாலே ஒரு விஷயத்திலும் பக்ஷபாதம் இன்றிக்கே இருக்கை.

[1]நூலை இயற்றியவருடைய ஆப்ததமத்வமாவது—நூலைச் செய்தவனானவன் உண்மைப்பொருளை அறியவல்ல ஆற்றலையும், அறிந்த உண்மைப்பொருளை உணர்ந்தவாறே உரைக்கும் ஆற்றலையும் மிகவும் உடையவனாயிருக்கை.

[2]'பிறகு, இதிகாசம், புராணம் என்னும் இரண்டனுள் இதிகாசங்கள் சிறந்தன; 'ஏன்?' எனில், அந்த இதிகாசங்கள் மற்றைய நூல்களில் எடுத்துப் பேசப்படுவதாலும், உலக நெறி வேதநெறி ஆகிற விஷயங்களிலும் முன் நடந்தனவற்றை நடு நிலைமையோடு பேசுவதாலும், முன் பின் முரண் இல்லாத வாக்கியங்களோடு கூடியிருத்தலாலும், செய்தவர்கள் நம்பத்தக்கவர்களாய் இருக்கையாலும்,' என்று தொடங்கி, எடுத்துப் பேசப்படுதல் முதலியவைகளாலே, புராணத்தைக்காட்டிலும் இதிகாசத்திற்கு உள்ள சிறப்புப் [3]பொதுவாகத் தத்துவ நிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும்,

[4]'மகாபாரதமானது புராணங்களிலே மிகுதியாக எடுத்துப் பேசப்பட்டது,' என்று தொடங்கி, 'பரதவம்சத்தவர்களுள்

---

[1] ஆப்ததமத்வம் என்பதனை விளக்கி, அதற்குப் பிரமாணமும் காட்டுகிறார் 'நூலை இயற்றியவருடைய' என்று தொடங்கி.

[2] 'அதஇதிகாச புராணயோ: இதிகாசா: பலீயாம்ஸ:
குத: பரிக்ரஹாதி ரேகாத் ஸர்வத்ர மாத்யஸ்த்யேந
பூதார்த்த ப்ரதீதே: வசந ஸௌஷ்டவேந
கர்த்து: ஆப்த தமத்வாவ கதேஸ்ச'

என்பது, தத்துவ நிர்ணயம்.

[3] 'பொதுவாக' என்றது, இன்ன இதிகாசம் என்று சிறப்பித்துக் கூறப்படாமல் என்றபடி. உய்யக்கொண்டார்: இவர் இராமாநுசர் காலத்திருந்த ஒரு பெரியார்; மாணாக்கருமாவர்; நாதமுனிகளுடைய மாணாக்கர் அல்லர்.

[4] 'மஹாபாரதம்ஹி பரிக்ரஹ விசேஷாவஸிதம்', 'தர்மேச அர்த்தேச காமேச மோக்ஷேச பரதர்ஷப! யதிஹாஸ்தி தத்அந்யத்ர யந்நேஹாஸ்தி நதத் க்வசித்.'

'இதி லௌகிக வைதிக ஸகலார்த்த நிர்ணயாதி க்ருதத்வேந க்வசிதபி அபக்ஷபாதித்வாச்ச புராணேப்யோ பலவத்தரம்'

சிறந்தவனே, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இவற்றுள் யாதொன்று இந்தப் பாரதத்தில் இருக்கின்றதோ அது மற்றைய நூல்களிலும் இருக்கிறது; இதில் இல்லாதது எது? அது மற்றைய நூல்களிலும் இல்லை என்று வேதத்தில் உள்ள அர்த்தங்களும் உலக நூல்களில் உள்ள அர்த்தங்களும் ஆகிற எல்லா அர்த்தங்களையும் நிச்சயம் செய்வதற்கு ஏற்பட்டிருப்ப தால் ஓரிடத்திலும் பக்ஷபாதமில்லாமையாலும் புராணங்களைக் காட்டிலும் மிகவும் மேலான பிரமாணம்,' என்னுமளவாக, நூல் களில் மிகுதியும் எடுத்துப் பேசப்படுவதாலும் நடுநிலைமையாலும் புராணங்களைக்காட்டிலும் இதிகாச விசேஷமான மகாபாரதத் திற்கு உண்டான ஏற்றம் ஸ்ரீசஹஸ்ரநாம பாஷியத்திலே [1]பட்டரா லும் அருளிச்செய்யப்பட்டதிறே. (3)

## 4

[2]அத்தாலே அது முற்பட்டது.

என்பது சூத்திரம்.

அவ:—அந்த இதிகாசத்தினுடைய ஏற்றத்தை இசைவிக் கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—‘அத்தாலே அது முற்பட்டது,’ என்றது, அந்த ஏற்றத்தாலே [3]‘இதிகாச புராணம் பஞ்சமம்—இதிகாசங்களும் புராணங்களும் ஐந்தாவது,’ என்றும், [4]‘இதிகாச புராணாப்யாம் —இதிகாசங்களாலும் புராணங்களாலும்’ என்றும் சுருதியிலும் ஸ்மிருதியிலும் இரண்டனையும் சேரச் சொல்லுகிற அளவில், இதிகாசமானது புராணத்திற்கு முன்னே சொல்லப்பட்டது என்கை.

---

[1] பட்டர்: இவர், கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர்; எம் பாருடைய மாணாக்கர்; நஞ்சீயருடைய ஆசாரியர்.

[2] அத்தாலே - அந்த உயர்வினாலே, அது - இதிகாசமானது, முற் பட்டது - வேதத்திலும் ஸ்மிருதியிலும் இரண்டனையும் ஒருசேரக் கூறு மிடத்து, இதிகாசம் முன்னும் புராணம் பின்னுமாகக் கூறப்பட்டது என்றபடி.

[3] உபநிடதம்.

[4] பார்ஹஸ்பத்யஸ்மிருதி.

[1]உம்மைத் தொகையில், குறைந்த உயிரெழுத்துக்களை யுடைய சொல்லாதல், சிறப்பினையுடைய சொல்லாதல் முன்வரல் வேண்டும். அவற்றுள், இதிகாசம் என்ற சொல்லானது குறைந்த உயிர் எழுத்துக்களையுடைய சொல்லாதல் அன்றிக்கே இருக்க, அது முன்னே வந்தது, சிறப்பினாலேயிறே. இந்தச் சிறப்பிற்கு மூலம் அதனுடைய பிராபல்யம் என்று கருத்து.

[2]அன்றிக்கே, 'ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே' என்று வேதத்தினுடைய பூர்வபாக உத்தரபாகங்களின் பொருளை

[1] உபநிடதத்திலும் ஸ்மிருதியிலும் வந்துள்ள 'இதிகாச புராணங்கள்' என்ற உம்மைத்தொகையில் இதிகாசம் என்ற சொல்லானது முன்னே அமைந்திருப்பதற்கு அதனுடைய சிறப்பானது காரணம் என்று இச்சூத்திரத்தால் கூறியவாறு. இக்கருத்தினையே விளக்குகிறார் 'உம்மைத்தொகையில்' என்று தொடங்கி. இங்குக் கூறப்படும் உம்மைத்தொகை இலக்கணம், வடமொழியிற்கூறப்படுவது.

[2] இனி, இந்நூலாசிரியர், தாமே முதற்சூத்திரத்தில் ஆண்ட 'ஸ்மிருதீதிகாச புராணங்களாலே' என்ற தொகைச் சொல்லில் புராணம் என்ற சொல்லிற்கு முன்னே இதிகாசம் என்ற சொல்லை வைத்தது அதனுடைய சிறப்புக் காரணம் என்று மேற்சூத்திரத்தால் கூறுகின்றார் என்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. இப்பொருளுக்கு 'ஸ்மிருதீதிகாச புராணங்கள்' என்ற உம்மைத்தொகையில் உள்ள பின் இரண்டு சொற்களையும் இதிகாசங்களும் புராணங்களும் - இதிகாசபுராணங்கள் என்று ஒரு தொகையாக்கி ஒரு சொல்லாகக் கொண்டு, அங்ஙனம் கொண்ட 'இதிகாசபுராணங்கள்' என்ற தொகைச்சொல்லை ஸ்மிருதியோடு சேர்த்து ஸ்மிருதிகளும் இதிகாச புராணங்களும் - ஸ்மிருதீதிகாசபுராணங்கள் என்று ஒரே தொகையாகக் கோடல் வேண்டும். இதனைத் 'துவந்தகர்ப்பதுவந்தசமாசம்' என்பர் வடநூலார். துவந்தசமாசம் - உம்மைத்தொகை. துவந்த கர்ப்பம் - உம்மைத் தொகையை உள்ளடக்கிக்கொண்டிருப்பது. அதாவது, வேறு ஓர் உம்மைத் தொகையை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற உம்மைத்தொகை என்றபடி. இங்கு 'இதிகாசபுராணங்கள்' என்ற உம்மைத்தொகையில் இதிகாசம் என்ற சொல் புராணத்திற்கு முன் வந்திருத்தல் காண்க.

'எல்லாத் தொகையும் ஒருசொல் னடைய,' என்பது தொல்காப்பியம், சொல். சூத். 420.

'அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை, நடைபெற்றியலும் வண்ணச் சினைச்சொல்,' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் சேனாவரையர் எழுதியுள்ள உரையையும் ஈண்டு நோக்குக.

விரித்துக் கூறுகிற நூல்களைத் தொகுத்துச் சொல்லுகிறவிடத்தில் 'இதிகாசாஶ்ச புராணானிச—இதிகாசபுராணாநி, ஸ்மிருதயஶ்ச இதிகாசபுராணாநிச—ஸ்மிருதீதிகாச புராணாநி' என்று இவர்க்குச் சமாசத்தில் குறிக்கோள் ஆகையாலே, குறைந்த உயிரெழுத்துக் களையுடையதான புராணம் என்ற சொல்லுக்கு முன்னே இதிகாசம் என்ற சொல்லை அருளிச்செய்ததன் கருத்தை 'இவை இரண்டிலும்' என்ற சூத்திரத்தாலே அருளிச் செய்கிறாராகவுமாம். இப்பொருளில் 'அத்தாலே அது முற்பட்டது,' என்கிற இச்சூத்திரத்திற்கு, அந்தச் சிறப்பினாலே 'இதிகாச புராணங்களாலே' என்கிறவிடத்தில், புராணத்திற்கு முன்னே இதிகாசம் சொல்லப்பட்டது என்று பொருளாகக் கடவது.

ஆக, வேதத்தின் பொருளை நிச்சயம் செய்யுமளவில், அதனுடைய உபப்பிருமணங்களாலே செய்யவேண்டும் என்றும், அவற்றுள் பூர்வபாக உபப்பிருமணம் இன்னது, உத்தரபாக உபப்பிருமணம் இன்னது என்றும், உத்தரபாக உபப்பிருமணங் களான இதிகாச புராணங்களுள் இதிகாசம் சிறந்தது என்றும் அருளிச்செய்கையாலே மேல் தாம் அருளிச் செய்யப் புகும் பொருள்களுக்குப் பிரமாணம் ஒருங்கவிட்டருளினாராயிற்று. (4)

**பாயிரம் முற்றிற்று.**

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாளமாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# நூல்

## முதல் பிரகரணம்

## [1]புருஷகார வைபவமும் உபாய வைபவமும்

### 5

**[2]இதிகாச சிரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது.**

என்பது சூத்திரம்.

**அவ :**—முதல் சூத்திரம் தொடங்கி, வேதத்தையும் அதன் பொருள்களை விரித்துப் பேசுகின்ற நுல்களையும் பொதுவாக எடுத்துக் கூறி, அந்த வேதத்தினுடைய பாகங்களையும் பிரித்து, அந்த அந்தப் பாகங்களை விரித்துப் பேசுகின்ற நூல்களின் பாகங்களையும் பாகுபடுத்துப் பிரித்து [3]அருளிச் செய்தாராய் நின்றாராயினும், [4]உயிர்கள் உய்வு பெறுதற்குவேண்டிய பொருள்களை அருளிச்செய்ய இழிந்தவராகையாலும், அப்பொருள்தான், வேதத்தின் முன் பாகமாகிற கர்மகாண்டத்தால் அறியக்கூடிய

[1] புருஷகாரம் - பிராட்டி. உபாயம் - சர்வேச்வரன். வைபவம் - பெருமை.

[2] இச்சூத்திரத்தையும் அடுத்த சூத்திரத்தையும் சேர்த்து ஒரு சூத்திரமாக முன்னைய பதிப்புக்களில் தரப்பட்டிருக்கிறது. மணவாள மாமுனிகள் திருவுள்ளக் கருத்தின்படி இரு சூத்திரமாகப் பிரிக்கப் பட்டது. வியாக்கியானத்தை நோக்குக. இங்ஙனம் பதிப்பிக்கப் பட்டவை மேலும் சில உள. வருமிடங்களில் ஆங்காங்குக் காட்டுவன்.

[3] ‘அருளிச்செய்தாராய் நின்றாராயினும்’ என்பது முடிய, மேற் கூறியனவற்றைத் தொகுத்து உரைத்தவாறு.

[4] வேதத்தின் முன் பாகத்தைப்பற்றி ஒன்றும் கூறாமல், பின் பாகத்தை மாத்திரம் கூறுதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் ‘உயிர்கள்’ என்று தொடங்கி.

தல்லாமையாலும், பின்பாகமாகிற ஞானகாண்டத்தால் அறியக் கூடியதாகையாலும், முன்பாகமாகிற கர்மகாண்டத்தில் வீட்டினை விரும்புகிறவர்களுக்கு அறியத்தக்கவைகளாக உள்ளவைகளும், பின்பாகமாகிற ஞானகாண்டத்தில் சொல்லப்படுகின்ற பொருள் களான சொரூப உபாய புருஷார்த்தங்களைச் சொல்லுகின்ற அவ்வவ்விடங்களிலே அவ்வவற்றிற்குத் தகுதியாகச் செய்வன வற்றையும் தவிர்வனவற்றையும் கூறுமுகத்தாலே அறிவுறுத் தலாம்படி இருக்கையாலும், பின்பாகமாகிற ஞானகாண்டத்தின் பொருளை நிச்சயிக்கப்புகுந்தவராய், அந்தப் பின் பாகமாகிற ஞானகாண்டத்திலும் பகவானுடைய சொரூப ரூப குண விபூதி களையும் பகவானை வணங்கும் துறைகளையும் பரக்க நின்று பேசுகின்ற இடங்களிலே சாரப்பொருளையும் சாரமில் பொருளை யும் பிரித்து அறிதல் முன்னாகக் கருத்துப் பொருள்களைச் சுருங்கக்கூறி, ஐயம் திரிபுஅற ஆன்மாக்களுடைய அறிவிற்குப் புலப்படும்படி அருளிச்செய்து செல்கிறார் மேல்.

அவற்றுள், முதல் முன்னம், வேதத்தின் பின் பாகமாகிற ஞானகாண்டத்தின் பொருளை விரித்து விளக்கிப் பேசுகின்ற இதிகாசங்கள் இரண்டனுள், ஸ்ரீ ராமாயணத்தின் வலிமையைக் காட்டிக்கொண்டு, அதில் கூறப்படும் சிறப்புடைப் பொருளை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இதிகாச சிரேஷ்டமான' என்றது, இதிகாசங் களுள் ஸ்ரீ ராமாயணத்திற்கு ஏற்றமாவது, [1]'பிறகு வால்மீகி மாமுனிவருக்கு ஒரு தவிசு கொடுக்கப்பட்டது; முனிவரும் பிரமனுடைய கட்டளையைப் பெற்று அத்தவிசில் அமர்ந்தார்,' என்கிறபடியே எல்லா உலகங்கட்கும் மூதாதையான பிரமனாலே சிறப்பிக்கப்பட்டவரான ஸ்ரீ வால்மீகி பகவானாலே கூறப்பட்ட தாகையாலும், [2]'செய்யப்படும் இந்தக் காவியத்தில் உன்

---

[1] ஸ்ரீராமாயணத்தின் ஏற்றத்தைக் காட்டுதற்கு வேண்டிய பிரமாணங்களைக் காட்டுகிறார் 'பிறகு' என்று தொடங்கி.

'வால்மீகயே மஹர்ஷயே ஸந்திதேசாஸநம் தத:
ப்ரஹ்மணா ஸமநுஜ்ஞாதஸ் ஸோப்யுபாவிசதாஸநே.'

என்பது, ஸ்ரீராமா. பால. 2 : 26.

[2] 'நதே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி
குரு ராம தாம் புண்யாம் ஸ்லோகபத்தாம் மநோரமாம்.'

என்பது, ஸ்ரீராமா. பால. 2 : 35.

வாக்கியம் ஒன்றுகூடப் பொய்ப்படுவதில்லை; புண்ணியமாவதாயும் மனத்திற்கு இன்பத்தைத் தருவதாயும் சுலோகங்கள் வடிவில் உள்ளதாயும் இராமாயணத்தைச் செய்வாயாக,' என்று பிரமன் திருவருள் புரிந்தபடியாலே இக்காவியத்தில் கூறிய பொருள்கள் எல்லாம் மெய்யாகக்கடவன ஆகையாலும், [1]'பூமியில் மலைகளும் ஆறுகளும் எத்துணைக்காலம் இருக்கின்றனவோ, அத்துணைக்காலம் இராமசரிதை எல்லா உலகங்களிலும் பரந்து நிலைத்திருக்கப் போகிறது,' என்கிறபடியே எல்லாவுலகங்களிலும் மேற்கொள்ளப்படுமதாய் இருக்கையாலும் மற்றை இதிகாசங்களைக்காட்டிலும் வலியுடைய பிரமாணமாக விருத்தலைத் தெரிவித்தபடி. இங்ஙனம் வலியுடைய பிரமாணமாகவிருக்கும் இத்தன்மையை [2]நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தத்துவத்திரயம் என்னும் பிரபந்தத்தில் பிரமாண அதிகாரத்தில் அருளிச்செய்தார்.

மேலும், [3]'வேதங்களில் பேசப்படுகின்ற பரமபுருஷன் சக்கரவர்த்தி திருமகனாக அவதரித்தவாறே, வேதங்களானவை பிரசேதசின் புத்திரனான வால்மீகி பகவானிடத்தினின்றும் இராமாயண வடிவமாகப் பிறந்தன,' என்கிறபடியே எல்லாரிலும் மேம்பட்டவனான சர்வேச்வரன், வினை வயப்பட்டுப் பிறந்து உழலும் இவ்வுலக மக்களைக் காப்பாற்றும்பொருட்டு மற்றவர்களோடு ஒத்த வடிவத்தில் வந்து அவதரித்தாற்போலே, எல்லாப் பிரமாணங்களுள் உயர்ந்த பிரமாணமான வேதமும் அந்த அவதாரத்தின் குணங்களையும் செயல்களையும் கூறுமுகத்தால், மக்களுக்கு அம்மூர்த்தியைப் பற்றுதற்குச் சுவையை உண்டாக்கிக் காப்பதற்காக ஸ்ரீ ராமாயணவடிவமாக அவதரித்தது என்று

[1] 'யாவத் ஸ்தாஸ்யந்தி கிரயஸ் ஸரிதஶ்ச மஹீதலே
தாவத் ராமாயண கதா லோகேஷு ப்ரசரிஷ்யதி.'
என்பது, ஸ்ரீராமா. பால. 2 : 37.

[2] நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் : இவர், பட்டருடைய திருக்குமாரர் ; நம்பிள்ளையின் காலத்தவர் ; மாணாக்கருமாவர்.

[3] மேலும், அதனுடைய ஏற்றத்தைக் காட்டுவதற்கு, வேதமே ஸ்ரீராமாயணமாக அவதரித்தது என்று கூறும் புராண வசனத்தையும் பிரமாணமாகக் காட்டுகிறார், 'வேதங்களில்' என்று தொடங்கி.

'வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா.'

என்பது, காந்தபுராணம்.

சொல்லப்படுகையாலும் இதனுடைய ஏற்றமும் தடையின்றி எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகும்.

'சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது,' என்றது, பிராட்டியினுடைய பேரருளின் மிகுதியைத் தெளிவுபடுத்துவதற்காகப் 'பிராட்டி' என்னுது 'சிறையிருந்தவள்' என்று அருளிச்செய்கிருர். [1]தேவதேவனுடைய பட்டத்துத் தேவியான தன்னுடைய பெருமையும், சிறையிருத்தலின் தண்மையும் பாராதே, தேவமாதர்களுடைய சிறையை விடுவித்தற்காகத் தான் சிறையிருந்தது பேரருளின் வசப்பட்டவளாய் அன்றே என்றபடி. [2]குழவி கிணற்றிலே விழுந்தால் ஒக்கக் குதித்து எடுக்கும் தாயைப்போலே, இவ்வுயிர்கள் விழுந்த பிறவிப் பெருங்கடலிலே தானும் ஒக்கவந்து பிறந்து இவர்கள் பட்டதைத் தானும் பட்டுக் காப்பாற்றுகையாலே, ஒரு காரணம் பற்றி வாராத தாயாகிற சம்பந்தத்தால் வந்த அளவில்லாத அன்பு குணத்திற்கும் இது ஒரு விளக்கமாம். இந்த மேம்பட்ட குணத்தை வெளியிடுகைக்காகவன்றே பரமாசாரியரான நம்மாழ்வார் [3]'தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்' என்று அருளிச்செய்தது. அவருடைய திருமொழியன்றே இவர் 'சிறையிருந்தவள்' என்று அருளிச்செய்ததற்கு மூலம்?

[4]சிறை இருத்தலுக்குத் தண்மையாவது, கர்மம் காரணமாக வந்தால் அன்றே? தன் அடியவர்களான தேவமகளிர்களுடைய சிறையை விடுவிக்கைக்காகத் தன் அருளாலே தானே வலியச் செய்ததாகையாலே ஏற்றத்திற்கு உடலாமித்தனை இது.

[5]இவ்வுலக மக்களைப் போன்று கருவிலே தங்கிப் பிறக்கிற இது, [6]"பல பிறப்பாய் ஒளிவரும்' என்னும்படி சர்வேச்வர

---

[1] பேரருளை விளக்குகிருர் 'தேவதேவனுடைய' என்று தொடங்கி.

[2] அதன் காரணத்தை அருளிச்செய்கிருர் 'குழவி' என்று தொடங்கி. [3] திருவாய்மொழி, 4 : 8 : 5.

[4] 'சிறையிலிருத்தல் தாழ்வன்றே?' என, 'அன்று' என்று அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'சிறையிருத்தலுக்கு' என்று தொடங்கி. இங்கு, காந்தியடிகள், பண்டித ஜவஹர்லால் நேரு முதலானவர்கள் சிறையிருந்தமையை நினைவுகூர்க.

[5] அதற்கே வேருெர் காரணத்தையும் கூறத் திருவுள்ளம் பற்றி, அதனை உவமை முகத்தால் விளக்குகிருர் 'இவ்வுலக மக்களை' என்று தொடங்கி. [6] திருவாய்மொழி, 1 : 3 : 2.

னுக்குப் பேரொளியைக் கொடுக்கிறது, கர்மம் காரணமாக வன்றிக்கே, திருவருள் புரிதலைக் காரணமாகக் கொண்டமையாலிறே. ஆன பின்பு, இதுவும் திருவருள் புரிதலையே காரணமாகக் கொண்டதாகையாலே இவளுக்குப் பேரொளியைத் தருவதாமித்தனை.

சிறையிருந்தமையை, இராவணனுடைய வலிமையாலே வந்ததாக நினைப்பார் இவளுடைய சக்திவிசேஷத்தை அறியாத மூர்க்கர்களேயாவர். [1]'நெருப்பே, நீ அநுமானுக்குக் குளிர்ந்திருக்கக் கடவாய்,' என்றவள், 'இராவணனே, நீ அழியக் கடவாய்,' என்ன, ஆற்றல் இல்லாதவளன்றே? ஆகையால், இது தன்னருளாலே பிறரைக் காக்கும்பொருட்டுச் செய்த செயல் ஆகையாலே, இதுவே இவளுடைய அருள்முதலான குணங்களையெல்லாம் விளங்கச் செய்வது என்று திருவுள்ளம்பற்றியாயிற்று இவர் 'சிறையிருந்தவள்' என்று அருளிச்செய்தது.

ஸ்ரீ ராமாயணம் எல்லாம் இவளுடைய ஏற்றம் சொல்லுகிறது என்னுமிடம் [2]'இராமாயணகாவியம் முழுதும் பிராட்டியினுடைய பெருமைபொருந்திய சரிதமே,' என்று ஸ்ரீவால்மீகி பகவான் தானே வாயோலையிட்டுவைத்ததனால் தெளிவாம். [3]'என் தாயே, ஸ்ரீமத்ராமாயணமும் உன்னுடைய சரிதையைச் சொல்லியே வாழ்கின்றது,' என்று அருளிச்செய்தாரிறேபட்டர். (1)

[1] "ஸீதோபவ ஹநூமத:" என்பது, ஸ்ரீராமா. சுந். 53 : 29. 'நீயே உலகுக்கொரு சான்று. நிற்கே தெரியும் கற்பு. அதனில் தாயே னொன்னில் தொழுகின்றேன்; எரியே, அவனைச்சுடல் என்றுள்' என்பது கம்ப ராமா. பிணி வீட்டுபடலம், 122.

[2] ஸ்ரீ ராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'இராமாயண காவியம்' என்று தொடங்கி.

'காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ் சரிதம் மஹத்' என்பது, ஸ்ரீராமா. பால. 4 : 7.

'மராமரம் ஏழ்தொளை எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை' என்பர் கம்பர்.

[3] 'ஸ்ரீமத்ராமாயணமபி பரம் ப்ராணிதி த்வச்சரித்ரே' என்பது, ஸ்ரீகுணரத்நகோசம், 14.

பட்டர்: இவர் கூரத்தாழ்வானுடைய புதல்வர்; எம்பாருடைய மாணக்கர்; நஞ்சீயருக்கு ஆசாரியர்.

# 6

மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது.

என்பது சூத்திரம்.

அவ :— இனி, மகாபாரதத்தால் சொல்லப்பட்ட பொருளை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது' என்றது, [1]'ஏ மைத்திரேயரே, கிருஷ்ணத்வை பாயநர் என்ற பெயரையுடைய வியாசமுனிவரை, தலைவனை நாராயணன் என்று அறிந்துகொள்க; இப்புவியில் மகாபாரதத்தைச் செய்தவராக ஆவார் வேறியாவர்?' என்றும், [2]'இத்தகைய பாரதமானது எந்த மகாத்மாவால் செய்யப்பட்டதோ, அந்த மகாத்மாவான வியாச முனிவர் நேரே நாராயணன்தான்,' என்றும் சொல்லுகிறபடியே பகவானுடைய ஆவேச அவதாரமாய், [3]'பராசரருடைய புத்திரரான அந்த வியாசபகவான் சொன்னார்' என்கிறபடியே ஆப்தர்களுக்குள் உயர்ந்தவனாய் எல்லாராலும் அறியப்பட்டவனாய் இருந்துள்ள வேதவியாச பகவானாலே [4]'மகாபாரதத்தோடு ஐந்தாகிய வேதங்களைச் சொல்லிவைத்தார்' என்கிறபடியே ஐந்தாம் வேதமாகச் செய்யப்பட்டதாய், பல புராணங்களிலும் புகழ்ந்து பேசப் பட்டதாய் இருந்துள்ள மகாபாரதமும், ஸ்ரீராமாயணத்தைப் போன்று சிறந்ததொரு பிரமாணமாம். இதனையும் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தாமே அருளிச்செய்தார். [5]பெரிய

---

[1] 'க்ருஷ்ண த்வைபாயநம் வியாசம் வித்தி நாராயணம் பிரபும்
கோஹ்யந்யோ புவி மைத்ரேய மஹாபாரத க்ருத்பவேத்.'
என்பது, ஸ்ரீ விஷ்ணுபு. 3 : 4 : 5.

[2] 'ஏவம்விதம் பாரதந்து ப்ரோக்தம் யேந மஹாத்மநா
ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் வியாஸரூபிமஹாமுநி:'
என்பது பிரமாணம்.

[3] 'ஸஹோ வாச வியாஸ: பாராஶர்ய:' என்பது ஆரணம்.

[4] 'வேதாந் அத்யாப யாமாஸ மஹாபாரத பஞ்சமாந்' என்பது பாரதம்.

[5] பெரிய பட்டர் என்று குறிக்கப்படுமவரும் மேலே கூறிய பட்டரேயாவர்; பராசர பட்டர்.

பட்டரும் ஸ்ரீ சகஸ்ரநாம பாஷியத்தில் முன்னுரையில் [1] 'ஸ்ரீமத்ராமாயணத்தைப்போன்றே மகாபாரதமும் பிரமாணம்' என்று அருளிச்செய்தாரிறே.

சர்வேச்வரன் என்னுமல் 'தூது போனவன்' என்றது, அடியார்களுக்குப் பரதந்தரப்பட்டிருக்கும் அவனுடைய தன்மையை வெளியிடுகைக்காக. [2] தேவ தேவனை தன்னுடைய பெருமையும் செய்கிற தொழிலின் தண்மையும் பாராதே, பாண்டவர்களுக்காகக் [3] கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோனது, அடியார்களுக்குப் பரதந்தரனாய் இருக்கும் தன்மையில் உள்ள ருசிக்கு வசப்பட்டிருந்தமையாலிறே.

அடியார்களுக்குப் பரதந்தரனாகவிருக்கும் இத்தன்மைதான், அவனை அடைவதில் உள்ள எளிமையைக் காட்டுகின்ற தன்மைக்கு உடலாகவிருந்துள்ள [4] வாத்சல்யம் முதலிய குணங்களுக்கெல்லாம் விளக்கமாக விருப்பது ஒன்று. இந்த மேம்பட்ட குணத்தில் ஈடுபட்டன்றோ [5] 'இன்னார் தூதன் என நின்றான்' என்றும், [6] 'குடை மன்னரிடை நடந்த தூதா என்றும்' என்றும் திருமங்கையாழ்வார் அருளிச்செய்தது? அத்திருமொழியே இவர் இங்ஙனம் 'தூதுபோனவன்' என்று அருளிச்செய்கைக்கு அடி. பேசிற்றே பேசுகையிறே இவர்களுக்கு ஏற்றம்.

[7] தூது போனது தண்மையாவது, கர்மத்திற்குக் கட்டுப்பட்ட காரணத்தால் வந்தாலிறே. இச்சை காரணமாகத் தன்னடியார்கள் திறத்தில் செய்யும் தாழ்ச்சியெல்லாம் ஏற்றத்திற்குடலா

---

[1] 'ஸ்ரீராமாயணவத் மஹாபாரதம் ஶரணம்.'

[2] பரதந்தரப்பட்டிருக்கும் தன்மையை விளக்குகிறார் 'தேவ தேவனை' என்று தொடங்கி.

[3] கழுத்திலே ஓலை கட்டித் தூது விடுதல், ஒரு தாழ்ந்த சாதியிலே பிறந்த பொருளை.

[4] வாத்சல்யம் - கன்றினிடத்தில் பசுவிற்கு உள்ள அன்பு போன்ற அன்பு. அதாவது, குற்றங்களைக் குணமாகக் கொள்ளுதற்குரிய தன்மையும், குற்றங்களைப் பாராத தன்மையும்.

[5] பெரிய திருமொழி, 2 : 2 : 3.

[6] பெரிய திருமொழி, 6 : 2 : 9.

[7] தூது போனது தாழ்வு ஆகாமையைக் காட்டுகிறார் 'தூது போனது' என்று தொடங்கி.

மித்தனை. [1] 'அந்தப் பரமாத்மாவே இவ்வுலகில் பிறந்தவனாய் மிக்க ஒளி பெற்றவனாகிறான்' என்று பிறர்பொருட்டுப் பிறக்கை யாலே நிறம் பெறுகிறான் என்று வேதம் சொன்ன இது, பிறர் பொருட்டுத் தன்னிச்சையால் செய்யுமவையெல்லாம் இவனுக்கு ஒளியைத் தருவனவாம் என்னுமதற்கும் உபலக்ஷணமாம்.

இவன் தூது போன செயலைத் தாழ்விற்குக் காரணமாக நினைப்பார் அறிவு கேடரில் தலையானவர்களித்தனை. அறிவில் தலைநின்றவர் [2] 'எத்திறம்' என்று இச்செயலில் மோகிக்கும் படியிறே இச்செயல் இருப்பது. இப்படி இருந்துள்ள இந் நீர்மையின் ஏற்றத்தை வெளியிடுகைக்காகவாயிற்று இவர் '**தூது போனவன்**' என்று அருளிச்செய்தது.

மகாபாரதம் எல்லாம் இவனுடைய ஏற்றத்தைக் கூறுவதில் கருத்தாகவிருக்கையாலேயிறே, மகாபாரதக் கதை [3] சொல்லத் தொடங்குகிறவன், 'வியாசருடைய திருவருளாலே இந்த நாராயண கதையைச் சொல்லப்போகிறேன்' என்றது.

ஆக, ஸ்ரீராமாயணத்திலும் மகாபாரதத்திலும் சொல்லப்பட்ட சிறப்புடைய முக்கியப் பொருள் 'இன்னது' என்னுமிடம் விளக்கப்பட்டது. (2)

---

[1] இதனை வேறே ஒரு பிரமாணம் மூலம் விளக்குகிறார் 'அந்தப் பரமாத்மா' என்று தொடங்கி.

'ஸ உஷ்ரேயாந் பவதி ஜாயமாநః' என்பது அஷ்டகம், 3.

[2] திருவாய்மொழி, 1 : 3 : 1.

இங்கே,

" மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராய ணாவென்னா நாவென்ன நாவே "!

என்ற பகுதி நினைத்தல் தகும். சிலப்பதி. ஆய்ச்சியர் குரவை.

[3] 'சொல்லத் தொடங்குகிறவன்' என்றது, வைசம்பாயனரை. இவர், வியாசருடைய மாணாக்கர்.

'வியாஸ பிரஸாதாத் வக்ஷ்யாமி நாராயண கதாமிமாம்' என்பது, பாரதம், ஆதிபர். 1 : 7.

## 7

**[1]இவை இரண்டாலும் புருஷகார வைபவமும் உபாய வைபவமும் சொல்லிற்றுயிற்று.**

என்பது சூத்திரம்

**அவ:—** விரித்து விளக்கிக் கூறும் நூல்களாகிற உபப் பிருமணங்கள் மூலமாக, வேதாந்தத்தின் கருத்துப்பொருளை நிச்சயித்து, உயிர்கள் உய்வு பெறுதற்குடலானவற்றைச் சொல்லுவதாகவிறே இவர் தொடங்கியது. அவற்றுள், இப்போது கூறிய இவற்றால் வேதாந்தத்தில் எப்பொருள்கள் சொல்லப்பட்டன என்னும் வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** 'இவை இரண்டாலும்' என்றது, 'சிறையிருந்தவள் ஏற்றம்', 'தூதுபோனவன் ஏற்றம்' என்னும் இவை இரண்டாலும் என்றபடி. 'புருஷகார வைபவமும் உபாய வைபவமும் சொல்லிற்றுயிற்று,' என்றது, பாவங்களால் நிறையப்பெற்றவர்களான இம்மக்களுக்கு அடையத்தக்கவளாகுமிடத்தில், எல்லா உலகங்கட்கும் தாயாகும் சம்பந்தத்தாலும் அருள் முதலிய குணங்களாலும் நடுவே ஒரு புருஷகாரம் வேண்டாமலே வந்து அடையத்தக்க [2]தன்மையளாய், மக்கள் செய்த பாவங்களைப் பார்த்துச் சீறி, [3]'அசுரர் பிறவிகளிலே நான் எப்பொழுதும் தள்ளுகிறேன்' என்றும், [4]"என் அடியார்களை நிந்திக்கிறவர்களை நான் பொறுக்கமாட்டேன்' என்றும் இருக்கிற சர்வேச்வரனுடைய மனத்தினைத் திருத்தி, அவர்களை அங்கீகரிக்கச் செய்யும் புருஷகாரமாகவிருக்கிற பிராட்டியினுடைய

[1] புருஷகாரவைபவம் - பெரிய பிராட்டியாருடைய பெருமை. உபாய வைபவம் - சர்வேச்வரனுடைய பெருமை.

[2] 'தன்மையளாய்' என்னுமிதனை மேலே வருகின்ற 'அங்கீகரிக்கச் செய்யும்' என்றதனோடு கூட்டுக. உடையளாய் - அங்கீகரிக்கச் செய்யும் என்றும், திருத்தி அங்கீகரிக்கச் செய்யும் என்றும் கூட்டுக.

[3] 'க்ஷிபாம் யஜஸ்ர மசுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு' என்பது, ஸ்ரீ கீதை, 16 : 19.

[4] 'மத்பக்தம் ஶ்வபசம்வாபி நிந்தாம் குர்வந்தி யே நரா:
பத்மகோடி ஶதே நாபி நக்ஷமாமி வசுந்தரே.'
என்பது, வராஹ புராணம்.

பெருமையும், இறைவன் அங்கீகரித்தால், இறைவனை அங்கீகரிக்கச் செய்த அந்தப் பிராட்டிதானே பின்னர் [1]'சிதகு உரைக்கிலும், என்னடியார் அது செய்யார்' என்று மறுதலைத்துத் தான் திண்ணியனாய் நின்று காப்பாற்றும் உபாயமாகவிருக்கின்ற இறைவன் பெருமையும் சொல்லப்பட்டன என்றபடி.

புருஷகாரம் என்றும், உபாயம் என்றும் இவற்றை [2]நிரூபகமாக அருளிச்செய்தது, பிராட்டிக்குப் புருஷகாரத் தன்மையும், பிரானுக்கு உபாயத் தன்மையும் அவர்களுக்கே உரிய சிறந்த தருமங்கள் என்று தோன்றுகைக்காக.

புருஷகாரத் தன்மை பிராட்டிக்கே உரியது, உபாயத்தன்மை பிரானுக்கே உரியது என்னும் இவ்விஷயத்தைப் [3]'பிறவியாகிற படுகுழியிலே விழுகிற இம்மக்களுக்கு, என்னை அடையுமிடத்தில் புருஷகாரமாகவிருக்கும் தன்மையில் பிராட்டியானவள் முனிவர்களாலே சொல்லப்பட்டாள்; புருஷகாரமாகப் பிராட்டி இருப்பது எனக்கும் இசைவு; வேறான இலக்கணம் இல்லை' எனவே, புருஷகாரத் தன்மை பிராட்டிக்கு இலக்கணம் என்பது பெறப்பட்டது. [4]'திருமகள் கேள்வனாகவிருக்கிற நான், நேராக நானே உபாயமாகவிருக்கிறேன்; என் அன்பிற்குரிய உபதேச மொழிகளாலே என்னை வசீகரிக்கின்ற பிராட்டியானவள் புருஷகாரத் தன்மையால் என்னிடத்தில் உயிர்களை அடையச் செய்கையாகிற தொடர்பினையுடையவள் ஆகிறாள்; எங்கள் இருவர்க்கும் உள்ள இந்த விசேடங்கள் வேதாந்தங்களில்

---

[1] பெரியாழ்வார் திருமொழி, 4 : 9 : 2.

[2] நிரூபகம் - மற்றைய பொருள்களினின்றும் தர்மியை வேறுபடுத்திக் காட்டுவது. தர்மி - தர்மத்தையுடைய பொருள்.

[3] புருஷகாரத்தன்மை, பிராட்டிக்கே உரியது என்பதற்கும், உபாயத்தன்மை பிரானுக்கே உரியது என்பதற்கும் பிரமாணங்கள் காட்டுகிறார் 'பிறவியாகிற' என்று தொடங்கி.

'மத்ப்ராப்திம் ப்ரதிஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமதঃ
லக்ஷ்மீঃ புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபிঃ
மமாபிச மதம் ஹ்யேதந் நாந்யதா லக்ஷணம் பவேத்.'

[4] 'அஹம்மத்ப்ராப்தி உபாயோவை ஸாக்ஷாத் லக்ஷ்மீபதிঃ ஸ்வயம்
லக்ஷ்மீঃ புருஷகாரேண வல்லபா ப்ராப்தி யோகி நீ
ஏதஸ்யாஶ்ச விஶேஷோயம் நிகமாந்தேஷு ஶப்த்யதே.'

சொல்லப்பட்டன' என்றும், [1]'நல்ல முகத்தையுடைய சேனை நாதனே, வேறே ஓர் உபாயத்தையும் பற்றுமல் என்னையே உபாயமாகப் பற்றியிருக்கின்ற தன்மையர்களான புண்ணிய சீலர் சிலர், என்னுடைய மலர் போன்ற இரண்டு திருவடிகளையும் பற்றி, பேற்றிலே விரைந்த மனமுடையவர்களாய், பெரியபிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டவர்களாய் என்னைப் பொறுப்பித்து, உபேயமாகவிருக்கின்ற என்னையே உபாயமாகப் பற்றி, செய்தக்க காரியங்களைச் செய்து முடித்தவர்களாய் வேறு ஒன்றில் பொருந்தாத மனத்தினையுடையவர்களாய் என்னையே அடைவார்கள்' என்றும் பாஞ்சராத்திர ஆகமத்தில் தானே அருளிச்செய்தானிறே.

மற்றைப் பிராட்டிமார்க்கும் நித்திய சூரிகள் முதலான அடியார்கட்கும் இவள் சம்பந்தம் அடியாக வருகிற புருஷகாரத் தன்மையே உள்ளது. இவளைப் போன்று அவர்களுக்கு இப் புருஷகாரத் தன்மை இயல்பிலே அமைந்தது ஒன்று அன்று. இதனைத் திருவுள்ளம் பற்றியே [2]'பிராட்டியினுடைய அதிஷ்டான சம்பந்தத்தாலேயே, குற்றம் இல்லாதவர்களான மற்றைய பிராட்டிமார்க்கும் நித்திய சூரிகளுக்கும் ஆசாரியர்களுக்கும்

---

[1] ஆகிஞ்சந்யைக ஶரணா: கேசித் பாக்யாதிகா: புந:
மத்பதாம்போருக த்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீதமாநஸா:
லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந
மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவமாம்
லப்த்வா க்ருதார்த்தா: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்ய மாநஸா:
என்பன பாஞ்சராத்திரம்.

[2] இப்புருஷகாரத்தன்மை பெரிய பிராட்டியார்க்கு ஒழிய ஏனையோர்க்கு இயல்பிலே அமைந்ததன்று, செயற்கையேயாம் என்று தாம் அருளிச் செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறுர் 'பிராட்டியினுடைய' என்று தொடங்கி.

'ஏதத் ஶாபேக்ஷ ஸம்பந்தாத் அந்யேஷா மமலாத்மநாம்
தேவீ சூரி குரூணாஞ்ச கடகத்வம் நது ஸ்வத:'
என்பது, தத்வதீப சங்கிரகம்.

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர்: இவர் பெரியவாச்சான் பிள்ளையினுடைய மாணக்கர். திருவாய்மொழிக்குப் 'பன்னீராயிரப்படி' என்னும் வியாக்கியானத்தைச் செய்தவர் இவரே; வேறு பல நூல்களும் செய்துள்ளார்; துறவறத்தை மேற்கொண்டவர்.

புருஷகாரத் தன்மை உளது ; அவர்களுக்கு இயல்பாக அமைந்தது ஒன்று அன்று,' என்று தீபசங்கிரகத்திலே வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்தது.

உபாயத் தன்மையும் [1]'கிருஷ்ணனை, என்றும் நிலையுள்ள தர்மமாகச் சொல்லுகிறார்கள்,' என்கிறபடியே என்றும் உள்ள தர்மமாகச் சொல்லப்படுகிற சர்வேச்வரனுக்கே இயல்பாக அமைந்ததாய், மற்றை அடியார்களுக்கு அவன் சம்பந்தம் அடியாக வருமதுவே உள்ளது.

ஆகையாலே, பிராட்டிக்குப் புருஷகாரத் தன்மையும், பிரானுக்கு உபாயத் தன்மையும் நிரூபகமாகத் தடை இல்லை. இச்சீரிய பொருளை வெளியிடுகைக்காக ஆயிற்று இவர் இப்படி அருளிச்செய்தது.

'இப்படி, வேதத்தின் பொருளை விரித்துக் கூறுவனவான ஸ்ரீராமாயணத்தாலும் மகாபாரதத்தாலும் சொல்லப்பட்ட புருஷகாரத் தன்மையும் உபாயத் தன்மையும், இவ்விரண்டு இதிகாசங்களாலும் விரித்துக் கூறப்படுகிற மூலமான வேதத்தில் சொல்லப்படுகிற இடம் யாது?' எனின், [2]கடவல்லியுபநிடதத்தில் பெறப்படுகின்ற துவயம் என்னும் மந்திரத்தில் முன் வாக்கியத்தில் இவ்விரண்டும் ஒருசேரச் சொல்லப்பட்டன.

'இம்மக்களுக்கு, இறைவனும் இறைவியுமான இருவரோடும் சம்பந்தம் உண்டாயிருக்கவும், இறைவனை அடையும்போது இவள் புருஷகாரமாக வேண்டுகிறது என்?' என்னில், தாயாம் தன்மையால் வந்த வாத்சல்யத்தின் மிகுதியாலும், அவனைப் போன்று வன்மையும் மென்மையும் கலந்திருக்கையன்றிக்கே கேவலம் மென்மைத்தன்மையேயாய்ப் பிறர்கண் குழிவு காணமாட்டாத தன்மையளாகையாலும், தீய மனமுடையவர்களையும் மருவித் தொழுமனமுடையவர்கள் ஆக்குகைக்குத் தக்க செயல் புரியுமவளாகையாலும், குற்றமுடையவர்களும் கூசாமல் வந்து

---

[1] 'க்ருஷ்ணம் தர்மம் சநாதநம்' என்பது, பாரதம், ஆரண்யபர். 88 : 253.

[2] இவ்விரண்டும் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள இடத்தை அருளிச்செய்கிறார் 'கடவல்லியுபநிடதத்தில்' என்று தொடங்கி.

காலிலே [1]விழலாம்படி இருப்பாளாய், ஆண்மையால் வந்த வன்மையோடே தந்தையாம் தன்மையால் வந்த நலம் செயும் தன்மையுமுடையனாய், குற்றங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டுக் கொடிய தண்டனைகளைச் செய்கையாலே, குற்றமுடையவர்களை முன்செல்லக் குடல் கரிக்கும்படியிருக்கும் சர்வேச்வரனை, தக்க வழிகளாலே குற்றங்கள் அனைத்தையும் மறப்பித்துச் சேர்ப்பிக்குமவளாகையாலே, பாவமே செய்து பாவிகளான இம் மக்கள் சர்வேச்வரனைப் பற்றுமளவில் இவள் புருஷகாரமாக வேண்டும். ஆகையாலன்றோ, [2]அவனை உபாயமாகப் பற்ற இழிகிறவளவில் இவளைப் புருஷகாரமாக முன்னிடுகிறது? (3)

## 8

**புருஷகாரமாம்போது கிருபையும் பாரதந்தரியமும் அநந்யார்ஹத்வமும் வேண்டும்.**[3]

**என்பது சூத்திரம்.**

**அவ** :—பின்னர்ப் புருஷகாரத்தின் படிகளை விரிவாக எடுத்துக் கூறத் திருவுள்ளம் பற்றி, முதலிலே புருஷகாரத்திற்கு இன்றியமையாமல் வேண்டப்படுகின்ற குணங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :— புருஷகாரமாம்போது—புருஷகாரமாகுமிடத்தில் என்றபடி. கிருபையாவது, பிறர் துக்கம் கண்டு பொறுக்க மாட்டாமை. பாரதந்தரியமாவது, பரனுக்கு வசப்பட்டிருத்தல். அநந்யார்ஹத்வமாவது, அவனைத்தவிர ஏனையோர்க்கு உரிமைப் பட்டிராததன்மை. 'இம்மூன்றும், புருஷகாரத்திற்கு இன்றியமை

[1] 'விழலாம்படியிருப்பாளாய்' என்னுமிதனை மேலே வருகின்ற 'சேர்ப்பிக்குமவளாகையாலே' என்றதனோடு கூட்டுக. இடையில் உள்ளவை சர்வேச்வரனுக்கு அடைமொழிகள்.

[2] 'நாளும் நின்று அடும் நமபழமை', 'அகலகில்லேன் இறையும்' என்று தொடங்கும் திருவாய்மொழித் திருப்பாசுரங்களை ஈண்டு நோக்கல் தகும்.

[3] பாரதந்தரியம் - தனக்கு உரியளாகாது அவனுக்கு உரியவளாக விருத்தல். அநந்யார்ஹத்வம் - பிறருக்கு உரியளாகாது அவனுக்கே உரியளாகவிருத்தல். 'வேண்டும்' என்றதன் அவசியத்தை வியாக்கியானத்திற்காணல் தகும்.

யாமல் வேண்டப்படுவனவாமாறு யாங்ஙனம்?' எனின், மக்கள் இவ்வுலகிற்படுகின்ற துக்கம் கண்டு பொறுக்கமாட்டாமல் இறைவனோடே இவர்களைச் சேர்க்கைக்கு உடலான முயற்சி செய்வதற்குக் கிருபை வேண்டும். சுவதந்திரனைத் தன்வசப்படுத்தும் போது, அவனைப் பின் சென்று நடப்பதனாலே தன் வசப்படுத்த வேண்டுகையாலே பாரதந்திரியம் வேண்டும். 'நம்மை ஒழிந்த மற்றையோர்க்கு உரியள் அன்றியே நமக்கே பெருமையை உண்டுபண்ணக் கூடியவளாகையாலே நம் காரியமன்றோ சொல்லுகிறாள்?' என்று சொன்னபடி, அவன் செய்கைக்கு உறுப்பு ஆகையாலே அநந்யார்ஹத்வம் வேண்டும். ஆகையால், இவை மூன்றும் புருஷகாரத்திற்கு அவசியம் வேண்டப்படுவனவாம்.

'சர்வேச்வரனுடைய அருளைக்காட்டிலும் இவளுடைய அருளுக்குச் சிறப்பு என்?' என்னில், சர்வேச்வரனாவான், வேறு ஒருவரால் தடை செய்யப்படாத சுவதந்தரத்தையுடையவனாய், அருள் செய்தல், தண்டனை செய்தல் என்னும் இரண்டற்கும் கடவனாய், மக்களுடைய நல்வினை தீவினைகளை நிறுத்து அறுத்து அவற்றின் பயன்களை நுகர்விக்குமவனாகையாலே, அவனுடைய அருள், சுவாதந்திரியத்தாலே அமுக்குண்டு கிடந்து, ஒவ்வொரு நிலைகளிலே தலையெடுக்கக்கூடியதாகவிருக்கும். இவள், அருள் ஒன்றனையே தன்மையாகவுடையளாகையாலே, இவளுடைய அருளுக்கு வேறு ஒன்றால் மறைக்கப்படுவதில்லாமையாலே எஞ்ஞான்றும் ஒருபடிப்பட்டிருக்கும். ஆகையால், இவளுடைய அருள் கரை அழிந்திருக்கும். [1]சம்பந்தத்தில் வேறுபாடுபோலே ஆயிற்று, அருளில் வேறுபாடும். இப்படி இருக்கையாலேயிறே, இவளைப் பற்றுபவர்க்கு வேறு ஒரு புருஷகாரம் தேடவேண்டாதொழிகிறது.

சர்வேச்வரன் விஷயமான இவளுடைய பாரதந்திரியமும் அநந்யார்ஹத்வமும், [2]சொரூபத்தின் அடியாக வந்தவை என்னுமளவேயன்றி, [3]'தேவரீருக்குப் பூமிப்பிராட்டியும் பெரிய பிராட்டியாரும் தேவிகள்' என்றும், [4]'விஷ்ணுவுக்குத் தேவி' என்றும்

[1] சம்பந்தம் - தாயாந்தன்மையால் வந்த சம்பந்தமும், தந்தையாம் தன்மையால் வந்த சம்பந்தமும்.

[2] சொரூபம் - சேஷத்துவ சொரூபம்.

[3] 'ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ' என்பது புருஷ சூக்தம்.

[4] 'விஷ்ணுபத்நீ' என்பது, ஸ்ரீ சூக்தம்.

சொல்லுகிற மனைவியாகவிருக்கும் தன்மை அடியாகவும், [1]'என்றும் உள்ளவளான அந்த நான் அந்தப் பரம்பொருளுக்கு நிரூபகமாகவிருக்கின்றேன்' என்றும், [2]'ஸ்ரீவத்சம் என்னும் மறுவை மார்பிலுடையவரும் பிராட்டியினுடைய சம்பந்தத்தை என்றுமுடையவரும்' என்றும் சொல்லுகிற [3]சொரூப நிரூபகத்வத்தால் பெறப்படுகின்ற பிரியாமலிருக்கும் தன்மை அடியாகவும் இருக்கும்.

இப்படி இருக்கையாலே அன்றோ, இவளை ஒழிந்த மற்றையோர்க்கெல்லாம், இறைவன் இறைவி என்னும் அவ்விருவர்க்கும் [4]சேஷமாகவிருக்கும் தன்மையும், இறைவியாகிய இவள் ஒருத்திக்கும் இறைவன் ஒருவனுக்கே சேஷமாகவிருக்கும் தன்மையும் உளவாயின? இந்த இடையீடு இல்லாத—என்றுமுள்ள—சம்பந்தத்தாலேயே இவளுக்குச் சர்வேச்வரனைத் தன்வசப்படுத்துமளவில் வேறு புருஷகாரம் வேண்டாதொழிகிறது.

[5]மேலே கூறிய இம்மூன்று குணங்களுள் கிருபையானது, 'ஶ்ரிங்—சேவாயாம்' என்ற தாதுவிலே தோன்றின ஸ்ரீபதத்திலே 'ஶ்ரியதே' என்ற கர்மணி வியுத்பத்தியிலும், பாரதந்

---

[1] 'அஹந்தா ப்ரஹ்மணஸ் தஸ்ய ஸாஹமஸ்மி ஸநாதநீ' என்பது, ஸ்ரீ சூக்தம்.

[2] 'ஸ்ரீவத்ஸ வக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யஶ் ஶாஶ்வதோ த்ருவ:' என்பது, ஸ்ரீராமா. யுத். 114 : 16.

[3] சொரூபம் – இறைவனுடைய சொரூபம்.

[4] சேஷமாக – கைங்கரியம் செய்பவர்களாக.

[5] இம்மூன்று குணங்களும் அவளுடைய பெயராகிய 'ஸ்ரீ' என்ற சொல்லில் போதருமாற்றை விவரிக்கிறார் 'மேலே கூறிய' என்று தொடங்கி. இதன் விளக்கத்தைக் கீழே வரும் குறிப்பினால் தெளிதல் தகும்.

சேவை என்ற பொருளைத் தருகின்ற 'ஶ்ரிங்' என்ற தாதுவினின்றும் 'ஸ்ரீ' என்ற சொல் பிறக்கும். இங்ஙனம் பிறந்த இச்சொல், சேவை என்ற பொருளடியாகப் பிறக்கின்ற இரு வகைப்பட்ட பொருள்களையுடையதாகவிருக்கும். ஒன்று சேவிக்கப்படுகிறாள்; மற்றொன்று சேவிக்கிறாள். சேவிக்கப்படுகிறாள் என்ற பொருளில் 'ஶ்ரியதே இதஸ்ரீ' என வரும். இதனைக் கர்மணிவியுத்பத்தி என்பர். அதாவது, செயப்பாட்டுவினை என்பதாம். இப்பொருளில் கிருபை

தரியம் அநந்யார்ஹத்வம் என்னும் இரண்டும் ‘ ஶ்ரயதே ’ என்ற கர்த்தரிவியுத்பத்தியிலும், என்றும் உள்ள சேர்க்கையைக் காட்டு கின்ற ‘ மதுப் ’பிலும் பெறப்படுவனவாம். (4)

## 9

**பிராட்டி முற்படப் பிரிந்தது, தன்னுடைய கிருபையை வெளியிடுகைக்காக ; நடுவிற்பிரிந்தது, பாரதந்தரியத்தை வெளியிடுகைக்காக ; அநந்தரம் பிரிந்தது, அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக.**

என்பது சூத்திரம்.

அவ :— இந்தக் கிருபை முதலிய மூன்றனையும் எல்லாரும் அறியும்படி தானே வெளியிட்டருளின பெருமையை ஸ்ரீ ராமாயணத்தில் இவளுக்குச் சொல்லப்பட்ட மூன்று பிரிவுகளாலும் காட்டுகின்றார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** பிராட்டி முற்படப் பிரிந்தது தன்னுடைய கிருபையை வெளியிடுக்கைக்காக—[1] ‘ அவன் தேவனுகவிருக்கும்

என்ற குணம் வெளிப்படுகின்றது. சேவிக்கிருள் என்ற பொருளில் ‘ ஶ்ரயதே இதிஸ்ரீ ’ என வரும். இதனைக் கர்த்தரிவியுத்பத்தி என்பர். அதாவது, செய்வினை என்பதாம். இப்பொருளில் பாரதந்திரியம் அநந்யார்ஹத்வம் என்ற இரண்டு தன்மைகளும் வெளிப்படுகின்றன என்க.

‘ என்றுமுள்ள சேர்க்கையைக் காட்டுகிற மதுப்பிலும் ’ என்றது, ‘ ஸ்ரீமந் ’ என்ற பதத்திலே உள்ள ‘ மத் ’ என்ற இடைச்சொல்லாலும் மேலே கூறிய இரண்டு தன்மைகளும் வெளிப்படுகின்றன என்றபடி. ‘ ஸ்ரீமத் ’ என்பதற்கு, ‘ ஸ்ரீயோடு என்றும் சேர்ந்திருக்கிற ’ என்பது பொருள்.

[1] ‘ அவன் தேவனுக ’ என்றது முதல், ‘ பிராட்டி ’ என்றது முடிய, சீதா பிராட்டி, பெரிய பிராட்டியாருடைய அவதாரம் என்பதனைப் பிரமாணங்களோடு காட்டியவாறு.

‘ தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வேச மாநுஷீ
விஷ்ணோ: தேஹாநுரூபாம்வை கரோத் யேஷாத்மநஸ் தநும்.’
என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 1 : 9 : 145.

இது, இறைவனுடைய அவதாரங்களுக்குத்தக, பிராட்டி, தானும் திருமேனியை மேற்கொள்ளுகிருள் என்பதற்குப் பிரமாணம்.

போது இந்தப் பிராட்டி தேவ சரீரத்தைக்கொண்டும், மனிதனுகப் பிறக்கும்போது தான் மனித சரீரத்தைக்கொண்டும் இறைவனுடைய சரீரத்திற்குத் தகுதியாக இந்தப் பிராட்டியும் தனக்குச் சரீரத்தை எடுத்துக்கொள்ளுகிருள்,' என்கிறபடியே நாயகனை சர்வேசுவரனுடைய அந்த அந்த அவதாரங்களுக்கு ஒத்ததான திருமேனியை மேற்கொண்டு வந்து அவதரிக்குமவளாகையாலே [1]'இறைவன் இராகவனுக அவதரித்த போது பிராட்டி சீதா பிராட்டியாகத் தோன்றினுள்,' என்கிறபடியே அவன் சக்கரவர்த்தி திருமகனுனவாறே, அதற்குத் தகுதியாகத் தானும் சனகராஜன் திருமகளான பிராட்டி, தண்டகவனத்தில் எழுந்தருளியிருக்கிறவளவில் 'இராவணன் பிரித்தான்' என்ற ஒரு வியாஜத்தாலே முதலில் பெருமாளைப் பிரிந்து இலங்கைக்கு எழுந்தருளினது, [2]'அருளே வடிவினளான பெரியபிராட்டியாரோடுகூட' என்று அந்தக் குணம் பிரதானமாக விருப்பதனுலே கிருபையே தானுகச் சொல்லும்படியான தன்னுடைய மேலான கிருபையைத் தெளிவுபடுத்துகைக்காக என்கை.

'எங்ஙனே?' என்னில், தெய்வப் பெண்கள் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருக்கையாலும், அவ்விருப்பிலே தன்னை அல்லும் பகலும் கையாலே அச்சுறுத்தல் வாயாலே அச்சுறுத்தல்களைச் செய்து அருவித்தின்ற கொடிய அரக்கியர்கள், இராவணன் தோற்றுனுகவும் பெருமாள் வெற்றி பெற்றவராகவும் திரிசடை கனவு கண்டவதனுல் மிகவும் அஞ்சினவர்களாய் நடுங்குகிற நிலையில் [3]'உங்களைக் காப்பாற்றுமவளாக ஆகின்றேன்' என்று நீங்கள் நோவுபடும் சமயத்தில் நான் இருந்தேனே, நீங்கள் அஞ்சவேண்டா என்று அச்சத்தை நீக்குகையாலும், அது சொல்லளவேயாய்ப் போகாதே, இராவணனைக் கொன்ற பின்னர்த் தனக்குப் பிரியத்தைக் கூற வந்த திருவடி அவ்வரக்கியர்களைச் சித்ரவதை செய்யும்படி காட்டித்தரவேண்டும் என்ன, அவனேடே மன்றுடி, [4]'வானரர்

---

[1] 'ராகவத்வே பவத் ஸீதா' என்பது ஸ்ரீவிஷ்ணுபுரா. 1 : 9 : 144. இது, பிராட்டி, சீதாபிராட்டியாக அவதரித்ததற்கு மேற்கோள்.

[2] 'தேவ்யா காருண்ய ரூபயா' என்பது, லக்ஷ்மீதந்த்ரம். இது, பிராட்டி அருளே வடிவானவள் என்பதற்கு மேற்கோள்.

[3] 'பவேயம் ஶரணம் ஹிவ:' என்பது ஸ்ரீராமா. சுந். 58 : 93.

[4] 'ராஜ ஸம்ஶ்ரய வஶ்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா
விதேயாநாஞ்ச தாஸீநாம் க:குப்யேத் வாநரோத்தம.'
என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 38.

களுள் சிறந்தவனே! இராச சேவையில் அமர்ந்தவர்களும், அரசன் கட்டளையினால் இட்டகாரியத்தைச் செய்கின்றவர்களும், அரசன் காரியத்தைச் செய்யாவிடின் தண்டிக்கப்படுமவர்களுமான இந்த வேலைக்காரிகளிடத்தில் எவன் சீற்றம் கொள்வான்?'' என்பது போன்றவைகளால் அவர்கள் குற்றத்தைக் குணமாக எடுத்துக் கூறியும், [1]'இவர்களைக் கொலை செய் என்று சொல்லுதற்கு நெஞ்சில் உரமில்லாத நான் இவர்கள் செய்த குற்றங்களைப் பொறுக்கிறேன்' என்று பிறர் நோவு கண்டு பொறுத்திருக்கத் தக்க நெஞ்சு உரம் தனக்கு இல்லாமையை முன்னிட்டும், [2]'பெரியவரான உம்மாலே இவர்கள் அருள்செய்யத்தக்கவர்கள்; எவனும் குற்றம் செய்கிறதில்லை என்பது இல்லை,' என்று அவனுக்கும் இரங்கியல்லது நிற்கவொண்ணாதபடி உபதேசித்தும், இப்படி ஒரு நிலை நின்று, தான் அடியிற்கூறின கூற்றின்படியே, அதுகாறும் தன்னைத் துன்புறுத்திக்கொண்டேயிருந்த அரக்கியர்களையும் காப்பாற்றுகையாலும் தன் கிருபையை வெளியிட்டாள்.

நடுவில் பிரிந்தது தன்னுடைய பாரதந்திரியத்தை வெளியிடுகைக்காக. நடுவில் பிரிவாவது, மீண்டு பெருமாளுடனேகூடித் திருவயோத்தியையிலே எழுந்தருளி, திருவயிறு வாய்த்திருக்கிற காலத்திலே [3]'நல்ல முகமுடையவளே, வைதேவி, எனக்குப் புத்திரனாகிற இந்த இலாபமானது வந்து கிட்டிற்று; ஆசையோடு கூடிய நீ எதனை விரும்புகிறாய்? விருப்பமுள்ளனவற்றை எல்லாம் சொல்வாய்,' என்று, 'உனக்கு விருப்பம் யாது?' என்று கேட்டருள, [4]''ஏ வீரரான இராகவரே, புண்ணிய காரியங்களை

---

1 'ப்ராப்தவ்யம்து தசாயோகாத் மயைததிதி நிஸ்சிதம்
தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்பலா.'
என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 40.

2 'கார்யம் கருணம் ஆர்யேண நகஸ்சிந்நாபராத்யதி'
என்பது, ஸ்ரீராமா. யுத். 116 : 44.

3 'அபத்யலாபோ வைதேஹி மமாயம் ஸமுபஸ்திதः
கிமிச்சஸி ஸகாமாத்வம் ப்ரூஹி ஸர்வம் வராநநே.'
என்பது, ஸ்ரீராமா. உத்தர. 42 : 32.

4 'தபோவநாநி புண்யாநி த்ரஷ்டும் இச்சாமி ராகவ
கங்காதீர நிவிஷ்டாநி ருஷீணாம் புண்ய கர்மணாம்.
பலமூலாஸிநாம் வீர பாதமூலேஷு வர்த்திதும்
ஏஷ மே பரமः காமோ யந்மூல பலபோஜிஷு
அப்யேக ராத்ரம் காகுத்ஸ்த வஸேயம் புண்யகீர்த்திஷு.'
என்பன, ஸ்ரீராமா. உத்தர. 42 : 33-35.

யுடையவர்களும் பழம் கிழங்கு முதலியவற்றை உண்பவர்களு மான இருடிகளுடைய திருவடிகளின்கீழே இருப்பதற்கும், கங்கையின் கரையில் இருப்பனவும் தூய்மை பொருந்தியவை களாய் இருப்பனவும் ஆன தபோவனங்களைப் பார்ப்பதற்கும் விரும்புகின்றேன்; கிழங்கு, பழங்களை உண்கின்றவர்களும் தூய்மையான புகழையுடையவர்களுமான இருடிகளிடத்திலே ஒரு நாளாகிலும் வசிப்பதற்கு விரும்புகிறேன் என்பது யாதொன்று உண்டோ, இதுவே எனக்கு மேலான ஆசையாக விருக்கிறது,' என்று தனக்கு உண்டான வனவாச இன்பத்தில் விருப்பத்தை விண்ணப்பம் செய்ய, அதற்காகப் போகவிடுவா ரைப் போலே, உலகத்தார் கூறும் பொய்ப்பழி நீங்கும் பொருட்டுப் பெருமாள் காட்டிலே போகவிடப் போனது.

இப்பிரிவிற்குப் பயன், பெருமாள் கட்டிலேவைத்தபோதொடு காட்டிலேவிட்டபோதொடு வேறுபாடு அற அவருடைய நினை வினைப் பின்செல்லவேண்டும்படியான தன்னுடைய மனைவியாம் தன்மையடியாக வந்த பாரதந்திரியத்தைத் தெளிவுபடுத்துகை.

[1] கங்கைக்கரை ஏறின பின்பு இளைய பெருமாள் மிக வருந்தினவராய்ப் பெருமாள் திருவுள்ளமாய்விட்ட காரியத்தை விண்ணப்பம் செய்ய, அதனைக் கேட்டு மிகவும் புலம்பி, [2] 'சுமித்திரையின் புதல்வரே, கணவனால் உண்டான இந்த இரகுசந்தானமானது என் கணவன் வம்சத்தில் இல்லாமல் இருக்கக்கூடாது என்று நான் நினைத்து இந்தக் கங்கையிலே விழவில்லை,' என்றாளே அன்றோ? இதனால் ஆற்றாமையின் மிகுதியினால் முடிந்து பிழைக்கை தேட்டமானாலும், அதனைச் செய்யாதே, பெருமாள் நினைவைப் பின் சென்று, தன் உயிரை நோக்கிக்கொண்டிருக்க வேண்டும்படியான பாரதந்திரியத்தைப் பிரகாசிப்பித்தது.

பிறர்க்காகப் பிழைத்திருக்க வேண்டிய பரதந்திரருக்கு முடிவு தேட்டமானாலும் முடியப்போகாதே; [3] 'மாயும் வகை

[1] அந்தப் பாரதந்திரியத்தை விளக்குகிறார் 'கங்கைக்கரை' என்று தொடங்கி.

[2] 'நகல்வத்யைவ ஸௌமித்ரே ஜீவிதம் ஜாஹ்நவீஜலே
த்யஜேயம் ராகவம் வம்ஶே பர்துঃ மாபரிஹாஸ்யதி.'

என்பது, ஸ்ரீராமா. உத்தர. 48 : 8.

[3] முடியப்போகாது என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மாயும்' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 5 : 4 : 3.

அறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே,' என்றாரேயன்றோ நம்மாழ்வாரும் ?

முதற்பிரிவிலே பத்து மாதங்களுக்குள்ளே படுவனவெல்லாம் பட்டவள், [1]'யாதொரு காரணத்தால் பெண்களுக்குக் கணவனே தெய்வமாகவும், கணவனே பந்துவாகவும், கணவனே மோக்ஷமாகவும் இருக்கின்றாரோ, அந்தக் காரணத்தால் கணவனுக்கு உயிராலும் அதற்கு மேம்பட்ட பொருள்களாலும் அடிமை செய்யவேண்டும்,' என்று தாம் அருளிச் செய்தபடியே கணவனுடைய எண்ணத்தைப் பின்செல்லுவதே நமக்குச் சொரூபம் என்னும் பாரதந்திரிய புத்தியாலே அன்றோ பல ஆண்டுகள் பாடு ஆற்றியிருந்தது ? ஆக, இப்படி இப்பிரிவில் தன்னுடைய பாரதந்திரியத்தை வெளியிட்டாள்.

அநந்தரம் பிரிந்தது அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக—பிறகு பிரிந்த பிரிவாவது, மீண்டு, பெருமாள் சந்நிதியிலே வந்திருக்கும்போது பிரிந்து, [2]பிறந்த அகத்திலே புக்கு விட்டது. இப்பிரிவிற்குப் பயன், [3]'சூரியனை விட்டு ஒளி பிரியாதிருக்குமாறு போன்று, நான் இராகவரை விட்டுப் பிரியேன்' என்றும், [4]'சூரியனை விட்டு ஒளி எப்படிப் பிரியாதோ, அப்படி என்னை விட்டுச் சீதை பிரியாள்,' என்றும் [5]இருவருடைய கூற்றுக்களாலும் பெறப்படுகின்ற தன்னுடைய பிரிவின்மை அடியாக வருகின்ற அநந்யார்ஹத்வத்தை எல்லாரும் உடன்படும்படி தெளிவுபடுத்துதல்.

'யாங்ஙனம் ?' என்னில், பெருமாள் அச்வமேத யாகம் செய்கிற காலத்தில் ஸ்ரீவால்மீகி பகவானுடைய கட்டளையாலே

---

[1] 'பதிர்ஹி தைவதம் நார்யாঃ பதிர்பந்துঃ பதிர்கதிঃ
ப்ராணைரபி ப்ரியம் தஸ்மாத் பர்துঃ கார்யம் விசேஷதঃ'
என்பது, ஸ்ரீராமா. உத்தர. 48 : 17.

[2] பிறந்த அகம் - பூமி.

[3] 'அநந்யா 'ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா' என்பது, ஸ்ரீராமா. சுந். 21 : 15.

[4] 'அநந்யாஹி மயாஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா'
என்பது, ஸ்ரீ ராமா. யுத். 121 : 19.

[5] இருவருடைய - சீதாபிராட்டியும் இராமபிரானுமாகிய இருவருடைய.

குசலவர்கள் வந்து ஸ்ரீராமாயணத்தைப் பாடிக்கொண்டு திரியா நிற்க, அதனைப் பெருமாள் கேட்டருளி, தம்முன்னே அவர்களை அழைத்து, பெரியோர்கள் எல்லாரையும் கூட்டி, அவர்கள் பாடுகிற பாட்டுக்களைக் கேட்கிற காலத்தில், அவர்களைப் பிராட்டியினுடைய பிள்ளைகள் என்று அறிந்த பின்பு, பிராட்டி அளவிலே திருவுள்ளம் சென்று, 'தனக்கேறத் தூயள் ஆகில், கூடுக இத்திரளிலே வந்து, சூளுரை மூலமாகத் தன் தூய்மையைத் தெளிவு படுத்துவாளாக,' என்று, தூதுவர் மூலமாக முனிவருக்கும் பிராட்டிக்கும் பெருமாள் அறிவித்துவிட, அப்படியே ஸ்ரீவால்மீகி பகவானை முன்னிட்டுக்கொண்டு அந்தப் பெரிய சபையிலே பெருமாள் திருமுன்னர்வந்து பிராட்டி ஒடுங்கி நிற்க, ஸ்ரீவால்மீகி பகவான் 'இவள் தூயள்' என்னுமிடத்தைப் பல வழிகளாலும் சொல்ல, பெருமாளும், 'இவள் தூயள் என்னுமிடம் யானும் அறிவன்; முனிவர் கூறியதுவே போதியதாம்; ஆயினும், உலகத்தில் உண்டான பழிச்சொல் நீங்கும்பொருட்டு ஒரு சூளுரை இத்திரளிலே செய்யவேண்டும்,' என்று கூற, அதனைக் கேட்ட பிராட்டி, [1]'காவியுடை உடுத்திருந்த சீதையானவள் வந்திருந்த எல்லாரையும் பார்த்துப் பூமிதேவியை நோக்கிய கண்களையுடையவளாய்க் கையும் அஞ்சலியுமாய் இந்த வார்த்தைகளைச் சொன்னாள்' என்கிறபடியே, கையும் அஞ்சலியுமாய்க் கவிழ்தலை இட்டுக்கொண்டு நின்று, [2]'நான் எப்படி ஸ்ரீஇராகவனைத் தவிர வேறொருவனை மனத்தாலும் நினைக்கவில்லையோ அது உண்மையானால், எனக்குப் பூமிதேவியானவள் இடம் தருவாளாக; எப்படி மனம் வாக்குக் காயங்களால் ஸ்ரீராமபிரானையே எண்ணியிருக்கிறேனோ அது உண்மையானால் பூமிப்பிராட்டி இடம் தருவாளாக; ஸ்ரீராமபிரானை ஒழிய

[1] 'ஸர்வாந் ஸமாகதாந் த்ரஷ்ட்வா ஸீதா காஷாய வாஸிநீ
அப்ரவீத் ப்ராஞ்ஜலிர் வாக்ய மதோத்ருஷ்டி ரவாங்முகி.'
என்பது, ஸ்ரீராமா. உத்தர. 97 : 14.

[2] 'யதாஹம் ராகவாதந்யம் மநஸாபி நசிந்தயே
ததாமே மாதவீதேவீ விவரம் தாதுமர்ஹதி.'
'மநஸா கர்மணா வாசா யதாராமம் ஸமர்த்தயே
ததாமே மாதவீதேவீ விவரம் தாதுமர்ஹதி.'
'யதைதத் ஸத்யம் உக்தம் மே வேத்மி ராமாத் பரம்நச
ததாமே மாதவீதேவீ விவரம் தாதுமர்ஹதி.'
என்பன, ஸ்ரீராமா. உத்தர. 97 : 15.

வேறொருவரை அறியேன் என்கிற இந்த என்னுடைய சொல்லானது உண்மையாகில் பூமிப்பிராட்டி இடம் தருவாளாக,' என்று சூள் உரைக்க, [1]'அப்படிச் சீதாபிராட்டி சூள் செய்த காலத்தில் ஆச்சரியமானதும் திவ்வியமானதும் ஒப்புயர்வற்றதும் பூமியில் நின்றும் மேலே எழுந்ததும் அளவற்ற ஆற்றலுடையதும் பாம்புகள் தம் தலைகளால் தாங்கப்பட்டதும் திவ்வியமான அமைப்பையுடையதும் எல்லா இரத்தினங்களாலும் அலங்கரிக்கப் பட்டதும் ஆன திவ்விய சீரிய சிங்காதனமொன்று மேலே வந்தது; அந்தச் சிங்காசனத்தில் பூமிதேவியானவள் சீதா பிராட்டியை இரண்டு கைகளாலும் எடுத்து, இந்தப் பிராட்டியை நல்லுரைகளால் மகிழச்செய்து, அந்த ஆசனத்தில் உட்கார வைத்தாள்; ஆசனத்தில் இருப்பவளாய்ப் பாதாள லோகத்தை அடைகிற அந்தப் பிராட்டியைப் பார்த்துத் தேவலோகத்தில் உண்டான மலர்மாரியானது இடைவிடாமல் பொழிந்தது,' என்கிறபடியே அவ்வளவிலே பூமியினின்றும் ஒரு திவ்விய சிங்காசனம் வந்து தோன்ற, அதில் இவளைப் பூமிப்பிராட்டி நல்வரவோடு கூடிய சொற்களைக் கூறுதல் முன்னாக இரண்டு கைகளாலும் எடுத்துக்கொண்டு போய் வைக்க, ஆசனத்தில் இருப்பவளாய்க்கொண்டு பாதாளலோகத்தை அடைகிற இவளைக் கண்டு தெய்வ மலர்மாரி இடைவிடாமல் இவள்மேலே விழுந்தது என்கையாலே, இப்பிரிவிலே தன்னுடைய அநந்யார் ஹத்வத்தைத் தெளிவுபடுத்தினாள் என்க.

ஆக, இவ்வவதாரத்தில் இவளுக்குச் சொல்லப்பட்ட மூன்று பிரிவுகளுக்கும் காரணம் இக்குணங்களை இப்படி வெளியிடுகை யாயிற்று.

இங்ஙன் அன்றாகில், எஞ்ஞான்றும் பிரிவில்லாதவளாய்க் கருமங்கட்குக் கட்டுப்படாமல் இருக்கிற இவளுக்கு, கர்மங்கட்குக்

---

[1] 'ததா ஶபந்த்யாம் வைதேஹ்யாம் ப்ராதுராஸீத் மஹாத்புதம்
பூதலாதுத்திதம் திவ்யம் ஸிம்ஹாஸநமநுத்தமம்.
த்ரியமாணம் ஶிரோபிஸ்து நாகைர மிதவிக்ரமை:
திவ்யம் திவ்யேந வபுஷா ஸர்வரத்ந விபூஷிதம்.
தஸ்மிந்ஸ்து தரணிதேவீ பாஹுப்யாம் க்ருஹ்யமைதிலீம்
ஸ்வாகதே நாபிநந்த்யைநா மாஸநே சோபவேஶயத்.
தாமாஸநகதாம் த்ருஷ்ட்வா ப்ரவிஶந்தீம் ரஸாதலம்
புஷ்பவ்ருஷ்டி: அவிச்சிந்நா திவ்யா ஸீதாமவாகிரத்.'
என்பது, ஸ்ரீராமா. உத்தர. 97 : 18.

கட்டுப்பட்டவர்களைப் போன்று இப்படிப் பிரிவு வருகைக்குக் காரணம் இல்லையிறே.

தன்னுடைய புருஷகாரத்திற்கு உதவியாகவிருக்கிற குணங்களையும் புருஷகாரத்தின் தன்மையையும் எல்லாரும் அறியும்படி செய்கைக்காகவந்த அவதாரமாகும் இது. ஆகையால் அன்றே, [1] 'என் தாயாரான ஸ்ரீரங்கநாச்சியாரே, எல்லாக் கல்யாண குணங்களும் உம்முடைய அர்ச்சாவதாரத்தில் மேன்மை அடைந்திருக்கின்றன; சீதா அவதாரம் முதலிய மற்றைய அவதாரங்களை உதாரணமாகச் சொல்லுகிறார்கள்; அந்த அவதாரமானது அர்ச்சாவதாரமான இந்த அவதாரத்திற்குப் பயிற்சியாகும்?' என்று பட்டரும் அருளிச் செய்தது?

[2] இப்படி மக்கள் பக்கல் அருள் செய்தற்குக் காரணமான கிருபையையும் சர்வேசுவரன் பக்கல் அணுகி வசீகரிக்கைக்குக் காரணமான பாரதந்திரியத்தையும் அநந்யார்ஹத்வத்தையும் தானே வெளியிட்டது, சாத்திரங்களில் கேட்கிற அளவேயன்றி, அநுஷ்டானம் வரையிலும் காண்கையாலே, தன்னைப் புருஷகாரமாகப் பற்றினார்க்கு ருசியும் நம்பிக்கையும் பிறப்பதற்கு உறுப்பாக. (5)

## 10

சம்ஶ்லேஷ விஶ்லேஷங்கள் இரண்டிலும்
புருஷகாரத்வம் தோற்றும்.

என்பது சூத்திரம்.

**அவ:—** 'இத்தகைய குணங்களோடு கூடினவளான இவளுடைய புருஷகாரமாம் தன்மை தோற்றுவது யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] 'ஔதார்ய காருணிகத ஶ்ரித வத்ஸலத்வ
பூர்வேஷு ஸர்வ மதிஶாயித மத்ர மாத:
ஸ்ரீரங்கதாம்நி யதுதாந்ய துதாஹரந்தி
ஸீதாவதாரமுக மேத தமுஷ்ய யோக்யம்'
என்பது, ஸ்ரீகுணரத்ந கோசம், 57.

[2] இங்ஙனம் இம்மூன்று குணங்களையும் தானே வெளியிட்டதன் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

**வியாக் :**—புருஷகாரத்வம் [1]ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்கள் இரண்டிலும் தோற்றும். புருஷகாரத்வமாவது, சேர்ப்பிக்கை. அது, இவளுக்கு அவனோடு கூடியிருக்கும் நிலையிலும் பிரிந்திருக்கும் நிலையிலும் காணப்படும் என்கை.

கூடியிருக்கும் நிலையிலே இளைய பெருமாள், பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது இளையபெருமாளை நிறுத்திப் போவதாகத் தேடினவளவிலே, 'என்னைக் கூட்டிக்கொண்டு போகவேண்டும்' என்று, [2]'மிக்க சீர்த்தியையுடைய அந்த இளைய பெருமாள் தமையனுருடைய இரண்டு திருவடிகளையும் உறுதியாகப் பற்றிக்கொண்டு, சத்தியவிரதனுன இராமபிரானைப் பார்த்தும் பிராட்டியைப் பார்த்தும் சொன்னுர்,' என்கிறபடியே புகல் புகுகிற சமயத்திலும், பஞ்சவடியில் எழுந்தருளினபோது, 'நீரும் நிழலும் வாய்த்திருப்பதொரு இடத்தைப் பார்த்துப் பர்ணசாலையைச் சமையும்' என்று பெருமாள் அருளிச்செய்ய, 'நம் தலையில் சுவாதந்தரியத்தை வைத்த போதே பெருமாள் நம்மைக் கைவிட்டார்,' என்று நிலை வேறுபட்டவராய், [3]'பெருமாளால் இந்தவிதமாகச் சொல்லப்பட்ட இளையபெருமாள் கைகளைக் கூப்பினவராய்ச் சீதா பிராட்டி முன்னிலையில் பெருமாளை நோக்கி இந்த மாற்றத்தைக் கூறினுர்: [4]'காகுஸ்தரே, தேவரீர் பல ஆண்டுகள் இருந்தாலும் உமக்குப் பரதந்திரனுகவிருக்கிறேன்; தேவரீரே அழகு மிக்க இடத்தைப் பார்த்து, 'இந்த இடத்தில் பர்ணசாலையைக் கட்டுக' என்று அடியேனைப் பார்த்து அருளிச்செய்யவேண்டும்,' என்கிறபடியே தம்முடைய பாரதந்திரியத்தைப் பெறுகைக்காகக் கையும்

---

[1] ஸம்ஶ்லேஷம் - சேர்க்கை. விஶ்லேஷம் - பிரிவு. புருஷகாரத்வம் - சேர்ப்பிக்கும் தன்மை.

[2] 'ஸப்ராதுஶ் சரணௌகாடம் நிபீட்ய ரகுநந்தநঃ
ஸீதா முவாசாதியஶாঃ ராவஞ்ச மஹாவ்ரதம்.'
என்பது ஸ்ரீராமா. அயோத். 31 : 2.

[3] 'ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ் ஸம்யதாஞ்சலிঃ
ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த மிதம்வசநம் அப்ரவீத்'
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 6.

[4] 'பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே
ஸ்வயந்து ருசிரேதேஶே க்ரியதாமிதி மாம்வத.'
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 7.

அஞ்சலியுமாய் நின்று வேண்டுகிற இடத்திலும் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுத் தமது விருப்பத்தைப் பெறுகையாலும்,

இனி, அசுரத்தன்மை வாய்ந்தவனான சயந்தன், காகத்தின் உருவத்தைக் கொண்டு வந்து, தாயிடத்திலே செய்யத்தகாத காரியங்களைச் செய்யப் புக, [1]'விரிந்த முகமுடையதும் சீற்றமுடையதுமான பாம்போடு எவன் விளையாடுகிறான்?' என்று பெருமாள் அவன்மேலே சீறித் தலையை அறுப்பதாகப் பிரமாத்திரத்தை ஏவ, [2]'தந்தை தாயர்களாலும் முனிவர்களோடு கூடின தேவர்களாலும் கைவிடப்பட்ட அந்தக் காகாசுரன் மூன்றுலகங்களையும் நன்றாகத் திரிந்து அந்தப் பெருமாளையே சரணமாக அடைந்தான்,' என்கிறபடியே எங்கும் சுற்றித் திரிந்தவிடத்திலும் ஒரு புகலிடம் இல்லாமையாலே போக்கற்றுத் திருவடிகளிலே வந்து விழ, [3]'பூமியில் விழுந்துகிடப்பவனும் புகல் புகுந்தவனுமான அந்தக் காகாசுரனை, காப்பாற்றுமவரான அந்தப் பெருமாள், கோறற்கு உரியவனானாலும், தம்முடைய பேரருளால் காப்பாற்றினார்,' என்றும், [4]'சீதாபிராட்டியானவள் அப்போது பூமியில் விழுந்த அந்தக் காகத்தை, பெருமாளுடைய திருவடிகளில் அதனுடைய தலையைச் சேர்த்து வைத்தாள்; பின்னர், அருட்கடலும் அமுதக்கடலும் நற்குணங்கள் நிறைந்தவருமான அந்தப்பெருமாள் அந்தக் காகத்தைக் கையால் எடுத்துக் காப்பாற்றினார்; காகத்தை அருளாலே பார்த்தார்,' என்றும்

[1] 'க க்ரீடதி ஸரோஷேண பஞ்சவக்த்ரேண போகிநா.'
என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 26.

[2] 'ஸபித்ராச பரித்யக்தஃ ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபிஃ
த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம்கதஃ'
என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 33.

[3] 'ஸதம் நிபதிதம் பூமௌ ஶரண்யஃ ஶரணாகதம்
வதார்ஹமபி காகுத்ஸ்தஃ க்ருபயா பர்ய பாலயத்'
என்பது ஸ்ரீராமா. சுந். 38 : 34.

[4] 'புரதஃ பதிதம்தேவீ தரண்யாம் வாயஸம் ததா
தச்ஶிரஃ பாதயோஃ தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ
தமுத்தாப்ய கரேணாத க்ருபாபியூஷ ஸாகரஃ
ராக்ஷராமோ குணவாந் வாயஸம் தயயைக்ஷத.'
என்பன பாத்ம புராணம்.

ஸ்ரீராமாயணத்திலும் பாத்மபுராணத்திலும் சொல்லுகிறபடியே இவள் புருஷகாரமாகப் பெருமாள் காப்பாற்றுகையாலும் சேர்ந்திருக்கும் நிலையில் புருஷகாரத்தன்மை தோன்றும்.

இனி, பிரிந்திருக்கும் நிலையில், [1] 'இவ்விடத்தில் சான்றோர்கள் உளரா? இலரா? இருந்தார்களாகிலும் அவர்களை நீ பின்பற்றவில்லை; அதனால் அன்றோ உன்னுடைய அறிவானது விபரீதப் பட்டிருக்கின்றது? சான்றோர்கள் செல்லும் வழியில் செல்லாமல் இருக்கின்றது?' என்பது போன்றவைகளாலே விபரீத அறிவினையுடைய இராவணனைப் பெருமாள் திருவடிகளிலே சேர்க்கைக்கு விரகுபார்க்கையாலும், இராவணனைக் கொன்றபின்னர் அரக்கியர்களைச் சித்திரவதை செய்யும் முயற்சியில் நோக்குள்ளவனாய் நிற்கிற திருவடியைக் குறித்து, [2] 'ஏ வானரமே, உன் கருத்தால் தீவினை செய்தவர்களாகவும் என் கருத்தால் நல்வினை செய்தவர்களாவும் கொல்லுவதற்குத் தகுதியுள்ளவர்களாகவும் உள்ள இவர்கள் விஷயத்தில் பெரியவரான உம்மால் அருள்செய்யப்பட வேண்டும்; எவனும் குற்றம் செய்கிறதில்லை என்பது இல்லை,' என்று அவன் இரங்கத்தக்க சொற்களைக் கூறி அவர்கள் குற்றங்களைப் பொறுப்பிக்கையாலும் இவள் புருஷகாரம் தோன்றா நின்றது.

[3] திருவடி அரக்கியர்களைக் குற்றங்கட்குத் தக்கவாறு தண்டிப்பதற்குக் காட்டித்தரவேண்டும் என்ற அளவில், பிராட்டி

---

[1] 'இஹஸந்தோ நவாஸந்தி ஸதோவா நாநுவர்த்தஸே
ததாஹி விபரீதா தே புத்தி ராசார வர்ஜிதா.'
என்பது ஸ்ரீராமா. சுந். 21 : 9.

'கடிக்கும்வல் லரவும் கேட்கும் மந்திரம்; களிக்கின் றோயை
அடுக்கும்ஈ தடாதுஎன்று ஆன்ற ஏதுவோ டறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார் எண்ணியது எண்ணி, உன்னை
முடிக்குநர் என்ற போது முடிவன்றி முடிவ துண்டோ?'
என்ற செய்யுள் மேற்சுலோகத்தோடு ஒப்பு நோக்கல்தகும். கம்ப. சுந்.

[2] இச்சுலோகத்தை மேலே காண்க.

[3] 'பிராட்டி அரக்கியர்களைக் காப்பாற்றியது புருஷகாரம் ஆகாதே?' என்று சங்கித்து, சங்கைக்குப் பட்டருடைய ஸ்ரீ சூக்தியையும் ஆதார

அவனுடனே மன்றாடிக் காப்பாற்றிய தன்மையன்றோ தோன்று கிறது? புருஷகாரம் தோன்றவில்லையே? [1] 'உலகத்திற்குத் தாயே, சீதா தேவியே, உன் விஷயத்தில் அதுகாறும் குற்றங் களைச் செய்த அரக்கியர்களைக் காப்பாற்றிய உன்னால், காகா சுரனையும் விபீஷணனையும் மற்றும் புகல் புகுந்தவர்களையும் காப்பாற்றிய இராமகோஷ்டியானது தாழ்வு பண்ணப்பட்டது; அப்படிப்பட்ட உன்னுடைய ஒரு காரணமும் பற்றாத பொறுமை யானது, நெருக்கமான பாபங்களையுடைய அடியோங்களை இன்பத்தில் இருத்த வேண்டும்,' என்று காற்றின் புத்திரனை திருவடியின்பொருட்டுப் பிராட்டி காப்பாற்றினாள் என்றே அன்றோ பட்டரும் அருளிச்செய்தது?' எனின், [2] பலாத்காரத்தால் அன்றியே அவன் வழியே சென்று குற்றங்களைப் பொறுப்பிக்கை யாலே புருஷகாரத் தன்மை என்கிறது. 'திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டாவிறே,' என்று திருவடி விஷயமாகவும் புருஷ காரத்தைச் செய்தமையை இவர்தாமே அருளிச் செய்தார் முமுக்ஷுப்படியில்.

ஆகையால், சேர்க்கை, பிரிவு என்னுமிரண்டு நிலைகளிலும் புருஷகாரத்தன்மை தோன்றும் என்னும் மாத்திரத்தைச் சொல்லுகிற இவ்வாக்கியத்தில், திருவடி விஷயத்தில் புருஷகாரம் செய்த இதனையும் கூட்டக் குறை இல்லை. (6)

---

மாகக் காட்டுகிறார் 'திருவடி' என்று தொடங்கியும், 'உலகத்திற்குத் தாயே' என்று தொடங்கியும்.

[1] 'மாதர் மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததை வார்த்ராபராதா:
த்வயா, ரக்ஷந்த்யா பவநாத்மஜாத்
லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா।
காகந்தஞ்ச விபீஷணம் ஶரணமித்யுக்தி க்ஷமௌ ரக்ஷதஸ்,
ஸாநஸ் ஸாந்த்ர மஹாகஸ:
ஸுகயது க்ஷாந்திஸ் தவா கஸ்மிகீ.॥'

என்பது, ஸ்ரீ குணரத்நகோசம், 50.

[2] அதற்கு விடையும், தாம் கூறும் விடைக்குப் பிரமாணமும் அருளிச்செய்கிறார் 'பலாத்காரத்தால்' என்று தொடங்கியும், 'திருவடி' என்று தொடங்கியும். முமுக்ஷுப்படி, சூத். 129.

## 11

சம்ச்லேஷ தசையில் ஈச்வரனைத் திருத்தும்; விச்லேஷ தசையில் சேதனனைத் திருத்தும்.[1]

என்பது சூத்திரம்.

அவ :— 'இவ்விரு நிலைகளிலும் இவள் புருஷகாரத்தைச் செய்யும் வகை யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—சம்ச்லேஷ தசையில் ஈச்வரனைத் திருத்தும்-சேர்ந்திருக்கும் காலத்தில் இறைவனைத் திருத்துகையாவது, மக்கள் செய்த குற்றங்களையே பார்த்து, [2] 'அசுரப்பிறவிகளில் தள்ளுகிறேன்,' என்றும், [3] 'குற்றங்களைப் பொறுக்க மாட்டேன்!' என்றும் இருக்கும் இருப்பைக் குலைத்து, அங்கீகாரத்தைச் செய்வதில் நோக்குள்ளவனாகச் செய்கை. விச்லேஷ தசையில் சேதனனைத் திருத்தும் - பிரிந்திருக்கும் நிலையில் மக்களைத் திருத்துகையாவது, செய்வனவற்றைச் செய்யாமலும் தவிர்வனவற்றைச் செய்தலுமாகிய இவற்றையே இயல்பாக உடையனாய்ப் பகவானிடத்தில் வெறுப்புள்ளவனாய்த் திரிகிற நிலையைக் குலைத்து, இறைவனைப் பற்றுவதில் விருப்பமுடையவனாகச் செய்கை.

இனி, கூடியிருக்கும் நிலையில் [4] இளைய பெருமாளுக்காக ஈச்வர விஷயத்திலும், பிரிந்திருக்கும் நிலையில் அரக்கியர்களுக்காகத் திருவடி விஷயத்திலும் புருஷகாரம் செய்தமையை, 'இரண்டு நிலைகளிலும் புருஷகாரம் செய்தமை தோன்றும்' [5] என்

---

[1] சேதனன் - இவ்வுலக வாழ்விலே உழன்று திரிகின்ற சேதனன். சேதனன் - அறிவுள்ளவன்.

[2] இச்சுலோகத்தை மேலே காண்க.

[3] இச்சுலோகத்தை மேலே காண்க.

[4] பெருமாள் - ஸ்ரீ ராமபிரான். இளைய பெருமாள் - இலக்குமணன். திருவடி - அனுமான். இவர்களை இங்ஙனம் கூறுதல் வைணவ மரபு.

[5] 'என்கிற அளவிற்குக் கூட்டிக் கொள்ளலாமாயினும்' என்றது, மேற்சூத்திரப் பொருளுக்கு இயைய இச்சூத்திரப் பொருளையும் சேர்த்துக் கூறக் கூடியதாகவிருந்ததேயாகிலும் என்றபடி.

கிற அளவிற்குக் கூட்டிக்கொள்ளலாமாயினும், இந்த இடத்திற்குப் பொருந்திய பொருள், 'இவ்வுலக மக்களையும் சர்வேச்வரனையும் சேரவிடுகை' ஆகையாலே, இச்சூத்திரத்திற்கு [1] இவ்வாறே பொருள் கோடல் வேண்டும்.

[2] ஆதலால், சர்வேச்வரனோடு தான் கூடியிருக்கும் நிலையில், மக்கள் இறைவனைப் பற்றுவதற்கு விருப்பமுள்ளவர்களாக வந்திருந்தும், மக்கள் முன் செய்து போந்த குற்றங்களைப் பார்த்து, இறைவன் அங்கீகரியாதிருக்குமளவில், அவன் சுவாதந்தரியத்தைக் குலைத்துக் கிருபை முதலான குணங்களை வெளிப்படச் செய்து இவர்களை அங்கீகரிக்கும்படி ஆக்குகையும்; பிரிந்திருக்கும் நிலையில் இறைவன் அங்கீகரிப்பதில் நோக்குள்ளவனாய் இருந்தும், இம்மக்கள் தாங்கள் செய்து போந்த இருவினைகளுக்குத் தகுதியாக இறைவனிடத்தில் வெறுப்புள்ளவர்களாக இருப்பார்களேயானால், இவர்களுடைய தீமனத்தை மாற்றி ருசியை விளைப்பித்து இறைவனைப் பற்றுவதில் நோக்குள்ளவர்களாகச் செய்கையும் இருவரையும் திருத்துகையாகும்.

[3] ஆக, இப்படி அங்கீகாரத்திற்குத் தடையான சுவாதந்தரியத்தை மாற்றி, அங்கீகாரத்திற்கு உடலான கிருபை முதலான குணங்களைத் தோற்றுவிக்கையாலும், இறைவனைப் பற்றுதற்குத் தடையான தீமனத்தை மாற்றிப் பற்றுதற்குக் கருவிகளான ருசி முதலானவற்றைத் தோற்றுவிக்கையாலும் 'ஶ்ரு—ஹிம்சாயாம்'

---

[1] 'இவ்வாறே' என்றது, இச்சூத்திரத்திற்கு முதலில் பொருள் கூறியுள்ளவாறே என்றபடி.

[2] தாம் முதல் முன்னம் கூறிய பொருளை விளக்கி முடிக்கிறார் 'ஆதலால்' என்று தொடங்கி.

[3] மேற்கூறிய இரண்டு பொருள்களையும் 'ஸ்ரீ' என்ற சொல்லில் அமைத்துக் காட்டுகிறார் 'ஆக' என்று தொடங்கி.

ஈச்வரனுடைய சுவாதந்தரியத்தை மாற்றுதல், சேதனனுடைய தீமனத்தை மாற்றுதல் என்ற இரண்டும் 'ஶ்ரு' என்ற தாதுவிலே பிறந்த 'ஸ்ரீ' சப்தத்தின் பொருள். ஈச்வரனுக்குக் கிருபை முதலான குணங்களைத் தோற்றுவித்தல், சேதனனுக்கு ருசி முதலியவற்றைத் தோற்றுவித்தல் என்னும் இரண்டும் 'ஶ்ரூ' என்ற தாதுவினின்றும் பிறந்த 'ஸ்ரீ' சப்தத்தின் பொருள்.

மேலே ஸ்ரீ என்ற சொல்லுக்கு இரண்டு பொருள்கள் கூறப்பட்டன. இங்கு இரண்டு பொருள்கள் கூறப்படுகின்றன. ஒன்று, 'அழித்தல்'

என்கிற தாதுவிலும் 'ஶ்ரூ-விஸ்தாரே' என்ற தாதுவிலும் தோன்றின 'ஸ்ரீ' என்ற சொல்லில் 'ஶ்ருணாதி', 'ஶ்ரூணாதி' என்ற வியுத்பத்திகளின் இரண்டு பொருள்களும் இவ்விடத்தில் தோன்றுகின்றன. 'எல்லாக் குற்றங்களையும் போக்குகிறாள்; உலகத்தைக் குணங்களால் மிகுதிப்படுத்துகிறாள்' என்று இவ்வியுத்பத்திகள் இரண்டும் மக்கள் சார்பிலே தோற்றிற்றே யாகிலும் 'ஈஶ்வரனைத் திருத்தும்' என்கிறவிடத்திலும் இந்த நியாயம் தோற்றுகையாலே இப்படிச் சொல்லக் குறையில்லை. (7)

## 12

இருவரையும் திருத்துவது உபதேசத்தாலே.

என்பது சூத்திரம்.

அவ:—'இருவரையும் திருத்துவது எவ்வழியாலே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—இருவரையும் திருத்துவது உபதேசத்தாலே— இவற்றுள் இறைவனைத் திருத்துகையாவது, 'இவனுடைய குற்றங்களைக் கணக்கிட்டு நீர் இப்படித் தள்ளிக் கதவு அடைத்தால் இவனுக்கு வேறு ஒரு புகல் உண்டோ? உமக்கும் இவனுக்கும் உண்டான உறவு முறையைப் பார்த்தால், [1]'உறவேல் நமக்கு

---

அதாவது போக்குதல் என்பது. மற்றொன்று, விரிவுபடுத்தல் என்பது. நாசம் என்ற பொருளைத் தருகின்ற 'ஶ்ரு' என்ற தாதுவினின்றும் பிறந்த ஸ்ரீ என்ற சொல்லுக்கு நாசப்படுத்துதல் அதாவது போக்குதல் என்பது பொருள். விஸ்தாரம் என்ற பொருளைத் தருகின்ற 'ஶ்ரூ' என்ற தாதுவினின்றும் பிறந்த 'ஸ்ரீ' என்ற சொல்லுக்கு விஸ்தரிக்கிறாள் என்பது பொருள். ஶ்ருணாதி - நாசப்படுத்துகிறாள். அதாவது, ஈச்வரனுடைய சுவாதந்தரியத்தையும் சேதனனுடைய தீமனத்தையும் போக்குகிறாள் என்றபடி. ஶ்ரூணாதி - விஸ்தாரப்படுத்துகிறாள். அதாவது, ஈச்வரனுடைய கிருபை முதலான குணங்களையும், சேதனனுடைய ருசி முதலானவற்றையும் விரிவுபடுத்துகிறாள் என்றபடி.

'எல்லாக் குற்றங்களையும் போக்குகிறாள்' என்றவிடத்தில் சேதனர்கள் இறைவன் என்னும் இவ்விருவருடைய குற்றங்களையும் என்பது பொருள். இறைவனுடைய குற்றமாவது, சுவாதந்தரியம். 'உலகத்தைக் குணங்களால் மிகுதிப்படுத்துகிறாள்' என்றவிடத்தில் 'உலகம்' என்ற சொல் இறைவனையும் சேதனர்களையும் குறிக்கும்.

[1] திருப்பாவை, 28.

இங்கு ஒழிக்க ஒழியாது,' என்கிறபடியே குடநீர் வழித்தாலும் போகாதது ஒன்றன்றோ? உடைமையாகவிருக்கின்ற இவனை அடைதல் [1]சுவாமியான உம்முடைய பேருகவன்றோ இருப்பது? [2]'எதிர் சூழல் புக்கு'த் திரிகிற உமக்கு நான் சொல்ல வேண்டுமோ, காப்பாற்ற வேண்டும் என்ற விருப்பத்தோடு வந்து இவனைக் காப்பாற்றுத போது 'எல்லாப் பொருள்களையும் காப்பவர்' என்ற உம்முடைய தன்மை குலைந்து போகாதோ? 'அநாதி காலமாக நம்முடைய ஆணைமீறி, நம்முடைய சீற்றத்திற்கு இலக்காகப் போந்த இவனைக் குற்றங்கட்குத் தகுந்தவாறு தண்டிக்காமல், அவற்றைப் பொறுத்து அங்கீகரித்தால் சாத்திரங்களின் மரியாதை குலையாதோ?' என்றன்றோ [3]திருவுள்ளத்தில் ஓடுகிறது! அங்ஙனமாயின், இவனைக் காப்பாற்றுமல் இவனுடைய குற்றங்களுக்குத் தகுதியாகத் தண்டித்தால் உம்முடைய அருள் முதலான குணங்கள் பிழைக்கும்படி யாங்ஙனம்? அக்குணங்கள் ஒளி பெறுவது இவனைக் காப்பாற்றியபொழுதன்றோ? 'இவனைத் தண்டியாத போது சாஸ்த்ர மரியாதை குலையும்; காப்பாற்றுதபோது அருள் முதலிய குணங்கள் ஒளிபெறு; என் செய்வோம்?' என்று அஞ்சவேண்டா; சாஸ்திரத்தை உம்மிடத்தில் ருசியில்லாதவர்கள் விஷயத்திலே ஆக்கி, அருள் முதலான குணங்களை ருசியுள்ளவர்கள் விஷயத்திலே ஆக்கினல் இரண்டும் தலையெடுக்கும்; ஆன பின்னர், இவனைக் காத்தருளீர்,' என்னும் உபதேசத்தாலே.

இவ்வுபதேச முறை, இவர் தாம் அருளிச்செய்த 'பரந்த படியிலும்,' [4]ஆச்சான் பிள்ளை அருளிச்செய்த 'பரந்த ரஹஸ்யத்'திலும் விரிவாகக் காணலாம். [5]'ஏ தாயே, உன்னு

[1] சுவாமி - சொம்மையுடையவன் சுவாமி. சொம் - சொத்து, உடைமை.

[2] திருவாய்மொழி, 2 : 7 : 6.

[3] திருவுள்ளம் - இறைவன் திருவுள்ளம்.

[4] ஆச்சான் பிள்ளை - பெரியவாச்சான் பிள்ளை.

[5] இதற்கு மேலும் பிரமாணம் காட்டுகிருர் 'ஏ தாயே' என்று தொடங்கி.

'பிதேவ த்வத் ப்ரேயாந் ஜநநி பரிபூர்ணுகஸிஜநே
ஹித ஸ்ரோதோ வ்ருத்யா பவதி ஹி கதாசித் கலுஷதீ:,
கிமேதத் நிர்தோஷக இஹ ஜகதீதி த்வமுசிதை ருபாயை:
விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந:'

என்பது, ஸ்ரீகுணரத்ந கோசம், 11.

டைய அன்பனுன இறைவன், நிறைந்த பாவங்களைச் செய்த மக்களிடத்தில், அவர்களுக்கு நலத்தைச் செய்யக் கருதியிருத்த லால் எப்பொழுதேனும் கலங்கிய மனத்தையுடையவனுகவும் செய்கிருன்; அப்பொழுது, 'என்ன இது? இவ்வுலகத்தில் குற்றம் இல்லாதவன் எவன்?' என்று தக்க உபாயங்களால் அவனை அக் குற்றங்களை மறக்கும்படி செய்து எங்களைத் தன் மக்கள் ஆக்கு கின்ருய். ஆகையால், எங்களுக்குத் தாயாக இருக்கிருய்,' என் கிறபடியே குற்றங்கள் நிறைந்தவனுன சேதனன் விஷயமாக, நலத்திலேயே நோக்குள்ள சர்வேச்வரன் திருவுள்ளம் சீறும்படி யையும், அந்நிலையில் 'இச்சீற்றத்திற்கு அடி என்?' என்பது; 'இவன் தீரக் கழியச் செய்த குற்றம்' என்று அவன் சொன்னுல், மணல் சோற்றிலே கல்லாராய்வார் உளரோ? இவ்வுலகத்தில் குற்றம் இல்லாதவராயிருப்பார் யாவர் என்பதாய்த் தக்க உபாயங் களால் குற்றங்களை மறப்பித்துப் பிராட்டி சேர்க்கும்படியையும் அருளிச் செய்கையாலே, உபதேசத்தாலே சர்வேச்வரனைத் திருத்தும்படியைச் சுருக்கமாகப் பட்டர் அருளிச்செய்தாரிறே.

அவதாரநிலையிலும் [1]'பின்னர், சீதா பிராட்டியானவள், உயிருக்கு ஐயம் வரும்படியான ஆபத்தை அடைந்த காகாசுர னைப் பார்த்து, 'காப்பாற்றுவீராக, காப்பாற்றுவீராக' என்று தன் கணவனுன இராமபிரானுக்கு அருளால் சொன்னுள்,' என்று, சொற்களால் சொல்லமுடியாத பெரியபாவத்தைச் செய்த காகத்தைத் தலையை அறுப்பதாக விட்ட பிரமாத்திரத்திற்கு ஒரு கண்ணழிவு கற்பித்துப் பெருமாள் காப்பாற்றியதும் இவள் உபதேசத்தாலே என்னுமிடம் பாத்மபுராணத்தில் சொல்லப் பட்டதிறே.

இனி, சேதனனைத் திருத்துகையாவது, 'உன் குற்றங்களின் மிகுதியைப் பார்த்தால், உனக்கு ஓரிடத்திலும் காலூன்ற இடம் இல்லை; ஈசுவரனுவான் யாதொன்ருலும் தடை செய்யப்படாத சுவாதந்தரியத்தையுடையவனுகையாலே, குற்றங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு அறுத்து அறுத்து நுகர்விப்பான் ஒருவன்.

---

[1] இனி, அவதார நிலையில் இறைவனுக்கு இறைவி உபதேசித்த வகையைக் காட்டுகிருர் 'பின்னர்' என்று தொடங்கி.

'ப்ராண ஸம்ஶயமாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாதவாயஸம்
த்ராஹி த்ராஹீதி பர்தாரமுவாச தயயா விபும்.'

என்பது பாத்ம புராணம்.

இக்கேட்டினைத் தப்பவேண்டியிருந்தாயாகில் அவன் திருவடிகளில் தலை சாய்க்கை ஒழிய வேறு வழி இல்லை; 'குற்றங்கள் நிறைந்தவனான என்னை அவன் அங்கீகரிப்பானோ, தண்டிக்க மாட்டானோ?' என்று அஞ்ச வேண்டா; ருசி பிறந்த அளவில் உன்னுடைய குற்றங்கள் அனைத்தையும் பொறுக்கைக்கும் இனியனவாகக் கொள்ளுகைக்கும் ஈடான குணங்களாலே நிறைந்தவன் என்று உலகத்திலே பிரசித்தனாக இருப்பான் ஒருவன். ஆனபின்னர், நீ சுகமாயிருக்கவேண்டுமாகில் அவனை அடையப்பாராய்' என்னும் மேலான நல்லுபதேசத்தாலே.

'அப்படி யாங்குக் கண்டோம்?' என்னில், பாவத்திலே நிலை நின்றவனாய் வழிகெட நடந்து திரிகின்ற இராவணனைக் குறித்து, [1]'நிலைத்து நிற்க ஓர் இடம் வேண்டும் என்ற எண்ணமுடையவனாயும் சித்திரவதை வேண்டா என்ற எண்ணமுடையவனாயும் நீ இருந்தால், உன்னால் புருஷோத்தமரான அந்த இராமபிரான் நட்புக்கோடற்கு உரியவர்; அந்த இராமபிரானோ என்னில், தர்மங்களை அறிந்தவர் என்றும், புகல் புகுந்தவர்களிடத்தில் அன்புள்ளவர் என்றும் எங்கும் பிரசித்தி பெற்றவர்; நீ பிழைத்திருப்பதற்கு நினைத்தால் உனக்கு அவரோடு நட்பு உண்டாகவேண்டும்' என்று, பெருமாளோடு உறவு பண்ணுகைகாண் உனக்குத் தக்கது; அது செய்யப் பார்த்திலையாகில், வழி அடிப்பார்க்கும் தரையிலே கால்பாவி நின்று வழியடிக்கவேண்டுமே; உனக்கு ஓர் இருப்பிடம் வேண்டியிருந்தாயேயாகிலும், அவரைப் பற்றவேண்டும்; அவரது அல்லாத ஓரிடம் இல்லைகாண்; எளிமையாக எதிரி காலிலே குனிந்து இவ்விருப்பு இருப்பதில் பட்டுப்போக அமையும் என்று இருந்தாயோ, உன்னைச் சித்திரவதம் பண்ணாமல் நற்கொலையாகக் கொல்லும்போதும் அவரைப்பற்றவேண்டுங்காண். 'நான் செய்த குற்றத்திற்கு அவர் என்னைக் கைக்கொள்வாரோ?' என்று இருக்கவேண்டா. உன்னுடைய தீமனம் திருந்தினால் முன்பு செய்த குற்றத்தைப் பார்த்துச் சீறும் அந்தப் புன்மை அவர் பக்கல் இல்லைகாண்; அவர் புருஷோத்தமர்காண்; சரணாகதி

[1] 'மித்ரம் ஔபயிகம் கர்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா ।
வதஞ்சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷப:' ॥
'விதித: ஸஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல: ।
தேந மைத்ரீபவது தே யதி ஜீவிது மிச்சஸி.' ॥
என்பன, ஸ்ரீராமா. சுந். 21 : 19-20.

மேலான தர்மம் என்று அறியுமவராய்ப் புகல் புகுந்தவர்களுடைய குற்றங்களைப் பாராத அன்புடையராய் (வத்சலராய்) எல்லாரும் அறியும்படிகாண் பெருமாள் இருப்பது; நீ பிழைக்க வேண்டும் என்று விரும்பினையாகில் அவரோடு உனக்கு உறவு உண்டாக வேண்டும்,' என்று, இப்படி அச்சமுறுத்தி உபதேசித்தாளிறே. [1]அவன் திருந்தாதொழிந்தது, இவளுடைய உபதேசக் குறையன்று; அவனுடைய பாவத்தின் மிகுதியாலேயிறே.

இப்படி, இருவரையும் உபதேசத்தாலே திருத்தும் என்கையாலே 'ஶ்ரு-ஶ்ரவணே' என்கிற தாதுவில் தோன்றிய [2]'ஸ்ரீ' என்ற சொல்லில் 'ஶ்ருணோதி, ஶ்ராவயதி' என்கிற வியுத்பத்திகளிலே வைத்துக்கொண்டு 'ஶ்ராவயதி' என்ற வியுத்பத்தியின் பொருள் சொல்லப்பட்டது.

[3]'ஶ்ராவயதி' என்கிற இது, இறைவன் விஷயமாகவே முன்னோர்கள் நூல்கள் பலவற்றிலும் காணப்பட்டதேயாகிலும், [4]'அல்லது இறைவனிடத்தில் ருசியில்லாதவர்க்கும் இறைவனைப் பற்றுதலைக் குறித்துச் செய்யும் உபதேசமானது கேட்பிக்கை; 'விதித-இச்சஸி' என்று இராவணனைக் குறித்து உபதேசித்தாள்' என்று தத்துவ தீபத்திலே மக்கள் விஷயமாகவும் வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்கையாலே, இவ்விடத்திலும் சேதன விஷயாகவும் சொல்லக் குறை இல்லை. (8)

---

1 'இந்த உபதேசத்தால் அவன் திருந்திலனே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் திருந்தாதொழிந்தது' என்று தொடங்கி.

2 ஸ்ரீ என்ற சொல்லுக்கு மேலே நான்கு வகையாலே நான்கு பொருள்கள் கூறப்பட்டன. இங்கு, மேலும் இரண்டு வகையில் இரண்டு பொருள்கள் கூறப்படுகின்றன. கேட்டல் என்ற பொருளைத் தருகின்ற 'ஶ்ரு' என்ற தாதுவினின்றும் பிறக்கும் ஸ்ரீ என்ற சொல்லுக்குக் கேட்கிறாள் என்பதும், கேட்பிக்கிறாள் என்பதும் பொருள். இவ்விருவகைப் பொருள்களுள் கேட்பிக்கிறாள் என்ற பொருளே இவ்விடத்திற்கு வேண்டுவது. ஶ்ருணோதி - கேட்கிறாள். ஶ்ராவயதி - கேட்பிக்கிறாள்.

3 கேட்பித்தலாகிய இது இறைவன் விஷயமாகவே இருந்ததேயாகிலும், சேதன விஷயத்திலும் பொருந்தும் என்பதற்குப் பிரமாணம் காட்டி அருளிச்செய்கிறார் 'ஶ்ராவயதி' என்று தொடங்கி.

4 'அதவா விமுகாநாமபி பகவதாஶ்ரயண உபதேஶ:
ஶ்ராவயித்ருத்வம் 'விததஸ்ஸஹி தர்மஜ்ஞஶ்
ஶரணாகத வத்ஸல:தேநமைத்ரீபவது தே யதி ஜீவிது
மிச்சஸி' இதிராவணம் ப்ரத்யுபதேஶாத்'

என்பது, தத்துவதீபம்.

## 13

**உபதேசத்தாலே இருவருடையவும் கர்மபார தந்தரியம் குலையும்.[1]**

என்பது ஸூத்திரம்.

**அவ :—**' இவ்வுபதேசத்தால் இரண்டு இடங்களிலும் பலிக்குமது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் ஸூத்திரத்தால்.

**வியாக் :—** உபதேசத்தாலே இருவருடையவும் கர்மபார தந்தரியம் குலையும்—அதாவது, இப்படி இவள் இரண்டு இடங்களிலும் அவர் அவர்களுக்குத் தக்கவாறு செய்யும் உபதேசத்தாலே, நல்வினை தீவினைகளின் வசத்திலே இழுப்புண்டு பகவானிடத்தில் ருசி இல்லாதவனாகத் திரிகையாகிற சேதனனுடைய கர்மபாரதந்தரியமும் குலையும். சேதனன் செய்த பாவங்களைப் பிரதானமாக்கி அவற்றிற்கு ஈடாகவே செய்வன் என்று, இச்சேதனனைக் காப்பாற்றுவதில் ருசி இல்லாமலிருக்கின்ற ஈச்வரனுடைய கர்மபாரதந்திரியமும் குலையும் என்கை.

[1] சேதனன் கர்மங்கட்குப் பரதந்திரப்பட்டிருத்தல், அநாதியான பிரகிருதியின் சம்பந்தத்தின் காரியமான அறிவின்மையின் காரணமாக வந்ததாம். இறைவன் கர்மங்கட்குப் பரதந்திரப் பட்டிருத்தல், வேறு ஒன்றால் தடைசெய்யப்படாத தன் சுவாதந்திரியத்தின் காரியமான தன் நினைவின் காரணத்தாலாம்.

[2] இவை இரண்டும் அநாதியாகவே இருப்பனவாய்ப் போந்தனவேயாகிலும், தாயாம் தன்மையால் வந்த சம்பந்தத்தால் மக்களுக்கு நம்பிக்கைக்குரியவளாய், மனைவி என்ற சம்பந்தத்தாலே இறைவனால் விரும்பப்படுமவளுமான இவள், மக்களுக்கு நெஞ்சு இளகி இறைவனைப் பற்றுவதில் ருசி உண்டாகுமாறும் இறைவனுக்கு நெஞ்சு இளகி இவர்களை அங்கீகரிப்பதில் ருசி உண்டாகுமாறும் செய்யும் உபதேசத்தாலே கர்மபாரதந்தரியம் குலையத் தட்டு இல்லை. (9)

[1] சேதனனுடைய கர்மபாரதந்தரியம் வேறு; ஈச்வரனுடைய கர்மபாரதந்தரியம் வேறு. இவ்வேறுபாட்டினை வியாக்கியானத்திற்காண்க.

[2] கர்மபாரதந்தரியம் குலையுமாற்றை விளக்குகிறார் ' இவை இரண்டும் ' எனத் தொடங்கி.

## 14

**உபதேசத்தாலே மீளாத போது சேதனனை அருளாலே திருத்தும்; ஈச்வரனை அழகாலே திருத்தும்.**

என்பது சூத்திரம்.

**அவ** :—'இவ்வுபதேசத்தாலே இவர்கள் மீளாதபோது இவள் செய்வது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக்** :—உபதேசத்தாலே மீளாத போது, சேதனன் மீளாமைக்கு அடி, அநாதிகாலமாக [1]'யாதானும் பற்றி நீங்கும்' என்கிறபடியே இறைவனிடத்தில் ருசி இல்லாதவனாய், இவ்வுலக இன்பத்தில் ருசியுள்ளவனாய்ப் போருகையால் வந்த கெட்ட வாசனை முதலானவைகள். இறைவன் மீளாமைக்கு அடி, மக்கள் செய்த குற்றங்கட்குத் தகுதியாகத் தண்டிக்கவேண்டும் என்ற எண்ணத்தாலே நின்ற நிலை இளகாமல் நிற்கைக்கு உடலான [2]நிரங்குச சுவாதந்தரியம். இத்தகைய காரணங்களாலே இரண்டு தலையும் தன்னுடைய உபசேத்தால் தம்தம் கர்ம பாரதந்தரியத்தினின்றும் மீளாத அளவில்.

சேதனனை அருளாலே திருத்தும்—**மக்களை** அருளாலே திருத்துகையாவது, 'ஐயோ, இவனுடைய தீயவறிவு நீங்கி ஈச்வரனிடத்தில் ருசி உண்டாகைக்கு அடியான நல்லறிவு உண்டாக வேண்டும்,' என்று, அவர்கள் திறத்தில் தான் பண்ணுகிற [3]'பங்கயத்தாள் திருவருள்' என்கிற மேலான அருளாலே அவர்களுடைய தீய அறிவு குலைந்து பகவானிடத்தில் ருசியுடையனாம்படி செய்கை.

ஈச்வரனை அழகாலே திருத்தும்—ஈச்வரனை அழகாலே திருத்துகையாவது, 'ஓம் காண், போ, உனக்குப் பணி அன்றோ இது?' என்று உபதேசத்தை உதறினவாறே, கண்களைப் புரட்டுதல் கச்சை நெகிழ்க்குதல் செய்து தன்னழகாலே அவனைப்

---

[1] திருவிருத்தம், 95.

[2] நிரங்குதச சுவாதந்தரியம் - தடையில்லாத சுவாதந்தரியம்.

[3] திருவாய்மொழி, 9 : 2 : 1.

பிச்சேற்றித் [1]தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடி செய்து அங்கீகாரத்தைச் செய்வதிலே நோக்குள்ளவனைச் செய்கை.

ஆக, 'புருஷகாரமாம்போது' என்ற சூத்திரமுதல் இச் சூத்திரம் இறுதியாகப் புருஷகாரத்திற்கு உறுப்புக்களான குண விசேடங்களையும், அவற்றைத் தானே வெளியிட்டபடியையும், சேர்க்கையிலும் பிரிவிலும் புருஷகாரம் செய்யும் தன்மையையும், அவற்றின் வகை விசேடங்களையும் சொல்லிற்றாயிற்று. (10)

## 15

**அறியாத அர்த்தங்களை அடைய அறிவித்து, ஆசாரிய கிருத்யத்தையும் புருஷகார கிருத்யத்தையும் உபாய கிருத்யத்தையும் தானே ஏறிட்டுக்கொள்ளுகையாலே, மகாபாரதத்தில் உபாயவைபவம் சொல்லிற்றாயிற்று.**

என்பது சூத்திரம்.

அவ :— கிருபை முதலான குணங்களை வெளியிட்டமை சொன்ன போதே ஸ்ரீராமாயணத்தில் புருஷகார வைபவம் சொல்லப்பட்டபடியை விளக்கிக் கூறினாராய் நின்றார் இதுகாறும். இனி, மகாபாரதத்தில் உபாயவைபவம் சொல்லப்பட்டபடியை விளக்கிப் போகிறார் இச் சூத்திரத்தில்.

வியாக் :—அறியாத அர்த்தங்களை [2]அடைய அறிவித்து— அறியாதனவற்றை அறிவிப்பது ஆசாரியனுடைய செயல்; இறைவனுடைய செயல் அன்று. ஆகையாலே அன்றோ, [3]'என்னைப் பெற்ற அத்தாயாய்த் தந்தையாய்' என்று [4]விரும்

[1] 'மலர்நோக்க முண்டான்', 'மலராள்தனத்துள்ளான்' என்ற திருப்பாசுரப் பகுதிகளைத் திருவுள்ளம் பற்றிக் 'கண்களைப் புரட்டுதல் கச்சை நெகிழ்த்தல்' என்று அருளிச்செய்கிறார். முதலது, பெரிய திருமொழி, 8. 10 : 1. பின்னது, மூன்றாந்திருவந். 3.

[2] அடைய - முழுவதும்; எல்லாவற்றையும். கிருத்யம் - செயல்.

[3] அறியாதன அறிவித்தல், ஆசாரியனுடைய செயல் என்பதனைப் பிரமாணம் காட்டி விளக்குகிறார் 'என்னைப் பெற்ற' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 2 : 3 : 2.

[4] விரும்பியவற்றைச் செய்தல் தாயின் செயல்; நலத்தைச் செய்தல் தந்தையின் செயல்.

பியவற்றைச் செய்தலும் நலத்தைச் செய்தலும் ஆகிற தாய் தந்தையர்கள் செயல்களை, இறைவனாகிய தான், தானாகவே தமக்குச் செய்த உபகாரத்தை அருளிச் செய்தபின்னர், ஆசாரியன் செய்யும் விசேஷ உபகாரத்தையும், தானே, தமக்குச் செய்தமையை அருளிச்செய்கிற ஆழ்வார் 'அறியாதன அறிவித்த' என்று அருளிச்செய்தார்? இவ்விடத்தில் [1]இவர் அருளிச்செய்கிற வாக்கியந்தான் அந்தத் திருமொழியை நினைவூட்டுகிறதாய் இருக்கின்றது.

அறியாத அர்த்தங்களை அடைய அறிவிக்கையாவது, 'தத்துவ விவேகம்' தொடங்கிப் 'பிரபத்தி' அளவாக அருச்சுனனுக்கு முன்னர் அறியப்படாமல் இருந்த பொருள்களை எல்லாம் அறிவிக்கை.

[2]சரீரத்தையே ஆன்மாவாக நினைத்தவனைச் சரீரத்தோடு தொடர்புபட்டிருக்கின்ற பந்துக்கள்பக்கல் அன்பு பண்ணத் தகாதவிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றவனை இவனை, சரீரம் வேறு, ஆன்மா வேறு என்கிற விவேக முதலானவைகளாலே தெளிவிக்க வேண்டுகையாலே [3]'நான் ஒரு காலத்தில் இல்லை என்பது இல்லை; நீயும் இல்லை என்பது இல்லை; இங்கே வந்திருக்கும் அரசர்களும் இல்லை என்பது இல்லை; நானும் நீயும் அரசர்களும் ஆகிய அனைவரும், இனி வரும் காலத்திலும் இருப்போம் இல்லை என்பதில்லை,' [4]'இந்தச் சரீரத்திலிருக்கின்ற ஆன்மா

---

1 இவர் அருளிச்செய்கிற வாக்கியம் - 'அறியாத அர்த்தங்களை' என்பது. அந்தத் திருமொழி - மேலே காட்டிய திருவாய்மொழியின் பகுதி.

2 தத்துவ விவேகம் தொடங்கிப் பரபத்தி ஈறாக அருச்சுனனுக்கு அருளிச்செய்ததைச் சுருக்கமாக அருளிச்செய்கிறார் 'சரீரத்தையே' என்று தொடங்கி.

3 'நத்வே வாஹம் ஜாதுநாஸம், நத்வம் நேமே ஜநாதிபா:
நசைவ நபவிஷ்யாமஸ் ஸர்வேவயமித: பரம்.'

என்பது, ஸ்ரீகீதை, 2 : 12.

4 'தேஹிநோஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா
ததா தேஹாந்தரப்ராப்தி: தீரஸ் தத்ர ந முஹ்யதி.'

என்பது, ஸ்ரீகீதை, 2 : 13.

விற்கு, இந்தச் சரீரத்தில் இளமையும் யௌவனமும் முதுமையும் பற்றி எப்படி வருத்தமில்லேயோ, அப்படியே வேறு சரீரத்தை அடைவதைப்பற்றியும் வருத்தமில்லே. இந்த விஷயத்தில் உறுதியுடையவன் மயக்கம் அடையமாட்டான்,' என்பன போன்றவைகளால் சரீரம் வேறு, ஆன்மா வேறு என்ற பகுத்தறிவும், ஆன்மா வேறு, பரமான்மா வேறு என்ற பகுத்தறிவும் ஆகிற தத்துவ விவேகத்தையும், [1] 'பரத குலத்தில் உண்டான ஏ அருச்சுனு, என்றும் உள்ளவனுயும், அழிவில்லாதவனுயும், அறியப்படும் பொருளாகவே உள்ள உடலின் வேறுபட்டு அறிகின்ற பொருளாயும் இருக்கிற ஆன்மாவினுடைய இந்தச் சரீரங்கள் அழிந்துபோவனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன; ஆகையால், போரினேச் செய்வாயாக,' [2] 'இந்த ஆன்மாவானது ஒரு காலத்திலும் பிறப்பதுமில்லே; இறப்பதுமில்லே; இந்த ஆன்மாவானது ஒரு கல்ப காலத்தில் தோன்றிக் கல்ப முடிவில் இல்லாமற்போவதுமில்லே; இந்த ஆன்மா பிறப்பு இல்லாதது; என்றுமுள்ளது; சூக்கும விகாரமும் இல்லாதது; என்றும் புதியது; ஆகையால், சரீரமானது கொல்லப்பட்ட போதிலும் (ஆன்மா) கொல்லப்படுவதில்லே'; [3] 'மனிதன் கிழிந்த உடைகளே எப்படி நீக்கி, வேருன புதிய உடைகளே உடுத்துக்கொள்ளுகிருனே, அப்படியே, இந்த ஆன்மாவும் பழைய சரீரங்களே விட்டுப் புதியனவாயும் வேருகவும் உள்ள சரீரங்களே அடைகிறது,' என்பன போன்றவைகளாலே, ஆன்மாவின் என்றும் உள்ள நிலையினேயும் சரீரம் முதலானவைகளின் அழிந்துபோகும் நிலையினேயும் முதலில் உபதேசித்து,

---

[1] 'அந்தவந்த இமேதேஹா நித்யஸ் யோக்தாஃஶரீரிண:
அநாஶிநோ ப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத.'
என்பது, ஸ்ரீகீதை, 2 : 18.

[2] 'நஜாயதே ம்ரியதேவா கதாசித் நாயம் பூத்வா பவிதா வா ந பூய:
அஜோ நித்ய: ஶாஶ்வதோயம் புராணோ நஹந்யதே ஹந்யமா
என்பது, ஸ்ரீகீதை, 2 : 20. [நேசரீரே.'

[3] 'வாஸாம்ஸி ஜீர்ணுநி யதாவிஹாய நவாநி க்ருஹணுதி ந
ரோபராணி
ததாஶரீராணி விஹாய ஜீர்ணுநி அந்யாநி ஸம்யாதி நவாநிதேஹீ'
என்பது, ஸ்ரீகீதை, 2 : 22.

இவன், தானே செய்வதாக நினைத்திருக்கிற சுவாதந்தரிய மயக்கத்தைத் தவிர்ப்பதற்காக, [1]'தோள் வலியுள்ள அருச்சுனனே, எனக்கு, இந்த அசித்தான சரீரமானது மண், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் என்று எட்டு வகையாக வேறுபட்டு இருக்கிறது; இந்தச் சரீரமானது தாழ்ந்தது; இதனைக்காட்டிலும் வேறானதும் எதனால் இந்த அசித்துத் தரிக்கப்படுகிறதோ, அத்தகைய ஆன்ம சொரூபமான மேலான சரீரம் என்னுடையதாக அறிந்துகொள்,' என்கிற படியே அறிவுடைப்பொருள்களுக்கும் அறிவில் பொருள்களுக்கும் தான் ஆன்மாவாய்,

[2]'எல்லாப் பொருள்களினுடைய உள்ளங்களிலும் நான் இருக்கிறேன்; என்னிடமிருந்தே நினைவும் அறிவும் அறிவின்மையும் உண்டாகின்றன,' என்றும், [3]'ஏ அருச்சுனா, தன்னால் உண்டாக்கப்பட்டதாயும், சரீரம் இந்திரியம் இவற்றின் வடிவாயும், பிரகிருதி என்ற பெயருடையதாயுமிருக்கிற சக்கரத்தில் உள்ள பொருள்களை மாயையினாலே சத்வம் முதலிய குணங்களுக்குத் தகுதியாகக் காரியங்களைச் செய்வித்துக்கொண்டு ஏவுதல் செய்கின்ற இறைவனானவன் எல்லா ஆன்மாக்களினுடைய இதயங்களில் இருக்கிறான்,' என்றும் சொல்லுகிறபடியே எல்லாப் பொருள்களினுடைய இதயங்களில் நின்றும் காரியங்களைச் செய்தல் செய்யாமைகளாகிற எல்லாவற்றையும் செய்விக்கையாகிற தன்னுடைய ஏவுகிற தன்மையையும்,

அப்படி, எல்லாப் பொருள்களையும் ஏவுகின்றவனாய் எல்லாப் பொருள்களுக்கும் அறப் பெரியவனாய் இருக்குமளவன்றியே,

---

[1] 'பூமிராபோனலோ வாயுః கம் மநோ புத்திரேவச
அஹங்கார இதீயம்மே பிந்நா ப்ரகிருதி-ரஷ்டதா.'
'அபரேய மிதஸ் த்வந்யாம் ப்ரகிருதிம் வித்தி மே பராம்
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத்.'
என்பன, ஸ்ரீகீதை, 7 : 4, 5.

[2] 'ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்தஸ் ஸ்மிருதிர் ஜ்ஞாந மபோஹநஞ்ச'
என்பது, ஸ்ரீகீதை, 15 : 15.

[3] 'ஈஶ்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ரா ரூடாநி மாயயாః'
என்பது, ஸ்ரீகீதை, 18 : 61.

[1] 'நல்லோர்களைக் காத்தற்காகவும் தீயோர்களை அழித்தற்காகவும் தருமத்தை நிலை நிறுத்துவதற்கும் யுகந்தோறும் பிறக்கின்றேன்,' என்கிற அவதாரத்தின் அடியாக வருகின்ற தன்னுடைய எளிமையையும்,

[2] 'நான் எல்லா உயிர்கள் மாட்டும் என்னை அடைவதில் எள்கல் இராகம் இல்லாதவனாகவிருக்கிறேன். எனக்குப் பகைவரும் இலர், கேளிரும் இலர். எவர்கள் என்னைப் பக்தியோடு வணங்குகிறார்களோ, அவர்கள் என்னிடத்தில் சந்தோஷமாக இருக்கிறார்கள்; நானும் அவர்களிடத்தில் பிரியமாக இருக்கிறேன்,' என்று தன்னை அடைபவர்கட்கெல்லாம் ஒரே தன்மையனாகவிருக்கின்ற தன்னுடைய சம நிலையையும்,

[3] 'மூலப் பகுதியினுடைய முக்குணங்களால் பலவிதமாகச் செய்யப்படுகின்ற செயல்களை எல்லாம், அறிவில்லாதவன் அகங்காரத்தால் 'நான் செய்கிறேன்' என்று எண்ணுகிறான்,' என்று அகங்காரத்தின் குற்றத்தையும்,

[4] 'ஏ குந்தி புத்திரனே, இந்திரியங்களை வெல்லவேண்டும் என்று முயற்சி செய்கின்ற அறிவுடையனான புருஷனுடைய மனத்தினைக் கலங்கச் செய்கின்ற இந்திரியங்கள், வலுவிலே மனத்தினை இழுத்துக்கொண்டு செல்கின்றன,' என்று இந்திரியங்களினுடைய வலிமையையும்,

---

[1] 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.'
என்பது, ஸ்ரீகீதை, 4 : 8.

[2] 'ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:
யே பஜந்திதும் மாம்பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்.'
என்பது, ஸ்ரீகீதை, 9 : 29.

[3] 'ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வச:
அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே.'
என்பது, ஸ்ரீகீதை, 3 : 27.

[4] 'யததோஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித:
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:'
என்பது, ஸ்ரீகீதை, 2 : 60.

[1] 'தோள் வலியுடைய அருச்சுனா, மனமானது அடக்குதற்கு மிக அரிது; திரிந்துகொண்டே இருக்கும். இதில் ஐயமில்லை' என்று அந்த வலிமையில் மற்றை இந்திரியங்களைக்காட்டிலும் மனத்தினுடைய முதன்மையினையும் காண்பிக்கையாலே, இறைவனை அடைதற்குத் தடைகளாகவுள்ளனவற்றையும்,

[2] 'யோகத்தைச் செய்கிறவன் அப்படிப்பட்ட இந்திரியங்களை அடக்கி, என்னிடத்தில் மனம் வைத்தவனாக ஆகக்கடவன்; எவனுக்கு இந்திரியங்கள் தன் வசத்தில் இருக்கின்றனவோ, அவனுக்குப் புத்தியானது ஒரு நிலையில் இருக்கிறது,' என்றும், [3] 'உறுதி இல்லாததாயும் எப்பொழுதும் திரிந்துகொண்டு இருப்பதாயும் இருக்கிற மனமானது, எந்த எந்த இடத்தில் ஓடுகிறதோ, அந்த அந்த இடத்திலிருந்து இந்த மனத்தினை அடக்கித் தன்னிடத்திலேயே வசப்பட்டிருக்கும்படி செய்ய வேண்டும்,' என்றும் இறைவனைப் பற்றுதற்கு உறுப்புக்களான புறக்கரணங்களையும் அகக்கரணத்தையும் தனக்கு வசப்பட்டிருக்கும்படி நியமிக்கும் வகையையும்,

[4] 'பரதகுலத்தில் பிறந்த அருச்சுனா, தன்னை விட்டு நீங்கிப் போன செல்வத்தை மீண்டும் பெற விரும்புகிறவன், கைவல்யத்தை விரும்புகிறவன், வறியனாயிருந்து புதிய செல்வத்தைப் பெற விரும்புகிறவன், பகவானை அடைய விருப்பமுள்ளவன் என்று நான்குவகைப்பட்ட புண்ணியமுடையவர்களான மக்கள் என்னை வணங்குகிறார்கள்,' என்று தன்னை அடைகின்ற மக்களுடைய நால்வகைப் பிரிவுகளையும்,

---

1 'அஸம்ஶயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்
அப்யாஸேநது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே.'
என்பது, ஸ்ரீகீதை, 6 : 35.

2 'தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:
வஶேஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா.'
என்பது, ஸ்ரீகீதை, 2 : 61.

3 'யதோயதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சல மஸ்திரம்
ததஸ்ததோ நியம்யை ததாத்மந்யேவ வஶம்நயேத்.'
என்பது, ஸ்ரீகீதை, 6 : 26.

4 'சதுர்விதா பஜந்தேமாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு: அர்த்தார்த்தீ ஜ்ஞாநீச பரதர்ஷப.'
என்பது, ஸ்ரீகீதை, 7 : 16.

[1] 'இந்த உலகத்தில் தெய்வம் என்றும் ஆசுரம் என்றும் ஆன்மாக்கள் படைப்பு இருவகைப்படும்,' என்றும், [2] 'தெய்வப் பிறவியானது மோக்ஷத்திற்கும், அசுரப் பிறவியானது பந்தத்தை உண்டாக்குவதற்கும் காரணம் என்று நிச்சயிக்கப்பட்டிருக் கிறது,' என்றும் தன்னுடைய ஆணையைப் பின்பற்றி நடப்ப வர்கள் தேவர்கள் என்றும் அவ்வாணையை மீறுபவர்கள் அசுரர் கள் என்றும் தேவர் அசுரர் என்னும் இவர்கள் பிரிவினையும்,

[3] 'குருகுலத்திற் பிறந்து சிறப்புற்றவனே, என்னுடைய செல்வங்களில் நல்லவையும் சிறந்தவையுமானவற்றை உனக்குச் சொல்லுகிறேன்; ஏனென்றால், என்னுடைய செல்வங்களின் பரப்பிற்கு ஓர் எல்லை இல்லை,' என்று தொடங்கி, இந்த உலகங் களில் எல்லாப் பொருள்களையும் குறிக்கின்ற எல்லாச் சொற்களும் தன்னளவிலே வந்து முடியும்படி இவை முழுதினையும் தனக்குச் சரீரமாகக் கொண்டு பரந்திருக்கும்படியையும்,

[4] 'உனக்கு ஞானக் கண்ணைக் கொடுக்கிறேன். சிந்திக்கமுடி யாத என்னுடைய பெருமையைப் பார்ப்பாயாக,' என்று ஞானக் கண்ணைக் கொடுத்து, [5] 'ஏ கிருஷ்ணனே, உன்னுடைய சரீரத் தில் தேவர்களையும் அப்படியே பலவிதமான உயிருடைப் பொருள் களையும் உயிரில் பொருள்களையும் சிவனையும் தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பிரமனையும் எல்லா முனிவர்களையும் ஒளி விடு



[1] 'த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவஆஸுரஏவச' என்பது, ஸ்ரீகீதை, 16 : 6.

[2] 'தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தா யாஸுரீமதா' என்பது, ஸ்ரீகீதை, 16 : 5.

[3] 'ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மந: ஶுபா:
ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்தி அந்தோ விஸ்தாரஸ்ய மே.'
என்பது, ஸ்ரீகீதை, 10 : 19.

[4] 'திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோக மைஶ்வரம்' என்பது, ஸ்ரீகீதை, 11 : 8.

[5] 'பஶ்யாமி தேவாந் தவதேவ தேஹே ஸர்வாந்
ததாபூத விஶேஷ ஸங்காந்
ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம் ருஷீம்ஶ்ச
சர்வாந் உரகாம்ஶ்ச திவ்யாந்'
என்பது, ஸ்ரீகீதை, 11 : 15.

கின்ற பாம்புகளையும் பார்க்கிறேன்,' என்பது போன்றவை களாலே தன்னுடைய விச்வரூபத்தைக்கண்டு பேசும்படி செய்விக்கையாலே, தான் உகந்தார்க்குத் திவ்வியஞானத்தைக் கொடுத்துத் தன் படிகளைக் காண்பிக்கும் என்னும்படியையும்,

[1]'என்னிடத்தில் பக்தியையுடையவனாய் என்னிடத்தில் மனத்தை வை; என்னை ஆராதனஞ்செய்; என்னை வணங்கு; இவ்விதமாக என்னைச் சரணம் அடைந்த நீ மனத்தினை யோகத்தில் நிறுத்தி என்னையே வந்து அடைவாய்,' என்று இப்படியிருந்துள்ள பரத்துவத்தோடும் சௌலப்யத்தோடும் கூடிய தன்னுடைய திருவடிகளை அடைதலாகிற மேலான பேற்றிற்கு உபாயமாக இருந்துள்ள கர்மத்தையும் ஞானத்தையும் அங்கமாகக் கொண்டுள்ள பக்தியையும்,

[2]'என்னுடைய மாயையானது தாண்ட முடியாதது; என்னையே எவர்கள் சரணமாக அடைகின்றார்களோ, அவர்கள் இந்த மாயையினைத் தாண்டுகிறார்கள்,' என்றும், [3]'அந்த ஆதி புருஷனையே சரணம் அடையவேண்டும்,' என்றும், [4]'ஏ பரத குலத்தில் தோன்றியவனே, (எல்லா உலகங்களையும் ஏவுகின்றவனாயும் அடியார்களிடத்தில் உள்ள அன்பினால் உனக்குச் சாரதியாயும் எதிரிலிருந்து உன்னை ஏவுகிறவனாயும் உள்ள) அவனையே (என்னையே) முக்கரணங்களாலும் சரணமாக அடைவாய்,' என்றும் அந்தப் பக்திக்கு அங்கமாக இருக்கின்ற பிரபத்தியையும்,

---

[1] 'மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம்நமஸ்குரு
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மாநம் மத் பராயணஃ'
என்பது, ஸ்ரீகீதை, 9 : 34. இந்தச் சுலோகத்தில் 'மத்பக்தஃ மந்மநாபவ' என்பது, ஞானயோகம். 'மத்பக்த மத்யாஜி' என்பது கர்மயோகம். 'மாம்நமஸ்குரு' என்பது அங்கம்.

[2] 'தைவீஹ்யேஷா குணமயீ மமமாயா துரத்யயா
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே'
என்பது, ஸ்ரீகீதை, 7 : 14.

[3] 'தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே' என்பது, ஸ்ரீகீதை, 15 : 4.

[4] 'தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேந பாரத.'
என்பது, ஸ்ரீகீதை, 18 : 62.

[1]சரமச்சுலோகத்தாலே, அந்தப் பக்தி உபாயத்தின் செய்தற்கு அருமை முதலியனவற்றை உணர்ந்து சோகிப்பவர்க்கு, செய்தற்கு எளியதுமாய் ஆன்மசொரூபத்திற்குத் தக்கதுமான உபாயம், பிரபத்தி என்னுமதனையும் தானே அறிவித்தருளினன்.

ஆக, இப்படி அறியாத அர்த்தங்களை எல்லாம் அறிவிக்கையாலே ஆசாரியனுடைய செயலைத் தான் ஏறிட்டுக்கொண்டான் என்கிறது.

இனி, புருஷகாரத்தைச் செய்யும் செயலும், எல்லார்க்கும் புகலிடமாக உள்ள தன்னுடையது அன்று; பிராட்டியின் செயலாகும். [2]'இந்த உலகத்திலே பிறந்து இறந்து உழலுகின்ற உயிர்களுக்கு என்னை அடைவதைக் குறித்துப் புருஷகாரமாகப் பிராட்டி, முனிவர்களாலே சொல்லப்பட்டாள்; பிராட்டி புருஷகாரமாக இருப்பதானது எனக்கும் உடன்பாடே. அவளுக்கு வேறான தன்மை இல்லை,' என்பது போன்றவைகளாலே இப்புருஷகாரத்தைப் பகவத் சாஸ்திரத்தில் தானே அருளிச்செய்தான்.

'நன்று. இவனுக்குத் தத்துவஞானம் முதலியவற்றை உண்டாக்கிக்கொள்ளவேண்டுகையாலே ஆசாரியன் செயலைத் தான் ஏறிட்டுக்கொண்டது பொருந்தும். புருஷகாரம் செய்யும் செயலை ஏறிட்டுக்கொள்ள வேண்டுவான் என்? அங்கீகரித்துவிட அமையாதோ?' என்னில், அங்கீகாரத்திற்கு இதுவும் அவசியம் இன்றியமையாமல் வேண்டப்படுவதாகையாலே, அமையாது என்க. 'யாங்ஙனம்?' என்னில், இந்த உபாயத்திற்குப் பிரபத்தி செய்யும் ஒருவன் வேண்டப்படுவது போன்று, புருஷகாரம் வேண்டப்படுவதும் உண்டு அன்றோ? [3]இங்ஙனம் வேண்டப்படு

[1] 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மாஶுச,'
என்பது, சரமச் சுலோகம்.

[2] புருஷகாரம் பிராட்டியின் செயல் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'இந்த உலகத்திலே' என்று தொடங்கி. இச்சுலோகத்தை மேலே காண்க.

[3] உபாயத்திற்குப் பிரபத்தி செய்யும் ஒருவன் வேண்டப்படுவது போன்று, புருஷகாரமும் வேண்டப்படுவதாம் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'இங்ஙனம்' என்று தொடங்கி.

கின்ற இவ்விரண்டனையும், உபாயமாகப் பற்றுதல் வடிவமாய் இரா நின்ற துவயத்தில் முன் வாக்கியத்தில் 'ஸ்ரீமத்' என்ற முதல் பதத்திலும் 'பிரபத்யே' என்ற இறுதிப் பதத்திலும் காண லாம். 'ஸ்ரீ' என்ற சொல்லாலே புருஷகாரத்தையும் 'பிரபத்யே' என்ற தன்மைச் சொல்லாலே அதிகாரியையுமன்றோ சொல்லு கிறது?

[1]ஆகையாலே, சேதனர், இறைவனுகிய தன்னை உபாயமாகப் பற்றுமிடத்து, தங்களுடைய குற்றங்களின் அச்சத்தாலே பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட, அவள், இவன் குற்றங்கள் அடியாக உண்டான தன் திருவுள்ளத்தில் சீற்றத்தை ஆற்றிச் சேரவிட, கைக்கொள்ளுகை முறையாக இருக்க, அங்ஙன் அன்றிக்கே, இவன் குற்றம் அடியாக வந்த தன் திருவுள்ளத்தின் கலக்கத்தையும் தானே தணித்துக்கொண்டு இவனைச் சேர்த்துக் கொள்ளுகையாலும், அது தான் செய்கிற அளவில் இவன் வேண்டுகோளை எதிர்பாராமலே செய்கையாலும் புருஷகாரச் செயலையும் தானே ஏறிட்டுக்கொண்டான் என்கிறது.

இனி, 'உபாயமாகிற செயல் இறைவனுகிய தன்னுடையதாக விருக்க, அதனை ஏறிட்டுக்கொண்டான் என்றது என்?' என்னில், [2]'தேவரீரே எனக்கு உபாயமாக ஆகவேண்டும்,' என்று இவன் வேண்டிக்கொண்டால் காரியம் செய்ய அமைந்திருக்க, 'நாமே இவனுக்கு உபாயமாய் விருப்பமில்லாதவற்றைப் போக்குதல் முதலானவற்றைச் செய்துதரக் கடவோம்,' என்று தானே ஏன்று கொண்டு, [3]'என்னையே சரணமாகப் பற்று; எல்லாப் பாவங்களி னின்றும் உன்னை விடுவிப்பேன்'; என்கையாலே. [4]இங்ஙன்

---

[1] புருஷகாரச் செயலைத் தான் ஏறிட்டுக்கொண்டமையை விளக்கு கிருர் 'ஆகையாலே' என்று தொடங்கி. 'இவன்' என்றது அருச்சுனனை.

[2] 'த்வமேவோபாய பூதோ மே பவ' என்பது, அஹிர்புத்ந்ய சம்ஹிதை.

[3] இச்சுலோகத்தை மேலே காண்க.

[4] 'உபாயமாகிற செயல் இறைவனுகிய தன்னுடையதாகவிருக்க' என்று மேலே கூறியதனை விளக்குகிருர் 'இங்ஙன் அல்லாமல்' என்று தொடங்கி.

'உபாய உபேயத்வே ததிஹதவ, தத்த்வம் நது குணௌ' என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தரசத. 87.

அல்லாமல் 'உபாயமாகவிருக்கும் தன்மை உபேயமாகவிருக்கும் தன்மை என்ற இரண்டும் தேவரீருக்குச் சொரூபம்; குணங்கள் அல்ல,' என்று சொல்லப்படுகின்ற பொருளான இறைவனுக்கு உபாயமாகவிருக்கும் செயல் வந்தேறியன்றே! [1]உபய லிங்கத்தோடு கூடியிருப்பதனாலே உபாயமாகவிருக்கும் தன்மை உபேயமாக இருக்கும் தன்மை ஆகிய இரண்டும் இயல்பாகவே அமைந்துள்ளவையிறே.

இனி, 'உபேயமாகிற தன்னை உபாயம் ஆக்குகையாலே உபாயமாகிற செயலை ஏறிட்டுக்கொண்டான்' [2]என்பாரும் உளர். அது, பால் மருந்தாமாறு போலே இவன் உபாயமாம் இடமெங்கும் உள்ளதொன்று ஆகையாலே, அருச்சுனனுக்கு இப்போது சிறப்பாகச் செய்தது ஒன்று அல்லாமையாலும், 'உபாயம்' என்றே இறைவனைப் பெயர் இட்டு, அவனுடைய பெருமையைச் சொல்லுகிற இடமாகையாலும் இவ்விடத்திற்குப் பொருத்தம் அன்று. ஆன பின்னர் மேலே கூறியவாறே பொருளாக வேண்டும்.

[3]ஆசாரியனுடைய செயலை ஏறிட்டுக்கொள்ளுகிற அளவில், [4]'நான் துன்பப்படுகிற குற்றத்தால் கலங்கின தன்மையையுடையவனாய்த் தர்மம் அதர்மம் என்னும் இவற்றை அறியாத மனத்தையுடையவனாய் உம்மைக் கேட்கிறேன்; எனக்கு யாதொன்று நன்மையோ அதனை நிச்சயித்து அருளிச்செய்ய வேண்டும்; நான் உமக்கு மாணாக்கன்; உம்மைச் சரணம்புகுந்த என்னை நியமித்தருளவேண்டும்,' என்று அருச்சுனன் விரும்பியது உண்டாகையாலே ஆசாரியனாகிற வேறொருவர் செயலைத்

---

[1] உபயலிங்கம் - அகிலஹேயப்பிரத்யநீகத்வமும் கல்யாணை கதாநத்வமும். கல்யாணைகதாநத்வமாவது, தனக்கும் பிறர்க்கும் அநுகூலமாக விருத்தல்.

[2] 'என்பாருமுளர்' என்றது, 'ஆய்' என்னும் ஆசிரியரை.

[3] 'ஏறிட்டுக்கொண்டான்' என்றதன் பொருளை 'ஆசாரிய கிருத்யம்' முதலிய மூன்றற்கும் ஏற்ற பெற்றி கோடல் வேண்டும் என்கிறார் 'ஆசாரியனுடைய' என்று தொடங்கி.

[4] 'கார்ப்பண்ய தோஷோபஹத ஸ்வபாவ: ப்ருச்சாமி
த்வாம் தர்மஸம் மூடசேதா:
யச்ச்ரேயஸ் ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே ஶிஷ்யஸ்தேஹம்
ஶாதிமாம் த்வாம் ப்ரபந்நம்.'

என்பது, ஸ்ரீகீதை, 2 : 7.

தான் ஏறிட்டுக்கொண்டது மாத்திரமே கொள்ளவேண்டியதாகை யாலும், புருஷகாரச் செயலை ஏறிட்டுக்கொள்ளுகிற அளவில், பிறர் செயலை ஏறிட்டுக்கொண்டமையும் அதனை அவன் வேண்டுகோளை எதிர்பாராமலே ஏறிட்டுக்கொண்டமையும் கொள்ளவேண்டியதாகையாலும், உபாயமாகிற தன் செயலை ஏறிட்டுக்கொள்ளுகிற அளவில், அவன் வேண்டுகோளை எதிர் பாராமல் செய்த அளவே கொள்ளவேண்டுகையாலும் 'தானே ஏறிட்டுக்கொள்ளுகையாலே' என்கிற இதனை, மூன்று வகைப் பட்ட செயல்களிலும் ஏற்றவாறு சேர்த்துக்கோடல் தகும்.

[1] ஆசாரியன் அறியாதனவற்றை அறிவிக்க, பிராட்டி புருஷகாரம் செய்ய, வந்து தன்னை உபாயமாகப் பற்றுமவனுக்கு விரும்புவனவற்றைச் செய்து கொடுக்க அமைந்திருக்க, இவை எல்லாவற்றையும் தானே ஏறிட்டுக்கொண்டது 'வைபவம்' அன்றோ ?

'ஏறிட்டுக்கொள்ளுகையாலே மகா பாரதத்தில் உபாய வைபவம் சொல்லிற்றாயிற்று,' என்றது, ஏறிட்டுக்கொண்டமை யைச் சொல்லுகையாலே சொல்லிற்றாயிற்று என்றபடி. (11)

## 16

**[2] புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும் வைபவ மாவது, தோஷத்தையும் குண ஹாநியையும் பார்த்து உபேக்ஷியாத அளவன்றிக்கே, அங்கீ காரத்துக்கு அவைதம்மையே பச்சையாக்குகை.**

என்பது சூத்திரம்.

அவ :— புருஷகாரத்திற்கே உரிய பெருமையினையும் உபா யத்திற்கே உரிய பெருமையினையும் அருளிச்செய்தார் இது காறும். இனி, புருஷகாரம் உபாயம் என்னும் இரண்டற்கும் பொதுவான பெருமைகளை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

1 'ஏறிட்டுக்கொண்டது வைபவம் ஆயவாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆசாரியன்' என்று தொடங்கி.

2 தோஷம் - நூல்களில் விலக்கியுள்ளனவற்றைச் செய்தல். குணஹாநி - விதித்தவற்றைச் செய்யாமை. ஹாநி - கேடு.

**வியாக்.** :— புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும் வைபவமாவது, மேலே புருஷகாரத்திற்கே உரிய பெருமையையும் உபாயத்திற்கே உரிய பெருமையையும் சொல்லுகையாலே புருஷகாரத்தையும் உபாயத்தையும் தனித்தனியே எடுத்து அருளிச்செய்தார். இங்கு, இரண்டற்கும் பொதுவான பெருமையாகையாலே 'புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும்' என்று சேர்த்து எடுத்து அருளிச்செய்கிறார். மேல் புருஷகாரத்திற்கே உரிய பெருமையையும் உபாயத்திற்கே உரிய பெருமையையும் தனித்தனியே சொல்லுகிற இடங்களில் 'இருவரையும் திருத்துவது' என்பது போன்றவைகளாலே [1]சொல்லாற்றலால் புருஷகாரத்தின் தன்மையும், 'உபாயகிருத்தியத்தையும் தானே ஏறிட்டுக் கொள்ளுகையாலே' என்கையாலே [2]பொருளாற்றலால் உபாயத்தின் தன்மையும் சொல்லப்பட்டன. இங்கு, அவ்விரண்டனுடைய தன்மைகளைச் சொல்லுதல் முன்னாக அவற்றின் பெருமையை அருளிச்செய்கிறார், 'தோஷத்தையும் குண ஹாநியையும் பார்த்து உபேக்ஷியாத அளவன்றிக்கே அவைதம்மையே பச்சையாக்குகை' என்று.

தோஷமாவது, செய்தக்கவல்லனவற்றைச் செய்தல் முதலாக விலக்கியனவற்றைச் செய்தல். குண ஹாநியாவது, நூல்களில் விதித்தனவற்றைச் செய்யாமை. இவ்விரண்டனையும் [3]'மநோ வாக்காயை' என்று தொடங்கும் வாக்கியத்தாலே எம்பெருமா

---

[1] புருஷகாரத்தின் தன்மையாவது, திருத்துவது ஆகையாலே, அத்தத் திருத்தும் தன்மை 'இருவரையும் திருத்துவது' என்றவிடத்தில் 'திருத்துவது' என்ற சொல்லாலேயே நமக்குப் போதருதலின் 'சொல்லாற்றலால்' என்கிறார்.

[2] உபாயத்தின் தன்மையாவது, மக்களுக்கு விருப்பம் இல்லாதனவற்றை நீக்கி விரும்பியனவற்றைக் கொடுப்பதாகையாலே, இத்தன்மையாகிற செயல், 'உபாயக் கிருத்தியத்தையும்' என்றவிடத்தில் சொல்லால் விளங்காது, அச்சொல்லால் போதருகின்ற பொருளால் நமக்குக் கிடைத்தலின் 'பொருளாற்றலால்' என்கிறார்.

[3] 'மநோவாக் காயை: அநாதிகால ப்ரவ்ருத்தஅநந்த அக்ருத்யகரண க்ருத்யாகரண பகவதபசார பாகவதபசார அஸஹ்யபசார ரூபநாநாவித அநந்த அபசாராந் ஆரப்தகார்யாந் அநாரப்த கார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ஸ்ச சர்வாந் அசேஷத: க்ஷமஸ்வ.' என்பது சரணாகதி கத்யம்.

ஞர் அருளிச்செய்தார். [1] 'இதைச் செய்', 'இதனைச் செய்யாதே' என்று விதித்தல் விலக்குதல் என்னும் இவற்றை வடிவாகக் கொண்ட சாஸ்திரங்கள் பகவானுடைய ஆணையாகவன்றோ இருக்கின்றன? [2] 'வேதங்களும் மநு முதலான தர்ம சாஸ்திரங்களும் என்னுடைய ஆணை,' என்று தானே அருளிச்செய்தான். இத்தகைய சாஸ்திரங்களில் விலக்கியனவற்றைச் செய்கையும் விதித்தனவற்றைச் செய்யாமையுமே, அநாதி காலம் [3] 'தள்ளுகிறேன்', [4] 'பொறுக்கமாட்டேன்' என்னும் பகவானுடைய தண்டனைக்கு இலக்காகப் போருகைக்குக் காரணம்.

'இவை இரண்டையும் பார்த்து உபேக்ஷியாத அளவன்றிக்கே' என்றது, பற்றுவதில் ருசி உள்ள உயிர்களிடத்துள்ள இந்தத் தோஷத்தையும் குணக்கேட்டினையும் பார்த்து 'இவர்களை வேண்டோம்' என்று கைவிடாதே அங்கீகரிக்குமாத்திரமன்றிக்கே என்றபடி. 'அங்கீகாரத்திற்கு அவைதம்மையே பச்சையாக்குகை' என்றது, அத்தகைய தோஷத்தையும் குணக்கேட்டினையும், முகமலர்ந்து அங்கீகரிக்கைக்கு உறுப்பான உபகாரமாகக் கொள்ளுகை என்றபடி. உபேக்ஷியாமைக்குக் காரணம், அருளும் பொறுமையும். பச்சையாகக் கொள்ளுகைக்குக் காரணம், வாத்சல்யம். [5] சுவடு பட்ட இடத்தில் புல் கவ்வாத பசுவானது, தன் கடையில் நின்றும் விழுந்த கன்றினுடைய உடம்பில் இருக்கும் வழும்பை இனியதாகக் கொள்ளுமது போன்று இருப்பது ஒன்று இது. இக்குணத்திற்கு ஒப்பதொரு குணம் இல்லை. ஆகையாலே அன்றோ [6] 'நிகரில் புகழாய்' என்று ஆழ்வார் அருளிச்செய்தது? உடையவரும் [7] 'அபார காருண்ய சௌசீல்ய வாத்சல்ய' என்று மற்றைய குணங்க

---

1 'இதம்குரு', 'இதம்மாகார்ஷீ:'

2 ஆணையாகவிருக்கின்றன என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறுர் 'வேதங்களும்' என்று தொடங்கி.

'ச்ருதிஸ் ஸ்ம்ருதி: மமைவாஜ்ஞா' என்பது, பாஞ்சராத்திரம்.

3 'க்ஷிபாமி' மேலே காண்க.

4 'நக்ஷமாமி' மேலே காண்க.

5 'வாத்சல்யம்' என்ற சொல்லின்—குணத்தின் பொருளின் தன்மையை விளக்குகிறுர் 'சுவடுபட்ட' என்று தொடங்கி.

6 திருவாய்மொழி, 6 : 10 : 10.

7 சரணுகதி கத்யம், ஜலதே - கடலே.

ளோடு சேர்த்து அருளிச்செய்திருந்தும், இதனுடைய சிறப்புத் தோன்ற மீளவும் 'ஆஸ்ரித வாத்சல்யைகஜலதே' என்று அருளிச் செய்தாரிறே.

இந்த வாத்சல்யந்தான், தாயாம் சம்பந்தத்தாலே ஈச்வரனைக்காட்டிலும் பிராட்டியிடத்தில் அதிகமாகவிருக்கும். ஆகையால், இருவரும் தாம்தாம் அங்கீகரிக்கும் நிலைகளில், இவ்வுயிர்களுடைய தோஷத்தையும் குணக்கேட்டினையும் [1]பச்சையாகக் கொண்டு அங்கீகரிப்பர்கள் என்கை. (12)

## 17

**இரண்டும், இரண்டும் குலைய வேணுமென்றிருக்கில், இரண்டற்கும் இரண்டும் உண்டாயிற்றதாம்.**

என்பது சூத்திரம்.

**அவ:**—'இப்படி, புருஷகாரமும் உபாயமும், தோஷமும் குணக்கேடும் குலைவதற்கு முன்னே அங்கீகரிக்கிறது என்? 'அவைகுலைந்த பின்னரே அங்கீகரிக்கக் கடவோம்,' என்றிருக்கில் வருவன என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'இரண்டும்' என்றது, புருஷகாரத்தையும் உபாயத்தையும். 'இரண்டும் குலையவேணும் என்றிருக்கை' என்றது, இவனை அங்கீகரிக்கும்பொழுது இவனுடைய தோஷம் குணக்கேடு என்னுமிரண்டும் கழிந்த பின்பே அங்கீகரிக்க வேண்டும் என்று நினைத்து, பற்றுவதில் ருசியுள்ள இவனை அங்கீகரியாதிருக்கை என்றபடி. இப்படி இருக்கில் 'இரண்டற்கும் இரண்டும் உண்டாயிற்றதாம்' என்றது, புருஷகாரத்திற்கும் உபாயத்திற்கும் தோஷம் குணக்கேடு என்னும் இரண்டும் வந்தனவாம் என்றபடி.

'யாங்ஙனம்?' என்னில், தோஷம் வருகையாவது, [2]'தேவரீர் எல்லாவுலகங்களுக்கும் தாயாக இருக்கின்றீர்; தேவர்களுக்கெல்

---

[1] பச்சை - உபகாரம்.

[2] 'த்வம்மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோஹரிః பிதா' என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 7 : 9.

லாம் தேவனை பகவான் தமப்பனாக இருக்கிறார்,' என்றும், [1]'எல்லாவுலகங்கட்கும் தாயான பெரிய பிராட்டியாரை' என்றும், [2]'நீர் இந்தச் சராசரங்களோடு கூடின உலகத்திற்குத் தந்தையாக இருக்கின்றீர்,' என்றும் சொல்லுகிறபடியே எல்லாவுயிர்கட்கும் காரணம் பற்றி வாராத தாயும் தமப்பனுமாகையாலே, இம்மக்களுடைய நன்மை தீமைகள் இரண்டும் தங்களுடையவாம்படியான உறவு உண்டாயிருக்க, இம்மக்களுடைய குற்றங்களைப் பார்த்து அங்கீகரியாமையாலே அத்தகைய சம்பந்தத்திற்குக் குற்றம் வருகை.

குணக்கேடு வருகையாவது, [3]இம்மக்களுடைய குற்றம் கண்டு இரங்காமையாலும் இவர்களுடைய குற்றங்களை இனியனவாகக் கொள்ளாமையாலும் கிருபைக்கும் வாத்சல்யத்திற்கும் கேடு வருகை.

அங்ஙனம் அல்லாமல், 'இரண்டும் உண்டாயிற்றதாம்' என்கிறவிடத்தில் [4]தோஷம் குணக்கேடு என்பனவற்றிற்கு, செய்யத் தகாதனவற்றைச் செய்தலும், செய்வனவற்றைச் செய்யாமையும் என்று பொருள் கோடலுமாம். அங்ஙனம் கொள்ளுமிடத்துப் புருஷகாரத்திற்குச் செய்யத்தகாதனவற்றைச் செய்தலாவது, மக்களுடைய குற்றங்களைக்கண்டு குற்றங்கட்குத் தக ஒறுக்குமியல்பினனான இறைவனையும் அங்ஙனம் செய்யவொட்டாது தடுக்கும் தன்மையளாகிய தான், 'குற்றங்கள் குலைந்தாலன்றி இவர்களை அங்கீகரியேன்' என்றிருக்கை. செய்வனவற்றைச் செய்யாமையாவது, மக்களுடைய குற்றம் முதலாயினவற்றைப் பாராமல் கைக்கொண்டு ஈச்வரனோடே சேர்ப்பிக்கையாகிற தன் காரியத்தைச் செய்யாமை.

இறைவனுக்குச் செய்யத் தகாதனவற்றைச் செய்தலாவது, இவ்வுலக மக்களுடைய தன்மையைப் பார்த்துக் கைவிடாமல் இயல்பாகவமைந்த சம்பந்தமே காரணமாக வெறுப்பின்மை முதலானவற்றை உண்டாக்குகைக்கு எதிர் சூழல் புக்குத்திரிகிற, எல்லாவுயிர்களுக்கும் நன்மையே நினைக்கிற தான், இம்மக்களை

---

[1] 'அகிலஜகந் மாதரம்' என்பது, சரணாகதி கத்யம்.

[2] 'பிதாஸிலோகஸ்ய சராசரஸ்ய' என்பது சரணாகதி கத்யம்.

[3] இவ்வாக்கியத்தை நிரல் நிறையாகப் பொருள் கொள்க.

[4] இவ்வாக்கியத்தையும் நிரல் நிறையாகப் பொருள் கொள்க.

அங்கீகரிக்குமளவில் 'இவர்களுடைய குற்றம் முதலானவைகள் குலைந்தால் ஒழிய அங்கீகரியேன்' என்றிருக்கை. செய்வனவற்றைச் செய்யாமையாவது, இம்மக்களுடைய குற்றம் முதலாயினவற்றைப் பாராமல் [1]கைக்கொண்டு, தன்னுடைய செயலான, மக்களுடைய விருப்பமின்மை முதலானவற்றை நீக்கிக் காத்தலைச் செய்யாமை.

[2]இதுதான், மக்களுக்குச் சொன்ன செய்யத் தகாதனவற்றைச் செய்தல் முதலாயின போன்று, சாஸ்திரத்தைப்பற்றிச் சொல்லுகிறதன்று; இவர்கள் தன்மைகளை நோக்கிச் சொல்லுகிறதித்தனை. [3]தம் பக்கல் வெறுப்புள்ளவர்களையும் உட்படத் தோஷத்தையும் குணக்கேட்டினையும் பச்சையாக மேல் விழுந்து அங்கீகரிக்கும் தன்மையர்களான இவர்களுக்கு, தம் பக்கல் ருசியுள்ள மக்களை அங்கீகரிக்குமளவில், தோஷம் முதலானவைகள் குலையவேண்டும் என்றிருக்கைதான் முதலிலே கூடாமையாலே, இவர்களுக்கு இவை வருகைக்கு இடம் இல்லை. அங்ஙனம் இருக்கவும், இப்படி அருளிச்செய்தது, [4]இவர்களுடைய உண்மை நிலையை அறியாதவர்களுக்கு, இறைவனைப்பற்றுவதில் ருசியுள்ளவர்களான மக்களிடத்துள்ள தோஷமும் குணக்கேடும் குலையவேண்டும் என்று இராமல், அவற்றுடனே அங்கீகரிக்கை இவர்களுடைய முக்கியச் செயல் என்பது அறிவிக்கைக்காக. (13)

## 18

**இரண்டும் குலைந்தது என்று இருக்கில், இத் தலைக்கு இரண்டும் உண்டாயிற்றதாம்.**

என்பது சூத்திரம்.

அவ:—இப்படித் தோஷமும் குணக்கேடும் குலைந்தால் ஒழிய அங்கீகரியோம் என்று இருக்கில் அத்தலைக்கு அவை இரண்டும்

---

[1] 'கைக்கொண்டு நீக்கிக் காத்தலைச் செய்யாமை' என்றும், 'தன்னுடைய செயலான காத்தல்' என்றும் கூட்டுக.

[2] 'இரண்டற்கும் இரண்டும் உண்டாயிற்றதாம்' என்றதனால், எழக்கூடியதோர் ஐயத்திற்கு விடை அருளிச்செய்கிறார், 'இதுதான்' என்று தொடங்கி.

[3] மேலே கூறியதனை விளக்குகிறார், 'தம்பக்கல்' என்று தொடங்கி.

[4] இவர்களுடைய - பிரானும் பிராட்டியுமான இவர்களுடைய.

வரும் என்னுமிடம் சொல்லி, தோஷமும் குணக்கேடும் நம்மை விட்டுக் குலைந்த பின்பன்றோ இறைவன் நம்மை அங்கீகரித்தது என்று இருக்கில், [1]இத்தலைக்கு அவை இரண்டும் வரும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— 'இரண்டும் குலைந்தது என்று இருக்கில்' என்றது, இத்தனை நாளும் நம்மை அங்கீகரியாத [2]இவர்கள், இன்று அங்கீகரித்தது, நம் தோஷம் முதலானவைகள் குலைந்தமையால் அன்றோ? ஆகையால் நமக்கு இவை குலைந்தன என்று நினைத்திருக்கில் என்றபடி. 'இத்தலைக்கு இரண்டும் உண்டாயிற்றதாம்' என்றது, செய்யத்தகாதனவற்றைச் செய்தலும் செய்வனவற்றைச் செய்யாமையும் ஆகிய குற்றங்கள் வருகை என்றபடி.

'யாங்ஙனம்?' என்னில், [3]இவ்வதிகாரிக்கு, 'அநாதி காலம் அங்கீகரியாதவர்கள் இன்று நம்மை அங்கீகரித்தது, நம்முடைய தோஷமும் குணக்கேடும் குலைந்தவாறே அன்றோ?' என்று நினைத்தல் செய்யத்தகாததாயிருக்க, அதனைச் செய்கையாலும்; [4]'நீசனேன் நிறைவொன்றுமிலேன்' என்றும், [5]'வேதநெறிகளை வழுவினனும் சிற்றின்பத்தில் ஆசையுள்ளவனும் நிலையில்லாத புத்தியையுடையவனும் பொறாமை தோன்றுமிடமாயும் உபகாரத்தைச் செய்தவர்களுக்கு அபகாரத்தைச் செய்கிறவனும் அகங்காரமுள்ளவனும் காமனுக்குப் பரவசப்பட்டவனும் வஞ்சிப்பவனும் அன்புள்ளவர்களிடத்தில் கொடியவனும் பாவத்தில் நிலைநின்றவனும் உள்ள நான் கரைகாண ஒண்ணாத இந்தத் துன்பக்கடலினின்றும் எப்படிக் கரை ஏறினவனாய்த் தேவரீருடைய திருவடிகளில் தொண்டு செய்யப்போகிறேன்?'

---

1 இத்தலைக்கு - இந்தச் சேதனனுக்கு. அதாவது, மக்களுக்கு.

2 இவர்கள் - பெருமானும் பிராட்டியும் ஆகிற இவர்கள்.

3 இத்தலைக்கு இரண்டும் உண்டாகுமாற்றைப் பிரமாணங்கள் காட்டி விளக்குகிறார் 'இவ்வதிகாரிக்கு' என்று தொடங்கி.

4 திருவாய்மொழி, 3 : 3 : 4.

5 'அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயா ப்ரஸவபூ:, க்ருதக்நோ
துர்மாநீ ஸ்மரபரவஶோ வஞ்சநபர: ।
ந்ருஶம்ஸ: பாபிஷ்ட: கதமஹமிதோ துக்கஜலதே:, அபாராத்
உத்தீர்ண ஸ்தவ பரிசரேயம் சரணயோ: ॥'

என்பது, தோத்திர ரத்நம், 62.

என்றும், [1] ‘அத்திகிரியில் எழுந்தருளியிருக்கின்ற ஏ தலைவனே, அறிந்தும் அறியாமலும் மனம் வாக்குக் காயம் என்னும் முக்கரணங்களால் செய்யப்பட்டனவும், தேவரீராலும் எண்ண முடியாதனவும், செய்யத்தகாதனவற்றைச் செய்வதாலும் செய்வனவற்றைச் செய்யாமையாலும் தேவரீரிடத்தில் செய்யப்பட்ட பல விதப் பாவங்களாலும், அடியார்கள் விஷயத்தில் செய்த பொறுக்க முடியாதனவான பல வகைப்பட்ட பாவங்களாலும் அடிபட்டவனாகவிருக்கிறேன்,’ என்றும், [2] ‘திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே, தேவரீரால் விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவும் ஆன ஆணையை மீறினவனாய், தேவரீர் விஷயத்திலும் அடியார்கள் விஷயத்திலும் மனம் வாக்குக் காயம் என்னும் முக்கரணங்களாலும் எப்போதும் தெரிந்தும் தெரியாமலும் பாவங்களை நன்றாகச் செய்துகொண்டு, தேவரீரால் பொறுக்க முடியாத பாவங்களிலும் நிறைந்தவனான நான், பொறுக்கின்ற தன்மையினால் தேவரீருக்குத் தாங்க முடியாதவனாக ஆகக் கடவேன் அல்லேன்,’ என்றும் சொல்லுகிறபடியே நம்முடைய தோஷமும் குணக்கேடும் இப்போதளவாக ஒன்றும் குலைந்தன இல்லை என்றும், இப்படியிருக்கவும் தோஷத்தையும் குணக்கேட்டினையும் பச்சையாக நம்மை அங்கீகரித்தருளுவதே என்றும் நினைத்தல் செய்யத்தகுவதாயிருக்க, அதனைச் செய்யாமையாலும் இரண்டும் வரும். (14)

## 19

### ராக்ஷசிகள் தோஷம் பிரசித்தம்.

என்பது சூத்திரம்.

அவ :—‘இப்படிப் புருஷகாரமும் உபாயமும், தோஷத்தையும் குணக்கேட்டையும் பச்சையாகக்கொண்டு அங்கீகரித்த இடம்

---

[1] ‘புத்வாசதோச விஹிதா கரணை: நிஷித்த ஸம்ஸேவநை:
த்வத் அபசார ஶதை: அஸஹ்யை: ।
பக்தாபசாரமபிஶதை: பவதாப்ய கண்யை: ஹஸ்தீச
வாக்தநு மநோஜநிதை: ஹதோஸ்மி ॥’

என்பது, வரதராஜ ஸ்தவம், 70.

[2] ‘அதிக்ரமந்நாஜ்ஞாம் தவவிதி நிஷேதேஷு பவ்தேப்யபி
த்ரைவிதம் வாக்தீக்ருதிபிரபி பக்தாய ஶததம்
அஜாநந்ஜாநந் வா பவதஸஹ நீயாகஸிரதஸ்
ஸஹிஷ்ணு த்வாத் ரங்கப்ரவண தவமாபூவமபர:’

என்பது ஸ்ரீரங்கராஜ ஸ்தவம், உத்தரசத. 91.

உண்டோ?' என்னும் வினவிற்கு விடையாக, புருஷகாரத்தின் அங்கீகாரம் பெற்ற அரக்கியர்களுடையவும், உபாயத்தினுடைய அங்கீகாரத்தைப் பெற்ற அருச்சுனனுடையவும் தோஷங்களைக் காட்டவே, அது, தானே போதரும் என்று திருவுள்ளம் பற்றி, முதலில் அரக்கியர்களுடைய தோஷங்களைக் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—ராக்ஷசிகள் - ஒற்றைக் கண்ணள், ஒற்றைக் காதள் முதலான எழுநூறு அரக்கியர்களும், பிற உயிர்களுக்குத் துன்பத்தைச் செய்யப்பெறில், உண்ணுமலே தடிக்கும்படி பாவ காரியம் செய்தலையே இயல்பாகவுடையவர்களாய், பத்து மாதங் கள் ஒருபடிப்படக் கையாலும் வாயாலும் அச்சமுறுத்துதலைச் செய்து நலிந்து போந்தவர்களிறே. இவர்கள் தோஷம் பிரசித்தம் என்றது, இராமாயணம் நடையாடும் தேசத்தில் அறியாதாரிலர் என்றபடி.

[1]இத்தகைய அரக்கியர்களைக் குறித்து, [2]'வானரங்களுள் சிறந்தவனே, அரசனுடைய பணியில் அமர்ந்தவர்களும் அரச னுடைய ஆணையினால் அவன் இட்ட காரியத்தைச் செய்கிறவர் களும் அரசன் காரியத்தைச் செய்யாமற்போனால் தண்டிக்கப்படு கின்றவர்களுமான இப்பணிப்பெண்களை எவன் கோபிப்பான்?' என்றும், [3]'உன் எண்ணத்தின்படி தீவினை செய்தவர்களாயும் என் எண்ணத்தின்படி நல்வினை செய்தவர்களாயும் கொல்லு தற்குத் தகுதியுள்ளவர்களாயும் இருக்கிற இவர்கள் விஷயத்தில் உம்மால் அருள் செய்யப்படவேண்டும்; எவனும் குற்றம் செய் கிறதில்லை என்பது இல்லை,' என்றும் குற்றத்தைக் குணமாக எடுத்துக் கூறித் திருவடியோடே மன்றாடிக் காக்கையாலே தோஷத்தையே பச்சையாகக் கொண்டு பாதுகாத்தமை பிரசித்தம் என்று கருத்து.

குணக் கேட்டினைச் சொல்லாதொழிந்தது, தோஷமே பச்சையாமிடத்தில் குணக்கேடு பச்சையாம் என்னுமிடம் சொல்ல வேண்டாமலே போதரும் என்று திருவுள்ளம் பற்றி.

---

[1] தோஷத்தையே பச்சையாகக் கொண்டு அங்கீகரித்துப் பாது காத்தமையை விளக்குகிறார் 'இத்தகைய' என்று தொடங்கி.

[2] இந்தச் சுலோகத்தை மேலே காண்க.

[3] இந்தச் சுலோகத்தையும் மேலே காண்க.

இவ்வரக்கியர்களுக்குக் குணக்கேடாவது, இடைவிடாமல் நலிந்து போருகிறவிடத்தில் இவளும் நம்மைப் போன்று ஒரு பெண் பிறந்தவளன்றோ என்றுகிலும் மறந்தும் சிறிது நெஞ்சிலே இரக்கமுண்டாதலும், [1]'உங்களைப் பாதுகாப்பவளாக நான் ஆகின்றேன்,' என்றதற்குப் பின்பு நலிகிறவிடத்தில் 'ஐயோ! இப்படிச் சொன்னவள் அன்றோ?' என்று சிறிதும் நெஞ்சுளுக்குதல் செய்யாமையும் முதலாயின. (15)

## 20

**'ஜிதேந்திரியரில் தலைவனாய், ஆஸ்திக அக்ரேசரனாய், 'கேசவஸ்ய ஆத்மா' என்று கிருஷ்ணனுக்குத் தாரகனாய் இருக்கிற அருச்சுனனுக்குத் தோஷம் ஏது?' என்னில், பந்துக்கள் பக்கல் சிநேகமும் காருண்யமும் வதபீதியும்.[2]**

என்பது சூத்திரம்.

**அவ :**—'இப்படிக் குற்றங்கள் பிரசித்தமாக அருச்சுனன் பக்கல் இல்லாமையாலும், பிரசித்தமான குணங்களையுடையவனாகையாலும், அருச்சுனனுக்குக் குற்றம் யாது?' என்னும் வினாவினை அநுவதித்துக்கொண்டு அவனுக்குள்ள குற்றங்களைக் காட்டுகின்றார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஜிதேந்திரியரில் தலைவனாய்' என்றது, [3]'ஏ தோழனே, அந்த ஊர்வசியினுடைய சரீரமானது ஆபரணங்களுக்கெல்லாம் ஆபரணமாகவிருக்கும், அலங்காரத்திற்கெல்லாம் அலங்கார விசேடமாகவிருக்கும், உபமானத்திற்கும் நேரான

---

[1] இந்தச் சுலோகத்தை மேலே காண்க.

[2] ஜிதேந்திரியரில் - ஐம்பொறிகளையும் அடக்கியவர்களுள். ஆஸ்திக அக்ரேசரன் - ஆஸ்திகர்களுக்கெல்லாம் முன் நடப்பவன். ஆஸ்திகன் - தெய்வம் முதலியன உண்டு என்று நம்புகிறவன். கேசவஸ்ய ஆத்மா - கிருஷ்ணனுக்கு உயிரைப் போன்றிருப்பவன். வத பீதி - கொல்லுதலுக்கு அஞ்சுதல்.

[3] 'ஆபரணஸ்யாபரணம் ப்ரஸாதநவிதே: ப்ரஸாதநவிதி:
உபமாநஸ்யாபி ஸகே ப்ரத்யுபமாநம் வபுஸ்தஸ்யா:'
என்பது, விக்ரம ஊர்வசீயம்.

இச்சரித நிகழ்ச்சியை, வில்லி பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கத்தில் 149 முதல் 163 முடிய உள்ள செய்யுள்களிற்காண்க.

உபமானமாக இருக்கும்,' என்னும்படியான வனப்பு மிக்க ஊர்வசியானவள் வந்து மேல் விழ, முறை கூறி வணங்கிக் கடக்க நின்றவனுகையாலே, ஐம்பொறிகளை அடக்கினவர்களுள் தனக்கு மேம்பட்டார் இல்லாதவன் என்றபடி.

'ஆஸ்திக அக்ரேசரனுய்' என்றது, தர்மம் அதர்மம் மேலுலகம் உயிர் இறைவன் என்பன போன்றவைகளைக் கூறு கின்ற சாஸ்திரங்களைப் பிரமாணமாக எண்ணுகின்ற அறிவினை யுடையவர்களுக்கு முன் நடக்குமவன் என்கை.

'கேசவஸ்ய ஆத்மா என்று கிருஷ்ணனுக்குத் தாரகனுய் இருக்கிற' என்றது, [1]'அருச்சுனன் கேசவனுக்கு உயிராக இருப்பவன்; அருச்சுனனுக்குக் கிருஷ்ணன் உயிராக இருப் பவன்,' என்று ஒருவர்க்கொருவர் உயிர் போன்றவர்களாக இருப்பவர்கள் என்கையாலே, 'இவனைப் பிரியில் கிருஷ்ணன் தரிக்கமாட்டான்' என்னும்படி விருப்பத்திற்கு விஷயமாக இருப்பவன் என்கை.

'இப்படியிருக்கிற அருச்சுனனுக்குத் தோஷம் ஏது?' என்பது வினு. 'என்னில்' என்பது அதனுடைய அநுவாதம். அந்தத் தோஷங்களைச் சொல்லுகிருர்: 'பந்துக்கள் பக்கல் சிநேகமும் காருண்யமும் வதபீதியும்' என்று. 'இவற்றுள் சிநேகமும் காருண்யமும் தோஷமாகிறபடி யாங்ஙனம்?' என்னில், இடம் அல்லாத இடத்திலே செய்யப்படுகின்றன ஆகையாலே, குற்றமாம் என்கை. 'வதபீதி தோஷமாவது யாங்ஙனம்?' என்னில், தன்னுடைய சாதி தர்மத்தைச் செய்வதில் 'பாவம் உண்டாகும்' என்ற எண்ணத்தால் வந்ததாகையாலே குற்றமாம் என்கை. [2]'இடம் அல்லாத இடத்திலே அன்பினுலும் அருளாலும் தர்மத்தை அதர்மம் என்று கலங்கின' என்றே அன்ருே ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்தது?

[3]'தருமக்ஷேத்திரமான குருக்ஷேத்திரத்தில் போர் புரிவதில் ஆவல் கொண்ட என்னுடைய புத்திரர்களான துரியோதனுதியர்

---

[1] 'அர்ஜுநஃ கேஶவஸ்யாத்மா க்ருஷ்ணஸ்யாத்மா கிரீடிநஃ' என்பது, பிரமாணம்.

[2] 'அஸ்தாநே ஸ்நேஹ காருண்ய தர்மாதர்மதியாகுலம்' என்பது ஸ்ரீ கீதாசங்கிரஹம்.

[3] பந்துக்கள் பக்கல் வைத்த சிநேகம் தோஷமாமாற்றைக் காட்டு கிருர் 'தர்மக்ஷேத்திரமான' என்று தொடங்கி.

களும் பாண்டுவின் புத்திரர்களான பாண்டவர்களும் ஒன்று சேர்ந்தவர்களாய் என்ன செய்தார்கள்?' என்கிறபடியே போர் புரிவதில் விருப்பத்தாலே இரண்டு தலைகளும் வந்து அணிந்து நின்ற பின்பு, போர் புரிதலே செய்யத்தக்கதாக இருக்க, அந்நிலையிலே [1]' ஏ கிருஷ்ணனே, வெற்றியையும் அரசினையும் சுகத்தினையும் விரும்பவில்லை; ஏ கோவிந்தனே, எங்களுக்கு அரசினால் பயன் யாது? சுகங்களாலும் உயிர் பிழைத்திருப்பதனாலும் என்ன பயன்? எவர்களின்பொருட்டுப் போகங்களும் இராச்சியமும் சுகங்களும் எங்களால் ஆசைப்படப்பட்டனவோ அந்த இவர்கள் உயிர்களையும் செல்வங்களையும் விட்டுப் போர்க் களத்தில் இருக்கிறார்கள்,' என்பன போன்றவைகளாலே 'இவர்களைக் கொன்று நான் உயிர் வாழ்ந்திருப்பது ஒருவாழ்வு உண்டோ?' என்று உறவினர்கள்பால் செய்த அன்பானது தன்னுடைய சாதி தர்மத்திற்கு முரண்பட்டதாகையாலே விலக்கப்பட்டதாம்.

[2]' அந்த அருச்சுனன், போர் செய்ய வேண்டும் என்று கூடியிருக்கிற தன்னுடைய அந்த எல்லா உறவினர்களையும் பார்த்து மிக்க அருளோடு கூடினவனாய்த் துன்புற்று, ஒரு வார்த்தை சொன்னான்,' என்னும்படி அந்நிலையில் செலுத்திய அருளும் யாகத்தில் செய்யும் உயிர்க்கொலைக்கு அஞ்சி அருள் செய்யாது போன்று விலக்கப்பட்டதாம்.

[3]' ஏ கிருஷ்ணா, குலநாசத்தால் உண்டான பாபத்தை நன்றாகப் பார்க்கிற நாம் இந்தப் பாவத்தினின்றும் விடுபடு

---

'தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்சய ॥'

என்பது, ஸ்ரீ கீதை, 1 : 1.

[1] 'நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண நசராஜ்யம் சுகாநிச
கிம்நோராஜ்யேந கோவிந்த கிம்போகை: ஜீவிதேநவா
யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோராஜ்யம் போகா: ஸுகாநிச
த இமேவஸ்திரா யுத்தே ப்ராணாந் த்யக்த்வா தநாநிச'

என்பன, ஸ்ரீ கீதை, 1 : 32, 33.

[2] 'தாந்ஸமீக்ஷ்ய ஸகௌந்தேய: ஸர்வாந் பந்தூந்வஸ்திதாந்
க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதந்நித மப்ரவீத்.'

என்பது, ஸ்ரீ கீதை, 1 : 27.

[3] கொலைக்கு அஞ்சுதல் தோஷமாமாற்றைக் காட்டுகிறார் 'ஏ கிருஷ்ணா' என்று தொடங்கி.

'கதம் நஜ்ஞேயமஸ்மாபி: பாபாதஸ்மாந் நிவர்த்திதும்
குலக்ஷய க்ருதம் தோஷம் ப்ரபஸ்யத்பி: ஜநார்த்தந.'

என்பது, ஸ்ரீ கீதை, 1 : 39.

வதற்கு எவ்வாறு அறியாமலிருப்பது?' என்று தொடங்கி [1]'இராச்சிய சுகத்தில் உள்ள ஆசையினுல் சுற்றத்தாரைக் கொல்லத் துணிந்தவர்களான நாம் இந்தப் பெரிய பாபத்தைச் செய்ய முன் வந்தோம்; அந்தோ!' என்னுமளவும் தன் சாதி தர்மமான கொலைத்தொழில் செய்வதில் பாவம் வரும் என்று நினைத்த அச்சமும் அப்படியே விலக்கப்பட்டதாம். (16)

## 21

திரௌபதீ பரிபவம் கண்டிருந்தது,
கிருஷ்ணுபிப்பிராயத்தாலே பிரதாந தோஷம்.

என்பது சூத்திரம்.

அவ :—'இவையெல்லாம் தலையாய குற்றங்கள் அல்ல; தலையான குற்றம் வேறே' என்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—திரௌபதீ பரிபவம் கண்டிருந்தது - முன்னர், திரௌபதியைத் துரியோதனன் முதலானேர் மானபங்கம் செய்கிறபடியைக் கண்டிருந்தும், சூதிலே தோற்றமையை நினைந்து, தர்மத்திற்குக் கேடு வரும் என்று அஞ்சிப் பொறுத்திருந்தாலும், [2]'கோவிந்தனே, செந்தாமரை போன்ற திருக் கண்களையுடையவனே, புகல் புகுந்த என்னைக் காப்பாயாக,' என்று கிருஷ்ணனைச் சரணம் அடைந்த பின்பு பரிபவிக்கிற அளவில் 'பகவானைச் சரணம் அடைந்தவர்களைப் பிறர் பரிபவிக்கக் கண்டால் ஆற்றல் உடையனுகில் விலக்கவேண்டும்; ஆற்றல் இல்லாதவனுகில் இழவோடே அப்பால்போக வேண்டும்' என்னும் விசேஷ சாஸ்திர மரியாதையைப் பார்த்தாதல், தன்னளவில் கிருஷ்ணனுக்கு உண்டான சிநேகத்தினையும் பக்ஷபாதத்தினையும் பார்த்து, 'அவனைப் புகல் புகுந்தவள் பரிபவம்படப் பார்த்திருந்தால் அவன் முகத்தில் நாளை விழிக்கும்படி என்!' என்றுதல் சடக்கென எழுந்து விலக்க அன்றே அடுப்பது! அதனைச் செய்யாமல் முன்பிருந்ததைக்காட்டில் ஒரு

---

[1] 'அஹோபத மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதாவயம்
யத்ராஜ்ய ஸுகலோபேந ஹந்தும் ஸ்வஜந முத்யதாঃ'
என்பது, ஸ்ரீ கீதை, 1 : 45

[2] 'கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணுகதாம்' என்பது, பாரதம், சபாபர்.

வேறுபாடு இல்லாமல் இருந்தான் அன்றோ? இதுவே ஆயிற்று, இவன் குற்றங்கள் எல்லாவற்றுள்ளும் தலையாய குற்றமாகக் கிருஷ்ணன் திருவுள்ளத்திலே பட்டுக்கிடப்பது. அதனைப்பற்ற, 'கிருஷ்ண அபிப்பிராயத்தாலே பிரதாந தோஷம்' என்கிறது.

[1]குற்றத்திற்குத் தலைமை கொடுமையாலேயாம். இக்குற்றம், அல்லாத குற்றங்களைப்போல அன்றிக்கே [2]'பொறுக்கமாட்டேன்' என்னும்படியான குற்றமேயன்றோ இது? (17)

## ௨௨

**பாண்டவர்களையும் நிரசிக்கப் பிராப்தமாயிருக்க வைத்தது, திரௌபதியுடைய மங்கள சூத்திரத்துக்காக.**[3]

என்பது சூத்திரம்.

**அவ :—** மேலே கூறிய குற்றத்தின் கொடுமையை விளக்குகிறார் இச்சூத்திரத்தால். [4]'அன்றிக்கே, மேலே கூறிய குற்றம் இவர்க்கும் ஒவ்வாதோ? அங்ஙனமிருக்க, இவர்களையும் அழித்துப் போகாமல் வைத்தது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால் எனலுமாம். இவ்விரு வகையுள் முற்கூறிய முன்னுரைக்கு அருச்சுனனை என்னுமல் 'பாண்டவர்களையும்' என்றது, இக்குற்றம் இவர்க்கும் ஒக்கும் என்று தோற்றுகைக்காக என்று கொள்க. இரண்டாவது முன்னுரைக்கு, தானே தன்னடையே சேரும் என்க.

**வியாக் :—** 'பாண்டவர்களையும்' என்ற உம்மை பரிபவத்தைச் செய்த துரியோதனன் முதலியோர்களைப் போன்றே, பரிபவத்தைக் கண்டிருந்த பாண்டவர்களும் கொல்லத்தக்க

---

[1] கண்டிருந்த இக்குற்றம் பாகவத அபசாரம் ஆகையாலே மிகப் பெரிய குற்றம் என்கிறார் 'குற்றத்திற்கு' என்று தொடங்கி.

[2] 'நக்ஷமாமி' என்பது, வராகபுராணம்.

[3] நிரசித்தல் - அழித்தல். மங்கள சூத்திரம் - மங்கள நாண்; தாலி.

[4] இச்சூத்திரத்திற்கு இரண்டு வகையாக அவதாரிகை அருளிச் செய்கிறார்.

வர்கள் என்பதனைக் காட்டுகிறது. 'நிரசிக்கப் பிராப்தமாயிருக்க வைத்தது' என்றது, 'இவர்கள் செய்த கொடுமைக்குத் தலைகளை அறுத்துப் போகடவேண்டியிருக்க, உயிர்களோடே இருக்கும்படி வைத்தது' என்றபடி. 'திரௌபதியுடைய மங்கள சூத்திரத்திற்காக' என்றது, 'அவளுக்கு விருப்பமான பொற்றாலி போகாமைக்காக' என்றபடி. [1]விரித்த கூந்தலைக் காணமாட்டாதவன் வெறுங்கழுத்தைக் காணமாட்டானிறே.

இதனால், தன்னைப் பற்றினவர்களைப் பரிபவித்தவர்களைப் போன்றே, அதனைக் கண்டிருந்தவர்களும் கொல்லத் தக்கவராவர் என்னுமிடமும், அவர்களே தன்னைப்பற்றினவர்களுக்கு விடவொண்ணாத உறவு முறையையுடையவர்களாகில், தன்னைப் பற்றினவர்களுக்காக அவர்களும் தன்னாலே காக்கப்படுவார்கள் என்னுமிடமும் வெளிப்படுத்தப்பட்டன. (18)

## 28

அருச்சுனனுக்குத் தூத்ய சாரத்தியங்கள் பண்ணிற்றும் பிரபத்தி உபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக.[2]

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனால், இப்படிக் கொல்லத் தக்கவனான அருச்சுனனுக்கு இழிதொழில்கள் செய்ததும், [3]பரம ரகஸ்யத்தை உபதேசித்ததும் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**— அருச்சுனனுக்குத் தூது போனது, [4]'பொய்ச்சுற்றம் பேசி நின்று பேதம் செய்து' பூசல் விளைக்கைக்காக. சாரத்

---

[1] 'விரித்த கூந்தலைக் காணமாட்டாதவன்' என்றது, திரௌபதி விரித்த கூந்தலைக் காண்பதற்குப் பொறாமல் துரியோதனன் முதலானோரைக்கொன்று, கூந்தலை முடித்தவன் என்றபடி. வெறுங்கழுத்து - தாலி நீங்கிய கழுத்து. அதாவது, விதவையாகக் காணமாட்டானே என்றபடி.

[2] தூத்ய சாரத்யங்கள் - துரியோதனனிடத்தில் தூது போனதும், அருச்சுனனுக்குத் தேர்ப்பாகனாய் நின்று தேர் ஓட்டியதும்.

[3] பரமரஹஸ்யம் - பிரபத்தி நெறி.

[4] திருவாய்மொழி.

தியம் பண்ணிற்று - ஆயுதம் [1]எடுக்கவொண்ணாது என்கையாலே, [2]'கொல்லா மாக்கோல் கொலைசெய்து பாரதப்போர், எல்லாச் சேனையும் இருநிலத்தவி'க்கைக்காக. பிரபத்தி உபதேசம் பண்ணிற்று, [3]'நான் போரைச் செய்யமாட்டேன்!' என்றிருந்தவனை [4]'உன்னுடைய வார்த்தையை நிறைவேற்றுகிறேன்,' என்னச்செய்து போரிலே மூளும்படி செய்கைக்காக. இவையெல்லாம் செய்தது, தன்னைப் புகல் புகுந்தவளான இவள் எண்ணத்தின்படியே துரியோதனன் முதலானோரை அழியச்செய்து இவள் குழலை முடிப்பிக்கைக்காகவிறே. ஆகையால் அருச்சுனன் திறத்துச்செய்தது தூது போதல் முதலாய மூன்றையும் இவளுக்காகச் செய்தான் என்கிறார்.

'பாண்டவர்களையும்', 'அருச்சுனனுக்கு' என்று தொடங்கிக் கூறிய இவ்விரு சூத்திரங்களாலும், மேலே கூறிய தலையாய குற்றத்தின் கொடுமையை விளக்கியவாறு.

[5]'ஆக, இப்படி, இடம் அல்லாத இடத்தில் செய்த அன்பு முதலானவைகளும், இறைவனைப் புகல் புகுந்தவளான திரௌபதியினுடைய பரிபவம் கண்டிருந்த மிகப்பெரிய குற்றமும் இவனுக்கு உண்டாயிருக்க, [6]'எல்லாவற்றிலும் சிறந்ததான, என்னுடைய மேலான மொழியை மீண்டும் கேள்; நீ எனக்கு நண்பனானபடியாலே உனக்கு நலத்தைச் சொல்லுகிறேன்,' என்றும், [7]'என்னிடத்தில் பக்தியையுடையவனாய் என்னிடத்தில் மனத்

---

[1] 'எடுக்கவொண்ணாது என்கையாலே' என்றது, எடுக்க ஒண்ணாது என்று துரியோதனன் கேட்டுக்கொண்டதனாலே என்றபடி.

[2] திருவாய்மொழி, 3 : 2 : 3.

[3] 'நயோத்ஸ்யாமி' என்பது, ஸ்ரீகீதை.

[4] 'கரிஷ்யே வசநம் தவ' என்பது, ஸ்ரீகீதை.

[5] அருச்சுனனுடைய குற்றங்களையே பச்சையாகக் கொண்டு பாதுகாத்தமையை முடித்துக் காட்டுகிறார் 'ஆக' என்று தொடங்கி.

[6] 'ஸர்வ குஹ்யதமம் பூயः ஶ்ருணு மே பரமம் வசः
இஷ்டோஸி மே த்ருட இதி ததோவக்ஷ்யாமி தேஹிதம்.'
என்பது, ஸ்ரீகீதை, 18 : 64.

[7] 'மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி ஸத்யந்தே ப்ரதிஜாநே ப்ரியோஸிமே.'
என்பது, ஸ்ரீகீதை, 9 : 34.

தினை வை ; என்னை ஆராதிக்கிறவனாக ஆவாய் ; என்னை வணக்கம் செய் ; என்னையே அடைவாய் ; இது மெய் ; உனக்குச் சூளுறவு செய்கிறேன் ; நீ எனக்கு நண்பனாகவிருக்கிறாய்,' என்றும் இவன் அளவில் உகப்புத்தோன்ற அருளிச்செய்கையாலே இவன் குற்றங்களைப் பச்சையாகக் கொண்டு அங்கீகரித்தமை பிரசித்தம் என்று கருத்து.

குணக்கேட்டினைச் சொல்லாதொழிந்தது, குற்றமே பச்சை யாமிடத்தில் குணக்கேடு பச்சையாம் என்னுமிடம் [1]கிம்புநர் நியாயத்தாலே போதருமாகையாலே சொல்லிற்றிலர்.

இவனுக்குக் குணக்கேடுகள் ஆவன : [2]'ஆகையால், அருச்சுனா, போரைச் செய்வாய்' என்று அருளிச்செய்த போதே [3]'உன்னுடைய வார்த்தையை நிறைவேற்றுவேன்,' என்று எழுந்திருந்து தன் தொழிலாகிய போரினைச் செய்யாமையும், கிருஷ்ணனைப் புகல் புகுந்தவளைப் பரிபவிக்க விட்டுப் பார்த்துக் கொண்டிருந்தோமே என்னும் அநுதாபம் சிறிதும் நெஞ்சில் இல்லாமையும் தொடக்கமானவை.

'தூத்யசாரத்தியம் பண்ணிற்றும் பிரபத்தி உபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக ஆகில், இவன் குற்றத்தைப் பச்சையாகக் கொண்டு அங்கீகரித்தான் என்னுமது பொருந்தாதே?' என்னில், அதற்குக் குறை இல்லை ; இவள் காரியத்தின்பொருட்டு இவனைக் குறித்து இவையெல்லாம் செய்கிறவிடத்தில் இவன் குற்றங்களைப் பார்த்து முகம் சுளியாமல் உகப்போடே செய்கையாலே. [4]அருச்சுனனைக் குறித்து ஆசாரியனுடைய செயல் முதலானவற்றை ஏறிட்டுக்கொள்ளுகிறவளவில் அவன் குற்றத்தைப் பச்சையாகக் கொண்டும் சாரதியாய்ப் புரையறக் கலந்து நின்றும் செய்கை முதலானவை உண்டு ஆகையால், 'அறியாத அர்த்தங்களை'

---

[1] கிம்புநர் நியாயம் - மீண்டும் எதற்காக? புந: - மீண்டும், கிம் - என்ன.

[2] 'தஸ்மாத் யுயுத்ஸ்வ பாரத' என்பது ஸ்ரீகீதை.

[3] 'கரிஷ்யே வசநம்தவ' என்பது ஸ்ரீகீதை.

[4] இந்நூல் துவயத்தின் விவரணம் என்று மேலே கூறியதனை விளக்குகிறார் 'அருச்சுனனைக் குறித்து' என்று தொடங்கியும் 'இங்கே' என்று தொடங்கியும். ஆஸ்ரயண சௌகர்ய ஆபாதகங்களான - இறைவனை அடைவதில் எளிதாகச் செய்கைக்குக் காரணங்களான.

(சூத். 15) என்ற சூத்திரத்தாலே ஆஶ்ரயண சௌகர்ய ஆபாதகங்களான வாத்சல்யம் முதலிய குணங்கள் குறிப்பிக்கப்படுகின்றன. இங்கே 'தூத்ய சாரத்தியங்கள் பண்ணிற்றும்' என்கிற இதனாலே [1]'ஓ கிருஷ்ணரே, எங்களை அறிவீர்; பகைவர்களை அறிவீர்; சென்றால் அங்குச் சொல்லவேண்டிய காரியங்களை அறிவீர்; பேசவேண்டிய வார்த்தைகளையும் அறிவீர். ஆகையால், ஏது ஏது எங்களுக்கு நன்மை தரத்தக்கதோ, அந்த அந்த வார்த்தைகளைத் துரியோதனனிடத்தில் சொல்ல வேண்டும்,' என்கிறபடியே செய்வனவற்றையும் தவிர்வனவற்றையும் அறிகின்றவனான தான் போனாலன்றிக் காரியம் சித்திபெறாது என்று இத்தலையைக் காப்பதற்காகத் தான் தூது போனமையும், ஆயுதம் எடுக்க ஒண்ணாது என்கையாலே தேரை ஓட்டும் தொழிலிலே மூண்டவனாய்த் தேர்க்காலாலே பகைவர்களை அழியச்செய்தமையும் தோற்றுகையாலே, [2]ஆஶ்ரித காரிய ஆபாதகங்களான ஞானம் சக்தி முதலிய குணங்களும் குறிப்பிக்கப்படுகின்றன.

இன்னமும், 'பிரபத்தி உபதேசம் பண்ணிற்றும்' என்கையாலே, சரமச்சுலோகத்தில் [3]'மாம் அஹம்' என்ற பதங்களால் சொல்லப்படுகின்ற இரண்டு வகைப்பட்ட குணங்களும் குறிப்பிக்கப்படுகின்றன.

---

[1] 'அஸ்மாந் வேத்த பராந் வேத்த வேத்தார்த்தம் வேத்த பாஷிதும்
யத்யதஸ்மத் ஹிதம் க்ருஷ்ண தத்தத் வாச்ய: ஸுயோதந:'
என்பது, பாரதம், உத்யோகபர். 71 : 92.

[2] 'ஆஶ்ரித காரிய ஆபாதகங்களான' என்றது, அடைந்த அடியார்களுடைய காரியங்களைச்செய்து முடிப்பதற்குரியனவான என்றபடி.

இந்தவிடத்தில், 'புருஷகார பலத்தாலே ஸ்வாதந்தரியம் தலை சாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம். அவையாவன :— வாத்சல்யமும் ஸ்வாமித்வமும் சௌசீல்யமும் சௌலப்யமும் ஞானமும் சக்தியும். குற்றம்கண்டு வெருவாமைக்கு வாத்சல்யம்; காரியம் செய்யுமென்று துணிகைக்குச் சுவாமித்வம்; சுவாமித்வம் கண்டு அகலாமைக்குச் சௌசீல்யம்; கண்டு பற்றுகைக்குச் சௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஞானசக்திகள்' என்ற முமுக்ஷுப்படி சூத்திரங்கள் நினைத்தல் தகும். 136 - 138.

[3] 'மாம்' என்றதனால், வாத்சல்யம் ஸ்வாமித்வம் சௌசீல்யம் சௌலப்யம் என்ற குணங்களும், 'அஹம்' என்றதனால், ஞானம், சக்தி என்ற இரண்டு குணங்களும் குறிப்பிக்கப்படுகின்றன.

ஆகையால், புருஷகார வைபவம் சொல்லுகிறவிடத்தில் 'ஸ்ரீமத்' என்ற பதத்தின் பொருள் வெளிப்படுத்தப்பட்டது போன்று, உபாய வைபவம் சொல்லுகிற இவ்விடத்தில் 'நாராயண' என்ற பதத்தின் பொருள் வெளிப்படுத்தப்பட்டது. உபாயமாகவிருக்கும் தன்மை சொல்லுகையாலே [1]'சரணௌ சரணம் - திருவடிகளை உபாயமாக' என்றதுவும் குறிப்பிக்கப்படுகின்றது.

ஆக, 'இதிகாச சிரேஷ்டம்' என்று தொடங்கி இச்சூத்திரம் முடிய, ஸ்ரீராமாயணத்திலும் மகாபாரதத்திலும் சொல்லப்பட்டவைகளான புருஷகார வைபவமும் உபாய வைபவமும், அதனதனுடைய சொரூபத்தோடு விளக்கமாகச் சொல்லப்பட்டன. (19)

**புருஷகார உபாய வைபவங்கள் முற்றின.**

**பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.**
**மணவாளமாமுனிகள் மலரடி வாழ்க !**
**மாறன் மலரடி வாழ்க !**

1 'சரணௌ சரணம்' என்பது துவயம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# இரண்டாம் பிரகரணம்

## உபாயம்

### 24

**பிரபத்திக்குத் தேச நியமமும் கால நியமமும் பிரகார நியமமும் அதிகாரி நியமமும் பல நியமமும் இல்லை.**

**என்பது சூத்திரம்.**

**அவ :**—மேலே கூறப்பட்ட உபாயமாகிற இறைவனை உபாயமாகப் பற்றுதல் வடிவமாய்ப் ‘பிரபத்தி யுபதேசம் பண்ணிற்றும்’ என்று பிராசங்கிகமாகச் சொல்லிய பிரபத்தியினுடைய படியை விரிவாக அருளிச் செய்கிறார். ‘இனி அவற்றுள் முதலில் அருச்சுனனுக்குப் பிரபத்தியுபதேசம் பண்ணுகிறவளவில், போர்க்களத்திலே ஒரு கால விசேடம் பாராமல் நீராடல் முதலான நியமங்களும்[1] இல்லாமல் இருக்க, உபதேசிப்பான் என்? இப்பிரபத்தி யுபாயத்திற்குத் தேச நியமம், கால நியமம் முதலான நியமங்கள் இல்லையோ?’ என்னும் வினாவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—பிரபத்தியாவது, பகவானை உபாயமாகப் பற்றுதல். தேச நியமமாவது, தூயவிடங்களிலே செய்ய வேண்டும்; மற்றையவிடங்களிலே செய்யலாகாது என்பது. கால நியமமாவது, வேனிற்காலம் முதலான காலங்களிலே செய்ய வேண்டும்; மற்றைய காலங்களிலே செய்யலாகாது என்பது. பிரகார நியமமாவது, நீராடல் கால் கழுவுதல் என்பன முதலானவற்றை முன்னாகக் கொண்டு செய்ய வேண்டும்; வேறு வகைகளாலே செய்ய வொண்ணாது என்பது. அதிகாரி நியமமாவது, முதல் மூன்று வருணத்தவர்கள் அல்லாதவர்களாக இருக்கலாகாது என்பது. பல நியமமாவது, இம்மை மறுமைப்

[1] நியமம் - வரையறை.

பலன்களில் இன்ன பலத்திற்கு இது சாதனம்; மற்றைய பலன் களுக்கு இது சாதனம் அன்று என்பது.

[1]இப்பிரபத்தி, தேசத்தின் உயர்வு தாழ்வுகளின் அடியாகவும் காலத்தின் உயர்வு தாழ்வுகளின் அடியாகவும் வருகின்ற உயர்வு தாழ்வுகளை யுடைத்தாவது ஒன்று அல்லாமையாலே இதற்குத் 'தேச கால நியமம் இல்லை' என்கிறது. தீர்த்தத்திலே நீராடு கின்றவர்கள் சுத்தர் அசுத்தர் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லாரும் நீராடுமாறு போலே, இயல்பாகவே தூயதாய், சுத்தர் அசுத்தர் என்னும் வேறுபாடு இல்லாமல் எல்லாரும் தன்னோடு சேரலாம்படி இருக்கையாலே 'பிரகார நியமம் இல்லை' என்கிறது. வருணம் ஆச்ரமம் என்பனவற்றிற்குச் சேர்ந்ததா யிருப்பது ஒன்று அன்றிக்கே ஆன்ம சொரூபத்திற்குச் சேர்ந்ததா யிருப்பது ஒன்று ஆகையாலே 'அதிகாரி நியமம் இல்லை' என்கிறது. ஆன்மாக்களுடைய ருசிக்குத் தகுதியான பலன் களுக்குச் சாதனமாவது ஒன்று ஆகையாலே 'பல நியமம் இல்லை' என்கிறது.

[2]"இந்த (பிரபத்தி) உபாயமானது அந்தணர் அரசர் முதலிய சாதி வேறுபாட்டினை விரும்பாது, குல பேதத்தையும் விரும் பாது, இல்லறம் துறவறம் என்கிற தர்ம பேதத்தையும் விரும் பாது, தூய்மை முதலிய குணங்களையும் நீராட்டம் முதலிய செயல்களையும் விரும்பாது, புண்ய தேசத்தையும் புண்ய காலத் தையும் விரும்பாது, வயது முதலான நிலை வேறுபாடுகளையும் விரும்பாது, அந்தணர் அரசர் வணிகர் சூத்திரர் பெண்கள் அந்தரசாதிகள் முதலான எல்லாரும் எல்லாப் பொருள்களையும் படைத்த அச்சுதனாகிய இறைவனை அடைவார்கள்," என்று

---

1 பிரபத்திக்குத் தேச நியமம் முதலியன இல்லாமையை விளக்கு கிறார், 'இப்பிரபத்தி' என்று தொடங்கி.

2 பிரபத்திக்கு மேலே கூறிய நியமங்கள் இல்லை என்று தாம் கூறிய தற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'இந்தப் பிரபத்தி உபாயமானது' என்று தொடங்கி.

நஜாதி பேதம் நகுலம் நலிங்கம் நகுணக்ரியா:
நதேசகாலௌ நாவஸ்தாம் யோகோஹ்ய யமபேக்ஷதே
ப்ரஹ்மக்ஷத்ரவிஶ:ஶூத்ரா: ஸ்திரியஶ்சாந்தரஜாதய:
ஸர்வஏவ ப்ரபத்யேரந் ஸர்வதாதாரம் அச்யுதம்

என்பது பரத்துவாச சம்ஹிதை.

பிரபத்திக்குத் தேச நியமமின்மை, கால நியமமின்மை, பிரகார நியமமின்மை, அதிகாரி நியமமின்மை என்னும் இவைகள் பாரத்வாச சம்ஹிதையிலும், [1]"பிரபத்திக்குக் கர்மம் முதலிய வைகளைப் போன்று வேறு துணையை விரும்புதல் ஒரு பொழுதும் இல்லை. அந்தப் பிரபத்தியோ என்றால், எல்லாத் தேசங்களிலும் எல்லாருக்கும் ஆசைப்பட்ட எல்லாப் பலன்களையும் கொடுக்கும்" என்று பல நியமம் இல்லாமை சநத்குமார சம்ஹிதையிலும் சொல்லப்பட்டன. (1)

## 25

**விஷய நியமமே உள்ளது.**

என்பது சூத்திரம்.

**அவ:—**'இவை இல்லையாகில், வேறு சில நியமங்கள்தாம் இதற்கு உண்டோ!' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:—**'விஷய நியமமே உள்ளது' என்றது இன்ன விஷயத்திலே செய்ய வேண்டும் என்னும் நியமமே இந்தப் பிரபத்திக்கு உள்ளது என்றபடி. இவையெல்லாவற்றையும் பிள்ளை இவர் [2]தாமே எடுத்து விரித்து அருளிச் செய்கிறாரிறே. (2)

## 26

**கர்மத்துக்குப் புண்ய க்ஷேத்ரம் வசந்தாதி காலம் [3]சாஸ்த்ரோக்தங்களான தத்தத் பிரகாரங்கள் திரை வர்ணிகர் என்றிவையெல்லாம் விய வஸ்திதங்களாயிருக்கும்.**

என்பது சூத்திரம்.

---

[1] ப்ரபத்தே: க்வசிதப்யேவம் பராபேக்ஷா நவித்யதே
ஸா ஹிஸர்வத்ர ஸர்வேஷாம் ஸர்வகாம பலப்ரதா
என்பது, சனத்குமார சம்ஹிதை.

[2] 'தாமே...அருளிச் செய்கிறார்' என்றது, 27ஆம் சூத்திரம் முதல் மேலே அருளிச் செய்கிறார் என்றபடி.

[3] சாஸ்த்ர உக்தங்களான - சாஸ்திரங்களால் சொல்லப்பட்டவை களான. தத்தத் - அந்த அந்த. திரை வர்ணிகர் - முதல் மூன்று சாதியினர். வியவஸ்திதங்கள் - அறுதியிடப்பட்டவைகள்.

அவ :—'இதற்கு இவையெல்லாம் இல்லையாகில், பின்னை எதற்கு இவையெல்லாம் உண்டு?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—கர்மமாவது ஜோதிஷ்டோமம் முதலானவைகள். புண்ய க்ஷேத்திரங்களாவன, சாஸ்திரங்களில் தூயனவாகச் சொல்லப்படுகின்ற இடங்கள். [1]'வசந்தாதி காலம்' என்றவிடத்து 'ஆதி' என்றதனால் முதுவேனிற்காலம் கார் காலம் கிருஷ்ண பக்ஷம் சுக்கிலபக்ஷம் காலைப்பொழுது மாலைப்பொழுது என்னும் இக்காலங்களையும் கொள்க. [2]"ஒவ்வொரு இளவேனிற்காலத்திலும் ஜோதிஷ்டோமம் என்னும் யாகத்தைச் செய்யவேண்டும்" என்பது போன்றவைகளாலே கால நியமம் சொல்லப்படா நின்றதிறே. சாஸ்திரோக்தங்களான தத்தத் பிரகாரங்களாவன : கால் கழுவுதல், ஆசமனம் செய்தல், நீராடுதல், விரதமிருத்தல், ஜபம் செய்தல் முதலான தன்மைகளோடு அந்த அந்தக் கருமங்களுக்குத் தகுதியாகச் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட அந்த அந்த வகைகள். [3]'திரை வர்ணிகர்' என்றது, உபநயனம் செய்தல் முன்னாக வேத அதிகாரிகளானவர்களுக்கே வைதிக கர்மங்களைச் செய்வதற்கு அதிகாரமுள்ளதாகையாலே. திரை வர்ணிகரைக் கூறியது, இல்லறத்திலிருப்பவர்களாக இருத்தல், கறுத்த மயிர் முடியோடு கூடியவர்களாக இருத்தல், வேத வேதாங்கங்களை அறிந்தவர்களாகவிருத்தல் முதலானவற்றிற்கும் உபலக்ஷணம். 'வியவஸ்திதங்களாக இருக்கும்' என்றது, நியதங்களாக இருக்கும் என்றபடி. (3)

## 27

"ஸ ஏஷ தேச: கால:" என்கையாலே
இதற்குத் தேச கால நியமம் இல்லை.

என்பது சூத்திரம்.

---

[1] வசந்தம் - இளவேனிற்காலம்.

[2] கால நியமத்திற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஒவ்வொரு' என்று தொடங்கி. "வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத" என்பது பிரமாணம்.

[3] முதல் மூன்று வருணத்தாரைக் கூறியதற்குக் காரணம் கூறுகிறார், 'திரை வர்ணிகர்' என்று தொடங்கி.

**அவ :**—பிரபத்திக்கு இவை ஒன்றும் இல்லை என்று மேலே கூறியதனை எடுத்து விளக்குவதற்குத் தொடங்கினவராய் முதலில் **தேச நியமம்,** கால நியமம் இன்மையை எடுத்து விளக்குகிறார் **இச்சூத்திரத்தால்.**

**வியாக் :**—"ஸ ஏ ஷ தேசஃகாலஃ.........இல்லை"[1] என்றது, [2]"**வன்பகை**யுடையவனும் மகா பாவியாயும் இருக்கிற இரா**வணனிடத்தி**லிருந்து இடம் அல்லாத இடத்திலும் காலம் **அல்லாத** காலத்திலும் வந்தான்; ஆதலால், முற்றிலும் ஐயப்**படத் தக்கவனு**கிறான்" என்று ஜாம்பவானும் மகா ராஜரும் முன்பு பெருமாளுக்கு விண்ணப்பம் செய்தபடியை மறுக்கிற **திருவடி,** [3]"அந்த (இராவணனால் தாழ்வுபடுத்தப்பட்டவனான) **இந்த** விபீடணன் இடமல்லாத இடத்தில் காலம் அல்லாத **காலத்தில்** வந்தான் என்ற இவ்விஷயத்தில் சொல்ல வேண்டும் **என்கிற** இந்த இச்சையானது எனக்கு இருக்கிறது. அந்த **விபீஷணன்** இவ்விடத்தில் வந்த இவ்வரவிற்குத் தக்க காலமும் தேசமும் இதுவேயாகும் என்பதனை நான் அறிந்த அளவும் சொல்ல விரும்புகிற என் விருப்பத்தை அறிந்துகொள்ள வேண்டும்; ஆடவர்களுள் தாழ்ந்தவனான இராவணனைக் காட்டிலும் புருடோத்தமரான தேவரீரை அடையத் தக்கவராக

[1] **இது,** ஸ்ரீராமாயணத்தில் விபீஷணன் சரணாகதி செய்த காலத்தில் **திருவடியினுல்** சொல்லப்பட்டது. 'ஸ ஏ ஷ தேசஃ காலஃ' என்பதற்கு '**இதுவே தேசமும் இதுவே காலமும்**' என்பது பொருள். 'என்கை**யாலே' என்றது, ஸ்ரீராமாயணத்தில்** திருவடி சொல்லுகையாலே **என்றபடி.**

[2] **பத்தவைராச்ச** பாபாச்ச ராக்ஷஸேந்த்ராத் விபீஷணஃ
**அதேசகாலே** ஸம்ப்ராப்தஃ ஸர்வதா ஶங்க்யதாமயம்.
**என்பது, ஸ்ரீராமா.** யுத். 17:57.

**மகாராசர் - சுக்கிரீவன்.** இப்பெயரால் இவரை வழங்குதல் **வைணவப்** பெருமக்கள் மரபு.

[3] **அதேசகாலே** ஸம்ப்ராப்தஃஇதிஅயம் ஸ விபீஷணஃ
**விவக்ஷாசாத்ர**மேஸ்தீயம் தாம் நிபோத யதாமதி
ஸ ஏ ஷ தேஶஃ சாலஶ்ச பவதீஹ யதாததா
புருஷாத்புருஷம் ப்ராப்ய ததாதோஷ குணவபி
தௌராத்ம்யம் ராவணே த்ருஷ்ட்வா விக்ரமம் சததாத்வயி
யுக்தமாகமநம் தஸ்ய ஸத்ருஶம் தஸ்ய புத்திதஃ
என்பது, ஸ்ரீராமா. யுத். 17:46

எண்ணி, அப்படியே இராவணனிடத்தில் சேர்ந்திருப்பதனால் வரும் குற்றத்தையும் தேவரீரை அடைந்தால் வரும் குணத்தையும் எண்ணி, இராவணனிடத்திலுள்ள தீய தன்மைகளையும் அப்படியே தேவரீரிடத்துள்ள ஆண் பிள்ளைத் தனத்தையும் பார்த்து வந்தவனாகையாலே, அந்த விபீஷணனுக்கு இந்த வரவு பொருத்தமானதே, அவனுடைய அறிவிற்கும் இது தக்கதேயாம்'' என்கிறபடியே இராவணனால் தாழ்வுபடுத்தப்பட்டவனாய்த் தன் தாழ்வினை முன்னிட்டுக்கொண்டு அடைக்கலம் என்று வந்த ஸ்ரீ விபீஷணாழ்வான் தேசமல்லாத தேசத்திலே காலமல்லாத காலத்திலே வந்தான் என்று தேவரீருடைய மந்திரிகளாலே யாதொன்று சொல்லப்பட்டது, இந்த விஷயத்தில் சிறப்பாக எனக்கு இப்படிச் சொல்ல விருப்பம் உண்டாகாநின்றது. அவன் வருகிறவளவில் யாதொரு தேசத்திலே யாதொரு காலத்திலே வந்தான், அவன் வரவிற்கு அந்த இதுவே தேசமும் அந்த இதுவே காலமுமாய், யாதொருபடி, அப்படிப்பட்ட விருப்பத்தை நான் அறிந்தவளவு விண்ணப்பம் செய்யக் கேட்டருள வேண்டும்.

'யாங்ஙனம்?' என்னில், தமோகுணம் மிக்கவனாகையாலே, பிற உயிர்களைத் துன்புறுத்துவதே தொழிலாகக் கொண்டவனான இராவணனைக்காட்டிலும் சத்துவகுணம் மிக்கவராகையாலே பிற உயிர்களைப் பாதுகாத்தலையே தொழிலாகக் கொண்ட தேவரீரை அடையத்தக்கவராக எண்ணி, அப்படியே, அவனை விட்டு நீங்காதொழிந்தால் அவனுடைய தீய செயலுக்குத் துணையாய் அப்பகைமையோடே முடிந்து போகையாகிற குற்றத்தையும், தருமத்தைச் செய்கின்றவரான தேவரீரோடேகூடப்பெற்றால் அதன் பலமான தேவரீர் திருவடிகளிலே கைங்கரியத்தை அடைந்து வாழுகையாகிற நன்மையையும் எண்ணி, அப்படியே தேவரீர் திருவுள்ளத்திலே புண்படும்படி குற்றத்தைத் தீரக் கழியச்செய்து நிற்கிற இராவணனுடைய தீய தன்மையையும், தீயோர்களை வருத்தம் சிறிதுமின்றி அழிக்கவல்ல தேவரீருடைய ஆண் பிள்ளைத்தனத்தையும் கண்டால், அறிவுள்ள அவனுக்கு இவ்வரவு தக்கது; நியாயத்திலே செல்லுகின்றவனுடைய அறிவிற்கும் இது ஒத்தது என்றானிறே.

ஆக, இப்படி மனத் தூய்மையையுடையவனான ஸ்ரீ விபீஷணாழ்வான் சரணம் என்று வந்த தேசத்திலும் காலத்திலும் குறை பார்க்கக் கடவதன்று; அவன் வந்ததுவே தேசமும், அவன்

வந்ததுவே காலமும் என்று, சரணாகதி தர்மத்தை அறிந்தவனை [1]திருவடி நிச்சயிக்கையாலே, பிரபத்திக்குத் தேசகாலநியமம் இல்லை என்கை. (4)

## 28

இவ்வர்த்தம் மந்திர ரத்தினத்தில் பிரதம பதத்தில் ஸுஸ்பஷ்டம்.[2]

என்பது சூத்திரம்.

அவ :—இதுதான், பிரபத்தி செயல்வடிவான துவயம் என்னும் மந்திரத்தில் முதல் பதத்திலே காணலாம் என்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'இவ்வர்த்தம் மந்திர ரத்தினத்தில்' என்றது, எல்லா உபநிடதங்களினுடைய சாரமாய் எல்லாருக்கும் உரியதாய் விரைவில் பலத்தைக் கொடுக்கக்கூடியதாய்ச் சர்வேச்வரனுக்கு மிகவும் உகப்பானதாய் இருக்கையாலே மற்றைய மந்திரங்கள் எல்லாவற்றிலும் உயர்ந்ததாகையாலே [3] "மந்திரங்களுக்குள் சிறந்ததான துவயத்தினாலே" என்கிறபடியே மந்திர ரத்தினம் என்னும் பெயர் உடையதாயன்றோ துவயந்தான் இருப்பது? அந்தச் சிறப்புத் தோற்றுகைக்காகத் 'துவயம்' என்னாமல் 'மந்திர ரத்தினம்' என்கிறார் என்றபடி. 'பிரதமபதத்தில் ஸுஸ்பஷ்டம்' என்றது, அதில் முதல் பதத்தில் 'மதுப்' என்றதன் பொருளான, புருஷகாரமான பிராட்டியும் உபாயமான பெருமாளும் ஆகிய இவர்களுடைய நித்திய சேர்க்கைக்குப் [4]பயன், யாதேனும் ஒரு தேசத்திலே, யாதேனும் ஒரு காலத்திலே, இவ்வுலக மக்களுள் ஒருவருக்குப் பகவானை அடைய வேண்டும் என்ற ருசி உண்டானால் [5]"மனமானது சஞ்சலத்தை

---

[1] திருவடி - அநுமான்.

[2] இவ்வர்த்தம் - பிரபத்திக்குத் தேச நியமமும் கால நியமமும் இல்லை என்னும் இப்பொருள். மந்திரரத்தினம் - துவயம். பிரதமபதம் - 'ஸ்ரீமத்' என்னும் பதம். ஸுஸ்பஷ்டம் - மிக்க தெளிவு.

[3] "த்வயேந மந்த்ர ரத்நேந" என்பது பிரமாணம்.

[4] 'பயன்' என்னும் இச்சொல்லை, பின்னே வருகின்ற 'இறைவனைப் பற்றுதலாயிருத்தலிறே' என்றதனோடு கூட்டுக.

[5] "சஞ்சலம் ஹிமந:" என்பது ஸ்ரீகீதை, 6 : 34

யுடையதாய் இருக்கிறது" என்றும், [1]"நின்றவா நில்லா நெஞ்சு" என்றும் சொல்லுகிறபடியே சூறுவளிக் காற்றுப் போலே சுழன்று வருகின்ற நெஞ்சு இடமாகத் தோன்றிக் கண நேரத்தில் அழியக்கூடியதான ருசி தீருவதற்கு முன்னே, அது தோன்றிய நேரத்திலே இறைவனைப் பற்றுதலாயிருத்தலிறே.

ஆகையால், பிரபத்தியினுடைய தேசநியமமின்மையும் காலநியமமின்மையும் அப்பதத்திலே நன்ருகத் தோன்றும் என்கிருர். (5)

## 29

பிரகார நியதி இல்லை என்னுமிடம் எங்கும் காணலாம்.[2]

என்பது சூத்திரம்.

அவ :—பிரகார நியமம் இன்மையைக் காட்டுகிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'பிரகாரநியதி இல்லை என்னுமிடம் எங்கும் காணலாம்' என்றது, இப்பிரபத்தி உபாயத்தை அநுஷ்டிக்கின்றவர்கள் கேட்கின்றவர்கள் ஆகிற எல்லார் பக்கலிலும் காணலாம் என்றபடி. (6)

## 30

திரௌபதி [3]ஸ்நாதையாயன்றே பிரபத்தி பண்ணிற்று! அருச்சுனன் நீசர் நடுவேயிறே இவ்வர்த்தம் கேட்டது?

என்பது சூத்திரம்.

அவ :—'பிரகார நியதி இல்லை என்னுமிடம் எங்கும் காணலாம்' என்றதனை, முன்னே கூறப்பட்ட விஷயங்களி

---

[1] பெரிய திருமொழி, 1.1:4.

[2] காணலாம் ஆற்றினை அடுத்த சூத்திரத்தில் அருளிச்செய்கிருர்.

[3] ஸ்நாதையாயன்றே - நீராடியவளாக அல்லவே? என்றது, பூப்பு நிகழ்ந்திருந்த காலத்தில் என்றபடி. நைமித்திக நீராட்டமின்மையைக் குறித்தது.

னின்றும் உதாரணம் எடுத்துக்காட்டி விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'திரௌபதி ஸ்நாதையாய் அன்றே பிரபத்தி பண்ணிற்று?' என்றது, துச்சாதனனால் இழுத்துக்கொண்டு வரப்படுகின்றவளாய்ச் சபைக்கு வருகிற போது [1]"நான் இப்போது பூப்பு நிகழ்ந்தவளாயும் ஓர் ஆடையை அணிந்தவளாயும் இருக்கிறேன்; என்னை இப்போது அழைத்துக்கொண்டு போவது தக்கதன்று; குருக்களின் முன்னிலையிலும் சபையிலும் இருப்பதற்கு நான் உடன்படமாட்டேன்" என்கிறபடியே சுத்தமில்லாதவளாயிருக்கிறவள் நீராடிய பின்பு அல்லவே பிரபத்தி பண்ணியது என்றபடி. இதனால், பிரபத்தி பண்ணுவார் தூயராய் நின்று பிரபத்தி செய்யவேண்டும் என்னும் நியதி இல்லாமை காட்டப்பட்டது.

'அருச்சுனன் நீசர் நடுவேயிறே இவ்வர்த்தம் கேட்டது?' என்கிற இவ்விடத்தில் 'நீசர்' என்கிறது, [2]"நெடுந்தகையை நினையாதார் நீசர்தாமே" என்று ஆழ்வார் அருளிச் செய்தவாறே கிருஷ்ணனிடத்தில் பக்தி இல்லாத கீழ்மக்களை. [3]"விஷ்ணு பக்தியில்லாதவன் சந்நியாசியாகவிருந்தாலும் அவன் விஷ்ணு பக்தியையுடைய நீசனைக்காட்டிலும் தாழ்ந்தவன்" என்றும், [4]"பன்னிரண்டு குணங்களோடு கூடினவனாயும், திருவுந்தித் தாமரையையுடைய இறைவனுடைய திருவடித்தாமரைகளில்

---

[1] ரஜஸ்வலைக வஸ்த்ராஹம் நதுமாம் நேதுமர்ஹஸி
குரூணும்சபுரः ஸ்தாதும் ஸபாயாம் நாஹமுத்ஸஹே.

என்பது பாரதம் சபா பர். இது பிரபத்தி பண்ணுகிற காலத்தில் நீராடாமல் இருந்தாள் என்பதற்கு மேற்கோள். 'ஸ்நாதையாய் அன்றே' ரஜஸ்வலையாய் என்பது சூத்திரத்திற்குப் பொருளாம். இடக்கரடக்கல் பற்றி 'ஸ்நாதையாய் அன்றே' என்றது என்க.

[2] பெரிய திருமொழி, 11.6:8.

[3] கிருஷ்ணனிடத்தில் பத்தியில்லாதவர்கள் நீசர்கள் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'விஷ்ணு பக்தி' என்று தொடங்கி.

"விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாதமः"

என்பது, பிரமாணம்,

[4] "விப்ராத் த்விஷட் குணயுதாத் அரவிந்தநாப
பாதாரவிந்த விமுகாத் ஶ்வபசம் வரிஷ்டம்"

என்பது, ஸ்ரீபாகவதம்.

பக்தி இல்லாதவனுயுமிருக்கிற பிராமணனைக்காட்டிலும் விஷ்ணு பக்தனுன கீழ்மகன் சிறந்தவனுவான்" என்றும் பகவானிடத்தில் பக்தி இல்லாதவனைக் கீழ்மகனைக்காட்டிலும் தாழ்ந்தவனுகச் சொல்லிற்றிறே.

[1] அதற்கு மேலே சரணுகதியைச் செய்தவளான திரௌபதியைப் பரிபவித்தும், சரணுகதியைச் செய்தவர்களான பாண்டவர்கள் திறத்திலே தீங்குகளைச் செய்தும் போருகையாலே [2] "என்னுடைய பக்தர்களை வைகிற பிராமணன் உடனே சண்டாளத்தன்மையை அடைவான்" என்கிற கர்மசண்டாளர்களிறே கைகலந்து நிற்கிறது.

'நீசர் நடுவே' என்கையாலே நீசர்களுடைய சம்பந்தத்தாலே இவனுக்கு உண்டான தூய்மை இன்மையும், நீசர்கள் பக்கத்திலே என்னுமிடமும் தோற்றுகிறது. இத்தால், பிரபத்தியைக் கேட்கும்போது நீசர்கள் நடுவில் ஆகாது என்னும் நியதி இல்லாமை காட்டப்பட்டது. (7)

## 31

**ஆகையால் சுத்தி அசுத்திகள் இரண்டும் தேடவேண்டா; இருந்தபடியே அதிகாரியாமித்தனை.**

என்பது சூத்திரம்.

அவ:—மேலே கூறிப்போந்தவற்ருல் போதரும் பொருளைச் சொல்லாநின்றுகொண்டு இப்பொருளை [3] நிகமிக்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'ஆகையால்' என்றது, அநுஷ்டான நிலையிலும் கேட்கிற நிலையிலும் இவர்கள் இருவரும் இப்படிச் செய்கையால்

---

[1] போர்க்களத்தில் நிற்கும் நீசர்களின் கர்ம சண்டாளராம் தாழ்வினை மேலும் அருளிச்செய்கிருர் 'அதற்கு மேலே' என்று தொடங்கி.

[2] "மத்பக்தாந் ஶ்ரோத்ரியோ நிந்தந்
ஸத்ய: சண்டாலதாம் வ்ரஜேத்"

என்பது பிரம்மாண்ட புராணம்.

[3] நிகமித்தல் - முடித்தல்.

என்றபடி. ‘சுத்தி அசுத்திகள் இரண்டும் தேடவேண்டா’ என்றது, பிரபத்தியைச் செய்யத் தொடங்குமளவில் தூய்மை யில்லாதவனாயிருக்குமவனுக்குத் தூய்மை சம்பாதிக்கவேண்டா; தூயனாயிருக்குமவனுக்குத் தூய்மையின்மை சம்பாதிக்க வேண்டா என்றபடி.

[1] ‘அசுத்தி தேடவேண்டா’ என்றது, மேலே கூறப்பட்டவர்கள் [2] இருவரும் தூய்மை இல்லாதவராகவிருந்த நிலையிலே பிரபத்தியைச் செய்தும் கேட்டும் போந்தமையைச் சொல்லுகை யாலே, தூய்மையின்மைதான் இதற்கு வேண்டுமோ என்று ஐயம் கொள்ளாமைக்காக.

‘இருந்தபடியே அதிகாரியாமித்தனை’ என்றது, பிரபத்தி செய்யுங் காலத்தில் தூய்மையில்லாதவனாதல் தூயனாதல் யாதொருபடியிருந்தான், இருந்ததொரு வகையிலே இப்பிரபத்திக்கு அதிகாரியாமித்தனை என்றபடி. [3] திரௌபதியும் அருச்சுனனும் பிரபத்தியைச் செய்யும் நிலையிலும் அதனைக் கேட்கும் நிலையிலும் அதற்கு உறுப்பாகத் தூய்மையைத் தேடாததைப் போன்று, தூய்மையின்மையையும் தேடிக் கொண்டமை இல்லையே, இருந்தபடியே அதிகாரிகள் ஆனார்கள் இத்தனையே. (8)

## 32

**இவ்விடத்திலே வேல்வெட்டிப் பிள்ளைக்குப் பிள்ளை அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

என்பது சூத்திரம்.

**அவ:**—இங்குக்கூறிய இப்பொருள் விஷயமாகப் பெரியார் வார்த்தையை நினைப்பூட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] ‘‘சுத்தி தேட வேண்டா’ என்றது பொருந்தும்; ‘அசுத்தி தேட வேண்டா’ என்றது என்?’ என, அதற்கு விடை அருளிச் செய்கிறார் ‘அசுத்தி’ என்று தொடங்கி.

[2] ‘இருவர்’ என்றது, திரௌபதியையும் அருச்சுனனையும்.

[3] ‘இருந்தபடியே அதிகாரியாமித்தனை’ என்றதனை விளக்குகிறார் ‘திரௌபதியும்’ என்று தொடங்கி.

**வியாக் :**—அதாவது, [1]'வேல்வெட்டிப்பிள்ளை' பெருமாள் கடலைச் சரணம் புகுகிறவிடத்தில் 'கிழக்கு முகமாகவிருத்தல்' முதலான நியமங்களோடு கூடினவராய்ச் சரணம் புகுருகையாலே, [2]மற்றைய உபாயங்களைப்போன்று, பிரபத்திக்கும் சில நியமங்கள் வேண்டியிருக்கின்றவோ?' என்று நம்பிள்ளையைக் கேட்க, பெருமாள்பக்கல் கண்ட இந்நியமம் இவ்வுபாயத்திற்கு உடன்வந்தியாய் இருப்பது ஒன்றன்று; பிரபத்தியைச் செய்தவருடைய இயல்பால் வந்ததித்தனை; பெருமாளுக்கு [3]"அரசரான ஸ்ரீ ராகவன் கடலைச் சரணம் அடைவதற்குத் தகுந்தவர் ஆகிறார்" என்று உபதேசித்தவன் ஸ்ரீ விபீஷணாழ்வானிறே. அவன்தான், பெருமாளைச் சரணம் புகுகிறவிடத்தில் 'கடலில் ஒரு முழுக்கிட்டு வந்தான்' என்று [4]இல்லையே? இதனால் சொல்லிற்றாயிற்றது, பெருமாள் இக்ஷ்வாகு குலத்தினராய் ஆசாரத்தை முக்கியமாகக் கொண்டவராய் இருக்கையாலே தம்முடைய நியமங்களோடே சரணம் புக்கார்; இவன் இராக்கத சாதியினன் ஆகையாலே நின்ற நிலையிலே சரணம் புக்கான். ஆகையாலே, தகுதியில்லாதவனுக்குத் தகுதியைத் தேட வேண்டா; தகுதியுள்ளவனுக்குத் தகுதியின்மையைத் தேட வேண்டா; நின்ற நின்ற நிலைகளிலே அதிகாரிகளாமித்தனை என்று அருளிச் செய்த வார்த்தை. (9)

## 33

அதிகாரி நியமம் இன்றிக்கே ஒழிந்தபடி என்? என்னில்.[5]

என்பது சூத்திரம்.

**அவ :**—பின்னர் அதிகாரி நியமம் இல்லாமையை விளக்குவதற்கு, அதனை அறிய விரும்புமவனுடைய வினாவினை

---

[1] 'வேல் வெட்டிப் பிள்ளை' என்பவர் நம்பிள்ளைக்கு மாணாக்கர். பிள்ளை - நம்பிள்ளை. ஸ்மரிப்பது - நினைப்பது.

[2] மற்றைய உபாயங்கள் - பத்தி முதலான உபாயங்கள்.

[3] "ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி" என்பது, ஸ்ரீராமா. யுத். 19:31.

[4] 'இல்லையே' என்றது, ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்படவில்லையே என்றபடி.

[5] இதுவும் மேல் வரும் சூத்திரமும் ஒரு சூத்திரமாகத் தரப்பட்டிருக்கின்றன, முன்னைய அச்சுப் புத்தகங்களில்.

அநுவதிக்கிறார், 'அதிகாரி நியமம் இன்றிக்கே ஒழிந்தபடி என் என்னில்?' என்று. (10)

## 34

தருமபுத்திராதிகளும், திரௌபதியும், காகமும், காளியனும், ஸ்ரீ கஜேந்திராழ்வானும், ஸ்ரீ விபீஷணாழ்வானும், பெருமாளும், இளைய பெருமாளும் தொடக்கமானவர்கள் சரணம் புகுருகையாலே அதிகாரி நியமம் இல்லை.

என்பது சூத்திரம்.

**அவ:** 'தர்மபுத்திராதிகளும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:—**தருமபுத்திராதிகளும்—[1] "ஏ ஜநமேஜயநே, இந்த விதமாகச் சொல்லப்பட்டவர்களான குந்திபுத்திரர்கள் மூவரும் நகுலசகதேவர்களும் ஆன எல்லாரும் திரௌபதியோடு கூடினவர்களாய்க்கொண்டு கண்ணபிரானை வணங்கினார்கள்" என்று அரசர்களான தருமன் முதலானவர்களும்,

திரௌபதியும், [2] "திருச்சங்கு திருவாழி கதை முதலானவை களைக் கரங்களில் தரித்திருப்பவனே, துவாரகையில் எழுந்தருளியிருப்பவனே, அடியார்களை ஒருபொழுதும் நழுவவிடாதவனே, கோவிந்தனே, செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனே, புகல்புகுந்த என்னைக் காப்பாற்றுவாயாக" என்று பெண்பாலான திரௌபதியும்,

காகமும்—[3] "தாய்தந்தையர்களாலும் முனிவர்களாலும் தேவர்களாலும் கைவிடப்பட்ட அந்தக் காகாசுரன், மூன்று

[1] ஏவமுக்தா: ஸ்த்ரிய: பார்த்தா: யமௌச பரதர்ஷப
த்ரௌபத்யா ஸஹிதாஸ் ஸர்வே நமஸ்சக்ருர்ஜநார்தநம்.
என்பது, பாரதம்.

[2] 'ஶங்கசக்ர கதாபாணே த்வாரகா நிலயாச்யுத
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாகதாம்'
என்பது பாரதம் சபா பர்.

[3] 'ஸபித்ராச பரித்யக்த: ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:
த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவஶரணம் கத:'
என்பது ஸ்ரீராமா. சுந். 38 : 26.

உலகங்களையும் நன்றாகத்திரிந்து அந்தப் பெருமாளையே புகல் புகுந்தான்'' என்று தேவ உருவத்தை மறைத்துவந்து மிகப் பெரிய பாவத்தைச் செய்த காகமும்,

காளியனும்—[1] "ஏ தேவ தேவர்களுக்கும் தலைவனே, அத்தகைய நான் தேவரீரை அருச்சித்தல் முதலிய காரியங்களில் ஆற்றல் இல்லாதவன்; துதிசெய்வதற்கும் ஆற்றல் இல்லாதவன்; ஆகையால், உன்னுடைய பேரருளாலேயே எனக்குத் திருவுள்ளம் உகந்து திருவருள் புரியவேண்டும்,'' என்று பாம்பு சாதியின னும் பகைவனுமான காளியனும்,

ஸ்ரீ கஜேந்திராழ்வானும்—[2] "கைங்கரியமாகிற செல்வத்தை யுடையவனும் நாராயணனையே தியானித்துக்கொண்டிருப்பவ னும் ஆன அந்தக் கஜேந்திராழ்வான் மிகப்பெரிய ஆபத்தை அடைந்தவனாய் மனத்தினாலே, விரோதியைப் போக்கும் தன் மையனான பகவானை நினைத்தான்,'' என்று விலங்குப் பிறவியில் பிறந்தவனுமாய் அநுகூலனுமான ஸ்ரீ கஜேந்திராழ்வானும்,

ஸ்ரீ விபீஷணாழ்வானும்—[3] "இராவணனுக்கு நலத்தைக் கூறிய அத்தகைய நான், இராவணனால் கடுஞ்சொற்கள் சொல்லப்பட்டவனாய்ப் பணியாளனைப் போன்று தாழ்வுபடுத்தப் பட்டவனாய், மக்களையும் மனைவியையும் விட்டு, இராகவனைச் சரணமாக அடைந்தேன்,'' என்று இராக்கதர் குலத்தவனான ஸ்ரீ விபீஷணாழ்வானும்,

பெருமாளும்—[4] "பாம்பின் உடல் போன்று இருக்கின்ற திருக்கரத்தைத் தலையணையாகக்கொண்டு, பகைவர்களை அழிப்ப

[1] 'ஸோஹம்தே தேவதேவேஶ நார்ச்சநாதௌ ஸ்துதௌநச
ஸாமர்த்யவாந் க்ருபாமாத்ர மநோவ்ருத்திঃ ப்ரஸீதமே'
என்பது, ஸ்ரீ விஷ்ணு பு. 5.7:10.

[2] 'பரமாபத மாபந்நோ மநஸாசிந்தயத்ஹரிம்
ஸதுநாகவரঃ ஶ்ரீமாந் நாராயண பராயணঃ'
என்பது, ஸ்ரீ விஷ்ணு தர்மம். 69 : 80.

[3] 'ஸோஹம் பருஷிதঃ தேந தாஸவச் சாவமாநிதঃ
த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம்ஶரணம்கதঃ'
என்பது, ஸ்ரீராமா. யுத். 17 : 16.

[4] 'பாஹும்புஜக போகாபமுபதாயாரிஸூதநঃ
அஞ்ஜலிம் ப்ராங்முகঃ க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததேঃ'
என்பது ஸ்ரீராமா. யுத். 21 : 1.

வரான ஸ்ரீ ராமபிரான், கிழக்கு முகமாகக் கையைக் கூப்பிக் கொண்டு, கடலை நோக்கிச் சயனித்தார்,'' என்று எல்லா உயிர் களுக்கும் புகலிடமாகவிருக்கிற பெருமாளும்,

இளையபெருமாளும்—[1] '' மிக்க சீர்த்தியையுடையவரான அந்த இளைய பெருமாள், தமையனுடைய திருவடிகளை உறுதி யாகப் பிடித்துக்கொண்டு சத்தியவிரதனான ஸ்ரீ ராமபிரானைப் பார்த்தும் சொன்னார், சீதாபிராட்டியைப் பார்த்தும் சொன்னார்'' என்று பரமபதத்திலிருப்பவராய்த் தொடர்ந்து அடிமை செய்ய வந்த இளைய பெருமாளும்,

இனி, 'தொடக்கமானவர்கள்' என்கையாலே, [2] '' எவன் ஒருவனைப் பற்ற மேலான புருஷார்த்தம் இல்லையோ, அந்தமையனான அளவிறந்த பெருமையையுடைய உன்னை, பிறவித் துன்பத்தால் கொதித்த மனத்தினையுடையவனாய், நல்ல ஒளியையுடைய பரமபதத்திலே ஆசையுடையனான யான் சரணமாக அடைந்தேன்,'' என்று முசுகுந்தனும்,

[3] '' இவன் அறியாதவன்; சிறிய அறிவினையுடையவன்; சிறிய செயலைச் செய்கிறவன். இவனுடைய மனமானது தீய செயல்களில் பரந்துள்ளது. என்னிடத்திலும் சிறிதும் அன்பில்லாதவன் என்று நினைத்து, அனைவருக்கும் தலைவனே, தேவதேவனே, இந்தவிதமாகச் சேவித்துக்கொண்டிருக்கிற என்னிடத்தில் திருவருளைச் செய்ய வேண்டும். பிரமனுங்கூட

[1] இந்தச் சுலோகத்தை மேலே காண்க.

[2] 'ஸோஹம்த்வாம் ஶரணமபார மப்ரமேயம்
ஸம்ப்ராப்தঃ பரமபதம் யதோ நகிஞ்சித்
ஸம்ஸார ஶ்ரம பரிதாப தப்தசேதா
நிர்வாணே பரிணததாம்நி ஸாபிலாஷঃ'

என்பது, ஸ்ரீபாகவதம், 10:51.

[3] 'மூடோய மல்பமதிரல்ப விசேஷ்டிதோயம்
க்லிஷ்டம் மநோ஽ஸ்ய விஷயைঃ நமயிப்ரஸங்கி
இத்தம் க்ருபாம் குருமயி ப்ரணதே஽கிலேச த்வாம்
ஸ்தோதும் அம்புஜ பவோபிஹி தேவநேஶঃ'

என்பது பிரமாணம். இங்குத் திருமாலை 4-ஆம் திருப்பாசுரம் காண்க.

உன்னைத் துதிப்பதற்கு ஆற்றல் உள்ளவன் 'அல்லன்,'' என்று கத்திரபந்துவும்,

[1] ''பகவானைப் பிரபத்தி செய்த அந்த மாதவி தேவி யானவள் பகவானை அடைந்தாள்,'' என்று மாதவியும்,

[2] ''பிளக்கப்பட்ட தலைகளையும் கழுத்தினையுமுடையவனு யும் முகங்களில் நின்றும் சொரிகின்ற குருதியையுடையவனுயு மிருக்கிற அந்தக் காளியனைப்பார்த்து அவனுடைய மனைவி மார்கள் கண்ணனைச் சரணம் அடைந்தார்கள்'' என்று காளிய னுடைய மனைவிமார்களும்,

[3] ''ஏ ஸ்வாமி, தைத்தியர்களுடைய சேனைகளால் வெல்லப் பட்ட தேவர்கள் அனைவரும் வணங்குவதில் விருப்பமுடையவர் களாய்த் தேவரீரைச் சரணம் அடைந்தார்கள்'' என்று இந்திரன் முதலான தேவர்களும்,

[4] ''இராக்கதர்களால் அடிபட்டவைகளான குரங்குகளின் பெருங்கூட்டம் ஸ்ரீ ராமபிரானைக் காப்பவராகக்கொண்டு சரணம் அடைந்தன,'' என்று வானர சேனையும் முதலாக உள்ளவர்கள் எல்லாரும் சரணம் புகுருகையாலே, பிரபத்திக்கு இன்னார் அதிகாரி என்று ஒரு நியமம் இல்லை; ருசியுடையார்கள் எல்லாம் அதிகாரிகளாமித்தனை. (11)

---

[1] 'பகவந்தம் ப்ரபந்நா ஸா பகவந்த மவாபஹா'
என்பது பிரமாணம். 382ஆம் சூத். வியாக். காண்க.

[2] 'தம்ப்ரபிந்ந ஶிரோக்ரீவமாஸ்யேப்ய: ஸ்ருதஶோணிதம்
விலோக்ய ஶரணம் ஜக்முஸ்தத் பத்ந்யோ மதுஸூதநம்'
என்பது, ஸ்ரீவிஷ்ணு பு. 5.7 : 7.

[3] 'ப்ரஹ்ம ப்ரவஹ்நாத தைதிய ஸைந்ய பராஜிதா:
ஶரணம் த்வாமநு ப்ராப்தாஸ் ஸமஸ்தா தேவதாகணா:
என்பது, பிரமாணம்.

[4] 'ராக்ஷஸை: வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ:
ஶரண்யம் ஶரணம் யாதா: ராமம் தஶரதாத்மஜம்'
என்பது, ஸ்ரீராமா. யுத். 94 : 17.

## 35

'பல நியமம் இன்றிக்கே ஒழிந்தபடி என்?' என்னில்[1]

என்பது சூத்திரம்.

**அவ** :—பின்னர்ப் 'பல நியமம் இல்லை' என்றதன் வினை விளை அநுவதிக்கிறார் 'பல நியமம் இன்றிக்கே ஒழிந்தபடி என்?' என்னில் என்று. (12)

## 36

**தருமபுத்திராதிகளுக்குப் பலம், இராச்சியம்; திரௌபதிக்குப் பலம், வஸ்திரம்; காகத்துக்கும் காளியனுக்கும் பலம், பிராணன்; ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்குப் பலம், கைங்கரியம்; ஸ்ரீ விபீஷணாழ்வானுக்குப் பலம், இராமப்பிராப்தி;[2] பெருமாளுக்குப் பலம், சமுத்திர தரணம்; இளைய பெருமாளுக்குப் பலம், இராமாநுவிருத்தி.[3]**

என்பது சூத்திரம்.

**அவ** :—அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தருமபுத்திராதிகளுக்குப் பலம்' என்று தொடங்கி.

**வியாக்** :—'தருமபுத்திராதிகளுக்கு'—இதனால் மேலே அதிகாரி நியமம் இல்லாமைக்கு உடலாகக் காட்டப்பட்ட பாண்டவர்கள் முதலான பிரபத்தி செய்த அதிகாரிகள் இராச்சியத்தின்பொருட்டாகவும், வஸ்திரத்தின்பொருட்டாகவும், உயிரின்பொருட்டாகவும், கைங்கரியத்தின்பொருட்டாகவும், இராமபிரானையடைதல் பொருட்டாகவும், கடலை அணை கட்டுதல் பொருட்டாகவும், இராமபிரானைத் தொடர்ந்து பின் செல்லுதல் பொருட்டாகவும் பிரபத்தி செய்கையாலே, பிரபத்திக்குப் பல நியமம் இல்லை என்றதாயிற்று. (13)

---

[1] இதுவும் மேல்வரும் சூத்திரமும் ஒரு சூத்திரமாக முன் அச்சுப் புத்தகங்களில் உள்ளன.

[2] பிராப்தி - அடைதல். சமுத்திர தரணம் - கடலைத் தாண்டுதல்.

[3] இராமாநுவிருத்தி - ஸ்ரீராமபிரானைப் பின்தொடர்ந்து அடிமை செய்தல்.

## 37

விஷய நியமமாவது,[1] குணபூர்த்தியுள்ள விடமே விஷயமாகை; பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே.[2]

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, பிரபத்திக்குத் தேசம் காலம் முதலான நியமம் இல்லை என்று எடுத்த விஷயத்தை விளக்கி அருளிச்செய்தார் இதுகாறும். 'விஷய நியமமே உள்ளது' என்று முன்பு கூறிப் போந்ததை எடுத்து விளக்குகிறார் 'விஷய நியமமாவது' என்று தொடங்கி.

வியாக் :—'குணபூர்த்தி உள்ள இடமே விஷயமாகை' என்றது, பரத்துவம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளிலும் சௌலப்யம் முதலிய குணங்கள் நிறைந்துள்ளவிடமே விஷயமாகை என்றபடி. 'அந்தக் குணங்கள் நிறைந்துள்ளதுதான் எங்கே?' என்ன, 'பூர்த்தி உள்ளதும் அர்ச்சாவதாரத்திலே' என்கிறார்.[2] அர்ச்சாவதாரத்தில் இருக்கிற குணங்கள் சுருக்கமாகச் சொல்லப்பட்டன; நூறு ஆண்டுகள் ஆனாலும் முற்றும் என்னாலும் சொல்லி முடியா,'' என்று இயல்பாகவே முற்றறிவினனான தானே சொல்லப்புக்காலும் சொல்லித் தலைகட்ட அரிதாம்படியிறே அர்ச்சாவதாரத்தில் குணங்கள் நிறைந்திருக்கும்படி. (14)

---

1 'விஷய நியமமாவது' என்று தொடங்கும் இச்சூத்திரமும் இரண்டு சூத்திரங்களாகவிருத்தல் வேண்டும். வியாக்கியானத்தை உற்று நோக்குக. மேலும் 43ஆம் சூத்திரத்தின் இறுதியில், அதுகாறும் கூறப்பட்ட பொருள்களைத் தொகுத்துக் கூறுகின்ற "ஆக, பிரபத்திக்கு, குணங்கள் நிறைந்த" என்ற விசேடவுரையையும் நோக்குக. அவ்வுரைப்பகுதியில் 'என்றும், என்றும்' என்று கூறுவன வெல்லாம் ஒவ்வொரு சூத்திரத்தின் கருத்துகளாகும்.

அர்ச்சாவதாரம்—கோயில் முதலானவிடங்களில் விக்கிரக உருவமாக எழுந்தருளியிருக்கும் நிலை.

2 குணபூர்த்தி உள்ளதும் அர்ச்சாவதாரத்திலே என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அர்ச்சாவதாரத்தில்' என்று தொடங்கி.

அர்ச்சாவதார விஷயே மயாப்யுத்தேசதஸ்ததா
உக்தா குணா ந சக்யந்தே வக்தும் வர்ஷசதைரபி

என்பது பாத்மஸம்ஹிதை.

## 38

ஆழ்வார்கள் பலவிடங்களிலும் பிரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே.

என்பது சூத்திரம்.

**அவ** :—குணங்கள் நிறைந்துள்ள இந்த அர்ச்சாவதாரமே பிரபத்திக்கு அடைத்த விஷயம் என்னுமதனை, [1]'பிரபந்நஜந கூடஸ்தருடைய அநுஷ்டானத்தாலும் விளக்குகிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக்** :—ஆழ்வார்கள்-மயர்வறமதிநலம் அருளப் பெறுகை யாலே, பரத்துவம் முதலான ஐந்து நிலைகளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று கண்டிருந்தவர்கள் ஆழ்வார்கள். பல இடங்களிலும் பிரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே— இப்படியிருக்கிறவர்கள் ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதற்குப் பதறிப் பலகாலும் பிரபத்தி பண்ணுகிற அளவில், பல இடங்களிலும் அர்ச்சாவதாரத்திலே யிறே பிரபத்தி செய்தார்கள். [2]மற்றைய நிலைகளில் பிரபத்தி செய்தது ஒவ்வோர் இடங்களில் இத்தனையே.

'யாங்ஙனம்?' எனின், ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவரான நம்மாழ்வார் [3]"ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந் தொழிந்தாய்" என்றும், [4]"கழல்களவையே சரணாகக்கொண்ட" என்றும், [5]"நம் பெருமான் அடிமேல் சேமங்கொள்தென் குருகூர்ச்சடகோபன்" என்றும், [6]"உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்றும் இப்படிப் பல இடங்களிலும் பிரபத்தி செய்தது அர்ச்சாவதாரத்திலேயாம். [7]"பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழி ஒன்றிலுமேயிறே அவதாரத்திலே புகல்புகுந்தது.

---

[1] பிரபந்ந ஜந கூடஸ்தர்—பிரபந்நர்களுக்கு மூலபுருஷர்.

[2] 'மற்றைய நிலைகளிலே' என்றது, பரத்துவம் வியூகம் விபவம் என்னும் நிலைகளிலே என்றபடி.

[3] திருவாய். 5.7:10.

[4] திருவாய். 5.8:11.

[5] திருவாய். 5.9:11.

[6] திருவாய். 6.10:10.

[7] திருவாய். 5.10:1.

திருமங்கையாழ்வாரும் [1]"வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்" என்றும், [2]"விரையார் திரு வேங்கடவா நாயேன் வந்தடைந்தேன்" என்றும், [3]"காவளம் பாடி மேய கண்ணனே களைகண் நீயே" என்றும், [4]"ஆழி வண்ண நின்னடியிணை அடைந்தேன் அணிபொழில் திரு வரங்கத்தம்மானே" என்றும் இப்படி அர்ச்சாவதாரத்திலே யிறே பலவிடங்களிலும் பிரபத்தி பண்ணிற்று. மற்றை ஆழ்வார்களுக்கும் இப்படி அவர் அவர்களுடைய பிரபந்தங் களிலே கண்டுகொள்வது.

'பிரபத்தி பண்ணிற்றும்' என்றவிடத்து ஈற்றிலுள்ள உம்மை, மேலேகூறிய 'பூர்த்தி உள்ளதும்' [5]என்றதனைத் தழுவுகிறது. (15)

## 39

**'பூர்ணம்' என்கையாலே எல்லாக் குணங் களும் புஷ்கலங்கள்.[6]**

என்பது சூத்திரம்.

அவ :—ஆழ்வார்கள் இப்படிப் பிரபத்தி செய்கிறவிடங்களில் பரத்துவம் முதலான ஐந்து நிலைகளும் இருக்க, அர்ச்சாவதாரத் திலே செய்கைக்கு அடி, இதனிடத்தில் குணங்கள் நிறைந் திருத்தலாலேயிறே. அக்குணங்களின் நிறைவினைப் பிரமாணத் தோடு அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— 'பூர்ணம் என்கையாலே' என்றது, [7]"எல்லை யில்லாத அவதாரங்களுக்கெல்லாம் மூலமான பாற்கடலில்

---

1 பெரிய திருமொழி, 1.6:4.
2 பெரிய திருமொழி, 1.9:1.
3 பெரிய திருமொழி, 4.6:1.
4 பெரிய திருமொழி, 5.8:1.
5 இறந்தது தழீஇய எச்சவும்மை. 37ஆம் சூத்.
அர்ச்சாவதாரத்தில் என்பதனை அதிகாரத்தால் கொள்க.
6 பூர்ணம் - நிறைவு. என்கையாலே - என்று வேதம் சொல்லுகை யாலே. புஷ்கலங்கள் - நிறைந்திருப்பனவாம்.
7 பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவ அவஶிஷ்யதே
ஸர்வம் பூர்ணம் ஸஹோம்.
என்பது கடவல்லி உபநிடதம்.

பள்ளி கொண்ட வியூக மூர்த்தியின் சம்பந்தமான குணங்கள் நிறைந்த விபவ மூர்த்தியைத் தனக்குக் காரணமாகக்கொண்டு கல்யாண குணங்கள் நிறைவுற்ற அர்ச்சாவதாரமே நாளும் அடையப்படுவதாய் ஏனைய நிலைகளில் முடிந்த நிலமாகவிருக்கிறது ; காக்குமியல்வினதும் அடையத்தக்கதும் ஆன அர்ச்சாவதாரத்தில் எல்லாக் குணங்களும் சேர்ந்து நிறைந்திருக்கின்றன," என்று சுருதி சொல்லுகையாலே என்றபடி.

'எல்லாக் குணங்களும் புஷ்கலங்கள்' என்றது, [1] உபாயமாகப் பற்றுமிடத்தில் எளிமையைத் தெரிவிக்கின்ற குணங்களோடு அடியார்களுடைய காரியங்களைச் செய்கைக்கு வேண்டுமவையான குணங்களோடு வேற்றுமை இல்லாமல் எல்லாக் குணங்களும் இவ்வர்ச்சையில் குறைவற்றிருக்கும் என்றபடி. (16)

## 40

பிரபத்திக்கு அபேக்ஷிதங்களான சௌலப்யாதிகள், இருட்டறையிலே விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே.

நாற்பதாஞ் சூத்திரம்.

அவ :- ஆனால், [2] "வாசுதேவனை தேவரீர் எல்லாக் குணங்களாலும் நிறைந்திருக்கின்றீர்" என்கிற பரத்துவத்தைக் காட்டிலும் இங்குத்தைக்கு ஏற்றம் என் என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பிரபத்திக்கு அபேக்ஷிதங்களான' என்றது, உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டுமவையான என்றபடி. சௌலப்யாதிகள் ஆவன, [3] கண்டு பற்றுகைக்கு உறுப்பான சௌலப்யமும், மேன்மை கண்டு அகலாமைக்கு உறுப்பான சௌசீல்யமும், காரியம் செய்யும் என்று நம்புகைக்கு உறுப்பான

[1] உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டுமவையான குணங்கள்—வாத்சல்யம், ஸ்வாமித்வம், சௌசீல்யம், சௌலப்யம் என்ற குணங்கள். காரியங்களைச் செய்கைக்கு வேண்டுமவையான குணங்கள்—ஞானம், சக்தி பிராப்தி பூர்த்தி என்னும் குணங்கள்.

[2] "வாஸுதேவோஸி பூர்ண:"
என்பது, பிரமாணம்.

[3] இதனை மேலே காண்க.

சுவாமித்வமும், குற்றம் கண்டு வெருவாமைக்கு உறுப்பான வாத்சல்யமுமாம். [1]'' நிகரில் புகழாய் '' என்ற திருப்பாசுரத்தால் இந்நான்கு குணங்களையும் அன்றோ ஆழ்வார் அருளிச்செய்தது ?

'இருட்டு அறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே' என்றது, பரத்துவத்தில் இந்தக் குணங்களெல்லாம் உளவாக இருக்கவும், எல்லாவற்றாலும் தன்னை ஒத்திருப்பவர் களான நித்திய முத்தர்கட்கு முகம் கொடுத்திருக்கிற இடமாகை யாலே, பகல் விளக்குப் போன்று விளக்கம் அற்றிருக்கும்; அர்ச்சாவதாரமானவிடத்தில், தண்மைக்கு எல்லை நிலமான இவ்வுலக மக்கட்கு முகம் கொடுத்துக்கொண்டிருக்கையாலே திணிந்த இருளிலே விளக்குப் போன்று மிக்க பேரொளியாகத் தோற்றும் என்றபடி. விஷயம் உள்ள இடத்தேயிறே குணங் கள் விளக்கம் உறுவன. [2] பரமபதத்திலுள்ளாரும் சீலம் முதலான குணங்களை அநுபவம் பண்ணுவதற்கு வருவது இங்கேயிறே.

[3] சௌலப்யம் முன்னாக அருளிச் செய்தது, கண்டு பற்று கைக்கு உறுப்பான சௌலப்யமே பிரபத்திக்கு முதன்மையாக வேண்டப்படுவது என்பது தோற்றுகைக்காக. (17)

## 41

பூர்த்தியையும் சுவாதந்திரியத்தையும் குலைத் துக்கொண்டு, தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிற இடம்.[4]

என்பது சூத்திரம்.

---

[1] இது திருவாய். 6.10:10. 'நிகரில் புகழாய்' என்பதனால் வாத்ஸல்யமும், 'உலக மூன்றுடையாய்' என்பதனால் சுவாமித்வமும், 'என்னை யாள்வானே' என்பதனால் சௌசீல்யமும், 'திருவேங்கடத் தானே' என்பதனால் சௌலப்யமும் சொல்லப்பட்டன.

[2] '' நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத் தானே '' என்பது போன்ற திருப்பாசுரங்களை ஈண்டு நோக்குக.

[3] '' நிகரில்புகழாய் '' என்று வாத்சல்யத்திற்கு முதன்மை சொல்லியிருக்க, ஈண்டு சௌலப்யத்தை முன்னே கூறியதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சௌலப்யம்' என்று தொடங்கி.

[4] பூர்த்தியைக் குலைத்துக்கொண்டு, சுவாதந்திரியத்தைக் குலைத்துக்கொண்டு எனக் 'குலைத்துக்கொண்டு' என்பதனை முன்னும் கூட்டுக.

அவ :—'இக்குணங்கள் பிரகாசிப்பது இங்கே' என்று மேலே கூறியதனை எடுத்து விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—பூர்த்தியாவது, விரும்பப்படுவனவெல்லாம் பெற்றுள்ளவனும் இருத்தல். அதனைக் குலைத்துக்கொள்ளுகையாவது, ஒருவன் இட்டது கொண்டு மனம் நிறைந்தவனும்படி விருப்பத்தையுடையவனாய் இருக்கை. சுவாதந்திரியமாவது, சொரூபம் முதலானவற்றைத் தன் வசத்திலேயுடையவனாயிருத்தல். அதனைக் குலைத்துக்கொள்ளுகையாவது, அடியார்களுடைய விருப்பத்திற்கு ஏற்றவாறு வடிவம் நிலைபேறு [1] முதலாயினவற்றையுடையவனாயிருத்தல். [2] "அடியார்களுடைய குற்றங்களைப் பாராதவனாய்ப் பெருமதிப்பனாய் இருக்கிற சர்வேசுவரன், தன்னை அடைந்தவர்களுடைய விருப்பின்படி உண்கிறான்; உலகத்திற்கெல்லாம் நாதனான இறைவன், தன்னைப் பற்றினவர்களுடைய விருப்பின்படி நீராடலையும் நீர் பருகுதலையும், அப்படியே யாத்திரையையும் செய்கிறான்; அந்த உலகநாதன் சுவதந்திரனாயிருந்தும் சுவதந்திரம் இல்லாதவன் எப்படி இருப்பானோ அப்படியிருக்கிறான்; எல்லா ஆற்றலையுமுடையவனாயும் காரணப் பொருளாயும் இருந்தும் ஆற்றல் இல்லாதவனைப் போன்று நடிக்கிறான்" என்னக்கடவதிறே. [3] "அர்ச்சகன் இட்ட வழக்கான தன் எல்லா நிலைகளையுமுடையவனாய்" என்று அருளிச் செய்தாரிறே பட்டரும். தன் இச்சை ஒழிய இவற்றைக் குலைப்பதற்குக் காரணம் இல்லாமையாலே 'குலைத்துக்கொண்டு' என்கிறார்.

'தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிற இடம்' என்றது, தான் இப்படி எளியனாய் வந்து நின்றால்

---

[1] 'முதலாயினவற்றை' என்றதனால் உருவம் குணம் விபூதி என்னுமிவற்றைக் கொள்க.

[2] அவற்றைக் குலைத்துக்கொண்டு இருப்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'அடியார்களுடைய' என்று தொடங்கி.

ததிச்சயா மஹாதேஜா புங்க்தே வை பக்தவத்ஸல:
ஸ்நாநம் பாநம்ததா யாத்ராம் குருதே வை ஜகத்பதி:
ஸ்வதந்த்ரஸ் ஸஜகந்நாதோ ப்யஸ்வதந்த்ரோயதாததா
ஸர்வஶக்தி: ஜகத் தாதாப்யஶக்த இவசேஷ்டதே.

என்பது, விஷ்வக்சேந சம்ஹிதை.

[3] "அர்ச்சக பராதீந அகிலாத்மஸ்திதி:"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 74.

'அரியன் எளியனுய் நிற்கப் பெற்ருேம்' என்று விரும்பி மேல் விழுகை அன்றிக்கே, அவ்வெளிமைதானே காரணமாக விரும்பாத இவ்வுலக மக்களைத் தான் விடமாட்டாத அளவன்றிக்கே, அவர்களை ஒழியச் செல்லாமை தோற்ற நிற்கிற இடம் அர்ச்சாவதாரம் என்கை.

பூர்த்தியையும் சுவாதந்திரியத்தையும் குலைத்துக்கொண்டு நிற்கையாலே சௌலப்பியமும் சௌசீல்யமும், தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கையாலே சுவாமித்துவமும் வாத்சல்யமும் இங்கே தோன்ருநின்றன.

அன்றிக்கே, இச்சூத்திரத்தால் நான்கு குணங்களுள்ளும் முதன்மையையுடைய சௌலப்பியத்தையே கூறுகின்ருராகவுமாம். அப்பொழுது இவ்வர்ச்சாவதாரத்தினுடைய சௌலப்பியத்தினுடைய மிகுதியைக் காட்டுகிருர் என்று பொருளாகக் கடவது. [1] கண்களுக்குப் புலப்படும்படி எப்பொழுதும் அண்மையில் எழுந்தருளியிருக்கின்ற அளவே அன்றி, எல்லாவகையாலும் நிறைந்தவனுய் வேருெரு பொருளால் தடை செய்யப்படாத சுவதந்திரனுய் இருக்கிற தன்னை, ஒரு பொருளை விரும்புகிறவனைப் போலவும் சுவதந்திரம் இல்லாதவனைப் போலவும் தன்னை ஆக்கிக்கொண்டு தன்னை விரும்பாத இவ்வுலக மக்களைத் தான் விரும்பிக்கொண்டு நிற்பதற்கு மேற்பட்ட சௌலப்பியம் இல்லையிறே. [2] "அந்தர்யாமித்துவம், பரத்துவம், வியூகம், விபவம், அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளோடு கூடியிருக்கிற நான், பிறப்பு இறப்புகளில் மூழ்கிக் கிடக்கிற ஆன்மாக்களைக் குறித்து முன்னைய முன்னைய நிலைகளைக்காட்டிலும் பின்னைய பின்னைய நிலைகளில் எளிமை குணத்தால் மிக்குவருகின்றேன். உலக நாதனுனவன் மேன்மேல் சௌலப்பிய குணத்தால் எளியன் அன்ருே?" என்று பரத்துவம் முதலான ஐந்து நிலைகளிலும் சௌலப்பிய குணம் உண்டா

---

[1] அந்தச் சௌலப்ய குணம் அர்ச்சாவதாரத்தில் மிக்குத் தோன்றுவதனை விளக்குகிருர் 'கண்களுக்கு' என்று தொடங்கி.

[2] அதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'அந்தர்யாமித்வம்' என்று தொடங்கி.

" ஏவம்பஞ்ச ப்ரகாரோஹமாத்மநாம் பததாமத:
பூர்வஸ்மாதபி பூர்வஸ்மாத் ஜ்யாயாம்ஸ்சைவ உத்தரோத்தர:
ஸௌலப்யதோ ஜகத்ஸ்வாமீ ஸுலபோஹ்யுத்தர உத்தர:
என்பது விஷ்வக்சேந சம்ஹிதை.

யிருக்கவும் முன்னைய முன்னைய நிலைகளைக்காட்டிலும் பின்னைய பின்னைய நிலைகளுக்குச் சௌலப்பிய குணம் அதிகமாயிருக்கும் என்று தானே அருளிச் செய்கையாலே சௌலப்பிய குணத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம் ஆகும் என்க. (18)

## 42

**பூகதஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரணஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வியூகம்; பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கினமடுக்கள் போலே அர்ச்சாவதாரம்.[1]**

என்பது சூத்திரம்.

**அவ :**—பரத்துவம் முதலான நிலைகளின் அருமையையும், அர்ச்சாவதாரத்தின் எளிமையையும், எடுத்துக்காட்டு மூலம் விளக்கிக்காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—பூகதஜலம் போலே அந்தர்யாமித்வம்—தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு, வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டாதபடி தான் நிற்கும் இடத்திலே உண்டாயிருந்தும், கொட்டும் குந்தாலியும் கொண்டு கல்லினல் அல்லது குடிக்கக் கிடையாது பூமிக்குள்ளே இருக்கிற தண்ணீரைப் போலே ஆயிற்று, 'கண்டுபற்ற வேண்டும்' என்று ஆசைப்பட்டவனுக்கு மனத்திலே இருந்தும் [2]'கட்கிலீ' என்கிறபடியே கண்களால் காண முடியாதபடியே அஷ்டாங்க யோக முயற்சியாலே காண வேண்டும்படியான அந்தர்யாமித்வம்.

ஆவரணஜலம் போலே பரத்துவம்—தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு, அண்டத்திற்குப் புறம்பே பெருகிக்கிடக்கிற ஆவரணஜலம் போலே ஆயிற்று, கண்டு பற்ற வேண்டுமென்று ஆசைப்பட்ட இவனுக்கு [3]"அப்பால் முதலாய் நின்ற அளப்

[1] பூகதம் - பூமிக்குள்ளே இருக்கின்ற. ஆவரணம் - மூடிக்கொண்டிருப்பது; இங்கு அண்டத்திற்கு மேலே உள்ள என்றபடி. 'விபவங்கள்' என்பதும் பாடம். அது பொருத்தம் இன்று.

[2] திருவாய் மொழி, 7. 2 : 3.

[3] திருநெடுந்தாண்டகம், 14. லீலாவிபூதி - படைப்பு அழிப்பு முதலான விளையாட்டிற்குரிய உலகங்கள். அதாவது சத்தியலோகம் முதலாக இப்பால் உள்ள உலகங்கள்.

பரிய ஆரமுது'' என்கிறபடியே லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்துவம்.

பாற்கடல் போலே வியூகம்—அப்படி மிக்க நெடுந்தூரம் அன்றியே இந்த உலகத்திற்குள்ளே இருக்கச் செய்தேயும், தண்ணீர் வேட்கை கொண்ட அவனுக்குச் சென்று அடைய முடியாததான பாற்கடல் போலே ஆயிற்று, கண்டு பற்றவேண்டும் என்று ஆசைப்பட்ட இவனுக்கு, [1] "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்'' என்கிறபடியே கேட்டிருக்குமத்தனையல்லது சென்று காண அரிதாம்படியிருக்கிற வியூகம்.

பெருக்காறு போலே விபவம்—மிக அண்மையில் இருந்தும் அந்தக் காலத்தில் இருந்தவர்களுக்குப் பருகலாம்படியாய், வேறு காலத்தில் இருந்தவனுக்குப் பருகுதற்கு அரிதாம்படியான பெருக்காறு போலே ஆயிற்று, [2] 'மண்மீதுழல்வாய்' என்கிறபடியே பூமியிலே அவதரித்துச் சஞ்சரித்தும் அக்காலத்தில் வசித்தவர்களுக்கு அடையத் தக்கதாய்ப் பிற்காலத்தில் உள்ள இவனுக்குக் கிட்டாதபடியான விபவம்.

அதில் தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்—முன்பு சொன்னவை போல அன்றிக்கே, அவனுக்கு விடாய் கெடப் பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலே ஆயிற்று, கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்பட்ட இவனுக்கு, காண்பதற்குத் தேசத்தாலும் காலத்தாலும் கரணத்தாலும் சேயதன்றிக்கே, கோயில்களிலும் வீடுகளிலும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற [3] 'பின்னானார் வணங்கும் சோதி' ஆன அர்ச்சாவதாரம். [4] 'பூமியில் இருக்கிற திருக்கோயில்களிலும் அடியார்களுடைய திருமாளிகைகளிலும்' என்கிறபடியே பல இடங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலைகளை நினைத்து 'மடுக்கள் போலே' என்று பன்மையால் அருளிச்செய்தபடி.

அவதாரங்களின் குணங்கள் எல்லாம் அர்ச்சையினிடத்திலே குறைவற்று நிறைந்திருக்கையாலும் அவதாரங்களின்

---

[1] பெரிய திருவந்தாதி, 34.

[2] திருநெடுந்தாண்டகம், 19.

[3] "பௌமநிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு" என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 74.

[4] திருவாய். 6.9:5.

திருவுருவங்களை அர்ச்சை வடிவமாகப் பலவிடங்களில் மேற் கொண்டிருக்கையாலும் 'அதிலே தேங்கின மடுக்கள் போலே' என்கிறார். (19)

## 43

**இதுதான், சாஸ்திரங்களால் திருத்த வொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப் போரும் சேதநர்க்கு, வைமுக் கியத்தை மாற்றி ருசியை விளைக்கக்கடவதாய், ருசி பிறந்தால் உபாயமாய், உபாய பரிக்கிரஹம் பண்ணினுல் போக்கியமுமாய் இருக்கும்.[1]**

என்பது சூத்திரம்.

அவ :—இங்ஙனம் உபாயமாகப் பற்ற ருசி பிறந்தவர் களுக்குப் பற்றுதற்கு எளியதாயிருக்கும் அளவே அன்று; ருசியை விளைத்தல் முதலியவைகளும் இவ்வர்ச்சாவதாரத்திற்கு உண்டு என்று இதன் சிறப்பினை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'இதுதான்' என்ற சுட்டு, மேலே கூறிய சௌலப்பியம் முதலான குணங்களோடு கூடி நிற்கும் அர்ச் சாவதாரத்தைச் சுட்டுகிறது. 'சாஸ்திரங்களால் திருத்த வொண்ணுதே' என்றது, நலத்தைக் கூறுகின்ற வேதம் ஸ்மிருதி முதலான சாஸ்திரங்களானவை, வெறுப்புப் பிறக்கும்படி இவ்வுலக வாழ்க்கையினுடைய குற்றங்களின் மிகுதியினையும், ருசி பிறக்கும்படி பகவத் விஷயத்தினுடைய குணங்களின் மிகுதியினையும் உபதேசித்தாலும், அவற்றால் இவ்வுலக வாழ்க்கையை விட்டு இறைவனைப் பற்றும்படி செய்யப் போகாமையைத் தெரிவித்தபடி, [2] துர்வாசனையின் வலிமை உபதேசத்

[1] விஷயாந்தரங்கள் - மகளிர் இன்பம் முதலாயின. விமுகர் - ருசி யில்லாதவர். வைமுக்கியம் - விமுகரது தன்மை. போக்கியம் - இனியது.

[2] திருத்தவொண்ணுமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'துர்வாசனையின்' என்று தொடங்கி.

தைப் பயன் அற்றதாக்கிவிடுமிறே. [1] 'மனிதர்களுக்கு எந்த அறிவானது பல பிறவிகளிலே உண்டான பாவனை என்கிற சம்ஸ்காரத்தால் பிறக்கிறதோ அந்த அறிவையே மக்கள் அடைகிறார்கள்; ஆகையால், சாஸ்திர உபதேசம் பயன் அற்றதாகிவிடுகிறது' என்னக் கடவதிறே.

'விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப் போரும்' என்றது, [2] 'சிலம்படியுருவின் கருநெடுங்கண்ணார் திறத்தனாய் அறத்தையே மறந்து, புலம்படிந்துண்ணும் போகமே பெருக்கி' என்றும், [3] 'சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த' என்றும், [4] 'மாதரார் கயற்கண் என்னும் வலையுட்பட்டழுந்துவேனை' என்றும் சொல்லுகிறபடியே மற்றைய விடயங்களிலே மிக்க காதலையுடையராய் [5] யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை ஏறிட்டுக்கொண்டு இறைவன் திறத்தில் முகம் வைக்க இசையாதே இருந்து போதலைக் குறித்தபடி.

இப்படித் திரியும் 'சேதநர்க்கு வைமுக்கியத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய்' என்றது, [6] 'போதரே என்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் பெருகவைத்த அழகன்' என்கிறபடியே தன்னுடைய அழகு முதலானவைகளாலே மனத்தினைக் கவர்ந்து 'தன்னைக் காணவேண்டா' என்று இருக்கும் இருப்பைக் குலைத்து, கண்ட கண் மாறவைக்க மாட்டாதபடி செய்கையைத் தெரிவித்தபடி.

'ருசி பிறந்தால் உபாயமாய்' என்றது, இப்படித் தனது சிறந்த அழகினைக் கண்ட காட்சியாலே, தன்னை எப்பொழுதும் அநுபவித்துக்கொண்டே இருக்கவேண்டும் என்னும் ருசி

---

1 அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மனிதர்களுக்கு' என்று தொடங்கி.

ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு யாபுத்திः பாவிதா ந்ருணாம்
தாமேவ லபதே ஜந்துः உபதேஶோ நிரர்த்தகः

என்பது, பிரமாணம்.

2 பெரிய திருமொழி, 1.6:2.

3 பெரிய திருமொழி. 1.6:3.

4 திருமாலை, 16.

5 திருவிருத்தம், 95.

6 திருமாலை, 16.

பிறந்த பின்பு, [1] ‘ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந் தொழிந்தாய்’ என்கிறபடியே இவ்வுலக வாழ்க்கையை விடுதல் முன்னாகத் தன்னை அடைதற்குத் தானே சாதனமாய் இருத்தலைத் தெரிவித்தபடி.

‘உபாய பரிக்கிரஹம் பண்ணினால் போக்கியமுமாய் இருக்கும்’ என்றது, தன்னை உபாயமாகப் பற்றினால், பலத்தின் சித்திக்கு ஒரு தேச விசேடத்தே போமளவும் பார்த்திருக்க வேண்டாதே [2] ‘அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே’ என்றும், [3] ‘எனக்குத் தேனே பாலே கன்னலே அமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே’ என்றும் சொல்லுகிறபடியே எல்லை இல்லாத இனிய பொருளாக இருக்கையாலே தானே பலமுமாய் இருக்கையைத் தெரிவித்தபடி.

[4] ஆக, பிரபத்திக்குக் குணங்கள் நிறைந்தவிடமே இலக்காக வேண்டும் என்றும், அதுதான் உள்ளது அர்ச்சாவதாரத்திலே என்றும், அதனை நோக்கி ஆழ்வார்கள் எல்லாரும் பிரபத்தி பண்ணிற்றும் இவ்வர்ச்சாவதாரத்திலே என்றும், இவ்வர்ச்சாவ தாரத்திலே எல்லாக் குணங்களும் நிறைந்திருக்கும் என்றும், பிரபத்திக்கு வேண்டப்படுவனவான குணங்கள் விசேடமாகத் தெளிவாக விளங்குவன இவ்வர்ச்சாவதாரத்திலே என்றும், இவ்வர்ச்சாவதாரந்தான் ‘யாதொரு பொருளிலும் விருப்பம் இல்லாமை’ முதலான தன்னுடைய இயல்புகளை அழிய மாறி, தன்னை விரும்பாதாரைத் தான் விரும்பி நிற்கும் இடம் என்றும், பரத்துவம் முதலான நிலைகள் ஒவ்வொரு வகையாலே பற்றுதற்கு அரியவை; இது எல்லாவகையாலும் பற்றுதற்கு எளியது என் றும், இவ்வளவே அல்ல; இவ்வர்ச்சாவதாரம் ருசியை விளைக்கக் கூடியதாய் உபாயமுமாய் உபேயமுமாய் இருக்கும் என்றும் சொல்லப்பட்டன.

[5] இதனால், உபாய உபேயங்கள் இரண்டும் தானேயாய், மற்றைய விஷயங்களில் விரக்தி முன்னாகத் தன் விஷயத்தில்

[1] திருவாய்மொழி, 5.7:10.
[2] அமலனாதிபிரான், 10.
[3] திருவாய்மொழி, 10.7:2.
[4] 37ஆம் சூத்திரத்திலிருந்து கூறி வந்தவற்றைத் தொகுத்து அருளிச்செய்கிறார் ‘ஆக, பிரபத்திக்கு’ என்று தொடங்கி.
[5] இதனால் போந்த பொருளை முடித்துக் காட்டுகிறார் ‘இதனால்’ என்று தொடங்கி.

ருசியை விளக்குமதாய், எல்லாவகையாலும் சுலபமாய், தன் படிகளை அழிய மாறிக்கொண்டு தன்னை விரும்பாதாரையும் விரும்புமதாய், பிரபத்திக்கு வேண்டப்படுவனவான குணங்களெல்லாம் பிரகாசிப்பதாய், எல்லாக் குணங்களும் குறைவற்று நிறைந்ததாய் பிரபந்நஜந கூடஸ்தருக்கு உபாயமாகப் பற்றுவதற்கு 'உரியதாய் இருந்துள்ள அர்ச்சாவதாரமே பிரபத்திக்கு நியத விஷயம் என்றாராயிற்று. (20)

## 44

இதில் பிரபத்தி பண்ணும் அதிகாரிகள் மூவர்.

என்பது சூத்திரம்.

**அவ :—**[1] 'பிரபத்திக்குத் தேச நியமம்' என்று தொடங்கி இத்துணையும் இறைவனை உபாயமாகப் பற்றுதலாகிற பிரபத்திக்குத் தேச நியமம், கால நியமம் முதலான நியமங்கள் இன்மையும், உபாயமாகப் பற்றப்படும் பொருள் நியமமும் காட்டப்பட்டன. இப்படிப் பிரபத்தி பண்ணத்தக்க பொருள் விசேடத்தைக் காட்டிய பின்பு, [2] பகவத் சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருக்கின்ற அதிகாரி விசேடங்களையும் தெளிவுபடுத்தத் திருவுள்ளம் பற்றி, அதிகாரி விசேடங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**' இதில் பிரபத்தி பண்ணும் அதிகாரிகள் மூவர்' என்றது, சௌலப்பியம் முதலான குணங்கள் நிறைந்திருக்கும் நிறைவாலே பிரபத்திக்கு உரிய விஷயமான இவ்வர்ச்சாவதாரத்தில் பிரபத்தி செய்யும் அதிகாரிகள், பிரபத்தி செய்வதற்குரிய காரணங்களின் வேறுபாட்டாலே மூன்று வகைப்பட்டிருப்பர்கள் என்றபடி. (21)

## 45

அஜ்ஞரும் ஞாநாதிகரும் பக்திபரவசரும்.

என்பது சூத்திரம்.

**அவ :—**அவர்கள் யாவர் என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] இது, 24ஆம் சூத்திரம்.

[2] பகவச்சாஸ்திரம் - பாஞ்சராத்திரம்.

**வியாக் :**—அஜ்ஞராகிருர்—பகவானை அடைவதற்கு உறுப்பான சாதனங்களைச் செய்தற்குத் தகுதியான ஞானம் இல்லாதவர்கள். அறிவின்மையைக் கூறியது ஆற்றல் இன்மைக்கும் உபலக்ஷணம். [1] 'பிராபகாந்தரபரித்தியாகத்துக்கும் அஜ்ஞான அசக்திகள் அன்று' என்று மேலே இவர்தாமே அருளிச்செய்வது காண்க. ஞாநாதிகர் ஆகிருர்—ஞானம் சக்தி என்னும் இவைகள் உண்டாயிருக்கச் செய்தேயும், பகவானுக்கு [2] அத்யந்தபரதந்திரமான ஆன்மாவின் சொரூபத்தின் உண்மை நிலையைக் கண்டவர்கள் ஆகையாலே, மற்றைய உபாயங்கள் ஆன்ம சொரூபத்திற்கு முரண்பட்டவை என்று அவற்றை விடுவதற்குத் தகுதியான ஞான நிறைவினையுடையவர்கள். பக்திபரவசர் ஆகிருர்—ஒன்றையும் அடைவுபடச் செய்கைக்கு ஆற்றலையுடையர் அல்லாதபடி பகவானிடத்து உண்டான பக்தியின் மேலீட்டினலே குலைபட்ட உறுப்புகளையுடையவர்களாய் இருக்குமவர்கள். (22)

## 46

அஜ்ஞாநத்தாலே பிரபந்நர் அஸ்மதாதிகள்;
ஞாநாதிக்யத்தாலே பிரபந்நர்பூர்வாசாரியர்கள்;
பக்திபாரவச்யத்தாலே பிரபந்நர் ஆழ்வார்கள்.

என்பது சூத்திரம்.

**அவ :**—இப்படி இந்த அஜ்ஞாநம் முதலானவைகள் அடியாகப் பிரபத்தி செய்தவர்கள் இன்னர் இன்னர் என்னுமிடம் காணலாம் வகை உண்டோ என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அஜ்ஞாநத்தாலே பிரபந்நர் அஸ்மதாதிகள்' [3] என்றது, மற்றைய உபாயங்களைச் செய்வதில் இழிகைக்குத்

---

[1] ஆற்றல் இன்மையை உபலக்ஷணத்தால் கோடல் வேண்டும் என்று தாம் கூறியதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'பிராபகாந்தர' என்று தொடங்கி.

[2] அதியந்தபாரதந்திரியம் - தன்னைப் பாதுகாத்துக்கொள்வதற்குரிய சாதன முயற்சிகளில் தகுதியற்றவனுயிருத்தல். பாரதந்திரியம், அதிபாரதந்திரியம், அத்யந்த பாரதந்திரியம். அதிபாரதந்திரியம் உபாசகனுக்குரியது.

[3] அஸ்மதாதிகள் - யானும் என்னைப் போன்றவர்களும். 'அஸ்மதாதிகள்' என்றது நைச்யாநுசந்தானம்.

தகுதியான ஞானம் முதலானவைகள் முதலிலே இல்லாமை யாலே, வேறு புகல் இல்லாதவர்களாய்க்கொண்டு பகவானிடத்திலே பரந்யாசம் செய்தவர்கள், யானும் என்னைப் போன்றவர்களும். [1]'நீசனேன் நிறைவொன்றுமிலேன்' என்று தம்மைத் தாழ்வாக நினைக்கும் நினைவாலே மந்த அதிகாரிகளோடு தம்மையும் சேர்த்து 'அஸ்மதாதிகள்' என்கிறார்.

'ஞாநாதிக்யத்தாலே பிரபந்நர்பூர்வாசாரியர்கள்' என்றது, மற்றைய உபாயங்கள் ஆன்ம சொரூபத்தை அழிக்கக் கூடியவை என்று நடுங்கும்படியான ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலையை உள்ளவாறு உணர்ந்த உணர்வாலே வந்த ஞானநிறைவாலே, வேறு புகல் இல்லாதவர்களாய்க்கொண்டு ஆன்ம சொரூபத்திற்குத் தகுதியாகப் பகவானிடத்திலேயே[2] பரத்தை வைத்தவர்கள், பூர்வாசார்யர்கள். அவர்கள், ஸ்ரீநாதமுனிகள், ஸ்ரீஆளவந்தார், இராமாநுசர் முதலானவர்கள்.

'பக்தி பாரவச்யத்தாலே பிரபந்நர் ஆழ்வார்கள்' என்றது, பகவானிடத்தில் வைத்த நிறைந்த பக்தியாலே,[3]'காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்' என்றும், [4]'இட்டகால் இட்டகை' என்றும் சொல்லுகிறபடியே குலைபட்ட உறுப்புகளையுடையராய் இருக்கையாலே, ஒரு சாதனத்தைச் செய்வதற்கு ஆள் அன்றிக்கே, வேறு புகல் இல்லாதவராய்க்கொண்டு அவன் பக்கலிலே பாரத்தை வைத்தவர்கள் ஆழ்வார்கள் என்றபடி. பக்தியினாலே தன் வசம் இழந்தவர்களுக்கு ஒரு சாதனத்தைச் செய்யப்போகாது என்னுமிடம், [5]'உன்னைக் காணும் அவாவில் வீழ்ந்து யான் எங்குற்றேனுமல்லேன்'' என்ற திருப்பாசுரப் பகுதியிலும், [6]'என்கொள்வன்' என்ற திருப்பாசுரத்திலும் ஆழ்வார் மிகத் தெளிவாக அருளிச்செய்தாரிறே. (23)

---

[1] 'அஜ்ஞானத்தாலே பிரபந்நர்களுள் தம்மையும் சேர்த்து, பெரியாரான பிள்ளை லோகாசாரியர் 'அஸ்மதாதிகள்' என்னலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீசனேன்' என்று தொடங்கி. இது, திருவாய். 3.3:4.

[2] பரம் - பாரம்.

[3] பெரிய திருவந்தாதி, 34.

[4] திருவாய். 7.2:4.

[5] திருவாய். 5.7:2.

[6] திருவாய். 5.1:4.

## 47

இப்படிச் சொல்லுகிறதும் ஊற்றத்தைப் பற்ற.

என்பது சூத்திரம்.

**அவ :**—அஜ்ஞாநம், ஞாநாதிக்கியம், பக்தி பாரவச்யம் என்னும் மூன்றனுள் ஒரொன்றனையே இவர்களுடைய பிரபத்திக்குக் காரணமாகச் சொல்லுகைக்கு மூலம் இன்னது என்கிருர் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'இப்படிச் சொல்லுகிறதும்' என்றது, அஜ்ஞானமும் [1] ஆற்றாமையும், ஆன்மாவின் தன்மையை உள்ளவாறே அறிகின்ற உண்மை ஞாநமும், பகவானிடத்தில் வைத்த பக்தியும் ஆகிற இவை மூன்றிலும், மூவர்க்கும் தொடர்பு உண்டாயிருக்கச் செய்தே, ஓரொன்றே இவர்களுடைய பிரபத்திக்குக் காரணமாகச் சொல்லுகிறதும் என்றபடி. 'ஊற்றத்தைப் பற்ற' என்றது, இவற்றுள் ஓரொன்றே இவ்வதிகாரிகளிடத்தில் உறைத்திருக்கையாலே என்றபடி.

இதனுல் [2] முற்பட்டவர்களிடத்தில் ஞாநம் பக்தி என்னும் இரண்டும் குறைந்து அஜ்ஞாநமே விஞ்சியிருக்கும் என்றும், நடுவிலவர்களிடத்தில் அஜ்ஞாநம் சிறிதாய், பக்தியும் அளவுபட்டு, ஞாநமே விஞ்சியிருக்கும் என்றும், பிற்பட்டவர்களிடத்தில் அஜ்ஞாநம் மிகமிகச் சிறியதாய், ஆன்ம ஞாநமும் குறைவற்றிருக்கச் செய்தே, பக்தியே கரைபுரண்டு இருக்கும் என்றும் கொள்க. ஆகையால், மூன்றும் மூவர் பக்கலிலும் உண்டேயாகிலும் குறைவாகவிருப்பனவற்றைத்தள்ளி, மிகுதியாக இருப்பதனையே அவர் அவர்களுடைய பிரபத்திக்குக் காரணமாகக் கூறப்பட்டது என்று கொள்க.

இந்தப் பொருளில் ஒரு குறை உண்டு. மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்களுக்கும் அஜ்ஞாநம் சிறிது கிடக்கிறது என்று கொள்ளவேண்டி வருகையாலே. 'ஆனல் செய்வது என் ?'

---

[1] 45ஆம் சூத்திரத்தில் 'அஜ்ஞரும்' என்றதற்குக் கூறிய வியாக்கியானத்தை ஈண்டு நினைவு கூர்க.

[2] 'முற்பட்டவர்கள்' என்றது அஜ்ஞரான அஸ்மதாதிகளை. 'நடுவிலவர்கள்' என்றது, ஞானதிகர்களான பூர்வாசாரியர்களை. 'பிற்பட்டவர்கள்' என்றது பத்தி பரவசரான ஆழ்வார்களை.

என்னில், 'ஊற்றத்தைப்பற்ற' என்கிற இதற்கு, அவரவர்களுடைய மிகுதியாக எண்ணுகிற நினைவினைப்பற்ற என்று பொருள் கூறுமிடத்து மேற்கூறிய குற்றம் வாராது. அப்பொழுது, இச்சூத்திரத்திற்கு, அஜ்ஞாநமும், ஆன்மஞாநமும், பகவானிடத்தில் வைத்த பக்தியும் ஆகிற இம்மூன்றனுடைய நினைவும் மூவர்க்கும் யாதேனும் ஒருபடி உண்டாயிருக்கச் செய்தே, ஒரொன்றே இவர்களுடைய பிரபத்திக்குச் சிறந்த காரணமாகச் சொல்லுகிறதும் இவற்றுள் ஒரொன்றிலே இவ்வதிகாரிகளுக்கு மிக்க நினைவு ஆகையாலே என்பது பொருளாம்.

அதாவது, வேறு புகல் இல்லாதவர்களாய்ப் பிரபந்நர் ஆகைக்கு உடலான அஜ்ஞாநம், ஆன்மஞாநம், பகவானிடத்து வைத்த பக்தி என்னும் இம்மூன்றனுடைய நினைவுகளும் மூவர்க்கும் உளவானாலும், மூன்றிலும் வைத்துக்கொண்டு மிகுதியானதுவே, அவரவர்களுள் புகல்வேறு அற்றவர்களாய்ப் பிரபத்தியில் இழிகைக்குக் காரணமாக நினைத்திருக்கையாலே என்றபடி.

இவற்றுள், முதலில் கூறப்பட்ட அதிகாரிகளுக்கு, அஜ்ஞாநத்தை நினைத்தல் பொருந்தும்; நடுவே சொல்லப்பட்டவர்களுக்கும், பிரமாணங்களைக்கொண்டு பொருளைக் கொள்ளுபவர்களாகையாலே அஜ்ஞாநத்தினுடைய வாசனை அடியோடு நீங்குதல் இல்லாமையாலே அஜ்ஞாநத்தை நினைத்தல் கூடும்; பிற்பட்டவர்கள், மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள் ஆகையாலே, அஜ்ஞாநமிருப்பதாக நினைத்தல் தங்களைப் புகலற்றவர்களாகக் கருதித் தாழ்வாக நினைத்தல் காரணமாமித்தனை. (24)

## 48

இம்மூன்றும், மூன்று தத்துவத்தையும் பற்றி வரும்.[1]

என்பது சூத்திரம்.

அவ :—அஜ்ஞாநம், ஆன்மஞாநம், பகவானிடத்து வைத்த பக்தி என்னும் இவை மூன்றற்கும் காரணங்கள் இன்னவை என்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] 'மூன்று தத்துவம்' என்றது, அசித்தும் சித்தும் ஈசுவரனும் என்னும் மூன்று பொருள்களை. இம்மூன்றனையும் மேலே கூறிய மூன்றற்கும் நிரல் நிறையே கொள்க.

**வியாக் :** இம்மூன்றும்—மேலே கூறப்பட்ட இம்மூன்றும், 'மூன்று தத்துவத்தையும் பற்றிவரும்' என்றது, வேறு சாதனங்களைச் செய்வதில் அஜ்ஞானத்திற்கும் ஆற்றலின்மைக்கும் மூலம், கர்மம் காரணமான பிரகிருதி சம்பந்தமாகையாலே, அஜ்ஞாநமானது [1] அசித்துத் தத்துவத்தைப்பற்றி வரும். [2] மற்றைய உபாயங்கள் ஆன்மாவின் தன்மைக்கு முரண்பட்டவை என்று விலக்குதற்கு உடலான ஞாநநிறைவிற்கு அடி, நமஃ பதத்தில் சொல்லும் ஆன்மாவின் தன்மையை உள்ளவாறு காண்டல் ஆகையாலே, ஞாநத்தின் மிகுதி ஆன்ம தத்துவத்தைப்பற்றி வரும். ஒன்றையும் அடைவுபடச் செய்யமாட்டாதபடி உறுப்புகளைக் குலையப்பண்ணும் பக்தியின் வளர்ச்சிக்குக் காரணம், [3] 'காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி' என்னும் பகவானுடைய திருமேனியின் பேரழகு ஆகையாலே, பக்தியால் பரவசப்படுதல் பகவானாகிய தத்துவத்தைப் பற்றி வரும் என்றபடி. (25)

## 49

'என்னான் செய்கேன் ?'[4] என்கிற விடத்தில் இம்மூன்றும் உண்டு.

என்பது சூத்திரம்.

**அவ :**—அதிகாரிகள் மூவர்க்கும் அஜ்ஞாநம் முதலிய மூன்றிலும் தொடர்பு உண்டாயிருக்க, ஒரொன்றே பிரபத்திக்குக் காரணமாகச் சொல்லுகிறது [5] 'ஊற்றத்தைப் பற்ற' என்றிறே சொல்லிற்று ; 'ஒரு அதிகாரியிடத்திலேயே இப்படி இம்மூன்றும் காணலாம் இடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—' 'என் நான் செய்கேன்?' என்கிற இடத்தில் இம்மூன்றும் உண்டு' என்றது, எம்பெருமான், தம்முடைய

---

[1] அசித்து - சரீரம் ; ஞானம் இல்லாதது.

[2] 'மற்றைய உபாயங்கள்' என்றது பத்தி முதலாயினவற்றை.

[3] திருவாய் மொழி, 5.3:4.

[4] 'என் நான் செய்கேன்?' என்பது திருவாய் மொழி, 5.8:3. 'இம்மூன்றும்' என்றது, அஜ்ஞானமும், ஞானாதிக்கியமும், பத்தி பாரவஶ்யமும் என்னும் இவற்றை.

[5] 47-ஆம் சூத்திரம்.

துன்பம் கண்டு இரங்காமையாலே, 'தன்னைப் பெறுமிடத்தில் வேறு சில உபாயங்களைச் செய்யவேண்டும்' என்றிருந்தானாகக் கொண்டு, வேறு உபாயங்களைச் செய்வதற்குத் தகுதியில்லாதபடி அறிவில்லாதவனான நான் 'என் செய்கேன்' [1] என்றும், 'ஞானம் தந்தோமே?' என்னில், 'நீ தந்த ஞானத்தாலே ஆன்மாவின் பாரதந்திரியத்தை உணர்ந்து வேறு சாதனங்களைச் செய்தல் தகுதியற்றது என்றிருக்கிற நான் என் செய்கேன்?' [2] என்றும், ஆன்மாவின் பரதந்திரத் தன்மைக்குச் சேராதாகிலும் உன்னைப் பெறலாமாகில் அவற்றைச் செய்யவுமாமே, ஞானமாத்திரத்தைத் தந்தாயாகில்; பக்தியின் வடிவத்தையடைந்த ஞானத்தைத் தருகையாலே ஒன்றையும் அடைவுபடச் செய்தற்கு ஆற்றல் இல்லாதபடி பக்தியினால் பரவசப்பட்ட நான் என் செய்கேன்?' [3] என்றும் இம்மூன்றும் ஆழ்வார்க்குத் திருவுள்ளம் ஆகையாலே அவ்விடத்தில் இம்மூன்றும் உண்டு என்கை. ஆகையால், அவ் விடத்திலே காணலாம் என்பது கருத்து. (26)

## 50

அங்கு ஒன்றைப் பற்றியிருக்கும்.[4]

என்பது சூத்திரம்.

**அவ :—**'ஆனால், இம்மூன்றும் அவ்விடத்தில் பிரபத்திக்குக் காரணங்கள் ஆகின்றனவோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**அங்கு ஒன்றைப் பற்றியிருக்கும்—அவ்விடத்தில் பிரபத்தியானது மூன்றிலும் வைத்துக்கொண்டு பக்தியினால் பரவசப்பட்டிருத்தலாகிற ஒன்றனையே தனக்குக் காரணமாகப் பற்றியிருக்கும் என்றவாறு. (27)

## 51

முக்கியம் அதுவே.[5]

என்பது சூத்திரம்.

---

1 இது வரையிலும் அஜ்ஞானத்தைக் காட்டியவாறு.

2 இது வரையிலும் ஞானாதிக்கியத்தைக் காட்டியவாறு.

3 இது வரையிலும் பத்திபாரவஸ்யதையைக் காட்டியவாறு.

4 ஒன்றை - பத்திக்குப் பரவசப்பட்டு இருத்தலாகிற ஒன்றனை.

5 'அதுவே முக்கியம்' என மாறுக. அதுவே - பத்தியினால் பரவசப்பட்டுச் செய்யும் பிரபத்தியே.

**அவ :**—' இந்த மூன்று காரணங்கள் அடியாக வரும் பிரபத்தி களுள் முக்கியமானது யாது?' என்ன அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—அதுவே முக்கியம்—அதாவது, பக்தியினாலே பரவசப்பட்டதன் அடியாகப் பிரபத்தி செய்யுமிடத்தில் பேற்றிலே ருசி குறைவற உண்டாகையாலே பக்தியினாலே பரவசப்பட்டுப் பிரபத்தி செய்யும் அதுவே முக்கியம் என்றபடி. (28)

## 52

**' அவித்யாத: ' என்கிற சுலோகத்திலே இம்மூன்றும் சொல்லிற்று.**

என்பது சூத்திரம்.

**அவ :**—பிரபத்தி செய்யும் அதிகாரிகளை இங்ஙனம் மூன்று வகையாகப் பிரிப்பதற்குப் பிரமாணம் உண்டோ? என்ன, பட்டர் அருளிச் செய்த சுலோகத்தை முதலில் பிரமாணமாகக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—" அவித்யாத: " என்கிற சுலோகத்திலே இம் மூன்றும் சொல்லிற்று—[1]" அவித்யாதோ தேவே பரிப்ருட தயா வா விதிதயா ஸ்வபக்தேர் பூம்நா வா ஜகதி கதி மந்யாம விதுஷாம், கதிர்கம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வய மநோ ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸகலு பகவாந் ஶௌநகமுநி: " இந்தச் சுலோகத்தின் பொருள், ஜிதந்தா வியாக்கியானத்தின் [2]முன்னுரையிலே [3]' பிரபத்திக்கு அதிகாரிகள் அஜ்ஞரும் சர்வஜ்ஞரும் பக்தி பரவசரும் என்று திரிவிதமாகப் பட்டர் அருளிச் செய்தாரிறே ' என்று தொடங்கி, ' அஜ்ஞன் ஆகிறான், பகவல்லா

---

[1] இது பட்டர் அருளிச் செய்த சுலோகம்.

[2] ' முன்னுரையிலே ' என்பதனைப் பின்னே வருகின்ற ' என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தார் ' என்பதனோடு கூட்டுக.

[3] பட்டர் அருளிச்செய்த சுலோகத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை எழுதியுள்ள வியாக்கியானத்தை அப்படியே எடுத்துக் காட்டுகிறார் ' பிரபத்திக்கு ' என்றது முதல் ' ஸ்ரீ சௌனக பகவான் விரித்துரைக்கப் பெறுவதே என்கிறார் ' என்பது முடிய. ' என்கிறார் ' என்பதற்கு வினைமுதல், பட்டர்.

பத்திற்குத் தன் பக்கலில் ஞான சக்திகள் இல்லாதவன்; சர்வஜ்ஞன் ஆகிறான், தேசகால வஸ்துக்களால் பரிச்சேதிக்க வொண்ணாத வைபவத்தையுடையவன் ஈச்வரன் என்றிருக்கை யாலே [1] அநந்ய சாத்யன் என்றிருக்குமவன்; பக்தி பரவசன் ஆகிறான், ஞாநசக்திகள் உண்டாயிருக்கச் செய்தே அடைவுபட அநுஷ்டிக்க மாட்டாதவன்; இவர்கள் மூவரும் பகவத் விஷய மொழிய வேறு உபாயம் உண்டு என்று அறியாதவர்கள்; இவர் களுக்குப் பிராபகனுமாய்ப் பிராப்யனுமாயிருக்கும் சர்வேச்வரன்' என்று ஜிதந்தை என்ற பெயரையுடைய மந்திர ரகசியத்தை முற்றறிவினனான ஸ்ரீ சௌநக பகவான் விரித்துரைக்கப் பெறுவதே என்கிறார்' என்று ஆச்சான் பிள்ளை அருளிச் செய்தார்.

[2] 'ஞாநாதிக்கியத்தாலே பிரபந்நர்' என்கிறவிடத்தில் ஆன் மாவின் தன்மையை உள்ளவாறே உணர்ந்த உண்மை ஞாநம் பிரபத்திக்குக் காரணமாகச் சொல்லிற்று; இந்தச் சுலோகத்தில் பகவான் வேறு உபாயங்களால் பெறத்தக்கவன் அல்லன் என்னும் ஞாநம் பிரபத்திக்குக் காரணமாகச் சொல்லிற்று; ஆகையால், [3] இவ்விரண்டும் ஞாநாதிகருக்கு, வேறு கதி இல்லாமை முன்னாக பிரபத்தி செய்வதற்குக் காரணங்களாம் என்று கொள்ள வேண்டும். 'ஏன்? மேல் 'ஞாநாதிக்கியத்தாலே பிரபந்நர் பூர் வாசாரியர்கள்' என்ற சூத்திரத்திலும் இச்சுலோகத்தில் கூறி யுள்ள பொருளையே கொண்டாலோ?' எனின், [4] கொள்ள வொண்ணாது; [5] "இம்மூன்றும் மூன்று தத்துவத்தையும் பற்றி வரும்' என்ற சூத்திரப் பொருளோடு சேராமையால். (29)

---

[1] அநந்ய சாத்யன் – வேறு சாதனங்களால் அடைய முடியாதவன்.

[2] 46ஆம் சூத்திரம் பார்க்க.

[3] இவ்விரண்டும் – ஆன்மாவின் தன்மையை உள்ளவாறே உணர்ந்த உண்மை ஞானமும், பகவான் அநந்யசாத்தியன் என்னும் ஞானமும்.

[4] '46ஆம் சூத்திரத்திலே உள்ள 'ஞானாதிக்கியம்' என்பதற்கு இச்சுலோகத்தில் கூறியுள்ள 'பகவான் அநந்யசாத்தியன்' என்று உணரும் ஞானத்தையே பொருளாகக் கொண்டால் வரும் இழுக்கு என்னை?' என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கொள்ள வொண்ணாது' என்று தொடங்கி.

[5] 48ஆம் சூத்திரம்.

## 53

'இதம் சரணம் அஜ்ஞாநாம்.'

என்பது சூத்திரம்.

அவ :—பின்னர், பிரபத்தி அதிகாரிகளை மூன்றுவகையாகப் பிரித்த விஷயமாக, எல்லாவுலகங்கட்கும் தாயாய் நம்பத் தக்கவளான பிராட்டி லக்ஷ்மி தந்திரத்தில் அருளிச் செய்த வசனத்தைப் பிரமாணமாக எடுத்துக் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—[2] 'இதம் ஶரணம் அஜ்ஞாநாம் இதமேவ விஜா நதாம், இதம் திதீர்ஷதாம்பார மிதம் ஆநந்த்யம் இச்சதாம்.' இந்தச் சுலோகத்தில் உள்ள 'இதம்' என்ற சுட்டு, மேல் சுலோகத்தில் சொல்லப்பட்ட 'சரணாகதியை'ச் சுட்டுகிறது. [3] 'அபாய உபாய நிர்முக்தா மத்தியமாம் ஸ்திதிமாஸ்திதா ஶரணாகதிः அக்ர்யைஷா ஸம்ஸாரார்ணவதாரிணீ' என்றிறே மேல் சுலோகத்தில் சொல்லப்பட்டது. [4] இங்கே இலிங்க

---

[1] இந்தச் சுலோகம் லக்ஷ்மீ தந்திரத்தில் பிராட்டி அருளிச் செய்தது.

[2] இதம் - இந்தப் பிரபத்தியே, அஜ்ஞாநாம் - அறிவில்லாதவர் களுக்கும், ஶரணம் - உபாயம். இதமேவ - இந்தப் பிரபத்தியே, விஜாநதாம் - விசேஷஞானமுடையவர்களுக்கும், ஶரணம் - உபாயம். இதம் - இது, பாரம் - பிறவிப் பெருங்கடலின் கரையை, திதீர்ஷதாம் - கடக்க வேண்டும் என்ற விருப்பமுள்ளவர்களுக்கும், சரணம் - உபாயம். இதம் - இது, ஆநந்த்யம் - இறைவனுடைய அநுபவத்தைப் பெறுதற்கு, இச்சதாம் - விரும்புகிறவர்களுக்கும், ஶரணம் - உபாயம் என்பது பொருள்.

[3] மேல் சுலோகத்தில் சரணாகதி சொல்லப்பட்டிருப்பதை எடுத்துக் காட்டுகிறார் 'அபாய' என்று தொடங்கி. "அபாயம் - பாவங்களி னின்றும், உபாயம் - உபாயங்களினின்றும், நிர்முக்தா - விடப்பட்டு, மத்யமாம் - நடுவான, ஸ்திதிம் - நிலையை, ஆஸ்திதா - அடைந் துள்ள, அக்ர்யா - முதன்மையான, ஏஷா - இந்த, சரணாகதி - சரணா கதியானது, சம்சாரார்ணவ தாரிணீ - சம்சாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவு படுகிறவர்களைத் தாண்டச் செய்கிறது என்பது சுலோகத்தின் பொருள்.

[4] 'இங்கே லிங்கவேறுபாடு' என்றது, 'இதம்' என்ற சொல் லானது 'சரணாகதி' என்ற சொல்லைச் சுட்டுமேயாயின், இரண்டு இலிங்கமும் (பால்) ஒன்றாயிருக்க வேண்டாவோ? மாறுபட்டு

வேறுபாடு மேலே உள்ள 'ஶரணம்' என்ற சொல்லை நோக்கி வந்தது.

இந்தச் சுலோகத்தில் [1] முன்னடியில் அஜ்ஞரையும் சர்வஜ்ஞரையும் வெளிப்படையாகச் சொல்லியிருக்கையாலே [2] மேல் அடி பக்தி பரவசரைச் சொல்லுகிறது என்று கொள்ளவேண்டும். 'இதம் திதீர்ஷதாம்பாரம்' என்றது, [3] விரோதியானது விரைவிலே நீங்கவேண்டும் என்னும் விரைவு உடையாருக்கு என்றபடி. 'ஆநந்த்யம் இச்சதாம்' என்றது, ஆன்மாவிற்குத் தக்கதான நிறைந்த பகவானுடைய அநுபவத்தைப் பெற்றால் அல்லது தரிக்கமாட்டாதார்க்கு என்றபடி. [4] இவை இரண்டும் பக்தியினுடைய மிகுதியாலே வருமவையேயிறே. பக்தியினால் பரவசப்பட்டிருக்கும் தன்மை, மற்றைய சாதனங்களைச் செய்வதில் ஆற்றலின்மைக்கும் உறுப்பாய், வேண்டாதன கழிவதிலும் வேண்டுவன பெறுவதிலும் உண்டான காலதாமதத்தைப் பொறுக்க மாட்டாமைக்கும் உறுப்பாயிறே இருப்பது. அவற்றுள், காலதாமதத்தைப் பொறுக்க மாட்டாமைக்கு உடலான தன்மையை இதில் சொல்லுகிறது.

---

வந்துள்ளனவே?' எனின் என்றபடி. 'இதம்' என்பது நபும்சகலிங்கம்; 'ஶரணாகதி:' என்பது ஸ்திரீ லிங்கம். இந்த இலிங்க வேறுபாட்டினை அமைத்துக்காட்டுகிறார் 'இலிங்கவேறுபாடு மேலே உள்ள ஶரணம் என்ற சொல்லை நோக்கி வந்தது' என்று. அதாவது, இதம் என்ற சொல்லையடுத்துள்ள 'ஶரணம்' என்ற சொல், நபும்சகலிங்கமாகையாலே, அதற்கு விசேஷணமான 'இதம்' என்ற நபும்சகலிங்கம் அமையும் என்றபடி. இன்றேல், ஸ்திரீலிங்கமான 'இயம்' என்ற சொல் இங்கு வரல்வேண்டும்.

[1] 'முன்னடியில்' என்றது, 'இதம் ஶரணம் அஜ்ஞாநாம்; இதமேவ விஜாநதாம்' என்ற அடியில் என்றபடி.

[2] 'இதம் திதீர்ஷதாம் பாரமிதம் ஆநந்த்யம் இச்சதாம்' என்றது மேலடி.

[3] இந்த அடிக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'விரோதியானது' என்று தொடங்கி.

[4] 'இவை இரண்டும்' என்றது, விரோதியானது விரைவிலே நீங்கவேண்டும் என்னும் விரைவும், பகவானுடைய அநுபவத்தைப் பெற்றால் அல்லது தரிக்கமாட்டாத தன்மையும்.

[1]'ஆனால், [2]மேல், பக்தியினால் பரவசப்பட்டிருத்தலை ஆற்ற லின்மைக்குக் காரணமாகவன்றோ சொல்லிப் போந்தது? அதற்கு இச்சுலோகம் பிரமாணமாமோ?' என்னில், பிரபத்தி அதிகாரி களுடைய மூவகைப்பட்ட பிரிவுகளைக் காட்டுகிற அளவே இவ்விடத்தில் வேண்டப்படுகிறதாகையாலே இதனைப் பிரமாண மாகச் சொல்லத் தட்டு இல்லை. [3]'அவித்யாதః' என்கிற சுலோகத்தில் ஞாநாதிக்கியத்திற்குக் காரணமாகச் சொன்னதும், அதற்கு [4]மேலே சொல்லிப் போந்ததும் வேறுபட்டனவாயிருக்க, அதிகாரிகளுடைய மூவகைப்பட்ட பிரிவிற்கு அதனைப் பிரமாண மாகச் சொன்னது போலே இதனையும் கொள்க. (30)

## 54

பக்திதன்னிலே அவஸ்தா பேதம் பிறந்த
வாறே இதுதான் குலையக்கடவதாய் இருக்கும்.[5]

என்பது சூத்திரம்.

அவ:—'ஆக, பிரபத்தி அதிகாரிகளுடைய மூன்று வகை யான பிரிவுகளுக்கும் பிரமாணம் காட்டிநின்றார் மேல். இந்த மூன்று வகையான பிரபத்திகளுள்ளும் பக்தியினால் பரவசப்பட் டுச் செய்யும் பிரபத்தியே முக்கியம் என்று [6] மேலே அருளிச் செய்தார். இத்தகைய பிரபத்தியிலே நிலை நின்றவர்கள் தம் நிலை குலைந்து பகவானைப் பெறும்பொருட்டாகத் தம் முயற்சி யிலே மீளுவது, அவன் வரக்கொள்ள அவனையும் வெறுப்பது ஆகிற இவற்றிற்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—பக்தி தன்னிலே அவஸ்தா பேதம் பிறக்கையா வது, உறுப்புகள் உடைகுலைப்பட்ட காரணத்தாலே தாமாக

[1] 'ஆனால்' என்றது, வேண்டாதன கழிவதிலும் வேண்டுவன பெறுவதிலும் உண்டாகும் காலதாமதத்தைப் பொறுக்கமாட்டாமையைப் பத்தி பரவசருக்கு உறுப்பாக இச்சுலோகம் சொல்லுமானால் என்றபடி.

[2] 'மேல்' என்றது 49ஆம் சூத்திரத்தில்.

[3] இது 52ஆம் சூத்திரம்.

[4] 'மேலே' என்றது 45ஆம் சூத்திரம்.

[5] அவஸ்தா பேதம் - நிலைவேறுபாடு. இதுதான் - இந்தப் பிரபத்தி தான்.

[6] 'மேலே' என்றது, 51ஆம் சூத்திரத்தில் என்றபடி.

ஒரு முயற்சி செய்தற்கு ஆற்றல் இல்லாதவராய், அவனையே உபாயமாக அறுதியிட்டு அவன் வரவு பார்த்திருக்கும் நிலை அன்றி, கண்ணுஞ்சுழலையிட்டு யாதேனும் ஒருபடியாலேயாகிலும் அவனை இப்பொழுதே பெறவேண்டும் என்னும் அளவு கடந்த விரைவின் நிலை விளைதல். இதுதான் இந்தப் பிரபத்தியானது, ‘ குலையக்கடவதாயிருக்கும் ’ என்றது, அத்தகைய நிலை பிறந்தால் [1] ‘ என் நான் செய்கேன் ?’ என்று தம்முடைய முயற்சியில் தொடர்பு அற்றுப் பகவானிடத்தில் தம்முடைய பாரத்தை வைத்தவராய் இருக்கும் இருப்புக் குலைதல் என்றபடி. (40)

## 55

தன்னைப் பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—இப்படிப் பிரபத்திநிலை குலையும்படி பிறந்த பக்தியும், வெவ்வேறு வகைப்பட்ட நிலைகளை விளைக்கும் என்னுமதனை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—‘ தன்னைப் பேணவும் பண்ணும் ’ என்றது, [2]‘ காறை பூணும் ’ என்ற திருப்பாசுரத்தின்படியே அவன் வரவிற்கு உடலாகத் தன்னை அலங்கரிக்கும்படி பண்ணுகை என்றபடி. அதாவது, பகவானைப் பெறுதற்கு உறுப்பாகத் தன் முயற்சியிலே மூட்டும் என்றபடி. இது, [3] மடலெடுத்தல் முதலானவற்றிலே மூட்டுவதற்கும் உபலக்ஷணம். ‘ தரிக்கவும் பண்ணும்’ என்றது, அரைக்கணம் அவனை ஒழியத்தரிக்கமாட்டாமையாலே அவன் வரவிற்கு உடலாகத் தன் முயற்சியிலே மூளும்படி செய்த அந்தப் பக்திதானே, அவன் வரக்கொள்ள, ‘ காலம் நீட்டித்தான் ’ என்ற கோபத்தாலே [4] ‘ போகு நம்பீ ’, ‘ கழகம் ஏறேல் நம்பீ ’ என்று அவனை வெறுத்துத் தள்ளி தரிக்கும்படி செய்கை.

---

[1] 49ஆம் சூத்திரம் பார்க்க.

[2] பெரியாழ்வார் திருமொழி, 3.7:8.

[3] திருவாய்மொழி ‘ மாசறு சோதி.’ என்ற திருப்பதிகத்தாலும், சிறிய திருமடல் பெரிய திருமடல் என்னும் பிரபந்தங்களாலும் உணர்க.

[4] திருவாய்மொழியில் ‘ மின்னிடை மடவார் ’ என்ற திருப்பதிகத்தில் காண்க.

ஆக, இவை இரண்டாலும் [1] 'என் நான் செய்கேன்' என்றும், 'தரியேன் இனி' என்றும் இருக்கும் இருப்பிற்கு மாறுபட்ட செயலை விளக்கும் என்றபடி.

ஆகையாலே, பிரபத்தியினுடைய நிலைகுலைந்து, தம்முடைய முயற்சி முதலியவற்றிலே இழிதற்கு அடி, பக்தியினுடைய நிலை வேறுபாடு என்பது கருத்து. (32)

## 56

**இந்த ஸ்வபாவ விசேஷங்கள் கல்யாண குணங்களிலும், திருச்சரங்களிலும், திருநாமங்களிலும், திருக்குழலோசையிலும் காணலாம்.[2]**

என்பது சூத்திரம்.

அவ :—'தன்னைப் பேணவும் பண்ணும் தரிக்கவும் பண்ணும்' என்று எம்பெருமான் வருகைக்கு உடலாக வேண்டிய முயற்சிகளைச் செய்கையும் அவன் வரக்கொள்ள அவனை விரும்பாமையும் ஆகிற ஒன்றற்கொன்று முரண்பட்ட தன்மைகளை விளக்கும்படியை மேல் அருளிச் செய்தார். இப்படி, பக்தியானது தனது வேறுபட்ட நிலை விசேடங்களாலே மக்களுக்கு விளக்கும் ஒன்றற்கொன்று முரண்பட்ட தன்மைகள் அவ்வெம்பெருமான் விஷயத்தில் அன்றிக்கே, அவனுடைய சம்பந்தமுடைய பொருள்கள் விஷயமாகவும் காணலாம் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இந்த ஸ்வபாவ விசேஷங்கள்' என்று, மேலே சொன்னவற்றையே மீண்டும் சொல்லுகிறது அன்று; இப்படிப்பட்ட தன்மை விசேடங்கள் என்றபடி. இந்த—இப்படிப்பட்ட. அவையாவன : அநுபவிக்கப்படுகின்ற பொருள் ஒரே தன்மைத்

[1] 'என் நான் செய்கேன்?' என்ற நிலைக்கு மாறுபட்ட நிலை, 'காறைபூணும்' என்ற திருப்பாசுரத்திற்கூறிய நிலையும், மடலெடுத்தலும். 'தரியேன் இனி' என்ற நிலைக்கு மாறுபட்ட நிலை 'மின்னிடை மடவார்' என்ற திருப்பதிகத்தில் கூறிய நிலை. 'தரியேன்' என்பது திருவாய்மொழி, 5.8:7.

[2] இந்த ஸ்வபாவ விசேடங்கள் - இப்படிப்பட்ட நிலை விசேடங்கள். அதாவது, ஒரு பொருளே நல்லதாகவும் தீயதாகவும் தோன்றுகிற நிலை விசேடங்கள் என்றபடி. சரம் - அம்பு. திருநாமம் - திருப்பெயர்.

தாகவிராநிற்கவும் அதனை அநுபவிக்கிறவர்களுக்கு நலமாகத் தோற்றுகையும் தீதாகத் தோற்றுகையும்.

கல்யாண குணங்களிலும்— [1] 'கோவிந்தன் குணம் பாடி ஆவி காத்திருப்பேன்' என்று தரித்திருப்பதற்குக் காரணமாகவும், [2] 'வல்வினையேனை ஈர்கின்ற குணங்களையுடையாய்' என்று நாசகமாகவும் சொல்லுகையாலே கல்யாண குணங்கள் விஷயமாகவும்,

திருச்சரங்களிலும்— [3] 'சரங்கள் ஆண்ட தண் தாமரைக் கண்ணனுக்கன்றி என் மனம் தாழ்ந்து நில்லாதே' என்று தரித்திருப்பதற்குக் காரணமாகவும், [4] 'சரங்களே கொடிதாய் அடுகின்ற' என்று நாசகமாகவும் சொல்லுகையாலே திருச்சரங்கள் விஷயமாகவும்,

திருநாமங்களிலும்— [5] 'திருமாலைப் பாடக்கேட்டு மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே' என்று தரித்திருப்பதற்குக் காரணமாகவும் [6] 'கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்' என்று நாசகமாகவும் சொல்லுகையாலே திருப்பெயர்கள் விஷயமாகவும்,

திருக்குழல் ஓசையிலும்— [7] 'எங்களுக்கே ஒருநாள் வந்து ஊத உன் குழல் இன்னிசை போதராயே' என்று தரிப்பதற்குக் காரணமாகவும் [8] 'அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ' என்று நாசகமாகவும் சொல்லுகையாலே திருக்குழல் ஓசை விஷயமாகவும் காணலாம் என்றபடி.

என்றுமொக்க இன்பம் தருகின்ற பொருள்களாகவிருக்கிற கல்யாண குணங்கள் முதலானவைகள், நலம் தருவனவாகத் தோற்றுவதும் தீங்கு தருவனவாகத் தோற்றுவதும் ஆகிற தன்மை, அநுபவிக்கின்றவர்களான இவர்களுடைய பக்தியின்

[1] நாச்சியார் திரு. 8:3.
[2] திருவாய். 8.1:8.
[3] பெரிய திருமொழி, 7.3:4.
[4] பெரிய திருமொழி, 10.2:9.
[5] திருநெடுந்தாண்டகம், 14.
[6] திருவாய். 9.5:8.
[7] பெருமாள் திருமொழி, 6:9.
[8] திருவாய். 9.9:5.

தன்மை விசேடங்களாலேயிறே. அங்ஙனன்றி, கல்யாண குணங்கள் முதலாயவற்றின் செயல்களாலாய விகார வேறுபாட்டால் அன்று. ஆகையால், பக்தியினுடைய நிலை வேறுபாடுகளாலே தோன்றுவனவான செயல் விசேடங்கள் இந்த இந்தப் பொருள்கள் விஷயமாகவும் காணலாம் என்கிறார்.

கல்யாண குணங்கள் முதலானவற்றை நலம் தருவனவாகவும் தீங்கு தருவனவாகவும் பேசுகிறவிடத்தில் இரு வகைப்பட்ட திருப்பாசுரங்களும் ஒருவருடைய திருப்பாசுரங்களாக இருந்தன வில்லையேயாகிலும், ஆழ்வார்கள் எல்லாரும் ஒரே தன்மையராகையாலும் எல்லாருடைய பக்திகளும் பகவானுடைய திருவருளால் பெற்ற பரபக்திகள் ஆகையாலும் அந்தப் பக்தியினுடைய நிலை விசேடங்களைக் காட்டுதல் மாத்திரமே இவ்விடத்திற்கு வேண்டுவதாகையாலே விரோதம் இல்லை.

‘நன்று. ‘சரங்களே கொடிதாய் அடுகின்ற’ என்கிற இது, தோற்ற அரக்கர்கள் கூறும் பாசுரம் அன்றோ? அதனை, ‘சரங்கள் ஆண்ட’ என்ற திருப்பாசுரத்திற்கு மறுதலைப் பாசுரமாகச் சொல்லலாமோ?’ எனின், ‘ஸ்ரீ ராமபிரானுடைய வெற்றி தமக்கு விருப்பமாகையாலே, அந்த வெற்றிக்கு இலக்காய்த் தோற்ற அரக்கர்கள் நிலை[1] பிறந்து, பிராட்டிமார் நிலை பிறந்து பேசுமாறு போலே, தாமான தன்மை தோற்றாமல், தோற்ற இராக்கதர்களுடைய பாசுரத்தாலே வெற்றியைப் பேசி அநுபவிக்கிறார்’ என்றேயிறே அத்திருமொழிக்கு வியாக்கியானம் செய்த ஆசாரியர்கள் அருளிச் செய்வது? ஆகையால், தம்முடைய பெருக்கெடுத்த பக்தியின் தன்மையாலே அந்த இராக்கதர்களுடைய நிலை பிறந்த பின்பு திருச்சரங்கள் செய்கிற தீங்கும் தமக்கேயாய்த் தோற்றிப் பேசுகையாலே அப்படிச் சொல்லக் குறையில்லை.

[2]“அன்றிக்கே, ‘தன்னைப் பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும்’ என்கிற இவை இரண்டாலும் அவன் தானே வருமள

[1] ‘பிறந்து’ என்பதனை, மேலே வருகின்ற ‘தாமான தன்மை தோற்றாமல்’ என்றதனோடு கூட்டுக. ‘பிறந்து, தோற்றாமல், வெற்றியைப் பேசி அநுபவிக்கிறார்’ என்று முடிக்க.

[2] இனி, மேற்சூத்திரப் பொருளை, இச்சூத்திரத்தில் கூறிய பொருள்களிலும் சார்த்தி, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் ‘அன்றிக்கே’ என்று தொடங்கி.

வும் தரியாமல் வரவுக்கு உடலாகச் சாதனங்கள் சிலவற்றைச் செய்யப் பண்ணுவது, வரக்கொள்ளப் புலவியாலே அவனைத் தள்ளித் தரித்திருக்கப் பண்ணுவதாம்படியையன்றோ [1] மேலே சொல்லிற்று? இப்படி மாறுபட்ட நிலைகளை ஒன்றுதானே விளைக்கும் என்னுமிது, வேறு சில விஷயங்களிலும் காணலாமோ?'' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இப்படிப்பட்ட நிலை விசேடங்கள் 'கோவிந்தன் குணம் பாடி' என்று தொடங்கி மேலே கூறியவாறே ஒரு நிலையிலே தரித்திருப்பதற்குக் காரணமாகப் பேசுவது, ஒரு நிலையிலே தீங்கு தருவதாகப் பேசுவதாம்படி, இவர்களுக்குத் தரிப்பும் துன்பும் ஆகிற மாறுபட்ட நிலைகளை விளைக்கிற கல்யாண குணங்கள் முதலியவற்றிலேயும் காணலாம் என்று பொருள் கூறலுமாம்.

ஆக, 'பிரபத்திக்கு' என்று தொடங்கி இத்துணையும் பிரபத்தியின் பெருமையையும், பிரபத்தி செய்வதற்கு இடமான அர்ச்சாவதாரத்தின் பெருமையினையும், பிரபத்தி செய்தற்குரிய அதிகாரிகளுடைய மூவகைப்பட்ட பிரிவுகளையும், மூன்று விதமான பிரபத்திகளிலும் பக்தியின் வசப்பட்டுச் செய்யும் பிரபத்தியே முக்கியம் என்பதையும், அந்தப் பிரபத்திக்குத் தனக்குக் காரணமான பக்தியின் நிலை வேறுபாடுகளாலே வரும் குலைதலையும், அந்தப் பக்தியினுடைய நிலை வேறுபாடுகள் செய்விக்கும் தன்மைகளையும் அருளிச்செய்தாராயிற்று. (33)

## 57

இது தன்னைப் பார்த்தால் பிதாவுக்குப் புத்திரன் எழுத்து வாங்குமாபோலே இருப்பது ஒன்று.

என்பது சூத்திரம்.

அவ:—மேல் முப்பத்து நான்காம் சூத்திரத்தில் சொல்லப் பட்டவர்களான தருமபுத்திரர் முதலான அதிகாரிகள் பக்கலில் சாதனமாகச் செய்த செயல் காண்கையாலும், கர்மம் ஞானம் பக்தி பிரபத்தி என்று உபாயங்களோடே சேர்த்துப் பேசப்

---

[1] 'மேலே' என்றது மேற்சூத்திரத்திலே என்றபடி.

பட்டுப் போருகையாலும், [1]‘எந்த ஐஸ்வரிய காமனாலே எந்த ஐஸ்வரியம் வேறு சாதனங்களால் பெற இயலாதது? அந்த அதிகாரியாலே அந்த ஐஸ்வரியம் பிரபத்தியாலேயே பெறப் படுகின்றது; எந்த முமுக்ஷுவாலே, திரும்ப வருதல் இல்லாத மேலான இடம் கர்மயோகத்தாலும் ஞானயோகத்தாலும் பக்தி யோகத்தாலும் பெற இயலாதது? அந்த அதிகாரியினாலே அந்தக் கைவல்யமானது பிரபத்தியினாலேயே அடையப்படுகிறது; கைவல்யத்தினும்மேலான பரமாத்மாவின் அனுபவமானது அந்த பிரபத்தியினாலே கிடைக்கிறது’ என்றும், [2]‘அறிவில்லாதவர் களுக்கும் இந்தப் பிரபத்தியே உபாயம்’ என்றும் இப்படியே சாஸ்திரங்களிலே இதனைச் சாதனமாகச் சொல்லுகையாலும், இந்தப் பிரபத்திக்கு உபாயமாக எண்ணக்கூடிய தகுதி உண்டாகையாலே, அதனை விலக்குவதற்காக அதற்கு உடலானவை அனைத்தையும் அருளிச்செய்கிறார் மேல். அவற்றுள், இந்தப் பிரபத்தியை உபாயமாகக் கொண்டால் வரும் குற்றத்தை முதலில் இச்சூத்திரத்தால் அருளிச்செய்கிறார்.

வியாக் :—‘இது தன்னைப்பார்த்தால்’ என்றது, இம்மக்கள் இறைவன் திறத்தில் செய்யும் இப்பிரபத்தியை உபாயம் என்று சொல்லப்பார்த்தால் என்றபடி. இனி, இறைவன் தங்களைக் காப்பதற்குக் காரணமாக மக்கள் செய்யும் இப்பிரபத்தியை நிரூபித்தால் என்று இங்ஙனே [3]சொல்லை வருவிக்காமல் பொருள் கூறலுமாம். அப்பொழுதும் பொருள் ஒக்கும்.

‘பிதாவுக்குப் புத்திரன் எழுத்து வாங்குமா போலே இருப்பது ஒன்று’ என்றது, தன்னைத் தோற்றுவித்தவன் ஆகையாலே நலத்தையே நாடுமவனாய், தான் அறியாத

[1] யத்யேந காம காமேந நஸாத்யம் ஸாதநாந்தரை:
முமுக்ஷுணா யத்ஸாங்க்யேந யோகேந நசபக்தித:
ப்ராப்யதே பரமம் தாம யதோ நாவர்த்ததேபுந:
தேந தேநாப்யதே தத்தத் ந்யாஸேநைவ மஹாமுநே
பரமாத்மாச தேநைவ ஸாத்யதே புருஷோத்தம:
என்பது, லக்ஷ்மீ தந்திரம்.

[2] ‘இதம் ஶரணம் அஜ்ஞாநாம்’ என்பது லக்ஷ்மீ தந்திரம்.

[3] ‘சொல்லை வருவிக்காமல்’ என்றது, மேலே கூறிய பொருளில் ‘உபாயம்’ என்ற சொல்லை வருவித்துப் பொருள் அருளிச்செய்தார். இப்பொருளில் அங்ஙனம் வருவிக்க வேண்டாமலே என்றபடி.

நிலையிலும் தன்னைப் பாதுகாத்துக்கொண்டு போதரும் தமப்பனிடத்தில், புத்திரனானவன் தான் அறிந்த நிலையிலே 'என்னை நீ காக்க வேண்டும்' என்று எழுத்து வாங்கினால் இரண்டு தலைக்கும் உண்டான உறவிற்குக் கொத்தையாமாறு போலே, இம்மக்கள் உளர் ஆவதற்குக் காரணனாய் எல்லா நிலைகளிலும் பாதுகாப்பவனாய்க்கொண்டு போதருகிற [1] அகாரத்தின் பொருளான இறைவனுக்கும் மகாரத்தின் பொருளான இம் மக்களுக்கும் உண்டான [2] சம்பந்தத்திற்குக் குற்றத்தை விளைக்கும் என்றபடி.

[3] எழுத்து வாங்குகையாவது, பாதுகாப்பவன் பெயரைத் தன் மார்பிலே எழுதிக்கொள்ளுதல். (34)

## 58

இது தனக்கு ஸ்வரூபம் தன்னைப் பொருதொழிகை.

என்பது சூத்திரம்.

அவ:—'ஆனால் இதனுடைய தன்மை யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'இது தனக்குச் சொரூபம்' என்றது, இந்தப் பிரபத்திக்கே உரிய சிறப்புத்தன்மை என்றபடி. 'தன்னைப் பொருதொழிகை' என்றது, உபாயமாகப் பற்றுதலாகிற தன்னை, உபாயம் என்று சொல்ல, அத்தன்மையைத் தாங்காதபடியாய்

---

1 'அகாரம் மகாரம்' என்பன, பிரணவத்தில் உள்ள எழுத்துகள். அகாரம் - காப்பவனான இறைவனைக் குறிப்பது. மகாரம் - காக்கப்படும் பொருளான ஆன்மாக்களைக் குறிப்பது.

2 சம்பந்தம் - ரக்ஷகரக்ஷ்ய சம்பந்தம், பிதாபுத்திர சம்பந்தம்.

3 எழுத்து வாங்குகையாவது, சம்பந்தம் இல்லாமல் காப்பாற்றுமவன் பெயரை, சம்பந்தம் இல்லாமல் காப்பாற்றப்படுமவன் தன் மார்பில் எழுதிக்கொள்ளுதல். இதனை, சம்பந்தமுடைய தந்தையின் பெயரைச் சம்பந்தமுடைய புத்திரன் தன் மார்பில் எழுதிக்கொண்டால், பிதாவிற்கும் புத்திரனுக்குமுள்ள சம்பந்தத்திற்குக் கொத்தை தோற்றுமாறு போலே, பிரபத்தியைச் சாதனமாகக் கொண்டால் இறைவனுக்கும் இவனுக்கும் உள்ள சம்பந்தத்திற்குக் கொத்தை தோன்றும் என்று விரித்து உரைத்துக்கொள்க.

இருக்கை. அதாவது, [1] ஆபாதப் பிரதீதியில் ஒழிய, உள்ளபடி நிரூபித்தால் தன்னிடத்தில் உபாயத்தன்மை உண்டு என்னும் எண்ணத்திற்குத் தக்கது ஆகமாட்டாதபடி இருக்கை என்றபடி.

அன்றிக்கே, 'தன்னைப் பொருதொழிகை' என்பதற்கு, உபாயமாகத் தோற்றுகிற தன்னைப் பொருதொழிகை என்று [2] அநத்யாஹாரமாகப் பொருள் கூறலுமாம். இப்படிக் கூறுமிடத்தும் தன்னிடத்தில் உபாயமாகவிருக்கும் தன்மையை எண்ணுதலைப் பொருதொழிகையே பொருளாம். (35)

## 59

அங்கம், தன்னை ஒழிந்தவற்றைப் பொரு தொழிகை.[3]

என்பது சூத்திரம்.

**அவ** :—'சரமச்சுலோகத்தில் இந்தப் பிரபத்தியை [4] அங்கத்தோடுகூட விதிக்கையாலே, [5] 'எது எது அங்கத்தோடு கூடியது, அது அது சாதனம்' என்னும் நியாயம் இதற்கும் வாராதோ?' என்ன, அங்கத்தின் தன்மையைக் காட்டியவளவில் அந்த நியாயம் இதற்கு வாராது என்று பார்த்து, அந்த அங்கத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'அங்கம் தன்னை ஒழிந்தவற்றைப் பொருதொழிகை' என்றது, இறைவனைப் பற்றுதல் வடிவமான "தன்னை ஒழிந்த, மக்கள் செய்கின்ற செயல்களில் ஒன்றனையும்

[1] ஆபாதப்பிரதீதி - மேலெழுந்தோற்றுதல். அதாவது, விசாரித்தறிவதற்கு முன் கண்டமாத்திரத்தில் கேட்ட மாத்திரத்தில் உண்டாகும் அறிவு.

[2] அத்யாகாரம் - பொருள் பொருத்தத்திற்கு வேண்டிய வேறு சொற்களை வருவித்துக்கொள்ளல். அநத்யாகாரமாவது, வேறு சொற்களைக் கொணர்ந்து கூட்டாமல் அங்குள்ள சொற்களுக்குரிய பொருள்களை மாத்திரம் கூறுதல்.

[3] அங்கம் - இந்தப்பிரபத்திக்கு அங்கமாவது.

தன்னை - பிரபத்தியாகிற தன்னை.

[4] 'அங்கத்தோடு கூட' என்றது, 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்றதனை நோக்கி.

[5] 'யத்யத் ஸாங்கம் தத்தத் ஸாதநம்' என்பது ஓர் நியாயம்.

[6] தன்னை ஒழிந்த செயல்களில் என்று கூட்டுக.

ஏற்றுக்கொள்ளாதபடி இருக்கை இதற்கு அங்கமாம். [1] சாதன வடிவமான எல்லாச் செயல்களையும் வாசனையோடு விடுதல் அன்றோ இப்பிரபத்திக்கு அங்கம்? 'எது எது அங்கத்துடன் கூடியது?' என்கிறவிடத்தில் செயல் வடிவமான அங்கத்துடன் கூடியவற்றையே சாதனமாகச் சொல்லுகிறது; அங்ஙனம் அன்றிக்கே, இந்தப் பிரபத்தியினுடைய அங்கம் செயல்களைச் செய்வதில் நின்றும் மீளுந்தன்மையதாகையாலே இதுதானே இப்பிரபத்தி உபாயமாகாது என்றதனைக் குறிக்கும் என்பது கருத்து. (36)

## 60

உபாயம் தன்னைப் பொறுக்கும்; உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்; இது இரண்டையும் பொறாது.[2]

என்பது சூத்திரம்.

**அவ:**—இதனுடைய உபாயம் ஆகாத தன்மையை உறுதிப்படுத்துவதற்காக, சித்தோபாயத்தின் படியையும் [3] சாத்யோபாயத்தின் படியையும் சொல்லி, அவ்விரண்டனையும் நோக்க, இதற்குண்டான வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக்:**—'உபாயம் தன்னைப் பொறுக்கும்' என்றது, சித்தோபாயமான சர்வேசுவரன், விரும்பினவற்றைக் கொடுத்தல்

---

1 'இந்தப் பிரபத்திக்கு அங்கமாவது நிவ்ருத்தி வடிவமானது' என்பதற்குப் பிரமாணம் குறிப்பிடுகிறார் 'சாதன வடிவமான' என்று தொடங்கி.

2 இது மூன்று சூத்திரங்களாக, முன்னைய பதிப்புகளில் தரப்பட்டிருக்கின்றது. மணவாள மாமுனிகள் ஒரு சூத்திரமாகக் கொண்டுள்ளனர். அவதாரிகை நோக்குக. உபாயம் - சித்தோபாயம். அதாவது இறைவனாகிய உபாயம். 'தன்னைப் பொறுக்கும்' என்றதனால் வேறு சாதனங்களைப் பொறாது என்பதனையும் கொள்க. உபாயாந்தரம் - பத்தி. 'இரண்டையும் பொறுக்கும்' என்றது, தன்னையும் பொறுக்கும் அங்கத்தையும் பொறுக்கும் என்றபடி. இது - பிரபத்தி நெறி. 'இரண்டையும் பொறாது' என்றது, தன்னையும் பொறாது, அங்கத்தையும் பொறாது என்றபடி.

3 சாத்யோபாயம் - பத்தி. மக்களால் சாதித்துக்கொள்ளப்படுகிற உபாயம் என்றவாறு.

விருப்பமில்லாதனவற்றை விலக்கல் என்னும் இரண்டனையும் தானே செய்து முடிப்பானாகையாலே தன்னை உபாயம் என்றால் அதற்குத் தகுதியாக இருப்பன் என்றவாறு. [1] 'உபாயமாக விருக்கும் தன்மையும் உபேயமாகவிருக்கும் தன்மையும் தேவரீருக்குச் சொரூபங்கள்; அவை குணங்கள் அல்ல' என்று உபேயமாகவிருக்கும் தன்மையைப் போன்று, உபாயமாகும் தன்மையும் இறைவனுக்குச் சொரூபமாகவிறே இருப்பது. [2] 'எந்தப்பிராமணர்கள் வேதம் அறிந்தவர்களோ, எந்த மக்கள் வேதாந்தம் அறிந்தவர்களோ, அவர்கள் மகாத்துமாவான கிருஷ்ணனை எப்பொழுதும் உள்ளதான மோக்ஷசாதனமாகச் சொல்லுகிறார்கள்'. 'காப்பாற்றுபவனாகவும் உபாயமாகவும் சிறப்புடைய மஹரிஷிகள் உன்னைச் சொல்லுகிறார்கள்;' 'ஞானிகள் (இறைவனை) நித்தியமான உபாயமாகவும் பலமாகவும் பார்க்கிறார்கள்' என்னக்கடவதிறே.

'தன்னைப் பொறுக்கும்' என்னும் இத்துணையே சொல்லி விடுகையாலே, தன்னை ஒழிந்த வேறு சாதனங்களைப் பொறாமை, பொருள் ஆற்றலால் போதரும். இந்தச் சித்தோபாயம் வேறு சாதனங்களின் சேர்க்கையைப் பொறுமலே அன்றோ இருப்பது? [4] 'இவ்வுபாய விசேஷம் ஸ்வவ்யதிரிக்தமாய் இருப்பதொன்றை

---

[1] உபாயமாகவிருக்கும் தன்மையும் இறைவனுக்குச் சொரூபம் என்பதனை விளக்குகிறார் 'உபாயமாக' என்று தொடங்கி.

'உபாயஉபேயத்வே ததிஹ தவ தத்வம் நதுகுணௌ'

என்பது ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத். 87.

[2] 'அவன் சித்தோபாயம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எந்தப் பிராமணர்கள்' என்று தொடங்கி.

[3] யேசவேத விதோ விப்ரா: யேசாத்யாத்மவிதோ ஜநா:
தேவதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்:
என்பது பாரதம், ஆரண்ய பர். 88 : 253.

'சரண்யம் சரணம் சத்வாம் ஆஹுர் திவ்யாமஹர்ஷய:'

'அம்ருதம் சாதனம் சாத்யம் சம்பஶ்யந்திமநீஷிண:'

என்பன பிரமாணம்.

[4] சித்தோபாயம் வேறு உபாயங்களைப் பொறாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'இவ்வுபாய விசேஷம்' என்று தொடங்கி.

இவ்வுபாய விசேஷம் - சித்தோபாயம். ஸ்வவியதிரிக்தமாயிருப்ப தொன்றை - தனக்கு வேறுபட்டதாகவிருக்கும் ஒரு சாதனத்தை. ஆநுகூல்ய சங்கல்பாதிகளுக்கு - நல்லதைச் செய்ய வேண்டும் என்று எண்ணுதல் முதலானவைகளுக்கு. உபாய அங்கத்வமன்றிக்கே -

ஸஹியாமையாலேயிறே ஆநுகூல்ய சங்கல்பாதிகளுக்கு உபாய அங்கத்துவமன்றிக்கே, அவகாதஸ்வேதம் போலே சம்பாவிதஸ்வ பாவத்வம் உண்டாகிறது' என்று இப்பொருளைப் 'பரந்தபடி' யில் இவர்தாமே அருளிச்செய்தாரிறே.

'உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்' என்றது, சித்தோபாயத்திற்கு வேறுபட்டதான சாத்யோபாயம், தம்முடைய பாரதந்திரிய ஞானமில்லாதவராய்த் தம் முயற்சியினை யுடையராய் இருப்பார்க்கு, மோக்ஷத்திற்குச் சாதனமாகச் சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்டதாகையாலே தன்னிடத்தில் உபாயமாக எண்ணும் தன்மையைப் பொறுக்கக்கூடியதாய், தனது தோற்றம் வளர்ச்சி முதலான காரியங்களுக்குச் செயல் வடிவான கர்மம் ஞானம் முதலியவற்றை அங்கமாக விரும்பி யிருக்கையாலே தனக்கு வேருனவற்றையும் பொறுக்கக்கூடிய தாய் இருக்கும் என்றபடி. [1] 'மற்றைய விஷயங்கள் கலவாத பக்தியினுலேயே அடையத்தக்கவன்' என்றும், [2] 'கர்மத்தாலும் ஞானத்தாலும் அலங்கரிக்கப்பட்ட தூய்மையான மனத்தை யுடையவனுடைய வேறொரு பயனையும் கருதாததாயும் இதற்கு மேல் இல்லை என்னலாம்படியதாயுமிருக்கிற பக்தியினுலேயே அடையப்படுகிருன் என்றும், [3] 'ஆயிரம் பிறவிகளிலே செய்

சித்தோபாயத்திற்கு அங்கமாகவில்லாமல், அவகாத ஸ்வேதம் போலே - நெல்குற்றும் போது வெயர்வை உண்டாமாறு போன்று, சம்பாவிதஸ்வ பாவத்வம் உண்டாகிறது - தன்னடையே வரக் கூடிய தன்மை உண்டா கிறது. 'பரந்தபடி' என்பது இந்நூலாசிரியர் அருளிச்செய்த 18 நூல்களுள் ஒன்று.

[1] பக்தியானது தன்னையும் பொறுக்கும்; அங்கத்தையும் பொறுக்கும் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிருர் 'மற்றைய விஷயங்கள்' என்று தொடங்கி.

'பக்த்யா லப்யஸ்த்வநந்யயா'

என்பது கீதை. இது பத்தி தன்னைப் பொறுக்கும் என்பதற்கு மேற்கோள்.

[2] உபய பரிகர்மித ஸ்வாந்தஸ்யஐகாந்தி காத்யந்திக
பக்தி யோகைக லப்ய:

என்பது ஆத்ம சித்தி. இது ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்தது.

[3] ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதிபி:
நராணும் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே.

என்பது, ஸ்மிருதி. இவ்விரண்டும் பத்தியானது அங்கத்தைப் பொறுப் பதற்கு மேற்கோள்கள்.

யப்பட்ட தவமாகிற கர்மத்தாலும் ஞானத்தாலும் பக்தியாலும் மக்களுக்குப் பாவங்கள் நசித்து அதன்பின் கிருஷ்ணனிடத்தில் பக்தியானது உண்டாகிறது' என்றும் சொல்லக்கடவதிறே.

'இது இரண்டையும் பொருது' என்றது, சித்தோபாயத்தைப் பற்றுகின்ற வடிவினதாய், மற்றைய சாதனங்களை விட்டே பெறக்கூடியதாய், அதிகாரிக்குத் தர்மமாய், சொரூபத்திற்குள்ளே அடங்கியதாய் இருக்கிற இந்தப் பிரபத்தி இரண்டையும் பொருததாய் இருக்கும் என்றபடி.

[1] ஆகையால் சித்தோபாயத்திற்கும் சாத்தியோபாயத்திற்கும் வேறுபட்ட தன்மையதாய் இருக்கிற இந்தப் பிரபத்திக்கு உபாயமாகவிருக்கும் தன்மை பொருந்தாது என்றதாயிற்று.

[2] 'அன்றிக்கே, 'இது தனக்கு' என்று தொடங்கும் சூத்திரம் முதலாயினவற்றிற்கு ஆனால், அங்கத்தோடு கூடியதாகச் சாஸ்திரங்களால் விதிக்கப்படுகின்ற இந்தப் பிரபத்தியின் தன்மை யாது? இதற்குச் சொல்லுகிற அங்கந்தான் யாது?' என்ன, அவை இரண்டனையும் அடைவே அருளிச்செய்கிறார் 'இது தனக்கு' என்ற சூத்திரத்தாலும், 'அங்கம், தன்னை' என்ற சூத்திரத்தாலும்.

'ஆனால், தன்னைப் பொறுப்பது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபாயம் தன்னைப் பொறுக்கும்' என்ற வாக்கியத்தால். தன்னையும் தன்னை ஒழிந்தவற்றையும் பொறுக்குமது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்' என்ற வாக்கியத்தால். மேலே கூறிய சித்தோபாயம் சாத்தியோபாயம் என்னும் இரண்டிலும் இப்பிரபத்திக்கு உண்டான வேறுபாட்டினைக் காட்டாநின்றுகொண்டு கூறிய பொருளை [3] நிகமிக்கிறார் 'இது

[1] சூத்திரத்தின் பொருளை முடித்துக் காட்டுகிறார் 'ஆகையால்' என்று தொடங்கி.

[2] வேறும் இரண்டு வகையாக அவதாரிகை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்றும், 'அன்றிக்கே' என்றும் தொடங்கி. இப்பொருள்களில் மூன்று சூத்திரங்களாகக் கொண்டுள்ளமை விளங்குகிறது.

[3] நிகமிக்கிறார் - முடிக்கிறார்.

இரண்டையும் பொருது' என்ற வாக்கியத்தால் என்று இங்ஙனே இயைபு கூறலுமாம்.

அன்றிக்கே, இப்பிரபத்தி, உபாயம் ஆகாது என்னுமதனைத் தெளிவாக்குதற்காக, இதனுடைய தன்மை, அங்கம் என்னும் இரண்டினையும் தாமே அருளிச்செய்கிறார் 'இது தனக்கு' என்ற சூத்திரத்தாலும், 'அங்கம் தன்னை' என்ற சூத்திரத்தாலும். இது உபாயமாகாது என்பதனைத் தெளிவாக்குவதற்காகச் சித்தோபாயத்தின்படியையும் சாத்தியோபாயத்தின்படியையும் காட்டுவோம் என்று திருவுள்ளம்பற்றி, முதலில் சித்தோபாயத்தின்படியை அருளிச்செய்கிறார் 'உபாயம் தன்னைப் பொறுக்கும்' என்ற வாக்கியத்தால். பின்பு சாத்தியோபாயத்தின்படியை அருளிச்செய்கிறார் 'உபாயாந்தரம் இரண்டையும் பொறுக்கும்' என்னும் வாக்கியத்தால். இவை இரண்டிலும் பிரபத்திக்கு உண்டான வேறுபாட்டினைக் காட்டுகிறார் 'இது இரண்டையும் பொருது' என்னும் வாக்கியத்தால் என்று இங்ஙனே இயைபு கூறலுமாம். இவ்விரு வகை இயைபிற்கும் பொருள் வேறுபாடு இல்லை. முன்பு கூறிய பொருளையே கொள்க. (37)

## 61

பலத்துக்கு ஆத்மஞானமும் அப்ரதிஷேதமுமே வேண்டுவது.[1]

என்பது சூத்திரம்.

அவ:— 'இப்படி, இப்பிரபத்தி உபாயம் அல்லாதாகிவிட்டால் பலன் கிடைப்பதற்கு இவன் பக்கலிலும் சில வேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'பலத்துக்கு' என்றது, பலன் கிடைப்பதற்கு என்றபடி. ஆத்மஞானமாவது, தனது சொரூபத்தைப்பற்றிய ஞானம். அதாவது, அவனுக்கே அடிமைப்பட்டிருத்தலையும், அவனாலேயே பாதுகாக்கப்படுதலையும் அறிதல். அப்ரதிஷேதமாவது, ஒரு காரணமும் பற்றாமலே பாதுகாக்கின்றவனாய் உள்ள

[1] அப்ரதிஷேதம் - விலக்காமை.

சர்வேசுவரன் செய்யும் காத்தலாகிற காரியத்தை விலக்காமை. அதாவது, தன்னைப் பாதுகாத்துக்கொள்வதில் தன்னுடைய முயற்சியினை விட்டிருத்தல். 'அப்ரதிஷேதமுமே' என்ற ஏகாரத்தால், இவை இரண்டும் ஒழிய, பின்னை ஒன்றும் வேண்டா என்றபடி.

[1] 'நாராயணாய' என்ற இறுதிப் பதத்திலே சொல்லுகிற பலத்திற்கு, முதல் பதமான பிரணவத்தில் சொல்லுகிற ஆன்ம ஞானமும், நடுப்பதமான 'நமஃ' பதத்தில் சொல்லுகிற விலக்காமையுமிறே வேண்டுவது. (38)

## 62

அல்லாதபோது பந்தத்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாம்.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி அன்றிக்கே பலத்திற்குச் சாதனமாக இவனும் சில செய்யவேண்டும் என்றால் வரும் தீங்கு என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அல்லாத போது' என்றது, இவ்வளவு அல்லாமல் பலத்திற்குச் சாதனமாக இவன் சில செய்யவேண்டும்போது என்றபடி. [2] 'பந்தத்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாம்' என்றது, இவனைப் பாதுகாத்தல் தன் பேறும்படியான ஒரு காரணத்தையும் பற்றாத அவனுடைய சேஷியாம் தன்மைக்கும் இவனுடைய செயல்களில் ஒன்றையும் விரும்பாதபடியிருக்கிறதான அவனுடைய உபாயமாம் தன்மைக்கும் குற்றமாகமுடியும் என்றபடி. (39)

## 63

ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோம் என்று பிரமித்து, அத்தை விளைத்துக்கொள்ளாதொழிகையே வேண்டுவது.

என்பது சூத்திரம்.

---

[1] இச்சூத்திரப் பொருளைத் திருவெட்டெழுத்தின் கருத்துப் பொருளோடு இயைத்துக் காட்டுகிறார் 'நாராயணாய' என்று தொடங்கி.

[2] பந்தம் - சேஷசேஷியாம் சம்பந்தம். பூர்த்தி - நிறைவு. கொத்தை - குற்றம்.

அவ :—' ஆனாலும், எல்லையில்லாத துன்பங்களுக்கு இருப்பிடமான இவ்வுலக வாழ்வாகிற கடலில் அழுந்திக் கிடந்து அலைகிற தன்னுடைய ஆபத்தை உணர்ந்தால், ஆபத்திற்குத் துணைவனான இறைவனைத் தன்னுடைய பிரபத்தியாலே வசீகரித்து, அவனுடைய திருவருளாலே இத்தைக் கழித்துக்கொள்ளவேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோம் என்று பிரமித்து' என்றது, சர்வேசுவரன் திருவடிகளிலே பிரபத்தியைச் செய்து, இவ்வுலக வாழ்வாகிற ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோம் என்று, தான் செய்யும் பிரபத்தியாலே தன் ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறானாகை மயங்கி என்றபடி. 'அத்தை விளைத்துக்கொள்ளாதொழிகையே வேண்டுவது' என்றது, அவன் ஒருவனுக்கே பரதந்திரப்பட்டிருத்தலாகிற தன்மைக்குக் கேடு ஆகிற ஆபத்தினை விளைத்துக்கொள்ளாதொழிகையே அவ்வாபத்து நீங்குதற்கு இவன் செய்யவேண்டுவது என்றபடி.

ஓர் ஆபத்தினைப் போக்கிக்கொள்ளப் புக்கு, வேறோர் ஆபத்தினை விளைத்துக்கொள்ளாதே, இவன், தன் முயற்சியினின்றும் நீங்கியிருக்கவே, எம்பெருமான் தானே பாதுகாப்பான் என்பது கருத்து.

இங்கே 'அத்தை' என்ற சுட்டு மேலே கூறிய சம்ஸாரமாகிற ஆபத்தினைச் சுட்டுகிறதன்று; பொதுவிலே 'ஆபத்து' என்பதனைச் சுட்டுகிறது. (40)

## 64

[1] ரக்ஷணத்துக்கு அபேக்ஷிதம், ரக்ஷயத்வ அநுமதியே.

என்பது சூத்திரம்.

அவ :—' ஆனாலும், [2] 'பாதுகாக்கப்படுகின்றவனான இவனுடைய வேண்டுகோளை அவன் எதிர்பார்க்கிறான்' என்கிற

---

[1] ரக்ஷணத்துக்கு - பாதுகாப்பதற்கு. அபேக்ஷிதம் - வேண்டுவது. ரக்ஷ்யத்வம் - அவனாலே பாதுகாக்கப்படுதல். அநுமதி - உடன்பட்டிருத்தல்.

[2] 'ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே' என்பது லக்ஷ்மீ தந்திரம்.

படியே பாதுகாக்கின்றவனை சர்வேசுவரன் பாதுகாக்கப்படுகின்றவனை இவனுடைய வேண்டுகோளை எதிர்பார்த்திருப்பான் என்கையாலே, அவன் காத்தலைச் செய்வதற்கு இவன் வேண்டுகோளும் வேண்டியதாகவன்றோ இருக்கிறது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— 'ரக்ஷணத்துக்கு அபேக்ஷிதம்' என்றது, யாதொரு காரணத்தையும்பற்றாமலே பாதுகாக்கின்ற இறைவன் இவனைப் பாதுகாக்குமிடத்து இவன் பக்கல் வேண்டுவது என்றபடி. 'ரக்ஷ்யத்வ அநுமதியே' என்றது, 'நீ என்னால் பாதுகாக்கப்படும் பொருள்' என்றால், 'அல்லேன்' என்னாமல் தான் பாதுகாக்கப்படுமவனாக இருத்தலை இசையும் இவ்வளவே என்கை.

[1] 'பாதுகாக்கப்படுகின்றவனை இவனுடைய விருப்பத்தை' என்கிறவிடத்தில் சொல்லப்படுகிற விருப்பம், அவனாலே பாதுகாக்கப்படுதற்கு இசைந்திருத்தலைக் குறிக்கிறது என்பது கருத்து. [2] 'யாச்நா பிரபத்திः', 'பிரார்த்தனாமதிः' என்கிற ஸ்வீகாரத்தினை 'அப்ரதிஷேத த்யோதகம்' என்றிறே இவர் தாம் அருளிச் செய்தது. (41)

## 65

எல்லா உபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்ய காரியமாகையாலும், பிராப்தி தசையிலும் அநுவர்த்திக்கையாலும், ஸ்வரூப

---

[1] 'ஆயின், 'பாதுகாக்கப்படுகின்றவனை இவனுடைய விருப்பத்தை அவன் எதிர்பார்க்கிறான்' என்றதனுடைய கருத்து என்னை?' என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பாதுகாக்கப்படுகின்ற' என்று தொடங்கி. 'ரக்ஷ்ய அபேக்ஷாம்' என்பது லக்ஷ்மீ தந்திரம்.

[2] தாம் கூறியதற்குப் பிரமாணம் காட்டுகிறார். 'யாச்நா பிரபத்திः' என்று தொடங்கி. யாச்நா பிரபத்திः - பிரார்த்தனை உருவமான பிரபத்தி. பிரார்த்தநாமதி :- பிரார்த்தனை உருவமான புத்தி. இவ்விரண்டும் லக்ஷ்மீ தந்திரத்தில் உள்ள இரண்டு சுலோகங்களிலே உள்ள தொடர்மொழிகள். அப்ரதிஷேத த்யோதகம் - விலக்காமைக்கு ஞாபகம். இவர் தாம் அருளிச்செய்தது என்றது, முமுக்ஷுப்படி என்ற நூலில் அருளிச்செய்தார் என்றபடி. சூத். 233.

அதிரேகியல்லாமையாலும், அசித்வியா விருத்த வேஷத்தைச் சாதனமாக்க ஒண்ணாது.[1]

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி இவனுடைய அநுமதியை விரும்பினவனாய் அவன் பாதுகாப்பானாகில், இவ்வநுமதிதான் சாதனமாகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'எல்லா உபாயத்துக்கும் பொதுவாகையாலும்' என்றது, போக மோக்ஷ உபாயங்களுள் யாதேனும் ஒன்றைச் செய்தற்கு முயற்சி செய்கிறவனுக்கும் 'நீ இவ்வுபாயத்தைச் செய்' என்றால் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதி முன்னாக அதில் இறங்க வேண்டுகையாலே எல்லா உபாயங்களுக்கும் பொதுவாக இருக்கை என்றபடி. இத்தால், இவ்வநுமதிக்கு ஓரிடத்திலும் அதிகாரிக்கு விசேஷணமாக இருக்குந் தன்மை ஒழியப் பலத்திற்குச் சாதனமாகவிருக்குந் தன்மை இல்லாமை காட்டப்பட்டது.

'சைதன்யகார்யம் ஆகையாலும்' என்றது, பாதுகாக்கப்படும் தன்மை, அறிவுடைப் பொருள்களுக்கும் அறிவில் பொருள்களுக்கும் பொதுவாக இருக்கச் செய்தே, அறிவு இல்லாதவைகள் ஆகையாலே அத்தன்மையை அறிகைக்குத் தகுதியில்லாத அறிவில் பொருள்கள் போல அன்றிக்கே, ஞானத்திற்கு இருப்பிடமாயிருப்பவனாகையாலே அதனை அறிகைக்குத் தகுதியுடையனாய் இருக்கிற இவனிடத்தில் உண்டான அநுமதி, இவனுடைய ஞானத்தின் காரியமாய்க்கொண்டு வந்ததாக இருக்கை என்றபடி. இத்தால், இவ்வநுமதி, அறிவுடையவனான வேற்றுமையைப் பற்றி வந்ததாகையாலே சாதன கோடியில் சேராது என்றபடி.

'பிராப்தி தசையிலும் அநுவர்த்திக்கையாலும்' என்றது, உபாய நிலையில் அளவு அன்றிக்கே உபேய நிலையிலும் இறைவன் தன்னுடைய வியாமோகத்திற்குத் தகுதியாகக் கொள்ளும்

1 சைதந்ய காரியம் - அறிவின்காரியம். பிராப்திதசை - பேற்றினைப் பெறுகின்ற நிலை. அநுவர்த்தித்தல் - தொடர்தல். ஸ்வரூபம் - சேஷத்துவ பாரதந்திரியம். அதிரேகி - புறம்பாகவிருத்தல். அசித்து - சரீரம். வியாவிருத்தவேஷம் - வேறுபட்டிருக்கிற ஆன்மாவின் தன்மை. அதாவது, ஞானத்தின் காரியமான அநுமதி.

அநுபவ விசேடங்களிலே 'திருவுள்ளமானபடி கொண்டருள வேண்டும்' என்னும் அநுமதி இவனுக்கு நடந்து செல்லுகை என்றபடி. இதனால், அது சாதனமாகில், பலம் கிடைத்த அளவிலே மீளவேண்டும் என்பது கருத்து.

'ஸ்வரூப அதிரேகி அல்லாமையாலும்' என்றது, சேஷி செய்யுமதற்கு உடன்பட்டிருக்கை சேஷத்துவ பாரதந்திரியத்தின் காரியமாகையாலே, இவ்வநுமதி அந்தச் சேஷத்துவ பாரதந்திரிய சொரூபத்திற்குப் புறம்பு அன்றிக்கே சொரூபமாய் இருக்கை என்றபடி. இத்தால், அவ்வநுமதி சாதனமாகில் சொரூபத்திற்குப் புறம்பானதாக இருக்க வேண்டும் என்பது கருத்து.

'அசித்து வியாவிருத்த வேஷம்' என்றது, ஞானம் இல்லாததான அசித்தைக்காட்டிலும் ஞானமுடையதாகையாலே வேறுபட்டிருக்கிற ஆன்மாவின் தன்மை என்றபடி. இவ்விடத்தில் ஆன்மாவின் அத்தன்மையாவது, ஞானத்தின் காரியமான அநுமதி.

இத்தைச் 'சாதனமாக்க ஒண்ணாது' என்றது, இப்படி, இவ்வநுமதியானது, சாதனம் ஆகாமைக்குரிய காரணங்கள் பல உளவாகையாலே இதனைச் சாதனமாகக் கற்பிக்கப் போகாது என்றபடி.

'அசித்து வியாவிருத்தி வேஷம்' என்பது பாடமாகில், ஞானம் இல்லாததான அசித்தைக்காட்டிலும் ஆன்மாவிற்கு உண்டான அறியும் தன்மையதான வேறுபாட்டின் வடிவான அநுமதி என்று பொருள் கொள்க. (42)

## 66

[1]அசித்து வியாவிருத்திக்குப் பிரயோஜனம், உபாயத்தில் உபகார ஸ்மிருதியும் உபேயத்தில் உகப்பும்.

என்பது சூத்திரம்.

---

[1] அசித்து வியாவிருத்திக்குப் பிரயோஜனம் - இந்த உயிர் சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டிருத்தற்குப் பயன். உபாயத்தில் உபகார ஸ்மிருதி - சித்தோபாயமான இறைவன் தன் திறத்தில் செய்த உபகாரங்களுக்குச் செய்ந்நன்றி அறிதல். உபேயம் - பலன். அதாவது, அவனுக்குச் செய்யும் கைங்கரியம்.

அவ :— 'ஆனால், அசித்தினும் வேறுபட்டிருக்கும் இத் தன்மைக்கு ஒரு பயன் வேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'உபாயத்தில் உபகார ஸ்மிருதியும்' என்றது, [1] 'என்னைத் தீமனம் கெடுத்தாய்' என்றும், [2] 'மருவித் தொழும் மனமே தந்தாய்' என்றும் சொல்லுகிறபடியே சித்தோ பாயமான எம்பெருமான் தன் திறத்தில் செய்த உபகாரங்களை நினைத்தல் என்றபடி. 'உபேயத்தில் உகப்பும்' என்றது, அவன் திருவடிகளில் தான் செய்யும் கைங்கரியங்களில் [3] 'உகந்து பணி செய்து' என்கிற உகப்பும், அந்த உகப்பால் அவனுக்கு விளைகிற பிரீதியைக் கண்டு தனக்கு விளைகிற பிரீதியும் என்றபடி. (43)

## 67

'உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்' என்கிறபடியே பிராப்திக்கு உபாயம் அவன் நினைவு.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி இவன் பக்கல் உள்ளவைகளுள் ஒன்றும் உபாயம் அன்றாகில், இவனுக்கு அவனை அடைதற்குரிய வழிதான் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'உன் மனத்தால் என் நினைந்திருந்தாய் என்கிற படியே பிராப்திக்கு உபாயம்' என்றது, இத்தலையில் உள்ளவை களுள் ஒன்றும் பேற்றிற்கு உபாயம் அல்லாமையாலே [4] 'உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்?' என்று [5] 'கை கழிந்தவற்றிற் கும் ஒரு போக்கடி பார்த்திருக்கக்கூடிய உன் திருவுள்ளத்தால்

[1] திருவாய். 2.7:8.

[2] திருவாய். 2.7:7.

[3] திருவாய். 10.8:10.

[4] பெரிய திருமொழி, 2.7:1.

[5] அத்திருப்பாசுரத்தின் பொருளைத் திருவுள்ளம் பற்றிக் 'கைகழிந்தவற்றிற்கும் ஒரு போக்கடி பார்த்திருக்கக்கூடிய' என்று அருளிச்செய்கிறார்.

நினைத்திருந்தது என்?' என்று நலத்தையே எண்ணுகின்றவனுடைய நினைவே உபாயம் என்று [1] ஆழ்வார் அருளிச்செய்தபடியே அவனை அடைதற்கு உபாயம் என்றபடி. 'அவன் நினைவு' என்றது, [2] முற்றறிவினனாய் எல்லா ஆற்றல்களையுமுடையவனாய், சம்பந்தமுடையவனாய், அருட்கடல் அம்மானாய் இருக்கிறவனுடைய இவன் உய்வு பெறுதற்கு நிமித்தமான நினைவு என்றபடி. (44)

## 68

[3]அதுதான் எப்போதும் உண்டு.

என்பது சூத்திரம்.

அவ :—'அந்நினைவுதான் அவனுக்கு எப்பொழுது உண்டாவது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'எப்போதும் உண்டு' என்றது, இவன் [4] யாதானும் பற்றி நீங்கித் திரிகிற காலத்தோடு [5] இன்றோடு வேற்றுமை அற எல்லாக்காலங்களிலும் உண்டு என்றபடி. (45)

## 69

அது பலிப்பது இவன் நினைவு மாறினால்.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனால், அது இந்நாள்வரை பலியாதிருப்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

[1] ஆழ்வார் - திருமங்கை மன்னன்.

[2] இந்த விசேஷணங்கள் எல்லாம் 'அவன்' என்ற சொல்லால் போதருவனவாம். இவற்றை 'ஸர்வஜ்ஞோபி' என்ற லக்ஷ்மீ தந்திர சுலோகத்தைத் திருவுள்ளம்பற்றி எழுதுகிறார் ஆகவுமாம்.

[3] அதுதான் - அந்த நினைவுதான்.

[4] திருவிருத்தம், 96.

[5] இன்றோடு - பிரபத்தி செய்த இன்றோடு.

**வியாக் :**—'அது பலிப்பது இவன் நினைவு மாறினுல்' என்றது, அவன் நினைவு இவனுக்குப் பலனைத் தருவது, 'நாமே நம்மைப் பாதுகாத்துக்கொள்ளுகிறேம்' என்னும் இவனுடைய எண்ணம் மாறின காலத்தில் என்றபடி. (46)

## 70

'அந்திமகாலத்துக்குத் தஞ்சம், இப்போது தஞ்சம் என்?' என்கிற நினைவு குலைகை என்று ஜீயர் அருளிச்செய்வர்.[1]

என்பது சூத்திரம்.

அவ :—இப்பொருள் நம்பத்தக்க உண்மைப்பொருள் என்று காட்டுவதற்காக நஞ்சீயருடைய வார்த்தையை அருளிச் செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அந்திம காலத்துக்குத் தஞ்சம் இப்போது தஞ்சம் என் என்கிற நினைவு குலைகை என்று சீயர் அருளிச் செய்வர்' என்றது, நஞ்சீயர், தம்முடைய சிஷ்யர்களுள் ஒருவர் நோயுற்றிருக்க, அதனை விசாரிக்கைக்காகச் சென்று எழுந்தருளியிருக்கிற அளவிலே, சிஷ்யரான அந்த ஸ்ரீ வைஷ்ணவர் '**அடி**யேனுக்கு அந்திம காலத்திற்குத் தஞ்சமாக இருப்பதொன்று அருளிச் செய்யவேண்டும்' என்ன, [2]'அந்திம காலத்துக்குத் தஞ்சம், நமக்கு இப்போது தஞ்சம் என்? என்கிற தன்னுடைய ஸ்வரக்ஷணசிந்தை குலைகை காணும்' என்று அருளிச் செய்த வார்த்தை என்றபடி.

ஆகையால், இறைவன் இவ்வான்மா உய்வு பெறுவதற்கு உறுப்பாகச் செய்யும் சிந்தனை பலிப்பது, இவன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுதலாகிற இவனுடைய எண்ணம் மாறினுல் என்றபடி. (47)

---

[1] ஜீயர் - நஞ்சீயர். இவர் பட்டருடைய சிஷ்யர்; நம்பிள்ளைக்கு ஆசாரியர்; திருவாய்மொழிக்கு ஒன்பதினுயிரப்படி வியாக்கியானத்தை அருளிச்செய்தவர்.

[2] அந்திமகாலத்திற்குத் தஞ்சமாவது, இப்பொழுது, இவன், தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ளுதலாகிற எண்ணம் குலைவது தான் என்பது இந்த வாக்கியத்தின் கருத்து.

## 71

பிராப்தாவும் பிராபகனும் பிராப்திக்கு உகப்பானும் அவனே.[1]

என்பது சூத்திரம்.

அவ :— 'அடைவிக்கின்றவன் ஈசுவரன் ஆனாலும், அடைகின்றவனும் பேற்றிற்கு உகக்கின்றவனும் இவன் அன்றோ? ஆன பின்பு இவன் நினைவினை இப்படி நேராகத் துடைக்கலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால். அன்றிக்கே, இவன் கையில் உள்ளனவற்றுள் உபாயமாகும் தன்மை சிறிதும் இல்லை என்று துடைத்து, 'ஈசுவரனே உபாயம்' என்று அறுதியிட்ட போதே, அடையும் தன்மையும் பேற்றில்வரும் உகப்பும் இவனுடையனவன்றிக்கே, உபாயமாகவிருக்கின்ற ஈசுவரனுடைய தன்மைகளாகவே பலித்து விடுகின்றன; ஆகையால், 'பிராப்தாவும் பிராபகனும் பிராப்திக்கு உகப்பானும் அவனே' என்று [2] நிகமிக்கிறாராகவுமாம்.

வியாக் :—பிராப்தா அவன் ஆகையாவது, [3] 'சொத்து ஆக இருக்கும் தன்மையானது ஆன்மாவினிடத்தில் உள்ளது, ஸ்வாமியாக இருக்கும் தன்மையானது பரம்பொருளான நாராயணனிடத்தில் உள்ளது' என்கிற, இயல்பாகவே அமைந்துள்ளதான உடைமை உடையவன் என்னும் சம்பந்தம் அடியாக, உடைமையை அடையும் உடையவனைப் போலே இவ்வான்மாவை அடைகிறவன் தானாகவிருக்கை.

பிராபகன் அவன் ஆகையாவது, இறைவனாகிய தான் இவனை அடையுமிடத்தில் அடைவிக்கும் உபாயமும், முற்றறி

---

[1] பிராப்தா - அடைகிறவன். பிராபகன் - அடைவிப்பவன். பிராப்தி - அடைதல். இந்தச் சூத்திரத்திற்கு இரண்டு வகையாக அவதாரிகை அருளிச்செய்கிறார். முதல் அவதாரிகையில் 'பிராபகனும்' என்பதனைத் திருஷ்டாந்தமாகக் கொள்க. பிராபகன் அவனாகவிருப்பது போன்று, பிராப்தாவும் பிராப்திக்கு உகப்பானும் அவனே என்பது கருத்து. இரண்டாவது அவதாரிகையில் 'பிராபகன்' என்பது ஏதுப் பொருள். பிராபகன் அவன் ஆகையாலே, பிராப்தாவும் பிராப்திக்கு உகப்பானும் அவனே என்பது கருத்து.

[2] நிகமிக்கிறாராகவுமாம் - முடிக்கிறாராகவுமாம்.

[3] 'ஸ்வத்வம் ஆத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்' என்பது மகாபாரதம்.

வினையுடையனாயிருத்தல் எல்லா ஆற்றல்களையுமுடையனாயிருத்தல் சத்தியசங்கல்பனாகவிருத்தல் முதலான குணங்களோடு கூடினவனாய்த் தடை இல்லாத சுவதந்திரத்தையுடையவனான தானாக இருக்கை.

பிராப்திக்கு உகப்பான் அவன் ஆகையாவது, உடைமையை அடைகிற காலத்தில் அதனை அநுபவிக்கின்றவனான தலைவன் மிக்க மகிழ்ச்சியையடையுமாறு போலே, இவனை அடைந்தால் 'அடையப்பெற்றோம்' என்று உகப்பானும் இவ்வான்மாவினை எப்பொழுதும் அநுபவித்துக்கொண்டிருப்பவனான தானாக இருக்கை.

'இம்மூன்றும் அவனே' என்ற ஏகாரத்தால் இம்மூன்றனுள் இவனோடு சேர்வது ஒன்றும் இல்லை என்பதனைத் தெரிவித்தபடி.

இதில் 'பிராப்தாவும் பிராபகனும் அவனே' என்கையாலே அவனை அடைவதற்கு வேறு சாதனங்களைச் செய்யும் தன் முயற்சி இவனுக்கு இல்லை என்னுமிடமும், 'பிராப்திக்கு உகப்பானும் அவனே' என்கையாலே அவனுடைய இன்பத்திற்காகத் தான் இருக்கின்றானே தவிர, தன் பயனில் தனக்குச் சம்பந்தம் இல்லை என்னுமிடமும் பெறப்பட்டன. (48)

## 72

ஸ்வயத்ந நிவிருத்தி பாரதந்திரியபலம்;
ஸ்வப்பிரயோஜந நிவிருத்தி சேஷத்வபலம்.[1]

என்பது சூத்திரம்.

அவ:—'ஆனால், இவன் ஞானமுடையவன் ஆக இருத்தலே அதன் காரியமான ஒரு காரியத்தைச் செய்தற்குக் கர்த்தாவாக விருத்தல், ஒரு பயனை அநுபவிக்கின்றவனாகவிருத்தல் என்னும் இரண்டனையுமுடையவன் ஆகையாலே, தான் ஒரு முயற்சியைச் செய்வதற்கும் ஒரு பயனை அடைவதற்கும் தகுதியுள்ளவனாகவிருக்க, இவ்விரண்டும் இவனைவிட்டு நீங்குவது எவ்வழியாலே வருகிறது?' என்ன, அதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] ஸ்வயத்ந நிவிருத்தி - தன் முயற்சியின் நீங்குதல். ஸ்வப்பிரயோஜன நிவிருத்தி - தனக்கு உரிய பயனின் நீங்குதல்.

வியாக் :—ஸ்வயத்ந நிவிருத்தி பாரதந்திரிய பலம்—ஞான முடைமை காரணமான கருத்தாவாகவிருக்கும் தன்மை இவனுக்கு உண்டாயிருக்கச் செய்தே, பகவானை அடைதற்குத் தான் ஒரு முயற்சி செய்யாமல் இருக்கையாகிற இந்தத் தன் முயற்சியினின்றும் நீங்கியிருத்தல், பரனுக்கு வசப்பட்டிருக்கின்ற ஆன்மாவின் தன்மையும், நிலையும், காரியங்களைச் செய்தலும் செய்யாமையும் ஆகிற பாரதந்திரியத்தின் காரியம்.

ஸ்வப்பிரயோஜன நிவிருத்தி சேஷத்வபலம். அப்படியே ஞானமுடைமை காரணமான பயனை அநுபவிக்கும் தன்மை இவனுக்கு உண்டாயிருக்கச்செய்தே, இறைவனைச் 'சுவையன்' ஆக்குதலை ஒழியத் தனக்கு என்ன ஒன்றில் சுவை இன்றிக்கே இருக்கையாகிற தன்னுடைய பிரயோஜனத்தினின்றும் நீங்கியிருத்தல், பரனுக்கு மகிழ்ச்சியை விளைவிக்கையே வடிவாகவிருக்கையாகிற சேஷத்வத்தின் காரியம்.

இதனால், பாரதந்திரியம் சேஷத்வம் என்னும் இரண்டும் ஆன்மாவின் தன்மைகள் ஆகையாலே, அத்தன்மைகளை அறியவே இவை இரண்டும் தன்னடையே வரும் என்றாராயிற்று.

(49)

## 73

பரப்பிரயோஜநப் பிரவிருத்தி பிரயத்ந பலம்; தத்விஷயப்பிரீதி சைதந்ய பலம்.[1]

என்பது சூத்திரம்.

அவ :— 'ஆனால், இப்படி இவன் தன் முயற்சியிலும் தன் பிரயோஜனத்திலும் பற்று அற்று இருக்குமாகில், இவனுடைய முயற்சிக்கும் அறிவிற்கும் பயன்தான் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[1] பிரயத்ந பலம் பரப்பிரயோஜந பிரவிருத்தி என்றது [2] 'நான் தேவரீருக்கு எல்லா வகையான கைங்கரியங்

---

[1] பிரயத்நபலம் பரப்பிரயோஜநப்பிரவிருத்தி - தன் முயற்சிக்குப் பலன் பரனுக்குப் பிரயோஜனமான செயலைச் செய்தல். சைதந்ய பலம் தத்விஷயப்பிரீதி - தன் அறிவிற்குப் பலன் அவன் திறத்தில் பிரீதி.

[2] "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி"

என்பது ஸ்ரீராமா. அயோத். 31:25.

களையும் செய்யக்கடவேன்' என்றும், [1]'வழுவிலா அடிமை செய்யவேண்டும்' என்றும், [2]'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்றும் சொல்லுகிறபடியே இறைவனுக்குப் பிரயோஜனமாகச் செய்யும் கைங்கரியம் வடிவமான செயல், இவனது ஒரு செயலைச் செய்தற்குச் செய்யும் முயற்சி வடிவமான பிரயத்தனத்திற்குப் பிரயோஜனம் என்றபடி. தத்விஷயப்பிரீதி சைதந்ய பலம் என்றது, [3]'ஆன்மா உள்ள வரையிலும் செய்யத்தக்கதான கைங்கரியத்தினாலே நான் தேவரீரை உகப்பிக்கக்கடவேன்,' என்கிறபடியே அத்தலையில் உகப்புக்குத் தான் செய்யும் கைங்கரியத்தாலே மிக்க மகிழ்ச்சியை யுடையவனாகவிருக்கிற அந்தப் பரனை விஷயமாகவுடைத்தான பிரீதி, சரீரத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்ற இவன் அறிவிற்குப் பிரயோஜனம் என்றபடி. [4]'படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே' என்னக் கடவதிறே.

இதனால், பாரதந்திரிய சேஷத்வங்களாலே பலித்த தன் முயற்சியினின்றும் நீங்குதலையும் பயனைத் தனக்கு என்று கொள்ளாமையையுமுடையனான இவனுடைய முயற்சிக்கும் அறிவிற்கும், பாரதந்திரிய சேஷத்வங்களுக்குத் தகுதியாகப் பிரயோஜனங்கள் சொல்லப்பட்டனவாம். (50)

## 74

'அஹம்' அர்த்தத்துக்கு ஞாநாநந்தங்கள் தடஸ்தம் என்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்.[5]

என்பது சூத்திரம்.

---

[1] திருவாய். 3.3:1 [2] திருப்பாவை, 29.

[3] "நித்ய கிங்கரஃ ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்பது, தோத்திரரத்தினம், 46.

[4] பெருமாள் திருமொழி, 4:9. இத்திருப்பாசுரத்தில் 'படியாய்க் கிடந்து' என்றதனால் பரப்பிரயோஜனப் பிரவிருத்தியும், 'பவளவாய்' என்றதனால் அதனால் உண்டாகிற அவன் முகமலர்ச்சியும், 'காண்பேனே' என்றதனால் அவன் முகமலர்ச்சியைக் கண்டு தமக்கு வருகின்ற பிரீதியும் கூறப்பட்டிருத்தல் காண்க.

[5] அஹம் அர்த்தத்துக்கு - நான் என்று சொல்லுதற்கும் நான் என்று நினைப்பதற்கும் உரிய ஆன்மாவிற்கு. 'தடஸ்தம்' என்பது இங்குப் புறம் என்ற பொருளைக் குறிக்கிறது. இது இலக்கணை. தாஸ்யம் - அடிமை.

அவ :—‘ சேஷத்வம் முதலானவைகளும் அறிகின்ற தன்மை முதலானவைகளும் ஆன்மாவினுடைய தர்மங்களாயிருக்கச் செய்தே, சேஷத்வ முதலானவற்றை முக்கியமாக்கி, அறிகின்ற தன்மை முதலானவற்றை அந்தச் சேஷத்வ முதலானவற்றிற்குத் தகுதியாக யோஜிக்கைக்குக் காரணம் யாது? [1] மற்றைப்படிதான் ஆனாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—‘ அஹம் அர்த்தம் ’ என்றது, தன்னைத்தானே அறிந்துகொண்டிருக்கிற தன்மையாலே நான் என்ற எண்ணத் திற்கும் நான் என்று சொல்லிக்கொள்ளுதற்கும் உரிய விஷயமாக விருக்கிற ஆத்மவஸ்துவை என்றபடி. ‘ஞாந ஆநந்தங்கள்’ என்றது, அந்த ஆன்மாவினிடத்துள்ள ஞானத்தன்மையினையும் ஆனந்தத்தன்மையினையும். [2] ‘ ஞானத்தையும் ஆனந்தத்தையும் வடிவமாகவுடைய இவ்வான்மா ’ என்றும், [3] ‘ ஆன்மாவின் வடிவம் அணு அளவாக உள்ளது, ஞானத்தையும் ஆனந்தத் தையும் இலக்கணமாக வுடையது ’ என்றும் இவற்றைக் கொண்டிறே ஆன்மாவை நிரூபிப்பது. ‘ தடஸ்தம் என்னும்படி ’ என்றது, புறத்தே நிரூபகமாகவிருப்பதனாலே [4] புறவிதழ் என்னும்படி என்றபடி. ‘ தாஸ்யம் ’ என்றது, சேஷத்வத்தை. இதனை, ‘ அந்தரங்க நிரூபகம் ’ என்றது, பகவானுடைய சொரூபத்திற்குச் சரீரமாக இருப்பதனாலே சேஷமாய்க்கொண்டு தன்னுடைய உளதாம் தன்மை ஆம்படி இருக்கும் பொருள் ஆகையாலே, முதலில் சேஷத்வத்தையிட்டு நிரூபித்துக் கொண்டே மற்றுள்ள தன்மைகளைக் கொண்டு நிரூபிக்க வேண்டும்படியிருக்கை.

[1] ‘ மற்றைப்படி தனானலோ ’ என்றது, ஞானானந்தங்களை ஆன்மா விற்கு முக்கியத் தன்மைகளாக்கி, சேஷத்துவத்தை அதற்குத் தகுதியாக யோசித்தாலோ?' எனின், என்றபடி.

[2] ஞான ஆனந்தங்கள் ஆன்மாவின் தன்மைகள் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் ‘ ஞானத்தையும் ’ என்று தொடங்கி.

“ ஜ்ஞாநாநந்த மயஸ்த்வாத்மா ”
என்பது, பாகவதம்.

[3] “ ஸ்வரூபம்அணுமாத்ரம் ஸ்யாத் ஜ்ஞாநாநந்தைக லக்ஷணம் ” என்பது பிரமாணம்.

[4] ஆன்மாவை ‘ ஆத்மபுஷ்பம் ’ என்று வழங்குகிற வழக்குப் பயிற்சி நோக்கி ஜ்ஞான ஆனந்தத் தன்மைகளைப் ‘ புறவிதழ் ’ என்கிறார்.

இதனால், நிரூபகமாகையாவது, [1]ஒரு பொருளை மற்றொரு பொருளைக்காட்டிலும் வேறுபடுத்திக்காட்டுமது ஆகையாலே, தாஸ்யம் இறைவனின்றும் வேறுபடுத்துவதாய், ஞானத்தன்மையும் ஆனந்தத் தன்மையும் அசித்தினின்றும் வேறுபடுத்துவனவாய் இருக்கும்.

[2]இப்படி இரண்டு நிரூபகங்களும் ஆன்மாவிற்கு வேண்டுவனவாயிருக்கச் செய்தே, இறைவனுக்குச் சரீரமாகவிருப்பதனாலே உளதாம் தன்மையைப் பெற்ற இவ்வான்மாவிற்கு, அசித்தினைக்காட்டிலும் உண்டான வேற்றுமையை மாத்திரம் அறிவிப்பனவான ஞானத்தன்மையும் ஆனந்தத் தன்மையும் புறவிதழாம்படி, சரீரமாயிருக்குந் தன்மையால் வந்த சேஷத்துவமே அந்தரங்க நிரூபகமாய் இருக்கும் என்றதாயிற்று.

[3]'இறே' என்றது, இவ்வர்த்தத்தினது பிரமாணப் பிரசித்தியைக் காட்டுவதற்கு. [4]முதலில் சேஷத்துவத்தையிட்டு

---

[1] 'நிரூபகம்' என்றதன் பொருளை விளக்குகிறார் 'ஒரு பொருளை' என்று தொடங்கி. ஞானத் தன்மை ஆனந்தத் தன்மைகளை மாத்திரம் ஆன்மாவிற்கு இலக்கணமாகச் சொன்னால் ஈசுவரனுக்கும் அந்த ஞானத் தன்மையும் ஆனந்தத் தன்மையும் உளவாகையாலே, அவ்விடத்தில் அதிவியாப்தி வரும்; அதனை நீக்குவதற்காகச் சேஷத்துவத்தையும் இலக்கணமாகச் சேர்க்க வேண்டும்; சேஷத்துவத்தை மாத்திரம் இலக்கணமாகச் சொன்னால் அசித்திற்கும் அந்தச் சேஷத்துவம் உண்டாகையாலே அதிவியாப்திக் குற்றம் வரும். அதனை நீக்குவதற்காக ஞானத்தன்மை ஆனந்தத்தன்மைகளையும் கூடச் சேர்க்க வேண்டும். ஆக, சேஷத்துவத்தோடு கூடின ஞானத்தன்மையும் ஆனந்தத்தன்மையுமே ஆத்துமாவிற்கு இலக்கணம் என்பதனைத் தெரிவிக்கின்றது 'ஒரு பொருளை' என்று தொடங்கும் வாக்கியம்.

[2] இவ்விரண்டும் ஆன்மாவிற்கு இலக்கணமாகவிருக்க, சேஷத்துவத்தை ஆன்மாவிற்கு அந்தரங்க நிரூபகமாகக் கூறியதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

[3] 'இறே' என்ற சொல், உரைநடையில் பண்டு தொட்டே இருந்து வந்தது. இதனை அகநானூற்றின் பழைய உரையில் காணல் தகும்.

[4] 'முதலில் சேஷத்துவத்தையிட்டு ஆன்ம வஸ்துவை நிரூபித்துக் கொண்டு' என்றது, பிரணவத்தில் முதல் எழுத்தான அகாரத்தில் ஏறிக்கழிந்த நான்காம் வேற்றுமையின் பொருளை. 'பின்னர் ஞானானந்த வடிவமுமாய்......மூன்றாவது பதத்தால் நிரூபிக்கிற பிரணவமும்' என்ற வாக்கியத்தில் 'மூன்றாவது பதம்' என்றது, மகாரத்தை.

ஆன்மவஸ்துவை நிரூபித்துக்கொண்டு, பின்னர் ஞான ஆனந்த வடிவமுமாய் ஞானமாகிற குணத்தையுடையதுமாய் அசித்தைக் காட்டிலும் வேறுபட்டதாயும் இருக்கும் என்னுமிடத்தை மூன்றுவது பதத்தால் நிரூபிக்கிற பிரணவமும், எல்லாப் பொருள்களும் சர்வேசுவரனுக்குச் சரீரம் என்னுமதனைச் சொல்லுகிற 'நாராயண' பதமும் முதலானவை [1] இதற்குப் பிரமாணங்கள். [2] 'பரமபுருடனை சர்வேசுவரனுக்கு எல்லா ஆன்மாக்களும் இயல்பாகவே அடிமைகள் அல்லவா? அப்படியே அந்த ஆன்மாக்களுக்கு இவ்வுடம்போடு கட்டுப்பட்டிருக்கிற நிலையிலும் மோக்ஷத்திலும் வேறுன தன்மை இல்லை' என்பது போன்றவைகளும் உண்டு. [3] 'அடியேன் உள்ளான்' என்றிறே ஆழ்வார் அருளிச்செய்தது. [4] திருக்கோட்டியூர் நம்பி திருவடிகளிலே ஆழ்வான் ஆறு மாதங்கள் சேவித்து நின்று மகாநிதியாகப் பெற்ற அர்த்தமிறே இது.

[5] இப்படி, சேஷத்துவம் அந்தரங்க நிரூபகம் ஆகையாலே, நிரூபிக்கப்பட்ட ஆன்மாவிற்கு விசேஷணங்களான ஞாத்ருத்வம் முதலானவற்றை இந்தச் சேஷத்துவத்திற்குத் தகுதியாகப் பொருள் கொள்ள வேண்டும் என்பது கருத்து. (51)

## 75

இதுதான் வந்தேறி அன்று.

என்பது சூத்திரம்.

**அவ :—** 'இது ஆன்மாவின் தன்மையை நிரூபிப்பதாக இருக்குமாகில், ஆன்மா உள்ள அன்றே தொடங்கி உண்டாகிப்

[1] இதற்கு - ஆன்மாவிற்குச் சேஷத்துவத்தை அந்தரங்க நிரூபகமாகவும் ஞான ஆனந்தங்களைத் தடஸ்தமாகவும் கூறுதற்கு.

[2] தாஸபூதாஸ் ஸ்வதஃ ஸர்வேஹ்யாத்மாநஃ பரமாத்மநஃ
நாந்யதாலக்ஷணம் தேஷாம் பந்தேமோக்ஷே ததைவச.

என்பது ஹாரிதஸ்மிருதி.

[3] திருவாய். 8.8:2.

[4] இச்சரிதப் பகுதியைக் குரு பரம்பரையில் இராமாநுசர் வைபவத்தில் காண்க. ஆழ்வான் - கூரத்தாழ்வார். இராமாநுசருக்கு மாணாக்கர்; பட்டருக்குத் திருத்தமப்பனர்.

[5] சூத்திரப் பொருளை இவ்விடத்திற்குத் தகப் பொருத்திக் காட்டுகிறர் 'இப்படி' என்று தொடங்கி.

போதரவேண்டாவோ? இதற்கு முன்பு இன்றிக்கே இப்போது உண்டாகையாலும், உலகத்தில் இதுதான் ஒரு காரணம் பற்றிய தாய் நடக்கக் காண்கையாலும், அடிமை ஆன்மாவிற்கு வந்தேறி அன்ருே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'இதுதான்' என்ற சுட்டு, மேலே கூறிய அடிமையைச் சுட்டுகிறது. 'வந்தேறி' என்றது, நடுவில் வந்தது என்றதனைக் கூறுகின்றது. 'அன்று' என்றதனுல் இயல்பாகவே உள்ளது என்றதனைக் குறித்தபடி. [1]'உனக்கு ஆன்மா உய்வு பெறவேண்டும் என்று ஆசையிருந்ததேயாகில், ஆன்மாவின் உளதாம் தன்மையை விரும்புவாயாகில் ஆன்மா விற்கு உள்ள அடிமையும், அரியான விஷ்ணுவிற்கு உள்ள தலைவனும் தன்மையும் எப்பொழுதும் உள்ள தன்மைகள் என்றும் நினை' என்றும், [2]'திருமாலே நானும் உனக்குப் பழவடியேன்' என்றும் சொல்லக்கடவதிறே. (52)

## 76

ஸ்வாதந்திரியமும் அந்யசேஷத்வமும் வந்தேறி.

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனல், வந்தேறிகளாகச் சொல்லக் கருதியவை தாம் யாவை?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஸ்வாதந்திரியம்' என்றது, 'நான் எனக்கு உரியன்' என்றிருக்கும் இருப்பினை. 'அந்யசேஷத்வம்' என்றது, பகவானை ஒழிந்த மற்றைய விஷயங்களிலே தொண்டுபட்டிருக்கையை. இவற்றை 'வந்தேறி' என்றது, இவனுடைய அறிவின்மை முதலானவைகள் அடியாக வந்தவை ஆகையாலே. (53)

---

[1] ஸ்வோஜ்ஜீவநேச்சா யதிதேஸ்வ ஸத்தாயாம் ஸ்ப்ருஹாயதி
ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதாஸ்மர.
என்பது பிரமாணம்.

[2] திருப்பல்லாண்டு, 11.

## 77

சேஷத்வ விரோதி ஸ்வாதந்திரியம்; தச்
சேஷத்வ விரோதி தத்இதர சேஷத்வம்.[1]

என்பது சூத்திரம்.

**அவ :**—இவை இதற்கு விரோதிகளானமையை எடுத்துரைக்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஸ்வாதந்திரியம் சேஷத்வவிரோதி' என்றது, 'நான் எனக்கு உரியேன்' என்றிருக்குமளவில் வேருெரு பொருளுக்கும் அடிமையாய் இல்லாமையாலே, 'தனக்கு உரியன்' என்றிருக்கும் இருப்பு, சேஷத்வத்தை உதிக்க ஒட்டாது என்ற படி. 'தத் இதர சேஷத்வம் தத்சேஷத்வ விரோதி' என்றது, 'தனக்கு உரியன்' என்னும் நிலை குலைந்து சேஷத்துவத்திற்கு இசைந்தாலும், பகவானுக்கு வேறுபட்ட மற்றைப் பொருள்களுள் ஒன்றுக்குத் தான் அடிமை என்றிருக்கும் இருப்பு, ஒரு காரணமும் பற்றுமலே தலைவனுகவிருக்கும் இறைவன் பக்கல் உண்டாகும் சேஷத்வத்தைத் தலையெடுக்க ஒட்டாது என்றபடி. (54)

## 78

அஹங்காரமாகிற ஆர்ப்பைத் துடைத்தால்
ஆத்துமாவிற்கு அழியாத பேர் அடியான்
என்றிறே.[2]

என்பது சூத்திரம்.

**அவ :**—'இதுதான் வந்தேறியன்று' என்ற சூத்திர முதல் மேற்சூத்திரம் இறுதியாகக் கூறிய பொருளை [3]மூதலிக்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—அஹங்காரம்—சரீரத்தையே ஆன்மாவாக எண்ணுதல் வடிவாயும் 'நான் எனக்கு உரியன்' என்று இருக்கும்

---

[1] தத்சேஷத்வம் - பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மை. விரோதி - விரோதியாவது, தத் இதர சேஷத்வம் - பகவானுக்கு வேறு பட்டுள்ள மற்றைப் பொருள்களுள் யாதேனும் ஒன்றற்கு அடிமைப் பட்டிருத்தல்.

[2] ஆர்ப்பு - அழுக்கு; துகள்.

[3] மூதலிக்கிறுர் - காரணத்தைக் கூறுதல் முன்னுக, சித்தித்த பொருளைக் கூறுதல்.

சுவாதந்திரிய வடிவாயும் இரண்டு வகைப்பட்டிருக்கும்; அவற்றுள் ஈண்டு அகங்காரம் என்றது, 'நான் எனக்கு உரியன்' என்றிருக்கும் இருப்பைக் குறிக்கிறது. 'ஆர்ப்பு' என்கையாலே, அதனுடைய மறைக்கும் தன்மையும் இடையில் வந்ததாம் தன்மையும் தோற்றுகிறது. அதனைத் துடைக்கையாவது, நல்லாசிரியனுடைய உபதேசம் முதலானவைகளாலே வாசனையோடு போக்குதல். 'ஆத்மாவிற்கு அழியாத பேர் அடியான்' என்றது, ஒரு காரணம்பற்றி வந்தவைகளான சாதி, வர்ணம், ஆச்ரமம் முதலானவைகளாலே வந்து அழிந்துபோகும் பெயர்கள் போல அன்றிக்கே, ஆன்மா உள்ளவரையிலும் தொடர்ந்து வருகின்ற பெயர் 'அடியான்' என்னுமது என்றபடி. 'இறே' என்றது, இவ்வர்த்தத்தினுடைய பிரமாணப் பிரசித்தியைக் காட்டுகிறது. [1]'எல்லா ஆன்மாக்களும் இயல்பாகவே அடிமைகளாக உள்ளவை' என்றும், [2]'ஆன்மாவிற்கு அடிமை இயல்பு' என்றும் வருவன ஈண்டு அறியத்தக்கவை.

ஆகையால், நான் எனக்கு உரியன் என்றிருக்கும் இருப்பாகிற சுவாதந்திரியம் முதலானவைகள் காரணம் பற்றி வந்தவை; அடிமை இயல்பாகவே உள்ள தன்மை என்னக் குறை இல்லை என்பது கருத்து. (55)

## 79

கிராம குலாதிகளால் வரும் பேர் அநர்த்த ஏது.[3]

என்பது சூத்திரம்.

அவ:—'அது என்? கிராமம் குலம் முதலானவைகளால் வரும் பெயர்கள் அன்றோ நடந்து போருகின்றன?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'கிராம குலாதிகளால் வரும் பேர் அனர்த்த ஏது' என்றது, கிராமம் குலம் முதலாயினவற்றால் வழங்குகிற

[1] 'அழியாத பேர் அடியான்' என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எல்லா ஆன்மாக்களும்' என்று தொடங்கி.

"தாஸபூதாஸ்ஸ்வத:" என்பது ஹாரிதஸ்மிருதி.

[2] "ஆத்மதாஸ்யம்" என்பது பிரமாணம்.

[3] அநர்த்த ஏது - கேட்டிற்குக் காரணம்.

வழக்கு, நான் என்ற செருக்கினை உண்டுபண்ணுகையாலே ஆன்மநாசம் ஆகிற கேட்டினை விளைக்கும் என்றபடி. ஆகை யால், அப்பெயர்களால் இவன் வழங்கத்தக்கவன் அல்லன் என்பது கருத்து. (56)

## 80

" ஏகாந்தீ வியபதேஷ்டவ்ய:" [1]

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய பொருளுக்குப் பிரமாணம் காட்டு கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஏகாந்தீவியபதேஷ்டவ்ய:— [2] " பிரபந்நனானவன் கிராமம் குலம் முதலாயினவற்றைக் கொண்டு வழங்கப்படுபவன் அல்லன்; பகவானுடைய சம்பந்தத்தை இட்டுச் சொல்லத்தக்க வன் அல்லவா; அவனுக்கு அந்தக் கிராமம் குலம் முதலானவை கள் எல்லாம் அந்தப் பகவானேயாவர்." இதனால், பகவா னுக்கே உரியவனாகவிருக்கும் ஒருவன் கிராமம் குலம் முதலாயின வற்றை இட்டுச் சொல்லப்படுமவன் அல்லன்; பகவானுடைய சம்பந்தத்தை இட்டுச் சொல்லத் தக்கவன்; அவனுக்கு அந்தக் கிராமம் குலம் முதலானவைகள் எல்லாம் பகவானேயாவன் என்கிறது. (57)

[3] ஆக, இப்பிரகரணத்தில் [4] பிரபத்திக்குத் தேசம் காலம் முதலியவற்றில் நியமமில்லை விஷயநியமமே உள்ளது என்னுமிட

---

[1] ஏகாந்தீ - ஏகாந்தியானவன், வ்யபதேஷ்டவ்ய: - வழங்கப்படக் கடவன். ஏகாந்தீ - எம்பெருமானையே சாதனமாகக் கொண்டவன்.

[2] ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவக்ராம குலாதிபி:
விஷ்ணுநாவ்யபதேஷ்டவ்ய: தஸ்யஸர்வம் ஸஏவஹி.
என்பது விஷ்வக்சேந சம்ஹிதை.

குடியும் குலமுமெல்லாம் கோகனகை கேள்வன்
அடியார்க் கவனடியே யாகும்—படியின்மேல்
நீர்கெழுவு மாறுகளின் பேரும் நிறமுமெல்லாம்
ஆர்கலியைச் சேர்ந்திடமாய்ந் தற்று.

என்ற ஞானசாரம் இங்கு நோக்கத்தகும்.

[3] இப்பிரகரணத்தில் 23ஆம் சூத்திரத்திற்கு மேல் கூறப்பட்டன வற்றைத் தொகுத்து அருளிச்செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

[4] 24 முதல் 36 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

மும், [1] அவ்விஷயந்தான் இன்னது என்னுமிடமும், [2] அவ்விஷயத்தினுடைய சிறப்பும், [3] அதில் பிரபத்தி செய்யும் அதிகாரிகளுடைய மூவகைப்பட்ட பிரிவும், [4] பிரபத்தி பண்ணும் அதிகாரிகளுடைய சிறப்பும், [5] பிரபத்தியை உபாயமாக்கினால் வரும் குற்றமும், [6] பிரபத்தியினுடைய தன்மை முதலானவைகளும், [7] பிரபத்திக்கு விஷயமாக இருப்பவனே உபாயம் என்னுமிடமும் சொல்லப்பட்டன.

மேல், 'ஸ்வயத்ந நிவிருத்தி' என்ற சூத்திர முதல் 'ஏகாந்தீ வியபதேஷ்டவ்ய:' என்ற இச்சூத்திரம் இறுதியாகச் சொல்லப்பட்டவை பிராசங்கிகம். 'என்?' எனின், 'பிராப்தாவும்' என்ற சூத்திரத்திலே இவன் தன் முயற்சியினின்றும் நீங்கியிருத்தல் முதலானவைகள் தோற்றினபடியாலே, "இவற்றிற்கு நிதானம் இன்னது என்றும், [8] இத்தகையானுடைய முயற்சிக்கும் அறிவிற்கும் பயன் இன்னது என்றும், [9] சேஷத்வம் முதலானவற்றை முக்கியமாகக் கொண்டதற்குக் காரணம், ஆன்ம சொரூபத்தினுடைய அடிமையானது அந்தரங்க நிரூபகமாகவிருக்கும் தன்மையாலே என்றும், [10] இப்படியிருக்கும் இந்தச் சேஷத்துவமே இயல்பாக உள்ளது; அதற்கு விரோதிகளாக இருப்பவைகள் காரணம் பற்றி வந்தவைகள் என்றும், [11] அகங்காரமாகிற தன்மை நீங்கினால் ஆன்மாவிற்கு அடிமையே எப்பொழுதும் நிரூபகமாகவிருக்கும் [12] என்கையாலே மேலே

---

1 37. சூத். காண்க.

2 38 முதல் 43 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

3 44 முதல் 53 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

4 54 முதல் 56 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

5 57. சூத். காண்க.

6 58 முதல் 66 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

7 67 முதல் 71 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

8 72. சூத். காண்க.

9 73. சூத். காண்க.

10 74. சூத். காண்க.

11 75 முதல் 77 முடிய உள்ள சூத்திரங்களிற்காண்க.

12 78. சூத். காண்க.

கூறிய பொருளை மூதலித்தும், [1] கிராமம் குலம் முதலாயினவற்றால் இவன் சொல்லத்தக்கவன் அல்லன் என்றும், [2] இப்படிச் சொல்லுவதற்குப் பிரமாணமும் சொல்லுகையாலே என்க.

ஆறு பிரகரணங்களுள் இரண்டாவதான
**உபாயப்பிரகரணம் முற்றிற்று.**

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாளமாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

---

1 79. சூத். காண்க.

2 80. சூத். காண்க.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# மூன்றும் பிரகரணம்

# அதிகாரி நிஷ்டா கிரமம்

## 81

உபாயத்துக்குப் பிராட்டியையும்[1] திரௌபதியையும் திருக்கண்ணமங்கையாண்டானையும் போல இருக்கவேணும். உபேயத்துக்கு இளைய பெருமாளையும் பெரியவுடையாரையும் பிள்ளை திருநறையூர் அரையரையும் சிந்தயந்தியையும் போலே இருக்கவேணும்.

என்பது சூத்திரம்.

அவ:—இனி, அதிகாரியின் தன்மை கூறப்படுகிறது. [2]உபாயம், உபேயத்தின்பொருட்டு ஆகையாலும், [3]"உபேயத்தில் உகப்பும்" என்றும், "பரப்பிரயோஜனப் பிரவிருத்தி பிரயத்நபலம், தத் விஷயப் பிரீதி சைதந்ய பலம்" என்றும் உபேயத்திற்கு உரிய அதிகாரமும் கீழே நினைவுபடுத்தப்பட்டமை

---

[1] பிராட்டி - சீதாபிராட்டி. திருக்கண்ணமங்கையாண்டான் - திருக்கண்ணமங்கை என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருந்த ஒரு பெரியார். ஸ்ரீராமபிரானைப் பெருமாள் என்றும், இலட்சுமணனை இளையபெருமாள் என்றும் வழங்குதல் வைணவப் பெருமக்கள் மரபு. பெரிய உடையார் - ஜடாயு. இவரைப் பெரியவுடையார் என்று வழங்குதலும் வைணவப் பெருமக்கள் மரபு. பிள்ளை திருநறையூர் அரையர் - நாய்ச்சியார்கோயில் என வழங்கும் திருநறையூரில் எழுந்தருளியிருந்த ஒரு பெரியார்.

[2] உபாயத்தைச் சொல்லுகிற இவ்விடத்தில் உபேயத்தையும் சொல்லுகிறதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'உபாயம்' என்று தொடங்கி. 164-ஆம் சூத். வியாக். பார்க்க.

[3] 66, 73-ஆம் சூத்திரங்களில்.

யாலும், [1] துவயத்தில் நிலை நின்ற அதிகாரிக்கு உபாயம் உபேயம் என்னும் இரண்டும் வேண்டப்படுவனவாகையாலும், உபாய உபேய அதிகாரங்களில் ஒருவன் இன்ன இன்னபடி இருக்க வேண்டும் என்னுமதனை அந்த அந்த உபாய உபேய அதிகாரங்களில் நிலை நின்றவர்களை உவமையாக எடுத்துக்காட்டி அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—[2] 'உபாயத்துக்கு' என்றது உபாயத்திற்கு அதிகாரியாகும்போது என்றபடி. உபாயத்தினுடைய அதிகாரத்திற்கு என்னவுமாம். 'உபேயத்துக்கு' என்றதுவும் இப்படியே. 'உபாயத்தில்' என்பது பாடமான போது உபாய விஷயத்தில் என்றபடி. மற்றையதுவும் இப்படியே. (1)

## 82

[3] பிராட்டிக்கும் திரௌபதிக்கும் வாசி சக்தியும் அசக்தியும்.

என்பது சூத்திரம்.

அவ :—அவர்களைப் போல இருக்க வேண்டும் என்றதன் கருத்தை விளக்குவதற்காக அவர்கள்தம் படிகளை [4]அடைவே அருளிச்செய்கிறார் மேல்; அவற்றுள் பிராட்டியின் படியையும் திரௌபதியின் படியையும் அருளிச்செய்கைக்கு உடலாக முதலிலே இருவர்க்கும் உள்ள வாசியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—பிராட்டிக்கும்—[5] "என்னை அழைத்துக்கொண்டு போவாராகில், போகும் அச்செயல், அவருக்குத் தக்கதாக

[1] துவயத்தின் முன் வாக்கியத்தில் உபாயமும், பின்வாக்கியத்தில் உபேயமும் பேசப்படுகின்றன.

[2] உபாய அதிகாரம் - உபாயத்தினால் கிடைக்கின்ற பலத்தை அடைவதற்குத் தக்க தகுதி. உபேய அதிகாரம் - பலன் பெறுதற்கு முன்னே இருக்க வேண்டிய அவசியமான தகுதி.

[3] பிராட்டிக்கு - சக்தி, திரௌபதிக்கு - அசக்தி என நிரல் நிறையே கொள்க. வாசி - வேற்றுமை.

[4] படி - தன்மை.

[5] "தத்தஸ்ய ஸத்ருசம்பவேத்" என்பது, ஸ்ரீராமா. சுந். 39 : 30.

இருக்கும்'' என்றிருந்த பிராட்டிக்கும், திரௌபதிக்கும்–[1] ''சரணம் அடைந்த என்னைப் பாதுகாக்க வேண்டும்'' என்ற திரௌபதிக்கும், வாசி சக்தியும் அசக்தியும்–[2] ''குளிர்ந்திருக்க வேண்டும்'' என்று நெருப்பை நீர் ஆக்கினாற்போன்று [3] ''எரிந்து போனவனாக வேண்டும்'' என்று பகைவர்கள் கூட்டத்தைச் சாம்பல் ஆக்கித் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வல்ல ஆற்றல் உண்டாகையும், தன்னுடைய முயற்சியாலே பகைவர்களைத் தள்ளித் தன்னை நோக்கிக் கொள்ளப் பார்த்தாலும் நோக்கிக்கொள்ளுகைக்கு ஈடான ஆற்றல் [4] தனக்கு இல்லாமையும் என்கை. (2)

## 83

**பிராட்டி [5]ஸ்வசக்தியை விட்டாள்; திரௌபதி லஜ்ஜையை விட்டாள்; திருக்கண்ண மங்கையாண்டான் ஸ்வ வியாபாரத்தை விட்டான்.**

என்பது சூத்திரம்.

அவ :—இத்தகையார்கள் செய்தனவற்றை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பிராட்டி ஸ்வ சக்தியை விட்டாள்' என்றது, நாயகரான பெருமாள் நம்மைக் காப்பாற்ற வேண்டுமத்தனையல்லது நம்முடைய ஆற்றலால் நம்மைப் பாதுகாத்துக்

---

1 ''ரக்ஷமாம் சரணாகதாம்.'' என்பது பாரதம் சபாபர்.

2 ''சீதோபவ'' என்பது, ஸ்ரீராமா. சுந். 53 : 29.

'அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும்என்
சொல்லி னாற்சுடு வேன்அது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசுஎன்று வீசினேன்.'

என்பது கம்பராமாயணம் சுந்.

3 'தக்தோபவ' என்பது.

4 தனக்கு - திரௌபதிக்கு.

5 ஸ்வசக்தி - தனது ஆற்றல். லஜ்ஜை - நாணம். ஸ்வ வியாபாரம் - தன்னைக் காத்துக்கொள்ளற்குரிய செயல். இங்கே குறித்த செயல்கள் மூன்றும் ஒன்றற்கொன்று அரிய செயல்கள். அதாவது, பிராட்டி செயலைக்காட்டிலும் திரௌபதி செயல் அரிது; திரௌபதி செயலைக்காட்டிலும் திருக்கண்ணமங்கையாண்டான் செயல் அரிது என்றபடி.

கொள்ளுகை நம் பாரதந்திரியத்திற்குக் கேடு தரும் என்று தனது சக்தியைக் கொண்டு காரியம் கொள்ளாதொழிகை. [1] "ஸ்ரீராம பிரானுடைய நியமனம் இல்லாமையாலும் எனது பாரதந்திரியம் என்னும் தவத்தைக் காக்கவேண்டியிருக்கையாலும், சாம்பல் ஆக்குதற்குத் தக்கவனே! பத்துத் தலைகளையுடையவனே! உன்னை என்னுடைய சக்தியால் சாம்பல் ஆகும்படி செய்யாதிருக்கிறேன்," என்றாளிறே.

'திரௌபதி லஜ்ஜையை விட்டாள்' என்றது, துச்சாதனன் சபையின் நடுவில் துகிலை உரிகிறவளவில் நாணத்தையுடையவளாய்க் கொண்டு தான் ஒருதலையை இடுக்குகையன்றிக்கே, இரண்டு கைகளையும் விடுகை. [2] பேரளவுடையள் ஆகையாலே பிராட்டிக்குப் பெருமாளே காத்தற்குரியர் என்று நம்பி, தன்னுடைய சக்தியை விட்டிருக்க அமையும்; அத்துணையளவன்றிக்கே இருந்தும் மிகப்பெரிய ஆபத்து நிலையிலே இவ்வளவில் கிருஷ்ணனே காத்தற்குரியன் என்று மகா விசுவாசத்தோடு மிகப்பெரிய சபையிலே இவள் நாணத்தை விட்டதிறே அரிது.

'திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வ வியாபாரத்தை விட்டான்' என்றது, தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுதற்குக் காரணமான தன் செயல்களை எல்லாம் விட்டான் என்றபடி. ஒரு வேலைக்காரனுடைய நாயினை மற்றொரு வேலைக்காரன் அடிக்க, அவன் அது பொறுமல், அடித்தவனை எதிர்த்துப் பொருது அவனையும் கொன்று தானும் குத்திக்கொள்வதாக இருக்கிறபடியைக் கண்டு, ஒரு சிறிய மனிதன் தன்னபிமானத்திலே ஒதுங்கினது என்னும் இவ்வளவுக்காகத் தன்னை அழிய மாறினபடி கண்டால், [3] 'பரமசேதனன் அபிமானத்திலே ஒதுங்கினால் அவன் என்படுமோ!' என்று தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுதற்குரிய செயல்களை அடைய விட்டு, அந்நாயினைப்

[1] அஸந்தேசாத்து ராமஸ்ய தபஸஶ்சாநுபாலநாத்
நத்வா குர்மிதஶக்ரீவ பஸ்மபஸ்மார்ஹ தேஜஸா.
என்பது, ஸ்ரீராமா. சுந். 22 : 20.

[2] பிராட்டி செயலைக்காட்டிலும் திரௌபதி நாணத்தை விட்டது அரிது என்பதனை விளக்குகிறார் 'பேரளவுடையள்' என்று தொடங்கி. பேரளவு - பேரறிவு.

[3] பரமசேதனன் - இறைவன்.

போன்று தம்மை நினைத்துக்கொண்டு, அப்போதே வந்து திருக்கண்ணமங்கையில் [1] பத்தராவி திருவாசலில் கைப் புடையிலே புகுந்து கண்வளர்ந்தார் என்பது பிரசித்தமிறே. (3)

## 84

'பசியராயிருப்பார் அட்ட சோறும் உண்ண வேணும் அடுகிற சோறும் உண்ண வேணும்' என்னுமா போலே, காட்டுக்குப் போகிற போது இளைய பெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு, 'அடிமை செய்யவேணும்; எல்லா அடிமையும் செய்யவேணும்; ஏவிக்கொள்ளவும் வேணும்' என்றார்; படை வீட்டில் புகுந்த பின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம் பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூண் உண்ணமாட்டாதே ஒரு திருக்கையாலே திரு வெண்கொற்றக் குடையையும் ஒரு திருக்கை யாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்; பெரியவுடையாரும் பிள்ளை திரு நறையூர் அரையரும் உடம்பை உபேக்ஷித்தார் கள்; சிந்தயந்திக்கு உடம்பு தன்னடையே போயிற்று.[2]

என்பது சூத்திரம்.

அவ :—இனி, உபேய அதிகாரிகளுள் சிறந்தவரான இளைய பெருமாள் முதலாயினார் படிகளை விரிவாக அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] பத்தராவி திருவாசலிலே - பத்தராவிப்பெருமாள் சந்நிதியின் திருவாசலிலே. கைப்புடை - கோபுரவாசலுள் இருக்கிற ஒட்டுத் திண்ணை. கை - சிறிய, புடை - இடம்.

[2] இச்சூத்திரம் இரண்டு சூத்திரங்களாக முன்னைய அச்சுப் புத்தகங்களில் தரப்பட்டிருக்கின்றது. இது திருமழிசை அண்ணா அப்பங் கார்ஸ்வாமி எழுதியுள்ள அரும்பதவுரையை நோக்கி ஒரு சூத்திரமாகக் கொள்ளப்பட்டது. மேலும், உபாய அதிகாரிகளின் செயல்களைத் தொகுத்து மேற்சூத்திரத்தில் அருளிச் செய்தவர் உபேய அதிகாரிகளின் செயல்களையும் தொகுத்து ஒரு சூத்திரத்தில் அருளிச் செய்தலே முறையுமாம். ஆதலால், ஒரு சூத்திரமாகவிருத்தலே தகும்.

வியாக் :—'பசியராயிருப்பார் அட்ட சோறும் உண்ண வேணும் ; அடுகிற சோறும் உண்ணவேணும் என்னுமா போலே' என்றது, பசியராயிருப்பார் தங்கள் பசியின் மிகுதியாலே 'இதற்கு முன்பு ஆக்கின சோறும் இப்போழ்து ஆக்குகிற சோறும் எல்லாம் நாமே உண்ண வேண்டும், என்று எண்ணுமாறு போல என்றபடி.

'காட்டுக்குப் போகிறபோது, இளையபெருமாள், பிரியில் தரியாமையை முன்னிட்டு 'அடிமை செய்யவேணும் ; எல்லா அடிமையும் செய்யவேணும் ; ஏவிக்கொள்ளவும் வேணும் என்றார்' என்றது, பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிற போது, இளமை தொடங்கி மிக்க அன்பினையுடையரான இளைய பெருமாள் [1] படைவீட்டினின்றும் புறப்படுவதற்கு முன்னே கூடப் போவதாக முயற்சி செய்கிறபடியைக் கண்டு, 'நீர் நில்லும்' என்று நிர்ப்பந்தித்தருள,[2] 'அடியேனைத் தேவரீர் பின்னே வரும்படி நியமிக்கவேண்டும். அங்ஙனம் கொள்ளாவிடில் முடிவேன் ; அடிமை கொண்டால் நான் செய்ய வேண்டியதைச் செய்து முடித்தவன் ஆவேன். தேவரீருக்கும் சேதன லாபம் உண்டாகிறது,'' என்றும், கங்கையின் கரை ஏறினவன்று

பெருமாள் காட்டிற்குப் போகும்போது இளையபெருமாள், பிரியில் தரியாமையை முன்னிட்டு 'அடிமை செய்யவேணும் ; எல்லா அடிமையும் செய்யவேணும் ; ஏவிக்கொள்ளவும் வேணும்' என்றார். பெருமான் படைவீட்டிலே புகுந்தபின்பு, இளைய பெருமாள், காட்டிலே தனியிடத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூண் உண்ணமாட்டாமல் ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக்குடையையும் ஒரு-திருக்கையாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார் என முடிக்க. 'பசியராயிருப்பார்...என்னுமாபோலே' என்பது இளையபெருமாளுக்கு உவமை.

'ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூண் உண்ணமாட்டாதே' என்பதற்கு, சுயம்பாகத்திலே உண்டு வயிற்றைப் பெருக்கினவன் ஒருவன் பந்தியில் உட்கார்ந்து எல்லாரோடும் உண்ண மாட்டாதவாறு போன்று என்பது பொருள். இதுவும் இளைய பெருமாளுக்கு உவமை. சுயம்பாகம் - தானே சமைத்தல்.

[1] படைவிடு - அயோத்தியா நகரம்.

[2] குருஷ்வமாமநுசரம் வைதர்ம்யம் நேஹவித்யதே
க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி தவசார்த்த: ப்ரகல்பதே
என்பது, ஸ்ரீராமா . அயோத். 30 : 22.

இவரை மீளவிடுகைக்கு உறுப்பாக அவர் பலவற்றை அருளிச் செய்ய,[1] "இரகு குலத்தில் அவதரித்தவரே, உம்மைப் பிரிந்தால் சீதையும் இல்லை, நானும் இல்லை; உயிர் வாழ்வோமானால், தண்ணீரினின்றும் வெளியில் எடுக்கப்பட்ட மீன் போன்று முகூர்த்த காலமே உயிர் வாழ்வோம்," என்றும் சொல்லுகை யாலே பிரியில் தாம் உளராக மாட்டாமையை முன்னிட்டு,[2] "அடியேனை நியமிக்க வேண்டும்" என்ற பின்னர்

[3] நானுடனே கட்டிய வில்லை எடுத்துக்கொண்டு மண் வெட்டியையும் கூடையையும் தலையில் வைத்துக்கொண்டு, 'உமக்கு வழி காட்டிக்கொண்டே முன்னே செல்வேன்; முனிவர்களுக்கு நல்ல உணவுகளான கிழங்குகளையும் பழங்களை யும் மற்றும் காடுகளில் எவை உள்ளனவோ அவற்றையும் நாள் தோறும் தேடிக்கொண்டு வந்து உமக்குக் கொடுப்பேன்," என் கையாலே தம்முடைய சேஷத்துவத்திற்குத் தகுதியாக அடிமை செய்யவேண்டும் என்றும்,

அதன் பின்னர் [4]"'தேவரீர் பிராட்டியோடு மலைகளின் தாழ்வரைகளில் விளையாடப் போகிறீர்; அடியனுன நான் விழித்துக்கொண்டிருக்கும் நிலையிலும் உறங்குகிற நிலையிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்யப்போகிறேன்," என்கையாலே அங்ஙனம் அடிமை செய்யுமிடத்திலும் இன்ன இன்ன அடிமை என்று ஒரு நியதி இன்றியே எல்லா அடிமைகளை யும் செய்யவேண்டும் என்றும்,

---

[1] நசஸீதா த்வயாஹீநா நசாஹமபிராகவ
முகூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ.
என்பது, ஸ்ரீராமா. அயோத். 53 : 31.

[2] "குருஷ்வமமாம்" இதன் விளக்கம் மேலே காண்க.

[3] தநுராதாய ஸகுணம் கநித்ர பிடகாதர:
அக்ரதஸ்தே கமிஷ்யாமி பந்தாநமநு தர்சயந்.
ஆஹரிஷ்யாமிதே நித்யம் மூலாநிச பலாநிச
வந்யாநி யாநிசாந்யாநி ஸ்வாஹாராணி தபஸ்விநாம்.
என்பன, ஸ்ரீராமா. அயோத், 31 : 23, 24.

[4] பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதஶ்சதே.
என்பது, ஸ்ரீராமா. அயோத். 31 : 25.

பஞ்சவடியிலே எழுந்தருளின போது "நீரும் நிழலும் வாய்த்திருப்பதோர் இடத்தைப் பார்த்துப் பர்ணசாலையைச் சமையும்" என்ன,[1] "ஸ்ரீராமபிரானால் இந்த விதமாகச் சொல்லப் பட்ட இளையபெருமாள் கையைக் கூப்பிக்கொண்டு பிராட்டி முன்னிலையில் பெருமாளை நோக்கி இந்த வார்த்தையைச் சொன்னார்" என்று நம் தலையில் சுவாதந்திரியத்தை வைத்த போதே பெருமாள் நம்மைக் கைவிட்டார் என்று வேறுபட்ட ராய், பிராட்டி முன்னிலையாகக் கையும் அஞ்சலியுமாய் நின்று, [2]"காகுத்தரே, தேவரீர் பல வருடங்கள் இருந்தாலும் உமக்கு நான் பரதந்திரனாக இருக்கிறேன்; ஆதலால், தேவரீரே மனத் திற்கு உகந்த இடத்தில் பர்ணசாலை கட்டுக என்று அடியேனைக் குறித்து அருளிச்செய்ய வேண்டும்," என்கையாலே, அடிமை செய்யுமளவில் சுவாதந்திரியமாகிற குற்றம் கலசாதபடி வேண்டிய கைங்கரியங்களிலே ஏவிக்கொள்ளவும் வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டார் என்றபடி.

'படை வீட்டில் புகுந்த பின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம் பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூண் உண்ண மாட்டாதே, ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும் ஒரு திருக்கையாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்,' என்றது, திருவயோத்தியைக்கு எழுந்தருளித் திருமுடி புனைந்துகொள்ளும் போது, தம்மோடு உடனிருந்து அடிமை செய்வதற்கு ஒருவரும் இல்லாததொரு காட்டிலே தாமே அடிமை செய்து கைங்கரியவாசையைப் பெருக்குகையாலே, சுயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினவன் ஒப்பூண் உண்ணமாட்டாதவாறு போன்று, ஸ்ரீ பரதாழ்வான் தொடக்கமானவர்களோடு ஒக்கத் தாமும் ஓர் அடிமை செய்து தரிக்கமாட்டாமல், திருவெண்கொற்றக்குடையை எடுக்கை, திருவெண்சாமரம் பரிமாறுகையாகிற இரண்டு அடிமைகளையும் ஒரே காலத்தில் செய்தார் என்றபடி.

[1] ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ்ஸம்யதாஞ்ஜலிঃ
ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்த்தமிதம் வசனம் அப்ரவீத்.
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 6.

[2] பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷசதம் ஸ்த்திதே
ஸ்வயம் துருசிரேதேசே க்ரியதாமிதி மாம்வத.
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 7.

இந்நிகழ்ச்சி ஸ்ரீ ராமாயணத்தில் இல்லை. [1]"இலக்கு மணரோ என்னில், திருவெண்கொற்றக் குடையையும் திருவெண்சாமரத்தையும் கைகளில் பிடித்துக்கொண்டு பெருமாளைப் பின் தொடர்ந்து போனர்," என்கிறது ஸ்ரீ ராமாயண மன்றோ? என்னில், காட்டுக்கு எழுந்தருளுவதற்கு முன்னே திருமுடி புனைந்துகொள்ளுவதற்காக அலங்கரித்துக்கொண்டு தம்முடைய திவ்விய அந்தப்புரத்தினின்றும் புறப்பட்டுச் சக்கரவர்த்தி திருமாளிகையை நோக்கித் திருத்தேரிலே ஏறிப் பெருமாள் எழுந்தருளுகிற போது இளைய பெருமாள் செய்த செயலாகத் திருவயோத்யா காண்டத்திலே சொல்லப்பட்ட தாகையாலே இவ்விடத்திற்கு அது சேராது.

"ஆனல், இவர் என் கொண்டு இப்படி அருளிச்செய்தார்?" என்னில், பாத்ம புராணத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் கொண்டு அருளிச்செய்தார். [2]"பிறகு அந்தப் பட்டாபிடேகத் திருநாளில் நல்ல இலக்கினத்தில் நல்ல முகூர்த்தத்தில் சக்கர வர்த்தி திருமகனுக்குத் திருவபிடேகத்தின்பொருட்டு நகரத்து மக்கள் நல்ல காரியங்களைச் செய்தார்கள்," என்று தொடங்கிப் பரக்கச் சொல்லிக்கொண்டு வந்து, [3]"தூய விரதத்தோடு கூடிய முனிவர்கள் நான்கு வேதங்களின் மயமாயும் மங்களகரமாயு மிருக்கிற விஷ்ணு மந்திரங்களை ஜபித்துக்கொண்டு பரிசுத்தமான வேத மந்திரங்களாலே தூய்மை செய்யப்பட்ட தீர்த்தத்தாலே உலகத்திற்கெல்லாம் நாயகனை இராகவனுக்குத் திருவபிஷேகம் செய்தார்கள்"; [4]"அத்தகைய மங்களத்தோடு கூடிய இலக்கினத்தில் ஆகாயத்தில் தேவதுந்துபி முதலான வாத்தியங்கள் முழங்கின. நான்கு பக்கங்களிலும் மலர் மாரியைப்

---

[1] சத்ர சாமர பாணிஸ்து லக்ஷ்மணோநுஜகாமஹா
என்பது, ஸ்ரீராமா. அயோத். 12 : 32.

[2] அததஸ்மிந் திநேபுண்யே சுபலக்நே சுபாந்விதே
ராகவஸ்யாபிஷேகார்த்தம் மங்களம் சக்ரிரேஜநா:
என்பது, பாத்மபு. 2 : 49.

[3] மந்த்ர பூதஜலைஶ் சுத்தைர் முநயஸ்ஸம்ச்ரித வ்ரதா:
ஜபந்தோ வைஷ்ணவாந் ஸூக்தாந் சதுர்வேத மயாந்சுபாந்
அபிஷேகம் சுபம்சக்ரு: காகுத்ஸ்தம் ஜகதாம்பதிம்.

[4] தஸ்மிந் சுபதமே லக்நே தேவதுந்துபயோ திவி
நிநேது: புஷ்பவர்ஷாணி வவர்ஷுஶ்ச ஸமந்தத:

பொழிந்தார்கள்'', [1]''வேதபாராயணம் செய்துகொண்டிருக்கும் முனிவர்களோடு கூடினவரும் திவ்வியமான ஆடைகளாலும் திவ்வியமான ஆபரணங்களாலும் சிறந்த வாசனையோடு கூடின சந்தனத்தாலும் பலவிதமான தெய்வ மலர்களாலும் அலங்கரிக்கப் பட்டவராய்ப் பிராட்டியோடுகூட விளங்கினார்''; [2]''அப்பொழுது இலக்குமணன் திவ்வியமான திருவெண்கொற்றக் குடையையும் திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்; பரதனும் சத்துருக்கனனும் இரண்டு பக்கங்களிலும் விசிறியைக் கொண்டு விசிறினார்கள்''. [3]''ஸ்ரீமானான விபீஷணாழ்வான் கண்ணாடியைத் தாங்கினார்; குரங்குகளுக்குத் தலைவனான சுக்கிரீவன் நிறைகுடத்தைத் தாங்கி அடிமை செய்தான்''; [4]''பெருமதிப்புடைய ஜாம்பவான் மனத்திற்கு உகந்த மலர் மாலையைத் தரித்தான்; அங்கதன் கற்பூரத்தோடு கூடிய தாம்பூலத்தை அன்போடு கொடுத்தான்''; [5]'' திருவடி திவ்வியமான கைப்பந்தத்தைப் பிடித்துக்கொண்டும் சுஷேணன் அழகான கொடியைப் பிடித்துக்கொண்டும் மந்திரிகள் ஸ்ரீராம பிரானைச் சூழ நின்றுகொண்டும் சேவித்தார்கள்,'' என்று பாத்ம புராணத்தில் பின் பாகத்தில் நாற்பத்தொன்பதாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டதிறே. ''சத்ரம்ச சாமரம் திவ்யம் த்ருதவாந்'' என்பது தோற்றவேயிறே 'திருவெண் கொற்றக்குடையையும் திருவெண்சாமரத்தையும் தரித்து' என்று அருளிச் செய்தது இவர்.

[1] திவ்யாம்பரை: பூஷணைஸ்ச திவ்யகந்தாநுலேபநை:
புஷ்பை: நாநாவிதை: திவ்யை: தேவ்யாஸஹ ரகூத்வஹ:
அலங்க்ருதஸ்ச சுசுபே முநிபி: வேதபாரகை:

[2] சத்ரம்ச சாமரம்திவ்யம் த்ருதவாந் லக்ஷ்மணஸ்ததா
பார்ச்வே பரதசத்ருக்நௌ தாலவ்ருந்தே விவேஜது:

[3] தர்ப்பணம் ப்ரததௌ ஸ்ரீமாந் ராக்ஷஸேந்த்ரோ விபீஷண:
ததார பூர்ணகலசம் சுக்ரீவோ வாநரேச்வர:

[4] ஜாம்பவாம்ச்ச மஹாதேஜா: புஷ்பமாலாம் மநோஹராம்
வாலிபுத்ரஸ்து தாம்பூலம் ஸ கர்பூரம் ததௌ ப்ரியாத்

[5] ஹநுமாந் தீபிகாம் திவ்யாம் சுஷேணஸ்துத்வஜம் சுபம்
பரிவார்ய மஹாத்மாநம் மந்த்ரிணஸ்ஸமுபாசிரே.

என்பன, பாத்ம புராணம்.

[1] பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூர் அரையரும் உடம்பை உபேக்ஷித்தார்கள். ஸ்ரீ ஜடாயு மகாராஜரைப் பெரிய வுடையார் என்றுயிற்று [2] நம் முதலிகள் அருளிச்செய்வது. [3] இவர் தாம், பஞ்சவடியிலே பெருமாள் எழுந்தருளித் தம்மை அங்கீகரித்து [4] "இலக்குமணு, பறவைகட்கு அரசனுன இந்தப் பெரியவுடையாருடன் இங்கு வசிக்கப்போகிறேன்" என்ற அன்று தொடங்கித் திருவடிகளுக்கு மிகவும் பரிவராய், பெருமாள் எழுந்தருளியிருக்கிற திவ்விய ஆச்சிரமத்திற்கு அண்மையில் வசிக்கிற காலத்தில், எதிர் பாராதவாறு இராவணன் வந்து பிராட்டியைப் பிரித்துக்கொண்டு போக, அப்போது பிராட்டி இவரை ஒரு மரத்தின்மேலே கண்டு 'என்னை இவன் இப்படிக் கவர்ந்துகொண்டு போகிருன்' என்று இவர் பெயரைச் சொல்லிக் கூப்பிட, உறங்குகிற இவர் அந்தத் துயரவொலியைக் கேட்டு உணர்ந்து, இராவணன் கொண்டு போகிறபடியைக் கண்டு, 'உனக்கு இது தகாதுகாண்' என்று தர்மோபதேசம் பண்ணின அளவில், அவன் கேளாமையாலே, 'நம்முயிரோடு இது கண்டிருக்கக்கடவோமல்லோம்; போர் செய்து மீட்குதல், இல்லையாகில் முடிதல் செய்யக் கடவோம்' என்று உறுதி கொண்டு, மிக்க வலிமையையும் வீரத்தையுமுடையவராகையாலே அவனோடே மிகப் பெரிய போரைச் செய்து, அவன் கையாலே அடிபட்டு விழுந்து, தம் திருமேனியை விட்டாரிறே.

பிள்ளை திருநறையூர் அரையர் குடும்பத்தோடு திருநாராயணபுரத்தில் வேதநாராயணப் பெருமாளைச் சேவிக்கச் சென்று புகுந்த அளவிலே, வேறு சமயத்தார் அந்தக் கோயிலிலே தீயிட, உள்ளே நின்றவர்கள் எல்லாரும் புறப்பட்டு ஓடிப்போகவும், அந்த எம்பெருமான் திருமேனிக்கு அழிவு வருகிறபடியைக்

---

[1] பெரியவுடையார் - (பெரிய செல்வத்தையுடையவர்; பேரரசர்) ஜடாயு. அரையர் - இறைவன் திருமுன்னர் தமிழ் மறையை இசையோடு ஓதுகின்றவர்கள். சிந்தயந்தி - ஓர் ஆயர் மடமகள்.

[2] நம் முதலிகள் - நம் வைணவப் பெருமக்கள். முதலிகள் - முதன்மையையுடையவர்கள்.

[3] 'இவர்தாம் - பரிவராய் - வசிக்கிற காலத்தில்' எனக் கூட்டுக. இவர் தாம் - ஜடாயு. பரிவு - அன்பு.

[4] "இஹவத்ஸ்யாமி சௌமித்ரே ஸார்த்தமேதேந பக்ஷிணு" என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15 : 19.

கண்டு பொறுக்கமாட்டாத அன்பின் மிகுதியாலே, தாமும் ஒக்க முடிவதாக உறுதிகொண்டு இவர் நிற்கையாலே, பிள்ளைகளும் 'இவரை விட்டுப் போகோம்' என்று நிற்க, அவர்களும் தாமும் கூட அதற்குள்ளே நின்று திருமேனியை விட்டார் என்பது பிரசித்தமிறே.

'சிந்தயந்திக்கு உடம்பு தன்னடையே போயிற்று' என்றது,[1] "ஓர் ஆயர் குலப்பெண் தான் வெளியில் வரும் போது பெரியவர்களைப் பார்த்து, (தான் போக முடியாமையாலே) வீட்டிற்குள் இருந்தே கோவிந்தனை அவன் மயமாகவே மூடிய கண்களையுடையளாய்த் தியானம் செய்தாள் ; அப்போது அந்தக் கிருஷ்ணனிடத்தில் வைத்த மனத்தினையுடைமையால் வந்த தூய்மையான சுகத்தாலே போக்கடிக்கப்பட்ட புண்ணியங்களை யுடையவளாயும், அவனை அடையாமையால் வந்த மிக்க துக்கத்தாலே அழிந்து போன பாவங்களின் கூட்டத்தையுடைய வளாயும் பரப்பிரம்ம சொரூபியான உலகக்காரணப் பொருளைத் தியானம் செய்துகொண்டு மூச்சு அடங்குகையால் தன்னை விட்டுச் சரீரம் நீங்கப் பெற்றாள்," என்கிறபடியே திருக்குர வையினன்று திருக்குழல் ஓசையைக் கேட்டு, ஸ்ரீ பிருந்தாவனத் தேறப் போவதாகப் புறப்பட்டவளவிலே, பெரியோர்களைக் கண்டமையால் போகமாட்டாமல் நின்று, கிருஷ்ணனைத் தியானம்செய்து, அவனிடத்தில் ஈடுபட்ட மனத்தினையுடையளா மையாலே வந்த [2]தூய சுகத்தாலும் அவனை அடைய முடியா மையால் வந்த மிக்க துக்கத்தாலும் அழிந்து போன புண்ணிய பாவங்களையுடையளாய், அவனிடத்திலேயே நினைவு செல்லா நிற்க, அவனை அடையப்பெறாமையாலான துக்கத்தாலே தரிக்க

---

[1] காசித் ஆவஸதஸ்யாந்தே ஸ்தித்வா த்ருஷ்ட்வா பஹிர்குரும்
தந்மயத்வேந கோவிந்தம் தத்யௌ மீலிதலோசநா
தச்சித்த விமலாஹ்லாத க்ஷீணபுண்யசயா ததா
ததப்ராப்தி மஹாதுக்க விலீநாசேஷ பாதகா.
சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம்
நிருச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா.

என்பன, ஸ்ரீவிஷ்ணுபு.

[2] தூய சுகத்தாலே அழிந்து போன புண்ணியத்தையுடையளாய், மிக்க துக்கத்தாலே அழிந்து போன பாவத்தையுடையளாய் என்று பிரித்து நிரலே கூட்டுக. இரு வினைகளும் நீங்கப்பெற்றாள் என்பது கருத்து.

மாட்டாமல் மூச்சு அடங்குகையாலே, இவளுக்குத் தான் வெறுக்க வேண்டாதபடி சரீரம் 'தன்னடையே விட்டுக்கொண்டு நின்றது என்றபடி. (4)

## 85

உபாயத்துக்குச் சக்தியும் லஜ்ஜையும் யத்நமும் குலைய வேணும்; உபேயத்துக்கு, பிரேமமும் தன்னைப் பேணுமையும் தரியாமையும் வேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, இப்படி உவமையாக எடுத்துக்காட்டப்பட்டவர் கள் படிகளைச் சொல்லி, இனி, 'இவர்களைப் போல இருக்க வேண்டும்' என்றதன் கருத்தினை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—[1] 'உபாயத்துக்குச் சக்தியும் லஜ்ஜையும் யத்நமும் குலையவேணும்' என்றது, உபாயத்திற்கு அதிகாரியாம்போது தன்னைப் பாதுகாத்தலைத் தானே செய்துகோடற்கு உறுப்பான ஆற்றலும், தான் மேற்கொள்ளும் உபாயத்திற்கு விரோதிகளான வற்றை விடுமளவில் நாட்டார் சிரிக்குமதற்கு நாணும் நாணமும், தன்னுடைய பாரதந்திரியத்திற்கு விரோதியான தன் முயற்சி யும் கைவிடவேண்டும் என்றபடி.

'உபேயத்துக்குப் பிரேமமும் தன்னைப் பேணுமையும் தரியாமையும் வேணும்' என்றது, உபேயத்திற்கு அதிகாரியாம் போது சேஷியைப் பிரியாதே நின்று எல்லா அடிமைகளையும் அவன் ஏவினபடி செய்ய வேண்டும் என்னும் அன்பும், அத்

---

[1] பிராட்டியைப் போலே சக்தி குலையவேண்டும்; திரௌபதியைப் போலே நாணம் குலையவேண்டும்; திருக்கண்ணமங்கையாண்டானைப் போலே யத்நம் குலையவேண்டும். ஆக, உபாயத்திற்கு ஒருவன் அதி காரியாகும்போது இம்மூன்றும் குலையவேண்டும் என்றபடி. யத்நம் - முயற்சி. இளையபெருமாளைப் போலே பிரேமம் வேண்டும்; ஜடாயுவை யும் பிள்ளை திருநறையூர் அரையரையும் போலே தன்னைப் பேணுமை வேண்டும்; சிந்தயந்தியைப் போன்று தரியாமை வேண்டும். ஆக, உபேயத்திற்கு அதிகாரியாகும்போது ஒருவனுக்குப் பிரேமமும் தன் னைப் பேணுமையும் தரியாமையும் வேண்டும் என்றபடி. பிரேமம் - அன்பு. தன்னைப் பேணுமை - தன் உடலை விரும்பாமை.

தலைக்கு ஒரு தீங்கு வரில் அதுகண்டு ஆற்றமாட்டாமல் தன்னுடம்பை வெறுத்தலும், அவனுடைய திருமேனியை அனுபவிக்க இயலாதபோது தரித்திருக்க மாட்டாமல் மூச்சு அடங்கும்படியாகையும் வேண்டும் என்றபடி. ஆகையால், அவர்களைப் போலே இருக்கையாவது, இத்தன்மைகளையுடையராகை என்பது கருத்து. (5)

## 86

இவனுக்கு [1]வைதமாய் வருமதிறே தியஜிக்கலாவது ; ராகப்பிராப்தமாய் வருமது தியஜிக்கவொண்ணாதிறே.

என்பது சூத்திரம்.

அவ — [2]"இறைவனுடைய காரியத்தை நினைத்து எப்பொழுது சரீரம் விடப்படுகிறதோ, அப்போது மனிதன் வைகுண்டத்தை அடைந்து முக்தன் ஆகிறான்," என்று ஆக்நேயபுராணத்திலும், [3] "எவன் தேவகாரியத்தைச் செய்கிறவனாகித் தன் சரீரத்தை விடுகிறானோ, அந்த மனிதன் பாவியானாலும், விஷ்ணுவின் போகத்தை அடைகிறான்," என்று வாயவிய புராணத்திலும், [4]"ஸ்ரீரங்கநாதனை ஒரு பயனையும் கருதாதவனாய் அடைந்து எவன் சரீரத்தை விடுகிறானோ, அவனுடைய குலத்தில் இறந்த அனைவரும் மோக்ஷத்தை அடைகின்றார்கள்," என்று வாமநீய புராணத்திலும் சொல்லுகையாலும், ஆச்வமேதிக பர்வத்தில் வைஷ்ணவ தர்ம சாஸ்திரத்தில் ஐந்தாம் அத்தியாயத்திலே [5] "என்னிடத்தில் வைத்த மனத்தினாலே எவன் ஒருவன்

[1] வைதமாய் வருமது - சாஸ்திரங்கள் மூலமாக விதிக்கப்பட்டு வருவது. தியஜிக்கலாவது - விடலாவது. ராகப்பிராப்தமாய் வருமது - ஆசை அடியாக வருவது. தியஜிக்க வொண்ணாது - விடவொண்ணாது.

[2] விஷ்ணோః கார்யம் ஸமுத்திச்ய தேஹத்யாகோயதா க்ருதః
ததா வைகுண்டமாஸாத்ய முக்தோ பவதிமாநவః

[3] தேவகார்ய பரோபூத்வா ஸ்வாம்தநும்யః பரித்யஜேத்
ஸயாதி விஷ்ணு ஸாயுஜ்யமபி பாதகக்ருந்நரః.

[4] ரங்கநாதம் ஸமாச்ரித்ய தேஹத்யாகம் கரோதியः
தஸ்யவம்சே ம்ருதாஸ் ஸர்வே கச்சந்தி ஆத்யந்திகம் லயம்

[5] அக்நிப்ரவேசம் யச்சாபி குருதே மத்கதாத்மநா
ஸயாத்யக்நி பிரகாசேந விமாநேந மமாலயம்
ப்ராணம்ஸ்த்யஜதி யோ மர்த்யோ மாம்ப்ரபந்நோப்யநாசகம்
பாலஸூர்ய ப்ரகாசேந வ்ரஜேத் யாநேந மத்க்ருஹம்.

தீயிடை மூழ்குகிறானோ, அவன், என்னுடைய பரமபதத்தை, தீயினைப் போன்று பிரகாசிக்கின்ற விமானத்தில் வந்து அடைகிறான்; தன்னுடைய பாரத்தை எல்லாம் என்னிடத்தில் வைத்த எந்த மனிதன் உயிரை விடுகிறானோ, அவன் நாசம் இல்லாத என்னுடைய பரமபதத்தைப் பால சூரியனைப் போன்று விளங்குகிற விமானத்தில் வந்து அடைகிறான்'' என்று பகவான் தானே சிறப்பித்து அருளிச்செய்கையாலும் இப்படி மோக்ஷத் திற்குச் சாதனமாகச் சொல்லப்படுகிற இறைவன்பொருட்டுத் தன் சரீரத்தை விடுதல், வேறு ஒரு சாதனத்தையும் செய்யாத வனை இவனுக்கு விலக்கு அன்றோ? பிரபந்நராய் இருக்கிற பிள்ளை திருநறையூர் அரையர் இதனைச் செய்வான் என்?'' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவனுக்கு வைதமாய் வருமதிறே தியஜிக் கலாவது' என்றது, ''இதனைச் செய்'' என்று ஒரு விதியடியாக வருமதன்றோ, தக்கது தகாதது என்று பகுத்து அறிந்து இவனுக் குக் கைவிடலாவது என்றபடி. 'ராகப்பிராப்தமாய் வருமது தியஜிக்க வொண்ணாதிறே' என்றது, அங்ஙன் அன்றிக்கே [1] தன்னைப் பிரிந்த பிரிவில் ஆற்றப்போகாதபடி இனியனுமாய் அடையத் தக்கவனுமாய் இருக்கிற அவ்விறைவன் விஷயத்தில் ஆசையின் அடியாக வருமது வருந்தியும் கைவிடப் போகாதே யிறே என்றபடி. (6)

## 87

[2] உபாயத்வ அநுசந்தானம் நிவர்த்தகம்;
உபேயத்வ அநுசந்தானம் பிரவர்த்தகம்.[3]

என்பது சூத்திரம்.

[1] தன்னை - இறைவனை.

[2] உபாயத்வ அநுசந்தானம் - சாதனம் என்ற எண்ணம். நிவர்த் தகம் - மீள்விப்பது. உபேயத்வ அநுசந்தானம் - 'இது நமக்குப் புரு ஷார்த்தமாகும்' என்ற எண்ணம். பிரவர்த்தகம் - அக்காரியத்திலே கொண்டுபோய் மூட்டுவது.

[3] இச்சூத்திரத்திற்கு இரு வகையாகப் பொருள் அருளிச் செய் கிறார். முதற்பொருளில் சரீரத்தை விடுதலை உபாயமாக நினைத்தல் சரீரத்தை விடுதலினின்றும் இவனை மீள்விக்கும் என்பது. இரண்டா வது பொருளில் பகவானையே உபாயமாக நினைத்தல் சரீரத் தியாகத்தி னின்றும் இவனை மீள்விக்கும் என்பது.

**அவா** :—'சாஸ்திர மூலமாக வருமளவில் எளிதில் விடத் தக்கதாய் ஆசை காரணமாக வருமளவில் விடமுடியாததாய் ஆவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'உபாயத்வ அநுசந்தானம் நிவர்த்தகம்' என்றது, சாஸ்திர மூலமாக வருமளவில், சரீரத்தை விடுகிற செயலில் உபாயமாகவிருக்கும் தன்மையை எண்ணுகை இருக்கையாலே, அந்த நினைவு இவனைச சாதனமாகச் சித்தித்ததான இச் சரீரத்தை விடுகின்ற செயலினின்றும் மீள்விக்கும் என்றபடி. 'உபேயத்வ அநுசந்தானம் பிரவர்த்தகம்' என்றது, ஆசை காரணமாக வரும் நிலையில் எம்பெருமானுக்கு ஒரு தீங்கு வரக் கண்டிருப்பதில் முடிகையே நல்லது என்று சரீரத்தை விடுதலை ஒரு பேருக நினைக்கையாலே, அந்நினைவு இவனை அதிலே மூளுவிக்கும் என்றபடி.

அன்றிக்கே, சாஸ்திரங்கள் மூலமாக—விதிமூலமாக—வரும் போது பகவானே உபாயம் என்று நினைக்கும் நினைவு அச் செயலினின்றும் மீள்விக்கும்; ஆசை காரணமாக வரும்போது பகவானே உபேயம் என்று நினைக்கின்ற நினைவு, அச்செயலிலே மூள்விக்கும் என்னலுமாம். (7)

## 88

[1] **அப்ராப்த விஷயங்களிலே சக்தனானவன் அது லபிக்கவேணும் என்றிராநின்ருல், பிராப்த விஷயப் பிரவணனுக்குச் சொல்ல வேண்டா விறே.**

என்பது சூத்திரம்.

**அவ** :—'இது ஒரு சாதனம் என்ற எண்ணத்தால் அல்லாமல், இப்படி அப்பொருளிடத்துள்ள ஆசையின் மிகுதியாலே தன் உடலை விடும்படியான நிலை விளையக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

[1] அப்ராப்த விஷயம் - தக்கதல்லாத விஷயம்; பெண்கள் திறத்தில் என்றபடி. சக்தனானவன் - ஆசையுடையவன்; மூழ்குகிறவன். லபிக்க வேணும் - கிடைக்க வேண்டும். பிராப்த விஷயம் - தக்க விஷயம்; இறைவன் திறத்தில் என்றபடி. பிரவணன் - மிகுந்த அன்பினையுடையவன்.

**வியாக் :**—'அப்ராப்த விஷயங்களிலே சக்தனானவன் அது லபிக்கவேணும் என்று இரா நின்றால்' என்றது, 'ஆன்மாவிற்குத் தக்கதல்லாத சிற்றின்பத்திலே ஆசையுடைய ஒருவன், தன்னை அழிய மாறியாகிலும் தான் விரும்பிய பெண்ணை அடைய வேண்டும் என்று தன் சரீரத்தைத் துறக்கும் செயலிலே புகுவானேயானால்' என்றபடி. 'பிராப்த விஷயப்பிரவணனுக்குச் சொல்ல வேண்டாவிறே' என்றது, ஆன்ம சொரூபத்திற்குத் தக்கதான இறைவன் விஷயத்திலேஅன்பு கொண்ட ஒருவனுக்கு, இறைவனை நோக்கும் போது தன்னை அழிய மாறுகையாகிற இது கூடும் என்னுமிடம் மீண்டும் சொல்ல வேண்டாத முறையில் கிடைப்பதாகிறது என்றபடி.

[1] பரத்தையொருத்தி அளவிலே ஒருவன் மிக்க காதலனாய்க் கொண்டு போருமவனாய், அவளுக்கு நீங்காத நோய் ஒன்று வந்தவளவிலே, 'இவள் இந்த நோய் நீங்கி எழுந்தால் நான் என் தலையை அரிந்து தருகின்றேன்,' என்று ஒரு தெய்வத்தை நோக்கி வேண்டிக்கொண்டு, அவள் நோய் நீங்கி எழுந்தவாறே, தன் தலையை அரிந்து கொடுப்பதும் செய்தான் என்பது பிரசித்தமன்றோ? (8)

## 89

[2]அநுஷ்டானமும் அநநுஷ்டானமும் உபாய கோடியில் அந்வயியாது.

என்பது சூத்திரம்.

அவ :—"உபாய உபேய அதிகாரங்களுக்கு உடலாக மேலே கூறிய அநுஷ்டானங்கள் போலன்றிக்கே, உபாயமாகச் சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டதாகையாலே, வேறொரு சாதனத்தை

[1] இது, விக்கிரமாதித்தன் சரித்திரத்தில் இருப்பதாகக் கூறுவர்.

[2] 'அநுஷ்டானம் உபாய கோடியில் அந்வயியாதவாறு போன்று அநநுஷ்டானமும் உபாயகோடியில் அந்வயியாது' என சூத்திரப் பொருளை விரித்துக்கொள்க. அநுஷ்டானம் - ஒழுக்கம். அவை உபாய அதிகாரிக்கும் உபேய அதிகாரிக்கும் வேண்டிய அதிகாரங்களாக மேலே 81 முதல் 85 சூத். இறுதியாகக் கூறப்பட்டவை. உபாய கோடியில் - உபாய வரிசையில். அந்வயியாது - சேராது. அநநுஷ்டானம் - பிரபந்நனுடைய தன்மைக்கு மாறுபட்ட ஒழுக்கம். அதிகாரங்களாக உள்ளவை உபாய கோடியில் சேரா.

யும் பற்ருமல் இறைவனையே சாதனமாகப் பற்றினவனுக்கு அதற்குத் தகாத அநுஷ்டானமான இச்சரீரத்தைத் துறத்தல், ஆசை காரணமாக வந்ததாக்கையாலே விட முடியாமல் இருந்ததேயாகிலும், உபாய கூட்டத்தில் சேர்ந்தன்றி நில்லாதே ?'' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'அநுஷ்டானமும் அநநுஷ்டானமும் உபாய கோடியில் அந்வயியாது' என்றது, அநுஷ்டானமாக மேலே சொன்ன [1] 'தன் சக்தியை விடுதல்' முதலானவைகளும், 'பிரேமம்' முதலானவைகளும் உபாய உபேய அதிகாரங்களுள் அடங்கியவை ஆகையாலே உபாயக் கோடியில் சேரமாட்டாதவாறு போன்று, [2] விருத்த அநுஷ்டானமாகச் சொன்ன தன் சரீரத்தைத் துறத்தலும் உபாய புத்தியோடு செய்த செயலன்றிக்கே ஆசை காரணமாக வந்ததாகையாலே உபாய கோடியில் சேராது; உபேய அதிகாரத்திலே அடங்கிவிடுமத்தனை என்றபடி.

"உபாயமாகச் சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருந்ததேயாகிலும் உபாய புத்தியோடு செய்த செயலுக்கன்றே உபாயமாகும் தன்மை உள்ளது? அங்ஙனன்ருகில், பிரபந்நனானவன் உபாய புத்தியில்லாமல் உபேயம் என்னும் எண்ணத்தோடு செய்கிற புண்ணிய தேசவாசம் முதலானவைகளும் உபாய கோடியில் சேரவேண்டுமிறே'' என்றபடி. (9)

## 90

**[3] அநந்ய உபாயத்வமும் அநந்ய உபேயத்வமும் அநந்யதைவத்வமும் குலையும்படியான பிரவிர்த்தி காணுநின்ருேமிறே.**

என்பது சூத்திரம்.

---

[1] தன் சக்தியை விடுதல் முதலானவை உபாய அதிகாரங்களுள் அடங்கியவை என்றும், பிரேமம் முதலானவை உபேய அதிகாரங்களுள் அடங்கியவை என்றும் பிரித்துக் கூட்டுக. 'முதலானவைகள்' என்றதனுல் நாணத்தை விடுதல், தன்முயற்சியை விடுதல் என்னுமவற்றையும், தன்னைப் பேணுமை, தரியாமை என்னுமவற்றையும் கொள்க.

[2] விருத்த அநுஷ்டானம் - பிரபந்நனுடைய ஒழுக்கத்திற்கு விரோதமான ஒழுக்கம்.

[3] அநந்ய உபாயத்வம் - அவனை அன்றி வேறு ஒன்றனையும் உபாயமாகக் கொள்ளாமை. அநந்ய உபேயத்வம் - அவனையன்றி வேருென்றனையும் உபேயமாகக் கொள்ளாமை. அநந்ய தைவத்வம் - அவனை

அவ :—அன்றிக்கே, [1] இந்தச் செயல்தான் உபாய கோடியில் சேர்ந்ததேயாகிலும், வேறோர் உபாயத்தையும் மேற்கொள்ளாத தன்மைக்குக் கேடு வருமித்தனைதானே? அது அன்பின் வசப்பட்டவர்க்குக் குற்றம் அன்று என்கைக்காக, அன்பின் வசப்பட்டவர்களுடைய செயல்களை எடுத்துக் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—அநந்ய உபாயத்வம் குலையும்படியான பிரவிருத்தியாவது, [2] "திருந்தவே நோற்கின்றேன்", [3] "நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்", [4] "குதிரியாய் மடல் ஊர்தும்", [5] "ஓதிநாமம்", [6] "ஊராதொழியேன் நான்—வாரார் பூம்பெண்ணை மடல்", [7] "உலகறிய ஊர்வன் நான்—மன்னிய பூம்பெண்ணை மடல்" என்று நோன்பு நோற்கை, மடல் எடுக்கை முதலான செயல்களிலே இழிதல்.

அநந்ய உபேயத்வம் குலையும்படியான பிரவிருத்தியாவது, இறைவனுக்கு மேன்மையை விளைக்கையே புருஷார்த்தம் என்றிருக்கை தவிர்ந்து, [8] "நமக்கே நலமாதலின்" என்றும், [9] "தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றும் தனக்கு ஒரு நன்மை தேடத்தொடங்குதல்.

அநந்ய தைவத்வம் குலையும்படியான பிரவிருத்தியாவது, [10] "அனங்கதேவா, உன்னையும் உம்பியையும் தொழுதேன்" என்றும், [11] "பேசுவதொன்று உண்டு இங்கு எம்பெருமான்" என்றும் காமன் பக்கலிலே தெய்வம் என்ற புத்தி பண்ணி ஆராதித்தல்.

---

யன்றி வேறு ஒரு தெய்வத்தையும் நினையாமை. பிரவிருத்தி - செயல். 'காணுநின்றோம்' என்றது ஆழ்வார்களிடத்திலும் ஸ்ரீஆண்டாளிடத்திலும் பார்க்கின்றோம் என்றபடி.

1 இந்தச் செயல் - சரீரத்தைப் பேணுமையாகிற இந்தச் செயல்; பிள்ளை திருநறையூர் அரையர் சரீரத்தை விட்ட செயல்.

2 நாய்ச்சியார் திரு. 1 : 6 3 நாய்ச்சியார் திரு. 1 : 8

4 திருவாய். 5. 3 : 9 5 பெரிய திருமொ. 9. 3 : 9

6 சிறிய திருமடல், 77 7 பெரிய திருமடல், 148

மேலே காட்டப்பட்டவையெல்லாம் வேறு உபாயங்களை மேற்கொண்டமைக்குப் பிரமாணங்கள்.

8 பெரிய திருமொழி. 9. 3 : 9 9 திருவாய். 5. 3 : 10

10 நாய்ச்சியார் திரு. 1 : 1 11 நாய்ச்சியார் திரு. 1 : 8

'காணாநின்றோமிறே' என்றது, 'அடையத்தக்க இறைவனிடத்தே உள்ள அன்பின் மிகுதியாலே பேரளவுடையவர்கள் பக்கலிலும் உண்டாகக் காணாநின்றோமிறே' என்றபடி.

முன்பு சொன்ன செயல் உபாய கோடியில் சேர்தல் அச்செயலின் இயல்பால் வருகின்றது என்று கொள்ளுகிறமாத்திரமேயிறே. அங்ஙன் அன்றிக்கே, நேரே உபாய புத்தியோடு செய்த செயல்களிறே இவை. ஆகையால் பக்தியின் வசப்பட்டவர்களுக்கு இது குற்றம் அன்று என்பது கருத்து. (10)

## 91

**ஞாந விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்.**

என்பது சூத்திரம்.

அவ :—'இத்தனையும் கலக்கத்தால் வந்தவையிறே; அறிவின்மை மூலமாக வருமவை ஒன்றும் ஆதரிக்கத் தக்கதன்றே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஞானவிபாகம்' என்றது, [2] "ஞானம் கனிந்த நலம்" என்கிறபடியே ஞானமானது பரிபக்குவத்தையடைந்து திரிந்த பக்தி என்றபடி. அதன் 'கார்யமான அஜ்ஞானத்தாலே' என்றது, அந்தப்பக்தியின் மிகுதியாலே வரும், தக்கது தகாதது என்று பகுத்தறியும் அறிவு இன்மையால் என்றபடி. 'வருமவை எல்லாம்' என்றது, அதனாலே செய்யப்படுகின்ற

[1] ஞாநவிபாகம் என்றது பக்தியை. ஞானமானது பரிபக்குவத்தை அடைந்த நிலை என்பது பொருள். காரியமான அஜ்ஞானம் என்றது, அந்தப் பக்தி காரணமாக வருகின்ற அறிவின்மை என்றபடி. வருமவை - செய்யப்படுகின்ற செயல்கள். அடிக்கழஞ்சு - ஈண்டு அடி என்றது அடி அளவு கொண்ட நிலத்தினைக் குறிக்கின்றது. கழஞ்சு என்றது கழஞ்சு என்னும் நிறை கொண்ட பொன்னைக் குறிக்கின்றது. ஆக, இத்தொடர்மொழியால் அடியளவு கொண்ட ஒரு நிலமானது கழஞ்சு என்னும் நிறையளவு கொண்ட பொன்னை விலையாகக் கொள்ளும் தகுதியையுடையது என்று அந்நிலத்தின் உயர்வு குறிக்கப்படுகின்றது. 'அடிக்கழஞ்சு பெறும்' என்ற இவ்வுவமையால் பக்தியின் காரியமான அஞ்ஞானத்தால் செய்யப்படும் செயல்கள் எல்லாம் போற்றத்தக்கவையாம் என்பதனைத் தெரிவித்தவாறு.

[2] இராமாநுச நூற்றந்தாதி, 66.

செயல் விசேடங்கள் எல்லாம் என்றபடி. 'அடிக்கழஞ்சு பெறும்' என்றது, போற்றத்தக்கனவாக இருக்கும் என்றபடி. கர்மம் காரணமான அஜ்ஞானத்தாலே வருமவையே இகழத்தக்கவைகள் என்பது கருத்து. (11)

## 92

**[1] உபாய பலமாய் உபேய அந்தர்ப்பூதமாய் இருக்குமது, உபாயப் பிரதிபந்தகம் ஆகாது.**

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனாலும், வரம்பு அழிந்த இந்தச்செயல் [2] இவனுடைய செயல்களுள் ஒன்றையும் பொருத [3] சித்தோபாயம் செய்யும் செயலுக்குத் தடையாகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'உபாய பலம்' என்றது, சித்தோபாயமான அவன் செய்த கிருஷியின் பலம் என்றபடி. [4] "மயர்வற மதி நலம் அருளினன்" என்றும், [5] "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நம் கண்ணன்" என்றும் இத்தகைய செயலுக்குக் காரணமான பக்தியை உண்டாக்கியவனும் வளர்த்தவனும் அவனே அன்றோ? ஆகையால், பக்தியினாலே பரவசப்பட்ட காரணத்தாலான இந்தச் செயலே 'உபாய பலம்' என்கிறது. 'உபேய அந்தர்ப்பூதமாய் இருக்குமது' என்றது, உபேயத்தை விரைவில் பெறவேண்டும் என்ற முடுகுதலாலே கண்ணுஞ்சுழலையிட்டு இத்தலை படுகின்ற அலமாப்பெல்லாம், நம்மை ஆசைப்பட்டு இப்படிப் படப்பெறுவதே என்று அவன் முகமலருகைக்கு உறுப்பு ஆகையாலே மடலெடுத்தல் முதலான இந்தச் செயல்கள், அவன் முகமலர்த்திக்காகச் செய்யும் கைங்கர்யத்தைப் போன்று உபேயத்தில் உள்ளடங்கியிருக்கும்

[1] உபாயம் என்றது, சித்தோபாயமான இறைவனை. பலமாய் என்றது, அவன் பழம்புனத்துச் செய்த கிருஷியின் பலமாய் என்றபடி. உபேய அந்தர்ப்பூதமாய் என்றது, உபேயத்தில் உள்ளடங்கினதாய் என்றபடி. உபாயம் என்றது, சித்தோபாயமான இறைவன் செய்யும் செயலுக்கு என்றபடி. பிரதிபந்தகம் - தடை. இருக்குமது உபாயத்திற்குப் பிரதிபந்தகம் ஆகாது என முடிக்க.

[2] இவன் - சேதனன் [3] சித்தோபாயம் - இறைவன்

[4] திருவாய். 1. 1 : 1 [5] திருவாய். 5. 3 : 4

என்றபடி. 'உபாயப் பிரதிபந்தகம் ஆகாது' என்றது, 'இத் தகையதானது உபாயமான இறைவன் செய்யும் செயலுக்குத் தடையாகாது' என்றபடி. (12)

## 93

[1] சாத்திய சமானம் விளம்பாசஹம் என்றிறே
சாதனத்துக்கு ஏற்றம் ; சாத்தியப் பிராவண்யம்
அடியாகவிறே சாதனத்தில் இழிகிறது.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி மடலெடுத்தல் முதலானவை, சித்தோபாயத்திற்குத் தடை ஆகா என்னுமிடம் சொல்லி, அவற்றிற்குள்ள சித்தோபாய ஒப்புமையைக் கூறக்கருதி, அதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—சாத்திய சமானம் - சாத்தியப் பொருளே சாதனம் ஆகையாலே சாத்தியத்திற்கு ஒத்தது என்றும், விளம்ப அசகம் என்றிறே - பலத்தைப் பெறுவிப்பதில் காலதாமதத்தைப் பொருமல் விரைவில் காரியம் செய்து கொடுக்கும் என்றுமிறே. சாதனத்துக்கு ஏற்றம் - மற்றைய சாதனங்களைக்காட்டிலும் சித்த சாதனத்திற்கு ஏற்றம். சாத்தியப் பிராவண்யம் அடியாகவிறே சாதனத்தில் இழிகிறது - சாத்தியத்தில் உண்டான அன்பின் காரணமாகவிறே இந்தச் சாதனத்தைப் பற்றுவதற்கு இழிகிறது. [2] அவை இரண்டும் இவற்றிற்கு உண்டு என்பது கருத்து.

[3] 'எங்ஙனே?' என்னில், மடலெடுத்தல் முதலான செயல்கள், சேஷிக்கு அதிசயத்தை விளைக்கக் கூடியவையாகையாலே, [4] கைங்கரியமான சாத்தியத்திற்கு ஒத்தவைகளாயிருக்கையாலும்,

---

[1] சாத்திய சமானம் - பலத்தோடு ஒத்தது. விளம்ப அசகம் - காலதாமதத்தைப் பொறுதது. சாதனம் - சித்தோபாயம்.

[2] அவை இரண்டும் - சாத்திய சமானம் விளம்ப அசகமும், சாத்தியப் பிராவண்யம் அடியாகச் சாதனத்தில் இழிகிறதும் ஆகிற இரண்டும். இவற்றிற்கு - மடல் எடுத்தல் முதலாயினவற்றிற்கு.

[3] 'அவை இரண்டும் இவற்றிற்கு உண்டு' என்றதனை விளக்குகிறார், 'எங்ஙனே?' என்னில்' என்று தொடங்கி.

[4] கைங்கரியத்தால் உண்டாகிற பிரீதியோடு கூடிய இறைவனும் சாத்தியம் எனப்படுவான் ; இறைவனுடைய பிரீதிக்குக் காரணமான கைங்கரியமும் சாத்தியம் எனப்படும் ; கைங்கரியத்தால் உண்டான

மடலூர்தல், நோன்பு நோற்றல் செய்வன் என்று துணிந்த போதே சர்வேசுவரன் விரைந்து வந்து இவர்கள் காலிலே விழும் படி பண்ணிக்கொடுக்கையாலே பலத்தைக் கொடுப்பதில் கால தாமதத்தைப் பொறுதவைகளாயிருக்கையாலும் சித்த சாதனம் போலே மற்றைய சாதனங்களைக்காட்டிலும் ஏற்றத்தையுடைய வையாய், [1] சாத்தியத்திலுள்ள அன்பு காரணமாக இவற்றில் இழிகிற தன்மையும் ஒத்திருக்கையாலே என்க.

[2] இதனால், சித்தோபாயத்தை ஒழியவும் இவைதாமே காரியம் செய்ய வல்லனவாகையாலே அதற்கு இவை தடை என்னும் குற்றம் இல்லை என்பது கருத்து.

[3] அன்றிக்கே, "உபாயப்பிரதிபந்தகமாகாது" என்றதனை [4] இன்னமும் வேறு காரணத்தைக்கொண்டு விளக்குகிறார் இச் சூத்திரத்தால் என்னுதல். 'சாத்திய சமானம் விளம்ப அசகம்

---

ஈசுவரப் பிரீதியும் சாத்தியம் எனப்படும். இம்மூவகைப்பட்ட சாத்தி யங்களுள் கைங்கரியமாகிற சாத்தியத்தையே ஈண்டு உவமையாக எடுத்து விளக்குகிறார், மடல் எடுத்தல் கிரியையாதலின் செயல் ஒப்புமை கருதி.

[1] சாத்தியம் – இறைவனைக் கலத்தலாகிற பலன்.

[2] தாம் கூறிய பொருளை முடித்துக் காட்டுகிறார், 'இதனால்' என்று தொடங்கி. 'இவைதாமே' என்றது, மடல் எடுத்தல், நோன்பு நோற் றல்களை. அதற்கு – சித்தோபாயத்திற்கு.

சித்தோபாயம், சாத்திய சமானமாயும் விளம்ப அசகமாயும் இருப் பது போன்று, மடல் எடுத்தல் முதலாயினவும் சாத்திய சமானமாயும் விளம்ப அசகமாயும் இருத்தலாலும், சாத்தியப் பிராவண்யமடியாகச் சித்தோபாயத்தில் இழிவது போன்று, இங்கும் சாத்தியத்தில் உள்ள பிராவண்யம் அடியாக மடல் எடுத்தல் முதலாயினவற்றில் இழிதலாலும் இரண்டும் ஒக்கும் என்பது கருத்து.

[3] இச்சூத்திரத்திற்கு வேறும் ஒரு பொருள் அருளிச் செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.

[4] 'இன்னமும்' என்றது, மேல் சூத்திரத்தில் 'பிரதி பந்தகம் ஆகாது' என்பதற்குக் கூறிய இரண்டு காரணங்கள் தவிர, மேலும் என்றபடி. 'வேறு காரணத்தைக் கொண்டு' என்றது, இச்சூத்திரத்தில் 'சாத்தியப் பிராவண்யம் அடியாகவிறே சாதனத்தில் இழிகிறது' என்று கூறும் காரணத்தை.

என்றிறே சாதனத்துக்கு ஏற்றம்' என்றது, [1] பால் மருந்தா மாறு போலே சாத்தியமாகவிருக்கின்றவன்தானே சாதனமு மாகையாலே இனிமையில் சாத்தியத்தோடு ஒத்திருக்கும் என்றும், பலத்தைச் பெறுவிக்குமளவில் காலதாமதத்தைப் பொருது கடுகப்பெறுவித்துவிடும் என்றுமிறே, [2] மற்றைய உபாயங்களைக்காட்டிலும் சித்தோபாயத்திற்கு ஏற்றம் என்றபடி. [3] இப்போது இதனை இங்கே சொல்லுதற்குக் காரணம், இவ்விரு தன்மைகளும் சாத்தியத்தில் மிக்க அன்பு உண்டாதற்குக் காரணங்களாம் என்று தோற்றுகைக்காக. 'சாத்தியப் பிராவண்யம் அடியாகவிறே சாதனத்தில் இழிகிறது' என்றது, 'இப்படியாகையாலே ஈசுவரன் அடியாக விளைந்து கணநேரமும் காலதாமதம் பொறுமல் துடிக்கும்படி முறுக அடியிடுகின்ற [4] சாத்தியத்திலுள்ள மிக்க அன்பு காரணமாகவிறே மடலெடுத்தல் முதலான இந்தச் சாதனங்களில் இழிகிறது' என்றபடி.

[5] 'ஆகையாலே இந்த விதமான மிக்க அன்பின் முறுகுதலாலே கண்ணுஞ்சுழலை இட்டுச் செய்கிற இந்தச் செயல்கள், இறைவன் மேல் விழுந்து காரியம் செய்கைக்கு உடலாமத்தனை அல்லது அவன் செய்யும் செயலுக்குத் தடையாக இரா' என்பது கருத்து.

ஆக, "இவனுக்கு வைதமாய் வருமதிறே தியஜிக்கலாவது" என்றது முதல் இச்சூத்திரம் இறுதியாக, பிள்ளை திருநறையூர்

[1] 'பால் மருந்தாமாறு போலே' என்றது, இனிய பொருளாக விருக்கிற பால்தானே நோய் தீருதற்குச் சாதனமான மருந்தும் ஆமாறு போன்று என்றபடி.

[2] 'மற்றைய உபாயங்கள்' என்றது, பக்தி முதலான உபாயங்களை.

[3] 'சித்தோபாயத்திற்கு, மடல் எடுத்தல் முதலாயின தடையாகா என்பதற்கு இச்சூத்திரத்தில் வேறு காரணம் கூறி விளக்குகிருராயின், 'சாத்திய சமானம் விளம்ப அசகம் என்றிறே சாதனத்திற்கு ஏற்றம்' என்று கூறுதல் எற்றிற்கு?' என, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இப்போது' என்று தொடங்கி.

[4] சாத்தியம் - இறைவனுடைய அநுபவம்.

[5] சித்தோபாயத்திற்கு மடல் எடுத்தல் முதலான செயல்கள் தடையாகா என்பதற்குக் கூறிய காரணத்தை முடித்துக்காட்டுகிருர், 'ஆகையால்' என்று தொடங்கி. சாத்தியத்தில் உள்ள பேரன்பு காரணமாக மடல் எடுத்தல் முதலானவற்றில் இழிகிருறுதலின், அச்செயல்கள் தடையாகா என்றபடி.

அரையர் செய்த செயல் காரணமாக, பகவத்பிரபந்நனுயிருந்தானேயாகிலும் உபேயத்தில் ஊற்றமுள்ளவனுக்கு அந்த உபேயத்தில் உள்ள மிக்க அன்பு காரணத்தாலே தன் சரீரத்தைத் துறத்தலை விட முடியாது என்றும், உபாயபுத்தியோடு செய்த தல்லாமையாலே அச்சரீரத்துறவுதானும் உபாயகோடியில் சேராது என்றும், அச்செயலின் இயல்பால் சேர்ந்ததேயாகிலும் அன்பின் வசப்பட்டவர்க்கு அது குற்றம் ஆகாது என்றும், அநந்ய உபாயத்வம் முதலானவைகள் குலையும்படியான செயல்கள் தெளியக் கண்டவர்கள் பக்கலிலும் அறிந்தே செய்ததாகக் காண்கையாலும் அது குற்றமாகாது என்றும், இவைதாம் அறிவின்மையின் காரியங்களேயாகிலும் மிக்க பக்தியின் காரியமான அறிவின்மையால் வந்தவையாகையாலே போற்றத்தக்கவையாம் என்றும், இச்செயல்கள் சித்தோபாயத்திற்குத் தடையாகமாட்டா என்றும், அவ்வளவன்றிக்கே அந்தச் சித்தோபாயத்தோடு ஒக்கச் சொல்லலாம்படியிறே இவற்றின் பெருமை இருப்பது என்றும் சொல்லுகையாலே, உபேய அதிகாரத்தில் [1] 'தன்னைப் பேணுமை' என்று சொன்ன இது, [2] அநந்ய சாதனத்வத்திற்குச் சேருமோ? என்ற ஐயத்திற்கு விடையிறுத்தாராயிற்று. (13)

## 94

இவனுக்குப் பிறக்கும் ஆத்ம குணங்கள் எல்லாவற்றுக்கும் [3] பிரதான ஏது இந்தப் பிராவண்யம்.

என்பது சூத்திரம்.

---

[1] 85ஆம் சூத்திரம்.

[2] 86ஆம் சூத்திரம் அவதாரிகை பார்க்க.

ஆக, இச்சூத்திரத்திற்குக் கூறிய இருவகைப் பொருள்களுள் முதற் பொருளுக்கு, மடல் எடுத்தல் முதலாயின சித்தோபாயத்தைப் போன்றிருத்தலால் சித்தோபாயம் கொடுக்கும் பலனை இதுவே கொடுக்கும் என்பது கருத்து. இரண்டாவது பொருளுக்கு, சாத்தியத்தில் உள்ள பேரன்பு காரணமாக மடல் எடுத்தல் முதலான இச்செயல்களில் இறங்குகிறுனதலின், சித்தோபாயத்திற்கு இவை தடையாக நில்லா என்பது கருத்து.

[3] 'பிரதான ஏது பிராவண்யம்' என்றதனுல் வேறு காரணங்களும் உள; அவை சிறப்பில என்பது பெறுதும். அவை: நல்லார் இணக்கம், ஆசாரிய உபதேசம், சாஸ்திரப்பயிற்சி, தூய உணவு முதலியனவாம்.

அவ :—‘ இத்தகையதான பிராவண்யம் பகவானுடைய பேரழகு முதலியவைகளால் உண்டாவதன்றே ? சமம் தமம் முதலான ஆன்ம குணங்களன்றோ ஒருவனுடைய பயன்பெறுந் தன்மையைச் சிறப்புறச் செய்வன ?’ என்ன, அந்த ஆன்ம குணங்களையும் இது தானே உண்டாக்கும் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—இவனுக்குப் பிறக்கும் ஆத்மகுணங்கள் எல்லாவற்றுக்கும் பிரதாந ஏது இந்தப் பிராவண்யம்—[1] “ சமதம நியத ஆத்மா ” என்ற சுலோகத்திலும், [2] “ அமாநித்வம் ” என்ற சுலோகத்திலும் சொல்லுகிறபடியே ஒரு மகனுக்கு உண்டாகத் தக்க ஆன்மகுணங்கள் பலவுள ; அவை எல்லாவற்றிற்கும் இந்தப் பிராவண்யம் முதன்மையான காரணமாகையாவது, நல்லார் உறவு, சாஸ்திரப் பயிற்சி, ஆசாரிய உபதேசம் முதலான பல காரணங்களைக்காட்டிலும் முதன்மையான காரணமாக இருக்கை. (14)

## 95

[3]‘ மாற்பால் மனம் சுழிப்ப ’, ‘ பரமாத்மநி யோரக்தঃ, ‘ கண்டு கேட்டு உற்று மோந்து ’ என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய பொருளுக்குப் பிரமாணங்கள் எடுத்துக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ மாற்பால் மனம் சுழிப்ப ’ என்றது, ‘ மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு, நூற்பால் மனம்

[1] சமதம நியதாத்மா ஸர்வபூதாநு கம்பீ
விஷய ஸுகவிரக்தோ ஜ்ஞாநதீப்தঃ ப்ரசாந்தঃ
அநியத நியதாந்நோ நைவஹ்ருஷ்டோ நருஷ்டঃ
ப்ரவஸித இவகேஹே வர்ததேயஸ் ஸமுக்தঃ
என்பது, பிரமாணம்.

[2] அமாநித்வ மதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்திঃ ஆர்ஜவம்
ஆசார்ய உபாஸநம் சௌசம் ஸ்தைர்யம் ஆத்மவிநிக்ரஹঃ
என்பது, ஸ்ரீ கீதை, 13 : 8.

[3] ‘ மாற்பால் மனம் சுழிப்ப ’ என்பது மூன்றாந்திருவந்தாதி, 14. ‘ பரமாத்மநி யோரக்தঃ ’ என்பது பார்ஹஸ்பத்யஸ்மிருதி. ‘ கண்டு கேட்டு ’ என்பது, திருவாய்மொழி, 4.9:10.

வைக்க நொய்விதாம்' என்கிறபடியே இறைவன் பக்கல் மனம் மேலிட, இனியவர்களான பெண்களுடைய தோளோடே அணைவதில் ஆசையற்று, பிரமாணங்களிலே மனத்தினை வைத்தல் எளிதாம் என்றபடி. [1]'பரமாத்மநியோரக்தஃ' என்றது, 'பரம்பொருளான இறைவனிடத்தில் ஆசையுள்ள வனாய் அவனுக்கு வேறுபட்ட மற்றைய பொருள்களில் ஆசை யில்லாதவனாய்' என்கிறபடியே பரமாத்மாவின் பக்கலிலே ஆசை யுள்ளவனாய் அதனாலே பரமாத்மாவிற்கு வேறுபட்ட மற்றைய பொருள்களிலே ஆசையில்லாதவனாய் என்றபடி. 'கண்டு கேட்டு உற்று மோந்து' என்றது, "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக் கண்ட சதிர் கண்டு, கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி, கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்தேன்" என்கிறபடியே பெரிய பிராட்டியாரும் தேவருமாய் ஒரு தேச விசேடத்திலே எழுந்தருளி யிருக்கிற சேர்த்தியழகைக் கண்டு, அங்கே அன்பு சென்றவனாய் ஐசுவரியத்திலும் கைவல்யத்திலும் விருப்பு இல்லாதவனானேன் என்றபடி.

ஆக, இவ்விடங்களிலே, பகவானிடத்துண்டான அன்பு, மற்றைய விஷயங்களில் விருப்பு இல்லாமைக்குக் காரணமாகச் சொல்லப்பட்டமை காண்க. (15)

## 96

**ஆத்ம குணங்களில் பிரதாநம் சமமும் தமமும்.**

என்பது சூத்திரம்.

**அவ** :—'பகவானிடத்துள்ள மிக்க அன்பு, ஆன்ம குணங்கள் எல்லாவற்றிற்கும் முதன்மையான காரணம் என்று மேலே கூறி, சிற்றின்பத்தில் ஆசையில்லாமைக்குக் காரணமாம் என்று பிரமாணங்கள் காட்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'ஆத்ம குணங்களில் பிரதாநம் சமமும் தமமும்' என்றது, ஆன்ம குணங்களிலே முதன்மையானவை சமமும் தமமும் என்றபடி. சமமாவது, அகத்து உறுப்பு ஆகிய

---

1 "பரமாத்மநியோரக்தோ விரக்தோऽபரமாத்மநி"

மனத்தை அடக்குதல். தமமாவது, புறத்து உறுப்புகளாகிய ஐம்பொறிகளை அடக்குதல். [1]“சமச்சித்த ப்ரசாந்திஸ் ஸ்யாத் தமஶ் சேந்த்ரிய நிக்ரஹ:” என்னக் கடவதிறே. [2]“க்ஷமா ஸத்யம் தமஶ்ஶம:” என்கிறவிடத்தில் “தமமாவது, புறத்துறுப்புகள் கேட்டினைத் தரும் ஐம்புல இன்பங்களில் சென்று அழிந்து போகாதவாறு அவற்றை அடக்குதல்; சமமாவது, அகத்து உறுப்பாகிய மனத்தை அப்படியே அடக்குதல்” என்றே அன்றோ பாஷ்யகாரரும் அருளிச் செய்தது? [3]மாறிச் சொல்லும் இடமும் உண்டு. இந்தச் சமமும் தமமும் உண்டான விடத்தில் மற்றைய குணங்கள் தன்னடையே வருமாகையாலே முதன்மையான இவற்றிற்குக் காரணம் என்னுமிடத்தில் [4]பிரமாணம் காட்டப்பட்டது என்பது கருத்து.

[5]அன்றிக்கே, மேலே கூறிய மங்கையர்தோள் கைவிடக் காரணம், எல்லா ஆன்ம குணங்கள் தோன்றுதற்கும் காரணம் என்னுமிடத்திற்கு உபலக்ஷணமாக்கி, ‘இந்த ஆன்ம குணங்களிலே முதன்மை பெற்றவை யாவை?’ என்ற வினாவிற்கு விடையாக “ஆத்ம குணங்களில் பிரதானம் சமமும் தமமும்” என்று அருளிச்செய்கிறார் ஆகவுமாம். (16)

## 97

**இவையிரண்டும் உண்டானால் ஆசாரியன் கை புகுரும்; ஆசாரியன் கை புகுந்தவாறே திருமந்திரம் கை புகுரும்; திருமந்திரம் கை புகுந்தவாறே ஈசுவரன் கை புகுரும்; ஈசுவரன் கை புகுந்தவாறே ‘வைகுந்த மாநகர் மற்றது**

[1] தாம் அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார், ‘சமச்சித்த’ என்று. அகத்து உறுப்புகளை அடக்குவது சமம் என்றும் புறத்து உறுப்புகளை அடக்குவது தமம் என்றும் கூறப்படும் என்பது இதன் பொருள்.

[2] இது ஸ்ரீ கீதை, 10 : 4.

[3] ‘மாறிச்சொல்லுவதும் உண்டு’ என்றது, சமத்துக்குச் சொன்ன பொருள் தமத்திற்கும் தமத்திற்குச் சொன்ன பொருள் சமத்திற்குமாக மாறிச் சொல்லுவதும் உண்டு என்றபடி.

[4] ‘பிரமாணம் காட்டப்பட்டது’ என்றது மேல் சூத்திரத்தில் காட்டிய பிரமாணங்களை.

[5] ஆக, இச்சூத்திரத்திற்கு இரண்டு வகையாக அவதாரிகை அருளிச்செய்தபடி.

**கையதுவே' என்கிறபடியே ப்ராப்பிய பூமி கை புகுரும்.**

என்பது சூத்திரம்.

**அவ:**—இந்தச் சமமும் தமமும் உண்டானால் இவனுக்கு உண்டாகக் கூடிய பலத்தின் பரம்பரையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'இவை இரண்டும் உண்டானால்' என்றது, பகவானிடத்து வைத்த மிக்க பேரன்பு அடியாக வரும் பரிபூர்ணமான சமத்தையும் தமத்தையும் மேலே சொல்லிற்றே யாகிலும், இவ்விடத்தில் ஆசாரியனுடைய அங்கீகாரத்திற்கு முன்னே இருக்க வேண்டிய அளவினவான சமத்தையும் தமத்தையுமே சொல்லுகிறது. இத்தகைய சமதமங்கள் இரண்டும் உண்டானால் 'ஆசாரியன் கை புகுரும்'[1] என்றது, இந்த ஆன்ம குணங்களைக் கண்டு உகந்து பிறவியை நீக்கக் கூடியதான பெரிய திருமந்திரத்தைப் பொருளுடன் உபதேசிக்கும்படி இவனுக்கு வசப்பட்டவனாவன் என்றபடி. [2]"நன்றாகக் கிட்டி நின்றவனாய் மனத்தூய்மையையுடையவனாய்ப் புறத்து உறுப்புகளை அடக்கினவனாயுமிருக்கிற அந்தச் சிஷ்யனைக் குறித்து, அந்த ஆசாரியன் எந்த மந்திரத்தால் சத்தியமாயும் அழிவில்லாதவனாயுமுள்ள பரம புருஷனை அறிவனோ, அந்தப் பிரம்ம வித்யையை உள்ளபடி உபதேசிக்கக வேண்டும்" என்கிறபடியே சமதமங்களையுடையவனாய்க்கொண்டு வந்து சேர்ந்தவனுக்கன்றோ பிரம்ம வித்யையை உள்ளபடியே உபதேசிக்கச் சொல்லிற்று? [3]இந்தச் சுருதியில் ஆசாரியனை அடைவதற்கு

---

[1] புகுதரும் என்ற சொல் 'புகுரும்' என்று வந்தது; மரூஉ. ஆசாரியன் - ஆசரித்துக்காட்டுகிறவன். விசேஷார்த்தங்களைக் குறித்து உபதேசிக்கிறவன் ஆசாரியன். அஞ்ஞானத்தை அகலும்படி பண்ணி, ஞானத்தைக் குடிபுகும்படி பண்ணி, ருசியைக் கொழுந்தோடும்படி பண்ணுகை ஆசாரியன் செயல்.

[2] "தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரஶாந்த சித்தாய ஶமாந்விதாய, யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாசதாம் தத்வதோ பிரஹ்ம வித்யாம்" என்பது முண்டகோபநி. 1.2 : 12.

[3] 'ஆசாரியனுடைய அங்கீகாரத்திற்கு முன்னே இருக்கவேண்டிய அளவினவான சமத்தையும் தமத்தையுமே சொல்லுகிறது' என்று தாம் மேலே அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'இந்தச் சுருதியில்' என்று தொடங்கி.

உடலாகச் சொல்லப்பட்ட சமதமங்களுக்கு "இதனுல் கேட்பதற்கு உபயோகமான இந்திரிய நிக்ரஹம் சொல்லப்பட்டது ஆம்; உபாசனத்திற்கு உபயோகமான பரிபூர்ண இந்திரிய நிக்கிரகம் சொல்லப்படவில்லை" என்றேயன்றே [1] சுருதப் பிரகாசிகாகாரர் வியாக்கியானம் செய்தது?

'ஆசாரியன் கை புகுந்தவாறே திருமந்திரம் கை புகுரும்' என்றது, [2] "அந்த மந்திரமானது ஆசாரியன் வசத்திலே உள்ளது" என்கிறபடியே [3] திரு மந்திரம், ஆசாரியனுடைய வசத்திலே உள்ளது ஆகையாலே உபதேசிக்கிற ஆசாரியன் கை புகுந்தவாறே அவனுடைய உபதேசத்தின் வழியாலே பொருளோடு கூட இவன் மனத்திலே பதிந்து நிலைபெறும் என்றபடி. [4] "பிரம்மத்தை அறிந்தவனைப் பிராமணுக அறிவார்கள்" என்கையாலே "பிராஹ்மணுதீநம்" என்கிறவிடத்தில் 'பிராஹ்மண' என்ற சொல்லால் ஆசாரியனைச் சொல்லுகிறது.

'திருமந்திரம் கைபுகுந்தவாறே ஈச்வரன் கை புகுரும்' என்றது, [5] "மந்திரத்தின் வசப்பட்டது தெய்வம்" என்கிறபடியே ஈச்வரன் திருமந்திரம் இட்ட வழக்காகவிருக்குமவனுகையாலே, பொருளோடுகூட அது கைபுகுந்தவாறே, அந்த மந்திரத்திலே சொல்லப்படுகின்றவனுன தான் இவனுக்கு விருப்பமில்லாதன வற்றை நீக்குதல் முன்னுக விருப்பமுள்ளனவற்றை அடைவதற்கு உபாயமாக விருப்பன் என்றபடி.

'ஈச்வரன் கை புகுந்தவாறே' [6] "வைகுந்த மாநகர் மற்றது கையதுவே" என்கிறபடியே பிராப்பிய பூமி கைபுகுருகையாவது, [7] "உபய விபூதிகளும் தெய்வத்திற்கு வசப்பட்டவை"

---

[1] சுருதப்பிரகாசிகை - இராமாநுசர் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யத்திற்கு விளக்கவுரையாக அமைந்த ஓர் வியாக்கியானம். இதனை அருளிச்செய்தவர் சுதரிசனபட்டர்.

"ஏதேந ச்ரவணேபயுக்தம் அவதாநம் விவக்ஷிதம்
நதூபாஸநோபயுக்த அத்யந்த இந்த்ரியஜயாதி:"

என்பது அவர் அருளிச்செய்த வார்த்தை.

[2] "தந்மந்த்ரம் ப்ராஹ்மணுதீநம்"

[3] திருமந்திரம் நிலைபெறும் என முடிக்க.

[4] "ப்ரஹ்மவித் ப்ராஹ்மணேவிது:

[5] "மந்த்ராதீநம் ச தைவதம்."

[6] திருவாய்மொழி, 4.10 : 11 [7] 'தைவாதீநம் ஜகத்ஸர்வம்.'

என்கிறபடியே இவ்வுலகம் மோக்ஷவுலகம் என்ற இரண்டு உலகங்களும் ஈச்வரன் இட்ட வழக்கு ஆகையாலே அவன் உபாயமாய்க் கைபுகுந்தவாறே அடையத் தக்க உலகமான ஸ்ரீவைகுண்டம் இவனுக்கு மிக மிக எளிதாயிருக்கும் என்றபடி. (17)

## 98

[1] பிராப்பிய லாபம் பிராபகத்தாலே; பிராபக லாபம் திருமந்திரத்தாலே; திருமந்திரலாபம் ஆசாரியனாலே; ஆசாரிய லாபம் ஆத்ம குணத்தாலே.

என்பது சூத்திரம்.

அவ:—இப்படிச் சம தமங்கள் உண்டாகவே, மேலுக்கு மேல் இவையெல்லாம் கிடைக்கும் வகையை [2]ஆரோக முறையாலே அருளிச் செய்து, இவற்றில் யாதொன்றற்கு யாதொன்று காரணமாகச் சொல்லப்பட்டது அது நியதம் என்னுமிடத்தை அவரோக முறையாலே அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—இங்ஙனம் கூறியதற்குப் பயன் இந்தக் காரண பரம்பரையில் முதலிலே கூறிய காரணம் சமதமங்கள் ஆகையாலே, அவசியம் இவையிரண்டும் இவனுக்கு உண்டாக வேண்டும் என்கை. [3] ஈச்வரனே பிராபகனாகையாலே, 'பிராப்பிய லாபம் ஈச்வரனாலே என்று சொல்லவேண்டுமிடத்தில் பிராப்பிய லாபம் பிராபகத்தாலே' என்று அருளிச் செய்தனர் என்க. (18)

---

[1] பிராப்யம் - பேறு; மோக்ஷம். பிராபகம் - உபாயம்; இறைவன்.

[2] ஆரோகம் - முன்னே காரணத்தைச் சொல்லிப் பின்னே காரியத்தைச் சொல்லுதல்; மேலே ஏற்றுதல். அவரோகம் - முன்னே காரியத்தைச் சொல்லிப் பின்னே காரணத்தைச் சொல்லுதல்; கீழே இறக்கல். நியதம் - எப்பொழுதும் இருப்பது.

[3] 'ஈச்வரனாலே' என்று சொல்லவேண்டியவிடத்தில் 'பிராபகத்தாலே' என்று அருளிச்செய்தார், ஈச்வரனே பிராபகம் ஆகையைத் தெரிவிப்பதற்கு.

## 99

[1]இதுதான் ஐச்வர்ய காமர்க்கும் உபாசகர்க்கும் பிரபந்நர்க்கும் வேணும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—இந்தச் சமம் தமம் என்பவைதாம், இன்பத்தை விரும்புகிறவர்களுக்கும் [2] மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கும் வேண்டும் என்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இதுதான் ஐச்வர்ய காமர்க்கும் வேண்டும்' என்றது, ஐச்வரியத்தை விரும்புகிறவர்களுக்கு ஐம்புல இன்பங்களே புருஷார்த்தமாகிலும், அவற்றைப் பெறுதற்கு உரிய சாதனங்களைச் செய்கிற நிலையில் சமமும் தமமும் வேண்டும் என்றபடி. [3] "முன்பு உன்னால் இந்திரியங்கள் வெல்லப்பட்ட காரணத்தால் மூன்று உலகங்களும் வெல்லப்பட்டன என்றும் [4] "படி மன்னு பல்கலன் பற்ருேடு அறுத்து ஐம்புலன் வென்று" என்றும் வருவன காண்க. "ஐம்புலன் வென்று" என்ற விடத்தில் மனத்தை அடக்குதலையும் உபலக்ஷணத்தால் கொள்க.

'இதுதான் உபாசகர்க்கும் வேணும்' என்றது, உபாசகர்க்கு, பக்தி உண்டாவதற்கு அங்கமாகச் சமமும் தமமும்

[1] 'இதுதான்' என்றது, மேலே கூறிய சமம் தமம் என்ற குணங்களை. ஐச்வரிய காமர் - ஐச்வரியத்தை விரும்புகிறவர். ஐச்வரியமாவது, இந்திரியங்களால் உண்டாகின்ற ஐம்புல இன்ப அநுபவம். உபாசகர் - பக்தி நெறியில் நிற்பவர். பிரபந்நர் - பிரபத்தி நெறியை மேற்கொண்டவர்கள்.

[2] உபாசகனும் பிரபந்நனும் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள். 'உபாசகன்' என்ற சொல் கைவல்யனையும் குறிக்கும்.

[3] ஐச்வரியத்தை விரும்புகிறவனுக்குச் சமம் தமம் வேண்டும் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிருர். 'முன்பு' என்று தொடங்கி. "இந்த்ரியாணி புராஜித்வா ஜிதம் த்ரிபுவனம் த்வயா" என்பது ஸ்ரீராமா. யுத். 114 : 18. இது இராவணன் இறந்தபின் மண்டோதரி கூறியது. இராவணன் தவம் செய்யும்போது அகத்துறுப்புகளையும் புறத்துறுப்புகளையும் அடக்கித் தானே தவம் செய்திருக்கவேண்டும்; அதனைக் குறித்தபடி.

[4] திருவாய்மொழி, 4. 1 : 9.

வேண்டும் என்றபடி. [1] "ஆகையால் இவ்விதம் அறிந்தவன் அகத்துறுப்புகளையும் புறத்துறுப்புகளையும் அடக்கியவனாய் எல்லா விஷயங்களிலும் விரக்தியுடையவனாய் ஜாக்கிரதையுடைய வனாய் ஆன்மாவிலேயே பரமான்மாவைப் பார்க்க வேண்டும்" என்றும். [2] "புன்புலவழியடைத்து அரக்கு இலச்சினை செய்து, நன்புலவழி திறந்து ஞான நற்சுடர் கொளீஇ" என்றும் வருவன காண்க.

'இதுதான் பிரபந்நர்க்கும் வேணும்' என்றது, பிரபந் நர்க்கு அதிகாரத்தின்பொருட்டுச் சமமும் தமமும் வேண்டும் என்றபடி. [3] "கண்ணபிரான் ஒருவனையே உபாயமாகவுடைய பரமைகாந்தியானவன் கண்ணபிரானை அடைகிற விஷயத்தில் மற்றைய தெய்வங்களோடும் ஐம்புல இன்பங்களோடும் சமமாக, பக்தி என்னும் உபாயத்தை நிச்சயித்துக் கண்ணனையே உபாய மாகக் கொண்டவன்" என்றும், [4] "அடக்கரும்புலன்கள் ஐந் தடக்கி ஆசையாமவை தொடக்கறுத்து வந்து நின் தொழிற்கண் நின்ற என்னை" என்றும் வருவன காண்க. (19)

## 100

மூவரிலும் வைத்துக்கொண்டு மிகவும் வேண்டுவது பிரபந்நனுக்கு.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி மேலே கூறிய மூவர்க்கும் வேண்டப்படு வனவேயாயினும், அதிகமாக வேண்டுவது பிரபந்நனுக்கு என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'மூவரிலும் வைத்துக்கொண்டு மிகவும் வேண்டு வது பிரபந்நனுக்கு' என்றது, மூவருள்ளும் பிரபந்நனுக்கு

---

[1] தஸ்மாத் ஏவம்வித்ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு:
ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்.
என்பது பிரு. உப.

[2] திருச்சந்தவிருத்தம், 76

[3] ஏகாந்தீது விநிஶ்சித்ய தேவதா விஷயாந்தரை:
பக்திஉபாயம் ஸமம் க்ருஷ்ணப்ராப்தௌ க்ருஷ்ணைக ஸாதந:
என்பது பிரு. உப.

[4] திருச்சந்தவிருத்தம், 95.

இந்தச் சமமும் தமமும் அதிகமாக வேண்டப்படுவனவாம் என்றபடி. இது சொல்லுதற்காகவேதான் மற்றை இருவரையும் இங்குக் கூறியதும் ஆகும். (20)

## 101

[1]'மற்றை இருவர்க்கும் நிஷித்த விஷய நிவிருத்தியே அமையும்; பிரபந்நனுக்கு விஹித விஷய நிவிருத்தி தன்னேற்றம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'மிகவும் வேண்டுவது பிரபந்நனுக்கு' என்று மேலே கூறிய ஏற்றத்தினை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'மற்றை இருவர்க்கும் நிஷித்த விஷய நிவிருத்தியே அமையும்' என்றது, ஐம்புல இன்பங்களின் வசப்பட்ட ஐச்வரியகாமனுக்கும், பக்தி நெறியிற்செல்லுகின்ற உபாசகனுக்கும் சாஸ்திரங்களில் மறுக்கப்பட்டனவான பிறர் மனை நயத்தல் முதலாயினவற்றைத் தவிர்ந்திருத்தலே போதியதாம் என்றபடி. 'பிரபந்நனுக்கு விஹிதவிஷய நிவிருத்தி தன்னேற்றம்' என்றது, அவர்கள் இருவரிலும் வேறுபட்டவனுயிருக்கிற பிரபந்நனுக்குச் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற தன் மனைவியிடத்தில் சேர்க்கையைத் தவிர்ந்திருத்தல் அவர்களைக்காட்டிலும் ஏற்றம் என்றபடி.

[2]அவர்கள் இருவருள்ளும் ஐச்வரிய காமனுக்குத் தன்மனைவியிடத்தில் சாதன நிலையில் தர்மபுத்தியால் சேர்க்கையும் பலதசையில் இனிய பொருள் என்ற புத்தியால் சேர்க்கையுமாயிருக்கும். உபாசகனுக்குப் பலம் பகவானுடைய அநுபவமாகையாலே,

[1] மற்றை இருவர்க்கும் - ஐசுவரியத்தை விரும்புகின்றவர்க்கும் பக்தி நெறியில் நிற்பவர்க்கும். நிஷித்த விஷயம் - சாஸ்திரங்களில் மறுக்கப்பட்டிருக்கும் விஷயங்கள். அவை, பிறர் மனை நயத்தல், பரத்தையரைச் சேர்தல் முதலாயின. நிவிருத்தி - விலக்குதல். விஹித விஷயம் - சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள விஷயம். அதாவது, தன் இல்லாளோடு சேர்தல்.

[2] தன் மனைவியின் சேர்க்கையும் தவிர்ந்திருத்தல் பிரபந்நனுக்குத் தன்னேற்றம் என்றதனைக் காரணம் காட்டி விளக்குகிறார், 'அவர்கள் இருவருள்ளும்' என்று தொடங்கி.

அவனைப்போலே பல தசையில் சேர்க்கையில்லையேயாகிலும், உபாசனதசையில் [1] தர்மபுத்தியால் சேர்க்கைவேண்டும். பிரபந்நனுக்குத் [2] தர்மபுத்தியால் தன் மனைவியோடு சேர்தலும் தன் அதிகாரத்திற்குக் கேடு ஆகையாலே தன் மனைவியிடத்திலும் சேர்க்கை தவிர்ந்திருக்கவேண்டும் என்றாராயிற்று. (21)

## 102

[3]இதுதான் சிலர்க்கு அழகாலே பிறக்கும்; சிலர்க்கு அருளாலே பிறக்கும்; சிலர்க்கு ஆசாரத்தாலே பிறக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'தர்மம் என்ற புத்தியோடு சேர்கின்ற சேர்க்கையைத் தவிரப்பண்ணுவது, இனிமை என்ற புத்தியோடு சேர்கின்ற சேர்க்கையானது தவிர்ந்தால் அன்றோ? அநாதிகாலம் வாசனை' பண்ணிப் போந்த [4] விஷயங்களில் ஆசை நீங்குதல் எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] 'தர்மபுத்தியால் சேர்க்கை' என்ற இவ்விடத்தில்

"வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்" (பதிற். 70)

என்ற பதிற்றுப்பத்துப் பகுதி நினைவுகூர்தல் தகும்.

[2] எம்பெருமானைத்தவிர மற்றொன்றனையும் இனிய பொருளாகக் கொள்ளாமை (அநந்யபோக்யத்வம்) என்ற தன்மை ஒன்று பிரபந்நனுக்கு உண்டு. தர்மபுத்தியினால் தன் மனைவியோடு சேர்ந்தாலும் அதில் போக்யதா புத்தியானது எவ்வகையாலாவது வந்தே தீரும். அப்போது அநந்ய போக்யத்வம் என்னும் இவனுடைய தன்மையும் அவனையே சரணமாகக் கொண்டிருக்கும் தன்மையும் குலைந்துவிடும். ஆதலால், தன் மனைவியின் சேர்க்கையும் கூடாது என்கிறார். இதனையே 'தன் மனைவியோடு' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 458-ஆம் சூத்திரம் பார்க்க.

[3] 'இது தான்' என்றது, மேலே கூறிய விஹித விஷய நிவிருத்தியை. 'சிலர்க்கு' என்றது பக்தி பாரவச்ய பிரபந்நர்களை. அடுத்த 'சிலர்க்கு' என்றது ஞானாதிக்கியத்தாலே பிரபந்நரானவர்களை. மூன்றாவதாக 'சிலர்க்கு' என்றது, அஜ்ஞானத்தாலே பிரபந்நரானவர்களை. 46வது சூத். பார்க்க.

[4] விஷயங்களில் - பெண்கள் திறத்தில்.

வியாக் :—' இதுதான் சிலர்க்கு அழகாலே பிறக்கும்' என்றது, இந்த விஹித விஷயத்தில் தொடர்பு நிவிருத்திதான், பகவானை நேரே அறிந்தவர்களாய்ப் பக்திபரவசப்பட்டவர்களான பிரபந்நர்களுக்கு, கண்டவர்தம் மனம் வழங்கும்படியான [1] தன்னுடைய திருமேனியை அநுபவிக்கும் அநுபவத்தாலே பிறக்கும் என்றபடி. இதுதான் 'சிலர்க்கு அருளாலே பிறக்கும்' என்றது, உண்மைப் பொருளை உள்ளவாறே உணர்ந்த மேம்பட்ட ஞானத்தையுடைய பிரபந்நர்க்கு, 'நம்மை அனுபவிக்க இட்டுப் பிறந்த ஆன்மா, இப்படிச் சிற்றின்பத்தில் ஆசையுடையதாய் அழிந்து போவதே'' என்று, சிற்றின்பத்தில் பற்று அறும்படி அவன் பண்ணும் பரமகிருபையாலே பிறக்கும் என்றபடி. 'இதுதான் சிலர்க்கு ஆசாரத்தாலே பிறக்கும்' என்றது, [2] அளவிலிகளான அஜ்ஞானத்தாலே பிரபந்நரானவர்க்கு, அவதாரங்களில் [3] "அந்த இராமபிரான் உலகத்தில் எல்லா அறங்களையும் செய்கின்றவராயும் செய்விக்கின்றவராயும் இருக்கிறார்'' என்கிற படியே அதிகாரத்திற்குத் தகுதியாக ஒழுகியும் ஒழுகுவித்தும் போந்த படிகளையும், அளவுடையரான பூர்வாசாரியர்கள் நடந்து போந்தபடிகளையும் சாஸ்திர முகத்தாலும் ஆசார்ய உபதேசம் முதலிய முறையாலும் அறிகையாலே அவ்வாசாரங்களை நினைக்க நினைக்கப் பிறக்கும் என்றபடி. (22)

## 103

'பிறக்கும் கிரமம் என்?' என்னில், அழகு அஜ்ஞானத்தை விளக்கும்; அருள் [4]அருசியை விளக்கும்; ஆசாரம் அச்சத்தை விளக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ:**—மேலே கூறிய காரணங்களால் 'அது பிறக்கும் முறை யாங்ஙனம்?' என்ற வினாவை அநுவதித்துக்கொண்டு அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

[1] தன்னுடைய - இறைவனுகிய தன்னுடைய.

[2] அளவு - ஞானம்.

[3] "மர்யாதாநாம் ச லோகஸ்ய கர்தா காரயிதா ச ஸ:'' என்பது, ஸ்ரீராமா. சுந். 35 : 11.

[4] அருசி - ருசி இல்லாமை; வெறுப்பு.

**வியாக் :**—'அழகு அஜ்ஞானத்தை விளைக்கும்' என்றது, கண்டவர் தம் மனம் கவரும் கள்வனுகையாலே சிற்றின்பத்தை ஒன்ருக நினையாதபடி ஆக்கும் என்றபடி. 'அருள் அருசியை விளைக்கும்' என்றது, பெண்களைக் காணும்போது அருவருத்துக் காரி உமிழ்ந்து போம்படி செய்தல் என்றபடி. 'ஆசாரம் அச்சத்தை விளைக்கும்' என்றது, 'ருசியானது மனத்திலே இருக்கவுங்கூட, முன்னேர்கள் ஒழுகிக் காட்டியபடி செய்யாத போது நமக்குக் கேடே பலிக்கும் என்று, பெண்களின் சேர்க்கை யில் இழிய நடுங்கும்படி செய்தல் என்றபடி. ஆகையால், இம் முறையிலே பிறக்கும் என்பது கருத்து. (23)

## 104

**இவையும் [1] ஊற்றத்தைப் பற்றச் சொல்லு கிறது.**

என்பது சூத்திரம்.

**அவ :**—இந்த மூன்று விதமான பிரபந்நர்களுக்கும் அழகு முதலான மூவகைக் காரணங்களுள் ஒரொன்றே விரக்திக்குக் காரணமாகும் என்று சொல்லுதற்குக் காரணத்தை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இவையும் ஊற்றத்தைப் பற்றச் சொல்லுகிறது' என்றது, "அஜ்ஞானத்தாலே பிரபந்நர்" என்ற சூத்திரத்தால் இவர்களுக்குச் சொன்ன பிரபத்திக்குக் காரணங்களானவற்றை ஒரொன்றின் ஊற்றத்தைப் பற்றச் சொன்னுற்போன்று, "இது தான் சிலர்க்கு" என்ற சூத்திரத்திற் கூறிய விரக்திக்குக் காரணங்களான இவையும் ஒரொன்றின் ஊற்றத்தைப் பற்றச் சொல்லுகிறது என்றபடி.

இதனுல், பக்தியினுலே பரவசப்பட்டிருக்கின்ற பிரபந்நர்க்கு, அருசிக்கு அடியான அருளும் அச்சத்திற்கு அடியான ஆசாரத்தின் நினைவும் உளவாகவும், பகவானுடைய திருமேனி யின் அழகினை உட்கண்ணுல் தெளியக் கண்டு அநுபவிக்குமவர்க ளாகையாலே வடிவழகிலே எப்பொழுதும் மனம் பற்றிக் கிடக்கையால் மற்றைய விஷயங்களை அறியாதிருக்கப் பண்ணும் அவ்வழகே அவர்கள் பக்கல் உறைத்திருக்கும். மிக்க

[1] 47ஆம் சூத்திரம் பார்க்க. ஊற்றம் - உறைப்பு.

ஞானத்திஞலே பிரபந்நரானவர்களுக்கு, மற்றைய விஷயங்களை அறியாமைக்குக் காரணமான இறைவன் திருமேனி அழகினை அர்ச்சாவதாரத்திலே கண்டு அநுபவிக்கையும், அச்சத்திற்குக் காரணமான பூர்வாசாரியர்களுடைய ஆசாரத்தின் நினைவும் உளவாயிருக்கவும், இறைவன் தன் அருளை முழுமடை செய்து எடுத்த பெரியோர்களாகையாலே அருசிக்கு அடியான அருள் அவர்கள் பக்கல் உறைத்திருக்கும். அஜ்ஞானத்தாலே பிரபந்நர் ஆனவர்களுக்கு அர்ச்சாவதாரத்தில் யாதாயினும் ஒவ்வொரு கால விசேடத்திலே திருமேனியழகில் அநுபவமும் அருசிக்குக் காரணமான அருளும் ஒரு சிறிதளவில் உளவாயிருந்தும், பூர்வாசாரியர்களுடைய ஆசாரங்களையே பல காலம் நினைத்துக் கொண்டு போருகையாலே அச்சத்திற்குக் காரணமான அவ் வாசாரங்கள் அவர்கள் நெஞ்சிலே ஊன்றியிருக்கும். ஆகையால், இந்த ஊற்றத்தைப் பற்ற ஒரொன்றே விரக்திக்குக் காரணமாகச் சொல்லுகிறது என்றதாயிற்று. (24)

## 105

அருசி பிறக்கும் போதைக்குத் [1] தோஷ தரிசனம் அபேக்ஷிதமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—இறைவனுடைய திருமேனி அழகின் மேம்பாட்டாலே சிற்றின்பத்திலே அறியாமை விளையவும் கூடும்; [2] ஆப்தர்களான ஆசாரியர்களுடைய ஆசாரத்தை நினைப்பதாலே சாஸ்திரங்களால் விலக்கப்பட்ட பிறர் மனை விழைதல் முதலான பெண்களின் சேர்க்கையிலும் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட தன் மனைவியின் சேர்க்கையிலும் அச்சம் விளையவும் கூடும்; அநாதி காலம் ஆசைப்பட்டு மேல் விழுந்து போந்த பெண்கள் மாட்டு வெறுப்புப் பிறத்தல் விளையக்கூடியது ஒன்றன்றே? அத்தகைய அவ்வெறுப்புதான் அவன் அருளால் பிறக்கும் போதைக்கு வேண்டப்படுவதொன்றை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

[1] தோஷ தரிசனம் - சரீரத்தினுடைய குற்றத்தைப் பார்த்தல். 'நீண்டா வழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும், வேண்டா நாற்ற மிகுமுடலை வீணே சுமந்து மெலிவேனே?' என்ற திவ்விய கவியின் திருவாக்கு ஈண்டு நினைத்தல் தகும்.

[2] ஆப்தர் - நம்பத்தகுந்தவர்.

**வியாக் :**—தோஷ தரிசனமாவது, இனிமை என்ற புத்தியோடு தழுவுகின்ற பெண்ணின் சரீரம் இறைச்சி, இரத்தம், சீ, மலம், மூத்திரம், நரம்பு, கொழுப்பு, எலும்பு என்னும் இவற்றின் கூட்டமாய், தோலால் மூடப்பட்டதாய், துர்நாற்றத்தையுடையதாயிருக்கும்படியையும், இன்பந்தான் சிறிதாய், நிலையற்றதாய், துன்பம் கலந்ததாய்க் கேட்டினைத் தரக்கூடியதாயிருக்கும்படியையும் [1] காண்டல் முதலான பிரமாணங்களால் காண்டல். (25)

## 106

[2] அது பிரதாந ஏதுவன்று.

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனால், அதுவோ பின்னை [3] அருசிக்குக் காரணம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அது பிரதான ஏது அன்று' என்றது, அதுவும் ஒரு காரணம், முக்கிய காரணம் அன்று என்றபடி. (26)

## 107

[4] அப்ராப்ததையே பிரதாந ஏது.

என்பது சூத்திரம்.

அவ:—'ஆனால் முக்கியமான காரணந்தான் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

1 "வினையின் வந்தது, வினைக்கு விளைவாயது, புனைவன நீங்கின் புலால் புறத்திடுவது, மூப்பு விளிவுடையது, தீப்பிணியிருக்கை, பற்றின் பற்றிடம், குற்றக் கொள்கலம், புற்றடங்கரவின் செற்றச் சேக்கை, அவலக் கவலை கையாறு அழுங்கல், தவலாவுள்ளம் தன்பாலுடையது, மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து, மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய்." என்பது மணிமேகலை, 4. 113 - 121.

2 அது - மேலே கூறிய தோஷ தரிசனம். பிரதாந ஏது - முக்கியமான காரணம்.

3 அருசிக்குக் காரணம் - அருசிக்கு முக்கிய காரணம்.

4 அப்ராப்ததை - ஆன்மாவின் தன்மைக்குத் தக்கதல்லாதது. ஆன்மாவின் தன்மையாவது, எம்பெருமானையே இனிய பொருளாகக் கொண்டு அவனையே அநுபவிக்கக்கூடிய தன்மை.

**வியாக் :**—அப்ராப்ததையாவது, பகவானையே அநுபவிக்கக்கூடியதான இவ்வான்மாவின் தன்மைக்குச் சேராததாக விருத்தல். இதனால், அருள் அருசியை விளக்குமிடத்தில், உடம்பின் அசுத்தத்தைக் காண்டல் முதலானவற்றைப் பண்ணுவித்தே அருசியை விளைப்பிக்கையால், உண்மைப் பொருளை உள்ளவாறு அறிந்த ஞானிகளுடைய அருசிக்குச் சரீரத்தினுடைய தோஷதரிசனம் அமுக்கிய காரணமாகவும் அப்ராப்தி தரிசனம் முக்கிய காரணமாகவும் இருக்கும் என்றதாயிற்று. (27)

## 108

**பகவத் விஷயத்தில் இழிகிறதும் குணம் கண்டு அன்று.**

**என்பது சூத்திரம்.**

**அவ :**—' 'மாற்பால் மனம் சுழிப்ப' என்ற சூத்திரத்திற் கூறியவாறே மிக்க பேரன்பிற்கு இலக்காகச் சொன்ன பகவானிடத்தில் குணம் கண்டு இழிகிறதைப் போன்று, சரீரத்தின் அசுத்தத் தன்மையைப் பார்த்தலாலேயே இந்த விரக்தியும் உண்டாகிறது என்று கொண்டால் என்னை?' என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—பகவத் விஷயத்தில் இழிகிறதும் குணம் கண்டு அன்று என்கிறார். (28)

## 109

ஸ்வரூபப் பிராப்தம் [1]என்று.

என்பது சூத்திரம்

**அவ :**—' ஆகில், எத்தாலே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—' சொரூபப் பிராப்தம் என்று' என்கிறார். அதாவது, பகவானைப் பற்றுகிறது, அவனுடைய கல்யாண குணங்கள் அடியாக அன்று; இவ்வான்மாவிற்கு வகுத்த விஷயம் என்னுமதனாலே என்றபடி. (29)

---

[1] சொரூபப் பிராப்தம் - ஆன்மாவின் தன்மைக்குத் தக்கது.

## 110

**இப்படிக் கொள்ளாத போது, [1]குணஹீநம் என்று நினைத்த தசையில் பகவத் விஷயப் பிரவிருத்தியும், தோஷாநுசந்தான தசையில் சம்சாரத்தில் பிரவிருத்தியும் கூடா.**

என்பது சூத்திரம்.

அவ :—மேலே தாம் அருளிச்செய்தபடியே பொருளைக் கொள்ளாத போது வரும் விரோதத்தைக் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—' இப்படிக் கொள்ளாத போது ' என்றது, மகளிர் பக்கல் அருசிக்குக் காரணம் அவர்கள் வகுத்த விஷயமல்லாமலிருத்தல் ; பகவானிடத்தில் ருசிக்குக் காரணம் அவன் வகுத்த விஷயமாகவிருத்தல் என்று கொள்ளாமல், பெண்களிடத்தில் தோஷ தரிசனத்தையும் பகவானிடத்தில் குண தரிசனத்தையும் காரணங்களாகக் கொள்ளும்போது என்றபடி. ' குணஹீநம் என்று நினைத்த தசையில் பகவத் விஷயப் பிரவிருத்தி கூடாது ' என்றது, பிரிவாற்றுமை கரை புரண்டு பெருவிடாய்ப்பட்டுத் துடித்து அலமரா நிற்கச் சடக்கென வந்து முகம் காட்டாமையாலே குணங்கள் இல்லாதது ' என்று சிந்தித்த நிலையிலே, பின்னையும் [2] '' அவனை யல்லது அறியேன் '' என்று அவன்பக்கலிலே கழிபெருங்காதலைச் செலுத்துதல் கூடாது' என்றபடி. ' தோஷ அநுசந்தான தசையில் சம்சாரத்தில் பிரவிருத்தியும் கூடாது ' என்றது, தாய் தந்தையர் முதலானவர்களும் மனைவி மக்கள் முதலானவர்களும் பங்காளிகளும் உறவினர்களும் வீடு நிலம் முதலானவைகளும் ஆகிற ஐம்புல இன்பங்களை அநுபவித்திருக்கையாகிற சம்சாரத்தில் துக்கம் மிகுந்திருத்தல் முதலான தோஷங்களைக் காட்சி முதலானவைகளாலே அறிந்து நினைத்

---

[1] குணஹீநம் - குணங்கள் இல்லாதது. பகவத் விஷயப் பிரவிருத்தி - பகவானை நினைத்தல் வணங்குதல் முதலியன. அநுசந்தானம் - நினைத்தல். சம்சாரத்தில் பிரவிருத்தி - சம்சாரத்தில் இறங்குதல். சம்சாரம் - மனைவி மக்கள் முதலான தொடர்புடையார் எல்லாரும் ஒன்றுகக் கூடியிருந்து அநுபவிக்கும் அநுபவம்.

[2] ' அவனை அல்லது அறியேன் ' என்றது திருவாய்மொழி, 5. 3 : 5 -ஆம் திருப்பாசுரத்தின் கருத்து.

திராநிற்கச் செய்தேயும் அதிலே மிக்க ஆசை செல்லுதல் கூடாது என்றபடி.

அன்றிக்கே, 'தோஷ அநுசந்தான தசையில் சம்சாரத்தில் பிரவிருத்தி கூடாது' என்பதற்கு, உண்மைப்பொருளை உள்ளவாறு உணர்ந்தவர்களான மஹரிஷிகள் முதலாயினேர், சாரத்தையும் அசாரத்தையும் பகுத்தறிந்த காரணத்தாலே 'மகளிரின் சேர்க்கை துன்பமுடையது' என்ற நினைவு உண்டாயிருக்கச் செய்தேயும், 'சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்டது' என்ற காரணத்தாலே 'தக்கது' என்ற புத்தியாலே மக்கட்பேறு முதலான வடிவிலே அமைந்த சம்சாரத்தில் இழிதல் ஆகிற செயல் கூடாது என்று பொருள் கூறலுமாம்.

இப்படிக் கொள்ளாத போது இவை கூடாவாம் என்று விரோதம் காட்டுகையாலே, இப்படிக் கொள்ள வேண்டும் என்னுமிடம் உறுதி செய்யப்பட்டது. (30)

## 111

'கொடியவென் நெஞ்சம் அவன் என்றே
கிடக்கும்', 'அடியேன் நான் பின்னும் உன்
சேவடியன்றி நயவேன்' என்னுநின்றார்களிறே.[1]

என்பது சூத்திரம்.

அவ :—'குணமில்லாதது என்று நினைத்த நிலையில் பகவானிடத்தில் கழிபெருங்காதலைச் செய்கை எங்கே கண்டோம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும்' என்றது, [2]'கடியன்' என்ற திருப்பாசுரத்தில் முதல் இரண்டு அடிகளாலும் தன் காரியத்திலே நோக்குள்ளவன், பிறர் நோவறியாதவன், ஒருவருக்கும் எட்டாதவன், வஞ்சகன், அறிதற்கரிய தன்

[1] 'என்னுநின்றார்களிறே' என்றது ஆழ்வார்களை. இத்திருப் பாசுரங்களின் பொருளை வியாக்கியானத்தில் காணல் தகும்.

[2] இது திருவாய். 5. 3 : 5. அத்திருப்பாசுரத்தில் உள்ள 'கடியன், கொடியன், நெடியமால், உலகம் கொண்ட அடியன், அறிவரு மேனி மாயத்தன்' என்ற சொற்களுக்கு முறையே பொருள் அருளிச் செய்கிறார், 'தன் காரியத்திலே' என்று தொடங்கி.

மையன் என்று அவன் குணங்களின்மையைச் சொல்லி, ‘ இப்படி யிருந்தானாகிலும், உலக ஒழுக்கிற்கு அப்பாற்பட்ட என் நெஞ்சு அவனையல்லது அறியாதே இருக்கும் ’ என்றும், [1] ‘ அடியேன் நான் பின்னும் உன் சேவடியன்றி நயவேன் ’ என்றது, ‘ வேம்பின் புழு ’ என்ற திருப்பாசுரத்தில் வேம்புக்கு இட்டுப் பிறந்த புழு அந்த வேம்பினையே உண்ணுமதொழியக் கரும்பைக் கண்டாலும் விரும்பாது ; அப்படியே [2] ‘ கடன்மல்லைக் கிடந்த கரும்பு ’ என்னும்படி எல்லையில்லாத இனிமையையுடையனான நீதானே வேம்பு போல இனியன் அல்லாத காலத்தும், உனக்கே அடியவனான நான் எனக்கு வகுத்த சேஷியான உன் திருவடிகளை ஒழிய ஆசைப்படேன் என்று மயர்வறமதி நலம் அருளப் பெற்றவர்கள் அருளிச்செய்தார்களிறே என்றபடி. (31)

## 112

[3] குணகிருத தாஸ்யத்திலும்காட்டில் ஸ்வ ரூபப்பிரயுக்தமான தாஸ்யமிறே பிரதானம்.

என்பது சூத்திரம்.

அவ :—[4] “ குணங்களுக்குத் தோற்று அடிமையாகவிருக்கும் தன்மையை அடைந்தேன் ’ என்றாரும் உளரே ?” என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—குணகிருத தாஸ்யமாவது, இறைவனுடைய குணங்களுக்குத் தோற்று அடிமையாக இருக்கை. ஸ்வரூபப் பிரயுக்தமான தாஸ்யமாவது, சேஷத்வத்தாலேயே நிரூபிக்கப் படுமதான ஆன்மாவாகிற தன்னுடைய தன்மையைப் பார்த்து அடிமையாக இருக்கை. ஆன்மாவின் தன்மை இப்படியிருந் தாலும், இறைவன் நற்குணக்கடலாகையாலே, குணங்களுக்குத்

---

[1] பெரிய திருமொழி, 11. 8 : 7. [2] பெரிய திருமொழி, 7. 1 : 4.

[3] குணகிருத தாஸ்யம் - இறைவனுடைய குணங்களால் நாம் செய்யும் தொண்டு. ஸ்வரூப பிரயுக்தமானதாஸ்யம் - சேஷத்வத்தாலே நிரூபிக்கப்படுமதான தன் சொரூபத்தைப் பார்த்துத் தான் செய்யும் தொண்டு.

[4] “ அஹமஸ் யாவரோ ப்ராதா குணைர்தாஸ்ய முபாகத: ” என்பது, ஸ்ரீராமா. கிஷ். 4 : 12.

தோற்று அடிமையாக இருத்தலும் இறைவன் திறத்தில் தொடர்ந்தே வரும். ஆகையாலேயன்றோ, சேஷத்வத்தாலேயே நிரூபிக்கப்படுமவரான இளையபெருமாள் தாம்[1] அப்படி அருளிச் செய்ததும்?

[2] குணங்களுக்குத் தோற்று அடிமையாக இருத்தல் ஒரு காரணம் பற்றி வருவதாகையாலே முதன்மையில்லாததாய், மற்றையது காரணம் பற்றாமல் வருவதாகையாலே பிரதான மாகவிருக்கும். அக்காரணத்தைத் திருவுள்ளம்பற்றியன்றோ, அதனுடைய முதன்மையாம் சிறப்புத் தோற்ற 'ஸ்வரூபப் பிரயுக்தமான தாஸ்யமிறே பிரதானம்' என்று அருளிச் செய்தது? (32)

## 118

[3] அநசூயைக்குப் பிராட்டி அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

என்பது சூத்திரம்.

அவ:—இப்பொருளுக்குப் பிரமாணமாகப் பிராட்டி அருளிச் செய்த வார்த்தையை நினைப்பூட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'அநசூயைக்குப் பிராட்டி அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது' என்றது, அத்திரி பகவான் ஆச்ரமத்திலே பெருமாள் எழுந்தருளி, முனிவரையும் வணங்கி, அவர்

---

1 'அப்படி அருளிச் செய்ததும்' என்றது, சொரூபப் பிரயுக்தமான அடிமையைப் பிரதானமாகவும் குணப்பிரயுக்தமான அடிமையை அப்பிரதானமாகவும் அருளிச்செய்ததும் என்றபடி. 'உபாகதஃ' என்ற இடத்திலே உள்ள 'உப' என்னும் சொல்லைத் திருவுள்ளம்பற்றி இவ்விசேடப் பொருளை அருளிச்செய்கிறார். 'உப' சப்தம், பிரதானம் இன்மையைக் காட்டும். 'உபேந்திரன்' என்பது போன்ற இடங்களில் காண்க.

2 சொரூபங்காரணமாக வருகின்ற அடிமை சிறந்தது என்பதனை விளக்குகிறார் 'குணங்களுக்கு' என்று தொடங்கி.

3 அநசூயை - அத்திரி முனிவருடைய மனைவி. ஸ்மரிப்பது - நினைப்பது. அருளிச்செய்த வார்த்தையை வியாக்கியானத்தில் காண்க.

அருள் பெற்று இருந்த பின்னர், அவருடைய மனைவியான அநசூயையைப் பிராட்டி சென்று வணங்கி அவள் அருகில் இருக்கிறவளவில், அவள் பிராட்டியைப் பார்த்து, 'உறவினர் களையும் தாழ்வின்மையையும் செல்வத்தையும் விட்டுப் பெருமாள் பின்னே காட்டிற்குப் போந்த இது நல்வினை வசத்தாலே உமக்கு நன்றாகக் கூடிற்று; நகரத்திலேயிருந்தானாகிலுமாம், காட்டிலே இருந்தானாகிலுமாம், நல்லனாகிலுமாம், தீயனாகிலுமாம், பெண் களுக்குத் தெய்வம் கொழுநனேகிடீர், நீர் இப்படியே எப் பொழுதும் பெருமாளுக்குப் பணிவிடை செய்து போரும்' என்ன, பிராட்டி நாணமுற்றுக் கவிழ்தலையிட்டிருந்து, 'எனக்குப் பெருமாள் பக்கல் அன்பு இயல்பாகவே உண்டாயிருக்கச் செய்தேயும், அவர்தாம் குணங்களால் மேம்பட்டவராயிருக்கை யாலே, என்னுடைய அன்பு, குணம் காரணமாக உண்டாயது என்றிருப்பார்கள் நாட்டார். பெருமாளைக் குணங்களினின்றும் தனியே பிரித்துக் காட்டவொண்ணாமையாலே, நான் அவர் பக்கல் இருக்கும் இருப்பை அறிவிக்க மாட்டுகிற்றிலேன்; அவர் குணங்களில்லாதவருமாய் அழகில்லாதவருமான அன்றும் நான் அவர் பக்கல் இப்படிகாணும் இருப்பது' என்று அருளிச் செய்த வார்த்தையை என்றபடி. (33)

## 114

[1] 'பகவத் விஷயப் பிரவிருத்தி பின்னைச் சேருமோ?' என்னில்

என்பது சூத்திரம்.

அவ:—'இப்படி ஆன்மாவின் தன்மை அடியாக வருகின்ற அடிமையே பிரதானமாகில், சேஷியான இறைவன் செய்தபடி கண்டிருக்குமதொழிய, [2] அநந்ய உபாயத்வம் முதலானவைகள் குலையும்படி இறைவனைக் குறித்து இவன் செய்கின்ற செயல்கள் சேருமோ?' என்னும் வினாவினை அநுவதிக்கிறார் இச் சூத்திரத்தால். (34)

---

[1] பகவத் விஷயப் பிரவிருத்தி - பகவானை அடைவதற்கு இவனாலே செய்யப்படும் செயல்கள்.

[2] அநந்ய உபாயத்வம் - வேறு ஒன்றனையும் உபாயமாகக் கொள்ளாமை. 114-117 வரை முன் புத்தகங்களில் ஒரே சூத்திரமாய் உள்ளன.

## 115

[1] அதற்கு அடி பிராவண்யம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—அவ்வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—அதற்கு அடி பிராவண்யம்—பிராவண்யமாவது, சாஸ்திரங்களின் வரம்பினை மீறிய பேரன்பு. (35)

## 116

[2]அதற்கு அடி சம்பந்தம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'அந்தப் பேரன்பிற்குக் காரணம் இறைவனுடைய திருமேனியின் அழியாத பேரழகு அன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அதற்கு அடி சம்பந்தம் ஆம்,' என்கிறார். சம்பந்தமாவது, சேஷ சேஷி பாவம். (36)

## 117

அதுதான் [3]ஔபாதிகம் அன்று; சத்தாபிரயுக்தம்.

என்பது சூத்திரம்.

**அவ:**—'அந்தச் சம்பந்தந்தான் இறைவனுடைய குணங்கள் காரணமாகவும் வாராதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அதுதான் ஔபாதிகம் அன்று சத்தாபிரயுக்தம்' என்கிறார். சத்தாபிரயுக்தம் என்றது, இவ்வான்மாவினுடைய இருப்பு என்று உள்ளதோ அன்று முதற்கொண்டே உள்ளது என்றபடி. (37)

---

[1] அதற்கு அடி - அந்தச் செயல்களுக்குக் காரணம்.

[2] சம்பந்தம் - சேஷ சேஷி பாவ சம்பந்தம்.

[3] ஔபாதிகம் - காரணம்பற்றி வந்தது. சத்தாபிரயுக்தம் - சத்தையோடு கூடியது. சத்தை - ஆன்மாவின் இருப்பு.

## 118

[1]அந்தச்சத்தை, பிராவண்ய கார்யமான அநுபவம் இல்லாத போது குலேயும்; அது குலேயாமைக்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய்ப் பிராப்தங்களுமாய் இருக்கும்; ஆகையாலே பகவத் விஷயப் பிரவிருத்தி சேரும்.

என்பது சூத்திரம்.

அவ :—' இதனால் மேலே கூறிய வினாவிற்கு விடையாவது யாது ?' என்ன, அதனை இச்சூத்திரத்தில் மூன்று வாக்கியங்களால் அருளிச்செய்கிறார்.

வியாக் :—' அந்தச் சத்தை பிராவண்ய கார்யமான அநுபவம் இல்லாத போது குலேயும்' என்றது, அப்படிப்பட்ட இருப்பானது, தனக்குக் காரணமான சம்பந்த ஞானம் அடியாய் வருகின்ற பிராவண்யத்தின் காரியமான பகவானுடைய அநுபவம் இல்லாத போது கணநேரமும் நில்லாது என்றபடி. ' அது குலேயாமைக்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய்ப் பிராப்தங்களுமாய் இருக்கும்' என்றது, அந்த இருப்பு அழியாமைக்கு உறுப்பாக வருகிற மடலெடுக்கை முதலான எல்லாச் செயல்களும் பகவானுடைய அநுபவம் ஒழியத் தரிப்பு இல்லாமையாலே தவிருவோம் என்றாலும் தவிரப்போகாதவை யுமாய்ச் சேஷிக்கு அதிசயத்தை விளைக்கக் கூடியவைகளா கையாலே ஆன்மாவின் தன்மைக்குத் தக்கவைகளுமாயிருக்கும் என்றபடி. [2]' ஆகையாலே பகவத் விஷயப் பிரவிருத்தி சேரும்' என்று மேலே கூறியதைக் காரணமாக்கிக்கொண்டு எழுந்த ஐயத்தை நீக்கித் தலைக்கட்டுகிறார். (38)

---

1 சத்தை - ஆத்மாவினுடைய இருப்பு. அநுபவம் - பகவானுடைய அநுபவம். ' சத்தை குலேயும் ' எனக் கூட்டுக. குலேயும் - அழியும். அது குலேயாமைக்காக - ஆன்மாவினுடைய அந்த இருப்பு அழியாமைக் காக. வருமவை - செய்கின்ற காரியங்கள். அவர்ஜநீயம் - தவிர முடியாதது. பிராப்தம் - தக்கது. பகவத் விஷயப்பிரவிருத்தி - பக வானை அடையும்பொருட்டு இவன் செய்யும் செயல்கள்.

2 ' ஆகையாலே ' என்றது ' இந்தக் காரணங்களாலே ' என்றபடி. இதனையே, ' மேலே கூறியதைக் காரணமாக்கிக்கொண்டு ' என்கிறார். ' தலைக்கட்டுகிறார் ' என்றது, ' சேரும் ' என்ற பதத்தை நோக்கி. தலைக்கட்டுதல் - முடித்தல்.

## 119

[1]பிராபகாந்தர பரித்தியாகத்துக்கும் அஜ்ஞான அசக்திகள் அன்று ; ஸ்வரூப விரோதமே பிரதாந ஏது.

என்பது சூத்திரம்.

**அவ :—**[2] பெண்களின் சேர்க்கையை விடுதற்கும், இறைவனைப் பற்றுவதற்கும் முதன்மையான காரணங்கள் இன்னவை என்றார் மேல். இந்தப் பிரசங்கத்திலே, பிரபத்தி ஒழிந்த மற்றைய உபாயங்களை விடுதற்கும் முதன்மையான காரணம் இன்னது என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :** 'பிராபகாந்தரங்கள்' என்றது, பிரபத்தி உபாயத்தை ஒழிந்த மற்றைய உபாயங்களை. 'அஜ்ஞான அசக்திகள் அன்று' என்றது, அவற்றை அறிதற்கும் செய்தற்கும் ஈடாக ஞானமும் ஆற்றலும் இல்லாமை, அவற்றை விடுதற்கு முதன்மையான காரணம் அன்று என்றபடி. 'ஸ்வரூப விரோதமே பிரதாந ஏது' என்றது, பகவானுக்கு அத்யந்த பரதந்திரமாயிருக்கிற ஆன்மாவின் தன்மைக்குச் சேராது என்னுமதுவே முக்கிய காரணம் என்றபடி.

[2] இதனால், 'அஜ்ஞானத்தாலே பிரபந்நர்' என்ற விடத்தில் சொன்ன அறிவின்மையும் ஆற்றலின்மையும் முக்கிய காரணம் அன்று என்னுமிடம் சொல்லுகிறது. அறிவின்மையும் ஆற்றலின்மையுமாகிற இவை காரணமாகிவிடில், ஞானமும்

[1] பிராபகாந்தர பரித்தியாகத்துக்கும் அஜ்ஞான அசக்திகளாகிற இரண்டும் பிரதான ஏது அன்று; ஸ்வரூப விரோதமே பிரதான ஏது என்று சில சொற்களைப் பெய்து 'பிரதானஹேது' என்பதனை முன்னும் கூட்டிப் பொருள் உரைக்க. பிராபகம் - உபாயம். அந்தரம் - வேறு; மற்றைய உபாயங்கள் என்றபடி. அவை, கர்மம் ஞானம் பக்திகள். தியாகம் - விடுதல். பரித்தியாகம் - நன்றாக விடுதல்; முற்றவும் விடுதல் என்றபடி. அசக்தி - ஆற்றல் இன்மை. பிரதான ஏது - முக்கிய காரணம். ஸ்வரூபம் - ஆன்மாவினுடைய அத்யந்த பாரதந்திரிய சொரூபம். 'பரித்தியாகத்துக்கும்' என்ற உம்மை, மேலே கூறிய 103, 104, 105ஆம் சூத்திரங்களின் பொருளைத் தழுவுகின்றது.

[2] 44 முதல் 53ஆம் சூத்திரம் முடியக் கூறியுள்ளனவற்றை ஈண்டு நினைவு கூர்க.

சக்தியும் உண்டாகில் அவை கொள்ளத்தக்கவையாகுமிறே; ஆன்மாவின் தன்மைக்கு விரோதம் என்று நினைந்துவிடிலிறே அவை மீண்டும் மறுவலிடாது கழிந்தேவிடுவது. (39)

## 120

பிராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம்.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி மற்றை உபாயத்தை விரோதி என்று தள்ளலாமோ? அதுவும் மோக்ஷத்திற்கு உபாயமாகவன்றோ போதருகிறது? அது பின்னை யாருக்கு உபாயம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்: பிராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம்' என்றது, அது தற்காப்பிலே தன் முயற்சியைச் சிறிதும் பொறுததான ஆன்மாவின் தன்மையை உள்ளபடி அறிகைக்கு ஈடான ஞானம் இல்லாதவர்களுக்கு உபாயமாயிருக்கும் என்றபடி. (40)

## 121

ஞானிகளுக்கு அபாயம்.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனால், ஞானிகளுக்கு இது எங்ஙனே இருக்கும்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஞானிகளுக்கு அபாயம்' என்றது, ஆன்மாவின் தன்மையை உள்ளவாறு உணர்ந்த ஞானிகளுக்கு அபாயமாயிருக்கும் என்றபடி. (41)

## 122

அபாயமாயிற்றது [1] ஸ்வரூப நாசகமாகையாலே.

என்பது சூத்திரம்.

---

[1] ஈண்டுச் 'சொரூபம்' என்றது, இறைவனுடைய மிக்க பிரீதிக்கு இலக்காகவிருக்கும் இவனுடைய தன்மையில் அடங்கியுள்ள மிக்க பிரீதியை. 'நாசகம்' என்றது, அந்தப் பிரீதியை அழித்துவிடுவது என்றபடி. அதாவது, மற்றைய உபாயங்களைவிட்டுச் சித்தோபாயமான தன்னைப் பற்றுதற்குக் காரணமான சொரூபத்தின் உண்மை நிலையை

**அவ :**—'இவர்களுக்கு அபாயமாவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அபாயமாயிற்றது ஸ்வரூப நாசகம் ஆகையாலே' என்கிறார். 'ஸ்வரூபமாவது, அத்யந்த பாரதந்திரியம்; இதற்குத் தன் முயற்சியால் செய்யப்படுகின்ற அந்தப் பக்தி கேட்டினை உண்டாக்கக்கூடியதாகும் என்றபடி. (42)

## 123

**'நெறி காட்டி[1] நீக்குதியோ' என்று நின்றதிறே.**

என்பது சூத்திரம்.

**அவ :**—அந்த அபாயத்தன்மையை ஞானிகளுக்குள்ளே முதல்வரான ஆழ்வார் பாசுரத்தாலே காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'நெறிகாட்டி நீக்குதியோ?' என்றுநின்றதிறே என்றது, உன்னை ஒழிய வேறோர் உபாயத்தைக்காட்டி உன் பக்கலினின்றும் அகற்றப்பார்க்கிறாயோ என்கையாலே மற்றைய உபாயத்தின் அபாயத்தன்மை போதருகின்றது என்றபடி. [2]ஈண்டு நீக்குகையாவது, பரதந்திரமான ஆன்மாவைத் தன் முயற்சியாலே செய்யப்படுகின்ற மற்றைய உபாயத்திலே மூட்டித் தனக்கு அசல் ஆக்குகை. (43)

---

அறிந்தவர்கள் விஷயத்தில் இறைவனுக்கு மிக்க பிரீதி உண்டாகும்; அவர்கள் மீண்டும் உபாயாந்தரங்களிலே இழிந்தால் இறைவனுக்கு உண்டான அந்தப் பிரீதிக்குக் குறைவு உண்டாகும் ஆதலால், 'சொரூபநாசகம்' என்கிறார் என்றபடி. நாசகம் - அழிவினை உண்டாக்குவது.

[1] அபாயம் என்பதற்கு நாசகம் என்றும் பிரிவு என்றும் இரு பொருள்கள் உளவாகலின், நாசகம் என்ற பொருளில் மேற்சூத்திரத்தை அருளிச் செய்தார். பிரிவு என்ற பொருளில் இச்சூத்திரத்தை அருளிச் செய்கிறார்.

'நெறி காட்டி' என்றது, பெரிய திருவந்தாதி, 6.

[2] ஈண்டு 'நீக்குதல்' என்றது, வேறு உபாயங்களை விட்டுச் சித்தோபாயமாகிய தன்னைப்பற்றுதலால் உண்டான மிக்க பிரீதியானது நீங்கி இறைவன் உபேக்ஷை செய்தலைக் குறித்தது. 'ஈண்டு நீக்குகையாவது' என்று தொடங்கும் வியாக்கியான வாக்கியத்திற்குக் கருத்தும் இதுவேயாம்.

## 124

[1]' வர்த்ததே மே மஹத்பயம் ' என்கையாலே பயஜநகம்; ' மாசுச :' என்கையாலே சோக ஜநகம்.

என்பது சூத்திரம்.

அவ :—[2] இதனுடைய சொரூபத்திற்கு நாசத்தை உண்டு பண்ணுதலை அடியாகவுடைய குற்றங்களின் விசேடங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' வர்த்ததே மே மஹத்பயம் என்கையாலே பய ஜநகம் ' என்றது, [3] ' அடியார்களை நழுவவிடாதவனே, எல்லாப் புண்ணிய காலங்களைப் பார்த்தாலும் எல்லாப் புண்ணிய தேசங்களைப் பார்த்தாலும் சரீரத்தைப் பார்த்தாலும் மற்றைய உபாயங்களைப் பார்த்தாலும் எனக்கு மிகப்பெரிய அச்சம் தொடர்கிறது ' என்று மற்றைய உபாயத்தைச் செய்தற்குத் தகுதியான காலவிஷயமாகவும் தேசவிஷயமாகவும் சரீரவிஷய மாகவும் மற்றைய உபாயங்கள் விஷயமாகவும் எனக்கு மிகப் பெரியதோர் அச்சம் தொடர்கிறது என்கையாலே ஆன்மாவின் தன்மைக்கு விரோதிகளான மற்றைய உபாயங்கள் அச்சத்திற்குக் காரணமாம் என்றபடி. ' மாசுச : என்கையாலே சோகஜநகம் ' என்றது, கர்மம் ஞானம் பக்திகளாகிற மற்றைய உபாயங்களைக் கேட்டபின்னர் அருச்சுனனுக்குச் சோகம் பிறக்க, ஆன்மாவின் தன்மைக்குத் தகுதியான பிரபத்தி உபாயத்தை உபதேசித்து,

---

[1] மஹத் பயம் - பெரிய அச்சமானது, மே - எனக்கு, வர்த்ததே ; தொடர்கிறது. மாசுச : - துக்கப்படாதே. ஜநகம் - உண்டாக்குவது - காரணமானது என்றவாறு. பயமாவது, எதிர்காலத்தில் உண்டாகும் கேட்டினை நினைக்கும்போது மனத்திலே உண்டாகும் ஒரு நிகழ்ச்சி. சோகமாவது, நிகழ்காலத்திலே நடக்கின்ற கேட்டினை நினைக்கும்போது மனத்திலே உண்டாகும் ஒரு நிகழ்ச்சி.

[2] ' இதனுடைய குற்றங்களின் ' என்று கூட்டுக. இதனுடைய - மற்றைய உபாயங்களினுடைய.

[3] காலேஷ்வபிச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸுச அச்யுத
சரீரேச கதௌசாபி வர்த்ததே மேமஹத்பயம்

என்பது ஜிதந்தா. 9.

[1] 'மாசுச :—துக்கப்படாதே' என்று சோகத்தைத் தீர்க்கை யாலே சொரூப விரோதிகளான மற்றைய உபாயங்கள் ஞானி களுக்குச் சோகத்தை உண்டாக்கக் கூடியவை என்றபடி. (44)

## 125

[2] இப்படிக் கொள்ளாதபோது ஏதத்பிரவிருத் தியில் பிராயச்சித்த விதி கூடாது.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே கூறியவாறே பொருளை அங்கீகரியாத அளவில் வரும் விரோதத்தைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இப்படிக் கொள்ளாத போது' என்றது, ஆன்மா வின் தன்மையை அழிப்பது என்று கொள்ளாதபோது என்றபடி. 'ஏதத் பிரவிருத்தியில் பிராயச்சித்த விதி கூடாது' என்றது, [3] "சாஸ்திரப் பொருளான இந்தப் பிரபத்தியானது ஒரே முறை செய்யப்படுவதாய் மனிதனைக் காப்பாற்றுமல்லவா? மற்றைய உபாயங்களாகிற அபாயங்கள் சேர்ந்தால் இந்தப் பிரபத்தி நெறியினின்றும் வழுவினவனாகிறான்; குறிக்கோள் இன்மையால் விலக்கப்பட்ட தீச்செயல்களில் தொடர்பு உண்டானால் உடனே பிராயச்சித்தம் செய்யவேண்டும்; மீண்டும் இந்தப் பிரபத்தியைச் செய்யவேண்டும் என்பது, இவ்விஷயத்தில் பிராயச்சித்தமாவது. மற்றைய உபாயங்களில் உபாயம் என்ற புத்தி பிறந்தாலும் இதுவே பிராயச்சித்தமல்லவா?" என்று பிரபந்நனானவனுக்குக்

[1] அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச: என்பது, ஸ்ரீகீதை, 18.

[2] இப்படிக் கொள்ளாத போது - மேலே கூறியவாறே மற்றைய உபாயங்கள் சொரூபத்தை அழிப்பவை என்று கொள்ளாத போது. ஏதத் - இதனுடைய. பிரவிருத்தி - செயல்; அதாவது, இந்தப் பக்தியை உபாயமாகக் கொள்ளுமிடத்து என்றபடி. பிராயச்சித்தம் - பாவத்தைக் கழுவுதல்; 'கழுவாய்' என்றபடி. பிராயம் - பாவம்.

[3] ஸக்ருதேவஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம்
உபாயாபாய ஸம்யோகே நிஷ்டயா ஹீயதேநயா
அபாய ஸம்ப்லவே ஸத்ய: பிராயச்சித்தம் ஸமாசரேத்
பிராயச்சித்திரியம் சாத்ர யத்புந: சரணம் வ்ரஜேத்
உபாய நாமுபேயத்வ ஸ்வீகாரேப்யேத தேவஹி.

என்பது லக்ஷ்மீ தந்திரம்.

குறிக்கோள் இல்லாமையால் மற்றைய உபாயங்களைச் செய்ய நேர்ந்தகாலத்தில், பாவகாரியங்களுக்கு விதிக்கும் பிராயச்சித்தத்தைப் போலவே மீண்டும் பிரபத்தி செய்தலாகிற பிராயச்சித்தத்தை விதித்தல் கூடாது என்றபடி.

மீண்டும் பிரபத்தி செய்தலாவது, முன்பு செய்த பிரபத்தியை நினைத்தல்; மீண்டும் பிரபத்தி செய்தல் அன்று. (45)

## 126

**[1] திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிக்கும்படி :—மதிரா பிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தசலிலம் போலே அகங்கார மிச்ரமான உபாயாந்தரம்.**

என்பது சூத்திரம்.

அவ : இப்படி ஆன்மாவின் தன்மையை அழிக்கக்கூடியதான மற்றைய உபாயங்களினுடைய [2] அத்யந்த நிஷித்தத்வத்தை [3] அபியுக்தருடைய வசனத்தாலே காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தசலிலம் போலே அகங்கார மிச்ரமான உபாயாந்தரம் என்று திருக்குருகைப் பிரான் பிள்ளான் பணிக்கும்படி என்று 'என்று' என்னும் ஒரு சொல்லைப் பெய்து சூத்திரத்தை முடிக்க.

பொற்குடத்திலே இருக்கின்ற தூய தண்ணீரானது துளி அளவினதான கள் கலந்தவாறே அத்தண்ணீர் உபயோகத்திற்குப் பயன்படாதவாறு போன்று, அகங்காரம் கலந்த பக்தியும் பரம சாத்விகர்க்குக் கூடாது என்பதாம். பொற்குடம் - உயிர். தூய தண்ணீர் - பக்தி. மதுத்துளி - அகங்காரம் என உவமையோடு பொருத்திக்கொள்க. ஈண்டு அகங்காரம் என்றது ஸ்தூல அகங்காரத்தை அன்று; சூக்ஷ்ம அகங்காரத்தை. 'மதிரா பிந்து' என்ற உவமையை நோக்குக.

மதிரா - கள். பிந்து - துளி. மிச்ரமான - கலந்த. சாதகும்பம் - மாற்றுயர்ந்த பொன். கும்பம் - குடம். தீர்த்தம் - பரிசுத்தம். சலிலம் - தண்ணீர். உபாயாந்தரம் - பக்தி.

[2] அத்யந்தம் - மிகவும். நிஷித்தம் - விலக்கப்பட்டது. அதாவது, மிக்க தாழ்வினைக் கொடுக்கும் தன்மையது என்றபடி.

[3] அபியுக்தர் - வேதத்தினுடைய பிரமாணத் தன்மையை நிரூபிப்பதில் ஈடுபட்டவர்கள்.

**வியாக் :**—திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆகிறார், முற்றறிவினரான பாஷ்யகாரர் திருவடிகளிலே சேவித்து, அவருக்கு அபிமான புத்திரராய் எல்லாச் சாஸ்திரங்களையும் ஆராய்ந்து அறுதியிட்டிருக்குமவராகையாலே [1] ஆப்ததமராக விருக்குமவரிறே. 'பணிக்கும்படி' என்றது, அருளிச்செய்யும் விதம் என்றபடி. 'மதிரை'யாவது, மிகமிக விலக்கப்பட்ட பொருளாய்த் தன்னுடைய சம்பந்தம் சிறிதுள்ள மற்றைய பொருள்களையும் தன்னைப்போன்றே விலக்கப்பட்டதாக்கும் படியானதொன்று. இதனை அகங்காரத்திற்கு உவமை ஆக்குகையாலே அந்த அகங்காரத்தினுடைய அத்யந்த நிஷித்தத்வமும் அதனுடைய சம்பந்தம் சிறிதுள்ள பொருளும் அதனைப் போன்றே விலக்கப்பட்டது என்னுமிடமும் தோற்றுகிறது. 'சாதகும்பம்' என்றது, பொன்னினை. 'பொன் மயகும்பம்' என்றது, உட்புறம் வேறு உலோகங்களால் செய்யப்பட்டதாய் மேல்புறம் பொன்னால் பூசப்பட்டதாய் இருத்தலன்றிக்கே, பொன்னாலேயே செய்யப்பட்டதான குடம் என்றபடி. இதனால் கலத்தின் தூய்மை சொல்லப்படுகிறது. அதனுள்ளே இருக்கின்ற 'தீர்த்தசலிலம்' என்கையாலே அதனுள்ளே இருக்கின்ற தண்ணீரின் தூய்மை சொல்லப்படுகிறது.

அதுபோலே 'அகங்கார மிச்ரமான உபாயாந்தரம்' என்கையாலே இங்கும் கலத்தின் தூய்மையும் அதற்குள்ளே இருக்கிற பொருளின் தூய்மையும் சொல்லப்பட வேண்டும். [2] "ஆன்மா ஞானமே சொரூபமாயும் குற்றம் இல்லாததாயும்" என்கிறபடியே இயல்பாகவே குற்றம் இல்லாத தன்மையாலும் பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மையாலும் பரிசுத்தமாயன்றோ ஆன்மா இருப்பது? அந்த ஆன்மாவிலே இருக்கும் பக்தியும் பகவானையே விஷயமாகக் கொண்டதாகையாலே தூய்மையை யுடையதாம். அகங்காரம் கலந்ததில்லையாகில் ஒரு குறை இல்லையே.

'ஆக, இதனால் என் சொல்லியவாறோ?' எனின், பொற்கலத்திலேயுள்ள தூய தண்ணீர், கலத்தின் தூய்மையும் தனக்குள்ள

---

[1] ஆப்தன் - உண்மையை உள்ளவாறே உணர்ந்து உணர்ந்தவாறே வெளியிடுபவன். தமன் - அவர்களுள் உயர்ந்தவன்.

[2] "ஆத்மா ஜ்ஞாநமய: அமல:"
என்பது ஸ்ரீவிஷ்ணுபு. 6. 7 : 22.

தூய்மையுமுடையதாயிருக்க, துளி மாத்திரமான கள் கலந்த தனலே விலக்கப்படுமாமாறு போலே, இயல்பாகவே குற்ற மில்லாமை முதலானவைகளால் தூயதான ஆன்மாவிலே உள்ள தாய்ப் பகவானையே தனக்கு விஷயமாகக் கொண்டிருப்பதனல் தூய்மையையுடையதாய் இருக்கிற பக்தியானது, தன் முயற்சியை மூலமாகக் கொண்ட அகங்காரத்தின் சம்பந்தத் தாலே ஞானிகள் அங்கீகரியாதபடி விலக்கப்பட்டதாயிருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி.

[1] 'பணிக்கும்படி' என்பதற்குச் சேரச் சூத்திரத்தின் முடிவிலே 'என்று' என்ற சொல்லைக் கூட்டி முடித்துக் கொள்க. (46)

## 127

[2] இரத்திநத்துக்குப் பலகறை போலேயும்
இராஜ்யத்துக்கு எலுமிச்சம்பழம் போலேயும்
பலத்துக்குச் சத்ருசம் அன்று.

என்பது சூத்திரம்.

அவ:—இன்னமும், பலத்திற்கு ஒத்ததாயிராமை என்ற தொரு குற்றமும் இந்தப் பக்திக்கு உண்டு என்கிருர் இச்சூத்திரத் தால்.

வியாக்:—'இரத்திநத்துக்குப் பலகறை போலேயும் இராஜ்யத்துக்கு எலுமிச்சம்பழம் போலேயும்' என்றது, மற்றைய தீவுகளிலே சிலர் பலகறையை ஆபரணமாகப் பூண்கையாலே பலகறையைக் கொடுத்தவர்களுக்கு இரத்தினத் தைக் கொடுப்பார்கள்; வள்ளல்களான அரசர்கள், ஒரு நாட்டினை விரும்பி வந்து ஒரு எலுமிச்சம்பழத்தைக் கொடுத்த வனுக்கு நாடு நகரங்களைக் கொடுப்பர்கள்; இப்படிக் கொடுப் பர்கள் என்ருல், மிக்க பெருவிலையதான இரத்தினத்திற்கும்,

---

1 'பணிக்கும்படி' என்றது, அப்பெரியார்பால் இந்நூலாசிரியருக் குள்ள கௌரவ புத்தியைக் காட்டுகிறது.

2 இரத்தினத்திற்குப் பலகறை ஒத்த சாதனம் ஆகாதவாறு போலே யும், இராச்சியத்திற்கு எலுமிச்சம்பழம் ஒத்த சாதனம் ஆகாதவாறு போலேயும், அவன் கொடுக்கும் மோக்ஷமாகிற பலத்திற்கு இவன் செய் யும் பக்தி ஒத்த சாதனம் ஆகாது என்றபடி. சத்ருசம் - ஒப்பு.

மிகப் பெரிய செல்வமான நாடு நகரங்களுக்கும், பலகறையும் எலுமிச்சம்பழமும் ஒத்தனவாய் இல்லாமையாலே அவை சாதனம் அல்லாதவாறு போலே என்றபடி.

'பலத்துக்குச் சத்ருசம் அன்று' என்றது,[1] 'வேறொன்றையும் நாடாத பக்தியினாலே அடையத் தக்கவன்' என்றும், [2] 'வேறொன்றையும் நாடாத பக்தியினாலே அடையக் கூடியவன்' என்றும் சொல்லுகிறபடியே பக்தியில் சபலனாய் மேலான வள்ளலான ஈச்வரன், இவன் பக்கல் பக்தி மாத்திரமே பற்றாசாக மேலான புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுத்தாலும் பலத்திற்கு இந்தப் பக்தியானது ஒத்ததல்லாமையாலே சாதனம் அன்று என்றபடி. (47)

## 128

தான் தரித்திரனாகையாலே தனக்குக் கொடுக்கலாவது ஒன்றில்லை.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனால், ஒத்தவை அல்லாதவையான பலகறையையும் எலுமிச்சம்பழத்தையும் உபகாரமாகக் கொடுத்து இரத்தினத்தையும் இராச்சியத்தையும் பெறுகிறவர்கள்தாம் பெறுகிறபடி என்? அவற்றைப் போன்றதாகிறது இதுவும்,' என்ன, அதற்கும் தகுதியில்லை என்று அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'தான் தரித்திரன் ஆகையாலே தனக்குக் கொடுக்கலாவது ஒன்று இல்லை,' என்றது, அங்கு, தானும் தனக்குரியனாய், தனக்கு என்ன ஒரு பலகறையும் ஒரு எலுமிச்சம்பழமும் உண்டாகையாலே அது செய்யலாம்; இங்கு அப்படியன்றிக்கே [3] 'யானே நீ; என்னுடைமையும் நீயே' என்கிறபடியே ஆன்மாவும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களும் அங்குத்தையவாய், தனக்கு என்ன ஒன்றுமில்லாத வறியனாகையாலே பேற்றிற்குக் காரணமாக அவன் திறத்தில் கொடுக்கலாவது ஒன்றும் இல்லை என்றபடி. (48)

---

[1] "பக்த்யா லப்யஸ்த்வநந்யயா" என்பது ஸ்ரீகீதை, 8 : 22.

[2] "பக்த்யா த்வநந்யயா சக்ய:" என்பது ஸ்ரீகீதை, 11 : 54.

[3] 'யானே நீ' என்பது, திருவாய்மொழி, 2. 2 : 9.

## 129

**[1] அவன் தந்ததைக் கொடுக்குமிடத்தில் அடைவிலே கொடுக்கில் அநுபாயமாம்; அடைவு கெடக் கொடுக்கில் களவு வெளிப்படும்.**

என்பது சூத்திரம்.

அவ :—[2] 'கோதானத்திலே தந்தைக்குப் புத்திரன் தக்ஷிணை கொடுக்குமாறு போலே, அவன் கொடுத்ததனை அவனுக்குக் கொடுத்தாலோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'அவன் தந்ததைக் கொடுக்குமிடத்தில்' என்றது, [3] 'ஓ பிராமணரே, விசித்திரமாயும் கைகால்களோடு கூடின தாயுமுள்ள இந்தச் சரீரமானது ஈச்வரனை வணங்கும்பொருட்டு முன்னரே படைக்கப்பட்டது' என்றும், [4] 'அந்நாள் நீ தந்த ஆக்கை' என்றும் சொல்லுகிறபடியே அடியிலே அவன் தந்த உறுப்புகளோடு கூடின உடலை [5] 'என்னிடத்தில் மனத்தினை வை, என்னிடத்தில் பக்தியைச்செய், என்னைப் பூசிப்பாய், என்னை வணங்கு' என்றும், [6] 'எப்பொழுதும் என்னைப் பாடுகின்றவராய் எனது திருப்பணியில் சலியாமல் முயலுகின்றவராய் என்னோடு நிலைத்தலை விரும்புகின்றவராய்த் தியானம் செய்கின்றனர்' என்றும் சொல்லுகிறபடியே தியானம் அர்ச்சனம்

---

1 அவன் தந்தது - அவனாலே கொடுக்கப்பட்டது; இந்த உடல். அடைவிலே கொடுத்தல் - அவன் உடைமை என்ற புத்தியோடு கொடுத்தல். அநுபாயம் - உபாயம் ஆகாது. களவு வெளிப்படும் என்றது, இறைவனுடைய பொருளாகிய ஆன்மாவை அபகரித்தலாகிற குற்றம் வெளிப்படும் என்றபடி. அதாவது, இந்த ஆன்மாவை அபகரித்தல் அறிவின்மையின் காரியமாகையாலே, அறிவுடையார் நகுவர் என்பது கருத்து.

2 கோதானத்தில் - சௌளத்தில்.

3 'விசித்திரா தேஹ ஸம்பத்திః ஈஶ்வராய நிவேதிதும் பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்த பாதாதி ஸம்யுதா.' என்பது விஷ்ணு தத்வம்.

4 'அந்நாள்' என்பது, திருவாய்மொழி, 3. 2 : 1.

5 'மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு' என்பது ஸ்ரீகீதை, 9 : 31.

6 "ஸததம்கீர்த்த யந்தோமாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதாః" என்பது, ஸ்ரீகீதை, 9 : 14.

வணக்கம் முதலியவைகளாலே அவனுக்குச் சேஷமாம்படி பண்ணுகை என்றபடி. 'அடைவிலே கொடுக்கில்' என்றது, அவனுடைமை என்னும் புத்தியாலே கொடுத்தல் என்றபடி. 'அநுபாயமாம்' என்றது, இப்படிக் கொடுக்கில் அவனுடைமையை அவனுக்கே கொடுத்ததித்தனை ஒழியத் தான் ஒன்று கொடுத்தது அல்லாமையாலே அது பேற்றுக்குச் சாதனம் ஆகாது என்றபடி.

'அடைவு கெடக் கொடுக்கில்' என்றது, 'என்னுடைமை' என்னும் புத்தியால் கொடுத்தால் என்றபடி. இப்படிச் செய்யில், 'களவு வெளிப்படும்' என்றது, பகவானுடைய பொருளைக் களவு செய்தமை வெளியாகும் என்றபடி. [1]இராஜமகேந்திரன் என்னும் ஆபரணத்தை ஒருவரும் அறியாதபடி களவுகண்டு, ஓலக்கத்திலே கொடுக்குமாறு போலேயாகும் [2]இவர்கள் கொடை. (49)

## 130

[3]பர்த்ரு போகத்தை வயிறு வளர்க்கைக்கு
உறுப்பாக்குமா போலே இருவர்க்கும் அவத்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—இன்னமும் பக்தியுபாயத்திற்கு ஒரு குற்றம் சொல்லுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பர்த்ரு போகத்தை வயிறு வளர்க்கைக்கு உறுப்பு ஆக்குமாபோலே' என்றது, மனைவியானவள், [4]தானே

---

[1] இராஜமகேந்திரன் படி - திருவரங்கநாதன் திருமார்பிலே அணிந்துகொள்ளும் ஒரு திரு ஆபரணம். படி - ஆபரணம்.

[2] இவர்கள் என்றது. உபாயாந்தரங்களை அநுஷ்டிக்கின்றவர்களை. கொடை என்றது பக்தி முதலான அநுஷ்டானங்களை.

[3] பர்த்துரு போகம் - கணவனை அநுபவிக்கும் இன்பம். வயிறு வளர்க்கைக்கு - ஜீவனத்திற்கு. இருவர்க்கும் - பக்திமானுக்கும் பகவானுக்கும். அவத்யம் - தாழ்வு. அதாவது, தன் தன்மையையும் போகத்தின் தன்மையையும் அறியாமையால் வருகின்ற குற்றத்திற்குக் காரணமாம் என்றபடி.

[4] 'தானே பிரயோஜனமான' என்றதனை 'இன்பத்தை' என்பதனோடு கூட்டுக. 'தானே பிரயோஜனமான' என்றது, வேறு ஒன்றற்குச் சாதனமாகாமல் தானே பிரயோஜனமாகவிருத்தல் என்றபடி.

பிரயோசனமான கணவனிடத்தில் அநுபவிக்கின்ற இன்பத்தைத் தன்னுடைய வயிறு வளர்ப்புக்கு உறுப்பாக்குமளவில், தன்னை மனைவியாக விரும்பின கணவனுக்கும் அவனுக்கு மனைவி என்று பேரிட்டிருக்கிற தனக்கும் தாழ்வு ஆமாறு போலே என்றபடி. 'இருவர்க்கும் அவத்யம்' என்றது, பகவானுடைய சொரூபம் அழகு முதலான குணங்கள் ஆகிய பெருமைகளை அநுபவித்தலாலே விளைந்த இன்பவடிவான பக்தியை மோக்ஷத்திற்குச் சாதனம் ஆக்குமளவில், தன்னைச் சேஷபூதனாக விரும்பித் தன்னோடே கலந்து பரிமாறின சர்வேச்வரனுக்கும் அவனுக்கு அடியவன் என்று பேரிட்டிருக்கிற தனக்கும் தாழ்வாகத் தலைக் கட்டும் என்றபடி.

"ராத்ரி பர்த்தாவோடே சம்ஸ்லேஷித்து, விடிவோரே கைக் கூலி தரவேணும் என்று வளைக்குமாபோலே, பக்தியை உபாய மாகக் கொள்ளுகை" என்றிறே [1]பிள்ளானும் அருளிச் செய்தது. (50)

## 131

'வேதாந்தங்கள் உபாயமாக விதிக்கிறபடி என்?' என்னில்.

என்பது சூத்திரம்.

அவ:—இப்படி ஆன்மாவின் தன்மைக்கு விரோதம் முதலான குற்றங்களையுடைத்தான இந்தப் பக்தியை, நலத்தைக் கூறுகின்றனவான வேதாந்தங்கள் [2]"பரமாத்மாவை ஓம் என்று தியானிக்க வேண்டும்" என்றும், [3]"பரமாத்மாவையே உலக சரீரனாக உபாசிக்க வேண்டும்" என்றும், [4]"ஓ மாணுக்கனே, அந்தப் பரமாத்மாவே பார்க்கத்தகுந்தவன், கேட்கத்தகுந்தவன்,

---

[1] பிள்ளான் - திருக்குருகைப்பிரான் பிள்ளான்.

[2] "ஓம்இதி ஆத்மாநம் த்யாயத"
என்பது, முண்டகோபநி. 2. 2 : 6.

[3] "ஆத்மாநமேவ லோகமுபாஸீத"
என்பது, பிருஹ. உப. 1. 4 : 15.

[4] ஆத்மாவா அரே த்ரஷ்டவ்யஃ ஶ்ரோதவ்யோ
மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஃ
என்பது, பிருஹ. உப. 4. 4 : 5.

மனனம் செய்யத்தகுந்தவன், மிகவும் தியானிக்கத் தகுந்தவன்'' என்றும் இம்மக்களுக்கு மோக்ஷத்திற்கு உபாயமாக விதிக்கிற தற்குக் காரணத்தை அருளிச்செய்வதாக, அதனை அறிய விரும்புகின்றவனது வினாவினை அநுவதிக்கிறார் இச்சூத்திரத்தால்.
(51)

## 132

[1]ஔஷத சேவை பண்ணாதவர்களுக்கு அபி மதவஸ்துகளிலே அத்தைக் கலசியிடுவாரைப் போலே, ஈச்வரனைக் கலந்து விதிக்கிறவித்தனை.

என்பது சூத்திரம்.

**அவ:**—அதற்குரிய காரணத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'ஔஷத சேவை பண்ணாதவர்களுக்கு அபிமத வஸ்துகளிலே அத்தைக் கலசியிடுவாரைப் போலே' என்றது, நோயால் மிகவும் பீடிக்கப்பட்டவராய்த் திரியாநிற்கச்செய்தே, அந்த நோயினை மிகவிரைவில் போக்கக்கூடிய நம்பத்தக்க மிகச் சிறந்த மருந்தினை உண்ணச் சொன்னால், அதற்கு உடன்படாத இளஞ்சிறார் முதலானவர்களுக்கு, அவர்கள் ஆசைப்பட்டு உண்ணும் பொருள்களிலே அந்த மருந்தினைக் கலந்து இடும் அன்பினையுடைய தாய் முதலானவர்களைப் போலே என்றபடி.

'ஈச்வரனைக் கலந்து விதிக்கிற இத்தனை' என்றது, விரைவிலே சம்சாரமாகிற நோயினைத் தீர்க்கும் சித்தோபாய மாகிற [2]நச்சு மாமருந்தை, தன் முயற்சி இல்லாமை முன்னாக உண்ணும்படி முதலிலே உபதேசித்தால், அநாதியாய் வருகிற

[1] ஔஷதசேவை பண்ணாதவர்களுக்கு - மருந்தினை உண்ணாத குழந்தைகளுக்கு. அபிமதவஸ்து - விருப்பமான பொருள்; வெல்லம் முதலாயின. அத்தை - மருந்தினை. கலசி - கலந்து. கலந்து - பக்தியிலே கலந்து.

"கடுத்தின்னாதாரைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பாரைப் போலே" என்ற களவியலுரை இங்கு நினைக்கத் தகும்.

தன் முயற்சியிலேயே பழகினவர்களை அதிகாரிகளாகக்கொண்டு உபாயாந்தரங்கள் விதிக்கப்படுகின்றன என்ற கருத்தைத் தெரிவிக்க இச்சூத்திரம் எழுந்தது.

[2] 'நச்சுமாமருதை' என்பது, திருவாய்மொழி, 3. 4 : 5.

தன் முயற்சியினுலே செய்து போருகின்ற வாசனையாலே அதற்கு உடன்படாத மக்களையும் விடமாட்டாமையாலே அவர்களுக்கு விருப்பமான தம் முயற்சி உருவமாயிருக்கிற பக்தியிலே அதற்கு [1]அங்கமாகச் சித்தோபாயமான ஈச்வரனைக் கலந்து அத்தகையதான பக்தியை அவர்களுக்கு மோக்ஷத்திற்கு உபாயமாக விதிக்கிறவித்தனை என்றபடி.

உவமானத்தில், வியாதியைப் போக்குவது கலக்கப்படுகின்ற விருப்பமான வெல்லம் முதலிய பொருள் அன்று; அதனுள் இருக்கின்ற மருந்தே நோயினைப் போக்குவதாம். அது போன்று, உபமேயத்திலும் மோக்ஷத்திற்கு உபாயமாவது பக்தியன்று; அதனுள் கலந்திருப்பவனுன ஈச்வரனே மோக்ஷத்திற்கு உபாயமாவன் என்பது [2]சம்பிரதிபந்நம்.

[3]வேறென்றனுடைய கலப்பு இல்லாமல் அதனை நேரே உட்கொள்ளுமிடத்தில் விரைவிலே நோயினைப் போக்கும் மருந்து, விரும்பப்படுகின்ற பொருளிலே கலந்த போது அம் மருந்தே நோயினை நீக்குதற்குப் பல நாள்கள் ஆதலைப் போன்று, பக்தியில் கலந்திருப்பவனுன ஈச்வரனும் மோக்ஷமாகிற பலனைக் கொடுப்பதற்குப் பல காலங்கள் ஆகும். (52)

## 133

**[4]இத்தைப் பிரவர்த்திப்பித்தது பரஹிம்சையை நிவர்த்திப்பிக்கைக்காக.**

என்பது சூத்திரம்.

---

[1] பக்தியைத் தோற்றுவிக்கையாலே சித்தோபாயம் அங்கமாகவும், தோற்றுவிக்கப்பட்டதாகையாலே பக்தி அங்கியாகவும் கூறப்படுகின்றன.

[2] சம்பிரதிபந்நம் - தடையில்லாமல் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம்.

[3] மருந்தினை இனிய பொருளோடு கலவாமல் அப்படியே உண்டால் நோயினை விரைவில் போக்கும்; இனிய பொருளோடு கலந்து உண்டால் நோயினைப் போக்குவதற்குப் பல நாள்களாகும். அது போன்று இறைவனைப் பக்தியோடு கலவாமல் பற்றினுல் மரணமானுல் வைகுந்தம் பெறலாம்; பக்தியோடு கலந்து பற்றினுல் பேறு பெறப் பல பிறவிகள் எடுக்கவேண்டும் என்பது ஈற்றிலே உள்ள வாக்கியத்திற்குக் கருத்து.

[4] இத்தை - பக்தி நெறியை. பிரவர்த்திப்பித்தது - சாஸ்திரங்களிலே விதித்தது. பரம் - மேல். ஈண்டு 'ஹிம்சை' என்றது, ஹிம்சித்தலை அங்கமாகவுடைய காமிய கர்மங்களை. காமியம் - சுவர்க்கம்

அவ :—'இனி, இப்படி இதனை விதித்தது [1]கீழ் நின்ற நிலையைக் குலைத்து மேலே கொண்டு போகைக்காகவித்தனை' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இத்தைப் பிரவர்த்திப்பித்தது' என்றது, [2]சாஸ்திரமானது [3]"மூன்று குணங்களையுடைய ஆன்மாக்களை விஷயமாகவுடையவை வேதங்கள்" என்கிறபடியே பெற்ற தாயானவள் குருடர் செவிடர் முதலான அழிந்த கரணங்களையுடையவர்களோடு படுகரணங்களையுடையவர்களோடு வாசி அற அன்பினையுடையவளாயிருக்குமாறு போலே, ஆயிரம் தாயர்களைக்காட்டிலும் ஆயிரம் தந்தையர்களைக்காட்டிலும் மிக்க அன்பினையுடையதாகையாலே, தமோகுண மிக்கவர்களோடு

---

முதலான போகங்கள். ஹிம்சையாவது, மேலே துன்பத்தைக் கொடுக்கக்கூடிய செயலை முன்னிட்டுச் செய்யும் செயல். இங்கு யாகத்தில் கொல்லப்படும் பசுவிற்குப் பின்னே துன்பம் இல்லையாயினும் அதற்கு நேரும் மரணத்தைக் குறித்து 'ஹிம்சை' என்கிறது. நிவர்த்திப்பிக்கை - விலக்குதல்.

[1] 'கீழ் நின்ற நிலை' என்றது, சேனயாகம் முதலியவற்றைக் குறித்தது.

[2] சாஸ்திரமானது மிக்க அன்பினையுடையதாகையாலே, விடுதற்கு மாட்டாமையாலே, சாதனங்களையும் உபதேசித்து, ஏற்றுவதற்கு நடத்துகிறதாகையாலே, சாதனங்களையும் விதித்து, விடுவிக்கக் கூடியதாகவிருக்கும் என முடிக்க.

அதாவது, ரஜோகுணமுடையவர்களுக்காக விதிக்கப்பட்ட அக்நீஷோமீயம் முதலிய காமிய கர்மங்கள், சத்துவ குணமுடையவர்களுக்கு ஆகாவாதலின், அவர்களுக்கு அதனை விலக்குவதற்காக பக்தி நெறி விதிக்கப்பட்டது என்றபடி.

மக்கள், தாமசர், இராஜசர், சாத்விகர், பரம சாத்விகர் என்று இப்படிப் பல வகைப்பட்டிருப்பவர்கள். இவர்களுள், தாமசர்க்காகச் சேன விதியாகிற அபிசார கர்மத்தை விதித்தது; இராஜசர்க்காக அக்நீஷோமீயம் முதலிய காமிய கர்மங்களை விதித்தது; சாத்விகர்க்குப் பக்தி மார்க்கத்தை விதித்தது; பரமசாத்விகர்க்குப் பிரபத்தி மார்க்கத்தை விதித்தது சாஸ்திரம். இவற்றுள், தாமசர்க்கு விதிக்கப்பட்ட சேனயாகம் இராஜசர்க்கு விலக்கப்பட்டது; இராஜசர்க்கு விதிக்கப்பட்ட காமிய கர்மங்கள் சாத்விகர்க்கு விலக்கப்பட்டன; சாத்விகர்க்கு விதிக்கப்பட்ட பக்திமார்க்கம் பரமசாத்விகர்க்கு விலக்கப்பட்டது என்க.

[3] "த்ரைகுண்ய விஷயா வேதா:"
என்பது ஸ்ரீகீதை, 2 : 45.

ரஜோகுண மிக்கவர்களோடு சத்துவகுண மிக்கவர்களோடு வாசி அற, அவர்கள் அல்லாத வழியிலே சென்று அழியும்படி விடுதற்கு மாட்டாமையாலே, அவ்வவர்களுடைய குணங்களுக்குத் தகுதியாகப் புருஷார்த்தங்களையும் அவற்றைப் பெறுதற்குரிய சாதனங்களையும் உபதேசித்து, கொள்கொம்பிலே ஏற்றுதற்குச் சுள்ளிக்கால் நடுவாரைப் போன்று, இந்த இந்த வழிகளாலே தன்னுடைய தாத்பர்ய அம்சத்திலே ஏற்றுவதற்காக நடத்துகிறதாகையாலே, சியேன விதி தொடங்கிப் பிரபத்தியளவாக வருமளவும் மக்கள் நின்ற நின்ற நிலைகளுக்கு ஈடாக மேலே மேலே புருஷார்த்தங்களையும் அவற்றிற்குரிய சாதனங்களையும் விதித்துக் கீழே கீழே உள்ளனவற்றை விடுவிக்கக் கூடியதாக இருக்கும். ஆகையாலே இந்தப் பக்தி நெறியை விதித்தது 'பரஹிம்சையை நிவர்த்திப்பிக்கைக்காக' என்றபடி. பரஹிம்சையை விலக்குவிக்கைக்காக என்றவாறு.

'பரஹிம்சை' என்றது, மேலாக விதித்த ஹிம்சை என்றபடி. பரகதி, பரதேவதை என்ற இடங்களில் பரம் என்ற சொல் மேலான என்று பொருள்படுமாறு போலே. அதாவது, சியேனவிதிக்கு மேலே விதிக்கப்பட்ட [1]பசுவாலம்பனம் முதலியவற்றைச் சொன்னபடி. [2]'ஆயின், அதனை 'ஹிம்சை' என்னலாமோ?' எனின், [3]'விஹித ஹிம்சை' என்னக்கடவதிறே. [4]'அக்நீஷோமீயம் பசுமாலபேத' என்கிறவிடத்தில் 'ஆலம்ப'

---

[1] பசுவாலம்பநம் - பசுவைக் கொல்லுதல். இதனால் காமிய கர்மங்களைக் கூறியபடி. பசு - நாற்கால் விலங்கு. இங்கு யாட்டினைக் குறித்தது.

[2] 'யாகத்தில் கொல்லப்படும் பசு சுவர்க்கத்தையன்றோ அடைகின்றது? அங்ஙனமிருக்க, அதனை 'ஹிம்சை' என்ற சொல்லால் கூறலாமோ?' எனின் என்றபடி.

[3] விஹித ஹிம்சை - விதிக்கப்பட்ட ஹிம்சை.

"அக்நீஷோமீய ஹிம்ஸா நிஜவிதி விஹிதா"

என்ற தத்வசார வாக்கியத்தின் பொருளைக் கூறியபடி. பின் சூத்திரத்தில் உள்ளதைக் கூறியவாறுமாம்.

[4] 'ஆலம்பநம்' என்ற சொல் ஹிம்சை என்ற பொருளைக் காட்டுதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'அக்நீஷோமீயம்' என்று தொடங்கி. அக்நீஷோமீயத்திற்குரிய பசுவைக் கொல்லுதல் என்பது இதன் பொருள்.

என்ற சொல் [1]"ஆலம்ப: ஸ்பர்ச ஹிம்ஸயோ:" என்கையாலே ஹிம்சை என்ற பொருளைக் கூறுகின்றதிறே. [2]இதனால் காமிய கர்மத்தைக் கூறியபடி. [3]"பூர்வவிஹித ஹிம்சை" என்று சியேன விதியைச் சொல்லுகையாலும் அதற்கு மேலே சொல்லப்பட்டதான காமியமே இவ்விடத்தில் சொல்லப்பட்டதாம்.

[4]அன்றிக்கே, விதிக்கப்பட்டவையேயாகிலும், பகவானுக்குச் சேஷம் என்கிற ஞானம் முன்னாக வேறு பயன் ஒன்றையும் கருதாதவனாய்க்கொண்டு, அக்நி இந்திரன் முதலான தேவர்களுக்கு அந்தர்யாமியாக இருக்கின்ற இறைவனுடைய ஆராதனமாகவே செய்யும் பசுஹிம்சை முதலியவற்றோடு கூடிய யாகம் முதலான கர்மங்களை நோக்க, சுவதந்திரனாய்க்கொண்டு சுவர்க்கம் முதலான பலன்களுக்குச் சாதனமாக அக்நி இந்திரன் முதலான தேவர்களையே நோக்கிச் செய்யும் பசுஹிம்சை முதலியவற்றோடு கூடிய காமிய கர்மங்கள் [5]விசேஷஜ்ஞர்களுக்குப் பரஹிம்சையைப் போன்றது என்னலாம்படி மிகமிகத் தாழ்ந்தவைகளாக இருக்கையாலே இந்தத்

---

[1] இது, அமரகோசம். ஆலம்ப: என்ற சொல்லானது ஸ்பரிசம், ஹிம்சை என்ற பொருள்களைக் காட்டும் என்பது இதன் பொருள்.

[2] சூத்திரத்தில் உள்ள 'பரஹிம்சை' என்ற சொல்லானது காமிய கர்மங்களைக் காட்டுகிறது என்றபடி.

[3] பரஹிம்சை என்ற சொல்லானது காமிய கர்மங்களைக் காட்டுகிறது என்பதற்குப் பிரமாணம் காட்டி முடிக்கிறார் 'பூர்வவிஹித ஹிம்சை' என்று தொடங்கி. இது மேல் சூத்திரத்தில் உள்ள தொடர்மொழி.

[4] காமிய கர்மங்களைப் 'பரஹிம்சை' என்ற சொல்லால் குறித்ததற்கு வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. இப்பொருளுக்குப் பரஹிம்சையைப் போன்றது என்பது பொருள். இங்குப் பரம் என்ற சொல் உயர்ந்த என்ற பொருளைக் காட்டி, தாழ்விலே உயர்ச்சியைக் குறிக்கின்றது. மிகத் தாழ்ந்தது என்றபடி. முதற்பொருளில் இலக்ஷணாவிருத்தியாலே காமிய கர்மங்களைக் காட்டுகிறது. இரண்டாவது பொருளில் ஒப்புமை விருத்தியாலே காமிய கர்மங்களைக் காட்டுகிறது.

[5] விசேஷஜ்ஞர்கள் - உபாசன அதிகாரமான பகவத் சேஷத்துவம் முதலிய ஞானத்தையுடையவர்கள்.

தன்மையைக்கொண்டு அந்தக் காமிய கர்மங்களைப் 'பரஹிம்சை' என்று அருளிச்செய்தாராகவுமாம்.

[1] சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்டதுமாய்ப் பகவான் ஒருவனையே விஷயமாகக் கொண்டிருக்கிற பக்தியை ஞானிகளுக்கு அபாயம் என்றதைப்போன்று [2] இதுவும் அதிகாரிகளின் நிலையினைக் கொண்டு சொல்லலாம் அன்றோ ? [3] "நீ ஆன்மாவின் தன்மைக்கு ஒவ்வாதனவான பாதகங்களில் அச்சமுடையவனாகில்" என்று மற்றைய உபாயத்தை பாதகமாகச் சொல்லிற்றிறே தர்மதேவதையும். போகத்திலே இச்சையுடையவர்கள் விரும்பிச் செய்யவேண்டியதான புண்ணியந்தானே மோக்ஷத்திலே இச்சையுடையவர்களுக்குச் செய்யத் தகாததான பாபம் என்று சொல்லப்படுகின்றதே. ஆக, எல்லாவற்றாலும் இவ்விடத்தில் காமியகர்மத்தையே சொல்லுகிறது. [4] இங்ஙனம் பொருள் கொள்ளுதற்குக் காரணம், [5] 'உபாசநவிதிக்கு நிவர்த்யம் காமிய கர்மமாக இவர்தாமே 19 [6] 'பரந்த ரஹஸ்யத்'திலே அருளிச் செய்கையாலே என்க. (53)

---

[1] காமிய கர்மங்களைப் பரஹிம்சை என்ற சொல்லால் அருளிச் செய்ததற்கு மூன்றாவதாக வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'சாஸ்திரங்களாலே' என்று தொடங்கி. இப்பொருளுக்கு முக்கிய விருத்தியாலே காமிய கர்மங்களைப் 'பரஹிம்சை' என்ற சொல்லால் குறிக்கிறார் என்பது கருத்து.

[2] இதுவும் - காமிய கர்மங்களைப் பரஹிம்சை என்ற சொல்லால் குறித்ததுவும்.

[3] அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நீ ஆன்மாவின்' என்று தொடங்கி.

"அதபாதக பீதஸ்த்வம் ஸர்வபாவேந பாரத"

என்பது பாரதம். இது தரும புத்திரனைப் பார்த்து இயம தருமன் கூறியது.

[4] 'இங்ஙனம் பொருள் கொள்ளுதற்குக் காரணம்' என்றது, பரஹிம்சை என்பதற்குக் காமிய கர்மங்கள் என்று பொருள் கொள்ளுதற்குக் காரணம் என்றபடி.

[5] பக்தி மார்க்கத்திற்கு நிவர்த்திக்கப்படுவது காமியகர்மம் என்பது இதன் பொருள்.

[6] பரந்த ரஹஸ்யம் என்பது இந்நூலாசிரியர் அருளிச்செய்த பதினெட்டுப் பிரபந்தங்களுள் ஒன்று. பரந்தபடி என்று வழங்கப்படுகிறது.

## 134

[1] இதுதான் பூர்வவிஹித ஹிம்சை போலே
விதி நிஷேதங்கள் இரண்டுக்கும் குறையில்லை.
என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனால், இப்படி விதித்ததனைப் பின் விலக்குவது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இதுதான்' என்றது, மேலே கூறிய பக்தியை. 'பூர்வ விஹித ஹிம்சை போலே' என்றது, [2] "பகைவனைக் கொல்ல நினைத்தவன் சியேநம் என்ற யாகத்தைச் செய்ய வேண்டும்" என்று முதலிலே விதிக்கப்பட்ட [3] ஆபிசாரகர்மத்தைப்போலே என்றபடி. அதாவது, அது தமோகுணம் மிக்கவராய் நாஸ்திகராயிருப்பாரைப்பற்ற விதிக்கப்பட்டு, ஆஸ்திகராய்க் [4] காரீரி முதலான காமிய கர்மங்களிலே இழிகைக்குத் தக்கவரான இரஜோ குணம் மிக்கவரைப் பற்ற விலக்கப்படுகிறது போன்று என்றபடி. 'விதி நிஷேதங்கள் இரண்டுக்கும் குறையில்லை' என்றது, இப்பக்தியும், சுவாதந்திரியத்தையும் [5] அந்நிய சேஷத்வத்தையும் நீக்குதல் முன்னாகப் பகவானுக்குரிய அடிமையிலே ஊன்றுகைக்குத் தக்கவரான சத்துவகுணம் மிக்கவரைப் பற்ற விதிக்கப்பட்டு, பாரதந்திரிய ஞானம் பிறந்து பகவானாகிய

---

[1] இதுதான் - இந்தப் பக்திக்கு. பூர்வ விஹித ஹிம்சைபோலே - முதலிலே விதிக்கப்பட்ட சேநயாகத்திற்கு விதிவிலக்குப்போலே. விதி - செய்வதற்கு விதித்தல். நிஷேதம் - கூடாது என்று விலக்குதல். குறை இல்லை - குற்றம் இல்லை. என்றது, சேநயாகமானது தமோகுணம் வாய்ந்த சிலர்க்காக விதிக்கப்பட்டு, ரஜோகுணம் வாய்ந்த சிலரை நோக்கி விலக்கப்படுதல் போன்று, பக்தியும் சத்துவகுணமுடையவர்களுக்காக விதிக்கப்பட்டது; பரம சாத்விகர்களுக்கு விலக்கப்படுகின்றது என்க. பூர்வவிஹித ஹிம்சைபோலே இதுதான் விதி நிஷேதங்கள் இரண்டுக்கும் குறை இல்லை என முடிக்க. இதுதான் - இதற்கும். இதற்கும் குறை இல்லை எனப் பூட்டுவிற் பொருள்கோளாகக் கொள்க.

[2] "ச்யேநேநாபிசரந்—யஜேத" என்பது, வேதம்.

[3] ஆபிசாரகர்மம் - அபிசாரத்தைப் பயனாகவுடைய கர்மம். அபிசாரம் - கொலை. அபிசரன் - பகைவனைக் கொல்ல விரும்புகிறவன்.

[4] காரீரி - மழையின்பொருட்டுச் செய்யப்படும் கர்மம்.

[5] அந்நிய சேஷத்வம் - பிறருக்கு அடிமைப்பட்டிருத்தல்.

உபாயத்தின் தன்மையிலே ஊன்றுகைக்குத் தக்கவரான பரம சத்துவநிஷ்டரைப் பற்ற விலக்கப்படவும் குறையில்லை என்றபடி. (54)

## 135

[1] அத்தைச் சாஸ்திர விசுவாசத்துக்காக விதித்தது; இத்தைச் சொரூபவிசுவாசத்துக்காக விதித்தது.

என்பது சூத்திரம்.

**அவ :** 'இப்படி விலக்கப்படுமவையான இவற்றை அடியிலே எதற்காக விதிக்க வேண்டும்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'அத்தைச் சாஸ்திர விசுவாசத்துக்காக விதித்தது' என்றது, [2] 'அபிசாரயாகத்தை விதிக்கும் சுருதியானது சாஸ்திரத்தில் நம்பிக்கையில்லாதவர்களுக்கு நம்பிக்கையை உண்டாக்கி வசமாக்கும் வழி' என்கிறபடியே [3] ஆபிசார கர்மத்தை விதித்தது சாஸ்திரத்தை இல்லை என்றிருக்கும் நாஸ்திகனுக்குச் சாஸ்திரத்தில் நம்பிக்கை பிறப்பதற்காக என்றபடி. 'இத்தை ஸ்வரூப விசுவாசத்துக்காக விதித்தது' என்றது, பக்தியை விதித்தது [4] தன்னைத் தனக்குரியவன் என்றும் பிறருக்கு அடிமைப்பட்டவன் என்றும் மயங்கிப் போந்த அறிவுடைய ஒருவனுக்கு அவை இரண்டும் வந்தேறி; பகவானுக்கு அடிமைப் பட்டிருத்தலே நிலை நின்ற தன்மை என்று தன் சொரூபத்தில் நம்பிக்கை பிறப்பதற்காக என்றபடி. (55)

---

[1] அத்தை - சேனயாகத்தை. இத்தை - உபாசனமாகிற பக்தியை. 'சொரூபம்' என்றது ஈண்டு ஆன்மாவிற்கு நிரூபக தர்மமான பகவத் சேஷத்வத்தை. விசுவாசம் - நம்பிக்கை.

[2] "சடசித்த சாஸ்திரவசதஃ உபாய: அபிசார சுருதி:" என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 20.

[3] ஆபிசாரகர்மம் - கொலைத்தொழில்.

[4] தன்னைச் சுவதந்திரன் என்றும் அந்யசேஷ பூதன் என்றும் மயங்கிப் போந்த என்றபடி. ஆபிசார கர்மத்திற்குப் பகையைக் கோற லும் உபாசனத்திற்கு மோக்ஷமும் பலமாகவிருப்பினும், முக்கியமாக, ஆபிசார கர்மத்திற்குச் சாஸ்திரங்களிலே நம்பிக்கையையுண்டாக்கு தலும், உபாசனத்திற்குச் சொரூப ஞானத்தை உண்டாக்குதலும் நோக்கம் என்றபடி.

## 136

அது [1]தோல் புரையே போம்; இது மர்ம ஸ்பர்சி.

என்பது சூத்திரம்.

**அவ:**—'இப்படி ஒவ்வொரு நம்பிக்கைக்காக விதித்து விலக்கிருதல் ஒத்திருந்ததாகிலும், இந்தப் பக்தியை விடாமல் பற்றி நின்றால், ஆபிசார கர்மம் போலே இது கொடியது அன்றே?' என்ன, 'அதைக்காட்டிலும் கொடியது இது' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'அது தோல் புரையே போம்' என்றது, பரஹிம்சையைச் செய்தற்குரிய அந்த அபிசாரகர்மம் தேகத்தையே ஆன்மாவாக அபிமானித்திருக்குமவனுடைய செயலாய், சரீரத்தோடு கூடிய ஆன்மாவிற்கு விரோதியாய், அதனால் வரும் பலனும் துக்கத்தைச் சிறிது அநுபவிக்கிற அளவேயாய்க் கொண்டு மேலெழப் போகும் என்றபடி. 'இது மர்மஸ்பர்சி' என்றது, அகங்காரத்தை உள்ளேயுடையதான இந்தப் பக்தியானது, ஆன்மஞானம் பிறந்தவன் செயலாய் ஆன்மாவிற்கு விரோதியாய்ப் பகவானுக்கே பரதந்திரப்பட்டிருக்கின்ற ஆன்மாவின் தன்மையை அழிக்கக்கூடியதாகையாலே, அதனிலும் கொடிது இது என்றபடி. (56)

## 137

[2] இதுதான் கர்ம சாத்தியமாகையாலே துஷ்கரமுமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

---

[1] தோல்புரையேபோம் - மேலெழப்போகும்; சரீரத்தோடேபோகும். அதாவது, மிகச்சிறிய துன்பத்தை விளைப்பது என்றபடி. 'அது' என்றது சேநயாகமாகிற ஆபிசார கர்மத்தை. இது என்றது உபாசனமாகிற பக்தியை. மர்மஸ்பர்சி - மர்மத்திலே தொடுவது. மர்மம் என்பது, எந்த இடத்தில் தொட்டால் ஆன்மாவிற்கு மரணம் ஏற்படுகிறதோ அந்த இடத்திற்குப் பெயர். மிகப்பெரிய துன்பத்தை விளைப்பது இது என்றபடி.

[2] இதுதான் - இந்த உபாசனமாகிற பக்திதான். கர்மம் - தவம், தானம், விரதம் முதலிய கர்மங்கள். சாத்தியமாகையாலே - அவற்றைச் செய்வதனால் சாதிக்கப்படுமதாகையாலே. துஷ்கரமுமாய் இருக்கும் -

அவ :—இவ்வளவே அன்று ; இந்தப் பக்தியானது செய்தற்கு அருமையுமாகும் என்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ இதுதான் ’ என்றது, ஆன்மாவிற்கு விரோதியாகிற இந்தப் பக்தியானது என்றபடி. ‘கர்மசாத்தியமாகையாலே’ என்றது, [1] “வேள்வியினுலும் தானத்தினுலும் தவத்தினுலும் விரதங்களினுலும் பரம்பொருள் விஷயமான ஞானமுள்ளவர்கள் உபாசிக்கிறுர்கள்” என்றும், [2] “கர்மங்களாலே உபாசனத்திற்கு விரோதிகளான பாவங்களைப் போக்கி உபாசனத்தாலே மோக்ஷத்தை அடைகிறுன்” என்றும், [3] “யாகம் முதலிய கர்மங்களை அங்கங்களோடு செய்ய வேண்டும் என்றும் வேதங்களில் சொல்லியிருப்பதனுல் பக்தியோகமானது அங்கங்களை விரும்புகிறது ; [4] குதிரையைப் போலே” என்றும், [5] “செய்யப்படுகின்ற கர்மங்கள் ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் நீக்கக் கூடிய சாதனங்களாகும் ; ஞானமே மோக்ஷத்தை அடைதற்குரிய உபாயமாகும்” என்றும், [6] “கர்மங்களைச் செய்வதனுலே பாவங்கள் நீங்குகின்றன ; அதனுலே செய்தற்கு அரியதாகவுமிருக்கும். ‘இதுதான் இருக்கும்’ என முடிக்க.

---

கர்மங்களினுடைய செய்தற்கு அருமையைப் பக்தியின்மேல் ஏற்றி ‘இதுதான் துஷ்கரமுமாயிருக்கும்’ என்கிறுர். ‘துஷ்கரமும்’ என்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை ; சொரூப விருத்தமாதல், அபாயமாதல், பயத்திற்குக் காரணமாதல், சோகத்திற்குக் காரணமாதல், அகங்காரத்தோடு கலந்திருத்தல், அவத்யகரமாதல், பலத்திற்கு ஒப்பாகாமை என்பனவாக மேலே கூறிய குற்றங்களைத் தழுவுகின்றது.

1 “யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந ப்ராஹ்மணு விவிதிஷந்தி” என்பது பிரு. உப.

2 “அவித்யயா மிருத்யும் தீர்த்வா வித்யயாऽம் ருதம் அஶ்நுதே” என்பது, மைத்ரீ. உப.

3 “ஸர்வாபேக்ஷாச யஜ்ஞாதி ஶ்ருதேர ச்வவத்” என்பது, பிரமசூத்திரம். 3.4 : 26.

4 ‘குதிரையைப்போலே’ என்றது, குதிரைக்குச் சேணம், சிறுவாய்க் கயிறு முதலிய அங்கங்கள் வேண்டியிருத்தல் போன்று பக்திக்கும் கர்மம் முதலான அங்கங்கள் வேண்டியிராநின்றன என்றபடி.

5 “கஷாயபக்திঃ கர்மாணி ஜ்ஞாநம்து பரமாகதிঃ” என்பது, பிரமாணம்.

6 “கஷாயே கர்மபிঃ பக்வே ததோ ஜ்ஞாநம்ப்ர வர்ததே” என்பது, பிரமாணம்.

ஞானம் உண்டாகின்றது'' என்றும், [1] ''ஆயிரம் பிறவிகளில் செய்யப்படுகின்ற தவத்தினாலும் ஞானத்தாலும் தியானத்தினாலும் மக்களுக்குப் பாவங்கள் அழிந்து கிருஷ்ணனிடத்தில் பக்தி உண்டாகிறது'' என்றும் சொல்லப்படுகிறபடியே சரீரத்தை வருத்திச் செய்யப்படுகின்ற கர்மங்களாலே சாதிக்கப்படுமதாகையாலே என்றபடி. 'துஷ்கரமுமாய் இருக்கும்' என்றது, ஆற்றல் இல்லாதவனான இவனுக்குச் செய்து முடிக்க அரியதாகவும் இருக்கும் என்றபடி.

[2] ஆக, ''பிராபகாந்தர பரித்தியாகத்திற்கும்'' என்றது முதல் இச்சூத்திரமுடிய, பக்தியினுடைய குற்றங்களை விரிவாக எடுத்து அருளிச்செய்தாராயிற்று. (57)

## 188

பிரபத்தியுபாயத்துக்கு [3] இக்குற்றங்கள் ஒன்றும் இல்லை.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படிப் பக்திக்குப் பல வகைப்பட்ட குற்றங்களை அருளிச்செய்தீர்கள்; பிரபத்தியுபாயத்திற்கு ஒரு குற்றமும் இல்லையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இக்குற்றங்கள்' என்றது, சொரூபவிரோதம் முதலாக, துஷ்கரத்வம் இறுதியாக மேலே கூறப்பட்ட குற்றங்கள்

---

[1] ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந சமாதிபி:
நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணேபக்தி: ப்ரஜாயதே.
என்பது, பிரமாணம்.

[2] ஆக, மேலே காட்டிய பிரமாணங்களால் இவன் செய்கின்ற நல்ல காரியங்களால் பாவங்கள் நீங்க, அவை நீங்கியவளவில் இவனிடத்துள்ள ரஜோ குணம் தமோ குணங்கள் நீங்க, அவற்றின் நீக்கத்தினால் பிரமஞானம் உண்டாகின்றது என்பதனைத் தெளிகின்றோம். ஆக, பக்தி தோன்றுதற்குக் கர்மங்கள் காரணம் ஆக இருக்கின்றன என்று தெளிதல் தகும்.

[3] 'இக்குற்றங்கள்' என்றது, சொரூபவிருத்தமாதல், அபாயமாதல், அச்சத்திற்குக் காரணமாதல், சோகத்திற்குக் காரணமாதல், அகங்காரத்தோடு கலந்திருத்தல், அவத்யகரமாதல், பலத்திற்கு ஒப்பாகாமை என்பனவாக 119 முதல் 137 முடிய உள்ள சூத்திரங்களில் கூறியுள்ளனவற்றை.

எல்லாவற்றையும் சுட்டுகிறது. 'ஒன்றும் இல்லை' என்றது, ஒரு குற்றமும் இதன்பால் இல்லை என்றபடி. 'இக்குற்றங்கள் ஒன்றும் இல்லை' என்கையாலே மற்றொரு குற்றம் உண்டு என்னுமிடம் தோற்றுகிறது. அதாவது, இயல்பாகவே தனக்கு உபாயமாகும் தன்மை இல்லாமலிருக்கவும், மேலெழப் பார்க்கும் போது உபாயம் என்று எண்ணுவதற்குத் தகுதியாகவிருத்தல். (58)

## 139

[1]ஆத்மயாதாத்மிய ஞான காரியமாகையாலே
ஸ்வரூபத்துக்கு உசிதமுமாய், 'சிற்ற வேண்டா'
என்கிறபடியே நிவிருத்தி சாத்தியமாகையாலே
சுகரமுமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ:—இதற்கு இக்குற்றங்கள் இல்லை என்னுமதனைத் தெளிவுபடுத்துவதற்காக, சொரூபத்திற்குத் தகுதியாக விருத்தல், எளிதிற்செய்யக் கூடியதாக விருத்தல் ஆகிற இதன் தன்மைகளை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'ஆத்மயாதாத்மிய ஞான காரியமாகையாலே' என்றது, இந்தப் பிரபத்தியானது திருமந்திரத்தில் [2] நடுப்பதத்தில் சொல்லுகிறபடியே, ஆன்மாவினுடைய உண்மை நிலையான பகவத் அத்யந்த பாரதந்திரியத்தை உணருகையாலே வந்தது ஆகையாலே என்றபடி. 'ஸ்வரூபத்துக்கு உசிதமுமாய்' என்றது, அந்தப் பாரதந்திரியமாகிற சொரூபத்திற்குத் தக்கதாக விருத்தல் என்றபடி. [3] 'சிற்ற வேண்டா' என்றது, சிற்றுதல்

---

[1] 'பிரபத்தி, உசிதமுமாய், சுகரமுமாய் இருக்கும்' என முடிக்க. பிரபத்தி என்பதனை அதிகாரத்தால் கொள்க. 'ஆத்மயாதாத்மிய ஞான காரியமாகையாலே' என்றது, ஆன்மாவினுடைய நிலையை உணருகின்ற ஞானத்தினுடைய காரியமாகப் பிரபத்தி இருப்பதனாலே என்றபடி. 'ஸ்வரூபத்திற்கு உசிதமுமாய்' என்றது, அத்யந்த பாரதந்திரியமாகிற ஆன்ம சொரூபத்திற்குத் தக்கதாய் என்றபடி. 'நிவிருத்தி சாத்தியமாகையாலே' என்றது, ஒரு செயலையும் செய்யாமல் நீங்கியிருத்தலாலேயே சாதிக்கப்படுமதாகையாலே என்றபடி. சுகரம் - செய்தற்கு எளியது.

[2] நடுப்பதம் - நமஃ என்ற பதம்.

[3] திருவாய்மொழி, 9.1 : 7.

சிதறுதலாய்ப் பரக்க வேண்டா என்கை. ஒரு செயலும் செய்ய வேண்டா என்றபடி. 'நிவிருத்தி சாத்தியமாகையாலே சுகரமுமாய் இருக்கும்' என்றது, 'பகவத் பிரவிருத்தி விரோதி ஸ்வப் பிரவிருத்தி நிவிருத்தி பிரபத்தி' என்கிறபடியே தற்காப்புச் சம்பந்தமாகத் தான் செய்யும் செயல்களினின்றும் நீங்கியிருத்தலாலே, சாதிக்கப்படுமதாகையாலே எளிதாகச் செய்தலுமாயிருக்கும் என்றபடி.

[1] 'இவை இரண்டனையும் சொன்னதனால் மேலே கூறிய குற்றங்கள் ஒன்றும் இதற்கு இல்லை என்னுமிடம் போதருமாறு யாங்ஙனம்?' எனின், அபாயமாதல், அச்சத்திற்குக் காரணமாதல், சோகத்திற்குக் காரணமாதல், அகங்காரத்தோடு கலந்திருப்பதனாலே விலக்கப்படுவதாதல், தாழ்வினைத் தருதல் என்னுமிவைகள் சொரூபத்திற்கு விரோதமான தன்மைகளைப் பற்றி வருமவையாகையாலும், பலத்திற்கு ஒத்ததாகாமை, இந்தப் பிரபத்தி பலத்திற்குச் சாதனம் அன்றிக்கே சித்தோபாயமே பலத்திற்குச் சாதனமாய் இந்தப் பிரபத்தி அவனைப் பற்றுகிற அளவேயாய் அதிகாரிக்கு விசேஷணமாய் இருப்பதொன்றாகையாலே இதன் பக்கல் அக்குற்றம் வருதற்கு இடம் இல்லாமையாலும் இந்த ஆறு குற்றங்களும் இந்தப் பிரபத்திக்கு இல்லாமை 'ஸ்வரூபத்திற்கு உசிதமாய்' என்றதனாலே போதரும். கர்மத்தினாலே சாதிக்கப்படுவதனாலே வரும் 'செய்தற்கு அருமை' என்னும் குற்றம் இதற்கு இல்லாமை 'நிவிருத்தி சாத்தியமாகையாலே சுகரம்' என்கையாலே தெளிவாம்.

ஆகையால், ஆன்மாவின் தன்மைக்குத் தக்கதாக விருத்தல், செய்தற்கு எளிதாகவிருத்தல் என்னும் இவை இரண்டும் இந்தப் பிரபத்திக்கு உண்டு என்னவே, மேலே கூறிய குற்றங்கள் ஒன்றும் இதற்கு இல்லை என்னுமிடம் தெளிவாயிற்று. (59)

---

[1] 'சொரூபத்திற்குத் தகுந்ததாய்' என்றதனால் சொரூபத்திற்கு விரோதிகளாக மேலே கூறப்பட்ட ஐந்து குற்றங்களும் இதற்கு இல்லை என்றும், 'இது சாதனமாகாமையாலே, என்றதனால் பலத்திற்கு ஒத்ததாகாமை என்ற குற்றம் இதற்கு இல்லை என்றும், 'இது செய்தற்கு எளியது' என்றதனால் செய்தற்கருமை என்ற குற்றம் இதற்கு இல்லை என்றும் விளக்குகிறார் 'இவை இரண்டனையும்' என்று தொடங்கி.

## 140

[1]பூர்ண விஷயமாகையாலே பெருமைக்கு ஈடாகப் பச்சையிடவொண்ணுது.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி உபாயம் அவன் என்று உறுதி பூண்டு தான் செய்யவேண்டும் செயல்களைச் செய்யாது இருந்துவிடல் அமையுமோ? மோக்ஷத்திற்குக் காரணமான சந்தோஷம் அவனுக்கு உண்டாகும்பொருட்டுப் பச்சை சில இட வேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பூர்ண விஷயமாகையாலே பெருமைக்கு ஈடாகப் பச்சை இட ஒண்ணுது' என்றது, உலகத்தில் பச்சை இடுவார் அவரவர்களுடைய தரத்திற்குத் தகுதியாகவே பச்சையிடுவார்கள்; இறைவன் திறத்தில் பச்சை இடப் பார்க்கில், அவனுக்குத் தகுதியாகவே இடவேண்டும்; அவன் அவாப்த சமஸ்தகாமன் ஆகையாலே, எல்லாப் பொருள்களும் நிறையப் பெற்றவன்; ஆதலால், அவனுடைய பெருமைக்குத் தகுதியாக இவனுல் ஒரு பச்சை இடப் போகாது என்றபடி. (60)

## 141

[2]ஆபிமுக்கிய சூசக மாத்திரத்திலே சந்தோஷம் விளையும்.

என்பது சூத்திரம்.

அவ :—[3]'ஆனுல் அவனுக்கு இவனளவில் உவகை விளையும்படி யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

1 பூர்ணவிஷயம் - பூர்ணனுனவன் விஷயமாகையாலே. பூர்ணன் - விரும்பப்படுகின்ற எல்லாப் பொருள்களும் நிறைந்தவன்; இறைவன். பச்சை - உபகாரம்.

2 ஆபிமுக்கியம் - நேர்முகமாகவிருத்தல். அதாவது, மற்றைய உபாயங்களையெல்லாம் விட்டு அவனையே உபாயமாக இசைந்திருத்தல். சூசகம் - அறிகுறி. அதாவது, தற்காப்பில் செயல் அற்றிருக்கையும் உபாயத்தில் உறுதியும்.

3 'ஆனுல்' என்றது, இறைவனுக்குத் தக்கதான செயலை இவனுல் செய்ய இயலாதாயின், இவன் 'உத்தம அதிகாரி' என்று வழங்கப்

வியாக் :—‘ஆபிமுக்கிய சூசக மாத்திரத்திலே சந்தோஷம் விளையும்’ என்றது, அநாதிகாலம் [1]“யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை” ஏறிட்டுக்கொண்டு அவன்பால் அன்பு இல்லாதவனாய்ப் போந்த இவன் அந்நினைவு குலைந்து அவன்பால் அன்புடையனானமைக்கு அறிகுறியானதொரு செயல் பெற்ற அளவிலே, இத்துணைக்காலம் அன்பு இல்லாதவனாய்ப் போந்தவன் இன்று அன்புடையவனாகப் பெறுவதே என்று அவன் திருவுள்ளம் மிகவும் உகக்கும் என்றபடி. (61)

## 142

[2]பூர்த்தி கை வாங்காதே மேல் விழுகைக்கு ஏது இத்தனை.

என்பது சூத்திரம்.

அவ :—‘அவன் அப்படியிருந்தாலும், அவன் நிறைவானது, கைம்முதல் ஒன்றும் இல்லாத நம்மால் அவனை உகப்பித்து அணுகப்போகாது என்று இவன் பின் வாங்கும்படி பண்ணுதோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘பூர்த்தி கை வாங்காதே மேல் விழுகைக்கு ஏது இத்தனை’ என்றது, அவனுடைய [3]அவாப்த சமஸ்த காமனாகவிருக்கும் தன்மை, இறைவனைப் பற்றுவதற்கு விரும்பி வந்த இவன், நம்மால் அவனை ஒருபடியாலும் சந்தோஷிப்பிக்கப்

---

படுதற்குக் காரணமான இறைவன் பிரீதிக்கு இலக்காம்படி யாங்ஙனம்?’ எனின் என்றபடி. ஈண்டு ‘உவகை’ என்றது, இறைவனுடைய பிரீதியைக் குறித்தது. இது, மோக்ஷத்திற்குக் காரணமான பிரீதி அன்று. சுயம் பிரயோஜனமானது.

[1] திருவிருத்தம், 96.

[2] பூர்த்தி - நிறைவு. ‘மேல் விழுகை’ என்பதற்கு இவன்மேல் விழுந்து பற்றுதற்கும், அவன்மேல் விழுந்து அங்கீகரித்தற்கும் என இரு வகைப் பொருளும் கொள்க. ஏது - காரணம்.

இச்சூத்திரத்திற்கு இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருள், சேதனன் பின் வாங்காமல் இறைவனைப் பற்றுதலில் நோக்கு. இரண்டாவது பொருள், இறைவன் உபேக்ஷை செய்யாமல் இவனை அங்கீகரித்தலில் நோக்கு.

[3] அவாப்தசமஸ்தகாமன் - விரும்பப்படுகின்ற பொருள்கள் எல்லாம் குறைவின்றி நிறைந்திருக்கப் பெற்றவன்.

போகாது என்று அவனைப் பற்றுதலினின்றும் மீளுதல் செய்யாமல் நாம் இட்டது கொண்டு மனம் நிறைந்தவன் ஆக வேண்டாதபடி எல்லாம் நிறைந்தவன் ஆகையாலே, நம்பக்கல் பெற்றது கொண்டு சந்தோஷிக்கும் என்று விரும்பிப் பற்றுகைக்கும் காரணமாமித்தனை என்றபடி.

'அன்றிக்கே, அவன் பூர்த்தி அவனை இப்படிச் சந்தோஷிக்க ஒட்டுமோ? உபேக்ஷித்துப் பின் வாங்கப் பண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறாராகவுமாம். அதாவது, அவனுடைய பூர்த்தியானது, 'இவன் பச்சையிட்டிலன்' என்று வெறுத்து அங்கீகரிக்கையினின்றும் மீளாமல், 'அன்புடையன் என்பதற்கு வேண்டிய அறிகுறி மாத்திரத்திற்கு மேற்பட நமக்கு இவன் செய்ய வேண்டுவன சில உண்டோ?' என்று விரும்பிக் கைக்கொள்ளுதற்குக் காரணமாம் இத்தனை என்கை. (62)

## 143

[1] 'பத்ரம் புஷ்பம்', 'அந்யத் பூர்ணாத்',
'புரிவதுவும் புகைபூவே'.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி இவனுடைய சிறிய செயல்களுக்கும் அவன் மகிழ்ச்சி கொள்ளுகிறவன் என்பதற்குப் பிரமாணம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[2] 'பத்ரம் புஷ்பம்' இலையையாகவுமாம், புஷ்பத்தையாகவுமாம், பழத்தையாகவுமாம், தண்ணீரையாகவுமாம், யாவன் ஒருவன் எனக்குப் பக்தியாலே தருகிறான்? வேறொரு பயனையும் கருதாமையாகிற தூய்மை பொருந்திய மனத்தையுடையவனான அவனுடைய அப்படிப்பட்ட பக்தியோடே தரப்பட்ட அதனை அவாப்த சமஸ்தகாமனாயிருக்கிற நான், அவன்

---

[1] "பத்ரம் புஷ்பம்" என்பதும், "அந்யத்பூர்ணாத்" என்பதும் ஒவ்வொரு சுலோகத்தின் முதல் அடியிலுள்ள முதற்சீர்கள். 'புரிவதும்' என்பது திருவாய்மொழியில் ஒரு பாசுரத்தின் ஈற்றடி.

[2] பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி
தததஹம் பக்தி உபஹ்ருதம் அஶ்நாமி ப்ரயதாத்மந:

என்பது, ஸ்ரீகீதை, 9 : 26. ஈண்டு 'இலை' என்றது, உண்ணும் கலத்தை. புஷ்பம் என்றது, அலங்காரத்துக்கு இடும் பூமாலையை.

பக்தியாலே கலங்கித் தருமாறு போலே, [1] அளவு கடந்த காதலாலே கலங்கி அடைவு கெட ஏற்றுக்கொள்வன்' என்று [2] தானே அருளிச்செய்தான்.

[3] அந்யத் பூர்ணாத்—ஸ்ரீ தூது எழுந்தருளுகிற காலத்தில், திருதராஷ்டிரன் 'பாண்டவர் திறத்தில் பக்ஷபாதியாயிருக்கிற கிருஷ்ணன் வாராநின்றான்; அவனுக்குச் சில நாட்டையும் கொடுத்துப் பொன்னையும் கொடுத்து நம்பக்கல் சேர்த்துக் கொள்வோம்' என்பது போன்ற சில வார்த்தைகளைச் சொல்ல, நினைவும் செயலும் ஒத்திராத வஞ்சகனான அவன் கருத்தை அறிந்த சஞ்சயன், 'வருகிறவன் அங்ஙன் ஒத்தவன் அல்லன் காண்; அவனுக்கு வேண்டுவது இவ்வளவு' என்கிறான்; அதாவது தான் குடிக்கும் தண்ணீரை ஒரு குடத்திலே நிறைத்துக் குளிர வைக்கக் கடவனே, அதனை அவன் வரும் வழியிலே வாசலிலே வைக்கவமையும்; அதற்குமேல் ஒன்றும் வேண்டா; தன் வீட்டிலே விருந்து வந்து புகுந்தால் காலைக் கழுவவேண்டும் என்று சாமானிய சாஸ்திரம் விதித்து வைத்ததன்றே? அதற்குத் தகுதியாக அவன் திருவடிகளை விளக்க அமையும்; அவனை வாசிக்குச் சிறப்பாக ஒன்றும் செய்ய வேண்டா; நெடுந்தூரம் வந்தவனை நலம் விசாரிப்பது என்பது ஒன்று உண்டே? அதைப் போன்று, ஓர் இன்சொல் சொல்ல அமையும்; ஏற்றமாக ஒன்றும் வேண்டா. இவ்வளவுகளை ஒழிய மற்றொன்றையும் இச்சியான் காண்,'' என்கை.

இதனால், 'நீ கொடுக்க நினைக்கிற நாட்டையும் பொன்னையும் அவன் ஒரு பொருளாக நினைத்திருக்குமோ? வல்லையாகில் உன்னுடைய அன்புடைமைக்கு அறிகுறியாக இவ்வளவுகளைச் செய்யப்பார்' என்கிறான் என்றபடி.

---

1 பழத்தையும் தண்ணீரையும் உண்ணலாம்; இலையையும் பூவையும் உண்கிறேன் என்கையாலே அவனுடைய அளவு கடந்த காதல் வெளியாகின்றது.

2 'தானே அருளிச் செய்தான்' என்றது ஸ்ரீபாகவதத்திலும் ஸ்ரீ கீதையிலும் அருளிச்செய்தான் என்றபடி. இந்த இரண்டு இடங்களையும் குறிப்பதற்காகவே 'ஸ்ரீகீதையில்' என்னாது, பொதுவாகத் 'தானே அருளிச்செய்தான்' என்கிறார்.

3 அந்யத் பூர்ணாத்அபாம் கும்பாதந்யத் பாதாவநேஜநாத்
அந்யத்குசல ஸம்ப்ரஶ்நாத் நசேச்சதி ஜநார்தந:
என்பது மகாபாரதம், உத். பர்.

[1] புரிவதுவும் புகைபூவே - 'பரிவதில் ஈசனே' என்று தொடங்கிப் 'புரிவதுவும் புகைபூவே' என்று 'ஹேயப்பிரத்ய நீகனான சர்வேச்வரனைச் சம்சாரத்தினின்றும் நீங்கினவர்களாய் அநுபவித்து அவ்வநுபவத்தினின்றும் உண்டான பிரீதியாலே [2] "இந்தச் சாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்" என்கிற படியே பாடி ஆன்ம சொரூபம் விரிவடைதலைப் பெறவேண்டி யிருப்பீர், ஆராதிப்பதற்கு வேண்டிய பொருள்களின் குறைவு பார்த்து அகலுகை தவிர்ந்து வாசனைப்பொருள் கலவாத தண்ணீரை ஏதேனும் ஒருபடியாக விட்டு, பின்னை அவனுக்கு அருள்கொடையாகக் கொடுப்பதுவும் [3] ஏதேனும் ஒருபுகையும் ஒருபூவும்; இவ்வளவே அமையும் கிடிகோள் அவனுக்கு என்று சுகமாக ஆராதிக்கப்படுமவனாக இருக்கும் அவனுடைய தன்மை யைத் தெளிவாக ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. (63)

## 144

**[4] புல்லைக் காட்டியழைத்துப் புல்லை இடு வாரைப்போலே, பல சாதனங்களுக்குப் பேதம் இல்லை.**

என்பது சூத்திரம்.

**அவ :**—'பூர்ணவிஷயம்' என்றது முதல் மேல் சூத்திரம் முடியப் [5] பிரசக்த அநுப்பிரசக்தமாக வந்ததித்தனை. பிரபத்தி

---

[1] திருவாய்மொழி, 1. 6 : 1. இத்திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பரிவதில்' என்று தொடங்கி. ஹேயப்பிரத்ய நீகன் - தானும் குற்றமில்லாவனாய்ப் பிறருடைய குற்றங்களையும் போக்கக்கூடியவன். ஹேயம் - குற்றம். பிரத்யநீகன் - எதிர்த் தட்டா னவன்.

[2] "ஏதத் ஸாம காயந்நாஸ்தே"
என்பது, உபநிடதம்.

[3] இவ்விடத்தில் நம்பிள்ளை ஈடு பார்க்க.

[4] 'புல்லைக் காட்டி-இடுவாரைப்போலே' என்ற விடத்தில் பசு அல்லது தேனு என்ற சொல்லை அவாய் நிலையால் கொள்க. பசுவிற்குக் காட்டி அழைத்து இடுவாரைப் போலே என்க. பலத்திற்கும் பலத்தைப் பெறுதற்குரிய சாதனத்திற்கும் பேதம் இல்லை என்க. பேதம் இல்லா மையை வியாக்கியானத்திற்காண்க.

[5] பிரசக்த அநுப்பிரசக்தம் - ஒன்றிலிருந்து ஒன்று. 'மேலே சொல்லப்பட்டது' என்றது 140, 143ஆம் சூத்திரங்களைக் குறித்தபடி.

யினுடைய வைலக்ஷண்யமன்றோ மேலே சொல்லப்பட்டது? ஆகையாலே, அதற்கு இன்னமும் ஒரு வைலக்ஷண்யம் சொல்லுகைக்காகச் சித்தோபாயத்திற்கும் பலத்திற்கும் உள்ள ஒற்றுமையை முந்துற அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'புல்லைக்காட்டி [1]அழைத்துப் புல்லை இடுவாரைப் போலே பல சாதனங்களுக்குப் பேதமில்லை,' என்றது, கோவினை வரவழைத்துப் பின்னை அதற்கு உணவு முதலியவைகளை இட்டு நோக்க நினைப்பார், அதற்கு இனியதான புல்லையே அதனை அழைப்பதற்குச் சாதனமாக முன்னிட்டு அழைத்துக்கொண்டு, அந்தப் புல்லையே மேலும் இடுமளவில், பலத்திற்கும் சாதனத்திற்கும் பேதம் இல்லாதவாறு போன்று, விலக்ஷணமான குணங்களோடும் விக்கிரகத்தோடும் கூடியவனான தானே முந்துற இவனைச் சேர்த்துக்கொள்ளுகைக்கு உபாயமாய்ப் பின்னர் என்றும் ஒக்க இவனுக்கு உபேயமாக இருக்கையாலே பலனும் சாதனமுமாகிற இரண்டும் ஒரே பொருளாக இருக்கும் என்றபடி. (64)

## 145

[2] ஆகையாலே சுகரூபமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேற்சூத்திரத்தால் பிரபத்திக்கு [3] வைலக்ஷண்யம் பலித்தபடியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஆகையாலே சுகரூபமாயிருக்கும்' என்றது, சாத்தியமாகவிருக்கும் பொருள் தானே அதனைப் பெறுதற்குரிய சாதனமாகவிருக்கையாலே, அவனைப்பற்றுதல் வடிவமான

---

[1] பசுவினை அழைத்தற்குச் சாதனமாக இருந்ததும் புல்லே. அதற்குப் பலமாக இடுகிறதும் புல்லே. அது போன்று இவனைத் தன் பக்கல் கூட்டுதற்குச் சாதனமாக இருப்பதும் இறைவனுடைய திவ்விய மங்கள விக்கிரகமே. பின்னர் இவன் அனுபவிப்பதுவும் அந்தத் திவ்விய மங்கள விக்கிரகமேயாம். ஆதலால், பல சாதனங்களுக்கு வேறுபாடு இல்லை என்கிறார்.

[2] ஆகையாலே பிரபத்தி சுகரூபமாயிருக்கும் என்று 'பிரபத்தி' என்பதனை அதிகாரத்தால் கொள்க.

[3] வைலக்ஷண்யம் - வேறு ஒன்றற்கு இல்லாத வேறான குணச் சிறப்பு.

இப்பிரபத்தி [1] தேவையாக இராமல் சுகரூபமாய் இருக்கும் என்றபடி.

[2] அன்றிக்கே, இன்னமும் பிரபத்திக்கு ஒரு வைலக்ஷண்யம் அருளிச்செய்கிறார் ‘புல்லைக்காட்டி’ என்ற சூத்திரத்தாலே என்னுதல். அதாவது, புல்லைக்காட்டித் தேனுவை அழைத்துக் கொண்டு பின்னை அப்புல்லையே இடுமளவில் பலத்திற்கும் சாதனத்திற்கும் பேதம் இல்லாதவாறு போன்று, [3] ‘ஒரு முறை செய்யப்பட்டது அஞ்சலியானது’ என்றும், [4] ‘ஜனார்த்தனனை நமஸ்காரம் செய்தார்கள்’ என்றும், சொல்லுகிறபடியே அஞ்சலி செய்தல் முதலியனவான பிரபத்தியை முன்னிட்டு ஈச்வரனை வசீகரித்தால் பின்னை அவனுக்கு உகப்பாகச்செய்யும் அடிமையும், [5] ‘கூப்பின கைகளையுடையவர்களாய்ச் சந்தோஷம் அடைந்தவர்களாய், ‘நம:’ என்றே சொல்லுகிறவர்களாய்’ என்றும், [6] ‘கைகளால் ஆரத்தொழுது தொழுது உன்னை’ என்றும் சொல்லுகிறபடியே தன் சொரூபத்திற்குத் தகுதியான அஞ்சலி [7] முதலான செயல் விசேடங்கள் ஆகையாலே பலத்திற்கும் சாதனத்திற்கும் பேதம் இல்லை என்றபடி.

---

1 தேவை - விதியடியாக வருகின்ற செயல்கள் காரணமாக வருகின்ற துக்கம்.

2 மேலே போந்த சூத்திரத்திற்கு வேறும் ஒருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார் ‘அன்றிக்கே’ என்று தொடங்கி. அவனை உபாயமாக்குவதற்குச் சாதனமாகவிருப்பதும் அஞ்சலியே; அவனை உகப்பிக்கையாகிற பலமாகவிருப்பதும் அஞ்சலியே; ஆதலால் பலத்திற்கும் சாதனத்திற்கும் பேதமில்லை என்பது கருத்து. இங்கே ‘தேனு’ என்றது ஈன்ற கன்றிற்குப் பாலையூட்டி வளர்க்கும் பசுவினை. இதனால் வாத்சல்யத்தையுடைய இறைவனைத் தெரிவித்தபடி. முதற்பொருளில் ‘கோ’ என்றதனால் மக்களைத் தெரிவித்தபடி. கோ - பசு.

3 “ஸக்ருத் க்ருத: அஞ்சலி:”
என்பது ஸ்தோத்திர ரத்நம்.

4 “நமஸ்சக்ருர்ஜநார்தநம்”
என்பது பாரதம்.

5 “பத்தாஞ்சலிபுடா ஹ்ருஷ்டா நம இதிஏவவாதிந:”
என்பது, பிரமாணம்.

6 திருவாய்மொழி, 3.8:4.

7 ‘முதலான’ என்பதனாலே ‘நம:’ என்று வாயால் சொல்லுதலையும் கொள்க.

இப்படிப் பலமானதுதானே சாதனமாகையாலே இப்பிரபத்தி தான் தேவையாய் இராதே இவனுக்குச் சுகரூபமாயிருக்கும் என்கை.

ஆக, 'பிரபத்தியுபாயத்துக்கு' என்று தொடங்கி இவ்வளவாகப் பிரபத்திக்குக் குற்றம் இல்லாத தன்மையும் குணத்தோடு கூடியிருக்கும் தன்மையும் சொல்லப்பட்டன. (65)

## 146

[1] இவன் அவனைப் பெற நினைக்கும் போது இந்தப் பிரபத்தியும் **உபாயம்** அன்று.

என்பது சூத்திரம்.

**அவ :**—இப்படி மேலே சொல்லப்பட்டதான [2] பிரபத்தியின் உபாயமாகாத தன்மையையும் இதற்கு எதிர்த்தட்டான பரகதஸ்வீகாரத்தினுடைய உபாயமாகும் தன்மையையும் 'இது தன்னைப் பார்த்தால்' என்ற சூத்திரத்தாலும், 'பிராப்திக்கு உபாயம் அவன் நினைவு' என்ற சூத்திரத்தாலும் அருளிச் செய்தார். அதனையே வேறு காரணங்களைக்கொண்டும் அருளிச் செய்கிறார் மேல். அவற்றுள், இப்படிச் சொரூபத்திற்குத் தகுதியான இந்தப் பிரபத்தியைச் சாதனமாக்கிக்கொண்டு, சுவதந்திரனை அந்த இறைவனை இவன் பெறப்பார்க்குமன்று, அவ்விறைவனுடைய நினைவு கூடாதாகில், இந்தப் பிரபத்தி பலன் தாராது என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இவன் அவனைப்பெற நினைக்கும்போது இந்தப் பிரபத்தியும் உபாயம் அன்று,' என்றது, உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாறு போன்று, உடைமையையுடைய

---

[1] இவன் - சேதனன்; உயிர். அவன் - இறைவன்.

[2] பிரபத்தியினுடைய உபாயமாகாத தன்மையை 'இது தன்னைப் பார்த்தால்' சூத். 57 என்ற சூத்திரத்தாலும், பரகதஸ்வீகாரத்தினுடைய உபாயமாகும் தன்மையைப் 'பிராப்திக்கு உபாயம் அவன் நினைவு' என்ற சூத்திரத்தாலும் சூத். 67. அருளிச்செய்தார் என்று நிரல் நிறையே கொள்க. பரகதஸ்வீகாரம் - இறைவன் தானாகவே வந்து உயிர்களை அங்கீகரித்தல்; அருள் செய்தல். அவன் இவனைப் பெறுதல் என்றபடி.

வனான அவ்விறைவன் தானேவந்து அங்கீகரிக்கத்தக்க பரதந்திரனான இவன், தான் பலத்தைப் பெறுகின்றவனாக நினைத்துத் தன்னுடைய பிரபத்தியாலே சுவதந்திரனான அவனைப் பெறப் பார்க்குமளவில், அவன் நினைவு கூடாதாகில், இப்படித் தூயதாய் இருக்கிற பிரபத்தியும் அவனைப் பெறுதற்குச் சாதனம் ஆகாது என்றபடி. (66)

## 147

[1]அவன் இவனைப் பெற நினைக்கும் போது
பாதகமும் விலக்கு அன்று.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, அவ்விறைவனே இவனைப் பெற நினைக்கும் போது உள்ள வாசியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அவன் இவனைப் பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கு அன்று,' என்றது, உடைமையையுடையவனாய்ச் சுவதந்திரனான அவ்விறைவன், உடைமையாய்ப் பரதந்திரனாகவிருக்கிற இவனைத் தன்னுடைய இச்சையாலே பெற நினைக்குமளவில் பாவங்களில் முதன்மையானதாக எண்ணப்படும் தீவினைகளும் தடையாகமாட்டா என்றபடி.

இந்த இரண்டு சூத்திரங்களாலும் சுவகதஸ்வீகாரம் உபாயம் ஆகாமையும் பரகதஸ்வீகாரம் உபாயம் ஆதலும் காட்டப்பட்டன. [2]'இவனுக்குப் பரமாத்மாவைப் பெறுகிற விஷயத்தில் பிரபத்தியும் உபாயமன்று : இறைவனுக்கு இவனைப்பெற நினைக்கும் போது இவன் செய்த பாவங்களும் தடையாகா' என்னக் கடவதிறே. (67)

---

[1] அவன் - இறைவன். இவன் - சேதனன் ; உயிர். பாதகம் - பாவங்கள் ; தீவினைகள்.

[2] சித்த: பரமசில்லாபே ப்ராத்திரபி நோபதி:
விபர்யயேது நைவாஸ்ய ப்ரதிரேஷாய பாதகம்.

## 148

[1]இவை இரண்டும் ஸ்ரீ பரதாழ்வான் பக்கலிலும் ஸ்ரீ குகப்பெருமாள் பக்கலிலும் காணலாம்.

என்பது சூத்திரம்.

**அவ :—**'இப்படி இவை இரண்டும் காணலாம் இடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**இவை இரண்டையும் ஸ்ரீ பரதாழ்வான் பக்கலிலும் ஸ்ரீ குகப்பெருமாள் பக்கலிலும் காணலாம் என்க. (68)

## 149

ஸ்ரீ பரதாழ்வானுக்கு [2]நன்மைதானே தீமையாயிற்று; ஸ்ரீ குகப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாயிற்று.

என்பது சூத்திரம்.

**அவ :—**'அவர்கள்பால் இவை காணலாம்படி என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'ஸ்ரீ பரதாழ்வானுக்கு நன்மைதானே தீமை ஆயிற்று,' என்றது, பெருமாளை மீட்டுக்கொண்டு வந்து திருமுடி சூட்டுவித்துத் தன்னுடைய சொரூபத்திற்குத் தகுதியான அடிமையைப் பெற்று வாழ்கைக்காக [3]'ஏபிஃசஸசிவைஃஸார்

---

[1] 'இவை இரண்டும்' என்றது ஸ்வகதஸ்வீகாரம் உபாயம் ஆகாத தன்மையையும் பரகதஸ்வீகாரம் உபாயமாகும் தன்மையையும் என்றபடி. 'ஸ்ரீபரதாழ்வான் பக்கலிலும் ஸ்ரீகுகப்பெருமாள் பக்கலிலும் காணலாம்' என்றது, ஸ்வகதஸ்வீகாரம் உபாயமாகாத தன்மையை ஸ்ரீபரதாழ்வான் பக்கலிலும், பரகதஸ்வீகாரம் உபாயம் ஆகுந் தன்மையை ஸ்ரீகுகப் பெருமாள் பக்கலிலும் காணலாம் என்றபடி.

[2] 'நன்மைதானே' என்றது பிரபத்தியை. 'தீமை ஆயிற்று' என்றது பயன் தந்திலது என்றபடி. 'தீமைதானே' என்றது, அதுகாறும் செய்திருந்த தீவினைகளை.

[3] ஏபிஸ்சசசிவைः ஸார்தம் சிரஸாயாசிதோமயா
ப்ராதுः சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்துமர்கதி
என்பது, ஸ்ரீராமா. அயோத். 104:12.

தம்' என்ற சுலோகத்தில் கூறுகிறபடியே வழியே பிடித்து எண்ணிக்கொண்டு சென்று, பெரிய துன்பத்தோடே அவர் திருவடிகளிலே பிரபத்தி பண்ணின ஸ்ரீ பரதாழ்வானுக்கு, அப்படிச் செய்த பிரபத்தியாகிற நன்மைதானே, புகலிடமானவரான பெருமாள் திருவுள்ளத்திற்கு விருப்பமில்லாமையாலே தீமையாய் விட்டது என்றபடி.

'ஸ்ரீ குகப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மை ஆயிற்று' என்றது, [1]'ஏழை ஏதலன்' என்ற திருப்பாசுரத்திற்கூறிய படியே பெருமாள் தாமே வந்து அங்கீகரிக்கப்பெற்ற ஸ்ரீ குகப் பெருமாளுக்குத் தீமையையே பச்சையாக அங்கீகரிக்கையாலே, பாதகமாகிற தீமைதானே நன்மையாய்விட்டது என்றபடி. [2]'எது தேவரீருக்கு விருப்பமானதோ, அது இங்குப் புண்ணியம்; தேவரீருக்கு விருப்பமில்லாதது பாவம்,' என்பதன்றோ புண்ணிய பாவங்களுக்கு இலக்கணம்? ஆகையால், இவர்கள் பக்கல் காணலாம் என்றபடி. (69)

## 150

[3]சர்வாபராதங்களுக்கும் பிராயச்சித்தமான பிரபத்திதானும் அபராத கோடியிலேயாய் க்ஷாமணம் பண்ணவேண்டும்படி நில்லாநின்ற திறே.

என்பது சூத்திரம்.

---

இச்சுலோகம், ஸ்ரீராமபிரானுடைய சந்நிதியில் நின்றுகொண்டு, ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீராமபிரானை முன்னிலையாக்கிக் கூறியதேயாகிலும், அவன் வழியிலே நினைந்து வந்த நினைவுகளை அடிஒற்றிக் காரிய காரண ஒற்றுமை நயம் பற்றிப் படர்க்கையிலே வைத்துப் பொருள் அருளிச் செய்கிறார். திருவாய்மொழியில் நம்பிள்ளை ஈட்டிலும் இச்சுலோகத்திற்கு இப்படியே பொருள் கூறப்பட்டிருக்கிறது. அதனை ஆண்டுக் காணல் தகும்.

1 பெரிய திருமொழி, 5.8:1.

2 "யத்த்வத்ப்ரியம் ததிஹபுண்யம் அபுண்யம் அந்யத்" என்பது, அதிமாநுஷஸ்தவம்.

3 சர்வ அபராதங்களுக்கும் - எல்லாப் பாவங்களுக்கும். பிராயச்சித்தம் - பாவங்களைப் போக்குவது; கழுவாய். பிராயம் - பாவம். சித்தம் - போக்குவது. கோடி - வரிசை. க்ஷாமணம் - பொறுப்பித்தல்.

அவ :—இவன் செய்யும் பிரபத்தி எல்லார்க்கும் புகலிடமாக விருப்பவருடைய திருவுள்ளத்திற்குத் தகுந்ததாய் இல்லாத போது அபராதங்களின் வரிசையிலே சேரும் என்னுமிடத்தை அருளிச்செய்தார் மேல். இப்பிரபத்திதான் இவனுடைய முன்னைய செயல்களைப் பார்த்தாலும் அபராதங்களின் வரிசையிலே யாயிருக்கும் என்னுமிடத்தைத் தெளிவுபடுத்துவதற்காகப் பாஷ்யகாரருடைய அநுஷ்டான வகையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சர்வ அபராதங்களுக்கும் பிராயச்சித்தமான பிரபத்திதானும்' என்றது, [1] 'அஹம் அஸ்மி அபராதா நாம் ஆலயஃ' என்கிறபடியே குற்றங்களுக்கு எல்லாம் கொள்கலமா யிருக்கிற இவன் பிரபத்தி செய்யவே, [2] 'சர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்கிறபடியே இவனளவில் சர்வேசுவரன் திருவுள்ளம் இரங்கிவிடுகையாலே எல்லாப் பாவங்களுக்கும் பிராயச்சித்தமாயிறே பிரபத்திதானும் இருப்பது என்றபடி. 'அபராத கோடியிலேயாய் க்ஷாமணம் பண்ண வேண்டும்படி நில்லாநின்றது' என்றது, இப்படியிருந்துள்ள பிரபத்தியை [3] 'த்வத் பாதாரவிந்த யுகளம் சரணம் அஹம் பிரபத்யே' என்று செய்தருளிய பாஷ்யகாரருக்கு, தம்முடைய முன்னைய செயல்களை நினைத்தவாறே, அந்தப் பிரபத்தி அபராதங்களின் வரிசையிலேயாய் [4] 'த்வமேவ மாதாச' என்று தொடங்கி, இத் தலையில் குற்றங்களையெல்லாம் பொறுக்கைக்கு உறுப்பான உறவு

---

'பண்ணவேண்டும்படி' என்றது, இராமாநுசர் செய்ய வேண்டும்படி என்றபடி. 'பிரபத்திதானும் நில்லாநின்றதிறே' என முடிக்க.

[1] 'நான் குற்றங்களுக்கெல்லாம் இருப்பிடமாகவிருக்கிறேன்' என்பது ஸ்ரீபாஞ்சராத்ரம்.

[2] 'எல்லாப் பாவங்களினின்றும் உன்னை விடுவிக்கிறேன்' என்பது ஸ்ரீகீதை, 18.

[3] 'தேவரீருடைய தாமரை மலர் போன்ற இரண்டு திருவடிகளை யும் உபாயமாகப் பற்றுகிறேன்,' என்பது சரணாகதி கத்யம்.

[4] "த்வமேவ மாதாச பிதாத்வமேவ
த்வமேவ பந்துஶ்ச குருஸ்த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மமதேவதேவ"
என்பது, காணல் தகும். த்ரவிணம் – பொருள்.

முறைகளையெல்லாம் விண்ணப்பம் செய்துகொண்டு [1] 'தஸ்மாத் ப்ரணம்ய' என்பது போன்றவைகளாலே இப்படித் திருமுன்பே கூசாமல் வந்து நின்று பிரபத்தி செய்த இக்குற்றத்தைப் பொறுத் தருளவேண்டும் என்று பொறுப்பித்தல் செய்ய வேண்டும்படி நில்லாநின்றதிறே என்கை.

ஆகையால், இவ்வழியாலும் இது குற்றங்களின் வரிசையில் சேருமதாயிருக்கும் என்கை.

என்றது, பல காலம் பாவங்களைச் செய்து பின்பு ஒரு நாள் தன்பால் அன்பைச் செலுத்தினுைகிலும், [2] 'பகைவர்கள் விஷ யத்திலும் வாத்சல்யத்தையுடையவர்' என்றும், [3] 'இராவணன் தானேயாகிலுமாம்' என்றும் இருக்கும் இறைவனுடைய மனத் தினைப் பார்த்தால், அவன் கைக்கொள்ள ஒரு குறையில்லை. அவன் அப்படியிருந்தானேயாகிலும் தன் முன்னைய செயல்களை உணர்ந்தால், இவன் இந்தப் பிரபத்தியை அபராதமாகவே நினைத்துப் பொறுப்பித்தல் செய்ய வேண்டும்படியாயிறே இருப் பது என்றபடி. (70)

## 151

**நெடுநாள் [4]அந்யபரையாய்ப் போந்த பார்யை, லஜ்ஜாபயங்கள் இன்றிக்கே, பர்த்ரு சகாசத்திலே நின்று, 'என்னை அங்கீகரிக்க**

---

1 'தேவரீரை மனத்தாலும் சரீரத்தாலும் வணங்குகிறேன்; தேவ ரீர் அடியேனுக்கு எல்லாவுறவும் ஆகையாலே, தனயன் செய்த குற்றத் தைத் தந்தை பொறுக்குமாறு போலவும், தோழன் செய்த குற்றத்தைத் தோழன் பொறுக்குமாறு போலவும், மனைவி செய்த குற்றத்தை மண வாளன் பொறுக்குமாறு போலவும், தேவனுயும் பொறுக்கைக்கு உறவின னுயும் இருக்கையாலே பொறுக்கத் தகுந்தவராக இருக்கிறீர்' என்பது சரணுகதி கத்யம்.

2 "ரிபூணுமபிவத்ஸலঃ"
என்பது, கீதா பாஷ்யத்திற்கண்ட மேற்கோள்.

3 "யதிவா ராவணஸ்வயம்"
என்பது, ஸ்ரீராமா. யுத். 18:38.

4 அந்யபரையாய் - வேறொருவனோடு தொடர்புடையவளாய். பார்யை - மனைவி. லஜ்ஜை - நாணம். பயம் - அச்சம். பர்த்தா -

வேணும்' என்று அபேக்ஷிக்குமா போலே
இருப்பது ஒன்றிறே இவன் பண்ணும் பிரபத்தி.

என்பது சூத்திரம்.

**அவ :**—இவன் செய்யும் பிரபத்தி தன்னுடைய முன்னைய செயல்களை நினைத்தால் அபராத கோடியிலேயாயிருக்கும் என்னு மதனை ஓர் எடுத்துக்காட்டு மூலம் விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'நெடுநாள் அந்யபரையாய்ப் போந்த பார்யை லஜ்ஜாபயங்கள் இன்றிக்கே பர்த்துரு சகாசத்திலே நின்று 'என்னை அங்கீகரிக்கவேணும்' என்று அபேக்ஷிக்குமாபோலே' என்றது, நெடுங்காலம் கணவனோடு ஒட்டுஅற்று வேறோர் ஆடவனை அடைந்தவளாய், தன்னுடைய தண்டனைக்குப் பாத்திர மாய்ப் போந்தவளான ஒரு மனைவியானவள், 'இப்படிப்பட்ட நாம், கணவன் முன்னே கூசாமல் சென்று நிற்கும்படி என்?' என்கிற நாணமும், 'இத்துணைக்காலமும் நாம் செய்து திரிந்த வெல்லாம் கண்டிருக்கிறவன் இப்போது வந்து நம்மை இப்படி விரும்புவதே என்று தண்டிக்கில் செய்வது என்?' என்ற அச்சமும் இன்றிக்கே, அவன் முன்னே சென்று நின்று, 'என்னை அங்கீகரிக்க வேண்டும்' என்று கூறுமாறு போலே என்றபடி.

'இருப்பது ஒன்றிறே இவன் பண்ணும் பிரபத்தி' என்றது, அங்ஙனம் அவள் கூறுமளவில், எத்துணைக் குற்றமுண்டு? அப்படி இருப்பது ஒன்றிறே, பகவானுக்கே உரியவனாய் வைத்து, அநாதிகாலம் அவனுடன் பற்று இன்றிக்கே, வேறு நோக்குடைய வனாய்ப் போந்த இவன், தன்னுடைய முன்னைய செயல்களை நினைத்தலால் வரும் நாணமும், சுவந்திரனான இறைவன் தண்டிக்கில் செய்வது என் என்ற அச்சமும் இன்றிக்கே, அவ் விறைவன் முன்னே சென்று நின்று தன்னை அங்கீகரிக்க வேண்டும் என்று செய்கிற பிரபத்தி என்றபடி. (71)

---

கணவன். சகாசம் - அண்மை. அபேக்ஷிப்பது - விரும்புவது. 'இவன் பண்ணும் பிரபத்தி - இருப்பது ஒன்றிறே' என முடிக்க. உவமையை வியாக்கியானத்தைக் கொண்டு பொருளோடு பொருத்திக்கொள்க.

## 152

[1]கிருபையாலே வரும் பாரதந்திரியத்திற் காட்டில், சுவாதந்திரியத்தாலே வரும் பாரதந் திரியம் பிரபலம்.

என்பது சூத்திரம்.

அவ :—[2] ஆக, இவ்வளவும் சுவகதஸ்வீகாரத்தின் உபாயம் ஆகாத தன்மையும் பரகதஸ்வீகாரத்தினுடைய உபாயமாம் தன்மையும் சொல்லப்பட்டன. இனி, இவனுடைய பிரபத்தியைக் கண்டு இரங்கி அவன் இவனுக்குப் பரதந்திரன் ஆவதிலும் தன் சுவாதந்திரியத்தால் வந்து பரதந்திரன் ஆவதே சிறந்தது என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' கிருபையாலே வரும் பாரதந்திரியத்திற்காட்டில் சுவாதந்திரியத்தாலேவரும் பாரதந்திரியம் பிரபலம்' என்றது, துன்பமுடையவர்களாய்த் தன்னையேபுகலிடமாகக் கொண்டவர்களாய்த் தன் திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தவர்கள் அளவில் தனக்கு உண்டான கிருபையாலே, அவர்கள் சொன்னதே செய்யும்படி பரதந்திரனாயிருப்பதும், [3]பட்டத்துக்குரிய யானையும் அரசும் போலே தடையில்லாத தன் சுவாதந்திரியத்தாலே யாதொரு காரணமும் இல்லாமலே சிலரை அங்கீகரித்துத் தன்னை அவர்கள் இட்டது வழக்காக்கி வைக்கின்றதும் ஆகிய

---

1 கிருபையால் வரும் பாரதந்திரியமாவது, வேறு புகலின்றித் தன்னை வந்து பற்றினவர்களிடத்தில் தனக்கு உண்டான கிருபையாலே அவர்கள் சொன்னதையே செய்தற்குத் தக்க பரதந்திரனாய் இருப்பது. சுவாதந்திரியத்தால் வரும் பாரதந்திரியமாவது. கேட்பார் அற்ற தனது சுவாதந்திரியத்தாலே ஒரு காரணமும் பற்றாமலே சிலரை அங்கீகரித்துத் தான் அவர் சொன்னபடி செய்யத்தக்க தன்மையனாய் இருப்பது.

இச்சூத்திரம் ' ஸ்வகதஸ்வீகாரம் உபாயம் அன்று ; பரகதஸ்வீகாரமே உபாயம் ' என்பதனைக் கூறுவதன்று. ' ஸ்வகதஸ்வீகாரத்தைக் காட்டிலும் பரகதஸ்வீகாரம் வலியுடைத்து ' என்பதனைக் கூறவந்தது.

2 மேலே கூறியதை அநுவதித்துக்கொண்டு இச்சூத்திரத்திற்கு இயைபு அருளிச்செய்கிறார் ' ஆக, இவ்வளவும் ' என்று தொடங்கி.

3 ' பட்டத்துக்குரிய யானையும் அரசும் செய்யுமவை ஆராயாது ' என்பது ஆசாரிய ஹிருதயம்.

[1] இரண்டும் இறைவனுக்கு உள்ளவை; இவற்றுள் முற்பட்டது ஒரோ நிலைகளில் சுவாதந்திரியத்தால் தடைபட்டுப் பலம் தாராமல் போயினும் போகும்; பிற்பட்டது தடையில்லாதது ஆகையாலே பலத்திற்கு ஒருக்காலும் கண்ணழிவில்லை. ஆகையால், சுவகத ஸ்வீகாரத்தைக்காட்டிலும் பரகதஸ்வீகாரம் வலியுடையது என்கிறார். (72)

## 153

[2]இவ்வர்த்தத்தை வேத புருஷன் அபேக்ஷித்தான்.

என்பது சூத்திரம்.

அவ :—' இந்தப் பொருள் வேதத்தாலே விரும்பப்பட்டது' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' இவ்வர்த்தம் ' என்கிறது, மேலே வலியுடைத்தாகச் சொல்லப்பட்ட பரகதஸ்விகாரத்தை. ' வேத புருஷன் இத்தை அபேக்ஷித்தான் ' என்றது, [3] ' மேலே சொல்லப்பட்ட பரமாத்மாவானவன் மனனத்தினாலும் பக்தி வடிவமான உபாசனத்தினாலும் கேள்விகள் பலவற்றினாலும் அடையப்படுமவன் அல்லன். இந்தப் பரமாத்மாவானவன் எவன் ஒருவனை இச்சிக்கின்றானோ, அவனாலேயே அடையப்படுமவன்; அவனுக்கே தன்னுடைய சொரூபம் முதலானவற்றைக் காண்பிக்கிறான் ' என்று கடவல்லி உபநிடதத்திலும் முண்டகோபநிடதத்திலும் சொல்லுகையாலே, வேத புருஷன் இதனை ஆதரித்தான் என்

---

1 இங்கே, ஆழ்வார் விஷயத்தில் இறைவன் செய்த ' மயர்வறமதி நலம் அருளினன் ' என்ற பரகதஸ்வீகாரத்தையும், ஆழ்வார் ' அகலகில்லேன் இறையும் ' என்ற திருப்பாசுரத்தில் செய்த ஸ்வகதஸ்வீகாரத்தையும் உதாரணமாகக் கோடல் தகும்.

2 ' இவ்வர்த்தத்தை ' என்றது, பரகதஸ்வீகாரத்தை. வேத புருஷன் - வேதம். இப்பொருள் இரண்டு உபநிடதங்களில் சொல்லப்பட்டிருத்தலால் ' அபேக்ஷித்தான் ' என்கிறார். ஒருவர்க்கு ஒரு பொருளில் விருப்பம் இருந்தால் அதனைப் பன்முறை சொல்லுதல் மரபு.

3 " நாயம் ஆத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயா
நபஹுநா ஶ்ருதேந, யமேவைஷ வ்ருணுதே தேந
லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் "
என்பது, கடவல்லி. 2:43. முண்டகோப. 3.2:37.

கிருர் என்றபடி. பல தடவை சொல்லுதல் விருப்பத்தின் காரியமிறே. (73)

## 154

[1]'அபேக்ஷா நிரபேக்ஷமாகத் திருவடிக்கும் ஸ்ரீ குகப்பெருமாளுக்கும் இது உண்டாயிற்று.

என்பது சூத்திரம்.

அவ :—' இத்தலையில் விருப்பம் இன்றிக்கே இருக்க, இந்தப் பரகதஸ்வீகாரம் வாய்க்கப் பெற்றவர்கள் உளரோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அபேக்ஷா நிரபேக்ஷமாக' என்றது, தம் தம்மிடத்திலே விருப்பம் இன்றிக்கே இருக்கவும் என்றபடி. 'திருவடிக்கும் ஸ்ரீகுகப் பெருமாளுக்கும் இது உண்டாயிற்று' என்றது, [2]பம்பையின் தீரத்திலும் கங்கையின் கூலத்திலும் பெருமாள் தாமே சென்று அங்கீகரிக்கப்பெற்ற திருவடிக்கும் ஸ்ரீகுகப்பெருமாளுக்கும் இந்தப் பரகதஸ்வீகாரம் உண்டாயிற்று என்றபடி. (74)

## 155

[3]'இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடும்' என்னுமிடம் அபயப்பிரதானத்திலும் காணலாம்.

என்பது சூத்திரம்.

---

1 அபேக்ஷா நிரபேக்ஷமாக - இவர்களுடைய விருப்பத்திலே இறைவனை தனக்கு விருப்பம் இல்லாமல், அதாவது இவர்களுடைய விருப்பத்தை எதிர்பாராமல் என்றபடி. திருவடி - அநுமான். ஸ்ரீகுகப் பெருமாள் - குகன். இவர்களை இங்ஙனம் கூறுதல் வைணவமரபு.

2 பம்பையின் தீரம் - பம்பையின் கரை. கங்கையின் கூலம் - கங்கையின் கரை. தீரம் என்றும் கூலம் என்றும் அருளிச் செய்தது அவை வந்துள்ள அவ்வச்சுலோகங்களை நினைவூட்டுதற்கு.

3 'இவன்' என்றது சேதனனை; அதாவது மக்களை. அவன் - இறைவன். அபயப் பிரதானம் - பயம் இன்மையைக் கொடுத்தல். இங்கே விபீஷண சரணுகதியில் விபீஷணனை அங்கீகரித்தவிடத்தில் என்றபடி. 'அபயப் பிரதானத்திலும்'—உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை.

அவ :—'இப்படி சுவதந்திரனாய் இவர்களை அங்கீகரித்தவிடத்திலும்[1] ' ஓ இலக்குமணா, சுக்கிரீவனுடைய மந்திரியும் பேசத் தெரிந்தவனுமான அந்த அநுமானை இனிய சொற்களோடு சிநேகத்துடன் கூடியிருக்கும்படி பேசுவாயாக' என்றும்,[2] ' மாழைமான் மடநோக்கியுன் தோழி ; உம்பி எம்பி ' என்றும் இளைய பெருமாளையும் பிராட்டியையும் முன்னிட்டது போன்று, மற்றும் புருஷகாரத்தை முன்னிட்டு அங்கீகரித்தவிடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—' இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடும் என்னுமிடம் அபயப்பிரதானத்திலும் காணலாம் ' என்றது, இவன் தான் இறைவனைப் பற்றும்போது புருஷகாரமாக முன்னிடுமவர்களை, அவனும் அங்கீகரிக்கும் போது முன்னிடும் என்னுமிடம், திருவடியையும் ஸ்ரீகுகப்பெருமாளையும் அங்கீகரித்த இடங்களில் மாத்திரமன்றிக்கே, ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரித்த இடத்திலும் காணலாம் என்றபடி.

[3] ' யாங்ஙனம்?' என்னில், [4] ' இராவணனுக்கு நலத்தை உபதேசித்த நான், அவனாலே வன்சொற்கள் சொல்லப்பட்ட

---

[1] ' தமப்யபாஷ ஸௌமித்ரே ஸுக்ரீவஸ சிவம்கபிம் ' என்பது, ஸ்ரீராமா. கிஷ். 3 : 27.

[2] ' மாழை மான்மட நோக்கி ' என்பது பெரிய திருமொழி, 5.8 : 1. அநுமானை அங்கீகாரம் செய்யும் போது இளைய பெருமாளையும், ஸ்ரீகுகப்பெருமாளை அங்கீகாரம் பண்ணும் போது பிராட்டியையும் முன்னிட்டார் என்க. ' பிராட்டியை முன்னிட்டு ' என்றது, ' மாழை மான்மட நோக்கி ' என்று திருக்கண்களின் பார்வையைக் கூறியதிலே நோக்கு.

[3] ' யாங்ஙனம் ?' எனின், என்றது, ஸ்ரீவிபீஷணாழ்வான் பெருமாளைச் சரணம் புகுகிற காலத்தில் வானர முதலிகள் அனைவரையும் முன்னிட்டுச் சரணம் புக்கார். பெருமாள் ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரிக்கிற காலத்தில் சுக்கிரீவ மகாராஜர் ஒருவரை மாத்திரமே முன்னிட்டு அங்கீகரித்தார் ; ஆதலால், ' இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடும் என்னுமிடம் ' யாங்ஙனம் பொருந்தும் எனின் ?' என்றபடி.

[4] ஸோஹம் பருஷிதஸ் தேந தாஸவச்சாவமாநித:
த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம்கத:
என்பது, ஸ்ரீராமா. யுத். 17 : 16.

வனாய் வேலைக்காரனைப் போன்று தாழ்வுபடுத்தப்பட்டவனாய்ப் பிள்ளைகளையும் மனைவியையும் விட்டு இராகவனைச் சரணம் அடைந்தேன்,' என்று சரணம் புகுந்து, [1] 'எல்லாவுலகங்கட்கும் புகலிடமாயும் மஹாத்மாவாயும் இருக்கின்ற ஸ்ரீராமபிரானுக்கு வந்திருக்கின்ற விபீஷணன் என்ற பெயரையுடைய என்னை விரைவில் அறிவியுங்கோள்,' என்று நின்ற ஸ்ரீவிபீஷணாழ்வானை, அபயப்பிரதானம் முன்னாக அங்கீகரிக்கிறவிடத்தில்,[2] 'குரங்கு களுக்கெல்லாம் தலைவரான சுக்கிரீவரே, இவனை அழைத்து வருக; இவனுக்கு என்னால் அபயம் கொடுக்கப்பட்டது; விபீஷணனாக இருந்தாலும் இருக்கட்டும், இராவணன்தானே யாக இருந்தாலும் இருக்கட்டும்,' என்று முதலிகளுக்கெல்லாம் முதல்வரான மகாராஜரை முன்னிட்டிறே அங்கீகரித்தது?

[3]திருவடியையும் ஸ்ரீவிபீஷணாழ்வானையும் அங்கீகரிக்கிற விடத்தில் பிராட்டி அருகில் இல்லாமையாலே அவளை முன்னிட்டமை தோற்றிற்று இல்லையேயாகிலும், பிராட்டி இலங்கைக்கு எழுந்தருளும்போது [4]மஹாராஜரும் திருவடியும் நிற்கிறவிடத்திலே திருவாபரணங்களைப் போகட்டுக் கடாக்ஷித்துப் போகையாலும், இலங்கையிலே எழுந்தருளின பின்பு [5]ஸ்ரீவிபீஷணாழ்

---

[1] ஸர்வலோக ஶரண்யாய ராகவாய மகாத்மநே
நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணம் உபஸ்திதம்
என்பது, ஸ்ரீராமா. யுத். 17 : 13.

[2] ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்ய அபயம்மயா
விபீஷணோவா ஸுக்ரீவ யதிவா ராவணஃ ஸ்வயம்.
என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 34.

[3] 'திருவடியையும் ஸ்ரீவிபீஷணாழ்வானையும் அங்கீகரிக்கிறவிடத்தில் பிராட்டியினுடைய புருஷகாரம் இல்லையே?' என்னும் வினாவை அநுவதித்துக்கொண்டு அதற்கு விடையை அருளிச்செய்கிறார் 'திருவடியையும்' என்று தொடங்கி.

[4] 'கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை, வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை, நிலம்சேர் மதாணி கண்ட குரங்கின், செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாஅங்கு, அறா அருநகை இனிதுபெற் றிகுமே,' என்ற புறநானூற்றுப் பகுதி (புறம். 378) ஈண்டு நினைத்தல் தகும்.

[5] 'ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய மனைவியாகிய சரமை, பிராட்டிக்குத் தேறுதல் கூறிக்கொண்டிருக்கிற காலத்தில் அந்தச் சரமை சீதா பிராட்டியினாலே சிநேகம் செய்துகொள்ளப்பட்டாள்,' என்று

வானைப் பெருமாள் திருவடிகளிலே வரும்படி பிராட்டி கடாக்ஷித் தருளுகையாலும் பெருமாள் இருவரையும் அங்கீகரிக்கிறவிடத்தில் பிராட்டியை முன்னிட்டே அங்கீகரித்தார் என்று கொள்ள வேண்டும்.

இறைவனுக்குப் பரதந்தரப்பட்டிருப்பவளான பிராட்டிக்கு இறைவனுடைய நினைவொழியத் தனித்த ஒரு செயல் கூடாதிறே. [1]ஆகையாலேயிறே பரகதஸ்வீகாரம் சொல்லுகிறவிடத்திலே ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரித்ததையும் இவர் சேர்த்து அருளிச் செய்தது. (75)

## 156

[2]இருவர் முன்னிடுகிறதும் தந்தாம் குற்றங் களைச் சமிப்பிக்கைக்காக.

என்பது சூத்திரம்.

**அவ :—**' இவன் ஒரு காரணம் பற்றி வாராத அடியவனாய், அவன் ஒரு காரணம் பற்றி வாராத தலைவனாய் இருக்கையாலே, இவன் நேரே சென்று பற்றவும் அவன் நேரே அங்கீகரிக்கவும் அமைந்திருக்க, இப்படி இருவரும் புருஷகாரத்தை முன்னிடுவது எதற்காக?' என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :—**' இருவர் முன்னிடுகிறதும் தம் தாம் குற்றங் களைச் சமிப்பிக்கைக்காக ' என்றது, சேதனனுக்குக் குற்றமாவது, அநாதிகாலம் தன் பக்கல் அன்பு இல்லாதவனாய் மற்றைய விஷயங்களில் அன்புள்ளவனாய்த் தன் கட்டளையைக் கடந்து [3]கூடு

ஸ்ரீராமாயணம் கூறுகின்றது. மனைவிக்குச் செய்த அருள் அவளுடைய கணவனையும் சார்ந்ததேயாதலின், அதனைத் திருவுள்ளம் பற்றி, ' ஸ்ரீவிபீஷணாழ்வானை ' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

1 ' ஆகையாலேயிறே ' என்றது, பெருமாளுக்கு விருப்பமான ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய விஷயத்தில் பரகதஸ்வீகாரத்துக்குத் தகுந்த கடாக்ஷ விசேஷத்தைப் பிராட்டி முன்னரே செய்கையாலே என்றபடி.

2 இருவர் என்றது, சேதனனையும் ஈச்வரனையும். சமிப்பிக்கை - பொறுப்பித்தல்.

3 கூடு பூரிக்கை - நெல் முதலிய தானியங்களாலே களஞ்சியத்தை நிறைக்குமாறு போலே பாவங்களாலே ஆன்மாவை நிறைத்தல்.

பூரித்து வைத்த பாவங்கள். ஈச்வரனுக்குக் குற்றமாவது, [1]நீக்க வொண்ணுத சம்பந்தம் உண்டாயிருக்க, இவன் செய்த பாவங்களேயே கணக்கிட்டு, அநாதிகாலம் இவனே அகல அடித்திருந்த இது. இவன் தனது குற்றத்தைப் பொறுப்பிக்கையாவது, இந்தக் குற்றங்களேப் பார்த்து இறைவன் சீருதபடி செய்தல். அவன் தனது குற்றத்தைப் பொறுப்பித்தலாவது, தான் செய்த குற்றத்தை நினைத்து இவன் வெருவாதபடி செய்தல் என்றபடி. (76)

## 157

ஸ்வரூபசித்தியும் [2] அத்தாலே.

என்பது சூத்திரம்.

அவ: 'இவ்வளவே அன்று; இன்னமும் இப்புருஷகாரத்திற்கு ஒரு பயன் உண்டு' என்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்:** ஸ்வரூபமாவது, சேதனனுக்குத் [3]ததீய பாரதந்திரியம்; இறைவனுக்கு ஆச்ரித பாரதந்திரியம். [4]'தேவும் தன்னேயும்' என்று ஆச்ரித பாரதந்திரியத்தையிறே இறைவனுக்குத் தாஞன தன்மையாக ஆழ்வார் அருளிச்செய்தது. [5]'இவை இரண்டும் இருவர்க்கும் சித்திப்பது புருஷகாரத்தை முன்னிடுகையாலே' என்றபடி. (77)

---

[1] நீக்க ஒண்ணுத சம்பந்தம் - பிதாபுத்திரசம்பந்தம், சேஷசேஷி பாவ சம்பந்தம். 'உன்றன்ளுேடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது,' என்பது திருப்பாவை.

[2] சொரூபம் - பாரதந்திரிய சொரூபம். அத்தாலே - அந்தப் புருஷகாரத்தாலே. சித்திப்பது - பயன் பெறுவது.

[3] ததீய பாரதந்திரியம் - அவன் உடைமையாகிய பிராட்டிக்குப் பரதந்திரப்பட்டிருத்தல். ஆச்ரித பாரதந்திரியம் - தன்னேப்பற்றி யிருப்பவளான பிராட்டிக்குப் பரதந்திரப்பட்டிருத்தல். ஈண்டுப் பரதந்திரம் என்பது பிராட்டியினுடைய விருப்பத்தின்படி இறைவனுகிய தான் நடத்தல்.

[4] திருவாய்மொழி, 2.7 : 4.

[5] சேதனன் புருஷகாரத்தை முன்னிடும் போது இறைவனுக்கு ஆச்ரித பாரதந்திரியமும், இறைவன் புருஷகாரத்தை முன்னிடும்போது சேதனனுக்குத் ததீய பாரதந்திரியமும் சித்திக்கும். அன்றிக்கே, சேதனன் முன்னிடும் போது சேதனனுக்குத் ததீய பாரதந்திரியமும்

## 158

[1]ஔபாதிகமுமாய் நித்தியமுமான பாரதந்திரியம் இருவர்க்கும் உண்டிறே.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய சொரூபத்தை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' ஔபாதிகமுமாய் நித்தியமுமான பாரதந்திரியம் இருவர்க்கும் உண்டிறே ' என்றது, சேதனனுக்குப் பிராட்டி விஷயத்தில் பாரதந்திரியம் ' அவனுடைய உடைமைப் பொருள் ' என்ற காரணத்தைப் பற்றியதாகையாலே ஔபாதிகமுமாய், பிராட்டி அவனுக்கு உடைமைப்பொருளாகவிருக்கும் தன்மை என்றும் உள்ளதொன்றாகையாலே காரணம் பற்றிவாராத [2]பகவத் பாரதந்திரியம் போன்று நித்தியமுமாயிருக்கும். இறைவனுக்குப் பிராட்டி விஷயத்தில் பாரதந்திரியம் தன்னைப்பற்றினவள் என்ற காரணத்தாலே வந்ததாகையாலே ஔபாதிகமுமாய் [3]அவ்வுபாதி நித்தியமாகையாலே அது தானும் நித்தியமுமாயிருக்கும் என்றபடி. உண்டு என்னுமல் ' உண்டிறே ' என்றது, இப்பொருளில் பிரமாணப் பிரசித்தியைத் தோற்றுவிக்கைக்காக. (78)

## 159

[4]அநித்தியமான இருவர் பாரதந்திரியமும் குலைவதும் அத்தாலே.

என்பது சூத்திரம்.

அவ :—' இவ்வளவே அன்று; இன்னமும் இதற்கு ஒரு பிரயோஜனம் உண்டு ' என்கிறார் இச்சூத்திரத்தால்.

---

இறைவன் முன்னிடும்போது இறைவனுக்கு ஆச்ரித பாரதந்திரியமும் சித்திக்கும் எனலுமாம்.

[1] ஔபாதிகம் - காரணம் பற்றி வந்தது. நித்தியம் - என்று முள்ளது. இருவர்க்கும் - சேதனனுக்கும் இறைவனுக்கும்.

[2] பகவத் பாரதந்திரியம் - பகவான் விஷயத்தில் பாரதந்திரியம்.

[3] அவ்வுபாதி - தன்னைப்பற்றியிருத்தலாகிற அந்தக் காரணம்.

[4] ' அநித்தியமான பாரதந்திரியம் ' எனக் கூட்டுக. குலைவது - அழிவது. அத்தாலே - அந்தப் புருஷகாரத்தாலே.

வியாக் :—'அநித்தியமான இருவர் பாரதந்திரியமும்' என்றது, கர்ம பாரதந்திரியத்தை. அவற்றுள் சேதனனுடைய கர்ம பாரதந்திரியமாவது, அவசியம் அநுபவிக்கக் கடவவான நல்வினை தீவினைகளின் வசத்திலே இழுப்புண்டு, அவற்றிலே அழுந்திக்கிடக்கை. இறைவன் கர்மங்கட்குப் பரதந்திரப்பட்டிருத்தலாவது, 'தான் செய்த கர்மத்தின் பலனைத் தான் அநுபவிக்கிறானாகில் நாம் செய்வது என்?' என்று இவன் செய்த கர்மங்களையே பிரதாநமாக்கி, அக்கர்மங்கட்குத் தகுதியாக நடத்திக்கொண்டு செல்லுதல். இங்ஙனம் அழுந்திக்கிடத்தலும், நடத்திக்கொண்டு செல்லுதலும்[1] 'எல்லாப் பாவங்களினின்றும் உன்னை விடுவிக்கிறேன்,' என்னுமளவும் ஆகையாலே, இந்தப் பாரதந்திரியத்தை 'அநித்தியம்' என்கிறார்.

இவை [2]புருஷகாரத்தை முன்னிடுகையாலே குலைகையாவது, இந்தச் சேதனன் முன்னிடுமளவில் இறைவனைத் திருத்தியும், இறைவன் முன்னிடுமளவில் இச்சேதனனைத் திருத்தியும், இரண்டு தலையும் இவன் காக்கப்படும் பொருள், அவன் காக்கின்றவன் என்ற முறையிலே சேரும்படி பண்ணுகையாலே இருவருடைய பாரதந்திரியமும் தன்னடையே நீங்குதலாம். (79)

## 160

[3]ஸஸாக்ஷிகமாகையாலே இப்பந்தத்தை இருவராலும் இல்லை செய்யப் போகாது.

என்பது சூத்திரம்.

அவ :—'அநாதி காலம் தனக்கு உரியனாய் யாதானும் பற்றி நீங்கித் திரிந்த இவன் இன்றிறே அன்பு செலுத்திற்று. இச்

---

[1] 'ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்பது, ஸ்ரீகீதை, 18.

[2] புருஷகார பலத்தாலே 'இவன் காக்கப்படும் பொருள்; அவன் காக்கிறவன்' என்பது சித்திக்கிறது. சித்திக்கவே, கர்ம பாரதந்திரியம் தானே குலைந்துவிடும் என்பது கருத்து. குலைவது - தன்வினை.

[3] ஸஸாக்ஷிகம் - சாக்ஷியோடு கூடியுள்ளது. சாக்ஷி - நேரே பார்த்தவன், பார்த்தவள், பார்த்தவர். இங்கே சாக்ஷி என்றது பிராட்டியை. இப்பந்தத்தை - இவன் காக்கப்படும் பொருள் அவன் காப்பவன் என்ற உறவு முறையை.

சரீரத்தோடு கூடியிருக்கையாலே தீயவாசனை [1]மேலிட்டு, இவனுடைய பற்றுகையாலும் அவனுடைய அங்கீகாரத்தாலும் உண்டான 'இவன் காக்கப்படும் பொருள், அவன் காப்பவன்' என்ற இந்த உறவு முறையை இல்லை செய்து, பழையபடியே [2]போகப் பார்த்தல், தடையில்லாத சுவதந்திரத்தையுடையவனும் கர்மங்கட்குத் தகுதியாக இவனைப் பிறத்தல் இறத்தல்களாகிற விளையாட்டிலே பல காலம் உபயோகித்துக்கொண்டு போந்த இறைவன்தான் இவ்வுறவு முறையை இல்லை செய்து முன்பு போலவே இவனைக் கர்மங்கட்குத் தகுதியாக நடத்திக்கொண்டு போகப் பார்த்தல் செய்யிலோ?' எனின், அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஸஸாக்ஷிகம் ஆகையாலே இப்பந்தத்தை இருவராலும் இல்லை செய்யப்போகாது,' என்றது, 'காக்கப்படும் பொருள், காப்பவன்' என்ற இந்த உறவு முறை சேதனனும் இறைவனுமாகிய இருவரும் அறிந்ததாக வந்ததன்றிக்கே, புருஷகாரமாகிற சாக்ஷியோடு கூடினதாக வந்ததாகையாலே, இந்த உறவு முறையை இருவராலும் அழிய மாறப்போகாது என்றபடி. (80)

## 161

[3]'என்னை நெகிழ்க்கிலும்', 'கோலமலர்ப் பாவைக்கு அன்பாகிய'

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறியதற்குப் பிரமாணம் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

---

[1] 'மேலிட்டு' என்ற இதனை மேலே வருகின்ற 'இல்லை செய்து' என்றதனோடு கூட்டுக.

[2] 'போகப்பார்த்தல்' என்னுமிதனை, மேலே வருகின்ற 'போகப் பார்த்தல் செய்யிலோ' என்றதனோடு கூட்டுக.

[3] 'என்னை நெகிழ்க்கிலும்' என்ற திருப்பாசுரம் திருவாய்மொழி, 1.7 : 8. 'கோலமலர்ப்பாவைக்கு' என்ற திருப்பாசுரம், திருவாய்மொழி, 10.10 : 7.

**வியாக்:**—'என்னை நெகிழ்க்கிலும்—[1] 'நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக நித்தியசூரிகள் நடுவே என்னை அங்கீகரித்த பின்பு சர்வ சக்தியான தானும் கைவிடமாட்டான்' என் கையாலே 'என்னை நெகிழ்க்கிலும்' என்கிற திருப்பாசுரம், அவனாலே இவ்வுறவு முறையை இல்லை செய்யப் போகாமைக் குப் பிரமாணம். கோல மலர்ப்பாவைக்கு அன்பாகிய [2]'பெரிய பிராட்டியார்க்கு அன்பன் ஆகையாலே அவளாலே அங்கீகரிக்கப் பட்ட பொருளான என் பக்கலிலே மிக்க அன்புடையனாய், 'அரியன செய்து என்னோடே வந்து கலந்த உன்னைப் பெற்று வைத்து இனி நழுவ விடுவனோ?' என்கையாலே 'கோல மலர்ப்பாவைக்கு' என்கிற திருப்பாசுரம், பெரிய பிராட்டியார் முன்னாக வந்த உறவு முறையைச் சேதனனாலும் இல்லை செய்யப் போகாமைக்குப் பிரமாணம். (81)

## 162

> [3] **கர்மணி வியுத்பத்தியில் ஸ்வரூப குணங் களால் வருகிற கர்த்ரு சங்கோச ராஹித்யத்தை நினைப்பது.**

என்பது சூத்திரம்.

**அவ:**—'ஸ ஸாக்ஷிகமான இப்பந்தத்தை—இல்லை செய்யப் போகாது,' என்றது, சாக்ஷியான பிராட்டி விஷயத்தில்

---

1 'என்னை நெகிழ்க்கிலும்' என்ற திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'நப்பின்னைப் பிராட்டி' என்று தொடங்கி. சர்வ சக்தி - எல்லா ஆற்றலையுமுடைய இறைவன்.

2 'கோலமலர்ப்பாவை' என்ற திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பெரிய பிராட்டியார்' என்று தொடங்கி. 'கோல வராகம் ஒன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்' என்ற அடியை நோக்கி, 'அரியன செய்து' என்கிறார்.

3 கர்மணி வியுத்பத்தியில் - செயப்பாட்டு வினைப்பொருளில் தோன்றுகிற. ஸ்வரூப குணங்களால் வருகிற - சொரூபத்தாலும் குணத்தாலும் வருகின்ற. கர்த்துரு - கர்த்தாக்களுடைய (வினைமுதல்); சங்கோசம் - குறைவு. ராஹித்யம் - இல்லாதது. 'ஸ்வரூப குணங் களால் வருகின்ற' என்றதனை, 'ஸ்வரூபத்தால் வருகின்ற, குணத்தால் வருகின்ற' என்று தனித்தனியே கூட்டுக. ஸ்வரூபம் - சேஷத்துவ சொரூபம்; இது ஆன்மாக்களுக்கு உரியது. குணம் - காதல் குணம்;

இருவர்க்கும் உண்டான நித்தியமான பாரதந்திரியத்தைப் பற்ற ஆகையாலே, இருவர்க்கும் பிராட்டி விஷயத்தில் உண்டான நித்தியமான பாரதந்திரியத்திற்குப் பிரமாணம் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'கர்மணி வியுத்பத்தி' என்றது, [1]'ஸ்ரீஞ்– ஸேவாயாம்' என்ற தாதுவிலே 'ஸ்ரீயதே' என்ற வியுத் பத்தியை. இதற்குப் பொருள் 'சேவிக்கப்படாநின்றாள்' என்பது. இந்த வியுத்பத்தியில் ஸ்வரூப குணங்களால் வருகிற கர்த்ரு சங்கோச ராஹித்தியமாவது, சேஷத்வமாகிற சொரூபத் தாலும் கழிபெருங்காதலாகிற குணத்தாலும் வருகிற சேதனனும் [2]பரம சேதனனும் ஆகிற சேவிக்கிற கர்த்தாக்களுக்குக் குறைவு இல்லாமை; அதாவது, சேதனனுக்கும் ஈச்வரனுக்கும் இவள் விஷயத்தில் உண்டான சேவை இடைவிடாமல் செல்லுதல். இத்தை 'நினைப்பது' என்றது, இப்படி இவள் விஷயத்தில் இருவர்க்கும் உண்டான பாரதந்திரியத்தை நினைப்பது என்றபடி. (82)

## 163

[3] அதிகாரி திரயத்துக்கும் புருஷகாரம் அவர்ஜநீயம்.

என்பது சூத்திரம்.

---

இது இறைவனுக்குரியது. ஆக, எல்லா ஆன்மாக்களும் சேஷத்துவ சொரூபத்தாலே பிராட்டியை வணங்குகின்றார்கள். 'இறைவன் காதலாலே பிராட்டியை வணங்குகிறான்' என்பது பொருள். காதலுக் குரிய மனைவியைக் கழிபெருங்காதலையுடைய கணவன் வணங்குதல் தமிழ் நூல்களிலும் காணல் தகும். 'எல்லாராலும் வணங்கப்படா நின்றாள் பிராட்டி' என்றதனால், பிராட்டி விஷயத்தில் இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள பாரதந்திரியம் தோன்றுதல் காண்க. 'கர்த்துரு சங்கோசராஹித்யத்தால்' சித்திப்பது இந்தப் பாரதந்திரியமே. இதனையே 'நினைப்பது' என்கிறார்.

1 'ஸ்ரீ' என்பதற்கு ஆறு வகையாக வியுத்பத்தி கூறப்பட்டிருக் கின்றன நூல்களில். அவற்றுள் ஒன்று 'ஸ்ரீஞ்-ஸேவாயாம்' என்ற தாதுவிலே 'ஸ்ரீயதே' என்ற வியுத்பத்தி. ஏனை ஐந்தனையும் மேலே காண்க.

2 பரமசேதனன் - இறைவன்.

3 அதிகாரி திரயத்துக்கும் - மூவகைப்பட்ட அதிகாரிகளுக்கும். திரயம் - மூன்று. அவர்ஜநீயம் - எப்பொழுதும் விடவொண்ணாதது.

அவ :—'இப்படி இருக்கையால் இந்தப் புருஷகாரம் பிரபத்தி செய்யும் அதிகாரிகள் எல்லார்க்கும் அவசியம் வேண்டத்தக்கது' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அதிகாரி திரயத்துக்கும்' என்றது, [1]அஜ்ஞர், ஞாநாதிகர், பக்தி பரவசர் என்ற மூன்று அதிகாரிகளுக்கும் என்றபடி. இவர்களுக்குப் 'புருஷகாரம் அவர்ஜநீயம்' என்றது, குற்றத்தைப் பொறுப்பிக்கை [2]முதலானவற்றிற்குப் புருஷகாரத்தின் தொடர்பு வேண்டுகையாலே எப்பொழுதும் கைவிடவொண்ணாது என்றபடி.

'அன்றிக்கே, இப்புருஷகாரந்தான் வேறு பயன்களைக் கருதாதவர்களாய்ப் பிரபத்தி செய்யுமவர்களுக்கு மாத்திர மேயோ? வேறு பயன்களைக் கருதுகின்றவர்களாய்ப் பிரபத்தி பண்ணுமவர்களுக்கும் வேண்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால் என்னலுமாம்.

இப்பொருளில், அதிகாரி திரயத்துக்கும் என்றது, [3]ஐச்வரிய கைவல்ய பகவத் சரணார்த்திகளை. 'இவர்கள் மூவர்க்கும் புருஷ காரம் அவர்ஜநீயம்' என்றது, தாம் தாம் விரும்பியவற்றைப் பெறுதற்கு ஈச்வரனை உபாயமாகப் பற்றுமளவில் இவர்கள் குற்றங்களைப் பொறுத்து அவன் அங்கீகரிக்கும்படி பண்ணு கைக்குப் புருஷகாரம் அவசியம் வேண்டப்படுவதாம் என்றபடி.

[4]'பூர்வ வாக்கியத்தில் புருஷகார பூர்வகமான உபாய வரணம் பிரயோஜநாந்தரபரர்க்கும் பொதுவாகையாலேயிறே,

---

[1] 43 முதல் 53 முடிய உள்ள சூத்திரங்களைக் காண்க.

[2] 'முதலானவற்றிற்கு' என்றதனால், சொரூபசித்தி, கர்ம பார தந்திரியம் குலைதல் என்னுமிவற்றையும் கொள்க.

[3] இம்மூவருள், ஐச்வரியத்தை விரும்புகிறவர்களும், கைவல்யத்தை விரும்புகிறவர்களும் ஆகிற இருவரும் வேறு பலன்களைக் கருதிப் பிரபத்தி செய்யுமவர்கள். பகவத் சரணார்த்தி, வேறு ஒரு பலனையும் கருதாது பிரபத்தி செய்யுமவன். பகவத்சரணார்த்தி - பகவானுடைய அநுபவத்தை விரும்புகிறவன்.

[4] இரண்டாவதாகக் கூறிய பொருளில் தெரிவித்த மூவருள் முதல் இருவரும் பிரபத்திபண்ணுகிற காலத்தில் அவர்களுக்கும் புருஷகாரம்

உத்தர வாக்கியத்தாலே அநந்யப் பிரயோஜனத்வத்தைப் பிரகாசிப்பிக்க வேண்டுகிறது ; பூர்வ வாக்கியத்தில் பிரதிபாதித மான சாதன விசேஷம் பல சதுஷ்டய சாதாரணமாயிறே இருப்பது ; அதில் இவ்வதிகாரிக்கு அபிலஷிதமான பல விசேஷம் இன்னது என்னுமிடத்தைப் பிரகாசிப்பிக்கிறது இவ்வாக்யம்,' என்று பரந்தபடியிலும், [1] 'கீழ்ச்சொன்ன சாதனம் பல சதுஷ்டய சாதாரணமாயிருக்கையாலே, இவனுக்கு அபேக்ஷித மான பல விசேஷத்தைச் சொல்லுகிறது' என்று ஸ்ரீய:பதிப் படியிலும்[2] 'உத்தர வாக்கியத்தாலே பிராப்யம் சொல்லுகிறது ; பிராப்யாந்தரத்திற்கு அன்று என்கை' என்பது போன்றவை களாலே முமுக்ஷுப்படியிலும் [3]இவர் தாமே அருளிச்செய்தா றிறே. [4] 'திருமாலைக் கைதொழுவர்', [5] 'அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை' என்கிறபடியே புருஷகாரம் முன்னாகப் பற்றிப் பிரயோஜனங்களைக் கொண்டு அகலாதே, அவற்றை ஒழித்து, [6] 'ஒண்டொடியாள் திருமகளும்' அவனுமான சேர்த்தி யில் அடிமையைப்பெறு என்று கீழ்ச்சொன்ன உபாய பலத்தைக் காட்டுகிறது [7] பிற்கூறு' என்றிறே இவர்தம் [8] திருத்தம்பி யாரும் அருளிச்செயல் ரஹஸ்யத்தில் அருளிச்செய்தது.

---

வேண்டும் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் 'பூர்வவாக்கியத் தில்' என்று தொடங்கி. பூர்வவாக்கியம் - துவயத்தின் முன்வாக்கியம். உபாயவரணம் - பிரபத்தி. உத்தர வாக்கியம் - துவயத்தின் பின் வாக்கியம். பல சதுஷ்டயம் - இழந்த செல்வம், புதிய செல்வம், கைவல்யம், மோக்ஷம் என்னும் நால்வகைப்பட்ட பலன்கள். சாதாரணம் - பொது. இவ்வதிகாரிக்கு - கைங்கரியத்தை விரும்பும் அதிகாரிக்கு. அபிலஷிதம் - விருப்பம். இவ்வாக்கியம் - துவயத்தின் முன் வாக்கியம்.

[1] கீழ்ச்சொன்ன - துவயத்தின் முன் வாக்கியத்திற்கூறிய. பல சதுஷ்டயம் - நால்வகைப்பட்ட பலன்கள். இவற்றை மேலே காண்க. இவனுக்கு - நாலாம் அதிகாரிக்கு. சொல்லுகிறது - பின் வாக்கியத்தில் சொல்லுகிறது.

[2] உத்தர வாக்கியம் - துவயத்தின் பின் வாக்கியம். பிராப்யம் - பலன். பிராப்ய அந்தரம் - மற்றைய பலன்கள்.

[3] இவர் தாமே - இந்நூலாசிரியரே ; பிள்ளை லோகாசாரியர்.

[4] முதல் திருவந்தாதி, 52.

[5] திருவாய்மொழி, 1. 5 : 7.

[6] திருவாய்மொழி, 4. 9 : 10.

[7] பிற்கூறு - துவயத்தின் பின் வாக்கியம்.

[8] திருத்தம்பியார் - அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.

ஆக, 'இவன் அவனைப் பெற' என்ற சூத்திர முதல் இச்சூத்திரமுடிய, ஸ்வகதஸ்வீகாரம் உபாயமாகாது என்பதுவும், பரகதஸ்வீகாரம் உபாயமாகும் என்பதுவும், பரகதஸ்வீகாரத்தினுடைய வலியுடைமையும், அவளே அங்கீகரிக்குமளவிலும் புருஷகாரம் முன்னாகவே அங்கீகரிக்கும்படியும், இருவரும் இப்புருஷகாரத்தை முன்னிடுதற்குப் பிரயோஜனம் இன்னது என்னுமிடமும், பிரபத்தி அதிகாரிகள் எல்லார்க்கும் புருஷகாரம் அவசியம் வேண்டற்பாலது என்னுமிடமும் சொல்லப்பட்டன. (83)

முதற்பிரகரணத்திலே புருஷகார வைபவத்தைக் கூறும் முகத்தால் 'ஸ்ரீமத்' என்னும் பதத்தின் பொருளையும், உபாய வைபவத்தைக் கூறுமுகத்தால் 'நாராயண சரணௌ ஶரணம்' என்கிற பதங்களின் பொருள்களையும் அருளிச்செய்த பின்னர், 'பிரபத்திக்குத் தேச நியமமும்' என்ற சூத்திரமுதல் 'தர்ம புத்திராதிகளுக்கு' என்று தொடங்கும் சூத்திரம் இறுதியாகப் 'பிரபத்யே' என்ற பதத்தால் சொல்லப்பட்ட பிரபத்தியினுடைய தேசம் முதலானவற்றின் நியமம் இன்மையை அருளிச்செய்து, அந்தப் பிரபத்திக்கு விஷய நியமம் சொல்லுகைக்காக 'விஷய நியமமாவது குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை' என்ற சூத்திரம் முதல் 'இதுதான் சாஸ்திரங்களால்' என்று தொடங்கும் சூத்திரம் இறுதியாக 'நாராயண' பதத்தின் பொருளை மீளவும் வெளிப்படையாக அருளிச்செய்து, 'பிரபத்யே' என்ற தன்மை இடத்தாலே கிடைத்த அதிகாரியை 'இதில் பிரபத்தி பண்ணும் அதிகாரிகள் மூவர்' என்ற சூத்திரத்தால் அருளிச்செய்து, பிரபத்தியில் சாதனம் ஆகிற தன்மை இல்லாமையையும் பிரபத்தி அதிகாரத்திற்குவேண்டப் படுவனவான சக்தி குலைதல் நாணம் குலைதல் தன் முயற்சி குலைதல் சமம் தமம் என்னும் இவற்றையுடையனாதல் முதலானவற்றையும், பிரபத்திக்கு அங்கமாக விடத்தக்கனவான மற்றைய உபாயங்களினுடைய குற்றங்களின் மிகுதியையும், அதற்கு மறுதலையாகப் பிரபத்தியினுடைய குற்றமின்மை முதலானவைகளையும், பிரபத்தியைப் பற்றிப் பேசிக்கொண்டு வரும் இடமாகையாலே வேறு முகத்தாலே சுவகதஸ்வீகாரம் உபாயம் ஆகாத தன்மையையும், பரகதஸ்வீகாரத்தினுடைய உபாயமாகும் தன்மையையும், அந்தப் பரகதஸ்வீகாரத்தினுடைய வலியையும், இறைவனே வந்து அங்கீகரிக்குமளவிலும் புருஷகாரத்தை

முன்னிட்டே அங்கீகரிப்பான் என்னுமிடத்தையும், சேதனன் இறைவன் என்னும் இருவரும் புருஷகாரத்தை முன்னிடுவதற்கு உண்டான பிரயோஜன விசேடங்களையும், மூவகைப்பட்ட அதிகாரிகட்கும் புருஷகாரம் இன்றியமையாது வேண்டப்படுவது ஒன்றும் என்னுமதனையும் அருளிச்செய்கையாலே இத்துணையும், துவயத்தின் முன் வாக்கியப்பொருளை அருளிச்செய்தாராயிற்று.

## 164

**தனக்குத்தான் தேடும் நன்மை[1] தீமையோ-பாதி விலக்காய் இருக்கும்.**

என்பது சூத்திரம்.

அவ :—[2] இந்தப் பிரகரணத்தின் முதலிலே 'உபாயத்துக்கு' என்று தொடங்கி [3]உபேய அதிகாரமும் சில சொல்லிற்றேயாகிலும் அது பிராசங்கிகமித்தனை. இனி, [3] உபேய அதிகாரபரமான, பிரகரணத்தின் [4] எஞ்சியபாகத்தாலும் துவயத்தின் பின் வாக்கியத்தின் பொருளை அருளிச்செய்கிறார். அது செய்கிறவிடத்தில், பாஷியகாரர் கத்யத்திரயத்தில் பின் வாக்கியத்தின் பொருளைச் சொல்லியருளின முறையிலே [5]'நமః'

[1] ஈண்டு 'நன்மை' என்றது சேஷத்வத்தை. தீமையோபாதி—தீமையைப்போன்று. ஈண்டுத் தீமையாவது 'நான் எனக்கு உரியன்' என்னும் அகங்காரம். அன்றிப் பாவங்கள் என்னவுமாம்.

[2] 81வது சூத்திரம் முதலியவற்றில் காணல் தகும்.

[3] 'உபேய அதிகார பரமான' என்றதனைப் பின்னே வருகின்ற 'பின் வாக்கியத்தின்' என்றதனோடு கூட்டுக. உபேய அதிகார பரமான—துவயத்தின் பின் வாக்கியம் என்க. துவயத்தின் பின் வாக்கியம் உபேய பரமானது என்பதனைப் பின்வரும் சூத்திரங்களால் உணர்தல் தகும். "உத்தர வாக்கியத்தாலே பிராப்யம் சொல்லுகிறது", "பிராப்யாந்தரத்துக்கு அன்று என்கை" முமுக்ஷுப்படி, 160, 161. சூத்.

[4] 'எஞ்சிய பாகத்தாலும்' என்ற உம்மை மேலே கூறிய 81வது சூத்திரம் முதலானவற்றைத் தழுவுகிறது.

[5] விரோதி நீங்குதலாகிற காரணத்தை முன்னே சொல்லவேண்டிய முறையிலே நமః பதத்தை முன்னே சொல்லுகிறார். "நமః - கைங்கரியத்தில் களையறுக்கிறது," "களையாவது தனக்கு என்னப் பண்ணு

பதத்தின் பொருள் மூன்ளுக அருளிச்செய்கிருர். அதில் [1] இந்த 'நம:' பதந்தான் பேற்றிற்குத் தடைகளாகவுள்ளனவற்றை விலக்குதலேப் பற்றிச் சொல்லுகிறதாகையாலே, பேற்றிற்குத் தடைகளாகவுள்ளனவற்றைக் காட்டுவதாகத் திருவுள்ளம்பற்றி, முதலில் அவற்றிலே ஒன்றை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

[2] மேலே 'ஸ்ரீபரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாயிற்று' என்று தன்மாட்டு உள்ள பிரபத்தி இறைவனுடைய திருவுள்ளத்திற்கு ஒத்ததாகாத போது தீமையாய்த்தலேக்கட்டும் என்று சொன்ன அதளுலே உபாய நிலேயில் தனக்குத்தான் தேடும் நன்மை தீமையாய்த் தலேக்கட்டும் என்னுமிடம் அருளிச்செய்தாராய், இந்தப் பிரசங்கத்திலே உபேயநிலேயிலும் தான் தனக்குத் தேடும் நன்மை தீமையாம் என்னுமிடம் அருளிச்செய்கிருர் என்று மேலதளேடு இதற்கு இயைபு.

**வியாக் :—**' தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காய் இருக்கும் ' என்றது, சேஷியானவன் போகதசையில் தன் கழிபெருங்காதலாலே [3] ' ஆருயிர் பட்டது எனதுயிர்பட்டது ' என்னும்படி தன் திறத்தில் மிகவும் தாழ நின்று கலக்குமளவில் ' நாம் சேஷமாகவிருக்கும் பொருள் அன்ளே ? நம் சேஷத்வத்தை நோக்கவேண்டாவோ ?' என்று தன்னுடைய தாழ்வினே நினேந்து, பிற்காலித்துத் தனக்குத்தான் தேடுகிற சேஷத்துவமாகிற நன்மை, அநாதி காலம் ' நான் எனக்கு உரியவன் ' என்றிருந்த தீமையைப் போன்று அவன் போகத்திற்குத் தடையாகவிருக்கும் என்றபடி.

இனி, ' தீமை' என்பதற்குச் செய்யத்தகாத காரியங்களேச் செய்தலாகிற பாவங்கள் என்று பொருள் கோடலுமாம். (84)

---

வது," "இதில் அவித்யாதிகளும் கழியுண்ணும்" என்னும் முமுக்ஷுப்படி ஈண்டு நினேத்தல் தகும். சூத். 181, 182, 183.

[1] திருமந்திரத்திலுள்ள நமః பதமானது பிராபக விரோதியையும் கழிக்கிறதாகையாலே, அது போலன்றி, இது பிராப்ய விரோதியைக் கழிக்கிறது என்பார் இந்த ' நமః பதந்தான் ' என்கிருர்.

[2] ' மேலே ' என்றது, 145ஆம் சூத்திரத்தை.

[3] திருவாய்மொழி, 9.6:9

## 165

அழகுக்கு இட்ட சட்டை[1] அணைக்கைக்கு விரோதியாமா போலே.

என்பது சூத்திரம்.

அவ :—'சேஷியினுடைய விருப்பத்திற்கு உடலாய் ஆன்மாவிற்கு அலங்காரமுமாயிருக்கிற சேஷத்துவம், போகத்திற்குத் தடையாகிறபடி எங்ஙனே?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—அழகுக்கு இட்ட சட்டை அணைக்கைக்கு விரோதியாமா போலே' என்றது, ஒரு பெண்ணிற்கு அழகிற்கு இட்ட சட்டை அவள் கணவன் உகப்பிற்கு விஷயமுமாய் அவளுக்கு அலங்காரமுமாய் இருந்ததேயாகிலும், புணர்ச்சிக் காலத்தில் கலவிக்குத் தடையாமாறு போலே இச்சேஷத்துவமும் போகத்திற்குத் தடையாகவிருக்கும் என்றபடி. (85)

## 166

ஹாரோபி[2]

என்பது சூத்திரம்.

அவ :—அழகுக்கு உடலானது அநுபவத்திற்குத் தடையாம் என்னுமிடத்தைச் சேஷியினுடைய வார்த்தையாலே விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'கலவிக் காலத்தில் தடையாகவிருக்கும் என்ற அச்சமுள்ள பிராட்டியாலே ஒரு முத்து வடமும் தன் கழுத்தில் அணிந்துகொள்ளப்படவில்லை. அத்தகைய எங்கள் இருவர்க்கும் நடுவில் மலைகளும் நதிகளும் மரங்களும் உளவாயிருக்கின்றன' என்கிறபடியே கலவிக்காலத்தில் கலவிக்குத் தடையாம்

[1] சட்டை - கச்சு. மெய்புகு கருவியுமாம். சட்டையைக் கூறியது மற்றை ஆடை ஆபரணங்களுக்கும் உபலக்ஷணம். விரோதியாமா போலே, 'தனக்குத்தான் தேடும் நன்மை விலக்காய் இருக்கும்' என மேலைச் சூத்திரத்தோடு இதனை முடிக்க.

[2] 'ஹாரோபி' என்பது ஸ்ரீராமபிரான் வார்த்தை. ஸ்ரீராமாயணம்.
ஹாரோபி நார்ப்பித: கண்டே ஸ்பர்ச ஸம்ரோத பீருணா
ஆவயோரந்தரே ஜாதா: பர்வதா: ஸரிதோத்ருமா:

என்னும் அச்சத்தாலே பிராட்டி தனது திருக்கழுத்திலே ஒரு முத்து வடமும் உட்படப்பூண்பதில்லை என்றாரிறே பெருமாள். 'பீருணு'[1] என்றது பால்வழு[2]; ஆர்ஷம்.

அன்றிக்கே, அழகுக்கு இட்ட சட்டை அணைக்கைக்கு விரோதியாம் என்னுமிடம் அறிவிக்கையே இச்சூத்திரத்திற்குப் பயன் ஆக்கிப் பாலுக்குத் தகுதியாகப் பெருமாள் தம்மளவிலே பொருள் கூறலுமாம். (86)

## 167

[3] புண்ணியம் போலே பாரதந்திரியமும் பராநுபவத்துக்கு விலக்கு.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனால் பின்னை, பாரதந்திரியமேயோ நல்லது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

1 'பீருணு' என்றது மூன்றும் வேற்றுமை உருபு ஏற்ற ஆண்பாற் சொல். இச்சொல்லிற்கு இங்கு 'அச்சமுள்ள பிராட்டியாலே' என்று பொருள் கூறப்படுவதால் 'பால் வழு' என்கிறார். செய்யுளில் பால் வழு வந்ததற்குச்சமாதானம் கூறுகிறார் 'ஆரிடம்' என்று. ஆரிடம்— வேத சம்பந்தப்பட்டது. வேத வாக்கியங்களைப் பொதுவான மற்றை இலக்கணங்களைக்கொண்டு பார்க்கலாகாது என்பது கருத்து. ஸ்ரீராமாயணம் வேதமே என்பது வைதிகர் முடிபு. ரிஷிகளால் செய்யப்படுவது ஆரிடம் என்றும், ரிஷிகளைப் போன்றவர்களால் செய்யப்படுவது ஆரிடப்போலி என்றும் யாப்பருங்கல விருத்தியில் கூறப்படுகின்றன.

2 பால் வழு இல்லாமலே பொருள் கூறலுமாம் என்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி. மேலே கூறிய பொருள் பிராட்டியினாலே அணிந்துகொள்ளப்படவில்லை என்பது. இங்குக் கூறும் இரண்டாவது பொருள் இராமபிரானாலே அணியப்படவில்லை என்பது. பெண்களுக்கு ஆண்கள் அலங்காரம் செய்வது அகப்பொருள் இலக்கியங்களில் காண்க.

"காட்டும் திறல்வெஞ் சிலைவிசயன்
கையால் வகிர்ந்து கடிகொண்மலர்
சூட்டும் பனிச்சை இவண்புழுதித்
துகள்ஏ றியதென் றழுதுநைவார்"

என்பது வில்லி பாரதம், சூது போர்.

3 'புண்ணியம்' என்றது, ஈண்டுச் சேஷத்வத்தை. நல்வினை எனலுமாம். பர அநுபவம் - இறைவனுடைய அநுபவம். பரன் - இறைவன்.

**வியாக் :**—'புண்ணியம் போலே' என்றது, மேலே 'நன்மை' என்ற சொல்லாலே சொன்ன சேஷத்துவத்தைப் போலே என்றபடி. 'பாரதந்திரியமும் பர அநுபவத்துக்கு விலக்கு' என்றது, அந்தச் சேஷத்துவம், மேலே கூறியவாறே தன்னுடைய தாழ்வினை நினைத்தலாலே இருப்க்கைக்கு உறுப்பாய்க் கொண்டு யாதொருபடி போகத்திற்குத் தடையாக நிற்கும். அப்படியே, போக நிலையில் அவனுக்கு [1] எதிர் விழி கொடாமல் அறிவில் பொருள் போலே கிடத்தற்கு உறுப்பான கேவல பாரதந்திரியமும், எதிர் விழியை விரும்புகின்றவனுன ஈச்வரனுடைய போகத்திற்கு மிடறு பிடியாம் என்றபடி.

அன்றிக்கே, புண்ணியம் என்றது நல்வினையைச் சொல்லுவதாய்க் கொண்டு, அது யாதொருபடி பாவத்தைக்காட்டிலும் வேறுபட்டதாயிருக்கச் செய்தேயும், [2] பகவானை அடைதற்குத் தடையாகவிருக்கும். அப்படியே, இருய்க்கைக்கு உறுப்பான சேஷத்துவத்தைக்காட்டிலும், அறிவில் பொருள் போலே எதிர்த் தலை இட்டது வழக்காய் இருக்கைக்கு உறுப்பாகையாலே வேறுபட்டதான பாரதந்திரியமும், எதிர்விழி கொடுப்பதற்கு உறுப்பு அல்லாமையாலே இறைவனுடைய அநுபவத்திற்குத் தடையாம் என்று பொருள் கூறலுமாம்.

இதனுல் கேவல [3] சேஷத்துவமும் கேவல பாரதந்திரியமும் [4] ஒவ்வொரு தன்மைகளால் போகத்திற்குத் தடைகளாக நிற்கும். பாரதந்திரியத்தோடே கூடின சேஷத்துவமே உத்தேசியம் என்பதனைத் தெரிவித்தபடி. (87)

---

[1] 'எதிர்விழி' என்றது, ஈண்டுச் சேஷியினுடைய எண்ணத்திற்குத் தகுதியாகத் தானும் சில செயல்களைச் செய்தல்.

[2] "இருள்சேர் இருவினையும் சேரா" என்ற திருக்குறளின் விசேடவுரையை இங்குப் பார்த்தல் தகும்.

[3] கேவலம் - ஒன்றற்கு ஒன்று துணையாகாமல் தனித்து நிற்கும் இருப்பு.

[4] சேஷத்வம் - அவனுக்கு விருப்பமில்லாத நைச்யாநுசந்தானத்திற்குக் காரணமாகலானும், பாரதந்திரியம் அவனுக்கு விருப்பமான எதிர் விழி விழித்தலுக்குத் தடையாகவிருப்பதாலும் 'ஒவ்வொரு தன்மைகளால்' என்கிருர்.

## 168

[1] குணம் போலே தோஷ நிவிருத்தி.

என்பது சூத்திரம்.

**அவ:**—இப்படி உபேயநிலையில் சேஷத்துவமும் பாரதந்திரியமும் இறைவனுடைய அனுபவத்திற்குத் தடையாம்படியை அருளிச் செய்த பின்னர், இறைவனை அடைகிற நிலையில் இவனுடைய நிர்ப்பந்தமூலமாக உண்டாகின்ற இவ்வுடலின் சம்பந்த நீக்கமும், இறைவனுடைய அநுபவத்திற்கு விலக்காம்படியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'குணம்' என்றது, மேலே இறைவனுடைய அநுபவத்திற்குத் தடைகளாகச் சொல்லப்பட்ட சேஷத்துவம் பாரதந்திரியம் என்னும் இரண்டனையும். [2] இவைதாம் ஆன்மாவிற்கு அந்தரங்கக் குணங்களாகவிறே இருப்பன? இதுபோலே 'தோஷ நிவிருத்தி' என்றது, ஆன்மகுணங்களாகிற இவை இரண்டும் மேலே கூறியவாறே யாதொருபடி இறைவனுடைய அனுபவத்திற்குத் தடையாகின்றன? அப்படியே இவன் நிர்ப்பந்தித்துப் பண்ணுவித்துக்கொள்ளுகிற சரீரசம்பந்தமாகிற தோஷத்தினுடைய விலக்கும் என்றபடி.

முடிவான சரீரமாகையாலே இச்சரீரத்தோடே சில காலம் வைத்து இவனை அநுபவிக்க விரும்புகிற இறைவனுடைய அநுபவத்திற்குத் தடையாம் என்றபடி.

---

[1] 'குணம் போலே' என்றது மேலே கூறிய சேஷத்வமும் பாரதந்திரியமும் ஆகிற குணங்கள் பரனுடைய அநுபவத்திற்குத் தடைகள் ஆயினபோன்று என்றபடி. குணம் என்றது சாதி ஒருமை. அன்றி மேற்சூத்திரத்திற்கூறிய பாரதந்திரிய குணம் ஒன்றனை மாத்திரம் கூறுகிறார் எனலுமாம். தோஷம் என்றது, சரீரத்தை. தோஷமானது தான் அடைந்திருக்கிறவிடத்திற்குத் தாழ்வினை உண்டு பண்ணுவது போன்று இந்தச் சரீரமும் தான் அடைந்திருக்கும் ஆன்மாவிற்கு அறியாமை, ஐயவுணர்வு, திரிபுணர்வு இவற்றின் மூலம் தாழ்வினை உண்டுபண்ணுவதால், உடலைத் 'தோஷம்' என்கிறார். நிவிருத்தி - நீக்குதல். 'குணம் போலே தோஷ நிவிருத்தியும் விலக்கு' என 'விலக்கு' என்னும் சொல்லை மேற்சூத்திரத்தினின்றும் அதிகாரத்தாற் கொணர்ந்து கூட்டுக.

[2] 'தடைகளாக இருப்பனவற்றைக் குணம் என்று சொல்லலாமோ?' என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவைதாம்' என்று தொடங்கி. 73ஆம் சூத். பார்க்க.

'குணம் போலே' என்று, மேலே கூறிய இரண்டனுள் பாரதந்திரியம் ஒன்றனை மட்டும் உவமிக்கிறார் என்னவுமாம். (88)

## 169

ஆபரணம் [1]அநபிமதமாய் அழுக்கு அபிமத
மாய் இராநின்றதிறே.

என்பது சூத்திரம்.

**அவ :**—'இந்தச் சரீரசம்பந்தம் கழிந்த பின்னர் ஆன்மாவின் சொரூபம் மிக்க பரிசுத்தமாய் இனியதுமாயிருக்குமத்தனை யன்றோ? ஆன பின்னர், சரீரசம்பந்தம் நீங்குதல் விருப்ப மில்லாததாய், இந்த அழுக்குடம்பு விருப்பத்திற்குரியதாய் இருக்கக்கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—ஆபரணம் அநபிமதமாய்—உலகத்தில் பெண்கள் பால் பேரன்பு பூண்டவர்களுக்கு அந்தப் பெண்களினுடைய சரீரத்தின் அழகிற்குக் காரணமான ஆபரணங்கள் விருப்பத் திற்கு உரியவல்லாதவாய், அழுக்கு அபிமதமாய் இராநின்றதிறே - அழகு இன்மைக்குக் காரணமான அழுக்கு விருப்பத்திற் குரியதாய் இராநின்றதிறே என்கை. (89)

## 170

[2] 'ஸ்நாநம் ரோஷஜனகம்' என்கிற வார்த்
தையை ஸ்மரிப்பது.

என்பது சூத்திரம்.

---

[1] அநபிமதமாய் - விருப்பத்திற்கு உரியதல்லாததாய். அபிமதம் - விருப்பத்திற்கு உரியது.

[2] "ஸ்நாநம் ரோஷஜநகம் என்கிற வார்த்தை" என்பதற்கு, ஸ்நாநம் ரோஷஜநகம் என்ற பொருளைத் தருகின்ற வார்த்தை என்பது பொருள். இதனைப் பிராட்டி வார்த்தையாகவும் பெருமாள் வார்த்தை யாகவும் இயைத்துக் காட்டுகிறார். பிராட்டி வார்த்தையாம் போது, 'எனது ஸ்நாநமானது பெருமாளுடைய சீற்றத்திற்குக் காரண மாகும்' என்ற குறிப்புப் பொருளைத் தோற்றுவிக்கிற வார்த்தை என்பது பொருளாம். பெருமாள் வார்த்தையாம் போது, சீற்றத்தைக் காட்டுகிற வார்த்தை என்பது பொருளாம். ஸ்நாநம் - நீராடுதல். ரோஷம் - சீற்றம். ஜநகம் - காரணம். ஸ்மரிப்பது - நினைப்பது.

**அவ :**—இதுதான் உலக வழக்கத்தில் அன்றிக்கே [1] பிராட்டி திறத்தில் அவன்தனக்கும் இப்படியிருந்தமைக்குச் சூசகமான வார்த்தையை நினைப்பூட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஸ்நாநம் ரோஷஜநகம் என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது' என்றது, பிராட்டி திருமஞ்சனம் செய்து வந்தது பெருமாளுக்குச் சீற்றத்தை உண்டாக்கியது என்னுமதனை விளக்குகிற "ஓ ஜானகியே, [2]கண்ணோய் உடையவனுக்கு விளக்குப்போன்று நீ எனக்கு வெறுப்பை விளைக்கிறவளாயிருக்கிறாய்" என்கிறவார்த்தை இவ்வர்த்தத்துக்கு உடலாக நினைப்பது என்றபடி. "அழுக்குப்படிந்தவளும் [3]அலங்காரம் இல்லாதவளுமான பிராட்டி" என்கிறபடியே பத்து மாதங்கள் திருமஞ்சனம் செய்யாமல் அழுக்கு அடைந்திருந்த வடிவைக்காண ஆசைப்பட்டிருந்த பெருமாளுக்கு, இவள் திருமஞ்சனம் செய்து வந்த இது சீற்றத்தை உண்டாக்குவதற்குச் சொல்ல வேண்டாவிறே.

'நன்று. [4]'அண்மையிலிருந்த மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய விபீஷணனைப் பார்த்து, தீர்க்கமாயும் வெப்பமாயும் பெருமூச்சு விட்டுக்கொண்டு பூமியைப் பார்த்துக்கொண்டு சொன்னார்', [5]'நீராடினவளாகவும் திவ்வியமான பரிமளமுள்ள சந்தனம் அணிந்தவளாகவும் திவ்வியமான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவளாகவும், விதேக தேசத்தரசன்புத்திரியான சீதையை இவ்விடத்திற்கு விரைவில் அழைத்துக்கொண்டு வருக; தாமதம் வேண்டா' என்று இவர்தாமே அன்றோ திருமஞ்சனம் செய்து அலங்கரித்துக்கொண்டு வரும்படி

---

[1] பிராட்டி - சீதாபிராட்டி. அவன்தனக்கும் - ஸ்ரீராமபிரானுக்கும்.

[2] "தீபோ நேத்ராது ரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருவம்" என்பது, ஸ்ரீராமா. யுத். 118 : 17. இங்குக் கூறிய உவமையால் பிராட்டியினது தூய்மை விளக்கப்படுகின்றது. 'கண்ணோய் உள்ளவனுக்கு' என்றதனால் பெருமாளுடைய காதலும் விளக்கப்படுகின்றது.

[3] "ஸபங்காம் அநலங்காரம் விபத்மாம் இவ பத்மிநீம்" என்பது, ஸ்ரீராமா. சுந். 15:21.

[4] "தீர்க்கமுஷ்ணம் சநிச்வஸ்யமேதிநீமவலோகயந் உவாச மேக ஸங்காசம் விபீஷணம் உபஸ்திதம்."

[5] "திவ்யாங்கராகாம் வைதேஹீம் திவ்யாபரண பூஷிதாம் இஹ ஸீதாம் ஶிரஸ்ஸ்நாதாமுபஸ்தாபயமாசிரம்." என்பன. ஸ்ரீராமா. யுத். 118:6, 7.

ஸ்ரீ விபீஷணாழ்வானைப்பார்த்து அருளிச்செய்தவர்? இப்படியிருக்கவும், பின்னைச் சீற்றம் உண்டாவான் என்? எனில், 'நாம் நல்ல வார்த்தை சொல்லிவிடக்கடவோம். தானே அறியாளோ?' என்று சொல்லி விட்டாரித்தனை போக்கி, அது மனத்தொடுபட்ட வார்த்தை அன்று; அல்லாத போது சீற்றமுடையவராகக் கூடாதிறே.

அவள்தான், [1] 'ஓ அரக்கர் தலைவனான விபீடணா, நான் நீராடாமலே என் நாயகரைப் பார்க்க விரும்புகிறேன்,' என்றிருக்கச் செய்தே, [2] 'உன்னுடைய நாயகர் எந்த வகை சொன்னாரோ அப்படியே நீயும் அதனைச் செய்யக் கடமைப்பட்டவள் ஆகிறாய்' என்று ஸ்ரீ விபீஷணாழ்வான் நிர்ப்பந்தித்துச் சொன்ன பின்பு அன்றோ திருமஞ்சனம் செய்தது?' என்னில், அவன், பெருமாள் திருவுள்ளக்கருத்து [3] அறியாதே, அருளிச்செய்த வார்த்தையைக்கொண்டு சொன்னானித்தனையிறே.

எல்லாம் செய்தாலும் பத்து மாதங்கள் இராவணனுடைய சிறையிலே இருந்த இவள் சிறையிருந்த வேஷத்தோடே சென்று காணவேண்டுமித்தனையல்லது, 'திருமஞ்சனம் செய்யேன்' என்று இருக்கவேண்டுமிறே. அது செய்யாதே, சடக்கு எனத் திருமஞ்சனம் செய்து வந்தாளிறே. அது, [4] அவ்விருப்புக் காண ஆசைப்பட்ட பெருமாளுக்குச் சீற்றத்திற்குக் காரணமாயிற்று. ஆகையாலே 'ஸ்நாநம் ரோஷஜநகம்' என்னக் குறை இல்லை.

[5] அன்றிக்கே, 'ஸ்நாநம் ரோஷஜநகம்' என்கிற வார்த்தை ஆவது, ஸ்ரீ விபீஷணாழ்வான் திருமஞ்சனம் செய்தருளச்

---

[1] "அஸ்நாதா த்ரஷ்டுமிச்சாமி பர்த்தாரம் ராக்ஷஸாதிப" என்பது, ஸ்ரீராமா. சுந். 118:17.

[2] "யதாஹ ராமோ பர்த்தாதே ததாதத் கர்த்து மர்ஹஸி" என்பது, ஸ்ரீராமா. யுத். 117:14.

[3] அறியாதே, சொன்னானித்தனையிறே என்று கூட்டுக.

[4] அவ்விருப்பு - மாசு படிந்த மணியென நீராடாமல் இருந்த இருப்பு.

[5] மேலே கூறிய பொருளில் பெருமாள் உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசினார். விபீஷணாழ்வான் பெருமாள் திருவுள்ளத்தை அறியவில்லை என்பன போன்ற சில குற்றங்கள் தோன்றக்கூடுமாதலால் வேறு ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

சொன்ன போது, பெருமாள் திருவுள்ளத்தை அறியுமவள் ஆகையாலே, அவர்க்கு இது விருப்பமில்லாத காரியமாகையாலே, சீற்றத்திற்குக் காரணமாக வந்து முடியும் என்று நினைத்து, [1]'அரக்கர்களுக்குத் தலைவனான விபீஷணா, நீராடாமலே இருக்கின்ற என் நிலையை என் கணவனுக்குக் காண்பிக்க விரும்புகிறேன்' என்று பிராட்டி அருளிச்செய்த வார்த்தையாகவுமாம். [2]'சீற்றத்தை உண்டாக்கும் என்னுமதனை விளக்குகிற வார்த்தை' என்று மேலே கூறிய முறை இதற்கும் ஒக்கும். (90)

## 171

[3]'வஞ்சக் கள்வன், மங்கவொட்டு.'

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி மனைவி திறத்தில் அழுக்கு உகக்குமாறு போலே, ஆன்ம ஞானம் பிறந்த இவன், 'அழுக்குடம்பு' என்று கழிக்கிற இச்சரீரத்தை ஈச்வரன் விரும்ப, எங்கே கண்டோம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[4]'வஞ்சக் கள்வன், மங்கவொட்டு' என்றது, 'வஞ்சக் கள்வன்' என்று தொடங்கி 'மங்கவொட்டு' என்னுமளவாகத் தம்முடைய திருமேனியிலே மிக்க விருப்பத்தைச் செய்து அவன் அநுபவித்தபடிகளையும், அவ்வளவு அன்றிக்கே மிக்க சபலத்தாலே இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டுக்குக் கொண்டு போவதாக அவன் பேரவாவோடு இருக்கிறபடியைக் கண்டு, 'பிரானே! இப்படிச் செய்தருள வொண்ணாது' என்று நிர்ப்பந்தித்து, இச்சரீரத்தினுடைய குற்றங்களை அவனுக்கு உணர்த்தி, 'இப்படி மிக இழிந்ததான இச்சரீரம் மங்கும்படி இசையவேண்டும்' என்று கால் கட்டி, அவன் இச்சரீரத்தை விடுவித்துக்கொண்டு போகும்படி வருந்தி இசைவித்துக்கொண்ட படியையும் அருளிச் செய்தாரிறே ஆழ்வார் என்றபடி. (91)

---

[1] இச்சுலோகத்தை மேலே காண்க.

[2] 'ரோஷ ஜநகம் என்கிற வார்த்தை' என்றதற்குரிய பொருளை இங்கும் விளக்குகிறார், 'சீற்றத்தை' என்று தொடங்கி.

[3] "வஞ்சக்கள்வன்", "மங்கவொட்டு" என்பன, திருவாய்மொழியில் 10.7:1,10 திருப்பாசுரங்கள்.

[4] அத்திருப்பதிகத்தின் பொருளைச் சுருக்கி அருளிச்செய்கிறார் 'வஞ்சக்கள்வன், மங்கவொட்டு என்றது' என்று தொடங்கி.

## 172

[1] வேர் சூடுமவர்கள் மண் பற்றுக்கழற்ருத வாபோலே ஞானியை விக்கிரஹத்தோடே ஆதரிக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ** :—காதலி விஷயத்தில் அழுக்குப்போலே ஆதரிக்கிற மாத்திரமன்றிக்கே, இவனுடைய [2]ஞானபரிமளம் இச்சரீரத்திலே பிரகாசிக்கையாலும், இதனை ஆதரிக்கும் என்னுமிடத்தை ஓர் எடுத்துக்காட்டுடன் அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்ருதவாறு போலே' என்றது, மணத்தின் வாசி அறிந்து வேர் சூடும் [3]போகிகளானவர்கள், மண்ணை உதறில் மணம் குன்றும் என்று மண்பற்றுக்கழற்ருமலே சூடுமாறுபோலே என்றபடி. 'ஞானியை விக்கிரகத்தோடே ஆதரிக்கும்' என்றது, [4]பரம போகியான சர்வேச்வரன் ஞானியான இவனை விரும்பி அநுபவிக்குமிடத்தில் [5]'எப்பொழுதும் சர்வேச்வரனுடைய குணங்களை அநுபவித்துக் கொண்டு அந்த ஆனந்தத்தால் பெருகுகிற குளிர்ந்த கண்ண நீரையுடையவனுயும் மயிர்க்குச்சு எறிகிற சரீரத்தையுடையவனு யும் மக்கள் எல்லாராலும் பார்க்கத் தகுந்தவனுயும் இருப்பான்' என்கிறபடியே ஞான காரியமான வேறுபாடு முதலானவைகளுக் கெல்லாம் இடமாய்க்கொண்டு இவனுடைய ஞான பரிமளமெல் லாம் தோற்றும்படி இருக்கிற திருமேனியோடுகூட விரும்பும் என்றபடி. (92)

---

[1] வேர் - வெட்டி வேர். விக்கிரஹம் - ஞானியினுடைய சரீரம்.

[2] பல நறுமணங்களினுடைய பசுங்கூட்டு பரிமளமாகையாலே 'ஞானபரிமள' சப்தத்தாலே ஞானத்தின் காரியமான விகாரங்களைக் கூறுகிருர்.

[3] போகிகள் - போகத்தை அநுபவிப்பவர்கள். போகம் - இன்பம்.

[4] பரமபோகி - போகத்தை அநுபவிக்குமவர்களுள் சிறந்தவன்.

[5] ஆஹ்லாத ஶீதநேத்ராம்பு: புளகீக்ருத காத்ரவாந், ஸதாபர குணாவிஷ்ட: த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி: என்பது, பிரமாணம்.

## 173

[1]பரமார்த்தனுன இவனுடைய சரீர ஸ்திதிக்கு ஏது, கேவல பகவதிச்சையிறே.

என்பது சூத்திரம்.

அவ :—மேலும், [2]வேறொரு காரணத்தாலே, இவன் சரீரத்திலே உள்ள அவனுடைய விருப்பத்தைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—பரமார்த்தன்—பரம ஆர்த்தனாகிறான், [3]'' இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை ' என்றும், [4]'' எந்நாள்யான் உன்னை இனி வந்து கூடுவேனே ?' என்றும், [5]'' எங்கினித்தலைப் பெய்வன் ?' என்றும், [6]'' நாளேல் அறியேன் ' என்றும், [7]' தரியேன் இனி ' என்றும், [8]'' கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ ?' என்றும், சம்சாரத்தில் அடிக்கொதிப்பாலும் பகவானுடைய அநுபவத்தில் பெருவிடாயாலும் இதற்கு மேல் இல்லை என்னும்படி துன்பம் விளைந்தவன். ' இவனுடைய சரீர ஸ்திதிக்கு ஏது ' என்றது, இத்தகையனானவனுடைய சரீரத்தின் நிலைக்குக் காரணம் என்றபடி. ' கேவல பகவத் இச்சையிறே ' என்றது, [9]பிராரப்த கர்மம் என்னவொண்ணாதிறே, [10]' எல்லாப் பாவங்களினின்றும் உன்னை விடுவிக்கிறேன் ' என்றதனோடு முரண்படுகையாலே. [11]' ஒரு முறையே செய்த

---

[1] ஆர்த்தன் - இப்பொழுது எடுத்துள்ள சரீரத்திலும், சோகத்தை - வெறுப்பை அடைகின்றவன் ; அங்ஙனம் அடைகின்றவர்களுள் உயர்ந்தவன் பரமார்த்தன். இச்சொல்லின் விளக்கத்தை வியாக்கியானத்தில் காண்க. இவனுடைய - ஞானியினுடைய. ஸ்திதி - நிலைபேறு. கேவலம் என்ற சொல் வேறு காரணங்கள் இன்மையை விளக்குகின்றது.

[2] ' வேறொரு காரணம் ' என்றது, ஈண்டுப் பிராரப்தகர்மங்களைக் காட்டுகின்றது.

[3] திருவிருத்தம், 1. [4] திருவாய். 3.2:1.

[5] திருவாய். 3.2:9. [6] திருவாய். 9.8:4.

[7] திருவாய். 5.8:7. [8] திருவாய். 6.9:9.

[9] பிராரப்தகர்மம் - முன் பல பிறவிகளில் ஈட்டிய வினைகளுள், இச்சரீரத்தால் அநுபவிப்பதற்கு முகந்துகொள்ளப்பட்டவை.

[10] '' ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி '' என்பது ஸ்ரீகீதை, 18.

[11] ஆர்த்தாநா மாஶுபலதா ஸக்ருதேவ க்ருதாஹ்யஸௌ த்ருப்தாநாமபி ஜந்தூநாம் தேஹாந்தர நிவாரிணீ. என்பது, ஸ்ரீபாஞ்சராத்ரம்.

தான இந்தப் பிரபத்தியானது துன்பத்தையுடையவர்களுக்கு விரைவில் பயனைக் கொடுக்கிறதல்லவா, திருப்த பிரபந்நரான மக்களுக்கு வேறு சரீரங்களை வரவொட்டாமல் செய்கிறது?' என்றேயன்றோ பிரபத்தியினுடைய தன்மைதான் இருப்பது? ஆகையால், இவனுடைய சரீரம் நிலைத்தலுக்குக் காரணம், இன்னம் சில நாள்கள் இச்சரீரத்தோடே வைத்து இவனை அநுபவிக்க வேண்டும் என்கிற இறைவனுடைய இச்சையை ஒழிய வேறு ஒன்று இல்லாமையாலே, கேவலம் பகவானுடைய இச்சையே என்கிறார் என்றபடி.

பிராரப்த கர்மம் அடியாக வருகிற [1] திருப்தபிரபந்நன் விஷயத்திலும் பகவானுடைய இச்சையுண்டாகையாலே அதனினின்றும் வேறுபடுத்துகிறது [2] 'கேவலம்' என்ற சொல். (93)

## 174

[3] 'திருமாலிருஞ்சோலைமலையே' என்கிற படியே, உகந்தருளின நிலங்கள் எல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைகதேசத்திலே பண்ணும்.

என்பது சூத்திரம்.

அவ:—இப்படி, தன் விருப்பத்திற்கு இலக்கான இவன் சரீரத்தை அவன் விரும்பும் விதத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'திருமாலிருஞ்சோலைமலையே என்கிறபடியே' என்றது, [4] 'தெற்குத் திருமலையையும் திருப்பாற்கடலையும் என்

---

[1] திருப்தபிரபந்நன் - இச்சரீரத்தின் முடிவிலே மோக்ஷத்தை விரும்புகிறவன்.

[2] திருப்த பிரபந்நனுடைய சரீர ஸ்திதிக்குப் பிராரப்தகர்மமும் ஒரு காரணம் என்பதனைத் தெரிவித்தபடி.

[3] 'திருமாலிருஞ்சோலைமலையே' என்பது, திருவாய்மொழி, 10. 7:8. உகந்தருளின நிலங்கள் - திவ்வியதேசங்கள். சரீர ஏகதேசம்—சரீரைகதேசம் என வந்தது வடமொழிப் புணர்ச்சி.

[4] அத்திருப்பாசுரத்தின் பொருளை அருளிச்செய்கிறார், 'தெற்கு' என்று தொடங்கி.

தலையையும் ஒக்க விரும்பாநின்முன்; ஸ்ரீவைகுண்டத்தையும் திருவேங்கடத்தையும் என் சரீரத்தையும் ஒக்க விரும்பா நின்முன் என்முரிறே ஆழ்வார்; இப்படி, ஓரோர் அவயவத்திலே இரண்டு இரண்டு திருப்பதிகளிலே பண்ணும் விருப்பத்தைப் பண்ணினுன் என்ற இது எல்லாத்திருப்பதிகளிலும் பண்ணின விருப்பத்தை ஓரோர் அவயவத்திலே பண்ணி நின்முன் என்னு மதற்கும் உபலக்ஷணம். ஆகையாலே, அத்திருப்பாசுரத்திற் சொல்லுகிறபடியே என்றபடி. 'உகந்தருளின நிலங்கள் எல்லா வற்றிலும் பண்ணும் விருப்பத்தை' என்றது, தனக்கு விருப்ப மான திவ்விய தேசங்கள் எல்லாவற்றிலும் பண்ணும் விருப் பத்தை என்றபடி. 'இவனுடைய சரீர ஏகதேசத்திலே பண் ணும்' என்றது, ஞானியான இவனுடைய சரீரத்தின் ஒரு கூற்றிலே பண்ணும் என்கிருர் என்றபடி. (94)

## 175

[1] அங்குத்தை வாசம் சாதனம்; இங்குத்தை வாசம் சாத்தியம்.

என்பது சூத்திரம்.

அவ:—உகந்தருளின நிலங்கள் எல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை ஞானியினுடைய சரீரம் ஒன்றிலுமே பண்ணும் என்முர் மேல். இந்த ஞானியினுடைய சரீரவாசம் கிடைத்தால் உகந்தருளின நிலங்களில் ஆதரம் அவனுக்குக் குறைவுபடும் என்னுமிடம் அருளிச் செய்கைக்காக, இரண்டு இடங்களுக்கும் உண்டான வேற்றுமையை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'அங்குத்தை வாசம் சாதனம்' என்றது, உகந் தருளின நிலங்களிலே விரும்பி வசிக்கிறது தக்க உபாயங்களாலே மக்களை அகப்படுத்திக்கொள்ளுகைக்கு ஆகையாலே, அவ்விடங் களில் வாசத்தைச் சாதனம் என்கிறது என்றபடி. 'இங்குத்தை வாசம் சாத்தியம்' என்றது, இம்மக்கள் திருந்த இவர்கள் மனங்களிலே தான் வசிக்கப் பெற்ற இது, அந்தத் திவ்விய

[1] 'அங்குத்தை' என்றது அவ்விடத்தில் என்றபடி. அது, இங்குத் திவ்வியதேசங்களைக் குறிக்கின்றது. இங்குத்தை - இவ்விடம். இது, இங்கு ஞானிகளுடைய திருவுள்ளங்களைக் குறிக்கின்றது. சாதனம்—பயனை அடைவதற்குத் துணையாக இருப்பது. சாத்தியம்—அதனுல் அடையும் பயன்.

தேசங்களிலே நின்று பண்ணின கிருஷியின் பலமாகையாலே, இங்குத்தை வாசத்தைச் சாத்தியம் என்கிறது என்றபடி. [1]'நாகத்தணைக்குடந்தை', [2]'மலைமேல் தான் நின்று', [3]'பனிக்கடலுள் பள்ளிகோளைப் பழகவிட்டு' என்பன போன்ற திருப்பாசுரங்களிலே இவற்றினுடைய சாதனமும் சாத்தியமும் தோற்றுநின்றனவிறே. (95)

## 176

[4]'கல்லும் கனைகடலும்' என்கிறபடியே இது சித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமா யிருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :—**இந்தச் சாதனம் காரணமாகவும் சாத்தியம் காரணமாகவும் வருகின்ற ஆசையின் உயர்வு தாழ்வுகளை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'கல்லும் கனைகடலும் என்கிறபடியே' என்றது, [5]தம் திருவுள்ளத்திலே புகுந்த பின்பு தனக்குப் புறம்பு ஒன்றிலும் ஆசை இல்லை என்று தோற்றும்படி அவன் இச்சரீரத்திலே மிக்க விருப்பத்தைச் செய்து நித்தியவாசம் பண்ணுகையாலே,

---

[1] நான்முகன்திருவந்தாதி 36, இத்திருப்பாசுரத்தில் "அணைப்பார் கருத்தன் ஆவான், பாற்கடல் முதலியவற்றில் கிடக்கும்" என்றதனால் 'கிடத்தல்' சாதனமும், 'கருத்தனாதல்' சாத்தியமும் ஆம் என்க.

[2] 'மலைமேல் தான் நின்று' என்பது திருவாய்மொழி, 10.4:4. இத்திருப்பாசுரத்தில், 'மலைமேல் நின்று' என்பது சாதனம். 'என் மனத்துள் இருந்தான்' என்பது சாத்தியம்.

[3] 'பனிக்கடலில்' என்பது, பெரியாழ்வார் திருமொழி, 5.4:9. இத்திருப்பாசுரத்தில் 'பள்ளிகோளைப் பழகவிட்டு' என்பது சாதனம். 'மனக்கடலில் வாழவல்ல' என்பது சாத்தியம்.

[4] 'கல்லும் கனைகடலும்' என்பது பெரிய திருவந்தாதி, 68. 'இது' என்றது, ஞானிகளுடைய மனத்தில் வாழ்தலை. சித்தித்தல் - கிடைத்தல். ஆதரம் - ஆசை. மட்டம் - குறைவு.

[5] 'கல்லும்' என்ற திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச் செய்கிறார், 'தம் திருவுள்ளத்திலே' என்று தொடங்கி. 'தம்' என்றது ஈண்டு ஆழ்வாரை.

[1] திருமலையும் தன் சேர்க்கையாலே ஒலிக்கிற திருப்பாற்கடலும் ஒருவர்க்கும் எட்டாத பரமபதமான தேசமும் தாழ்ந்தனவா யினவோ என்றாரிறே ஆழ்வார். அப்படியே, ' இது சித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும் ' என்றது, சாத்தியமான இம்மக்களுடைய மனங்கள் கிடைத்தால், இதற்குச் சாதனமாக முன்பு விரும்பிப்போந்த திவ்யதேசங்களில் ஆசை குறைவாக விருக்கும் என்றபடி. பலம் கைபுகுருமளவுமிறே சாதனத்தில் ஆசை மிக்கிருப்பது. (96)

## 177

**' இளங்கோயில் கைவிடேல் ' என்று இவன்
பிரார்த்திக்க வேண்டும்படியாய் இருக்கும்.**

என்பது சூத்திரம்.

அவ :—ஆசை மட்டமாயிருக்கும்படிக்குள்ள எல்லையைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[2] ' இளங்கோயில் கைவிடேல் என்று இவன் பிரார்த்திக்க வேண்டும்படியாயிருக்கும் ' என்றது, [3] ஸ்ரீபூதத்தார், தம்மைப் பெறுகைக்கு உறுப்பாக, முன்பு தான் விரும்பிய திவ்யதேசங்களில் முன்புத்தை ஆசை இன்றிக்கே, தன் திரு வுள்ளத்திலே மிக்க விருப்பத்தைப் பண்ணிச் செல்லுகிறபடி யைக் கண்டு, அவ்வோ திவ்யதேசங்களைக் கைவிடப் புகு கிறானோ என்று ஐயம் கொண்டு, என் மனத்திலே புகுந்திருக் கைக்குப் பாலாலயமான திருப்பாற்கடலைக் கைவிடாதொழிய வேண்டும் என்றாரிறே. ஆகையாலே, இப்படி இவன் பிரார்த் திக்க வேண்டும்படியாயிற்று அவனுக்கு அந்தத் திவ்யதேசங் களில் ஆசை மட்டமாம்படி என்றபடி. (97)

---

1 திருமலை - திருவேங்கடமும், திருமாலிருஞ்சோலை மலையும்.

2 ' இளங்கோயில் ' என்பது இரண்டாந்திருவந்தாதி, 54. பிரார்த்தித்தவர் - பூதத்தாழ்வார். இளங்கோயில் - பாலாலயம்.

3 அத்திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், ' ஸ்ரீ பூதத் தார் ' என்று தொடங்கி.

## 178

[1] பிராப்பியப்பிரீதி விஷயத்வத்தாலும் கிருதஜ்ஞதையாலும் பின்பு அவை அபிமதங்களாயிருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'இவன் இப்படி வேண்டிக்கொண்டாலும், பலம் கிடைத்த பின்பு அவனுக்கு அந்தத் திவ்விய தேசங்கள் விரும்பத் தக்கனவாக இருக்குமோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—பிராப்பியப்பிரீதி விஷயத்வமாவது, இறைவனை தனக்கு அடையத்தக்கவனை [2] இவனுடைய உகப்பிற்கு விஷயமாகவிருக்கை. [3] 'கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை என்று மண்டி'யிறே இவன் இருப்பது. கிருதஜ்ஞதையாவது, இந்தத் திவ்விய தேசங்களின் வாசத்தாலே அன்றே நாம் இவனைப் பெற்றது என்று அந்தத் திவ்விய தேசம் தனக்குப் பண்ணின உபகாரத்தை நினைத்தல். [4] 'இவை இரண்டாலும், சாத்தியமான இச்சேதனன் கைபுகுந்திருக்கச் செய்தேயும், அவனுக்கு அந்தத் திவ்விய தேசங்கள் விரும்பத்தக்கனவாக இருக்கும்' என்கை. (98)

[1] பிராப்பியம் - இறைவனாகிய தன்னால் அடையத்தக்க ஆன்மாக்கள். இவர்களுடைய பிரீதிக்கு விஷயமாக இருப்பவை திவ்விய தேசங்கள். கிருதஜ்ஞதை - செய்நன்றியறிதல். இறைவனாகிய தனக்கு அந்தத் திவ்வியதேசங்கள் செய்த நன்றியை மறவாமையாலும் என்றபடி. அவை - திவ்வியதேசங்கள். அபிமதங்கள் - விரும்பத்தக்கவை.

[2] இவனுடைய - சேதனனுடைய.

[3] திருக்குறுந்தாண்டகம், 19.

[4] 'இவை இரண்டாலும்' என்பதனை மேலே வருகின்ற 'விரும்பத்தக்கனவாக விருக்கும்' என்பதனோடு முடிக்க.

## 179

[1] ஆகையாலே தோஷ நிவிருத்தி போலே ஆந்தர குணமும் விரோதியாயிருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ** :— [2] ‘ ஆக, குணம் போலே தோஷ நிவிருத்தி ’ என்று மேலே கூறிய சேஷத்துவமும் பாரதந்திரியமுமான ஆன்மகுணம் போலே தோஷ நிவிருத்தியும் [3] ‘ பராநுபவத்துக்கு விலக்கு ’ என்று எடுத்துக் கூறி, அதனை விளக்குவதற்காக, [4] ‘ ‘ காதலி விஷயத்தில் அழுக்கு விருப்பமான படியையும், இவன் ‘ அழுக்கு உடம்பு ’ என்று கழிக்கிற இவ்வுடம்பிலே அவன் மிக்க விருப்பத்தைப் பண்ணும்படியையும், ஞானியான இவனைத் திருமேனியோடே விரும்புவதற்குக் காரண விசேஷத்தையும், பரம ஆர்த்தனை இவன் சரீரம், இங்கிருக்கும் இருப்பினைக்கொண்டே இவனுடைய சரீரத்தில் இறைவனுடைய விருப்பத்தை அறியலாம்படியையும், இறைவன் இவனுடைய சரீரத்தை விரும்பும் விதத்தையும், சாத்தியமான இது கிடைத்தால் சாதனத்தில் ஆசை மட்டமாம்படியையும், அதன் எல்லையையும் இவன் அந்தத் திவ்விய தேசங்களைக் கைவிடாதொழிய வேண்டும் என்று விரும்பினால், தன்னுடைய பலன் கிடைத்திருக்கச் செய்தேயும் இரண்டு காரணங்களாலே அத்திவ்விய தேசங்கள் அவனுக்கு விரும்பத் தக்கனவாய் இருக்கும்படியையும் அருளிச்செய்தார்.

[5] ‘ இப்படி, சரீர சம்பந்தத்தினின்றும் விடுவித்துக்கொள்ளுதல் பரனுடைய அநுபவத்திற்கு விலக்கு என்னுமிடம் மிகத்தெளிவாம்படியான காரணங்கள் பலவற்றையும் அருளிச்செய்கை

---

[1] ‘ ஆகையாலே ’ என்றது, 167 முதல் 177 முடிய உள்ள சூத்திரங்களில் கூறியனவற்றைக் குறிக்கின்றது. தோஷநிவிருத்தி - சரீர சம்பந்தத்தை நீக்குதல். ஆந்தரகுணம் - ஆன்மாவிலே இருக்கிற குணங்கள் ; சேஷத்துவமும் பாரதந்தரியமும் குணம் என்றது, சாதி ஒருமை. பாரதந்திரியத்தை மாத்திரம் கூறுகிறாராகவுமாம்.

[2] சூத்திரம் 168. [3] சூத்திரம் 167.

[4] 169 முதல் 178 முடிய உள்ள சூத்திரங்களில் விஷயங்களைத் தொகுத்து அருளிச்செய்கிறார் ‘ காதலி விஷயத்தில் ’ என்று தொடங்கி.

[5] ‘ மேலே “ குணம் போலே தோஷநிவிருத்தி ” என்று கூறி, இங்குத் “ தோஷநிவிருத்தி போலே ஆந்தரகுணமும் ” என்று கூறுதல் அந்யோந்யாஶ்ரயம் - ஒன்றை ஒன்று பற்றுதல் என்னும்

யாலே [1] அதனை நிலை நிறுத்தினவராய், அதனை உவமையாக்கி, [2] 'அரிமாநோக்கு' என்னும் நியாயத்தாலே, மேலே கூறிய சேஷத்துவமும் பாரதந்திரியமுமான ஆன்ம குணங்கள் இறைவனுடைய அநுபவத்திற்குத் தடையாகவிருக்கும் தன்மையை நிலை நிறுத்தி உறுதிப்படுத்துகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'ஆகையாலே' என்றதனால் மேலே கிடைக்கச் செய்த பொருளை அநுவதிக்கிறார். 'தோஷ நிவிருத்தி போலே' என்றது, சரீரத்தின் சம்பந்தம் நீங்குதல் ஆன்மாவின் ஒளியுடைமைக்கு உறுப்பாக [3] இருக்கச் செய்தேயும், அழுக்கையே இனியதாக விரும்புகிற காதலையுடையனான அவனுக்கு விருப்பம் இல்லாமையாலே யாதொருபடி இறைவனுடைய அனுபவத்திற்குத் தடையாகிறது? அது போலே என்றபடி. 'ஆந்தர குணம்' என்றது, சேஷத்துவத்தையும் பாரதந்திரியத்தையும். இவற்றை 'ஆந்தர குணம்' என்கிறது, [4] ஞானத்தையும் ஆனந்தத்தையுங் காட்டிலும் ஆன்மாவிற்கு அந்தரங்கமாகையாலே. இவை இறைவனுடைய அநுபவத்திற்குத் தடையாகவிருக்கும் தன்மை [5] மேலே சொல்லப்பட்டதிறே. [6] இவ்விடத்திலும் 'ஆந்தர குணம்' என்றது, பாரதந்திரியம் ஒன்றனை மாத்திரமாகவுமாம். (99)

---

குற்றம் அன்றோ?' என்ன, காரணம் வேறுபடுதலால் குற்றம் அன்று என்கிறார், 'இப்படி' என்று தொடங்கி. அங்குக் கூறியது சொரூபத்தை அறிவித்தல். இங்கு அவற்றின் விரோதியை நிச்சயம் செய்தல் ஆம்.

[1] அதனை - அந்தத் தோஷநிவிருத்தியை.

[2] 'அரிமா நோக்கு' என்பது சூத்திர நிலைகளுள் ஒன்று.

'ஆற்றொழுக் கரிமா நோக்கம் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.'

என்பது நன்னூல்.

செல்லும்பொழுதே கடந்த வழியைத் திரும்பிப் பார்த்தல் சிங்கத்திற்கு இயல்பு.

[3] 'இருக்கச் செய்தேயும்' என்பதனைப் பின்னே வருகிற 'தடையாகிறது' என்றதனோடு கூட்டுக.

[4] 'அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தம் என்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்'' என்ற சூத்திரத்தின் பொருளை இங்கு நினைவுகூர்தல் தகும்.

[5] 'மேலே' என்றது, 163 முதல் 167 முடிய உள்ள சூத்திரங்களை.

[6] 'இவ்விடத்திலும்' என்ற உம்மை, 168ஆம் சூத்திரத்தின் வியாக்கியானத்தின் இறுதியில் கூறியுள்ளதைத் தழுவுகிறது.

## 180

[1] தோஷ நிவிருத்திதானே தோஷமாமிறே.

என்பது சூத்திரம்.

**அவ :—**' இப்படிச் சொல்லுகைக்குச் சரீர சம்பந்தத்தை நீக்கிக்கொள்ளுவதற்கு விரும்புவதில் வரும் குற்றம் யாது ?' என்ன, வேறு ஒரு குற்றமும் வேண்டா ; நீக்கிக்கொள்வதற்கு விரும்புவதுதானே குற்றம் என்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**' தோஷ நிவிருத்திதானே தோஷமாமிறே ' என்றது, காமத்தில் இச்சையுடைய ஒரு பெண்ணுனவள் தன்னுடம்பில் அழுக்குக் கழற்றிப் போகத்திலே சேர்வதற்கு விரும்புமாறு போலே, இயற்கையிலே பரிசுத்தமான ஆன்மாவின் தன்மைக்கு வந்தேறியான இந்தச் சரீரத்தைக் கழித்துத் தன்னுடைய சேஷிக்கு இனிய பொருளாக உபயோகப்பட வேண்டும் என்று தன்னுடைய நிர்ப்பந்தத்தாலே இவன் செய்துகொள்ளும் தோஷ நிவிருத்திதானே, காதலியினுடைய அழுக்கு உகக்கும் காதலனைப் போலே, தோஷமே விருப்பமாய் இச்சரீரத்தோடே இவனை அநுபவிக்க விரும்புகிற இறைவனுடைய போகத்திற்குத் தடையாகையாலே குற்றமாமிறே என்றபடி. தோஷமாவது, இறைவனுக்கு விருப்பம் இல்லாததிறே. 'இறே' என்று பிரசித்தி தோற்ற அருளிச் செய்தது, மேலே கூறியவற்றையெல்லாம் நினைத்து. (100)

## 181

' தன்னால் வரும் நன்மை [2] விலைப்பால் போலே ; அவனால் வரும் நன்மை முலைப்பால் போலே ' என்பது பிள்ளான் வார்த்தை.

என்பது சூத்திரம்.

---

[1] தோஷம் - சரீரம். இரண்டாவது தோஷம் - குற்றம்.

[2] விலைப்பால் - விலைக்கு வாங்கும் பால். இதற்கு முக்குற்றங்கள் உண்டு. அவற்றை வியாக்கியானத்திற்காணல்தகும். ' அவனால் ' என்பது வேற்றுமை மயக்கம். முதல் வேற்றுமையில் மூன்றும் வேற்றுமை மயங்கியது. அவன் என்பது பொருள். அவன்-இறைவன். முலைப்பால் - தாயின்பால். பிள்ளான் - திருக்குருகைப்பிரான்பிள்ளான்.

**அவ :**—ஆக, [1] ‘ நன்மைதானே தீமையாயிற்று ’ என்றும், [2] ‘ தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காயிருக்கும் ’ என்றும், [3] ‘ தோஷ நிவிருத்திதானே தோஷமாமிறே ’ என்றும் தனக்குத்தான் தேடும் நன்மைவிடத்தக்கது என்னுமிடம் சொல்லுகையாலே, அவன் தேடும் நன்மையே கொள்ளத்தக்கது என்னுமிடம் பலித்ததிறே; இப்படித் தனக்குத்தான் தேடும் நன்மை விடத்தக்கது அவன் தேடும் நன்மை கொள்ளத்தக்கது என்னுமிடத்தை [4] ஆப்தருடைய வார்த்தையாலே காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—‘ தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே ’ என்றது, தன் முயற்சியாலே தான் தனக்கு உண்டாக்கிக் கொள்ளும் நன்மை [5] ஒரு காரணம் பற்றி வந்ததாய், சுவை யில்லாததாய், தக்கதல்லாததாயிருக்கும் என்றபடி. ‘ அவனாலே வரும் நன்மை முலைப்பால் போலே ’ என்றது, [6] ஒரு காரணம் பற்றி வாராத தலைவனை அவ்விறைவனே இவனுக்கு இது வேண்டும் என்று உண்டாக்கும் நன்மை காரணம் பற்றி வாராத தாய், சுவையுடையதாய், தக்கதுமாய் இருக்கும் என்றபடி. (101)

[1] சூத். 149. [2] சூத். 164. [3] சூத். 180.

[4] ஆப்தர் - நம்பத் தகுந்த பெரியார்.

[5] விலை கொடுத்து வாங்கப்படுவதால் ‘ ஒரு காரணம் பற்றி வந்த தாய் ’ என்றும், தண்ணீர் முதலிய வேறு பொருள்கள் கலக்கப்படுவதால் ‘ சுவை இல்லாததாய் ’ என்றும், பிறருடைய முலைப்பால் ஆகையாலே ‘ தக்கதல்லாததாய் ’ என்றும் அருளிச் செய்கிறார். இக்குற்றங்களை உபமேயமாகிற தன்னால் வரும் நன்மைக்கும் ஏற்ற பெற்றி பொருத்திக் கொள்க. தன்னால் வரும் நன்மைக்கு ஒரு காரணம் பற்றி வருதலாவது, சூக்ஷ்ம அகங்காரத்தையுடையதாகையாலே தான் அப்ரதான கர்த்தா வாகவும் அப்ரதான போக்தாவாகவும் இருத்தல். சுவை இல்லாமையா வது, கேவல சேஷத்துவ, மாத்திரமன்றிக்கே ஸ்வசேஷத்துவமும் கலந் திருப்பது. தக்கதல்லாததாவது, அவனுக்கே சேஷமாகவும் பரதந்திர மாகவும் இருப்பதற்குச் சேராதது.

[6] முலைப்பாலுக்குக் கூறிய இந்தக் குணங்களை உபமேயமாகிற அவன் செய்யும் நன்மைக்கும் ஏற்ற பெற்றி கொள்க.

## 182

[1] அவனை ஒழியத் தான் தனக்கு நன்மை தேடுகையாவது, ஸ்தநந்தய பிரஜையை, மாதா பிதாக்கள் கையில்நின்றும் வாங்கி, காதுகனை ஆட்டு வாணியன் கையிலே காட்டிக் கொடுக்குமாபோலே இருப்பது ஒன்று.

என்பது சூத்திரம்.

அவ :—இவ்வளவு அன்றிக்கே, எம்பெருமானை ஒழியத் தான் தனக்கு நன்மை தேட இழிந்தால் தனக்கு அழிவே பலிக்கும் என்னுமிடத்தை ஓர் எடுத்துக்காட்டோடு அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—அவனை ஒழியத் தான் தனக்கு நன்மை தேடுகையாவது, உரியவனுமாய் ஆப்தனுமான அவ்விறைவன் இவனுக்கு நன்மை தேடுமது ஒழிய, அதற்கு எதிர்த்தட்டான தான் தனக்குத் தன்னுடைய உஜ்ஜீவனத்தின்பொருட்டு நன்மையைச் சம்பாதிக்கையாவது, [2] ஸ்தநந்தய பிரஜையை மாதா பிதாக்கள் கையில்நின்றும் வாங்கி—தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுதற்கு வேண்டியவையான அறிவும் ஆற்றலும் ஒன்றும் இன்றிக்கே, தன்னுடைய தாய் தந்தையர்கள் உணர்ந்து நோக்கவேண்டும் படியான பால் உண்ணும் குழவியைக் காப்பவர்களான தாய் தந்தையர்கள் கையில்நின்றும் வலிய [3] வாங்கி, காதுகனை ஆட்டு வாணியன் கையிலே காட்டிக்கொடுக்குமா போலே இருப்பது ஒன்று—கொலைக்குக் கூசாமல் [4] உயிர்க்கொலையாகக்

---

[1] அவனை ஒழிய - இறைவனை ஒழிய. ஸ்தநந்ய பிரஜை - பால் குடிக்கும் குழவி. ஸ்தநந்யம் - பால். காதுகன் - கொல்லுகிறவன். ஆட்டு வாணியன் - ஆட்டு இறைச்சியை விற்கிறவன். வாணிகன், வாணியன் எனத் திரிந்தது. 'தேடுகையாவது, இருப்பது ஒன்று' என முடிக்க.

[2] 'ஸ்தநந்யப் பிரஜை' என்றதனால் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளத் தக்க ஞானசக்திகள் இல்லாதவன் இவன் என்பதனைத் தெரிவித்தபடி.

[3] வாங்கி என்னும் எச்சத்தை, 'கொடுக்குமாறு போலே' என்ற வினையோடு முடிக்க.

[4] உயிர்க்கொலை - உயிரை வைத்தே கொலை செய்தல்; சித்திரவதையைக் குறித்தபடி.

கொன்று இறைச்சியோடே கலந்து விற்றுவிடும் காதுகனை ஆட்டு வாணியன் கையிலே 'இதனை நோக்கிக்கொள்' என்று காட்டிக்கொடுக்குமாறு போலே இருப்பது ஒன்று என்றவாறு.

இதனால் சர்வேச்வரனே காப்பவன்; தான் தனக்கு நாசகன் என்னுமிடம் சொல்லப்பட்டது. (102)

## 183

தன்னைத்தானேயிறே முடிப்பான்[1].

என்பது சூத்திரம்.

அவ:—'இப்படி இவன் தன்னைத்தானே முடித்துக்கொள்ளுவானோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக்: 'தன்னைத்தானேயிறே முடிப்பான்' என்றது, சர்வேச்வரன் இவனை உஜ்ஜீவிப்பிக்கைக்குச் சமயம் பார்த்துக் கொண்டு போருமவனாயிருக்கையாலே, இவனுடைய கேட்டிற்கு அவன் ஒருநாளும் காரணன் ஆகான்; இனி, [2]'பரம்பொருள் இல்லை என்று அறிகிறானாகில் அவன் இல்லாதவனே ஆகிறான்' என்னும்படி தன்னை அழித்துக்கொள்ளுகிறவன் தானேயிறே என்றபடி. [3]'யானே என்னை' என்கிற திருப்பாசுரத்திலே 'யானே' என்று, [4]'என்னிழவுக்குக் காரணம் பகவானுடைய செயல் அன்று; அவன் எதிர்சூழல் புக்குத் திரியாநிற்க நானே கிடீர் அழிவினைச் சூழ்த்துக்கொண்டேன் என்றாரிறே ஆழ்வார். (103)

---

[1] 'தானே' என்ற பிரிநிலை ஏகாரம் இறைவனைப் பிரிக்கின்றது.

[2] "அஸந்நேவ ஸபவதி" என்பது தைத்திரீயஉப.

[3] முடிப்பவன் தானே என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'யானே' என்று. இது திருவாய்மொழி, 2.9:9.

[4] அதன் பொருளை விளக்குகிறார், 'என்னிழவுக்கு' என்று தொடங்கி.

## 184

தன்னைத்தானே முடிக்கையாவது, அகங்காரத்தையும் [1] விஷயங்களையும் விரும்புகை.

என்பது சூத்திரம்.

அவ :—'இவன் தன்னைத்தானே முடிக்கையாவது யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் : அகங்காரமாவது, சரீரத்தையே ஆன்மாவாக நினைக்கும் எண்ணமும், தான் தனக்கு உரியவன் என்கிற எண்ணமும். விஷயங்களாவன, சாஸ்திரங்களிலே விதிக்கப் பட்ட மனைவியின் சேர்க்கையும் சாஸ்திரங்களிலே விலக்கப்பட்ட பிறர் மனை விழைதலும் பரத்தையரைச் சார்தலும். இவற்றை விரும்புகையாவது, இவற்றிலே மிகவும் ஆசையுடையனாதல். ஆன்மாவின் தன்மை, தான் பகவானுக்கேயுரிய அடிமையாய் பகவானுடைய அனுபவத்தையே போகமாகக் கொண்டிருப்ப தாயிறே இருப்பது. அத்தகைய தன்மையை அழிப்பதே அன்றோ இவற்றிலே இவன் ஆசையுடையவனாய் இருத்தல்.

'நன்று. துவயத்தின் பின் வாக்கியத்தில் நமః பதத்தின் பொருளைச் சொல்லுகிறாராகில் இவையெல்லாம் ஏன்?' என்னில், பின் வாக்கியத்தில் 'நமః'பதத்திலே பேற்றிற்குத் தடைகளாக வுள்ள விரோதிகள் எல்லாம் தள்ளுண்ணும் என்னுமிடம் தோற்ற விறே 'மநோ வாக்காயைః' என்று தொடங்கி மூன்றுவாக்கியங் களாலே எல்லா விரோதிகளின் நீக்குதலையும் பாஷ்யகாரர் [2] அருளிச்செய்தது. இவர் தாமும் முமுக்ஷுப்படியிலே இந்த 'நமః'பதத்தின் பொருளைச் சொல்லுகிற அளவில் [3] 'இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்' என்றாரிறே. ஆகையாலே, இவ்விடத்திலும் சரீரத்தையே ஆன்மாவாக நினைத்தல் முதலான வற்றின் வடிவமான அகங்காரம், அதன் காரியமான விஷயப்

---

[1] 'விஷயங்களை' என்றது ஐம்புல இன்பங்களை.

[2] 'அருளிச்செய்தது' என்றது இராமாநுஜர் கத்யத்திரயம் என்ற நூலில் அருளிச் செய்தது என்றபடி.

[3] முமுக்ஷுப்படி, சூத். 183.

பிராவண்யம், அவ்விரண்டின் காரியமான பாகவத அபசாரம் முதலான விரோதிகளையெல்லாம் ஒன்றிலிருந்து ஒன்ருக அருளிச்செய்கிருர் ஆகையாலே விரோதம் இல்லை என்க. (104)

## 185

அகங்காரம் [1]அக்நி ஸ்பரிசம் போலே.

என்பது சூத்திரம்.

**அவ :** இவ்வகங்காரம் முதலியவற்றின் கொடுமையை விரிவாகக் கூறுவதற்குத் திருவுள்ளம்பற்றி, முதலில் அகங்காரத்தின் கொடுமையை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :** 'அக்நி ஸ்பரிசம் போலே' என்றது, நெருப்பினுடைய சேர்க்கையானது, அது சேர்ந்த இடம் எங்கும் சுட்டு உருவழிக்குமாறு போலே, இதுவும், சேர்ந்தாரைக் கொல்லியாய் ஆன்ம சொரூபத்தை நேராக உருவழித்துவிடும் என்றபடி. (105)

## 186

[2]'ந காமகலுஷம் சித்தம்', 'நஹிமே ஜீவிதே நார்த்த:', 'நதேஹம்', 'எம்மாவீட்டுத்திறமும்'.

என்பது சூத்திரம்.

**அவ :**—இவ்வகங்காரத்தினுடைய கொடுமைக்குப் பிரமாணங்கள் காட்டுகிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—அதில் முதலில் இருக்கு வேதத்தின் பிரிவான ஜிதந்தாவசனத்தைக் காட்டுகிருர் [3]'நகாமகலுஷம் சித்தம்' என்று. இவ்வசனத்தின் பொருள் வருமாறு : ஒரு காரணமும் பற்ருத சேஷியாய் எல்லையில்லாத இனியரான தேவரீர் திருவடி

---

[1] அக்நி ஸ்பரிசம் - நெருப்பின் சேர்க்கை.

[2] 'நகாமகலுஷம்' என்றது, ஜிதந்தாவினின்றும் எடுக்கப்பட்ட வசனம். 'நஹிமே' என்பது ஸ்ரீராமாயணத்தினின்றும் எடுக்கப்பட்டது. 'நதேஹம்' ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த தோத்திரரத்நம். 'எம்மா வீடு' என்பது திருவாய்மொழி. இவற்றின் பொருள்களை வியாக்கியானத்தில் காணல் தகும்.

[3] 'ந காமகலுஷம் சித்தம் மமதே பாதயோ: ஸ்திதம் காமயே து வைஷ்ணவத்வம். ஸர்வஜந்மஸுகேவலம்' என்பது ஜிதந்தா.

களிலே நிலை பெற்ற என் நெஞ்சமானது ஸ்ரீவைகுண்டம் முதலான திவ்விய தேசங்களை [1] ஸ்வயம் புருஷார்த்தமாக நினைத்துக் கலங்கியிருக்கிறதன்று; எல்லாப் பிறவிகளிலும் தேவர்க்கே இனிமையாம்படியிருக்கிற அடிமையையே ஆசைப் படாநின்றது என்பதாம். இவ்வசனத்தில் உள்ள 'கேவலம்' என்ற சொல்லால் [2] இத்தலைக்குமாயிருக்கும் இருப்பைக் கழிக் கிறது. 'து' என்ற சொல் 'அடிமையையே' என்று பிரிநிலைப் பொருளைக் காட்டுகிறது. இதனால், [3] மோக்ஷம் அளவாகத் தன்னுகப்பால் வருமவையெல்லாம் அகங்காரத்தை உள்ளடக்கிக் கொண்டு இருப்பவை ஆகையாலே விடத்தக்கவை என்னுமிடம் சொல்லப்பட்டது.

அதன்பின் பிராட்டி வசனத்தை அருளிச்செய்கிறார் [4] 'நஹிமே ஜீவிதே நார்த்த:' என்று. இதன் பொருள் வருமாறு: [5] மஹாரதரான பெருமாளைப்பிரிந்து அரக்கிகள் நடுவே வசிக்கிற எனக்குப் பிராணனால் ஒரு பயன் இல்லை; செல்வங்களாலும் ஒரு பயன் இல்லை; ஆபரணங்களாலும் ஒரு பயன் இல்லை என்பதாம். இதனால் பிராணன் முதலானவைகள் எல்லாம் அவனுடைய உபயோகத்திற்காக அன்றிக்கே, தனக் கானபோது அகங்காரத்தோடு சேர்ந்தவையாகையாலே விடத் தக்கவையாம் என்னுமிடம் சொல்லப்பட்டது.

அதன் பின் பரமாசாரியரான ஆளவந்தார் வசனத்தை அருளிச்செய்கிறார் [6] 'நதேஹம்' என்று. இதன் பொருள்

---

[1] ஸ்வயம்புருஷார்த்தம் - வேறு ஒன்றற்குச் சாதனமாகாமல் தானே புருஷார்த்தமாகவிருப்பது.

[2] இத்தலைக்கும் - தனக்கும்.

[3] "ஒடும் பொன்னும் ஒக்கவே நோக்குவார்
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"
என்ற பெரியபுராணம் ஒப்பு நோக்கல் தகும்.

[4] 'நஹிமே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தை: நசபூஷணை. வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநாராமம் மஹாரதம்' என்பது ஸ்ரீராமா. சுந்.

[5] அர்த்தரதர், சமரதர் என்பன போன்று மஹாரதர் என்பது போர் வீரர்களுள் ஒரு பிரிவினரை. "அதிரதர் தம்மை எண்ணில் அணிவிரல் முடக்கலொட்டா, முதிர்சிலை முனி" என்பது வில்லி பாரதம்.

[6] 'நதேஹம் நப்ராணந் நசஸுகம் அசேஷாபிலஷிதம் நசாத்மாநம் நாந்யத்கிமபி தவசேஷத்வ விபவாத், பஹிர்பூதம் நாதக்ஷணமபி ஸஹே

வருமாறு : 'எனக்கு வகுத்த சேஷியானவனே, உன்னுடைய சேஷத்துவமாகிற செல்வத்திற்குப் புறம்பான சரீரத்தையும் கணநேரமும் பொறேன்; இச்சரீரத்திற்குத் தாரகங்களான பிராணன்களையும் பொறேன்; எல்லாராலும் விரும்பப்படுகின்ற சுகத்தையும் பொறேன்; புத்திரர் நட்டோர் மனைவி முதலானவர்களில் ஒருவரையும் பொறேன்; இவற்றையெல்லாம் அநுபவிக்கின்ற ஆன்மாவினையும் பொறேன், இவையெல்லாம் உருக்காணவொண்ணுதபடி நூறு பிரிவுகளாக அழிந்து போகவேண்டும். இந்த விண்ணப்பம் சத்தியம். இங்ஙன் அன்றுகில் தேவர்க்குப் பொய்யனுன [1] மது பட்டது படுகிறேன்' என்பதாம். இதனுல், இறைவனுடைய சேஷத்துவத்திற்குப் புறம்பானவை எல்லாம் அகங்காரமாகிற குற்றத்தோடு கூடியவையாகையாலே விடத்தக்கவை என்னுமிடம் சொல்லப்பட்டது.

அதன் பின், மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களுள் தலையானவர் வசனத்தை அருளிச்செய்கிறுர் [2] 'எம்மா வீட்டுத் திறமும்' என்று. அதாவது, '"ஆழ்வீர், மோக்ஷத்தைக் கொள்ளும்" என்ன, என்னுகப்புக்காகத் தருகின்ற மோக்ஷம் எல்லாவகையாலும் விலக்ஷணமாயிருந்ததேயாகிலும் அதன் இடையாட்டமும் பேசக்கடவோமல்லோம்' என்றபடி. இதனுல், தன்னுகப்பால் வரும் மோக்ஷமும் அகங்காரத்தை உள்ளேயுடையதாகையாலே செல்வம் முதலியவைகளைப் போன்று விடத்தக்கது என்னுமிடம் சொல்லப்பட்டது. (106)

---

யாது ஶததா விநாஶம்தத்ஸத்யம் மதுமதந விஜ்ஞாபநமிதம்' என்பது தோத்திரரத்நம், 57.

இங்கே, 'ஏருளும் இறையோனும்' என்று தொடங்கும் திருவாய்மொழியிலுள்ள பத்துத்திருப்பாசுரங்களையும் அநுசந்தித்தல் தகும்.

[1] 'மது' என்பவன் ஓர் அசுரன். இவனைக் கொன்றதனுல் இறைவனுக்கு மதுசூதனன் என்ற திருப்பெயர் வழங்கலாயிற்று.

[2] 'எம்மா வீட்டுத் திறமும் செப்பம்நின்
செம்மா பாதபற் பத்தலை சேர்த்துஒல்லை
கைம்மா துன்பம் கடிந்த பிரானே!
அம்மா வடியேன் வேண்டுவ திஃதே'

என்பது திருவாய்மொழி.

## 187

[1] பிரதிகூல விஷய ஸ்பரிசம், விஷ ஸ்பரிசம் போலே; அநு கூல விஷய ஸ்பரிசம், விஷமிச்ர போஜனம் போலே.

என்பது சூத்திரம்.

அவ:—ஆக, அகங்காரத்தின் கொடுமையை அருளிச் செய்தார் இதுகாறும். இனி விஷயங்களின் கொடுமையையும் அருளிச்செய்கிருர் மேல்.

வியாக்:—பிரதிகூல விஷயமாவது, உலகத்தாருக்கு வெறுக்கத்தக்கதாய் நரகத்திற்குக் காரணமாயுமுள்ள பிறர்மனை நயத்தல், பரத்தையரைச் சேர்தல் முதலாயினவாம். அவர் களுடைய சேர்க்கையை 'விஷஸ்பரிசம் போலே' என்றது, பிராதி கூல்யம் என்றே தோற்ற நின்று உயிரை முடிக்கும் விஷ சம்பந்தம் போலே, சாஸ்திரங்களால் விலக்கப்படுவதால் பிரசித்த மாகையாலே பிரதி கூலம் என்றே தோற்றியிருந்து இறைவ னுடைய போகத்திற்கே உரிய ஆன்ம சொரூபத்தை அழிக்கை யாலே என்றபடி.

அநுகூல விஷயமாவது, உலகத்தாரால் வெறுக்கப் படாததாய் நரகத்திற்குக் காரணமுமன்ருய்ச் சரீரத்தோடு கூடி யிருக்கிற ஆன்மாவிற்கு அநுகூலமாய் இருந்துள்ள மனைவியின் சேர்க்கை. இவர்களுடைய சேர்க்கை 'விஷமிச்ர போஜனம் போலே' என்றது, விஷத்தோடு கலந்த சோற்றினை உண்ணல், அதனை அறியாதவனுக்கு அது அநுகூலம் என்றே தோற்றி யிருந்து அவன் உயிரை முடித்துவிடுமாறு போலே சாஸ்திரங் களால் விதிக்கப்பட்டதனுல் பிரசித்தமாகையாலே அநுகூலம் போலே தோற்றியிருந்து ஆன்மாவினுடைய [2] அநந்ய போகத்வ ரூபமான சொரூபத்தை அழித்துவிடுகையாலே என்றபடி.

---

[1] பிரதிகூல விஷய ஸ்பரிசம் - பிறர்மனை நயத்தல், பரத்தையரைச் சேர்தல் முதலாயின. விஷ ஸ்பரிசம் - விஷத்தின் சேர்க்கை. அநுகூல விஷய ஸ்பரிசம் - தன் மனைவியின் சேர்க்கை. விஷமிச்ர போஜனம் - விஷம் கலந்த உணவு. அது விரோதியாகவே இருந்து உயிரை முடிக் கும். இது அநுகூலமாகவேயிருந்து ஆன்ம சொரூபத்தினை முடிக்கும் என்பதாம்.

[2] அநந்ய போகத்வம் - எம்பெருமானைத்தவிர வேருெரு பொருளை யும் அநுபவத்திற்குரிய பொருளாகக் கொள்ளாமை.

[1] 'விஷத்திற்கும் ஐம்புலன்களாகிற விஷயங்களுக்கும் வேறு பாடு மிகவும் அதிகமாக உள்ளதாம்; விஷமானது உட்கொண்ட பின்பு கொல்லும், ஐம்புலன்களாகிற விஷயங்கள் நினைத்த வளவில் கொல்லும்' என்று, உண்ணவும் வேண்டாதே நினைத்த அளவிலேயும் கொல்லுகையாலே விஷத்தைக்காட்டிலும் ஐம்புல விஷயம் மிகக்கொடியது என்றுநின்றதிறே. (107)

## 188

அக்நி ஜ்வாலையை விழுங்கி விடாய் கெட நினைக்குமா போலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாபோலேயும் [2] விஷயப் பிரவணனுய்ச் சுகிக்க நினைக்கை.

என்பது சூத்திரம்.

அவ:—இப்படிக் கேட்டினைச் செய்கின்ற ஐம்புலவின்பங் களிலே ஆசையுள்ளவனுய் இன்பத்தை நுகர நினைக்குமது [3]விபரீத ஞானத்தின் காரியம் என்னுமதனைப் பிரமாணங்களிலே பிரசித்தமான உவமை முகத்தால் அருளிச்செய்கிறுர் இச் சூத்திரத்தால்.

வியாக்:—'அக்நி ஜ்வாலையை விழுங்கி விடாய்கெட நினைக் குமா போலேயும்' என்றது [4]"நெருப்பினுடைய ஜுவாலையை விழுங்கி எப்படித் தாகத்தைத் தீர்க்க நினைக்கிருனே, அப்படியே தான் ஆன்மாக்களுக்கு விஷயங்களின் சேர்க்கையாலே இன்பம் நுகரவேண்டும் என்னும் நினைவு" என்கிறபடியே தண்ணீர் விடாய் கொண்டவன் விபரீத ஞானத்தாலே தாபத்திற்குக் காரணமான நெருப்பு ஜுவாலையை விழுங்கித் தன் விடாய் தீர

---

[1] 'விஷஸ்ய விஷயாணாஞ்ச தூரமத்யந்த மந்தரம், உபபுக்தம் விஷம் ஹந்தி விஷயா: ஸ்மரணுதபி.' என்பது, பிரமாணம்.

[2] 'விஷயப் பிரவணனுய்ச் சுகிக்க நினைக்கை, நினைக்குமா போலே யும் நினைக்குமாபோலேயும் இருப்பதொன்று' என்று கொண்டு கூட்டி ஒரு சொல் வருவித்து முடிக்க. விஷயப் பிரவணனுய் - சிற்றின்பத்தில் மிக்க ஆசையுள்ளவனுய். நினைக்கை - நினைத்தல்.

[3] விபரீதஞானம் - திரிபுணர்ச்சி.

[4] 'ஆஸ்வாத்ய தஹநஜ்வாலா மூதந்யா ஶமநம்யதாததா விஷய ஸம்ஸர்காத் ஸுகசிந்தா ஶரீரிண:' என்பது பிரமாணம்.

நினைக்குமாறுபோலேயும் என்றபடி. ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாபோலேயும்' என்றது, [1]'விஷயங்களினுடைய சம்பந்தத்தாலே எவன் இன்பத்தை அநுபவிக்கிருனே அவன் படத்தை விரித்து ஆடுகிற பாம்பினுடைய நிழலை இளைப்பாறுதற்கு அடைகின்றவனைப் போன்றவன் ஆவான்' என்கிறபடியே சூரியனுடைய கிரணங்களாலே அளவிற்கு மேலே தபிக்கப்பட்டவன், அந்தத் தாபத்தை ஆற்றுகைக்காக, நிழல் என்ற அளவினைக்கொண்டு, மேலே வருகின்ற கேட்டினை ஆராயாமல், மிக்க கோபத்தோடு படத்தை விரித்து நின்று ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாறுபோலேயும் என்றபடி. விஷயப் பிரவணனுய்ச் சுகிக்க நினைக்கை' என்றது, அவற்றைப்போலே இருப்பது ஒன்றும், தீங்கு தருகின்ற விஷயங்களைச் சுகத்தைத் தருவனவாக மயங்கி அவற்றிலே ஆசையுள்ளவனுய் அவற்றை அநுபவித்து இன்பம் நுகர நினைக்குமது என்றபடி. (108)

## 189

அசுணமா முடியுமா போலே, பகவதநுபவைகபரனுய் மிருது பிரகிருதியாய் இருக்குமவன் [2]விஷயதரிசனத்தாலே முடியும்படி.

என்பது சூத்திரம்.

---

[1] 'விஷயாணுந்து ஸம்ஸர்காத்யோ பிபர்தி ஸுகம் நரः ந்ருத்யதः பணிநः சாயாம் விஶ்ரமாயா ஶ்ரேயதஸः' என்பது பிரமாணம்.

[2] 'விஷய தரிசனத்தாலே முடியும்படி, அசுணமா முடியுமா போலே' என்று கூட்டுக. அசுணமா என்பது இசையறிவதொரு விலங்கு. இதன் தன்மையைக் கீழ்வருவனவற்ருல் உணர்தல் தகும்.

'அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் உடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே.' (நற்றிணை, 304)

'இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா
அன்ன ளாய்மகிழ் வெய்துவித் தாளரோ.' (சிந். 1402)

"பறைபட வாழா வசுணமா." (நான்மணிக்கடிகை)

பகவத் அநுபவ ஏகபரன் - பகவானையே அநுபவிப்பதில் நோக்கமுள்ளவன். பிரகிருதியாய் - தன்மையனுய். விஷய தரிசனம் - ஐம்புல வின்பங்களை - மகளிரைக் காணல்.

**அவ :**—விஷயங்களின் சம்பந்தம் ஆன்ம சொரூபத்தை அழிப்பது ; விஷயங்களில் ஆசையுள்ளவனாய் இன்பம் நுகர நினைக்குமது விபரீத ஞானத்தின் காரியம் என்றிறே மேலே சொல்லி நின்றது. இவ்விஷயங்களின் சம்பந்தமே வேண்டா ; பகவானுடைய குணங்களிலே நைந்திருக்கும் ஒருவன் இவற்றைக் காணவே முடியும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அசுணமா முடியுமாபோலே' என்றது, [1]அசுணமா என்கிற பறவை மிக்க இனிமையான இசையைக் கேட்குமதனாலே நெஞ்சு நீர்ப்பண்டமாய் இளகின நிலையிலே, மிகக் கடினமான பறையை அடிக்கக் கேட்டு இறக்குமாறுபோலே ஆயிற்று என்றபடி. 'பகவத் அநுபவ ஏகபரனாய் மிருது பிரகிருதியாய் இருக்குமவன் விஷய தரிசனத்தாலே முடியும்படி' என்றது, பகவானுடைய அநுபவம் ஒன்றிலேயே நோக்குள்ளவனாய் அவனுடைய குணங்களின் இனிமையிலே [2] நைந்து மற்றைய விஷயங்களின் பெயர் கேட்கும்போதே மயங்கும்படி மிருதுத் தன்மையனாயிருக்குமவன், பகவானுடைய அநுபவத்தையே இன்பமாகக் கொண்டிருக்கிற ஆன்மாவினை அழிக்கக் கூடியவைகளான விஷயங்களைக் கண்டவளவில் ஏங்கி முடியும்படி என்றபடி. (109)

## 190

[3] 'காட்டிப் படுப்பாயோ?' என்னக்கடவதிறே.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே கூறிய பொருளை [4] ஆப்த வசனத்தாலே இசைவிக்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'காட்டிப் படுப்பாயோ என்னக் கடவதிறே' என்றது, மிகச் சிறிய சுவையினவாய்ப் பலபல விதங்களாய்

---

[1] வடநூலார் மரபுபற்றி 'அசுணமா என்கிற பறவை' என்கிறார்.

[2] 'நினைந்து நைந்து உள்கரைந்து உருகி' என்பது திருவாய்மொழி, 1.6:2.

[3] 'ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்
பாவி யேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ?' என்பது திருவாய்மொழி, 6.9:9.

[4] ஆப்தர் - நம்பத்தக்க பெரியார்.

இருந்துள்ள ஐம்புல இன்பங்களைக் காட்டி, அவற்றோடு பொருந்தாதபடியாய், [1]அவற்றிற்குப் பாங்கான நிலத்திலே இருக்கைக்குத் தகுதியான பாவத்தைப் பண்ணின என்னை முடிக்கப் பார்க்கிறாயோ என்றபடி. (110)

## 191

**[2]அஜ்ஞான விஷயப் பிரவணன் கேவல நாஸ்திகனைப்போலே; ஞானவானான விஷயப் பிரவணன் ஆஸ்திக நாஸ்திகனைப் போலே.**

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிவந்த இத்தகைய ஐம்புலவின்பங்களின் குற்றத்தை அறியாமையாலே இவற்றிலே ஆசையுடையவனானவனுக்கும் இவற்றின் குற்றங்களை அறிந்துவைத்தே இவற்றில் ஆசையுடையவனுமவனுக்கும் வேற்றுமையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' அஜ்ஞான விஷயப் பிரவணன் கேவல நாஸ்திகனைப்போலே ' என்றது, ஐம்புலவின்பங்கள் [3]குற்றங்கள் நிறைந்திருத்தலையும் ஆன்மாவின் தன்மைக்கு மாறுபட்டவைகளாகவிருத்தலையும் அறியாமல் அவற்றை ஆசைப்பட்டு மேல் விழுகிறவன், தர்ம அதர்ம, பரலோக, சேதன ஈச்வர [4]ஆதிகளைப்பற்றிப் பரக்கப் பேசுகின்ற சாஸ்திரங்களில் பிரமாண

---

[1] அவற்றிற்குப் பாங்கான நிலம் - இந்தவுலகம். இந்தச் சரீரமுமாம்.

[2] அஜ்ஞன் - அறிவில்லாதவன். விஷயப் பிரவணன் - ஐம்புல இன்பங்களில் ஆசையுள்ளவன். நாஸ்திகன் - மறுபிறப்பும் இருவினைப் பயனும் மேலுலகும் கடவுளும் இல்லை என்பவன். கேவலம் என்ற சொல் ஆஸ்திக புத்தி சிறிதும் கலவாமையைக் குறித்து நின்றது. ஆஸ்திக நாஸ்திகன் என்பதற்கு ஆஸ்திகனாயிருந்து வைத்தே நாஸ்திகனைப் போன்றவன் என்று பொருள் உரைக்க. ஆஸ்திகன் - மறுபிறப்பும் இருவினைப்பயனும் மேலுலகமும் கடவுளும் உண்டு என்பவன்.

[3] குற்றமாவது - அல்பமாய் நிலையற்றதாய் இருப்பது.

[4] ஆதி என்றதனால் குணங்களையும் விக்கிரகத்தையும் பத்திநியையும் பரிஜனங்களையும் கொள்க.

புத்தி ஒன்றும் இல்லாமல் தன் விருப்பின்படி திரிகின்ற சுத்த நாஸ்திகனைப்போலே ஆவன் என்றபடி.

‘ஞாநவானான விஷயப் பிரவணன்’ என்றது, ஐம்புலவின் பங்கள் குற்றங்களோடு கூடியவை என்னுமதனையும் ஆன்மா வின் தன்மைக்கு மாறுபட்டவை என்பதனையும் அறிந்து வைத்தே, அவற்றை விரும்பி மேல் விழுகிறவன் என்றபடி.

‘ஆஸ்திக நாஸ்திகனைப்போலே’ என்றது, தர்மம் அதர்மம் முதலாயினவற்றைப்பற்றிப் பேசுகின்ற சாஸ்திரத்தைப் பிர மாணம் என்று இசைகையாலே ஆஸ்திகன் என்று சொல்லலாம் படியிருப்பானாய், அந்தச் சாஸ்திரத்தின் மரியாதையில் அடங் காமல் தோற்றிற்றுச் செய்து திரிகையாலே நாஸ்திகனைப் போன்றவனாயிருக்கும் ஆஸ்திக நாஸ்திகனைப் போன்றவன் என்றபடி. (111)

## 192

கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ் திக நாஸ்திகனை ஒருநாளும் திருத்தவொண் ணாது.

என்பது சூத்திரம்.

அவ :—‘உபமானமாகக் கூறப்பட்ட இவர்கள் இருவர்க்கும் விசேடம் யாது?’ என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**‘கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்’ என்றது, சாஸ்திரத்தை இல்லை என்று, தோற்றிற்றுச் செய்து திரிகிறவனை, சாஸ்திரங்களிலே நம்பிக்கை பிறப்பதற்கு உறுப்பான உபதேசங் களைச் செய்து விதிவிலக்குகளுக்கு அடங்கும்படி திருத்தலாம் என்றபடி. ‘ஆஸ்திக நாஸ்திகனை ஒருநாளும் திருத்த வொண்ணாது’ என்றது, சாஸ்திரங்களில் பிரமாண புத்தி யுடையனாய், அவற்றில் சொல்லப்படுகின்ற பொருள்களையும் அறிந்து வைத்து, பாவங்களுக்குப் பயப்படாமல், நாஸ்திகனைப் போலே தன் விருப்பின்படியே திரிகின்றவனைச் சொல்லியறிவிக் கத்தக்கது ஒன்றில்லாமையாலே உபதேசமுகத்தால் ஒருநாளும் திருத்தவொண்ணாது என்றபடி.

இதனால், அறிவில்லாமையால் ஐம்புல இன்பங்களில் ஆசைப்பட்டுத் திரிகின்றவனை ஐம்புலவின்பங்களில் உள்ள குற்றம் முதலியவற்றை எடுத்து உபதேசித்து அதன் மூலமாக வைராக்கியமுடையவனாகும்படி திருத்தலாம். ஞானவானான விஷயப் பிரவணனை, விஷயங்களின் குற்றம் முதலியவற்றை விளக்கமாக அறிந்து வைத்தே அவற்றில் செல்லுகிறவனாகை யாலே அவற்றின் உபதேசத்தால் ஒருநாளும் திருத்த அரிது என்றதாயிற்று. [1] "ஒன்றும் அறியாதவன் எளிதாகச் சாஸ்திர ஞானத்தைத் தெரிவிக்கத்தக்கவன்; ஞானமுடையவன் மிக எளிதாகத் தெரிவிக்கத் தக்கவன்; சிறிய ஞானத்தாலே செருக்குக் கொண்ட மனிதனைப் பிரமனாலும் திருத்தமுடியாது," என்னக்கடவதிறே.

ஆகையால், [2] இவன் அவனைக்காட்டிலும் மிகமிகத் தாழ்ந்தவன் என்பது கருத்து. (112)

## 193

[3] இவையிரண்டும் ஸ்வரூபேண முடிக்கும் அளவன்றிக்கே பாகவத விரோதத்தையும் விளைத்து முடிக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—[2] 'தன்னைத்தானே' என்ற சூத்திரத்தில் சொரூபத்தை அழிப்பவைகளாகச் சொன்ன அகங்காரத்தினுடையவும் ஐம்புலவின்பங்களினுடையவும் கொடுமைகளைத் தனித்தனியே அருளிச்செய்தார் மேல். இரண்டினுக்கும் உள்ளது ஒரு

---

1 'அஜ்ஞ: ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ: ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் நரஞ்ஜயதி' என்பது பிரமாணம்.

2 'இவன்' என்றது எல்லாவற்றையும் அறிந்தவனாய் ஐம்புல இன்பங்களில் ஆசையுள்ளவனை. 'அவன்' என்றது, அறியாதவனாய் ஐம்புலவின்பங்களில் ஆசை வைத்தவனை.

3 'இவை இரண்டும்' என்றது, அகங்காரத்தினையும் ஐம்புலவின்பங்களில் வைத்த ஆசையினையும். ஸ்வரூபேண - தாமான தன்மையாலே. நேராக என்றபடி. பாகவத விரோதம் - பாகவதர்கள் திறத்தில் செய்கிற விரோதம் என்று பொருள் கொள்க; பாகவதர்களுக்கு விரோதம் இல்லாமையாலே.

கொடுமை விசேடத்தை ஒரே சூத்திரத்தால் அருளிச்செய்கிறார் இங்கு.

**வியாக் :**—இவை இரண்டும்–சொல்லப்பட்ட குற்றங்களோடு கூடியவையான இந்த அகங்காரமும் ஐம்புலவின்பங்களின் ஆசையுமாகிற இவை இரண்டும், ஸ்வரூபேண முடிக்கும் அளவன்றிக்கே—தாமான தன்மையிலே நின்று அழிக்கும் அளவன்றிக்கே, பாகவத விரோதத்தையும் விளைத்து முடிக்கும்—பாகவத அபசாரமாகிற மிகப் பெரிய கேட்டினையும் விளைத்துச் [1] சொரூபத்தை அழித்தலையும் செய்யும் என்றவாறு.

'ஸ்வரூபேண' என்றது [2] ஸ்வேநரூபேண என்றபடி. அகங்காரத்திலும் ஐம்புலவின்பங்களிலும் ஆசையையுடையன் ஆனால் உள்ள அளவுஅன்றிறே, பாகவத அபசாரம் பண்ணினால் வருகிற [3] பகவானுடைய தண்டனை ! (113)

## 194

[4] நாம ரூபங்களை உடையராய், பாகவத விரோதம் பண்ணிப் போருமவர்கள் தக்த படம் போலே.

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனால், பாகவதர்களிடத்தில் விரோதம் விளைந்த போதே சொரூபத்திற்கு நாசம் பிறக்குமாகில், பாகவதர்கள் திறத்தில் விரோதம் பண்ணிப் போரா நிற்கச் செய்தே, சொரூபத்திற்குத் தக்கனவான நாமத்தையும் உருவத்தையும் உடையாராய்க்கொண்டு இருக்கிறபடி யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

1 183ஆம் சூத்திரம். சொரூபம் - ஆன்மா.

2 ஸ்வேந ரூபேண - தாமான தன்மையிலே.

3 'பகவானுடைய தண்டனை, ஆசையையுடையன் ஆனால் உள்ள அளவன்றிறே' என முடிக்க. அதைக்காட்டிலும் தண்டனை மிகக் கொடியதாகவிருக்கும் என்பது கருத்து.

4 நாமம் - தாஸ்யநாமம். இராமாநுஜதாசன் என்றாற்போல்வது. ரூபம் - வைணவ சின்னங்களையுடைய வடிவம். சின்னங்கள் - திருமண் தரித்திருத்தல் முதலாயின. பண்ணிப் போருமவர்கள் - செய்து திரிகின்றவர்கள். தக்தபடம் - எரிந்துபோன புடைவை.

**வியாக் :**—'நாம ரூபங்களையுடையராய்' [1] என்றது, வைணவர்களுக்கு உறுப்பான தாஸ்யநாமத்தையும் அதற்குத் தகுந்த உருவத்தையுமுடையராய்க்கொண்டு என்றபடி. 'பாகவத விரோதம் பண்ணிப் போருமவர்கள்' என்றது, உள்ளே ஒரு பசை இன்றிக்கே அகங்காரம் முதலியவற்றிற்கு வசப்பட்டு, பாகவதர்கள் திறத்திலே விரோதத்தைப் பண்ணிப் போருமவர்கள் என்றபடி. 'தக்தபடம் போலே' என்றது, உருக்குலைய வெந்திருக்கச் செய்தே, உருவுடையது போலே காணப்படும் வெந்த புடைவையோடு ஒத்திருப்பர் என்றபடி. (114)

## 195

[2] மடிப்புடைவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக் கிடக்கும்; காற்று அடித்தவாறே பறந்து போம்.

என்பது சூத்திரம்.

அவ :—வெந்த புடைவையின் தன்மையை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'மடிப்புடைவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக் கிடக்கும்' என்றது, தட்டி மடித்திருக்கிற புடைவையானது தட்டுருவ எங்கும் வெந்திருக்கச் செய்தே, உண்டையும் பாவும் முன்புபோலே ஒத்திருக்கும் என்றபடி. 'காற்று அடித்தவாறே பறந்து போம்' என்றது, ஒரு காற்றுவந்து சிதற அடித்தவாறே உருக்காண வொண்ணுதபடி [3] பாறிப் பறந்து போம் என்றபடி. அப்படியே அபசாரமாகிற தீயினாலே எரிக்கப்பட்டவராய்க் கொண்டு நாமத்தோடும் உருவத்தோடும் இருக்கிறவர்களும் பகவானுடைய விசேடமான தண்டனையாலே பாற அடி உண்டு உரு மாய்ந்து போவார்கள் என்பது கருத்து. (115)

---

1 சொரூபம் - சேஷத்துவமும் பாரதந்திரியமும்.

2 மடிப்புடைவை - மடித்துவைத்துள்ள துணி. உண்டை - குறுக்கே நெய்கிற நூல். பாவு - தறியில் இருக்கிற நூல்; நெட்டிழை.

3 பாறி - சிதறி.

## 196

'ஈச்வரன் அவதரித்துப் பண்ணின [1]ஆனைத் தொழில்கள் எல்லாம், பாகவத அபசாரம் பொறுமை' என்று ஜீயர் அருளிச்செய்வர்.

என்பது சூத்திரம்.

**அவ :**—பாகவதர்கள் திறத்தில் அபசாரம் பண்ணினால் ஈச்வரன் அதனைப் பொறுமல் அதற்குத் தக்க தண்டனை செய்வான் என்னுமதனை [2]ஆப்தருடைய வார்த்தையைக் கொண்டு அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்கள் எல்லாம்' என்றது, [3]சங்கல்ப மாத்திரத்தாலே எல்லாவற்றையும் நடத்தவல்ல எல்லாவாற்றலையுமுடையனான சர்வேச்வரன், தன்னை அழிய மாறி மற்றைச் சாதியினர்களைப் போன்றவனாய் வந்து அவதரித்துக் [4]கைதொடனாய் நின்று செய்த, இரணியன் இராவணன் முதலியோர்களைக் கொல்லுதலாகிய [5]அதிமானுஷச் செயல்கள் எல்லாம் என்றபடி. 'பாகவத அபசாரம் பொறுமை என்று ஜீயர் அருளிச் செய்வர்' என்றது, பிரஹலாதன், மகரிஷிகள் முதலான அந்த அந்தப் பாகவதர்கள் திறத்தில் அவரவர்கள் செய்த அபசாரம் பொறுமையாலே என்று, ஆப்தர்களுள் உயர்ந்தவரான நஞ்சீயர் அருளிச்செய்வர் என்றபடி. (116)

[1] ஆனைத்தொழில் - மனிதர்களுடைய செயல்களுக்கு அப்பாற்பட்ட செயல். ஜீயர் - நஞ்சீயர்; இவர் பட்டருடைய சிஷ்யர்; நம்பிள்ளைக்கு ஆசாரியர்.

[2] ஆப்தர் - நம்பத்தகுந்தவர்.

[3] சங்கல்பம் - நினைவு.

[4] கைதொடனாய் - சரீரத்தால் செய்யும் போர் முதலான செயல்களையுடையவனாய். இது, சங்கல்பத்தால் செய்தலை விலக்குகிறது.

[5] அதிமானுஷச்செயல் - மனிதச் செயலுக்கு அப்பாற்பட்ட செயல்.

## 197

[1] அவ மாநக்ரியா

என்பது சூத்திரம்.

அவ :—இந்தப் பாகவத அபசாரத்தினுடைய கொடுமையில் பகவானுடைய வார்த்தையைக் காட்டுகிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[2] ‘என்னிடத்தில் எந்த அன்பு உனக்கு உண்டாயிற்ரே அந்த அன்பானது என் அடியார்களிடத்திலும் எப்பொழுதும் உனக்கு உண்டாகக்கடவது; அந்தப் பக்தர்கள் திறத்தில் செய்யும் பாவம் எல்லாவுலகங்களையும் நாசம் செய்யும்’ என்ருனிறே. (117)

## 198

பாகவத அபசாரந்தான் அநேகவிதம்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படிப்பட்ட பாகவத அபசாரந்தான் பல வகைப் படும் என்று அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் : ‘பாகவத அபசாரந்தான் அநேகவிதம்’ என்றது, அவர்களுடைய பிறவியைப் பற்றி நினைத்தல், ஞானத்தைப் பற்றி நினைத்தல், ஒழுக்கத்தைப்பற்றி நினைத்தல், வடிவினைப் பற்றி நினைத்தல், உறவினரைப்பற்றி நினைத்தல், வசிக்கும் இடத்தைப்பற்றி நினைத்தல் என்பனபோன்று பல படிப்பட்டிருக்கும் என்றபடி. (118)

---

1 “அவமாநக்ரியா” என்பது ஒரு சுலோகத்திலே உள்ள ஒரு தொடர்மொழி.

2 ‘யாப்ரீதி: மயிஸம்வ்ருத்தா மத்பக்தேஷு ஸதாஸ்துதே அவமாநக்ரியா தேஷாம் ஸம்ஹரத்யகிலம் ஜகத்.’ என்பது, பாரதத்தில் ஆசுவமேதிகத்தில் கண்டது. இச்சுலோகத்தில் ‘பக்தேஷு’ என்றதனுல் பக்தர்களுள் உயர்வு தாழ்வு இன்மை தெரிகிறது. ‘அகிலம்’ என்றதனுல் வைஷ்ணவர்களையும் அவைஷ்ணவர்களையும் கோடல் தகும்.

## 199

[1] அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜன்ம நிரூபணம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—அவற்றுள் ஒன்றுன பிறவியைப்பற்றி நினைத்தலால் உளதாகும் [2] கொடுமையைப் பற்றி அருளிச்செய்வதாகத் திருவுள்ளம் பற்றி அதனை எடுக்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜந்ம நிரூபணம்' என்றது, தாழ்ந்த குலங்களிலே பிறந்த பாகவதர்களைப் பகவானுடைய சம்பந்தம் அடியாக வருகின்ற பெருமையைப் பாராமல், தாழ்ந்தவர்கள் என்ற எண்ணத்திஞல் அவர் அவர் பிறந்த பிறவிகளை எண்ணுதல்—ஆராய்தல்—என்றபடி. (119)

## 200

[3] இதுதான் அர்ச்சாவதாரத்தில் உபாதான ஸ்மிருதியிலும் காட்டில் குரூரம்.

என்பது சூத்திரம்.

---

[1] 'அதிலே' என்றது தொகுதி ஒருமை. அந்த அபசாரங்கள் பலவற்றுள் என்றபடி. ஜந்ம நிரூபணம் - பிறவியைப்பற்றிக் குறைவாக நினைத்தல்.

[2] கொடுமையை அடுத்த சூத்திரத்தில் அருளிச்செய்கிருர்.

[3] இதுதான் - இந்தப் பாகவத ஜன்ம நிரூபணந்தான். அர்ச்சை - படிமை. அவதாரம் - ஆவிர்ப்பவித்தல்; தோன்றுதல். அதாவது, படிமத்தில் இறைவனுகிய தன்னுடைய தெய்வசக்தி முதலானவற்ருேடு தங்கியிருத்தல் என்றபடி. உபாதானம் - முதற்காரணப்பொருள். அந்தப் படிமத்தைச் செய்தற்கு அமைந்த உலோகம் மரம் கல் முதலானவை. ஸ்மிருதி - நினைத்தல். குரூரம் - கொடுமை.

[4] "எம்பெருமானர் தம்முடைய அந்திமதசையிலே சகல வேதங்களிலும் சகல சாஸ்திரங்களிலும் சகலமான ஆழ்வார்கள் திவ்வியப் பிரபந்தங்களிலும் பார்த்தவிடத்தில் 'ஒரு அதிகாரிக்கு, துவயமொழியப் புருஷார்த்தம் இல்லை, ஆசாரிய அபிமானம் ஒழிய மோக்ஷோபாயம் இல்லை. பாகவத அபசாரம் ஒழிய மோக்ஷ விரோதியில்லை' என்று அருளிச்செய்தார்" என்பது வார்த்தாமாலை. அபசாரம் - விரோதம்.

**அவ :**—பிறவியைப்பற்றி ஆராய்தலினுடைய கொடுமையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

'இதுதான்' என்றது, பாகவதர்களுடைய பிறவியைப்பற்றி ஆராய்தலைச் சுட்டுகிறது. 'அர்ச்சாவதாரத்தில் உபாதாந ஸ்மிருதி'யாவது, அடியார்கள் உகந்தது யாதாயினும் ஒரு பொருளைத் தனக்குத் திருமேனியாகக்கொண்டு அதிலே அப்ரா கிருத திவ்விய விக்கிரகத்தில், பண்ணும் விருப்பத்தைப் பண்ணி எழுந்தருளியிருக்கிற பெருமையை அறியாமல் தாழ்வாக நினைத்து 'இந்த விக்கிரகத்தைச் செய்வதற்கு முதற்காரணப் பொருள் இன்னதன்றோ' என்று நினைத்தல். 'அதைக்காட்டிலும் குரூரம்' என்றது, அவ்வாறு நினைத்தலைக்காட்டிலும், சர்வேசுவரனுடைய மிக்க தண்டனைக்குக் [1] காரணமாகும் என்றபடி.

(120)

## 201

[2] அத்தை மாத்ரு யோநி பரீட்சையோடு
ஒக்கும் என்று சாஸ்திரம் சொல்லும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அந்த அர்ச்சாவதாரத்தில் உபாதான ஸ்மிருதியின் கொடுமைதான் எவ்வளவு?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அத்தை மாத்ருயோநி பரீட்சையோடு ஒக்கும் என்று சாஸ்திரம் சொல்லும்' என்றது, [3] 'அர்ச்சாவதார விக்கிரகங்கள் செய்யப்பட்ட பொருள்களைப்பற்றிய ஆராய்ச்சியையும் ஒரு பாகவதனுடைய பிறவியைப்பற்றிய ஆராய்ச்சியையும், தாயினுடைய யோனிப் பரீட்சைக்கு ஒப்பாகச் சாஸ்திரம் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்' என்னுநின்றதிறே.

---

[1] 'காரணமாகும்' என்பதற்கு மேலே உள்ள 'இதுதான்' என்பதனைக் கொணர்ந்து முடிக்க.

[2] அத்தை - அந்த அர்ச்சையைச் செய்வதற்கு முதற்காரணமாக விருந்த பொருள்களைப்பற்றிய நினைவினை. மாத்ரு யோநி - தான் பிறந்த இடம். பரீட்சை என்றது ஈண்டு ஆராய்தலைக் குறித்தது.

[3] 'அர்ச்சாவாதாரோபாதாந வைஷ்ணவோத்பத்தி சிந்தநம் மாத்ருயோநி பரீக்ஷாயாః துல்யாமாஹுః மநீஷிணః' என்பது பிரமாணம்.

[1] இப்படி இரண்டனையும், தாயினுடைய யோநிப் பரீட்சைக்கு ஒப்பாகச் சாஸ்திரம் சொல்லிற்றேயாகிலும், அந்தத் தாயின் யோனிப்பரீட்சையானது அர்ச்சாவதாரத்தில் முதற் காரணப் பொருளைப்பற்றிய நினைவிற்கு ஒப்பாகுமித்தனை. வைஷ்ணவர்களுடைய பிறவிகளைப் பற்றிய எண்ணம் அதனைக் காட்டிலும் கொடுமையானது என்பது இவர் கருத்து. 'மாத்ரு யோநிப் பரீட்சை'யாவது, வேறொரு பெண்ணின் யோனியினுடைய அழகினையும் அழகின்மையினையும் ஆராய்ந்த நினைவின் வாசனையாலே, தன் தாயின் யோனியினையும் அப்படி நினைத்தல். 'அதனோடு ஒக்கும்' என்றது, இப்படி எண்ணினால் அதற்கு எத்துணைப்பாபமுண்டு, அத்துணைப்பாபமுண்டு அர்ச்சாவதார விக்கிரகத்தின் முதற்காரணப் பொருளைப்பற்றிய எண்ணத்திலும் என்றபடி. (121)

## 202

[2] திரிசங்குவைப்போலே கர்ம சண்டாளனாய் மார்வில் இட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய் விடும்.

என்பது சூத்திரம்.

---

[1] மேல் சூத்திரத்தில் பாகவதர்களுடைய பிறப்பினைப்பற்றி ஆராய்தல், அர்ச்சாவதார உபாதான ஸ்மிருதியிலுங்காட்டிலும் கொடியது என்றார். இங்கு, பாகவத ஜன்ம நிரூபணத்தையும் அர்ச்சாவதார உபாதாநஸ்மிருதியையும் ஒரு நிகரவாகக்கொண்டு, இவற்றின் கொடுமைக்கு, மாத்ருயோநி பரீட்சையை உவமையாகக் கூறுகின்ற சுலோகத்தை மேற்கோளாகக் காட்டுகிறார். 'இது சேருமாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி. 'என் திறத்தில் ஒருவன் எத்துணைக் குற்றங்களைச் செய்தானாயினும் செய்த அவன் என்னை ஒரு முறை சரணம் புகுவானாயின் அவன் செய்த குற்றங்கள் அத்தனையும் பொறுத்துக் கொள்கிறேன்; என் அடியார்கள் திறத்தில் செய்த குற்றங்களை நான் ஒரு நாளும் பொறுப்பதில்லை' என்று இறைவன் தானே வராகபுராணத்தில் கூறுகின்றானதலின், அவன் திருவுள்ளக்கருத்தினை அடி ஒற்றி இங்ஙனம் கூறுகின்றார் எனக்கொள்க. பாகவத ஜன்ம நிரூபணம் அடியார்களுக்குச் செய்த குற்றமாதலும், அர்ச்சாவதாரத்தில் உபாதானஸ்மிருதி இறைவன் திறத்துச் செய்த குற்றமாதலும் காண்க.

[2] திரிசங்கு - சூரிய குலத்துப் பிறந்த ஓர் அரசன். கர்ம சண்டாளன் - கர்மத்தாலே சண்டாளன்; கர்மம் - தன்னுடைய

**அவ :—**இந்தப் பாகவத அபசாரத்திற்குப் பலம் வெந்த மடிப்புடைவை போலே நாசமடைந்தவனாய் இருந்து சரீரத்தின் முடிவிலே உருமாய்ந்து போமளவே அன்று; இந்த அபசாரம் பண்ணின போதே கர்மத்தால் சண்டாளனாய்விடும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'திரிசங்குவைப்போலே கர்ம சண்டாளனாய்' என்றது, [1] இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த திரிசங்கு என்ற அரசன் தன் குலகுருவான வசிட்ட முனிவரை அடைந்து, 'இந்தச் சரீரத்தோடே சுவர்க்கத்தை நான் அடையும்பொருட்டு ஒரு யாகம் செய்வித்தல் வேண்டும்' என்று விரும்ப, மாமுனிவர் 'அது நாம் செய்தக்கதன்று' என்ன, அங்குநின்றும் புறப்பட்டு, முனிவருடைய புத்திரர்கள் தவம் செய்கிறவிடத்திற்குச் சென்று இச்செய்தியைச் சொல்லி, அவர்கள் விருப்பின்படி நடந்து, 'நீங்கள் என்னை இப்படி வேள்வி செய்விக்க வேண்டும்' என்று நிர்ப்பந்திக்க, 'நீ தீயவறிவினனாய் இருந்தாய்; முனிவர் 'போகாது என்றதனை எங்களால் செய்யப்போமோ?' என்ன, [2] 'அந்தத் திரிசங்கு என்னும் அரசன் வசிஷ்ட புத்திரர்களுடைய கோபத்தோடு கூடிய வார்த்தைகளைக் கேட்டு, குருபுத்திரர்களைப் பார்த்து மீண்டும் இந்த வார்த்தையைச் சொன்னான்', [3] 'தவத்தைச் செல்வமாகவுடையவர்களே, வசிஷ்ட பகவானால் தள்ளப்பட்டேன், குரு புத்திரர்களான உங்களாலும் அப்படியே தள்ளப்பட்டேன்; வேறு வழியை அடையக்கடவேன்; உங்களுக்கு மங்களம் உண்டாகுக,' என்கிறபடியே குருவான அவரும் அவருடைய புத்திரர்களான நீங்களும் 'மாட்டோம்' என்றீர்களாகில், நான் மற்றோரிடத்திலே போகிறேன், நீங்கள் சுகமே

---

செயல்கள். சண்டாளன் - தாழ்ந்த சாதியான். யஜ்ஞோபவீதம் - பூணுநூல். வாராய் - தோலாய்.

[1] இக்ஷ்வாகு - சூரிய குலத்தில் பிறந்த ஓர் அரசன்.

[2] 'தேஷாம் தத்வசநம் ஶ்ருத்வா க்ரோதபர்யாகுலாக்ஷரம்
ஸராஜா புநரேவைதாநிதம் வசநமப்ரவீத்.'
என்பது, ஸ்ரீராமா. பால. 58:6.

[3] 'ப்ரத்யாக்யாதோ பகவதா குருபுத்ரை: ததைவச
அந்யாம்கதிம் கமிஷ்யாமி ஸ்வஸ்திவோஸ்து தபோதநா:'
என்பது, ஸ்ரீராமா. பால. 58:

இருங்கோள்' என்ன, [1]"வசிஷ்ட புத்திரர்கள் கொடுமையான அந்த வார்த்தையைக் கேட்டு, சீற்றமுடையவர்களாய் 'நீ சண்டாளத் தன்மையை அடையக்கடவாய்' என்று சபித்தார்கள்" என்கிறபடியே தன் ஆசாரியனையும் அவ்வாசாரிய புத்திரர்களான தங்களையும் இவன் தாழ்வு பண்ணிச் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவர்கள் சீற்றத்தை யடைந்தவர்களாய் நீ சண்டாளனாகக் கடவை என்று சபிக்க, [2]"பிறகு அந்த இரவு கடந்தவுடன் அரசன் சண்டாளத் தன்மையை அடைந்தான்; கரிய ஆடையையுடையனும் கரிய சரீரத்தையுடையனும் விழுந்த மயிர்களையுடையனும் பிணத்திற்கு அணிந்த மாலைகளாலும் சந்தனத்தாலும் அலங்கரிக்கப்பட்ட சரீரத்தையுடையனும் இரும்பினால் ஆன ஆபரணங்களையுடையனும் ஆனான்" என்கிறபடியே பின்னர் அவன் கர்ம சண்டாளன் ஆய்விட்டானிறே என்றபடி.

"மார்வில் இட்ட யஜ்ஞோபவீதம் தானே வாராய்விடும்' என்றது, அப்படியே பாகவத அபசாரம் பண்ணின போதே கர்மத்தால் சண்டாளனாய்; பிரம்மதேஜசுக்கு (ஆசாரத்துக்கும் அத்யயனம் பண்ணுகைக்கும் என்றுமாம்) உறுப்பாக மார்வில் இட்ட பூணுநூல்தான் சண்டாள வேஷத்திற்கு அடைத்தவாராய் விடும் என்றபடி. [3]அங்குச் சாபத்தால் வந்ததாகையாலே கண்கூடாகக் காணலாம்படியாயிற்று. இங்குச் சாஸ்திரங்களால் சொல்லப்படுவதாகையாலே ஞானக்கண்ணுக்குப் புலனாகும்படியிருக்கும். [4]"ஆசாரத்தை விட்டவர்களாயும், கெட்ட ஆசா

---

[1] 'ருஷிபுத்ராஸ்து தத்ச்ருத்வாவாக்யம் கோராபிஸம்ஹிதம்
ஶேபு: பரம ஸங்க்ருத்தா: சண்டாலத்வம் கமிஷ்யஸி.'
என்பது, ஸ்ரீராமா. பால. 58:

[2] 'அதராத்ர்யாம் வ்யதீதாயாம் ராஜா சண்டாலதாம் கத:
நீலவஸ்த்ரதரோ நீல: புருஷோ த்வஸ்த மூர்த்தஜ:
சித்யமால்யாங்கராகஶ்சாயஸாபரணோ பவத்.'
என்பது ஸ்ரீராமயணம்.

[3] 'நன்று. பாகவத அபசாரம் பண்ணுகின்றவர்கள் திரிசங்குவைப் போல நாம் காணும்படி அப்படி ஆகவில்லையே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அங்கு' என்று தொடங்கி.

[4] அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஆசாரத்தை' என்று தொடங்கி.

ரத்தையுடையவர்களாயும், ஞானமில்லாதவர்களாயும், தாழ்ந்த சாதியில் பிறந்தவர்களாயுமிருக்கிற என்னுடைய பக்தர்களை நிந்திக்கிற பிராமணன் உடனே சண்டாளத் தன்மையை அடைவான்,'' என்னக்கடவதிறே. (122)

## 203

[1] ஜாதி சண்டாளனுக்குக் காலாந்தரத்திலே பாகவதன் ஆகைக்கு யோக்யதை உண்டு; அதுவும் இல்லை இவனுக்கு; ஆரூட பதிதன் ஆகையாலே.

என்பது சூத்திரம்.

அவ :—சண்டாளனைப் போலவாகிலும் இவனும் ஒரு காலத்திலே ஈடேறுவான் என்று நினைக்கைக்கு இடம் இல்லாதபடி, சாதி சண்டாளனைக்காட்டிலும் கர்ம சண்டாளனுக்குள்ள தண்மையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சாதி சண்டாளனுக்குக் காலாந்தரத்திலே பாகவதன் ஆகைக்கு யோக்யதை உண்டு' என்றது, சாதியினாலே சண்டாளனானவனுக்கு அந்தப் பிறவியிலே பகவானுடைய கடாக்ஷம் உள்ளதொரு கால விசேடத்திலே நாமரூபங்களையுடையனாய்ப் பகவானுடைய சம்பந்தத்தாலே அறியப்படுமவனாகைக்குத் தகுதியுண்டு என்றபடி. 'இவனுக்கு அதுவும் இல்லை' என்றது, பாகவதர்திறத்தில் செய்த அபசார ரூபமான கர்மத்தாலே சண்டாளனான இம்மகா பாபிக்கு அந்தத் தகுதியும் இல்லை என்றபடி.

அதற்குக் காரணம், ஆரூட பதிதன் ஆகையாலே—பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தலாகிற உயர்ந்த நிலத்திலே ஏறி,

---

'அநாசாராந் துராசாராந் அஜ்ஞாத்ரூந் ஹீநஜந்மந:
மத்பக்தாந் ஶ்ரோத்ரியோ நிந்தந் ஸத்யஶ் சண்டாளதாம் வ்ரஜேத்.'
என்பது, பிரமாண்ட புராணம்.

[1] ஜாதி சண்டாளன் - சாதியினாலே தாழ்ந்தவன். காலாந்தரம் - வேறு காலம். இவனுக்கு - கர்ம சண்டாளனுக்கு. ஆரூட பதிதன் - மேலே ஏறிக் கீழே விழுந்தவன். இந்தச் சூத்திரம் தனியாக அச்சிடப் பட்டது வேறு பிரதிகளில்.

[1] 'என்னுடைய பக்தர்களை நிந்தை புரிகின்றவர்களை நூறு கோடி பத்மங்களாலும் நான் பொறுக்கமாட்டேன்,' என்னும்படி மிகக் கொடுமை பொருந்திய பகவானுடைய தண்டனைக்குக் காரணமான பாகவத அபசாரத்தாலே பாற அடி உண்டு கீழே விழுந்தவன் ஆகையாலே என்றவாறு. (123)

## 204

[2] இதுதனக்கு அதிகாரி நியமம் இல்லை.

என்பது சூத்திரம்.

**அவ:**—'இந்தப் பாகவத அபசாரந்தான் பிறவி முதலியவற்றாலும் ஞானம் முதலியவற்றாலும் கீழானவர்கள், அவற்றால் உயர்ந்தவர்கள் திறத்தில் பண்ணுமளவிலேயோ? பிறவி முதலியவற்றால் உயர்ந்தவர்கள், அவற்றால் தாழ்ந்தவர்கள் திறத்தில் பண்ணுமளவிலும் ஒக்குமோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'இதுதனக்கு அதிகாரி நியமம் இல்லை' என்றது, பாகவத அபசாரத்திற்கு [3] அப்படியிருப்பதொரு நியதி இல்லை என்றபடி. (124)

## 205

[4] 'தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும்' என்கையாலே.

என்பது சூத்திரம்.

[1] 'பத்மகோடி ஶதேநாபி நக்ஷமாமி கதாசன' என்பது வராக புராணம். பத்மம் - தாமரைப்பூ.

[2] இதுதனக்கு - இந்தப் பாகவத அபசாரத்திற்கு. நியதி - வரம்பு.

[3] 'அப்படி' என்றது, வசிஷ்டபுத்திரர்களிடத்தில் திரிசங்கு செய்த அபசாரத்தைக் குறிக்கிறது. மேலான குலத்தையும் கீழான குலத்தையும் குறித்தபடி.

[4] 'அமரவோ ரங்க மாறும் வேதமோர் நான்கு மோதித்
தமர்களில் தலைவ ராய சாதியந் தணர்க ளேலும்
நுமர்களைப் பழிப்ப ராகில் நொடிப்பதோ ரளவி லாங்கே
அவர்கள்தாம் புலையர் போலும் அரங்கமா நகரு ளானே.'

என்பது திருமாலை, 43.

அவ :—' நியதி இல்லை என்பதற்குப் பிரமாணமுண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' தமர்களில் தலைவராய சாதி அந்தணர்களேலும் என்கையாலே' என்றது, ' அங்கங்களோடு கூட எல்லா வேதங்களையும் அத்யயனம் செய்து, அடியார்களுள் உயர்ந்தவர்களுமாய் உயர்ந்த பிறவிகளிலே பிறந்தவர்களுமாய் இருந்தார்களேயாகிலும், தேவரீர் திருவடிகளில் சம்பந்தத்தைக் கொண்டே அறியப்படுமவரான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பிறவி முதலியவற்றை இட்டு நிந்திப்பார்களாகில், வேறொரு காலத்தில் வேறொரு தேசத்தில் அன்றிக்கே, அப்போதே அவ்விடத்தே [1] அவர்கள் தாம், சண்டாளரும், இங்ஙனம் நிந்தித்தவர்வளுக்கு ஒருபோலி மாத்திரம் என்னும்படி அவர்களைக்காட்டிலும் மிக மிகத் தாழ்ந்த நீசர் என்று, உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்தவர்களுள் தலைவரான ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிச் செய்தார் ஆகையாலே என்றபடி. (125)

## 206

**இவ்விடத்திலே [2] வைநதேய விருத்தாந்தத்தையும், பிள்ளைப் பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது.**

என்பது சூத்திரம்.

அவ :—தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும் பாகவத அபசாரம் உண்டானால் தகர விழுவர் என்று கூறி, மேலும் இது பற்றிய இரண்டு [3] ஐதிஹ்யங்களை எடுத்துக்காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] ' அவர்கள் தாம் ' என்பதனைப் பின்னே வருகின்ற ' நீசர் ' என்ற சொல்லோடும், ' சண்டாளரும் ' என்பதனை, அதன்பின் வருகின்ற ' ஒரு போலி மாத்திரம் என்னும்படி ' என்ற தொடர் மொழியோடும் கூட்டிப் பொருள் முடிவு காண்க.

[2] வைநதேயன் - விநதையின் புத்திரன்; கருடன். விருத்தாந்தம் - வரலாறு. பிள்ளைப் பிள்ளையாழ்வான் - கூரத்தாழ்வானுடைய மாணுக்கர். ஆழ்வான் - கூரத்தாழ்வான்; இவர் இராமாநுசருடைய மாணுக்கர். ஸ்மரிப்பது - நினைப்பது.

[3] ஐதிஹ்யம் - முன் நடந்தது.

**வியாக் :**—வைநதேய விருத்தாந்தமாவது, விச்வாமித்திரன் பக்கலிலே எல்லாக் கல்விகளையும் கற்ற காலவன் என்ற பிராமணன், 'குருதக்ஷிணை கொடுத்தால் ஒழிய நமக்கு இக்கல்வி நிலை நில்லாது' என்று பார்த்து, 'நான் இங்குத்தைக்குத் தக்ஷிணையாகத்தரத்தக்கது யாது?' என்று கேட்க, 'நீ நமக்கு ஒன்றும் செய்ய வேண்டா ; நாம் உன்னுடைய தொண்டினுலும் பக்தியினுலும் மிகவும் உவந்தோம். இனி உன்னுடைய விருப்பின்படி சென்று இரு,' என்று பலகாலும் சொன்னவளவிலும் இவன் அது செய்யாதே, 'எப்படியாவது என்னிடத்தில் தக்ஷிணை வாங்கிக்கொள்ள வேண்டும் என்று மிகவும் நிர்ப்பந்திக்கையாலே, [1] "சிறிது கோபம் அடைந்தவரான அந்த விசுவாமித்திரர் இப்படிச்சொன்னுர் : ஒரு காது பச்சை நிறத்தோடு கூடியனவும் சந்திரன் போன்ற வெண்மை நிறம் உள்ளனவுமான எண்ணூறு குதிரைகள் எனக்குக்கொடு, ஓ காலவனே, செல் ; தாமதம் வேண்டா,' என்கிறபடியே அவன் சீற்றமுடையவனுய் இவனைப் பார்த்து, 'உடம்பெங்கும் சந்திரமண்டலம் போலே வெளுத்து, ஒரு செவி பச்சையாக இருக்கும் எண்ணூறு குதிரைகளை நமக்குக்கொண்டு வந்து தருக' என்ன, இதனைக் கேட்டு மிக்க வியாகுலம் அடைந்தவனுய், 'இதற்கு இனிச்செய்வது என்?' என்று பல வழிகளிலும் ஆராய்ந்து, 'விரும்பினவற்றையெல்லாம் கொடுக்கின்ற சர்வேசுவரனை உபாசிப்போம்' என்று முயற்சி செய்கிறவளவிலே, முன்பே இவனுக்குத் துணையாகவிருக்கிற பெரிய திருவடி நாயனுர் இவன் முன்னே வந்து நிற்க, அவரைத்துதித்து, 'இதற்குச் செய்ய அடுப்பது என்?' என்று கேட்க, அவர், 'உன்னை நான் இப்பூமி எங்கும் கொண்டு போகிறேன். இருவரும் கூட ஆராய்வோம், வா' என்று இவனை இடுக்கிக்கொண்டு திரிகிற அளவிலே சிறிது தளர்ச்சி உண்டானவாறே, இங்கே இளைப்பாறிப்போகக் கடவோம் [2] என்று, மேலைச் சமுத்திரத்தில் இடபம் என்ற மலையில் வசிப்பவளாய் ஞானத்தாலே மேம்பட்டவளாயிருக்கிற சாண்டிலீ என்கிற ஒரு பாகவதையைச் சென்று கண்டு வணக்கம் முதலியவற்றைச்

---

[1] 'கிஞ்சிதாகத ஸம்ரம்போ விஶ்வாமித்ரோப்ரவீதிதம் ஏகதஃ ஶ்யாமகர்ணாநாம் ஶதாந்யஷ்டௌது தேஹிமே, ஹயாநாம் சந்த்ர ஶுப்ராணாம் கச்ச காலவ மாசிரம்' என்பது பிரமாணம்.

[2] 'என்று' என்பதனை மேலே வருகிற 'சென்று கண்டு' என்பதனோடு கூட்டுக. என்று - என்று நினைத்து.

செய்ய, அவள் மிக்க விருப்பத்தோடே உணவு முதலியவற்றைக் கொடுத்து உபசரிக்க, பின்னர் இளைப்பாறிப் படுக்கிறவளவில், 'இப்படி ஞானத்தால் மிக்குப் பக்தியுடையவளாயிருக்கிற இவள் ஒரு திவ்விய தேசத்தில் வசிக்கப்பெற்றதில்லை' என்று பெரிய திருவடி நாயனார் தனக்குள்ளே விசாரித்து, 'நாம் இவளை இங்குநின்றும் கொண்டுபோய் ஒரு திவ்விய தேசத்திலே வைக்கக் கடவோம்' என்று நினைத்துக்கொண்டு கிடக்கச் செய்தே, அந்தப் பாகவதை இருந்த தேசத்தைக் குறைய நினைத்த இவ்வபசாரத்தால் சிறகுகளும் உதிர்ந்து செயல் அற்ற வராய்விட, இதனை உடன் சென்ற அந்தணன் கண்டு, [1] 'பறவைகளுக்கு அரசரான திருவடியே, உம்முடைய மனத்தில் என்ன குற்றம் நினைக்கப்பட்டது? உமக்கு இந்த அபசாரம் சிறிதும் வருவதற்கு வழியில்லையே' என்றபடியே 'உம்முடைய திருவுள்ளத்தில் ஏதேனும் தீங்கு நினைத்ததுண்டோ? தேவரீ ருக்குச் சிறிய அபசாரம் வருகைக்கும் வழிஇல்லையே?' என்ன, 'உண்டாயிற்றுக்காண்' என்று, தாம் அந்தப் பாகவதை விஷயத்தில் நினைத்த வகையை அவனுக்கு அருளிச்செய்து, பின்னர் 'இதனைப் பொறுக்கவேண்டும்' என்று அவளிடம் சென்று வேண்டிக்கொள்ள, அவளுடைய அருளால் அந்த அபசாரம் நீங்கி முன்பு போல ஆனார் என்பது.

இதுதான், ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீ தூது எழுந்தருளின போது நாரதர் முதலான முனிவர்கள் பலரும் வந்திருக்கிறவளவிலே கிருஷ்ணன் திருவுள்ளத்தைப் பின் செல்லுகைக்கு உறுப்பாகத் திருதராஷ்டிரனைக் குறித்துப் பல கதைகளும் சொல்லிவருகிற இடத்திலே, ஸ்ரீ நாரதபகவான் சொன்னதாகப் பாரதத்தில் உத்யோகபர்வத்தில் சொல்லப்பட்டதாகையாலே வேதாந்தத்தின் பொருளை விளக்குவதற்கு வந்த இதிகாச சித்தமிறே.

'பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தை'யாவது, பிள்ளைப்பிள்ளையாழ்வானைச் சிஷ்யராக அங்கீகரித்த நாளிலே குடிப்பிறப்பு முதலியவற்றால் இவர் உயர்ந் தவராகையாலே பாகவதர்கள் திறத்தில் பணிவு இல்லாதவராய் நடந்து செல்வதனைக் கண்டு, இவருக்கு இந்தப் பாகவத அப

---

1 'கிந்நுதே மநஸாத்யாதமசுபம் பததாம்வர நஹ்யயம் பவதஃ ஸ்வல்போ வ்யபிசாரோ பவிஷ்யதி'. என்பது பிரமாணம்.

சாரம் இவருடைய ஞான அநுஷ்டானங்களையெல்லாம் கீழ்ப் படுத்தித் தானே மேலாய்க் கேட்டினையும் விளைத்துவிடும்; அதற்கு வேலியிட்டு வைக்கவேண்டும் என்று திருவுள்ளம் பற்றி, [1] ஓர் அயனத்தினன்று நீராடி ஏறினவளவிலே, இவரைப் பார்த்து, 'எல்லாரும் தானம் பண்ணுகிற காலத்திலே நீரும் நமக்கு ஒரு தானம் பண்ண மாட்டீரோ?' என்ன, 'அடியேன் ஏதனைத் தானம் பண்ணுவது? எல்லாம் அங்குத்தையவாய் இருக்கின்றனவே?' என்ன, பொருளின் நிலையன்றோ அது; அவ்வளவும் போராது; முக்கரணங்களாலும் பாகவத அபசாரம் பண்ணாமல் வாழக் கடவேன் என்று நம் கையிலே தண்ணீர் வார்த்துத் தரவேண்டும் என்ன, அப்படியே இவரும் தண்ணீர் வார்த்துக் கொடுத்த பின்னர், ஒரு பாகவதருடைய குற்றத்தை முன்னைய பயிற்சியாலே நினைத்து, 'நாம் இனி முடிந்தோம்!' என்று அஞ்சி, மூடிக்கொண்டு தம் திருமாளிகையிலே கண்வளர, இவர், முன்பு வரும் காலத்தில் வரக்காணாமையாலே, ஆழ்வான் இவர் திருமாளிகைக்கு எழுந்தருளி 'ஏன்தான்? முசிப்பு என்,' என்று வினவியருள, தாம் மனத்தினால் நினைத்ததை விண்ணப்பஞ்செய்து, 'முக்கரணங்களாலும் அபசாரம் புகுராத படி இச்சரீரத்தோடு வாழ்தல் அரிதாயிராநின்றது; என் செய்யக் கடவேன்!' என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து வருந்த, இத்தனை அனுதாபம் இவர்க்கு உண்டாகப் பெற்றோமே என்று உகந்தருளி, மனத்தால் நினைத்ததற்கு அநுதாபம் உண்டாகவே ஈச்வரன் பொறுத்தருள்வான், கண் கூடாத தண்டனை கிடைக்கும் என்ற அச்சத்தாலே சரீரத்தால் ஒருவரையும் நலிதல் நடவாது; ஆனபின்பு, அவை இரண்டனையும் உமக்குக் கழித்துத் தந்தோம்; இனி நாக்கு ஒன்றையும் நன்றாகக் குறிக் கொண்டு காத்து வாழ்ந்து போரும் என்று அருளிச் செய்தது.

(126)

---

[1] ஓர் அயநம் - தக்ஷிணாயநம் அல்லது உத்தராயணம். இது புண்ணிய காலம். தக்ஷிணாயநம் - சூரியன் தெற்கே செல்லுதல். உத்தராயணம் - சூரியன் வடக்கே செல்லுதல். அயநம் - செலவு.

## 207

ஞான அநுஷ்டானங்களை ஒழிந்தாலும் பேற்றுக்கு [1]அவர்கள் பக்கல் சம்பந்தமே அமை கிறவா போலே, அவை உண்டானாலும் இழ வுக்கு அவர்கள் பக்கல் அபசாரமே போரும்.

என்பது சூத்திரம்.

அவ :—பகவானை அடைதற்குக் காரணமான ஞானம் அனுஷ்டானம் என்னும் இரண்டும் நிறைந்திருப்பான் ஒருவனுக்குப் பாகவத அபசாரம் உண்டாயிற்றாகிலும், பகவான் அவ்வபசாரத்திற்குச் சிறியது ஒரு தண்டனையைச் செய்து கூட்டிக் கொண்டு விடானோ ? அந்த ஞானம் அநுஷ்டானம் என்னும் இரண்டும் இல்லாமைக்கு ஒப்பாய், பாகவத அபசாரமே முதன்மை பெற்றதாய், எம்பெருமானை இழந்தே போய்விடுவான் என்னலாமோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'ஞாந அநுஷ்டானங்களை ஒழிந்தாலும்' என்றது, [2]"பறவைகளின் இரண்டு சிறகுகளாலேயே ஆகாயத்தில் எப்படிச் சஞ்சாரம் ஏற்படுகின்றதோ அப்படியே ஞாநம் அநுஷ்டானம் என்னும் இரண்டாலும் பகவானாகிய திருமால் அடையப் படுகிறான்" என்றும் [3]"வீசும் சிறகால் பறத்திர் விண்ணாடு நுங்கட்கு எளிது" என்றும் சொல்லுகிறபடியே பகவானை அடைதற்குக் காரணமான உண்மை ஞானமும் அதற்குத் தகுதியான ஒழுக்கமும் இன்றிக்கே ஒழிந்தாலும் என்றபடி. 'பேற்றுக்கு அவர்கள் பக்கல் சம்பந்தமே அமைகிறவா போலே' என்றது, [4]"நாற்கால் விலங்காயினும் மனிதனாயினும் பறவையாயினும்

---

[1] அவர்கள் - அடியார்கள் ; பாகவதர்கள். அவை - ஞானமும் அநுஷ்டானமும். இழவு - பகவானைப் பெறுதலை இழத்தல். போரும் - போதும்.

[2] உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆகாஶே பக்ஷிணாம்கதி:
தஹைவஜ்ஞான கர்மப்யாம் ப்ராப்யதே பகவான்ஹரி:
என்பது, பிரமாணம்.

[3] திருவிருத்தம், 54.

[4] பஶுர்மநுஷ்ய: பக்ஷீவா யேசவைஷ்ணவ ஸம்ஶ்ரயா:
தேநைவதே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம்பதம்.
என்பது பாரத்வாஜஸ்மிருதி.

இவை ஒரு வைஷ்ணவனைச் சார்ந்தனவாயின் அந்த வைஷ்ணவ சம்பந்தத்தாலே அந்த விஷ்ணுவினுடைய பரமபதத்தை அடைகின்றன'' என்றும்,[1] ''பாகவதன் தனது கரங்களால் எதை எதைத் தொடுகின்றானோ, எதை எதைக் கண்களால் பார்க்கின்றானோ, அவைகள் நிலையியற்பொருள்கள் ஆயினும் மோக்ஷத்தை அடைகின்றன; உறவினர்கள் மோக்ஷத்தை அடைகின்றனர் என்பது சொல்லவேண்டுவது என்?'' என்றும் சொல்லுகிறபடியே இறைவனை அடைதலாகிற பேற்றிற்குப் பாகவதர்களுடைய சம்பந்தமே வேறு ஒன்றனையும் விரும்பாத சாதனம் ஆகின்றவாறு போலே என்றபடி.

'அவை உண்டானாலும் இழவுக்கு அவர்கள் பக்கல் அபசாரமே போரும்' என்றது, அந்த ஞானம் அநுஷ்டானம் என்னும் இரண்டும் குறைவற உண்டாயினவாகிலும் பகவத் விஷயத்தை இழந்து போகைக்கு, பகவானுடைய விருப்பத்திற்கு உரியவரான அந்தப் பாகவதர்கள் திறத்தில் செய்யும் அபசாரமே வேறு ஒன்றனையும் விரும்பாத சாதனம் ஆதற்குப் போதியதாம் என்றபடி. (127)

## 208

[2] இதில் ஜன்ம விருத்தாதி நியமம் இல்லை.

என்பது சூத்திரம்.

**அவ** :—'இதில் பிறப்பு ஒழுக்கம் முதலிய வரம்பு உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'இதில்' என்றது, 'பேற்றிற்குப் பாகவத சம்பந்தமே அமையும்; இழவிற்கு அவர்கள் பக்கல் அபசாரமே போதியதாம்' என்று சொன்ன இவை இரண்டிலும் என்றபடி. 'ஜன்மம் விருத்தம் ஆதி நியமம் இல்லை' என்றது, பிறப்பு ஒழுக்கம் முதலியவற்றால் உயர்வுடையவர்களுடைய சம்பந்தம் பேற்றிற்குக்

[1] யம்யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம்யம் பஶ்யதி சக்ஷுஷா
ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம்புநர் பாந்தவாஜநா:

என்பது பராசரஸ்மிருதி.

[2] இதில் - பேற்றிற்குப் பாகவதர்களுடைய சம்பந்தமே அமையும், இழவிற்கு அவர்கள் பக்கல் அபசாரமே அமையும் என்கிற இவ்விரண்டிலும். விருத்தம் - ஒழுக்கம். நியமம் - வரம்பு.

காரணம் ஆகும். அவற்ருல் தாழ்வுடையவர்களுடைய சம்பந்தம் பேற்றிற்குக் காரணமாகாது என்ற வரம்பும், பிறப்பு ஒழுக்கம் முதலியவற்ருல் உயர்வுடையவர்கள் திறத்தில் பண்ணும் அபசாரமே இழவிற்குக் காரணமாகும், அவற்ருல் தாழ்வுடையவர்கள் திறத்தில் பண்ணும் அபசாரம் அப்படி இழவிற்குக் காரணமாகாது என்கிற வரம்பு இல்லை என்றபடி. (128)

## 209

[1] இவ்வர்த்தம் கைசிக விருத்தாந்தத்திலும் உபரிசரவசு விருத்தாந்தத்திலும் காணலாம்.

என்பது சூத்திரம்.

அவ :—'மேலே கூறியதைக் காணலாம் இடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இவ்வர்த்தம் கைசிக விருத்தாந்தத்திலும் காணலாம்' என்றது, சரககோத்திரத்தில் தோன்றிய சோமசர்மா என்கிற [2] அந்தணன், யாகத்தைச் செய்வதாகத் தொடங்கி, செய்யவேண்டிய முறைப்படி செய்யாமல் அவ்யாகம் முடிவதற்கு முன்னே இறந்தும் போனுகையாலே பிரமராக்ஷசனுய்ப் பிறந்து திரியாநிற்க, [3] "என்னிடத்தில் பக்தியுள்ளவன் நாய் இறைச்சி தின்னும் தாழ்ந்தவனுயினும்" என்கிறபடியே பிறவியோடு கூடியதான நீசத்தன்மையையுடையராய்ப் பகவா

---

[1] 'இவ்வர்த்தம்' என்றது, ஞான அநுஷ்டானங்கள் ஒருவனுக்கு இல்லையாயினும் பாகவதர்களுடைய சம்பந்தம் உண்டாயின், அது அவனுக்கு மோக்ஷத்திற்குக் காரணமாகும் என்பதும், ஞான அநுஷ்டானங்களையுடையராயினும், பாகவதர்கள் திறத்தில் அபசாரம் பண்ணுவாராயின், அவ்வபசாரம் அவர்களை இழிந்த நிலைக்குக் கொண்டுபோய்விடும் என்பதும் என்றபடி. இவ்விரண்டனுள் முன்னையதற்குக் கைசிக விருத்தாந்தம் உதாரணம். பின்னையதற்கு உபரிசரவசு விருத்தாந்தம் உதாரணமாம். 'உபரிசரவசு' என்பதில் 'வசு' என்பதே அவன் இயற்பெயர். 'உபரிசர' என்பது ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற காரணம் பற்றி வந்த அடைமொழி.

[2] 'அந்தணன்' 'திரியாநிற்க' என்று கூட்டுக.

[3] "மத்பக்தம் ஶவபசம் வாபி"
என்பது பிரமாணம்.

னுடைய பக்தியே கொண்டு அறியத்தக்கவராய் இருப்பார் [1] ஒரு பாகவதர் [2] உத்தான ஏகாதசியன்று இரவு [3] வாமன அவதார ஸ்தலமான திருக்குறுங்குடியிலே நம்பியைப் பாடிப் [4] பறை கொள்வதாக வீணையைக் கையிலே தரித்துக்கொண்டு போகா நிற்கச் செய்தே, அந்தப் பிரமராக்ஷசன் அவரைப் புசிப்பதற்காக வந்து அடர்க்க, அவர் மீண்டு வருகைக்கு உறுப்பாகப் பல சபதங்களைப் பண்ணிக் கொடுத்து, அவனுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு சென்று, தம் விருப்பின்படி இறைவனைச் சேவித்து மகிழ்ந்தவராய், அந்தப் பிரமராக்ஷசன் நின்றவிடத்திற்கு மீள விரைந்து வந்து, 'உன் விருப்பின்படி இனி என் சரீரத்தைத் தின்பாய்' என்ன, அவன் இவருடைய உண்மை பேசுதல் முதலிய பெருமையைக்கண்டு, 'நீ இன்று பாடின பாட்டின் பலத்தைக்கொடு, நான் உன்னை உயிரோடே போகும்படி விடுதற்கு' என்ன, அவர் அதற்கு உடன்படாதொழிய, [5] நடு இரவில் பலம் ஒரு யாமத்தில் பலம் என்பன போன்று கேட்டுக் கொண்டவளவிலும் இவர் 'நான் அது கொடுப்பதில்லை; முன்பு நீ சொன்னபடியே என்னைத் தின்பாயத்தனை' என்று ஒரு நிலையே நின்றபடியாலே [6] 'மகாநுபாவரான தேவரீரே உம்முடைய இசையின் பெருமையாலே என்னை இராக்ஷசப் பிறவியினின்றும் மேல் எடுப்பதற்குத் தக்கவர்' என்று சொல்லி, சண்டாளரான

---

[1] ஒரு பாகவதர் - நம்பாடுவான். 'பாகவதர் - தரித்துக்கொண்டு போகாநிற்கச்செய்தே' என்று கூட்டுக.

[2] உத்தான ஏகாதசி - கார்த்திகை மாசத்தில் சுக்லபக்ஷத்தில் வருகின்ற ஏகாதசி. இந்த ஏகாதசியன்று இறைவன் உறக்கத்தினின்றும் எழுகின்றானாதலின், இதற்கு உத்தான ஏகாதசி என்ற பெயர் அமைந்தது. உத்தானம் - எழுதல். ஆடி மாதம் சுக்கிலபக்ஷத்து ஏகாதசியில் சயனிக்கும் இறைவன், கார்த்திகைமாதத்து சுக்கிலபக்ஷத்து ஏகாதசி அன்று உறக்கத்தினின்றும் எழுகிறான் என்பது சாஸ்திரமுடிவு. ஆடிமாத முதல் மார்கழி மாதமுடியத் தேவர்களுக்கு இரவு ஆதலையும் இங்கு நினைவுகூர்க.

[3] ஆசாரிய ஹிருதயம் 162-ஆம் சூத்திரத்தையும் அதன் வியாக்கியானத்தையும் ஈண்டுக் காணல் தகும்.

[4] பறைகோடல் - சொரூப சித்தியைப் பெறுதல்.

[5] நடு இரவில் பாடிய பாட்டின் பலத்தையாவது ஒரு யாமத்தில் பாடிய பாட்டின் பலத்தையாவது கொடுக்கவேண்டும் என்பது பொருள்.

[6] 'த்வம் வை கீத ப்ரபாவேந நிஸ்தாரயிது மர்ஹஸி ஏவமுக்த்வாத சண்டாளம் ராக்ஷஸஶ்ஶரணம் கதঃ' என்பது கைசிக மாகாத்மியம்.

நம்பாடுவாரைப் பிரமராக்ஷசன் சரணம் புகுந்தான்'' என்கிற படியே, நீ உன்னுடைய இசையின் பெருமையாலே என்னை இப் பாவத்தினின்றும் கரை ஏற்ற வேண்டும் என்று சரணம் புகுர, அந்தப் பாகவதர் [1]''கைசிகம் என்ற பண்ணைது வைகறைப் போதிலே என்னால் பாடப்பட்டது'' என்கிறபடியே தாம் பின்பு பாடின கைசிகமாகிற பண்ணின் பலத்தைக் கொடுத்துக் கர்மங் களின் குற்றத்தால் வந்த இராக்ஷச வேடத்தைக் கழித்து முன்பு போலே பிராமணனாய் அதற்கு மேலே பாகவதனுமாய் உய்வு பெறும்படி செய்தார் என்கிற கைசிக விருத்தாந்தத்திலே, பிறப்பு முதலியவற்றால் உயர்வுடையரான பாகவதருடைய சம்பந்தமே உய்வு பெறுதற்குக் காரணமாகும், அவற்றால் தாழ்வுடையவர் களான பாகவதர்களுடைய சம்பந்தம் உய்வதற்குக் காரணம் ஆகாது என்னும் நியமம் இல்லை என்பது காணலாம் என்றபடி.

'உபரிசரவசு விருத்தாந்தத்திலும் காணலாம்' என்றது, இருடிகளும் தேவர்களும் தன்பக்கல் தரும சந்தேகம் கேட்கும் படி கல்வியினாலே மேம்பட்டவனுமாய்த் தன்னுடைய சாதிக்குத் தக்கதான செயலை மாத்திரமுடையனாயிருத்தல் அன்றிக்கே [2]சாத்வததந்திரத்திலே அறிவு நிரம்பப் பெற்றவனாய்ப் பகவா னுடைய ஆராதனத்திலே குறிக்கோள் உடையனாய்க் கொண்டு போருகையாலே வந்த ஒழுக்கத்தாலே மேம்பட்டவனுமாய்த் தன்னுடைய தவத்தின் வலிமையாலே வாகன பரிவாரங்களோடு ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றவனாய்த் திரியும் உபரிசரவசு என்கிற ஓர் அரசனானவன், யாகத்தில் உபயோகப்படுத்தப் படுகிற பசு நிமித்தமாக இருடிகளும் தேவர்களும் தங்களுள் விவாதம் பண்ணுகிறவளவிலே, [3]''நிறைந்த சேனைகளோடும் வாகனங்களோடும் கூடினவனாய் ஆகாயத்திலே சஞ்சரிப்பவனாய்

---

[1] 'யந்மயா பஶ்சிமம் கீதம் ஸ்வரம் கைசிகமுத்தமம்' என்பது கைசிக மாகாத்மியம்.

[2] சாத்வத தந்திரம் - பாஞ்சராத்திர ஆகமத்திலே ஒரு பிரிவு. அப் பிரிவில் வல்லவன் என்பது.

[3] மார்கா கதோ ந்ருபஶ்ரேஷ்ட: தம்தேஶம் ப்ராப்தவாந் வசு:
அந்தரிக்ஷசர: ஸ்ரீமாந் ஸமக்ர பலவாஹந:
தம் த்ருஷ்ட்வா ஸஹஸாயாந்தம் வஸும்தேத் வந்தரிக்ஷகம்,
ஊசுர் த்விஜாதயோ தேவா ஏஷ: சேத்ஸ்யதி ஸம்ஶயம்.
என்பன பிரமாணம்.

எல்லா விதமான செல்வத்தையுமுடையவனும் அரசர்களுக்கெல்லாம் [1] தலைவனுன, அவ்வழியே செல்கின்ற உபரிசரவசு என்ற அரசனானவன், விவாதம் நடக்கும் அந்த இடத்திற்கு வந்தான்; ஆகாயத்திலிருப்பவனும் வேகமாகச் செல்லுகின்றவனுமான அந்த வசுவைப் பார்த்து இருடிகளும் தேவர்களும் இவன் இந்தச் சந்தேகத்தைப் போக்க வல்லவன் என்று சொன்னர்கள்'' என்கிறபடியே, ஆகாயத்தில் போகாநின்ற இவனைக் கண்டு இவன் நம்முடைய ஐயத்தை அறுக்கவல்லவன் என்று அறுதியிட்டு, இவனைச் சென்று கிட்டிச் 'செய்ய அடுப்பது என்?' என்று கேட்க, அவன் 'உந்தம்முடைய கொள்கைகளைச் சொல்லுங்கோள்' என்ன, [2] 'ஓ அரசனே, தானியங்களைக் கொண்டு (மாவினுல்) யாகத்தைச் செய்ய வேண்டும் என்பது எங்கள் கொள்கை; பசுவைக் கொண்டு யாகம் செய்யவேண்டும் என்பது தேவர்கள் கொள்கை. எங்களுக்கு நியாயம் சொல்' என்கிறபடியே தானியங்களாலே யாகம் செய்யப்படும் என்பது எங்கள் கொள்கை; பசுவைக்கொண்டு யாகம் செய்யவேண்டும் என்பது தேவர்கள் கொள்கை; நாங்கள் செய்யுமது என்?' என்று இருடிகள் கேட்க, [3] ''தேவர்களுடைய கொள்கையைக் கேட்டு அவர்கள் கொள்கையைத் தழுவி, ஆட்டினைக் கொண்டு யாகம் செய்யப்பட வேண்டும் என்று அப்பொழுது இவ்விதமாக உபரிசரவசுவினுல் வார்த்தை சொல்லப்பட்டது'' என்கிறபடியே அவன் தேவர்கள் அளவில் பக்ஷபாதத்தாலே சாகத்தாலே வேள்வி செய்ய வேண்டும் என்ன, [4] ''அப்பொழுது இருடிகள்

---

[1] 'தலைவனுன' என்பதனை 'அரசனுனவன்' என்பதனோடு சேர்க்க.

[2] தாந்யை: யஷ்டவ்ய மித்யேஷ பக்ஷோஸ்மாகம் நராதிப
தேவதாநாம்ஹி பஶுபி: பக்ஷோராஜந் வதஸ்வ ந:

என்பது பிரமாணம்.

[3] தேவாநாந்து மதம் ஶ்ருத்வா வஸுநா பக்ஷஸம்ஶ்ரயாத்
சாகேநாஜேந யஷ்டவ்ய மேவமுக்தம் வசஸ்ததா.

என்பது பிரமாணம். சாகம் - வெள்ளாடு.

[4] '' குபிதாஸ்தேததா ஸர்வேமுநய: ஸூர்யவர்ச்சஸ:
ஊசுர்வஸும் விமாநஸ்தம் தேவபக்ஷார்த்த வாதிநம்.''
'' ஸுரபக்ஷோ க்ருஹீதஸ்தே யஸ்மாத் தஸ்மாத் திவ: பத
அத்யப்ரப்ருதி தேராஜந் ஆகாஶேவிஹதா கதி:''

எல்லாரும் சீற்றமடைந்தவர்களாய்ச் சூரியனைப் போன்ற காந்தியையுடையவர்களாய், விமானத்திலிருப்பவனும் தேவர்கள் பக்கல் பேசினவனுமான வசுவைப் பார்த்துச் சொன்னார்கள்; எந்தக் காரணத்தால் தேவர்களுடைய கொள்கை உன்னால் அங்கீகரிக்கப் பட்டதோ, அந்தக் காரணத்தால் ஆகாயத்தினின்றும் விழக் கடவாய்; அரசனே, ஆகாயத்தில் சஞ்சரிப்பது இன்றுமுதல் இயலாமற்போகக்கடவது; வேதசூத்திரங்களுக்கு மாறுபட்ட பொருள் சொல்லப்பட்டதேயானால், எங்கள் சாபத்தால் அடியுண்டு பூமியைப் பிளந்துகொண்டு விழக்கடவாய்; நாங்கள் மாறுபட்ட வார்த்தைகளையுடையவர்களானால் நாங்களும் அப்படியே அங்கு விழக்கடவோம்'' என்கிறபடியே இருடிகள் எல்லாரும் சீற்றமுடையவர்களாய், தேவர்கள் பக்கல் பேசினவனாய் விமானத்திலிருப்பவனாயிருக்கிற அவனைப் பார்த்து, 'நீ சொன்னது வேத சூத்திரங்களுக்கு முரண்பட்டதாகில், தேவர்கள் பக்ஷபாதியாய் வார்த்தை சொன்ன நீ ஆகாயத்தில் நின்றும் கீழே விழுந்தவனாய் இப்போது தொடங்கி, நீ ஆகாயத்தில் செல்லுவதும் மாறிப் பாதாள லோகத்திலே விழக்கடவாய்; நாங்கள்தாம் முரண்பட்ட வார்த்தை சொன்னோமாகில், அப்படியே பாதாளத்தில் விழக்கடவோம்' என்று சபிக்க, [1]''பிறகு அப்படிச் சபித்த அந்த நேரத்திலேயே உபரிசரவசு என்கிற அந்த அரசன் தலைகீழாகப் பூமியின் பிலத்துவாரத்தில் விழுந்தான்'' என்கிறபடியே அப்போதே பாதாளத்திலே விழுந்தான் என்கிற உபரிசரவசு சரித்திரத்திலே, இருடிகளும் தர்ம சந்தேகங்கள் தன்னைக் கேட்கும்படி கல்வி முதலியவற்றில் அவர்களைக்காட்டிலும் உயர்ந்தவனானவன், அவர்கள் திறத்தில் அபசாரத்தாலே கீழே பாதாளத்தில் விழுந்தமை காண்கையாலே, பிறப்பு ஒழுக்கம் முதலானவற்றால் உயர்ந்தவர்கள் திறத்தில் அவற்றால் தாழ்ந்தவர்கள் பண்ணும் அபசாரமே இழவிற்குக் காரணமாகும்; அவற்றால் உயர்ந்தவர்கள் அவற்றால் தாழ்ந்த

---

"அஸ்மத் ஶாபாபி காதேந மஹீம்பித்வா ப்ரவேக்ஷ்யஸி
விருத்தம் வேதஸூத்ராணாம் உக்தம் யதிபவேந்நிருப."

"வயம் விருத்தவசநா யதி தத்ர பதாமஹே"

என்பன பிரமாணம்.

1 "ததஸ்தஸ்மிந் முஹூர்த்தேது ராஜோபரிவஸுஸ்ததா
அதோவை ஸம்பபூவாஶு பூமே: விவரகோ நிருப."

என்பது பிரமாணம்.

வர்கள் திறத்தில் பண்ணும் அபசாரம் இழவிற்குக் காரண மாகாது என்கிற நியமம் இல்லை என்னுமது காணலாம் என்றபடி.

[1] பிறப்பினால் உயர்வு இருடிகளுக்கு உண்டானாலும் ஞானம் முதலாயினவற்றால் உயர்வு இவனுக்கு உண்டு ஆகையாலே அவர்களில் இவனுக்கு ஏற்றம் சொல்லக் குறை இல்லை. பிறப்பும் ஞானம் முதலானவைகளும் [2] ஒருதலையானால் ஞானம் முதலான வைகள் ஏற்றம் பெற்றிறே இருப்பது.

கைசிக விருத்தாந்தம் ஸ்ரீவராக புராணத்திலே ஸ்ரீபூமிப் பிராட்டிக்கு ஸ்ரீவராகநாயனார் அருளிச்செய்ததாகையாலும், உபரிசரவசு விருத்தாந்தம் ஐந்தாம் வேதமான மகா பாரதத் திலே மோக்ஷ தர்மத்திலே தரும புத்திரருக்கு ஸ்ரீவீடுமராலே சொல்லப்பட்டதாகையாலும் இவைதாம் ஆப்த பிரமாண சித்தமிறே. (129)

---

[1] 'இவ்வுதாரணம் இங்குப் பொருந்துமாறு இல்லையே? இருடிகள் பிறப்பினால் உயர்ந்தவர்கள் அலரோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'பிறப்பினால்' என்று தொடங்கி. பிறப்பினால் வரும் உயர் வைக்காட்டிலும் ஞானத்தால் வரும் உயர்வே சிறந்தது என்பது நூல் துணிபு. முனிவர்கள் தங்களுக்கு வந்த ஐயத்தைத் தீர்த்துக்கோடற்கு வசுவினிடம் சென்றார்களாதலின், வசு ஞானத்தால் உயர்ந்தவன் என்பது தெளிவு.

[2] 'ஒரு தலையானால்' என்றது, ஒருவரிடத்தில் பிறப்பும் ஒருவ ரிடத்தில் ஞானமும் ஒத்திருந்தால் என்றபடி.

" ஆக்கு மறிவான் அலது பிறப்பினால்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க "

என்பது நன்னெறி.

' தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணாய்
அவன்துணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்துணையா நல்ல கொளல்.'

என்பது நாலடியார்.

## 210

[1] பிராஹ்மண்யம் விலை செல்லுகிறது வேத அத்யயநாதி முகத்தாலே பகவல்லாப ஏது என்று; அதுதானே இழவுக்கு உறுப்பாகில் தியாஜ்யமாமிறே.

என்பது சூத்திரம்.

அவ :—' இப்படி, பிறவி முதலாயினவற்றால் வரும் உயர்வில் பசை இல்லை என்று சொல்லலாமோ, சாஸ்திரங்கள் எல்லாம் பிராமணத் தன்மையை மிக விரும்பிச் சொல்லாநிற்கச் செய்தே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—' விலை செல்லுகை 'யாவது, விருப்பத்திற்கு விஷயமாய்ச் செல்லுகை. 'வேத அத்யயன ஆதிமுகத்தாலே பகவல்லாப ஏது வாகை 'யாவது, [2]" எந்தப் பொருளை எல்லா வேதங்களும் சொல்லுகின்றனவோ" என்றும், [3]" எல்லா வேதங்களாலும் அறியப்படுகின்றவனும் யானே" என்றும் சொல்லுகிறபடியே [4]ஆராதனத்தின் தன்மையையும் ஆராதிக்கப் படுகின்ற பரம்பொருளின் தன்மையையும் பூர்வ பாகத்தாலும் உத்தர பாகத்தாலும் சொல்லாநின்றுகொண்டு பகவானுக்கே உரியதாகவிருக்கின்ற வேதத்தை [5]" வேதம் அத்யயனம் செய்யத் தகுந்தது" என்கிறபடி விதிக்குப் பரதந்திரப்பட்ட

---

[1] பிராமண்யம் - பிராமணத்தன்மை. விலை செல்லுதல் - நூல்களால் விரும்பப்படுதல். பகவல்லாபம் - பகவானைப் பெறுதல். ஏது என்று - காரணமாகும் தன்மையாலே. அதுதானே - அந்தப் பிராமண்யந்தானே. இழவுக்கு - பகவானை இழந்து போவதற்கு. உறுப்பாகில் - காரணமாகில்.

[2] " ஸர்வே வேதா யத் பதமாமநந்தி"
என்பது, பிரமாணம்.

[3] " வேதைஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:"
என்பது, பிரமாணம்.

[4] 'ஆராதனத்தின் தன்மையைப் பூர்வபாகத்தாலும் (முன் பாகம்) ஆராதிக்கப்படுகின்ற பரம்பொருளின் தன்மையை உத்தரபாகத்தாலும் (பின் பாகம்) சொல்லுகின்ற வேதம்' என்க.

[5] " ஸ்வாத்யாயோத்யேதவ்ய:"
என்பது, பிரமாணம்.

வனுய் அத்யயனம் செய்து மீமாம்சை முதலியவைகளால் அவற்றின் பொருளை நிச்சயித்துப் பகவானை வழிபடுதல் முதலானவைகளிலே இழிந்து பகவானைப் பெறுகைக்கு உறுப்பாகை.

'அதுதானே இழவுக்கு உறுப்பாகில்' என்றது, அந்தப் பிராமணத் தன்மைதானே அஹங்கார ஏதுவாய்க் கொண்டு [1]"வேத அத்யயனம் செய்தவன் என் பக்தனை நிந்தித்தானேயாகில் உடனே சண்டாளத்தன்மையை அடைகிறுன்" என்கிற படியே பகவானுடைய மிகக்கொடிய தண்டனைக்குக் காரண மான பாகவத அபசாரத்தைப் பண்ணிப் பகவானுக்கு அசலாய்ப் போருகைக்கு உறுப்பாகில் என்றபடி. 'தியாச்சியமாமிறே' என்று பிரசித்தி தோற்ற அருளிச் செய்தது, யாதொன்று பகவானைப் பெறுதற்கு உறுப்பு? அது கொள்ளத்தக்கது; யாதொன்று பகவானை இழப்பதற்கு உறுப்பு? அது விடத் தக்கதாயற்ற பின்பு, [2]இதுவும் இழக்கைக்கு உறுப்பானபோதே அப்படியாகக் குறை இல்லை என்கிற நிச்சயத்தாலே. (130)

## 211

ஜன்ம [3]விருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ர யோஜகம்.

என்பது சூத்திரம்.

**அவ:**—'இப்படி உயர்ந்த பிறப்பு முதலானவைகள் இழவிற்கு உறுப்பாமாகில் இழிந்த பின்பு முதலானவைகள் தாம் பேற்றிற்குக் காரணமாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

[1] மத்பக்தாந் ஶ்ரோத்ரியோ நிந்தந் ஸத்யஶ் சண்டாளதாம் வ்ரஜேத்.

என்பது, பிரமாணம்.

[2] இதுவும் - இந்தப் பிராமணப் பிறப்பும்.

[3] 'பிறப்பினுடைய உயர்வும் தாழ்வும், ஒழுக்கத்தினுடைய உயர்வும் தாழ்வும்' என்க. விருத்தம் - ஒழுக்கம். உத்கர்ஷம் - உயர்வு. அபகர்ஷம் - தாழ்வு. அப்ரயோஜகம் - ஏதுவாக மாட்டா.

**வியாக் :—**[1]' ஜன்ம விருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம்' என்றது, பிறப்பினுடையவும் ஒழுக்கத் திறனுடையவும் உயர்வுகள் பேற்றிற்கும் இழவிற்கும் காரணமாகமாட்டா; பிறப்பினுடைய வும் ஒழுக்கத்தினுடையவும் தாழ்வுகள் பேற்றிற்கும் இழவிற்கும் காரணம் ஆகமாட்டா என்றபடி.

[2]' அன்றிக்கே, [3]' இதில் ஜன்ம விருத்தாதி நியமம் இல்லை' என்பது, [4]' இழவுக்கு உறுப்பாகில் தியாச்சியமாமிறே' என்பது ஆகாநின்றீர்; இங்ஙனம் சொல்லலாமோ? வேத அத்யயனம் முதலான வழியாலே பகவானைப் பெறுதற்குக் காரணமாகை யாலே பிறப்பின் உயர்வும் ஒழுக்கத்தின் உயர்வும் பேற்றிற்கு உடலாகவும், பிறப்பின் தாழ்வும் ஒழுக்கத்தின் தாழ்வும் அத்ய யனம் முதலானவற்றிற்குத் தகுதியில்லாதவையாகையாலே இழவிற்கு உடலாகவும்கொள்ள வேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால் என்னவுமாம். [5]அதாவது, பிறப்பு ஒழுக்கங்களினுடைய உயர்வு, பேற்றிற்குக் காரணமாகாது; பிறப்பு ஒழுக்கங்களினுடைய தாழ்வு, இழவிற் குக் காரணமாகாது என்றபடி. பேறு என்றது, பகவானை அடைதலை. இழவு என்றது, பகவானை அடைய முடியாமையை. பிரயோஜகம்—பலிப்பிக்குமது—காரணமாவது.

[6]உயர்குலப் பிறப்பும் ஒழுக்கமுமுடையவர்களுள் சிலர் இழப்பாரும் சிலர் பெறுவாருமாகக் காண்கையாலும், தாழ்குலப்

---

1 இச்சூத்திரத்திற்கு இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருளில் ஜந்மவிருத்தங்களினுடைய உத்கர்ஷமும் பேற்றிற் கும் இழவிற்கும் அப்ரயோஜகம், ஜந்ம விருத்தங்களினுடைய அபகர்ஷமும் பேற்றிற்கும் இழவிற்கும் அப்ரயோஜகம் என்று பிரித் துக் கூட்டிக்கொள்க.

2 இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

3 சூத். 208. 4 சூத். 210.

5 இரண்டாவது பொருளுக்கு "ஜன்ம விருத்தங்களினுடைய உத்கர்ஷமும் பேற்றிற்கு அப்ரயோஜகம்; ஜன்ம விருத்தங்களி னுடைய அபகர்ஷமும் இழவிற்கு அப்ரயோஜகம்" என்று பிரித்துக் கூட்டிக்கொள்க.

6 இரண்டாவதாகக் கூறிய பொருளை விளக்குகிறார், 'உயர்குலப் பிறப்பும்' என்று தொடங்கி.

பிறப்பும் ஒழுக்கமுமுடையவர்களிலும் அப்படியே இரண்டு வகையினரும் உளராகக் காண்கையாலும், பிறப்பு ஒழுக்கங்களின் உயர்வுகள் இரண்டும் பேற்றிற்கும் இழவிற்கும் காரணமாகா என்னுமிடம் பிரத்தியக்ஷ சித்தமிறே. (131)

## 212

[1] பிரயோஜகம் பகவத் சம்பந்தமும் தத் அசம்பந்தமும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆனால், பேற்றிற்கும் இழவிற்கும் காரணமாவது தான் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'பிரயோஜகம் பகவத்சம்பந்தமும் தத் அசம்பந்தமும்' என்றது, பகவானைப் பெறுதலாகிற பேற்றிற்குக் காரணம், 'நாம் பகவான் ஒருவனுக்கே அடிமைப்பட்டவர்கள்' என்றிருக்கையாகிற பகவத் சம்பந்த ஞானம்; அவனைப் பெறுமல் இழந்து போவதற்குக் காரணம், அவன் ஒருவனுக்கே அடிமை என்கிற ஞானம் இன்மையாகிற அவனுடைய சம்பந்தமின்மை என்றபடி. (132)

## 213

'பகவத் சம்பந்தம் உண்டானல் [2] இரண்டும் ஒக்குமோ?' என்னில்

என்பது சூத்திரம்.

**அவ :**—'உயர் குலத்தினர் இழி குலத்தினர் ஆகிற இருவர்க்கும் பகவானுடைய சம்பந்த ஞானம் உண்டானல் பாகவதர்களாகிற தன்மை [3] என்னும் ஒப்புமையன்றோ உள்ளது?

[1] பிரயோஜகம் - பலிக்கச் செய்வது. பகவத் சம்பந்தம் - பகவானுடைய சம்பந்த ஞானம்; சேஷத்துவ ஞானம். அசம்பந்தம் - சம்பந்த ஞானம் இல்லாமை.

[2] இரண்டும் - உயர்குலப்பிறப்பு இழிகுலப்பிறப்பாகிற இரண்டும்.

[3] 'என்னும் ஒப்புமையன்றோ உள்ளது?' என்றது, அவர்களுடைய பிறவிகளின் உயர்வு தாழ்வுகளுக்கு நாசம் இல்லை என்பது அவர்கள் கருத்து. "கேவல பிராமணனுக்கும் கேவல சூத்திரனுக்கும் உள்ள எல்லை, பாகவத பிராமணனுக்கும் பாகவத சூத்திரனுக்கும் கொள்ள

அதனோடு உயர்குலப்பிறப்புமுடையவன் அது இல்லாதவனைக் காட்டிலும் உயர்ந்தவன் அன்றோ?' என்று நினைத்துப் பண்ணும் வினாவினை அநுவதிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' இரண்டும் ' என்றது, உயர்குலப்பிறப்பினையும் இழிகுலப்பிறப்பினையும் சொல்லுகிறது. (133)

## 214

[1] ஒவ்வாது.

என்பது சூத்திரம்.

அவ :—' ஒக்குமோ?' என்ற வினாவினைக் கேட்டவன் உயர் குலமாக நினைத்ததனை இழிகுலமாகவும், இழிகுலமாக நினைத்த தனை உயர்குலமாகவும் திருவுள்ளம் பற்றி, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஒவ்வாது–ஒத்தது ஆகாது என்றவாறு. (134)

---

வேணும் " என்பது இரஹஸ்யத்திரயசாரத்தில் உள்ள வாக்கியம். இது, ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளிய நூல்களுள் ஒன்று.

[1] ' அதனோடு உயர்குலப்பிறப்புமுடையவன், அது இல்லாத வனைக்காட்டிலும் உயர்ந்தவன் அன்றோ? ' என்று மேலே கேள்வி கேட்டவர் வழியே சென்று ' ஒவ்வாது ' என்கிறார் அல்லர்; அவர்கள் உயர்ந்த பிறப்பாக நினைத்ததைத் தாழ்ந்த பிறப்பாகவும் தாழ்ந்த பிறப்பாக நினைத்ததை உயர்ந்த பிறப்பாகவும் கொண்டு ' ஒவ்வாது ' என்கிறார். அவர்கள் வழியே சென்று ' ஒவ்வாது ' என்பாராயின், இது சம்பந்தமாக மேலே அருளிச்செய்யும் சூத்திரங்களெல்லாம் மாறு கொள்ளக் கூறலாய் அல்லது வெற்றெனத் தொடுத்தலாய் முடியும். "உத்கிருஷ்டமாகப் பிரமித்த ஜன்மம்" என்றும், "அபகிருஷ்ட மாகப் பிரமித்த...ஜன்மம்" என்றும் அவர்கள் கூறினைப் பின்பு அநுவதித்தலும் காணல் தகும்.

' மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர், கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.
' மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு. (திருக்குறள்.)
' வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே." (புறநானூறு, 183)

என்ற தமிழ்ப்பாக்கள் இச்சூத்திரக் கருத்தினை வலியுறுத்தி நிற்றல் காண்க.

## 215

[1] உத்க்ருஷ்டமாகப் பிரமித்த ஜன்மம் பிரம்ச சம்பாவனையாலே 'சரீரேச' என்கிற படியே பயஜனகம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே 'ஒவ்வாது' என்றதனை எடுத்து விளக்கு கிறார் இச்சூத்திரத்தாலும் மேல் வருகின்ற சூத்திரங்களாலும்.

**வியாக் :**—உயர்குலப்பிறப்பு [2] முதலியவைகளாலே அகங்காரம் கொண்டு நசித்துப்போவதற்கு உறுப்பாகையாலே தாழ்ந்ததாகவிருக்கிற [3] இதனை உயர்வாக நினைத்து 'ஒக்குமோ' என்று வினவியது, [4] "அதுவல்லாததனை அதுவாக நினைத்த புத்தியாலே' என்னுமிடம் தோற்ற 'உத்க்ருஷ்டமாகப் பிரமித்த ஜன்மம்' என்கிறார். 'பிரம்ச சம்பாவனை'யாவது, [5] மற்றைய உபாயங்களில் சேர்தலாலே வேறு ஒன்றையும் உபாயமாகக் கொள்ளாமையாகிற அதிகாரத்தில்நின்றும் நழுவுதல் வருகைக்குத் தகுதியதாயிருக்கை. 'சரீரேச என்கிறபடியே பயஜநகம்' என்றது, [6] "எல்லாக்காலங்களைப் பார்த்தாலும் புண்ணிய தேசங்களைப் பார்த்தாலும் மற்றைய உபாயங்களைப் பார்த்தாலும் என்னுடைய சரீரத்தைப் பார்த்தாலும் பெரிய அச்சமானது உண்டாகின்றது" என்கிறபடியே மற்றைய உபாயங்கள் [7] செய்தற்குத் தகுதியுள்ளவைகளாகையாலே அச்சத்திற்குக் காரணமானவற்றைச் சொல்லி வருகிறவளவிலே அவை

---

[1] உத்க்ருஷ்டமாகப் பிரமித்த ஜன்மம் - உயர்வாக மயங்கிய பிராமண ஜன்மம். பிரம்ச சம்பாவனை - நின்ற நிலையினின்றும் நழுவுவதற்குத் தகுதி. 'சரீரேச' என்பது ஒரு சுலோகத்திலே உள்ள ஒரு சீர். பயஜனகம் - அச்சத்திற்குக் காரணம்.

[2] 'முதலியவை' என்றதனால் கல்வி ஒழுக்கங்களைக் கொள்க.

[3] இதனை - இந்தப் பிராமண ஜன்மத்தை.

[4] 'அது வல்லாததனை அதுவாக நினைத்த புத்தியாலே' என்றது, உயர்வல்லாததனை உயர்வாக நினைத்த புத்தியாலே என்றபடி.

[5] மற்றைய உபாயங்கள் - கர்மம் ஞானம் பக்தியாகிற உபாயங்கள்.

[6] 'காலேஷ்வபிச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாச்யுத ஶரீரேசகதௌசாபி வர்த்ததே மேமஹத்பயம்.' என்பது, ஜிதந்தா.

[7] 'செய்தற்கு' என்றது பிராமணர்கள் செய்வதற்கு என்றபடி.

எல்லாவற்றுக்கும் முதன்மையாகச் ‘சரீரத்திலுல் எனக்குப் பெரிய அச்சம் தொடர்கிறது,’ என்று ஆன்மாவின் தன்மையை உள்ளவாறு உணர்ந்தவர்களாய் மற்றைய உபாயங்களைச் சிறிதும் பொருந்தவர்களாயிருக்கும் அதிகாரிகளுக்கும், [1] ‘இச் சரீரம் இருக்க இருக்க என் செய்யத்தேடுகிறது?’ என்னும் அச்சத்தை விளைக்குமதாயிருக்கும் என்றபடி. (135)

## 216

[2] அதற்கு ஸ்வரூபப் பிராப்தமான நைச்யம் பாவிக்க வேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—உயர்ந்ததாக மயங்கிய அப்பிறப்பிற்கு இன்னம் ஒரு குற்றம் அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘அதற்கு’ என்றது, மேற்சூத்திரத்தில் கூறிய அப்பிறப்பினைச்சுட்டுகிறது. ‘ஸ்வரூபப் பிராப்தமான நைச்யம் பாவிக்கவேணும்’ என்றது, பாகவதர்களைப் பின்பற்றி அவர்களோடு கலந்து பழகுதல் முதலாயவற்றில் வந்தால் சேஷத்துவமாகிற சொரூபத்திற்குத் தகுதியான தாழ்ச்சியை. [3] பிறர் செய்கிறது கண்டு அதுபோன்று தாமும் நடக்கப் பயில வேண்டும் என்றபடி. (136)

## 217

அபகிருஷ்டமாகப் பிரமித்த [4] உத்கிருஷ்ட ஜன்மத்துக்கு இரண்டு தோஷமும் இல்லை.

என்பது சூத்திரம்.

---

[1] ‘இச்சரீரம்’ என்றது பிராமணர்களின் சரீரத்தை; அவர்களே மற்றைய உபாயங்களைச் செய்வதற்குத் தக்காராதலின்.

[2] அதற்கு - அந்தப் பிராமணப் பிறப்பிற்கு. ஸ்வரூபப் பிராப்தமான - சேஷத்துவ சொரூபத்திற்குத் தகுதியான. நைச்யம் - நீசத்தன்மை; தாழ்வு. ‘பாவிக்கவேணும்’ என்றதனுல் அப்பிறப்பிற்கு இயல்பாக அமைந்தது அன்று என்பது பெறுதும்.

[3] ‘பிறர்’ என்றது, நான்காம் வருணம் முதலான சாதிகளிற் பிறந்த பாகவதர்களை.

[4] உத்கிருஷ்ட ஜன்மம் - உயர்ந்த பிறவி; அதாவது, நான்காம் வருணத்தில் பிறந்த பிறவி.

அவ :—இதற்கு எதிர்த்தட்டான, இழிந்த பிறப்பாக மயங்கிய (உயர்ந்த) பிறப்பிற்கு மேலே கூறிய இரண்டு குற்றங்களும் இல்லை என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—உயர்குலப் பிறப்பு [1] முதலானவைகளால் வருகின்ற அகங்காரத்திற்குத் தகுதி இன்றிக்கே, சேஷத்துவ சொரூபத்திற்குத் தகுதியாகவிருக்கையாலே, உயர்வாக இருக்கிற இப்பிறப்பைத் தாழ்வாக நினைத்ததும் [2] அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் புத்தி என்னுமிடம் தோற்ற 'அபகிருஷ்டமாகப் பிரமித்த ஜன்மம்' என்கிறார். 'இரண்டு தோஷமும் இல்லை' என்றது, மற்றைய உபாயங்களில் சேர்தலாலே, வேறோர் உபாயத்தையும் பற்றாமையாகிற அதிகாரத்தில்நின்றும் நழுவுதலுக்குத் தகுதியாகவிருப்பதால் வரும் அச்சத்திற்குக் காரணமாதலும், [3] சேஷத்துவ சொரூபத்திற்குத் தகுதியான நைச்யம் பயிலவேண்டுதலும் ஆகிற இரண்டு குற்றங்களும் இல்லை என்றபடி. (137)

## 218

[4] நைச்யம் ஜன்ம சித்தம்.

என்பது சூத்திரம்.

அவ :—'மற்றைய உபாயங்களில் சேர்தலாலே வேறோர் உபாயத்தையும் பற்றாமையாகிற அதிகாரத்தில் நின்றும் நழுவுதற்குத் தகுதியாகவிருத்தல் என்பது அன்றோ இப்பிறப்பிற்கு இல்லாதது? நைச்யம் பாவிக்கவேண்டுவது இதற்கு இல்லையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'நைச்யம் ஜன்ம சித்தம்' என்றது, பாகவதர்களைப் பின் பற்றி அவர்களோடு கலந்து பழகுவதற்கு உறுப்

[1] முதலானவை - கல்வி, ஞானம் என்பவை.

[2] அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் புத்தி - தாழ்வு அல்லாததனைத் தாழ்வாக நினைக்கும் புத்தி.

[3] சேஷத்துவஞானம் வந்த பின்னர் இவர்களுக்கு இச்சரீரம் சேஷத்துவத்துக்கு அநுகூலமாக இருக்கும். சேஷத்துவஞானம் வந்த பிறகும் அவர்களுக்கு அச்சரீரம் சேஷத்துவத்திற்குப் பிரதிகூலமாக இருக்கும் என்பதாம்.

[4] நைச்யம் - நீசத்தன்மை; தாழ்ச்சி. ஜந்மசித்தம் - பிறப்பிலேயே அமைந்திருப்பது.

பான தாழ்ச்சி, இழிந்த பிறப்பாக மயங்கிய உயர்ந்த பிறப்பிற்குப் [1]பிறந்து உடைமையாக இருக்கையாலே பாவிக்க வேண்டாமல் [2]பள்ளமடையாகவிருக்கும் என்றபடி. (138)

## 219

[3]ஆகையாலே உத்கிருஷ்ட ஜன்மமே சிரேஷ்டம்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய பொருளை முடித்துக் கூறுகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'ஆகையாலே' என்றது, இப்படி உயர்பிறப்பாக மயங்கிய [4]அது குற்றங்களையுடையதாயும் இழிபிறப்பாக மயங்கிய இது குற்றங்கள் இல்லாததாயும் இருக்கையாலே என்றபடி 'உத்கிருஷ்ட ஜன்மமே சிரேஷ்டம்' என்றது, சேஷத்துவமாகிற சொரூபத்திற்குத் தக்கதாய்க்கொண்டு உயர்ந்ததாயிருக்கிற [5]இந்தப் பிறப்பே, சேஷத்துவ சொரூபத்திற்குத் தகுதியில்லாததான அந்தப் பிறப்பைக்காட்டிலும் சிறந்தது என்றபடி. (139)

---

[1] ஜந்மசித்தம் என்றதன் பொருள், பிறந்து உடைமையாக இருக்கை என்பது.

[2] பள்ளமடை-நீருக்குப் பள்ளமான இடம்; தாழ்ந்த நிலம். பள்ளத்தில், ஒருவர் நீர் ஏற்ற வேண்டாது தானே சென்று நீர் நிறைதல் போன்று இங்கும் தாழ்ச்சி இயல்பாகவே அமைந்திருக்கும் என்பதாம்.

[3] 'ஆகையால்' என்றது மேலே நான்கு சூத்திரங்களில் கூறிய பொருள்களைச் சுட்டுகிறது. 'உத்கிருஷ்ட ஜன்மம்' என்றது பிராமண ஜன்மம் அல்லாத ஜன்மங்களை. சிரேஷ்டம் - சிறந்தது.

[4] அது - பிராமண ஜந்மம். இது - பிராமண ஜன்மம் அல்லாத மற்றைய ஜன்மம்.

[5] இந்தப் பிறப்பே - பிராமணப் பிறவியல்லாத மற்றைய பிறவி. அந்தப் பிறப்பு - பிராமணப் பிறவி.

## 220

[1] ஶ்வபசோபி மஹீபால.

என்பது சூத்திரம்.

**அவ:**—தாம் மேலே அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—[1] "ஏ அரசனே, [2] நாய் இறைச்சி தின்கின்றவனாயினும் விஷ்ணுபக்தியுடையவன் பிராமணனைக்காட்டிலும் சிறந்தவன்; பிராமண சந்யாசியானாலும் விஷ்ணு பக்தியில்லாதவன் அவனைக்காட்டிலும் தாழ்ந்தவன்" என்று [3] எத்தனையேனும் தாழ்ந்த பிறப்பினனாயிருந்தானேயாகிலும், பகவானிடத்தில் பக்தியுள்ளவன் பிராமணனைக்காட்டிலும் சிறந்தவன்; உயர்ந்த பிறப்பு மாத்திரமன்றி உயர்ந்த ஆச்ரமத்தையுடையவனாக (துறவி) இருந்தாலும், பகவானிடத்தில் பக்தியில்லாதவன் அவனைக்காட்டிலும் தாழ்ந்தவன் என்று வர்ண ஆச்ரமங்களில் சரக்கு அறுத்துப் பகவானுடைய சம்பந்தமே உயர்விற்குக் காரணமாகச் சொல்லுகையாலே, [4] மற்றைய உபாயங்களில் சேர்தலாலே, வேறு ஓர் உபாயத்தையும் பற்றாமையாகிற அதிகாரத்தில்நின்றும் நழுவுதல் வருதற்குத் தகுதியாகவிருத்தல்

[1] 'ஶ்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக: விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாதம:' என்பது பாகவதம்.

[2] நாய் இறைச்சி தின்பவனைக் கூறியது, விஷ்ணு பக்தியுள்ள ஏனைய தாழ்ந்த பிறப்பினர்க்கும் உபலக்ஷணம்.

[3] 'விஷ்ணு பக்தியுடைய நாய் இறைச்சி தின்கின்றவனும் பிராமணனைக்காட்டிலும் சிறந்தவன்' என்றதனால் வருணத்தில் சரக்கு அறுத்தது; விஷ்ணு பக்தியில்லாத பிராமண சந்நியாசியும் நாய் இறைச்சி தின்பவனைக்காட்டிலும் தாழ்ந்தவன் என்றதனால் ஆஶ்ரமத்தில் சரக்கு அறுத்தது. (சரக்கு - கொள்ளத்தக்கது.) பிராமணனைத் தவிர ஏனையோர்க்குச் சந்நியாச ஆஶ்ரமம் கிடையாதாதலின், 'யதி' என்பது பிராமண சந்நியாசியையே காட்டுகிறது. ஈண்டு, 'விஷ்ணு பக்தி' என்றது, பாகவதசேஷத்வ பரியந்தமான பகவத் அநந்யார்ஹ சேஷத்வரூப ஞானத்தை.

[4] 215, 216-ஆம் சூத்திரங்களில் கூறியனவற்றை இங்கு எடுத்து அருளிச்செய்கிறார் 'மற்றைய உபாயங்களிலே' என்று தொடங்கி. 'முதலானவை' என்றதனால் நைச்யம் பாவித்தலைக் கொள்க.

முதலானவைகளாலே, [1] பகவானுடைய சம்பந்தத்திற்கு விரோதி யாகவிருக்கிற பிறவியைக்காட்டிலும், பகவானுடைய சம்பந்தத் திற்குக் தகுதியான பிறப்பே சிறந்தது என்பது கருத்து. [2] இங்ஙன் அன்றாகில், [3]மேலே கூறிய பொருளுக்கு இது பிர மாணம் ஆகமாட்டாதிறே. (140)

## 221

[4] நிகிருஷ்ட ஜன்மத்தால் வந்த தோஷம் சமிப்பது விலக்ஷணசம்பந்தத்தாலே.

என்பது சூத்திரம்.

---

[1] 'பகவானுடைய சம்பந்தத்திற்கு' என்றது பாகவதசேஷத்துவ பரியந்தமான பகவத் அநந்யார்ஹசேஷத்துவரூப ஞானத்தை. 'உயர்விற்குக் காரணமாகச் சொல்லுகையாலே' என்பது முடியச் சுலோகத்திற்கு நேர்ப்பொருள் அருளிச்செய்தவாறு. 'மற்றைய உபா யங்களில்' என்றது முதல் 'என்பது கருத்து' என்பது முடியச் சுலோகத்திற்குக் கருத்துப்பொருள் அருளிச்செய்தவாறு.

[2] 'இங்ஙன் அன்றாகில்' என்றது, மேலே கூறிய கருத்துப் பொருளைக் கொள்ளாதொழியின் என்றபடி.

[3] 'மேலே கூறிய பொருள்' என்றது, 212 முதல் 216 முடிய உள்ள சூத்திரங்களின் பொருளை.

சுலோகத்தில் 'நாய் இறைச்சி தின்பவனும விஷ்ணு பக்தி யுடையவன்' என்று இறைச்சி தின்பவனோடு விஷ்ணு பக்தி சேர்த்துச் சொல்லப்பட்டதனாலே தாழ்ந்த பிறப்பு விஷ்ணு பக்திக்குக் காரணம் என்பது தெளிவாகிறது. 'விஷ்ணு பக்தியில்லாத யதி' என்று சேர்த்துச் சொல்லப்பட்டதனால் விஷ்ணு பக்தி இல்லாமைக்கு 'யதி' யாக விருத்தல் காரணம் என்பதும் தெளிவாகிறது. விஷ்ணு பக்தி என்பதற்கு மேலே கூறியுள்ள பொருளை நினைவில் கோடல் தகும்.

'திக்குற்றகீர்த்தி இராமாநுசனை' என்ற இராமாநுச நூற்றந்தாதித் திருப்பாசுரத்திற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தை ஈண்டுச்சேவித்தல் தகும்.

[4] நிகிருஷ்ட ஜந்மம் - தாழ்ந்த பிறவி ; ஈண்டுப் பிராமணப் பிறவி. 215, 219ஆம் சூத்திரங்களைப் பார்க்கவும். தோஷம் - குற்றம் ; அதாவது, பிரம்ச சம்பாவனையும், நைச்யம் பாவிக்கவேண்டுதலும். சமிப்பது - மறுவலிடாதபடி நீங்குதல். விலக்ஷணர் - வேறுபட்ட இயல் பினையுடையவர் ; அதாவது, பயஜநகமும் நைச்யம் பாவித்தலுமாகிற இரண்டு குற்றங்களும் இல்லாதவர் ; பாகவதர் சம்பந்தம் - அந்தப்

அவ :—'ஆக, தாழ்ந்த பிறப்பு இன்னது, உயர்ந்த பிறப்பு இன்னது என்று நிச்சயிக்கப்பட்டன மேல்; அவற்றுள் தாழ்ந்த பிறப்பால் வந்த குற்றம் மாறுவது எதனாலே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'நிகிருஷ்ட ஜன்மத்தால் வந்த தோஷம் சமிப்பது' என்றது, அகங்காரம் காரணமாகத் தாழ்ந்ததான பிறவியடியாக வந்த நைச்யம் பாவிக்கவேண்டுதல் முதலாய குற்றம் மறுவலிடாதபடி மாறுவது என்றபடி. 'விலக்ஷண சம்பந்தத்தாலே' என்றது, பிறவியிலேயே பிறந்து உடைமையாயிருக்கிற நைச்யத்தையுடையராய் மற்றைய உபாயங்களின் சேர்க்கைக்குத் தகுதி சிறிதும் இல்லாதவராய் இருக்கும் [1] விலக்ஷண அதிகாரிகளோடு உண்டான சேஷத்துவ ஞானசம்பந்தத்தாலே என்றபடி. (141)

## 222

[2] சம்பந்தத்துக்கு யோக்யதை உண்டாம்
போது ஜன்மக் கொத்தை போகவேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அந்த விலக்ஷண அதிகாரிகளான பாகவதர்களோடு சம்பந்தத்திற்குத் தகுதி உண்டாம்படி எங்ஙனே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'சம்பந்தத்துக்கு யோக்யதை உண்டாம்போது [3] ஜன்மக் கொத்தை போகவேணும்' என்றது, அந்த விலக்ஷண

---

பாகவதர்களுக்கு நாம் அடியவர் என்றிருக்கும் சேஷத்துவ சம்பந்த ஞானம்.

[1] விலக்ஷண அதிகாரிகள்-தாழ்ந்த பிறவியிலே பிறந்தபாகவதர்கள்.

[2] சம்பந்தத்துக்கு யோக்யதை உண்டாம் போது - பாகவதர்களுடைய சம்பந்தத்திற்குத் தகுதியுண்டாக வேண்டுமேயானால். ஜன்மக்கொத்தை - பிராமணப் பிறவியினுடைய குற்றம்; மேலேகூறிய இரண்டு குற்றங்கள். போகவேணும் - சிறிதளவாயினும் போக வேணும்.

[3] மேலே 'பிராமண ஜன்மத்தால் வந்த தோஷம் சமிப்பது விலக்ஷண சம்பந்தத்தாலே' என்று கூறி, இங்கு 'விலக்ஷண சம்பந்தத்திற்கு யோக்கியதை உண்டாம் போது ஜன்மக்கொத்தை போகவேணும்' என்று கூறியது 'அந்யோந்ய ஆஶ்ரயம் (ஒன்றை ஒன்று பற்றுதல்)

ரோடே சம்பந்தம் இவனுக்கு உண்டாம்போது, தன்னுடைய பிறவியால் வந்த குற்றம் கழிய வேண்டும் என்றபடி. (142)

## 223

**'ஜன்மத்துக்குக் [1]கொத்தையும் அதற்குப் பரிஹாரமும் 'பழுதிலாவொழுகல்' என்கிற பாட்டிலே அருளிச்செய்தார்.**

என்பது சூத்திரம்.

அவ :—'பிறவிக்குக் கொத்தை யாது? அதற்குப் பரிஹாரம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஜன்மத்துக்குக் கொத்தையும் அதற்குப் பரிஹாரமும் 'பழுதிலா வொழுகல்' என்கிற பாட்டிலே அருளிச்செய்தார் என்றது, மயர்வற மதிநலம்அருளப்பெற்று [2]உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்தவர்களுள் தலைவராய் அடியார்களுக்கு அடிமைப்பட்டிருத்தலுக்கு எல்லை நிலமான

என்னும் குற்றமன்றோ?' எனின், பாகவதர்களோடு சம்பந்தம் உண்டாவதற்குத் தகுதியாகப் பிராமணஜன்மக் கொத்தை சிறிதளவாயினும் கழியவேண்டும் என்பது இச்சூத்திரத்தின் கருத்து. அது கழிந்து அவரோடு சம்பந்தம் உண்டாயின பின் பிராமண ஜன்மக்கொத்தை அடியோடு அழிந்துவிடும்; பின் ஒரு ஞான்றும் தலையெடாது என்பது மேற்சூத்திரத்தின் கருத்து. இங்ஙனம் கருத்து வேறுபாடு உண்மையின் அக்குற்றம் இன்று என்க. மேற்சூத்திரத்தில் 'சமிப்பது' என்ற தன் வியாக்கியானத்தையும், இச்சூத்திரத்தில் 'போகவேணும்' என்ற சொற்றொடரின் நயத்தையும் உற்று நோக்குக. 'போகவேணும்' என்றதற்குக் கூறிய இப்பொருளோடு "இவை இரண்டும் உண்டானால்" (சூத். 97) என்ற சூத்திரத்திற்கு அருளிச்செய்திருக்கும் வியாக்கியானத்தை நினைவு கூர்க.

[1] கொத்தை - குற்றம். அதற்கு - அந்தக் குற்றத்திற்கு. பரிஹாரம் - போக்குவதற்குரிய பொருள். 'பழுதிலா வொழுகல்' என்பது திருமாலை. அருளிச்செய்தார் - ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்தார்.

[2] 'உண்மைப்பொருளை உள்ளவாறு உணர்ந்த' என்றது, இறைநிலை, உயிர்நிலை முதலியவற்றின் தன்மைகளை உள்ளவாறு உணர்ந்த என்றபடி.

ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் [1]"பழுதிலா ஒழுகல்" என்கிற திருப்பாசுரத்தாலே [2]பிரமன் தொடங்கித்தங்கள் அளவும் வர நெடுகப்போருகிற வம்சபரம்பரையில் ஒரு குற்றமும் இன்றிக்கே இருக்குமவர்களாய்ப் பலராய் இருக்கிற சதுர் வேதிகாள்! இதில் கீழ்ப்பட்டது இல்லை என்னும் தாழ்ந்த குலத்திலே பிறந்தார்களேயாகிலும், என்னோடு உண்டான [3]அசாதாரண சம்பந்தத்தை அறிந்து, அந்த ஞானத்திற்குத் தகுந்ததான தம் ஒழுக்கத்தையுடையராகில், நீங்கள் அவர்கள் காலிலே விழுந்து ஆராதியுங்கோள்; அவர்கள் உங்களிடத்தில் ஞானத்தைப் பெறவேண்டும் என்று விரும்பில் நீங்கள் விரும்பிச் சொல்லுங்கோள்; அவர்கள் பகவத்ஞானத்தை உங்களுக்கு இரங்கி உபதேசித்தால் கேட்டுப் பயன் பெற்றவர் ஆகுங்கோள்; எனக்குமேல் பூஜ்யர் இல்லாமையாலே என்மாத்திரமாகிலும் அவர்களை ஆராதித்து நல்வழி போங்கோள்" என்று இந்த மேலான மறைப்பொருளை [4]"இந்த எட்டுவிதமான பக்தியானது எந்த மிலேச்சனிடத்தில் இருக்கிறதோ அவன்பொருட்டு எல்லா வற்றையும் உபதேசிக்கலாம்; அப்படியே அவரிடமிருந்து எல்லாவற்றையும் பெறலாம்; அத்தகையர் நான் எப்படிப் பூஜிக்கத் தகுந்தவனோ அப்படியே பூஜிக்கத் தக்கவர்" என்று [5]பரம ஆப்தரான தேவர் அருளிச்செய்த பின்பு இதில் ஓர் ஐயம் உண்டோ? [6]இப்படி உபதேசித்த அளவிலே போகாமல் கோயிலிலேவந்தருளி, உலோக சாரங்க மஹாமுனிகள் தலையிலே திருப்பாணாழ்வாரை வைத்து இப்பொருளைச் செயலளவிலே

[1] 'பழுதிலா வொழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேனு மெம்மடி யார்க ளாகில்
தொழுமினீர் கொடுமின் கொண்மின் என்றுநின் னோடு மொக்க
வழிபட வருளி னாய்போன்ம் மதிள்திரு வரங்கத் தானே.'

என்பது திருமாலை, 42.

[2] இப்பாட்டிற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பிரமன்' என்று தொடங்கி.

[3] அசாதாரணசம்பந்தம் - வேறு பொருளில் தொடர்பு அற்ற சம்பந்தம்.

[4] "பக்திঃ அஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந்மிலேச்சேபி வர்த்ததே தஸ்மைதேயம் ததோ க்ராஹ்யம் ஸசபூஜ்யோ யதாஹ்யஹம்" என்பது, பாரதம்.

[5] பரம ஆப்தர் - நம்பத்தகுந்தவர்களுள் மேலானவர்.

[6] 'மதிள் திருவரங்கத்தானே' என்ற தொடர் மொழியை நோக்கி 'இப்படி' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

காட்டிற்றிலீரோ [1] என்ற இத்திருப்பாசுரத்திலே, உயர்குலப் பிறப்பு முதலானவற்ருல் உண்டாக்குகிற செருக்குப் பிறப்பிற்குக் குற்றமாம்; அந்த அகங்காரம் இல்லாத அந்த விலக்ஷணரான பாகவதர் திறத்தில் செய்யும் [2] அனுவர்த்தன விசேடம் அதற்குப் பரிஹாரமாம் என்று தெளிவாக அருளிச்செய்தார் என்றபடி. (143)

## 224

[3] வேதகப் பொன்போலே இவர்களோட்டை சம்பந்தம்.

என்பது சூத்திரம்.

அவ:—'இந்த விதமான பிறவியின் குற்றம் கழிந்து, [4] விலக்ஷணரோடே சம்பந்தம் உண்டாகவே, இவனும் விலக்ஷணனுய்விடுவனே?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—[5] வேதகம் என்ற இதனை வேதகம் என்று தமிழ் மொழி ஆக்கி அருளிச்செய்கிருர். 'வேதகப் பொன்' ஆவது, பல விதமான சித்த மருந்துகளை இட்டுப் பலகால் உருக்கிக் குளிகையாகப்பண்ணி, இரசவாதிகள் தங்கள் கைகளில் வைத்திருக்கும் [6] பரிசவேதியான பொன். அது போலே 'இவர்

---

[1] என்ற - என்ற பொருளையுடைய.

[2] 'அநுவர்த்தனம்' என்றது, "தொழுமினீர் கொடுமின் கொண் மின்" என்றதனை நோக்கி. அநுவர்த்தனம் - அவரைச்சார்ந்து ஒழுகுதல்.

[3] வேதகப்பொன் - வேதகமாகிற பொன்; பண்புத்தொகை. வேதகம் - வேதனத்தைச் செய்வது; வேதநம் - பேதநம் என்பதன் திரிபு. பேதநம் - பேதிப்பது; அதாவது வேறுபடுத்துவது; இரும்பைப் பொன்னுக்குவது. இவர்களோட்டை சம்பந்தம் - இந்தப் பாகவதர் களுடைய சம்பந்தம்.

[4] விலக்ஷணர் - பாகவதர். இவனும் - பிராமணனும்.

[5] வேதகம்: வடசொல். இதில் உள்ள 'தகரம்' தவ்வர்க்கத்தில் நாலாவது (ய)தகரம்.

[6] பரிசவேதி - தன்னுடைய சம்பந்தத்தால் பேதிப்பது; வேறு படுத்துவது. பரிசம் - சம்பந்தம். வேதி - பேதிப்பது. இரும்பின் கரிய நிறத்தைப் பொன்னிறமாக்குவது.

களோட்டை சம்பந்தம்' என்றது, அந்தப் பொன் தீண்டின வளவிலே இரும்பைப் பொன்னாக்குமாறு போலே ஆயிற்று, பிறவியிலேயே உண்டான நைச்யம் முதலானவற்றையுடைய விலக்ஷணரான இந்தப் பாகவதர்களுடைய சம்பந்தம், [1] தாழ்ந்த பிறவியால் வந்த குற்றத்தைப் போக்கி [2] இவனையும் விலக்ஷணன் ஆக்கிவிடும்படி என்றபடி. (144)

## 225

**[3] இவர்கள் பக்கல் சாம்யபுத்தியும் ஆதிக்ய புத்தியும் நடக்கவேணும்.**

என்பது சூத்திரம்.

**அவ :**—'இவ்வாறு தம்முடைய சம்பந்தத்தாலே [4] இத்தலையில் குற்றத்தைக் கழித்துத் தம்மை ஒத்தவராகச் செய்யும் விலக்ஷணரான பாகவதர்களை யாங்ஙனம் நினைத்திருக்க வேண்டும்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—ஒத்தவர்கள் என்ற புத்தியும் உயர்ந்தவர்கள் என்ற புத்தியும் இவர்கள் பக்கலிலே நடக்கவேண்டும் என்றவாறு. (145)

## 226

**அதாவது, ஆசார்யதுல்யர் [5] என்றும், சம்சாரிகளிலும் தன்னிலும் ஈச்வரனிலும் அதிகர் என்றும் நினைக்கை.**

[1] தாழ்ந்த பிறவியால் - பிராமணப்பிறவியால். அகங்காரத்தோடு கூடியிருத்தலாலும் நைச்யம் பாவிக்க வேண்டியிருத்தலாலும் பிராமணப் பிறவியைத் தாழ்ந்த பிறவியாக மேலே அருளிச்செய்ததை ஈண்டு நினைவு கூர்க.

[2] இவனையும் - இந்தப் பிராமணனையும். விலக்ஷணன் - பாகவதன்.

[3] இவர்கள் பக்கல் - இந்தப்பாகவதர்களிடத்தில். சாம்யம் - ஒப்பு. ஆதிக்யம் - உயர்வு.

[4] 'இத்தலை' என்றது பிராமணர்களை.

[5] துல்யர் - ஒத்தவர். அதிகர் - உயர்ந்தவர்.

**அவ :**—மேற்சூத்திரத்தில் ஒத்தவர்கள், உயர்ந்தவர்கள் என்ற புத்தி நடக்க வேண்டும் என்றதனை விவரிக்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஆசார்யதுல்யர் என்று நினைக்கை' என்றது, [1] 'ஆசாரியனே பரம்பொருள்; ஆசாரியனே சிறந்த செல்வம்; ஆசாரியனே சிறந்தகாமம்; ஆசாரியனே புகலிடம்; ஆசாரியனே உயர்ந்தகல்வி; ஆசாரியனே மேலானகதி' என்கிறபடியே தனக்கு எல்லா வகையாலும் உத்தேசியனான ஆசாரியனோடு இந்தப் பாகவதர்களை ஒத்தவர்களாக நினைக்கை என்றபடி. 'சம்சாரிகளில் அதிகராக நினைக்கை' என்றது, சாதி முதலாயினவற்றைக்கொண்டு சம்சாரிகளோடு ஒத்தவர்களாக நினையாமல், ஞானம் [2] முதலாயினவற்றால் வந்த வேறுபாட்டாலே அவர்களைக்காட்டிலும் உயர்ந்தவர்கள் என்று நினைத்தல் என்றபடி. 'தன்னில் அதிகர் என்று நினைக்கை' என்றது, சம்சாரிகளைக் காட்டில் வேறுபாடு தனக்கும் உண்டாகையாலே அதனைக் கொண்டு தன்னோடு ஒக்கநினைத்திராமல், தனக்குச் சேஷிகளான தன்மையாலே தன்னில் உயர்ந்தவர்கள் என்று நினைத்தல் என்றபடி.

'ஈச்வரனிலும் அதிகர் என்று நினைக்கை' என்றது, சேஷியாகவிருக்கும் தன்மையைக்கொண்டு நமக்கு [3] 'அவனும் இவர்களும் ஒப்பர்' என்று நினைத்திராமல், கர்மங்களுக்குத் தகுதியாக [4] லீலையிலும் விநியோகம் கொள்ளக் கடவனாய்த் தன்னுடைய திருவடித்தாமரைகளைப் பற்றுகிற நிலையில் புருஷகாரம் வேண்டும்படியாய் உகந்தருளின நிலங்களிலே

---

[1] "குருரேவ பரம்ப்ரஹ்ம குருரேவ பரந்தநம்
குருரேவ பர:காம:குருரேவ பராயணம்
குருரேவ பராவித்யா குருரேவ பராகதி:"

என்பது பிரமாணம்.

[2] 'முதலாயினவற்றால்' என்றது, பக்தியையும் வைராக்கியத்தையும்.

[3] அவனும் - ஈச்வரனும். இவர்கள் - பாகவதர்கள்.

[4] லீலை - விளையாட்டு. அதாவது, படைத்தல் காத்தல் அழித்தல். 'லீலையிலும்' என்ற உம்மை போகத்தைத் தழுவுகிறது. விநியோகம் கொள்ளுதல் - உபயோகித்தல்.

அண்மையில் இருந்தும் அர்ச்சாவதார [1] சமாதியாலே வாய் திறந்து ஒருவார்த்தை சொல்லத்தக்கவனுமல்லனாய் [2] இருக்கும் அவனைப்போல அன்றியே, [3] சொரூபத்திற்குத் தகுதியாகவே அடிமை கொள்ளுமவர்களாய்த் தம்மைப் பற்றுவதில் வேறு ஒரு புருஷகாரத்தையும் விரும்பாதவர்களாய் வாய் திறந்து விடத் தக்கனவற்றையும் பற்றத்தக்கதனையும் உபதேசித்து நோக்கிக் கொண்டு போருமவர்களாகையாலே ஈச்வரனைக்காட்டிலும் உயர்ந்தவர்கள் என்று நினைத்தல் என்றபடி. (146)

## 227

ஆசாரிய சாம்யத்துக்கு அடி [4] ஆசார்ய வசனம்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'ஆசாரியனுக்குச் சமமாக வேறு ஒருவரையும் நினைத்தல் தகாததாயிருக்க, 'ஆசாரியனை ஒத்தவர்கள்' என்று நினைத்தற்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஆசார்ய சாம்யத்திற்கு அடி ஆசார்யவசனம்' என்றது, ஆசாரியனை ஒத்தவர்கள் என்று நினைத்தற்கு மூலம் 'ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் நம்மைக் கண்டது போலே காணும்' என்று உபதேச சமயத்திலே ஆசாரியன் அருளிச் செய்த வார்த்தை என்றபடி. (147)

---

[1] சமாதியாவது, ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளின் மேல் ஏற்றிச் சொல்லுவது. இங்கே, பேசாமையாகிய அஃறிணைப் பொருளின் தன்மையை அர்ச்சாவதாரத்தில் ஏறிட்டிருத்தல் காண்க.

[2] இருக்குமவன் - ஈச்வரன்.

[3] ஈச்வரனுக்குக் கூறிய மூன்று குற்றங்களுக்கு எதிர்த்தட்டாக இவர்களுக்கு மூன்று குணங்களை அருளிச்செய்கிறார், 'சொரூபத்திற்கு' என்று தொடங்கி.

[4] அடி - காரணம். 'ஆசார்ய வசனம்' என்றது, "நான் எப்படிப் பூஜிக்கத் தக்கவனோ அப்படியே அவர்களும் பூஜிக்கத் தக்கவர்கள்" என்று கண்ணபிரான் கூறிய வார்த்தை. அன்றியே, ஆசாரியன் உபதேசிக்கும்போது, "ஸ்ரீ வைஷ்ணவர்களை எப்பொழுதும் உபாசிக்க வேண்டும்" என்று கூறுவதால் சித்திக்கிறதாகவுமாம்.

## 228

இப்படி [1] நினையாதொழிகையும் அபசாரம்.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி நினையாதபோது வரும் கேடு உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இப்படி நினையாதொழிகையும் அபசாரம்' என்றது, பிறப்பு முதலாயினவற்றைக்கொண்டு தாழ்வாக நினைத்தல் அபசாரம் ஆயினாற்போன்று, இப்படிப் பெருமையாக நினையாதொழிகையும் அபசாரம் ஆய் முடியும் என்றபடி. (148)

## 229

[2] இவ்வர்த்தம் இதிகாச புராணங்களிலும், 'பயிலும் சுடரொளி'யிலும், 'நெடுமாற்கடிமை' யிலும், 'கண்சோர வெங்குருதி'யிலும், 'நண்ணாதவாள் அவுணரி'லும், 'தேட்டருந்திறல் தேனி'லும், 'மேம்பொருளு'க்கு மேலில் பாட்டு களிலும் விசதமாகக் காணலாம்.

என்பது சூத்திரம்.

---

1 'நினையாதொழிகையும்' என்ற உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை.

'நினையாதொழிவது குற்றமாமாறு யாங்ஙனம்?' எனின், ஒருவன் செய்யத் தகுவனவாக நூல்களில் காமியகர்மங்களும் விதிக்கப்பட்டிருக் கின்றன; நித்திய கர்மங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. காமிய கர்மங்களைச் செய்தால் பலன் உண்டு; சிறப்பு உண்டு. செய்யாவிடின், குற்றமில்லை. நித்திய கர்மம் செய்தே தீரவேண்டும்; செய்யாதொழி வது குற்றமாம். நித்திய கர்மங்களை ஒருவன் செய்யாதொழிவது குற்றமாமாறு போன்று இதுவும்—இப்படி நினையாதொழிகையும்— குற்றமாம் என்க.

2 இவ்வர்த்தம் - மேலே கூறப்பட்ட பாகவதர்களுடைய பெருமை. 'பயிலும் சுடரொளி நெடுமாற் கடிமையிலும்' என்பது முன்னிருந்த பாடம். 'பயிலும் சுடரொளியிலும் நெடுமாற்கடிமையிலும்' என்றது, 'பயிலும் சுடர் ஒளி' என்ற திருப்பதிகத்திலும் 'நெடுமாற்கடிமை' என்ற திருப்பதிகத்திலும் என்றபடி. இவை இரண்டும் திருவாய்மொழி யில் உள்ளவை. 'கண்சோர வெங்குருதியிலும் நண்ணாத வாளவுணரி லும்' என்றது, 'கண்சோர வெங்குருதி' என்ற திருப்பதிகத்திலும்

**அவ** :—'இப்படி இந்தப் பாகவதர்களுடைய பெருமை ஆப்தர்களுடைய நூல்களில் தெளிவாகக் காணலாம் இடங்கள் உளவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'இவ்வர்த்தம்' என்றது, மேலே விரிவாகச் சொல்லப்பட்ட பாகவதர்களுடைய பெருமையைச் சுட்டுகிறது. '**இதிகாசத்தில்** விசதமாகக் காணலாம்' என்றது, [1] மகாபாரதத்திலே '**எந்த மனிதர்கள்** என்பக்தனை மற்றைய சூத்திரர்களுக்குச் **சமமாக நினைக்கின்றார்களோ**' அந்தக் கீழ்மக்கள் நரகங்களில் **பல கோடி வருஷங்கள் இருக்கிறார்கள்**', [2] 'பக்தன் சண்டாளனாயினும் ஞானமுள்ள ஒருவன் அவனை அவமதிக்கமாட்டான்; **அப்படி அவமதித்தானேயானால், அவன்** ரௌரவம் என்கிற **நரகத்தில்** விழுகிறான்' என்பன போன்றவைகளாலும், [3] '**பகவானிடத்தில்** பக்தியுள்ளவர்கள் சூத்திரர்கள் அல்லர்; **பிராமணர்களை** ஒத்தவர்கள் என்றும், பாகவதர்கள் என்றும் அவர்கள் நினைக்கத் தகுந்தவர்கள்; கண்ணனிடத்தில் பக்தியில்லாதவர்கள் எவர்களோ, அவர்களே எல்லா வர்ணங்களிலும் சூத்திரர்கள்', என்பது போன்றவைகளாலும், [4] 'என் அடியார்களிடத்தில் அன்பும், என்னை ஆராதனம்

'நண்ணாதவாளவுணர்' என்ற திருப்பதிகத்திலும் என்றபடி. இவை இரண்டும் பெரிய திருமொழியில் உள்ளவை. 'தேட்டருந்திறல் தேன்'— இது, பெருமாள் திருமொழியில் உள்ளதொரு திருப்பதிகம். 'மேம்பொருளுக்கு மேலிற்பாட்டுகளிலும்' என்றது, 'மேம்பொருள்' என்கிற பாட்டுக்குமேலே உள்ள ஆறு பாட்டுகளிலும் என்றபடி. இவை திருமாலை. விசதமாக - தெளிவாக.

[1] மத்பக்தம் ஶூத்ர ஸாமாந்யாதவமந்யந்தியே நராஃ
நரகேஷ்வ வதிஷ்டந்தி வர்ஷ கோடீர் நராதமாஃ

[2] சண்டாளமபி மத்பக்தம் நாவமந்யேத புத்திமாந்
அவமாநாத் பதத்யேவ ரௌரவே நரகே ஸஃ

[3] நஶூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா ஸ்ம்ருதாஃ
ஸர்வவர்ணேஷு தே ஶூத்ரா யேஹ்ய பக்தா ஜநார்த்தநே.

[4] மத்பக்தஜந வாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோதநம்
ஸ்வயமப்யர்சநஞ்சைவ மதர்த்தே டம்ப வர்ஜநம்
மத்கதா ஶ்ரவணேபக்திஃ ஸ்வரநேத்ராங்க விக்ரியா
மமாநுஸ்மரணம் நித்யம் யஶ்சமாம் நோப ஜீவதி
பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே

செய்வதில் மகிழ்ச்சியும், தானே ஆராதனம் செய்வதில் முயற்சியும், எனக்கான விஷயத்தில் ஆடம்பரமின்மையும், என் சரிதையைக்கேட்பதில் பக்தியும், அதனால் உண்டாகும் குரல் தழுதழுத்தலும் கண்ணீர் பெருகுதலும் மயிர்க்குசுச்செறிதலும் ஆகிற அங்கவிகாரங்களும், என்னை எப்பொழுதும் நினைப்பதும், என்னை விட்டு ஜீவியாத தன்மையையுடையனுகையுமாகிற எட்டு விதமான இந்தப் பக்தியானது எந்த மிலேச்சனிடம் இருக்கின்றதோ, அவன் பிராமணேத்தமன், முனிவன், செல்வம் உடையவன். அவன் சந்நியாசி. அவன் பண்டிதன். நான்கு வேதங்களையும் அறிந்தவனுக இருந்தும் பக்தியில்லாமல் என்னைப் பூஜிக்கிறவன், என்னால் விரும்பப்படுமவன் அல்லன். எவன் நாய் இறைச்சி தின்பவனுயினும் என் பக்தனுயிருப் பானுயின், அவன் எப்பொழுதும் என்னால் விரும்பத்தகுந்தவன் ஆவன். அவனுக்கு ஞானத்தைக் கொடுக்க வேண்டும்; அவனிடத்திலிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும்; என்னைப்போல அவனும் பூஜிக்கத்தக்கவன் ஆகிறன் ', என்பன போன்றவைகளாலும் பலவிடங்களிலும் பாகவதர்களுடைய பெருமை பேசப்பட்டிருக்கின்றது.

இதிகாச உத்தமத்திலே [1] ' எவன், பகவானுடைய பக்தனை, சூத்திரனை போதிலும் நாய் இறைச்சி தின்பவனைபோதிலும் அப்படியே வேடனுக விருந்தபோதிலும் தாழ்ந்த சாதியாக எவன் பார்க்கிறனே, அந்த மனிதன் நரகத்தை அடைகிறன்,' என்பது போன்றவைகளாலே பாகவதர்களுடைய பெருமை சொல்லப் பட்டது. இன்னமும் இதிகாசத்திலே பலவிடங்களிலும் பாகவதர்களுடைய பெருமை கூறப்பட்டிருக்கின்றது. அவை வந்தவிடங்களில் கண்டுகொள்வது.

---

ஸவிப்ரேந்த்ரः முநிः ஶ்ரீமாந் ஸயதிः ஸசபண்டிதः
நமேபூஜ்யஶ் சதுர்வேதீ பூஜயந் பக்திவர்ஜிதः
ஸமேபூஜ்யः ஸதாசாஸௌ மத்பக்தः ஶ்வபசோபியः
தஸ்மை தேயம் ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோயதா ஹ்யஹம்.
என்பன பாரதம்.

[1] ஶூத்ரம்வா பகவத் பக்தம் நிஷாதம் ஶ்வபசம் ததா
வீக்ஷதே ஜாதி ஸாமாந்யாத் ஸயாதி நரகம் நரः
என்பது இதிகாச உத்தமம்.

ஸ்ரீவராகபுராணத்திலே [1] 'என்னிடத்தில் பக்தியுள்ள, நாய் இறைச்சி தின்பவனையும் எந்த மனிதர்கள் நிந்தை செய்கிறார்களோ, பல கோடி தாமரைகளைக் கொண்டு ஆராதனஞ் செய்தாலும் அவர்களை நான் ஒரு பொழுதும் பொறுக்க மாட்டேன்!' என்றவிடத்திலே பாகவதர்களுடைய பெருமை பேசப்பட்டது.

ஸ்ரீ பாகவதத்திலே [2] 'ஏ அரசனே, விஷ்ணு பக்தியுடையவனான நாய் இறைச்சி தின்பவனும் பிராமணனைக்காட்டிலும் உயர்ந்தவன்; விஷ்ணு பக்தியில்லாத பிராமண சந்நியாசியும் நாய் இறைச்சி தின்பவனைக்காட்டிலும் தாழ்ந்தவன்; [3] 'பத்மநாபனுடைய திருவடித்தாமரைகளில் பக்தியில்லாத பன்னிரண்டு குணங்களையுடைய பிராமணனைக்காட்டிலும் நாய் இறைச்சி தின்பவன் உயர்ந்தவன் என்று எண்ணுகிறேன்; பகவானுடைய திருவடிகளிலே வைக்கப்பட்ட மனம் வாக்குக் காயம் பிராணன் என்னுமிவற்றை உடையவன் எல்லாவற்றையும் தூய்மை செய்கிறான்; மிக்க அகங்காரத்தையுடையவன் அப்படித் தூய்மை செய்யமாட்டான்,' என்பன போன்றவைகளாலே பாகவதர்களுடைய பெருமை பலவிடங்களிலும் பேசப்பட்டது.

இலிங்க புராணத்திலே, [4] "வைஷ்ணவர்களுக்கு ஒரு சிறப்பு உண்டு; 'அது என்?' என்னில் அவர்களுடைய திருமேனியானது பகவானுக்குப் பெரிய கோயிலாகும்; வித்துவான்களுடைய மனங்கள் அவன் சஞ்சரிப்பதற்குச் செல்வத்தையுடைய விமானங்

---

[1] மத்பக்தம் ஶ்வபசம் வாபி நிந்தாம் குர்வந்தியேநரா:
பத்மகோடி ஶதேநாபி ந க்ஷமாமி கதாசன
என்பது வராகபுராணம்.

[2] ஶ்வபசோபி மஹீபால விஷ்ணு பக்தோ த்விஜாதிக:
விஷ்ணு பத்தி விஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாதம:

[3] விப்ராத் த்விஷட்குணயுதா தரவிந்தநாப
பாதாரவிந்த விமுகாத் ஶ்வபசம் வரிஷ்டம்
மந்யே ததர்ப்பித மநோவசநேஹிதார்த்த
ப்ராண: புநாதி ஸகலம் நதுபூரிமாந:
என்பன ஸ்ரீபாகவதம்.

[4] வைஷ்ணவாநாம் விஶேஷோஸ்தி விஷ்ணோராயதநம் மஹத்
ஜங்கம ஶ்ரீவிமாநாநிஹ்ருதயாநி மநீஷிணாம்.

களாக இருக்கின்றன,'' [1]"நல்ல ஆசாரத்தையுடையவனும் குற்றமற்றவனும் நீசகுலத்தில் பிறந்தவனுமிருக்கிற ஒரு வைஷ்ணவனை எவன் பார்க்கிறானோ அவன் உடனே பூமியில் ஒரு தடியைப் போன்று விழுந்து சேவிக்க வேண்டும்'' என்பன போன்றவைகளாலே பாகவதர்களுடைய பெருமை சொல்லப் பட்டது.

இப்படிச் சொல்லப்பட்ட பாகவதர்கள் பெருமை பல புராணங்களிலும் உண்டு. ஆகையாலே அந்த அந்தவிடங்களிலே கண்டுகொள்வது. இதிகாசபுராணங்களில் எடுக்கப்பட்ட வசனங் களில் [2]பாகவதர்களைப் பிறப்பினைக்கொண்டு தாழ்வாக நினைத் தால் வரும் கேட்டின் விசேடமும், [3]பாகவதரானபோதே அவர்கள் தாழ்ந்த சாதியினர் அல்லர், [4]உயர்ந்த சாதியினரைப் போன்றவர்கள் என்னுமிடமும், உயர்ந்த சாதியினரைக்காட்டி லும் உயர்ந்தவர்களாய் அவர்களுக்கு ஞானத்தைக் கொடுப்ப வராம் தன்மையாலே குருக்களுமாய் உயர்ந்த சேஷியான ஈச்வரனைப் போன்று பூசிக்கத் தக்கவர்களுமாவர் என்னுமிடமும், [5]அவர்கள் திறத்தில் செய்யும் அபசாரத்தைக் காலம் என்னும் ஒருபொருள் உள்ள வரையிலும் ஈச்வரன் பொறான் என்னு மிடமும், [6]முக்கரணங்களையும் செல்வங்களையும் பிராணன் முதலானவைகளையும் வேற்றுமையறப் பகவானுக்குக் கொடுத்து அகங்காரம் இல்லாதவர்களாயிருக்குமவர்கள் தங்களுடைய

---

[1] யஃ பஸ்யதி ஶுபாசாரம் வைஷ்ணவம் வீதகல்மஷம்
யஸ்மிந் கஸ்மிந் குலேஜாதம் ப்ரணமேத் தண்டவத்புவி
என்பன இலிங்கபுராணம்.

[2] 'பாகவதர்களை' என்று தொடங்கும் வாக்கியம் 'மத்பக்தம்', 'சண்டாளமபி' என்ற இரண்டு சுலோகங்களின் கருத்து.

[3] 'பாகவதரான போதே' என்று தொடங்கும் வாக்கியம் 'நஶூத்ரா' என்ற சுலோகத்தின் கருத்து.

[4] 'உயர்ந்த சாதியினரை' என்று தொடங்கும் வாக்கியம் 'மத்பக்த ஜநவாத்ஸல்யம்' என்ற சுலோகத்தின் கருத்து.

[5] 'அவர்கள் திறத்தில்' என்று தொடங்கும் வாக்கியம் 'மத்பக்தம் ஶ்வபசம்வாபி' என்ற சுலோகத்தின் கருத்து.

[6] 'முக்கரணங்களையும்' என்று தொடங்கும் வாக்கியம் 'விப்ராத்' என்ற சுலோகத்தின் கருத்து.

பரிசுத்தராலே தூயராக்குமவர்கள் என்னுமிடமும், [1]அவர்களுடைய மனங்கள் சர்வேச்வரனுக்கு நடமாடும் விமானங்கள் என்னுமிடமும், அவர்களைக் கண்டால் தண்டத்தைப் போன்று கீழே விழுந்து வணக்கம் செய்யவேண்டும் என்னுமிடமும் சொல்லப்பட்டனவிறே. இங்ஙனம் இதிகாசபுராணங்களிலும்; 'பயிலும் சுடரொளியிலும் நெடுமாற்கடிமையிலும்' என்றது, [2]நம்மாழ்வார் "பாற்கடற் சேர்ந்த பரமனைப் பயிலும் திருவுடையார்—பயிலும் பிறப்பிடைதோறு எம்மையாளும் பரமரே" என்று தொடங்கி, பகவானுடைய குணங்கள் செயல்கள் முதலானவைகளிலே ஈடுபட்டவர்களான பாகவதர்களே நமக்குச் சேஷிகள் என்னுமிடத்தை அருளிச் செய்கிறவிடத்தில் 'எவரேலும் அவர் கண்டீர்' என்றும், 'கும்பிநரகர்கள் ஏத்துவரேலும் அவர் கண்டீர்' என்றும், 'எத்தனை நலந்தான் இலாத சண்டாள சண்டாளர்களாகிலும்' என்றும், 'பிறவி முதலானவைகளால் எத்தனையேனும் தண்ணியரேயாகிலும் சேஷத்துவத்திற்குத் தடையான பிறவி ஞானம் ஒழுக்கம் முதலானவற்றால் வரும் செருக்கு இல்லாதவர்கள் கிடீர் நமக்கு மிகவும் உத்தேசியர்' என்று அருளிச்செய்த 'பயிலும் சுடரொளி' என்ற திருவாய்மொழியிலும், [3]'கொடுமாவினையேன் அவன் அடியார் அடியே கூடுமிதுவல்லால்—வியன் மூவுலகு பெறினும்—விடுமாறு என்பது என் அந்தோ!' என்று தொடங்கி, பாகவதர்களே நாம் அடையத் தகுந்தவர்களுள் மிகமேலானவர்கள் என்னுமிடத்தைச் சொல்லுகிறவளவில் பிறவி ஒழுக்கம் முதலான வேறுபாடுகள் இல்லாமலே 'சயமே அடிமை தலைநின்றார்' என்றும், 'அவன் அடியார்' என்றும், 'மணிமலை போல் கிடந்தான் தமர்கள்' என்றும்,

[1] 'அவர்களுடைய மனங்கள்' என்றும் 'அவர்களை' என்றும் தொடங்கும் வாக்கியங்கள் 'வைஷ்ணவா நாம்', 'ய: பஶ்யதி' என்ற சுலோகங்களின் கருத்துகள். இந்தப் புராணத்தில் 'பாகவதர்களைக் கண்டால் தண்டத்தைப் போன்று கீழே விழுந்து வணக்கம் செய்யவேண்டும்' என்று கூறப்படுவதால், 'நமஶ்ரேஷ்ட்ரா: பகவத்பக்தா: விப்ரா: பாகவதா: ஸ்ம்ருதா:' என்பது போன்று கூறப்படுவனவெல்லாம் அர்த்தவாதம் என்று கூறுதல் பொருந்தாமை உணர்க.

[2] 'பயிலும் சுடரொளி' என்ற திருவாய்மொழியில் முதல் 9 திருப்பாசுரங்கள் அவன் குணங்களிலே நோக்கு. 10ஆம் திருப்பாசுரம் அவன் செயலிலே நோக்கு.

[3] 'நெடுமாற்கடிமை' என்ற திருவாய்மொழியில் பல திருப்பாசுரங்களில் இறைவனுடைய அழகே பேசப்பட்டிருத்தல் காண்க.

'கோதில் அடியார்' என்றும், 'நீக்கமில்லா அடியார்' என்றும் பகவானுடைய அழகு முதலாயினவற்றிலே தோற்றிருக்கும் தன்மையே அவர்களுக்கு [1]நிரூபகமாக அருளிச்செய்த 'நெடுமாற்கடிமை' என்ற திருவாய்மொழியிலும்;

'கண்சோர வெங்குருதியிலும் நண்ணாத வாளவுணரிலும்' என்றது, திருமங்கையாழ்வார்[2] 'தண்சேறை எம்பெருமான் தாள்தொழுவார் காண்மின் என் தலைமேலாரே' என்று தொடங்கி, அர்ச்சாவதாரத்தில் ஈடுபட்டுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களே நமக்குத் தலைமேலே இருக்கத்தக்கவர்கள், எப்பொழுதும் தியானிக்கத் தக்கவர்கள், நித்திய சூரிகளைக்காட்டிலும் கைங்கரிய நிறைவினை யுடையவர்கள். அவர்களை ஒரு கணநேரமும் பிரியகில்லேன், அவர்களுக்கு என் மனமானது தேனூறி எப்போதும் இனிதாகா நின்றது. அவர்களைக் கண்டவளவில் என்மனமும் கண்களும் களிக்கின்றபடி கண்டிகோளே; என் அன்பானது அவர்கள் அளவிலே ஆகாநின்றது; அவர்களை நெஞ்சால் நினைக்கவே கூற்றுவனுக்கும் பாவத்திற்கும் அஞ்சவேண்டா; என் உள்ளம் அவர்கள் திறத்தில் விழுகிறபடி கண்டிகோளே என்று இப்படி அருளிச் செய்கிறவிடத்தில் பிறவி முதலாயினவற்றின் பேச்சும் இல்லாமல் அருளிச்செய்த 'கண்சோர வெங்குருதி' என்ற திருமொழியிலும்; [3] 'கடல்மல்லைத் தலசயனம் ஆர் எண்ணும் நெஞ்சுடையார் அவர் எம்மை ஆள்வாரே' என்று பிறப்பு ஒழுக்கம் முதலாயினவற்றில் ஏதேனுமுடையராகவுமாம், திருக் கடல்மல்லைத் தலசயனத்தை நினைக்குமவர்கள் நின்ற நிலைகளிலே [4]பிரமாணம் காட்டாமலே நம்மைக் காரியம் கொள்ளவல்லார்

---

[1] நிரூபகம் - அடையாளம்.

[2] பெரிய திருமொழியில் உள்ள 'கண்சோர வெங்குருதி' என்ற திருப்பதிகத்தில் முதல் ஒன்பது திருப்பாசுரங்களில் பேசப்படும் பொருள் இங்கு அடைவே காட்டப்படுகின்றது.

[3] பெரிய திருமொழியில் உள்ள 'நண்ணாத வாளவுணர்' என்ற திருப்பதிகத்தில் பாகவதர்களுடைய பெருமை கூறப்பட்டிருந்ததலைச் சுருக்கமாகக் காட்டுகிறார் 'கடல்மல்லை' என்று தொடங்கி.

[4] பிரமாணம் - ஆவண ஓலை; அதாவது, அடிமை ஓலை. அடிமை ஓலை எழுவது அக்காலத்து வழக்கு. "ஒருவன் அடிமை கொள்ளும் போது கிருஹிணிக்கென்றன்றே ஆவண ஓலை எழுவது? ஆகிலும் பணி செய்வது கிருஹிணிக்கிறே" என்பது முமுக்ஷுப்படி, சூத். 44. பெரிய புராணத்தில் தடுத்தாட்கொண்ட புராணமும் இதனை வலியுறுத்தும்.

என்று தொடங்கி, 'ஞானத்தின் ஒளியுருவை நினைவார் என் நாயகர்' என்றும், 'அவர் எங்கள் குலதெய்வமே' என்றும் உகந்தருளின நிலத்திலே அன்புடையவர்களாயிருக்குமவர்களே நமக்குச் சேஷிகள் என்று அருளிச் செய்த 'நண்ணாத வாளவுணர்' என்ற திருமொழியிலும்;

[1]'தேட்டருந்திறல் தேனிலும்' என்றது, ஸ்ரீகுலசேகரப் பெருமாள், 'மெய்யடியார்கள்தம் ஈட்டம் கண்டிடக் கூடுமேல் அதுகாணும் கண் பயன் ஆவதே' என்றும், 'தொண்டரடிப் பொடி ஆட நாம் பெறில் கங்கைநீர் குடைந்து ஆடும் வேட்கை என் ஆவதே' என்றும் பாகவதர்கள் திறத்தில் தமக்கு உண்டாகும் அன்பின் மிகுதியைச் சொல்லுகிறவளவில் பிறவி முதலாயவற்றின் உயர்வு தாழ்வு என்கிற பேச்சும் இல்லாமலே, பகவானிடத்தில் பூண்ட பக்தியினாலே பரவசப்பட்டிருத்தலையே அவர்களுக்கு நிரூபகமாக அருளிச்செய்த 'தேட்டருந் திறல் தேனினை' என்ற திருமொழியிலும்;

[2]'மேம்பொருளுக்கு மேலில் பாட்டுகளிலும்' என்றது, ஸ்ரீ தொண்டரடிப்பொடி ஆழ்வார், துவய நிஷ்டர்பக்கல் ஈச்வரனுக்கு உண்டான உகப்பை அருளிச்செய்த "மேம்பொருள்" என்ற பாட்டுக்குமேல் [3]எத்தனையேனும் தண்ணிய பிறவிகளில்

[1] இது, பெருமாள் திருமொழி, 2ஆம் திருப்பதிகம்.

[2] தொண்டரடிப்பொடியாழ்வார் அந்தணர் குலத்தில் அவதரித்தவராதலால் அவருடைய அருளிச்செயல் இவ்விடத்திற்குத் தக்க பிரமாணமாம் என்று திருவுள்ளம் பற்றி, அவர் பிரபந்தப்பாசுரத்தை ஈற்றில் வைத்து அருளிச்செய்கிறார். 'அடிமையிற்குடிமை' என்பது முதலான ஆறு திருப்பாசுரங்களும் துவயத்தின் பொருளைக் கூறுவனவாம். இக்கருத்தினைத் தெரிவிப்பதற்காகவே 'அடிமையிற்குடிமை' என்பது முதலான ஆறு பாட்டுகளிலும் காணலாம்' என்னாது 'மேம்பொருளுக்கு மேலிற்பாட்டுகளிலும்' என்று அருளிச்செய்த தாடம் என்க. 'மேம்பொருள்' என்ற திருப்பாசுரம் துயவத்தின் பொருளைக் கூறுவது என்பதனை வியாக்கியானம்கொண்டு உணர்தல் தகும்.

[3] 'எத்தனையேனும்' என்று தொடங்கும் வாக்கியம் 'அடிமையிற் குடிமை' என்ற திருப்பாசுரத்தின் கருத்து. 'சொன்ன ஞானம்' என்றது, துவயார்த்தஞானம். 'திருத்துழாயினைப் போன்று' என்றது, அத்திருப்பாசுரத்தில் உள்ள 'முடியினில் துளபம் வைத்தாய்' என்ற தொடர்மொழியினைத் திருவுள்ளம் பற்றி.

பிறந்தார்களேயாகிலும் 'மேம்பொருள்' என்ற பாட்டிலே சொன்ன ஞானத்திலே நிஷ்டையையுடையராகில் திருத்துழா யினைப் போன்று ஈச்வரனுக்குத் தலையாலே தாங்கத் தக்கவர் என்றும், [1]பிறவியால் வந்த தண்மையேயன்றி எத்தனையேனும் தண்ணிய ஒழுக்கமுடையாரும் இந்த ஞானநிஷ்டராகில் அந்தத் தீய வினைகளாலாய பயனை அநுபவியார் என்றும், [2]தங்களுக்குப் பிறவி ஒழுக்கம் முதலாயவற்றால் வரும் குறை இல்லாமையே அன்று, தங்களோடு சேர்ந்த சம்சாரிகளும் தாங்கள் போனகம் செய்த சேடத்தாலே பரிசுத்தராம்படியான உயர்வினையுடையார் என்றும், [3]பிறப்பு ஒழுக்கம் முதலானவைகளால் குறைய நின்றே இந்த ஞானமுடையவர்கள் இந்த ஞானம் இல்லாதவர் களாய்ப் பிறப்பு ஒழுக்கம் முதலியவற்றால் உயர்ந்தவர்களுக்குச் சர்வேச்வரனைப் போன்று பூஜிக்கத் தக்கவர்களாய் ஞானத்தைக் கொடுத்தற்கும் கொள்வதற்கும் தக்கவராவர் என்றும், [4]பிறப்பு ஒழுக்கம் முதலானவற்றிற்கு மேலே ஞானத்தாலும் உயர்ந்தவ ரானவர்கள் பிறப்பு ஒழுக்கம் முதலான சிறப்புகள் இல்லாமல் இந்த ஞானமுடையரானவர்களைப் பகவானுடைய பிரபாவத் தாலே வந்த சிறப்பினைப் புத்தி பண்ணாமல், கர்மம் காரணமான பிறப்பு முதலானவற்றின் தாழ்வினையே புத்தி பண்ணித் தாழ நினைத்தார்களாகில் அந்தக் கணத்திலே அவர்கள் கர்ம சண்டாளர் ஆவர் என்றும், [5]இப்படி அருளிச்செய்த அர்த்த விசேடங்கள் கூடும் என்னுமிடம் பிரமனுக்கும் சிவனுக்கும்

---

1 'பிறவியால் வரும்' என்று தொடங்கும் வாக்கியம் 'திருமறு மார்வ' என்ற திருப்பாசுரத்தின் கருத்து. 'இந்த ஞானம்' என்றது, துவயார்த்தஞானம்.

2 'தங்களுக்கு' என்று தொடங்கும் வாக்கியம் 'வானுளார் அறியலாகா' என்ற திருப்பாசுரத்தின் கருத்து.

3 'பிறப்பு ஒழுக்கம்' என்று தொடங்கும் வாக்கியம் 'பழுதிலா வொழுகலாற்று' என்ற திருப்பாசுரத்தின் கருத்து. இந்த ஞானம் - துவயார்த்த ஞானம்.

4 'பிறப்பு ஒழுக்கம்' என்று தொடங்கும் இவ்வாக்கியம் 'அமர வோரங்கம்' என்ற திருப்பாசுரத்தின் கருத்து. இந்த ஞானம் - துவயார்த்த ஞானம்.

5 'இப்படி அருளிச்செய்த' என்று தொடங்கும் வாக்கியம் 'பெண்ணுலாம் சடையினானும்' என்ற திருப்பாசுரத்தின் கருத்து. விலங்கு சாதியிலே பிறந்தான் ஒருவன் - கஜேந்திர ஆழ்வான்.

அடைவதற்கு அரியதான பேற்றை விலங்கு சாதியிலே பிறந்தான் ஒருவன் பெற்ற பின்பு சொல்ல வேண்டுமோ என்றும் அருளிச்செய்த ஆறு பாட்டுகளிலும், 'விசதமாகக் காணலாம்' என்றது, ஐயம் திரிபு அறக் காணலாம் என்றபடி. (149)

## 280

[1]க்ஷத்திரியனான விச்வாமித்திரன் பிரம்மரிஷியானான்.

என்பது சூத்திரம்.

அவ:—'இப்படி இதிகாச புராணங்களிலே பாகவதர்களுடைய பெருமை சொல்லப்பட்டதேயாகிலும், [2]"பகவானுடைய பக்தர்கள் சூத்திரர் அல்லர்; பிராமணர்களாகவும் பாகவதர்களாகவும் நினைக்கத்தக்கவர்கள்' என்றும், [3]"அவன் பிராமணோத்தமன், முனிவன், ஸ்ரீமாந், அவனே சந்நியாசி, அவனே பண்டிதன்" என்றும் சொன்ன பிராமணத்தன்மை முதலானவைகள் [4]அர்த்தவாதமாமத்தனையல்லது, தாழ்ந்த பிறவியிலே பிறந்தவன் அச்சரீரத்திலேயே உயர்ந்தவனாகக் கூடுமோ?' என்ன, கூடும் என்னுமிடத்தை உதாரணமுகத்தாலே அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'க்ஷத்திரியனான விச்வாமித்திரன் பிரம்மரிஷியானான்' என்றது, அரசகுலத்தில் பிறந்தவனான விச்வாமித்திரன் அந்தச் சரீரத்திலேயே தான் செய்த மிகப்பெரிய தவத்தினடியாக, வசிஷ்டருடைய வாக்கியத்தாலே, அரசனும் தன்மையின் நாட்டாதபடி பிரம்மரிஷியாய்விட்டானிறே.

ஆகையால், மிகத் தாழ்ந்த குலத்தில் பிறந்தவரானாலும் அந்தச் சரீரத்தோடே, அளவிலாத ஆற்றலையுடைய பகவா

[1] விசுவாமித்திரனான அரசன் அப்பிறவியிலேயே அந்தணன் ஆனான் என்பது இச்சூத்திரத்தின் கருத்து.

[2] நசூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா ஸ்ம்ருதா:
என்பது, பிரமாணம்.

[3] "ஸவிப்ரேந்த்ர: முநி: ஸ்ரீமாந் ஸயதி: ஸசபண்டித:"
என்பது, பிரமாணம்.

[4] அர்த்தவாதம் - உலகத்தார்க்கு விருப்பமுண்டாவதற்காக இல்லாததனை ஏறிட்டுச் சொல்வது; புனைந்துரை.

னுடைய சம்பந்த ரூப [1]ஸம்ஸ்காரத்தாலே, மிக உயர்ந்த குலத்தில் பிறந்தவர்களாலே [2]அநுவர்த்திக்கத்தக்கவராம்படி உயர்ந்தவர்களுள் உயர்ந்தவராகக் குறை இல்லை என்கை. சிறிது சக்தி வாய்ந்த வசிஷ்டருடைய வாக்கியம் செய்தபடி கண்டால், அளவிலாத ஆற்றலையுடைய இறைவனுடைய [3]சம்பந்த விசேஷம் என் செய்யமாட்டாது? (150)

## 231

ஸ்ரீவிபீஷணனை இராவணன் [4]'குலபாம்ஸநம்' என்றான்; பெருமாள் இக்ஷ்வாகு வம்சியராக நினைத்து வார்த்தை அருளிச்செய்தார்.

என்பது சூத்திரம்.

அவ:—இதிகாசம் முதலான பிரமாணங்களின் முகத்தாலே பாகவதர்களுடைய பெருமையை அருளிச்செய்தார் மேல்; [5]சிஷ்டர்களுடைய ஆசாரங்களின் மூலமாகவும் பாகவதர்களுடைய பெருமையை அருளிச்செய்கிறார் இனி. [6]'ஞானிகளுடைய ஒழுக்கம் பிரமாணமாகும்; அதனை அடுத்து வேதமும் பிரமாணமாகும்' என்கிறபடியே நம்பத்தகுந்த பிரமாணமான வேதத்திற்கு முன்னே எடுக்கும்படியிறே சிஷ்டர்களுடைய ஆசாரம் பிரமாணமாகவிருப்பது. அதில், முதலில் தாழ்ந்த சாதியாகக் கருதப்படுமவர்கள் அந்தச் சரீரத்தோடே தம் சாதியினர்க்கு வேறுபட்டவர்களாய் உயர்ந்தவர்களுக்குள்ளே உயர்ந்தவர் ஆவர் என்று மேலே கூறிய அர்த்தத்தை நிலை நிறுத்துவதற்காக, இராவணன் தம்பி விபீஷணனைக் குறித்துப்

---

1 ஸம்ஸ்காரம் - வேறு ஒரு காரியத்திற்குத் தகுதியுள்ளவனும்படி செய்யும் செயல்.

2 அநுவர்த்தித்தல் - சார்ந்து ஒழுகுதல்.

3 சம்பந்தம் - சேஷத்துவ ரூப சம்பந்தஞானம்.

4 குலபாம்சநம் - குலத்திற்கு அழுக்கு; அதாவது, 'குலத்தின் பெருமையைக் கெடுப்பவன்' என்றபடி. பெருமான் - ஸ்ரீ ராமபிரான். வார்த்தையை வியாக்கியானத்தில் காண்க.

5 சிஷ்டர்கள் - அங்க உபாங்கங்களோடு கூடின வேதங்களைத் தருமம் என்ற புத்தியோடு கற்கின்றவர்கள் பெரியோர்கள் என்றபடி.

6 "தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச"
என்பது ஆபஸ்தம்ப சூத்திரம்.

பெருமாள் அருளிச்செய்த வார்த்தையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** 'ஸ்ரீவிபீஷணனை இராவணன் 'குலபாம்சநம்' என்றான்; பெருமாள் இக்ஷ்வாகுவம்சியராக வார்த்தை அருளிச் செய்தார்' என்றது, [1] "சீதாபிராட்டியைப் பெருமாளுக்குக் கொடுத்துவிடக்கடவாய்" என்று தனக்கு நலத்தைக் கூறிய தர்மாத்மாவான ஸ்ரீவிபீஷணாழ்வானை மஹாபாபியான இராவணன் கோபங்கொண்டவனாய் [2] "இராக்கதர் குலத்திற்கு மாசு விளைத்த உன்னை விடுகிறேன்" என்று இக்குலத்திற்கு அழுக்காகப் பிறந்த உன்னை வேண்டேன் என்று வைது தள்ளிவிட்டான்; இக்ஷ்வாகுகுல நாதரான பெருமாள் இவனை அன்பு முன்னாக அங்கீகரித்த பின்பு [3] "இராக்கதர்களுடைய பலாபலங்களை உண்மையாக எனக்குச் சொல்லவேண்டும்" என்கையாலே இவனை [4] "இராக்கதர் குலத்தைச் சேர்ந்தவனாக நினையாமல் [5] திருத்தம்பிமாரைப் போன்று விரும்பி வார்த்தை அருளிச் செய்தார் என்றபடி.

---

1 "ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ"
என்பது, ஸ்ரீ ராமா. யுத். 14:4.

2 "த்வாம்து திக் குலபாம்ஸநம்"
என்பது, ஸ்ரீ ராமா, யுத். 16:15.

3 "ஆக்கியாஹி மம தத்த் வேந ராக்ஷஸாநாம் பலாபலம்"
என்பது, ஸ்ரீ ராமா. யுத். 19:7.

"ஆர்கலி இலங்கையின் அரணும் அவ்வழி
வார்கெழு கனைகழல் அரக்கன் வன்மையும்
தார்கெழு தானையின் அளவும் தன்மையும்
நீர்கெழு தன்மையாய் நிகழ்த்து வாய்என்றான்"
என்பது கம்பராமாயணம்.

4 'உங்களுடைய பலம்' என்றாவது 'இராவணனுடைய பலம்' என்றாவது கூறாமல், இராக்கதர்களுடைய பலாபலத்தைச் சொல்லு என்று கூறியதனால் இராக்கதர்களைக்காட்டிலும் வேறுபட்டவன் என்ற பொருள் போதருவதால் 'இராக்கதர் குலத்தைச் சேர்ந்தவனாக நினையாமல்' என்கிறார்.

5 ஸ்ரீ ராமாயணத்திலே யுத்தகாண்டத்திலே 'மரணாந்தாநி வைராணி' என்ற சுலோகத்திலே "மமாபி ஏஷ: யதாதவ - உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும்" என்று பெருமாள் இராவணனைத் தனக்குச் சகோதரனாகக் கூறுவதனால், ஸ்ரீ விபீஷணாழ்வானைத் தனக்குச் சகோதரனாகக் கொண்டமை விளங்குகின்றது. அதனைத்

இந்தச் சுலோகத்தில் இராவணனால் தள்ளப்பட்டமையும் பெருமாளால் அங்கீகரிக்கப்பட்டமையும் சொல்லுகையாலே, பகவானிடத்தில் பக்தியுண்டாகவே, சரீரசம்பந்தமுள்ளவர்கள் 'இவன் நமக்கு உடல் அல்லன்' என்று கைவிடுவர்கள் என்னுமிடமும், பகவான் விரும்பி மேல் விழுந்து அங்கீகரிப்பான் என்னுமிடமும் சொல்லப்பட்டன. (151)

## 232

[1] பெரியவுடையார்க்குப் பெருமாள் பிரம்ம மேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினர்.

என்பது சூத்திரம்.

---

திருவுள்ளம் பற்றித் 'திருத்தம்பிமாரைப் போன்று விரும்பி' என்கிறார்.

"இருடிகள் குடியிருப்பை அழித்தான், மைதிலியைப் பிரித்தான்; நம்முயிர் நிலையிலே நலிந்தாற்போலே ஸ்ரீ ஜடாயு மகாராஜரை நலிந்தான். இவையெல்லாம் செய்யமாட்டானே இவன். இனி; இவன் ஜீவிக்கிற நாளில் 'நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிவதுகாண்' என்றிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம்; நாம் தேடியிருந்தது முந்துற முன்னம் சித்திக்கப்பெற்றோம்; இவன் நாம் செய்யும் நன்மை விலக்காதானவளவு பிறந்த இன்றும் இழக்கவேண்டுமோ? வேண்டுவன செய்யப் பாரும்; நீர் இருய்த்திருந்தீராகில் 'குடல் தொடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனையன்றோ, நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய நீர் கடக்க நில்லும்" என்பது ஈட்டு வாக்கியம். திருவாய் - கேசவன் தமர் - முன்னுரை. மேலே காட்டிய ஸ்ரீ சூக்தியில் 'குடல் தொடக்குடையாரிலே ஒருவன்' என்ற ஸ்ரீசூக்தி குறிக்கொள்ளத்தகும்.

'குகனொடும் ஐவ ரானேம் முன்பு ;பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவ ரானேம் : எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய, நின்னொடும் எழுவ ரானேம்;
புகலருங் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை'

என்று ஸ்ரீ ராமபிரான் கூற்றிலும்,

'நடுவினிப் பகர்வ தென்னோ? நாயக, நாயி னேனை
உடன்உதித் தவர்க ளோடும் ஒருவன்என் றுரையா நின்றாய்;
அடிமையின் சிறந்தேன் என்னு அயிர்ப்பொடும் அச்சம் நீங்கித்
தொடுகழல் செம்பொன் மோலி சென்னியில் சூட்டிக்கொண்டான்'

என்று ஸ்ரீ விபீஷணாழ்வான் கூற்றிலும் வைத்துக் கம்பநாட்டாழ்வார் ஓதுதலும் காண்க. (கம். யுத். விபீஷணடைக்கலப்பட, 143 : 144.)

[1] பெரியவுடையார் - சடாயு. இவரைப் பெரியவுடையார் என்று வழங்குதல் வைணவ மரபு. பெருமாள் - ஸ்ரீராமபிரான். பிரம்மமேத

அவ :—[1] இப்படி வார்த்தை மாத்திரத்தால் அன்றிக்கே பாகவதர்களுடைய பெருமையைத் தம்முடைய செயலாலும் பெருமாள் வெளியிட்டபடியை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் —பெருமாள் [2] 'உலகத்தில் நான்கு வருணங்களுக்கும் உள்ள மரியாதைகளைச் செய்கிறவரும் செய்விக்கிறவரும் அந்த இராமபிரானேயாவர்' என்கிறபடியே உலகத்தில் ஒழுக்கங்களை நிலை நிறுத்தும்பொருட்டு வந்து அவரிதத்துத் 'தந்தை சொல்லைக் காப்பாற்றுதல்' முதலான சாமாந்ய தர்மங்களை நிலை நிறுத்தும் தன்மையராய் இருப்பார் ஒருவரிறே பெருமாள்; இத்தகையராய அவர், பெரியவுடையார்க்குப் பிரம்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார்—பிராட்டி பிரிவு கண்டு பொறுக்கமாட்டாமலே தம்மை அழிய மாறின பெரியவுடையார்க்கு, பிறப்பு ஒழுக்கம் முதலாயினவற்ருல் உயர்ந்தவர்களுக்கு அவர்களுடைய புத்திரர்கள் அல்லது சிஷ்யர்கள் செய்யும் பிரம்ம மேத ஸம்ஸ்காரத்தைப் பெரியவுடையாருடைய மிக்க பேரன்பினையே காரணமாகக் கொண்டு திருத்தம்பியாரும் கூட நிற்கச் செய்தே, தாமே அன்போடு பண்ணியருளினரிறே.

இதனால் பிறப்பு முதலாயினவற்ருல் உயர்ந்தவர்கள், அவற்ருல் குறைந்திருக்கும் [3] விலக்ஷண பாகவதர் திறத்தில் புத்திரன் செய்யும் செயல்களைச் செய்யலாம் என்னுமிடம் காட்டப்பட்டது. (152)

ஸம்ஸ்காரம் - ஸம்ஸ்காரங்களுள் உத்தமமான ஸம்ஸ்காரம் இது. பிரம்மத்தை அறிந்த பிராமணர்களுக்கு இந்த விதி சொல்லப்பட்டிருக்கிறது. இறந்த பின்னர் அந்தச் சரீரத்தை வேத மந்திரங்களைச் சொல்லித் தகனம் செய்தல். ஸம்ஸ்காரம் என்பது, ஒரு காரியத்திற்குத் தகுதியுள்ளதாம்படி செய்யும் செயல்.

[1] 'வார்த்தை மாத்திரத்தால்' என்றது, ஸ்ரீவிபீஷணாழ்வானை உடன் பிறந்தவர்களுள் ஒருவராக நினைத்துச் சொன்ன வார்த்தை.

[2] "மர்யாதாநாம்ச லோகஸ்ய கர்தா காரயிதாச ஸ:" என்பது, ஸ்ரீராமா. சுந். 35: 11.

[3] விலக்ஷண பாகவதர் - பாரதந்திரியசேஷத்துவ ஞானத்தை யுடைய பாகவதர்.

## 233

[1] தரும புத்திரர் அசரீரி வாக்கியத்தையும் ஞாதிக்கியத்தையும் கொண்டு ஸ்ரீவிதுரரைப் பிரம்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்.

என்பது சூத்திரம்.

அவ :—இவ்வர்த்தத்தைத் தரும புத்திரருடைய ஒழுக்கத்தாலும் தெளிவிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—தரும புத்திரர், பெருமாள் பிறர்பொருட்டுச் சாமானிய தருமத்தை மேற்கொண்டு போந்தாரேயாகிலும் விசேட தருமத்திலே திருவுள்ளம் படிந்திருக்கையாலே [2] அவர்க்கு அது செய்யலாம்; இவர் செய்ததிறே அரியது; தம்முடைய சாதிக்குரிய தர்மத்தையே உத்தேசியமாக நினைத்து எல்லா நிலைகளிலும் அத்தருமத்திற்கு ஒரு நழுவுதல் வாராதபடி குறிக்கொண்டு நடத்திக்கொண்டு போருமவரிறே இவர்; இப்படியிருக்கிற இந்தத் தரும புத்திரர், [3] 'அசரீரி வாக்கியத்தையும்' என்றது, ஸ்ரீ விதுரரைச் சம்ஸ்கரிக்கிற நிலையில் அவருடைய சாதியைப் பார்ப்பது, ஞானத்தின் மிகுதியைப் பார்ப்பதாய் என் செய்யக் கடவோம் என்று வியாகுலப்படாநிற்கச்செய்தே, [4] "தரும புத்திரர் அந்த விடத்தில் இந்த விதுரரை ஞானவான் என்று அறிந்து சம்ஸ்கரிக்கவேண்டும் என்று விரும்பினவராயும் அப்படியே அவருடைய சாதியைப் பார்த்துத் தகனம் செய்ய வேண்டும் என்னும் இச்சையையுடையவராயும் ஆனார்; பின்பு ஆகாசத்தில் ஒரு வார்த்தை சொல்லிற்று; ஓ அரசனே, விதுரர்

---

[1] தரும புத்திரர் - பஞ்ச பாண்டவர்களுள் ஒருவர். அசரீரி - சரீரம் இல்லாதது. அசரீரி வாக்கியம் - ஆகாயத்தினின்றும் உண்டான வாக்கியம். இதனை வியாக்கியானத்திற்காண்க. விதுரர் - வியாச முனிவருக்கு வேலைக்காரியிடம் பிறந்தவர்; தருமபுத்திரருக்குச் சிறிய தந்தையார்; திருதராட்டிரனுக்குத் தம்பியார்.

[2] அவர் - பெருமாள்; ஸ்ரீராமபிரான். இவர் - தருமபுத்திரர்.

[3] 'தர்மராஜஸ்து தத்ரைநம் ஸஞ்சஸ்காரயிஷுஸ்ததா தக்து காமோபவத் வித்வாநதாகாஶே வசோப்ரவீத் போபோராஜந் நதக்தவ்ய மேதத்விதுர ஸம்ஜ்ஞகம் களேபரமிஹைதத்தே நைஷதர்ம: ஸநாதந: லோக வைலக்ஷண்ணோநாமப விஷ்யத் யஸ்யபார்த்திவ யதி தர்மமவாப்தோஸௌ நஶோச பரதர்ஷர்ப' என்பது பாரதம்.

என்ற பெயருள்ள இந்தச் சரீரமானது மந்திரம் இல்லாமல் கொளுத்தத் தக்கதன்று ; இந்த விஷயத்தில் விதுரருக்கு மந்திரம் முன்னாகச் சம்ஸ்காரம் செய்கிற இந்த அநாதியான தருமமானது உமக்குச் சாஸ்திரத்திற்கு முரணாகாது ; ஓ அரசனே, இந்த விதுரர் சந்நியாசியின் தருமத்தை அடைந்தவர் ; ஓ அரசனே, சந்தேகத்தால் உண்டான சோகத்தை அடையாதே'' என்று, இவர் பிரம்ம மேத ஸம்ஸ்காரத்திற்குத் தக்கவர் என்ற அசரீரி வாக்கியத்தாலும் என்றபடி. 'ஞானாதிக்கியத்தையும் கொண்டு, என்றது, எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட இவருடைய தெளிந்த மிக்க ஞானத்தாலும் ஐயம் அற்று என்றபடி. 'ஸ்ரீவிது ரரை பிரம்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்' என்றது, வேத நெறி யில் நிலை நின்ற முதல்வர்க்குச் செய்யக்கூடிய பிரம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தாரிறே என்றபடி. (153)

## 284

ருஷிகள், [1] தர்மவியாதன் வாசலிலே துவண்டு, தரும சந்தேகங்களைச் சமிப்பித்துக்கொண்டார்கள்.

என்பது சூத்திரம்.

அவ :—பின்பு, பிறப்பு முதலாயினவற்றால் உயர்வு பெற்றவர் களான இருடிகள், அவற்றால் தாழ்ந்தவன் பக்கலிலே தருமங் களைக் கேட்டபடியை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ருஷிகள்—நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்தவர்களாய் எல்லாரைக்காட்டிலும் உயர்ந்தவர்களாயிறே இருடிகள் இருப்பது ; இத்தகைய இருடிகள், 'தர்மவியாதன் வாசலிலே துவண்டு தருமசந்தேகங்களைச் சமிப்பித்துக் கொண்டார்கள்' என்றது, வேதங்களைக் கேட்பதற்குத் தகுதி யில்லாத குலத்திலே [2] பிறந்தவனாய், முற்பிறவியின் நினை வோடே பிறந்தவனாகையாலே முற்பிறவியில் உண்டான ஞானத் தில் நழுவுதல் இல்லாமையாலும் தாய் தந்தையர்களுக்குச் செய்யும் தொண்டின் விசேடத்தாலும் எல்லாத் தர்மங்களின்

[1] தர்மவியாதன் - தாழ்ந்த குலத்தில் பிறந்தான் ஒரு பெரியோன். வியாதன் என்பது இவன் இயற்பெயர். சமிப்பித்துக்கொண்டார்கள் - நீக்கிக்கொண்டார்கள்.

[2] 'பிறந்தவனாய்' என்னுமிதனைப் பின்னே வருகின்ற 'அறிந்த வனாய்' என்றதனோடு கூட்டுக.

நுணுக்கங்களை அறிந்தவனாயிருக்கும் தர்மவியாதன் வாசலிலே சென்று, [1] தாய் தந்தையர்களுக்குச் செய்யும் தொண்டினையே தனக்குத் தருமமாகக் கொண்டிருக்குமவனுடைய சமயம் பார்த்துத் துவண்டு, அறியத்தக்கனவான தருமங்களில் தங்களுக்கு ஐயப்பாடு உள்ளனவற்றையெல்லாம் அவன் பக்கலிலே கேட்டு அவற்றின் ஐயங்களைப் போக்கிக் கொண்டார்கள் என்றபடி.

[2] "வேதத்தைக் கற்றவனும் தவத்தைச் செல்வமாகவுடையவனும் சத்துவ குணத்தையுடையவனும் தர்மத்தையே சீலமாகவுடையவனும் பிராமணர்களுள் உயர்ந்தவனுமான கௌசிகன் என்ற பெயரையுடைய ஒருவன் இருந்தான்; பிராமணர்களுள் உயர்ந்தவனும் அங்கங்களோடும் உபாங்கங்களோடும் கூடின வேதங்களை அத்யயனம் செய்தவனுமான அந்தக் கௌசிகன் ஒரு நாள் ஒரு மரத்தின் அடியில் வேதங்களை உச்சரித்துக்கொண்டு தங்கியிருந்தான்; மரத்தின்மேலே ஒரு கொக்கானது தங்கியிருந்தது, அந்தக் கொக்கினால் அப்போது பிராமணனுடைய மார்பில் எச்சம் விடப்பட்டது" என்று தொடங்கிக் கௌசிகன் என்ற பெயரையுடையனாய் அங்கங்களோடு வேத வேதாந்தங்களை அத்யயனம் செய்திருப்பான் ஒரு பிராமணன் ஒரு மரத்தின் அடியிலே வேதங்களையும் உச்சரித்துக்கொண்டு நிற்கச் செய்தே, அம்மரத்தின்மேலே இருந்தது ஒரு கொக்கு எச்சம் இட்டது, அது தன் மார்பில் வந்து பட்டவாறே, சீற்றமுடையவனாய்ப் பார்த்த பார்வையிலே அதுபட்டு வீழ, அதனைக்கண்டு வருந்திய மனத்தையுடையனாய் மிகச் சோகித்து, ஆசையாலும் வெறுப்பாலும் உந்தப்பட்டவனாய்க்கொண்டு 'தீச்செயலைச் செய்து விட்டோமே!' என்று பன்முறையும் தன்னுள் சொல்லிக்கொண்டு அண்மையில் இருப்பதொரு கிராமத்திலே பிச்சையின் பொருட்டுச் சென்று முதலில் ஒரு வீட்டை அடைந்து

---

1 'துவண்டு' என்றதற்குக் காரணம் அருளிச்செய்கிறார் 'தாய் தந்தையர்களுக்கு' என்று தொடங்கி.

2 'கஶ்சித் த்விஜாதி ப்ரவரோ வேதாத்யாயீ தபோதந:
தபஸ்வீ தர்மஶீலஶ்ச கௌஶிகோ நாம பாரத.
ஸாங்கோபநிஷதாந் வேதாநதீதே த்விஜஸத்தம:
ஸவ்ருக்ஷமூலே கஸ்மிம்ஶ்சித் வேதாநுச்சாரயந் ஸ்தித:'

'உபரிஷ்டாச்ச வ்ருக்ஷஸ்ய வலாகாஸவ்யலீயத தயாபுரீஷ முத்ஸ்ருஷ்டம் ப்ராஹ்மணஸ்ய ததோ'ரஸி.' என்பன, பாரதம்.

[1] 'பிக்ஷாம் தேஹி' என்று இரந்தவளவிலே, அந்த வீட்டிற்குரிய பெண்மறையவள் 'நில்லும், வருகிறேன்' என்று சொல்லிக் கைகழுவுதல் முதலாயினவற்றைச் செய்துகொண்டு பிக்ஷை கொண்டு வருவதாக முயற்சி செய்யுமளவில், கணவனானவன் மிக்க பசியினால் வருந்தினவனாய் வந்து புகுர, அவள் அன்புடையவள் ஆகையாலே பிக்ஷை கொண்டு வருவதை விட்டு, கணவனுக்குக் கால் கழுவுதல் கைகழுவுதல் ஆசனமிடுதல் முதலான தொண்டுகளைச் செய்வதிலே நோக்குள்ளவளாய், பிராமணன் நிற்பதை மறந்து, நெடும்போது நின்று, பின்னை அவன் நிற்கிறதைக்கண்டு நடுங்கிப் பிக்ஷையைக் கொண்டுவந்த வளவிலே, 'என்னை நிற்கச்சொல்லி இத்தனை போது நீ புறப்படாதிருப்பான் என்?' என்று அவன் சீற்றம் கொண்டவாறே, அவள் அவனைச் சமாதானம் செய்து இதனைப் பொறுக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டு, நான் 'கணவனே தெய்வம்' என்று இருப்பாள் ஒருத்தி, அவன் இளைத்து வருகையாலே அவனுக்கு வேண்டியவற்றைச் செய்து வந்தேனித்தனை' என்ன, 'உனக்குக் கணவனே அன்றோ உபசரிக்க வேண்டுவது? பிராமணர்களிடத்தில் கௌரவமான எண்ணம் இல்லையே!' என்று குறிப்பாகச் சொல்லி, 'இல்லற தர்மத்திலே ஒழுகுகிற நீ பிராமணரை இங்ஙனம் தாழ்வு பண்ண லாகாதுகாண்' என்ன,

'நான் ஒருகாலும் பிராமணரைத் தாழ்வு செய்யேன். பிராமணருடைய பெருமையெல்லாம் நன்கு அறிவன்' என்று விரிவாகச் சொல்லிக் காட்டி, 'இக்குற்றத்தைப் பொறுக்க வேண்டும்; கணவனே தெய்வம் என்றிருக்கையாலே அவனுக்குச் செய்யும் உபசாரத்திலே பரவசப்பட்டு நின்றேனித்தனை; என்னுடைய கற்பின் பெருமையாலாய ஆற்றலைப் பாரீர்; உம்முடைய கோபத்தாலே அந்தக் கொக்கு யாதொருபடி சாம்பலாயிற்று அதுவும் என்னால் அறியப்பட்டதுகாண்' என்று சொல்லி, [2] "ஏ பிராமணரே, மனிதர்களுக்குக் கோபமும் மோகமும் ஆகிற பகைகள் சரீரத்திலேயே இருக்கின்றன; எவன் கோபத்தையும் மோகத்தையும் விடுகிறானோ அவனைத் தேவர்கள்

[1] பிக்ஷாம் தேஹி - பிச்சை இடு.

[2] க்ரோத: ஶத்ரு: ஶரீரஸ்தோமநுஷ்யாணாம் த்விஜோத்தம
ய: க்ரோத மோஹௌ த்யஜதி தம்தேவா ப்ராஹ்மணம் விது:
என்பது, பாரதம்.

பிராமணனாக அறிகிறார்கள் ” என்று தொடங்கி, காமம் குரோதம் முதலானவைகள் பிராமணனுக்கு ஆகா; உண்மை நேர்மை முதலானவைகள் உண்டாகவேண்டும் என்று விரிவாகத்தான் சொல்லி, [1] “ ஏ பிராமணரே, தருமத்தை அறிந்தவராயும் வேதத்தில் விருப்பமுடையவராயும் ஆசாரமுடையவராயும் இருந்தாலும் கூடத் தருமங்களை உண்மையாக அறியாதவர் நீர் என்பது என்னுடைய நினைவு ”, [2] “ தாய்தந்தையர்களுக்குத் தொண்டு செய்கிறவனும் உண்மையைப் பேசுகிறவனும் ஐம்பொறிகளையும் அடக்கியவனும் மிதிலா நகரத்தில் வாசம் செய்கிறவனுமான அந்த வியாதன் உனக்குத் தருமங்களைச் சொல்லுவான் ”, [3] “ பிராமணரே, அவ்விடத்திற்குச் செல்லும்; உமக்கு மங்களம் உண்டாகுக; தருமாத்மாவான அந்த வியாதன் நீர் விரும்பியவாறெல்லாம் ஐயங்களைப் போக்கக்கடவன் ” என்கிறபடியே நீரும் தருமத்தையறிந்தவர், வேத அத்யயனம் செய்தவர், தூயராயிருக்கச் செய்தேயும் தருமங்களை உள்ளபடி அறியீர் என்பது எனக்கு நினைவு; தாய் தந்தையர்களுக்குத் தொண்டு செய்கிறவனாய்க்கொண்டு மிதிலை நகரத்திலே இருக்கிற வியாதன் தருமங்களை உமக்குச் சொல்லக்கடவன்; அங்கே செல்லும்; உமக்கு நன்மை உண்டாகுக; மேலான தர்மாத்மாவாயிருக்கிற அந்த வியாதன் வேண்டினபடி உம்முடைய ஐயங்களையெல்லாம் போக்கக்கடவன் என்ன,

அவன் மிக்க அன்புடையனாய் இவளை மிக அதிகமாகத் துதித்து, அங்குநின்றும் மிதிலை நகரம் சென்று, [4] “ சிறந்த ஞானத்தையுடைய தரும வியாதனே, பெரியோர்களுடைய அநுஷ்டானங்களில் தூயனவாயும் எப்பொழுதும் உள்ளனவாயும் உள்ள ஐந்து பொருள்களை உள்ளபடியாக நன்றாக எனக்குச் சொல் ” என்கிறபடியே சிஷ்டாசாரங்களில் எப்போதும்

[1] பவாநபிச தர்மஜ்ஞ: ஸ்வாத்யாய நிரத: ஶுசி:
நது தத்வேந பகவந் தர்மாந் வேத்ஸீதி மேமதி:
என்பது, பாரதம்.

[2] மாதா பித்ருப்யாம் ஶுஶ்ரூஷு: ஸத்யவாதீ ஜிதேந்த்ரிய:
மிதிலாயாம் வஸந் வ்யாத: ஸதேதர்மாந் ப்ரவக்ஷ்யதி.

[3] தத்ர கச்சஸ்வ பத்ரந்தே யதா காமம் த்விஜோத்தம
வ்யாத: பரம தர்மாத்மா ஸதேசேத்ஸ்யதி ஸம்ஶயாந்.

[4] பஞ்சகாநி பவித்ராணி ஶிஷ்டாசாரேஷு நித்யதா
ஏதந் மஹாமதே வ்யாத ப்ரப்ரவீஹி யதாததம்.

உளவாயிருக்கிற தூய ஐந்து பொருள்கள் யாவை? சிறந்த அறிவுடையவனே, அவற்றைச் சொல்லவேண்டும்" என்ன,

[1] "பிராமணர்களுள் சிறந்தவனே, வேள்வியும் தானமும் வேதங்களும் தவமும் சத்தியமும் ஆகிய இவை ஐந்தும் எப்போதும் சிஷ்டாசாரங்களிலே தூயனவாகவிருக்கும்" என்கிறபடியே, வேள்வியும் தானமும் தவமும் வேதமும் சத்தியமுமாகிற தூயனவான இவை ஐந்தும் சிஷ்டாசாரங்களிலே எப்போதும் உளவாயிருக்கும் என்று இது போன்றவைகளாலே அவன் உபதேசிக்க, மேன்மேலும் தனக்கு ஐயங்களானவற்றையெல்லாம் இவன் கேட்கக் கேட்க உபதேச முகத்தாலே தரும சந்தேகங்கள் எல்லாவற்றையும் தரும வியாதன் அறுத்த வகையைத் தரும புத்திரர்க்கு மார்க்கண்டேயன் அருள் செய்ததாக ஆரண்ய பர்வத்திலே இருநூறும் அத்தியாயம் தொடங்கிப் பதின்மூன்று அத்தியாயங்களாலே பரக்கச் சொல்லப்பட்டதிறே.

மேலும், இப்படிப் பலரும் இவன் வாசலிலே துவண்டு தரும சந்தேகங்களை நீக்கிக்கொண்டமை பல விடங்களிலும் உண்டு.

இதனால், பிறப்பு முதலாயினவற்றால் [2] உயர்ந்தவர்களுக்கு, பிறப்பு முதலாயினவற்றால் தாழ்ந்தவர்கள் ஞானத்தால் மேம்பட்டவர்களாயிருக்கில், அவர்கள் வாசலிலே துவண்டு அறிய வேண்டும் அர்த்த விசேடங்களைக் கேட்கக் குறை இல்லை என்பது காட்டப்பட்டது. (154)

## 235

கிருஷ்ணன், [3] பீஷ்மதுரோணாதிகள் கிருகங்களை விட்டு, ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே அமுது செய்தான்.

என்பது சூத்திரம்.

---

[1] யஜ்ஞோ தாநம்தபோ வேதாஸ் ஸத்யம்ச த்விஜ ஸத்தம
பஞ்சைதாநி பவித்ராணி ஸிஷ்டாசாரேஷு நித்யதா.

[2] 'உயர்ந்தவர்களுக்கு' என்பதனை மேலே வருகின்ற 'அவர்கள் வாசலிலே துவண்டு கேட்கக் குறை இல்லை' என முடிக்க.

[3] பீஷ்ம துரோணாதிகள் - வீடுமன் துரோணன் முதலாயினார். கிருகங்கள் - வீடுகள். ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே அமுது செய்தது, கிருஷ்ணன் பாண்டவர்களுக்காகத் தூது சென்ற காலத்தில். அமுது செய்தல் - உண்ணல்.

அவ :—பின்னர் [1] "பெரியோர்கள் எந்த எந்தக் கருமங்களைச் செய்கின்றார்களோ, அந்த அந்தக் கருமங்களையே மற்றைய மக்களும் செய்கிறார்கள்" என்று கிருஷ்ணன் ஒழுகின படியை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—கிருஷ்ணன், தருமங்களை நிலை நிறுத்தும் பொருட்டு அவதரித்தருளி, [2] "உலகத்தாரின் நன்மையின் பொருட்டுப் பார்த்துக் கர்மங்களை நன்றாகச் செய்யவேண்டும்" என்கிறபடியே ஞானியானாலும் உலகத்தாரின் நன்மையைப் பார்த்து வருணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் உரிய தருமங்கள் நன்றாகச் செய்யவேண்டும் என்று உபதேசித்தும், [3] "அருச்சுனா, நான் தளர்ச்சியின்றி எப்பொழுதும் கர்மத்தில் ஈடுபடாவிடின் மனிதர்கள் என் வழியையே பின்பற்றுவர்" என்கிறபடியே ஒரு கால் நான் சோம்பாதே கர்மத்தில் புகுந்திலேனாயின் மக்களெல்லாரும் என்வழியைப் பின் செல்வர் என்று பிறர்பொருட்டுக் குறிக்கொண்டு, தான் அநுஷ்டித்துப் போரும் தன்மையனிறே கிருஷ்ணன் ; இத்தகைய கிருஷ்ணன்,

பீஷ்மதுரோணாதிகள் கிருகங்களை விட்டு ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே அமுது செய்தான் – ஸ்ரீதூது எழுந்தருளின போது [4] "மதுசூதனா, தாமரைக்கண்ணா, வீடுமரையும் துரோணரையும் என்னையும் கடந்து சூத்திரனான விதுரனுடைய உணவினை எப்படி உண்டாய்?" என்னும்படி உயர்ந்த சாதி ஒழுக்கம் இவற்றையுடையராய், இங்கே எழுந்தருளுவர் என்று பார்த்துக் கொண்டிருந்த வீடுமர் முதலாயினார்களுடைய வீடுகளை விரும்பாமல், சாதி முதலாயினவற்றால் தாழ்ந்தவராய் அதனாலே இங்கே எழுந்தருளுவர் என்னும் நினைவும் அற்று இருந்த ஸ்ரீவிதுரர் திரு

---

[1] 'யத்யத் ஆசரதி ஶ்ரேஷ்ட: தத்ததேவ இதரோஜந:" என்பது, ஸ்ரீகீதை : 3 : 21.

[2] "லோக ஸங்கரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்த்து மர்ஹஸி" என்பது, ஸ்ரீ கீதை, 3:20.

[3] யதிஹ்யஹம் நவர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித:
மமவர்த்மாநு வர்த்தந்தே மநுஷ்யா: பார்த்தஸர்வஶ:
என்பது, ஸ்ரீ கீதை, 3:23.

[4] பீஷ்மத்ரோணா வதிக்ரம்ய மாம்சைவ மதுஸூதந
கிமர்த்தம் புண்டரீகாக்ஷபுக்தம் விருஷல போஜநம்
என்பது, பாரதம், உத்யோகபர்வம்.

மாளிகையிலே அன்புடன் சென்று புக்கு, [1] "ஏ கிருஷ்ணா, தேவரீருடைய இந்த வருகையானது எங்களுக்குப் பெரிய செல்வமாகும்; எமது அன்பின் செயல்களாலே இன்புறுக' என்று பக்தி பரவசத்தினால் மகிழ்ச்சியடைந்து சொன்னார்" என்கிறபடியே பக்தி பரவசத்தினால் அவர் செய்த செயல்களை எல்லாம் கண்டு உகந்து, [2] "பரிசுத்தமாயும் இனிமை பொருந்தியதாகவும் இருந்த விதுரருடைய உணவுகளை அமுது செய்தார்" என்கிறபடியே அஹங்கார சம்பந்தம் இல்லாமையாலே மிக்க பரிசுத்தம் பொருந்தியதாய்ப் பக்தியோடு கூடியிருத்தலால் இனிமைமிக்கிருப்பதாய் இருக்கிற அன்னத்தை, அந்தப் பரிசுத்தமும் இனிமையும் அடியாக மிக விரும்பி அமுது செய்தானிறே. (155)

## 286

**பெருமாள் ஸ்ரீசபரி கையாலே அமுது செய்தருளினார்.**

என்பது சூத்திரம்.

அவ :—இந்தக் கிருஷ்ணவதாரத்திற்கு முன்னைய அவதாரத்திலும் இப்படிச் செய்த வகையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :** —பெருமாள்— இரகு குலதிலகராய் ஒழுக்கத்திலே மேம்பட்டவரான பெருமாள், ஸ்ரீ சபரி கையாலே அமுது செய்தருளினார். [3] "சபரியை அடைந்தார்; சக்கரவர்த்தி திருமகனாரான இராமபிரான் சபரியினால் நன்றாகப் பூஜிக்கப்பட்டார்" என்கிறபடியே வேடுவிச்சியாய் இருந்தே ஆசாரியர்களுக்குச் செய்யும் தொண்டிலே பழுத்து, ஞானத்திலே மேம்பட்டவளாய்,

---

[1] 'ஸம்ப்ரமை꞉ துஷ்ய கோவிந்த ஏதந்ந꞉ பரமம்தநம்'
என்பது, பாரதம், உத்யோகபர்வம்.

இவ்விடத்தில் வில்லி பாரதம் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் 77 முதல் 81 முடிய உள்ள செய்யுள்களைக் காணல் தகும்.

[2] 'விதுராந்நாநி புபுஜே ஶுசீநி குணவந்தி ச'
என்பது, பாரதம், உத்யோகபர்வம்.

[3] 'ஸோப்யகச்சந் மஹாதேஜா꞉ ஶபரீம் ஶத்ருஸூதந꞉
ஶபர்யா பூஜித꞉ ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ꞉'
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 1:57

தன் நாவிற்கு இனியனவாக இருந்த பழம் கிழங்கு முதலாயின வற்றையெல்லாம் இங்குத்தைக்கு என்று சேர்த்து வைத்துக் கொண்டு, வரவு பார்த்திருந்த ஸ்ரீ சபரி, தன் அன்பிற்குத் தகுதி யாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண, மிக்க மகிழ்ச்சி யோடு அமுது செய்தார் என்கை.

[1]இவற்ருல், உயர்குலப் பிறப்பு முதலாயினவற்ருல் வரும் செருக்குச் சிறிதும் இல்லாத ஞானத்தாலும் அன்பிஞலும் மேம் பட்டவருடைய அன்பு சம்பந்தமுள்ளவை, ஆத்ம குணத்தை அறிந்த பெரியோர்களுக்கு மிக்க பரிசுத்தமாயும் இனிமையுடைய தாயும் இருக்கும் என்னுமிடம் காட்டப்பட்டது. (156)

## 237

[2] மாறனேரி நம்பி விஷயமாகப் பெரிய நம்பி உடையவர்க்கு அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி [3]ஸ்ரீராமாயண மகாபாரதங்களில் கிடைக் கின்ற சிஷ்டாசாரங்களாலே பாகவதர்களுடைய பெருமையை விளக்கிக் காட்டிஞர் இதுகாறும். இன்னமும் இவ்வர்த்த விஷய மாகப் பூர்வாசாரியருடைய வார்த்தையை நினைப்பூட்டுகிருர் இச்சூத்திரத்தால்.

---

[1] இவற்ருல் - மேற்சூத்திரத்தாலும் இச்சூத்திரத்தாலும்.

[2] மாறனேரி நம்பி - ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர்; மாறனேரி என்ற ஊரில் அவதரித்தவர்; திருக்குலத்தார். பெரியநம்பி - ஆளவந் தார் சிஷ்யர்; இராமாநுசருக்கு ஆசாரியர்; பிராமண சாதியினர். உடையவர் - இராமாநுசர். அருளிச்செய்த வார்த்தையை வியாக்கியா னத்தில் காண்க.

[3] மேலே கூறியவற்றுள் விசுவாமித்திரன் பிரமரிஷியானது, விபீஷணனைப் பெருமாள் இக்ஷ்வாகு வம்சியராக வார்த்தை அருளிச் செய்தது, பெரியவுடையார்க்குப் பிரம்மமேதசம்ஸ்காரம் செய்தது, பெரு மாள் சபரிகையிஞல் அமுது செய்தது என்னும் இந்நான்கும் ஸ்ரீ ராமா யணத்தில் கிடைக்கும் சிஷ்டாசாரங்கள். தர்மபுத்திரர் விதுரர்க்குப் பிரம்மமேதத்தால் சம்ஸ்கரித்தது, ருஷிகள் தர்மவியாதன் வாசலிலே நின்று தர்மசந்தேகங்களை நீக்கிக்கொண்டது, கிருஷ்ணன் விதுரர் திருமாளிகையிலே அமுது செய்தது என்னும் இம்மூன்றும் பாரதத்தில் கண்ட சிஷ்டாசாரங்கள்.

**வியாக்:**—'மாறனேரி நம்பி விஷயமாகப் பெரிய நம்பி உடையவர்க்கு அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது' என்றது, செருக்கிற்குக் காரணமான உயர்குலப்பிறப்பு ஒழுக்கம் என்றுமிவை இல்லாமலே, ஆளவந்தார் திருவடிகளையுடையராய், ஆத்ம பரமாத்ம ஞானம் நிறைந்தவராய் இருக்கிற மாறனேரி நம்பி, தம்முடைய இறுதிக் காலத்திலே, 'ஆளவந்தாருடைய திருவருளுக்கு இலக்கான இச்சரீரத்தை, சரீர பந்துக்கள் வந்து தீண்டிச் செய்வது என்?' என்று ஐயம் கொண்டு, [1]சப்பிரமசாரியான பெரிய நம்பியைப் பார்த்து, [2]"புரோடாசத்தை நாய்க்கு இடாதே கிடீர்' என்று அருளிச்செய்து திருநாட்டுக்கு எழுந்தருள, பெரிய நம்பிகளும் அப்படியே பிறர் கையில் காட்டிக் கொடாதே, தாமே திருப்பள்ளி படுத்தி வந்து எழுந்தளியிருக்க, இதனை உடையவர் கேட்டருளி, பெரிய நம்பி திருவடிகளிலே வந்து, 'சீயா, [3]மர்யாதை கிடக்கக் காரியம் செய்ய வேண்டாவோ, [4]தேவரீர் செய்தருள வேண்டிற்றே?' என்ன, [5]"ஆள்

---

[1] சப்பிரமசாரிகள் - ஒரே ஆசாரியனையுடையவர்கள்; ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர் இருவரும் என்றபடி.

[2] புரோடாசம் - வேள்வித்தீயில் தேவர்களுக்கு இடும் அன்னம். 'புரோடாசத்தை நாய்க்கு இடாதேகிடீர்' என்ற வாக்கியத்தால், தாம் இறந்த பின்பு தம் சரீரத்தைச் சரீரபந்துக்கள் தீண்டாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும் என்று தெரிவித்தவாறு.

> 'வானிடை வாழுமவ் வானவர்க்கு
> மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
> கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
> கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப'

என்பது நாய்ச்சியார் திருமொழி.

[3] 'மர்யாதை கிடக்கக் காரியம் செய்ய வேண்டாவோ?' என்றது, 'சாஸ்திரங்கள் சம்பந்தமான விதிகள் நிற்கும்படி—அதாவது அழியாதபடி—காரியங்கள் செய்ய வேண்டாவோ?' என்றபடி. 'சீயா' என்றது விளிப்பெயர்; பூஜ்யவார்த்தை.

[4] 'தேவரீர் செய்தருளவேண்டிற்றே?' என்றது, 'அக்காரியத்தை வேறு ஒருவரைக்கொண்டு செய்திருக்கலாமே?' என்றபடி.

[5] 'தேவரீர் செய்தருளவேண்டிற்றே?' என்று உடையவர் கேட்ட வினாவிற்குப் பெரியநம்பி அருளிச்செய்த விடை, 'ஆளிட்டு அந்தி தொழுவோ' என்பது. 'பகவத் பாகவத கைங்கர்யங்களை ஒருவர் தாமே செய்ய வேண்டுமே ஒழிய வேறு ஒருவரைக்கொண்டு செய்யலாகாது'

இட்டு அந்தி தொழவோ, [1] நான் பெருமாளைக் காட்டிலும் உயர்ந்தவனோ ? இவர் பெரியவுடையாரைக்காட்டிலும் தாழ்ந்த வரோ ? 'பயிலும் சுடரொளி, நெடுமாற்கடிமை' கடலோசையோ ? ஆழ்வார் அருளிச்செய்த வார்த்தையைச் சிறிது குறையவாகிலும் நடைமுறையில் செய்யவேண்டாவோ ?'' என்று அருளிச்செய்த வார்த்தையை என்றபடி.[2] (157)

## 238

[3] 'ப்ராதுர்பாவை :' இத்யாதி.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, பாகவதர்களுடைய பிறப்பு முதலாயின வற்றின் உயர்ச்சியினைச் சொல்லுதல் முன்னாகப் பாகவதர் அல்லாதாருடைய உயர்வு பழிக்கப்படுதலைப் பிரகாசிப்பிக்கிறார் இச்சூத்திரத்தால்.

---

என்பது இதன் கருத்து. அந்தி தொழல் - கைங்கரியம் செய்தல். இனி, சந்தியாவந்தனமுமாம்.

1 'மரியாதை கிடக்கக் காரியம் செய்ய வேண்டாவோ ?' என்பதற்கு விடை, 'நான் பெருமாளைக்காட்டிலும்' என்று தொடங்கும் வாக்கியங்கள். ஆழ்வார் அருளிச்செய்த வார்த்தைகள், 'பயிலும் சுடரொளி'யும் 'நெடுமாற்கடிமை'யும். இவை இரண்டும் இரண்டு திருப்பதிகங்களைக் காட்டுகின்றன. இவ்வாக்கியங்களால், விசேஷ சாஸ்திரங்கள் பயன் இல்லாமல் போகாமைக்காக, சாமான்ய சாஸ்திரங்களில் சொன்ன மரியாதைகள் அதிகாரி விசேடங்களாலே விலக்கப்படலாம் என்று தெரிவித்தபடி. விசேட சாஸ்திரம் - நாலாயிர திவ்வியப்பிரபந்தம்.

2 சிஷ்டாசாரங்களுள் ஆசாரியருடைய ஆசாரம் சிறந்ததாதலின், இது இறுதியிற்கூறப்பட்டது.

3 ப்ராதுர்பாவை: ஸுரநர ஸமோ தேவதேவ: ததீயா
ஜாத்யா வ்ருத்தைரபிச குணத: தாத்ருசோ நாத்ர கர்ஹா
கிம்து ஸ்ரீமத் புவனபவன த்ராணதோந்யேஷு வித்யா
வ்ருத்த ப்ராயோபவதி விதவாகல்ப கல்ப: ப்ரகர்ஷ:

என்பது பிரமாணம்:

'' அஜ்ஞர் பிரமிக்கிற வர்ணாச்ரம வித்யா விருத்தங்களைக் கர்த்தப ஜந்மம் சவபசாதமம் சில்பநைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்காரம் என்று கழிப்பர்கள் '' என்னும் ஆசாரிய ஹிருதய சூத்திரம் இங்கு நினைத்தல் தகும்.

வியாக் :—' ப்ராதுர்பாவை ' இத்யாதி—" தேவ தேவனை சர்வேசுவரன் அவதாரங்களாலே தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் ஒத்தவன் ஆகிறான்; [1]ததீயரும் சாதியினாலும் ஒழுக்கத்தாலும் குணத்தாலும் அப்படியே ஆகிறார்கள்; இவ்வாறு இருப்பதில் பழிப்பு இல்லை; பின்னை இது உயர்வு உள்ளது யாங்ஙனம் எனின், இது உலகத்தைக் காக்கும்பொருட்டு ஆகையினால். பாகவதர்கள் அல்லாதவர்களிடத்துள்ள கல்வியாலும் ஒழுக்கத்தாலும் உள்ள மிக்க நிறைவு விதவையினுடைய அலங்காரம்போலே பழிப்பிற்கிடமாயது." இதனால், அயர்வறும் அமரர்கள் அதிபதியானவன் அவதாரங்களால் தேவசாதியனாயும் மனித சாதியன் ஆகவும் ஆகாநிற்பன்; ததீயரும் சாதியாலும் ஒழுக்கத்தாலும் குணத்தாலும் அப்படியே மற்றைய மனிதர்களைப்போன்றே இருப்பார்கள்; இதில் பழிப்பு இல்லை; உயர்வே உள்ளது; சர்வேசுவரனும் ததீயரும் இப்படி நிற்கிறது உலகத்தைக் காப்பாற்றும் நிமித்தமாக. இனி, பாகவதர் அல்லாதார் பக்கல் உண்டான கல்வி ஒழுக்கம் இவற்றின் மிகுதி வடிவான உயர்வு விதவையினுடைய அலங்காரம்போலே பழிக்கப்படுவதாக நின்றது என்கிறது. (158)

## 239

'பாகவதன் அன்றிக்கே [2]வேதார்த்த
ஞானாதிகளையுடையவன், குங்குமம் சுமந்த
கழுதையோபாதி' என்று சொல்லாநின்றதிறே.

என்பது சூத்திரம்.

அவ :—' அவர்கள் பாகவதர்கள் அல்லராயின், அந்தப் பிராமணர்களுக்குரிய வேதாத்யயனம் ஒழுக்கம் முதலானவை பயன் அற்றனவாமோ?' எனின், அப்படிப் பிரமாணம் சொல்லா நின்றதிறே என்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] ததீயர் - எம்பெருமானுடைய கடாக்ஷ விசேஷத்தாலே அவனோடுள்ள சம்பந்த ஞானம் நிறைந்த முமுக்ஷுக்கள்.

[2] வேதார்த்த ஞானாதிகளையுடையவன் - வேதமும் அதனுடைய அர்த்தமும் ஆகிய இவற்றினுடைய ஞானத்தையுடையவன். என்றது, பருப்பொருள் ஞானமாத்திரமே உடையவன், நுண்பொருள் ஞானமில்லாதவன் என்பதனைக் குறித்தபடி. கழுதையோபாதி - கழுதையைப் போன்றவன். சொல்லாநின்றது - சாஸ்திரம் சொல்லாநின்றது.

வியாக் :—பாகவதன் அல்
ஆதிகளையுடையவன் [1]“ எந்தப் பி
அறிந்தவனாயிருந்தும் எங்கும் நி
தேவனை அறியவில்லையோ, அ
சுமந்துகொண்டிருக்கிற பிராம
படியே வேதங்களின் கருத்துப்
ஞானம் முதலானவைகள் இல்ல
றிக்கே, வேதாத்யயனத்தோடே ப
வற்றையுடையவனாக இருக்கு
கழுதையோபாதி என்று சொ
திளைத்திருக்குமவர்கள் விரும்பும்
மத்தைச் சுமந்து திரியாநிற்கச்
அறியாத கழுதை போன்று, முன்
தன்மையையும் பின் பாகத்தா
பொருளின் தன்மையையும் செ
னையே அறிவிக்கின்ற வேதமா
பாரத்தைக் [3] கினிய சுமந்துகொ
சுவடு அறியாத பிராமணக் கழுதை
மான பிரமாணம் சொல்லாநின்ற

ாறிக்கே வேதார்த்த ஞாந
பிராமணன் நான்கு வேதங்களை
நிறைந்து வசிப்பவனான வாசு
வன், வேதமாகிற சுமையைச்
ணக் கழுதையே” என்கிற
பொருளான பகவானைப்பற்றிய
ாமையாலே, [2]பாகவதன் அன்
ருப்பொருள் ஞானம் முதலான
றவன், குங்குமம் சுமந்த
ல்லாநின்றதிறே—இன்பத்திலே
வாசனைப் பொருளான குங்கு
செய்தேயும், அதன் வேறுபாடு
ர பாகத்தாலே ஆராதனத்தின்
ல ஆராதிக்கப்படுகின்ற பரம்
சால்லாநின்றுகொண்டு பகவா
கிற விலக்ஷணப் பொருளின்
ாண்டிருக்கச்செய்தே, அதன்
ந்த என்று வேத உபபிருமமண
திறே என்கை. (159)

---

[1] ‘சதுர்வேததரோ விப்ரோ வா
பராக்ராந்தஃ ஸவைப்ராஹ்மண
சுலோகத்திலேயுள்ள ‘வாஸு
எவன் அறியவில்லையோ’ என்
சூத்திரத்தில் ‘பாகவதன் அன்றி
அறிந்தவன் பாகவதன்; அறிய
‘பிராமணக் கழுதை’ என்ற
திருவுள்ளம் பற்றிக் ‘குங்குமம் சு
‘பிராமணக்கழுதை’ என்றதனால்
விளங்குகிறது; காஷ்மீர் தேசத்தி
மானவையாகையாலும் அக்கழுதை
சுமந்து செல்பவையாதலாலும் என்

ஸுதேவம் நவிந்ததி வேதபார
ா கர்த்தபஃ’ என்பது பிரமாணம்.
தேவம் ந விந்ததி - வாசுதேவனை
ற தொடர்மொழியை நோக்கி,
க்கே’ என்கிறார். வாசுதேவனை
ாதவன் பாகவதன் அல்லனே?
தனால் போதரும் பொருளைத்
மந்த கழுதையோபாதி’ என்கிறார்.
சிரேஷ்டமான கழுதை என்பது
ல் உள்ள கழுதைகளே சிரேஷ்ட
தைகள் குங்குமப்பூப்பொதியைச்
க.

[2] கினிய - நன்றாக. சுவடு - இ
களின் பொருள்களை விரித்துக் கூறு

னிமை. உபப்பிருமமணம் - வேதங்
வது; இதிகாச புராணங்கள்.

## 240

### இராஜாவான [1] ஸ்ரீகுலசேகரப்பெருமாள் திரியக்ஸ்த்தாவர ஜந்மங்களை ஆசைப்பட்டார்.

எளியது சூத்திரம்.

**அவ :**—பகவானுடைய சம்பந்தம் இல்லாத பிறப்பு முதலானவைகள் பெரியோர்களால் பழிக்கப்படுவன என்னுமதனைக் காட்டியருளினார் மேல். பகவானுடைய சம்பந்தமுடைய விலங்கு பறவை முதலான பிறப்புக்களும் பெரியோர்களால் வேண்டப் படுகின்றன என்னுமதனைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—**இராஜாவான ஸ்ரீகுலசேகரப் பெருமாள்**—அரசர் சாதியினரான ஏற்றத்தையுடைய ஸ்ரீகுலசேகரப் பெருமாள், **திரியக்ஸ்த்தாவர ஜன்மங்களை ஆசைப்பட்டார்**—விலங்கு பறவை மரம் செடி முதலான பிறவிகள், [2] "மனிதன் சரீரத்தால் உண்டான பாவத்தால் மரம் செடி கொடி முதலான பிறவிகளை அடைகிறான் ; வாக்கினால் உளதாகும் பாவத்தாலே பறவைகளாகவும் விலங்குகளாகவும் பிறக்கிறான்" என்பது போன்றவைகளால் பாவ சன்மங்களாகச் சொல்லப்படாநிற்கச்செய்தே, [3] "வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே", "மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே", "செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே", "தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே" என்று [4] திருமலையாழ்வாரோடு சம்பந்த

---

[1] குலசேகரப் பெருமாள் - குலசேகராழ்வார். திரியக்கு - விலங்கு பறவைகள். தாவரம் - மரம் செடி கொடிகள்.

"அணைய வூரப்புனைய அடியும் பொடியும் படப் பர்வத பவனங்களிலே ஏதேனுமாக ஜநிக்கப் பெறுகிற த்ரியக் ஸ்தாவர ஜந்மங்களைப் பெருமக்களும் பெரியோரும் பரிக்ரஹித்துப் பிரார்த்திப்பார்கள்" என்ற ஆசார்ய ஹிருதய சூத். இங்கு அறிதல் தகும்.

[2] 'ஶரீரஜை: கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர:
வாசிகை: பக்ஷிம்ருகதாம்.'

சரீரத்தால் உண்டாகும் பாவங்கள், கொலை, களவு, காமம் என்பன. வாக்கினால் உளவாம் பாவங்கள், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்பன. மணிமேகலை 24.125-130. காண்க.

[3] பெருமாள் திருமொழி, 4ஆம் திருப்பதிகம் காண்க.

[4] திருமலையாழ்வார் - ஆதிசேஷன் அவதாரமாய திருமலை.

முடைய விலங்கு பறவை மரம் முதலான பிறவிகளைப் பெறுப் பேருக ஆசைப்பட்டார் என்கை. (160)

## 241

பிராமணோத்தமரான பெரியாழ்வாரும் [1]திரு மகளாரும் கோப ஜன்மத்தை ஆஸ்த்தாநம் பண்ணிஞர்கள்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி ஆசைப்பட்ட அளவன்றிக்கே தாழ்ந்த பிறவியை ஏறிட்டுக்கொண்டவர்களை அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—பிராமணோத்தமரான பெரியாழ்வாரும் திருமகளா ரும்—இனி இதற்குமேல் இல்லை என்னும்படியான சாதியிலே அவதரித்துக் கல்வியாலாய பெருமை முதலாயவற்ருலே தம் சாதியினரான எல்லாரைக்காட்டிலும் உத்தமரான பெரியாழ்வா ரும், வேதப்பயன் கொள்ள வல்ல அவர்தம்மைப் போன்றே பேதைப்பருவத்திலேயே வேதத்தின் சாரார்த்தத்தை அறிந்தவ ராயிருக்கும் அவர் திருமகளாரான ஆண்டாளும், கோப ஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணிஞர்கள்—கிருஷ்ணவதார அநுபவத்தில் மிகுந்த ஆசையாலே [2]'மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்' என்றும். [3]'என்மகன் கோவிந் தன்' என்றும், [4]'பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்டவப் பாங்கிஞல்' என்றும் வருமவைபோல்வனவற்ருலும், [5]'ஆய்ப் பாடிச் செல்வச் சிறுமீகாள்' என்றும், [6]'நாமும் நம் பாவைக்கு' என்றும், [7]'ஆய்க்குலத் துன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்' என்றும் வருமவை போல்வனவற்ருலும் தாங்கள் அவர்களாகப் பேசும்படி, தாங்கள் அவதரித்த வர்ணத்திற்கு [8]மூன்ருவது வர்ணமாகையாலே

---

[1] திருமகளார் - ஆண்டாள். கோப ஜன்மம் - ஆயர் பிறப்பு. ஆஸ்தாநம் பண்ணிஞர்கள் - ஏறிட்டுக்கொண்டார்கள்.

[2] பெரியாழ்வார் திரு. 1.1:9, [3] பெரியாழ்வார் திரு. 1.4:1

[4] பெரியாழ்வார் திரு. 3.2:8. [5] திருப்பாவை, 1.

[6] திருப்பாவை, 2. [7] திருப்பாவை, 28.

[8] மூன்ருவது சாதி - வைசியசாதி: கோவைசியர்.

தண்ணியதாயிருந்துள்ள அறிவொன்றும் இல்லாத ஆயர்பிறவி யைப் புரையற ஏறிட்டுக்கொண்டார்கள் என்றபடி. (161)

## 242

[1]கந்தல் கழிந்தால் சர்வர்க்கும் நாரீணும் உத்தமையுடைய அவஸ்தை வரக்கடவதாய் இருக்கும்.

என்பது ஸூத்திரம்.

அவ :—'இப்படி ஆசைப்படுகையும் ஏறிட்டுக்கொள்ளுகை யும் ஒழிய, சரீரம் கழிந்தால் ஆன்மாவின் தன்மை இருக்கும்படி தான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால். அன்றிக்கே, சரீரத்தோடுகூடியதான இந்த ஏற்றத்தாழ்வுகளின் நிலைகள் அன்றிக்கே, இச்சரீரம் நீங்கினால் எல்லா ஆன்மாக்களுக்கும் வரும் நிலைதான் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறாராகவுமாம்.

வியாக் :—கந்தல் கழிந்தால்—ஆன்ம சொரூபம் உள்ளபடி பிரகாசியாதபடி அநாதி காலம் அதனை மறைத்துக்கொண்டு போந்த வந்தேறியான அவித்யை முதலான குற்றங்கள், பகவா னுடைய திருவருள் விசேடத்தாலே பின்னாட்டாதபடி வாசனை யோடு போனால், சர்வர்க்கும் நாரீணும் உத்தமையுடைய அவஸ்தை வரக்கடவதாக இருக்கும்—எல்லா ஆன்மாக்களுக்கும் [2]"சாமுத்திரிகா சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட எல்லா இலக்கணங்களும் நிறைந்தவளும் பெண்களுக்குள் உத்தமையு மான பிராட்டி" என்கிறபடியே பெண்களுக்குரிய இலக்கணங் கள் எல்லாவற்றாலும் குறைவற்றுத் தன்னை ஒழிந்த மற்றைய பெண்களுக்கெல்லாம் உத்தமையாயிருக்கும் பெரிய பிராட்டியா ருடைய நிலை தன்னடையே வரக்கடவதாகவிருக்கும் என்றவாறு. (162)

[1] கந்தல் - அவித்யை முதலான குற்றங்கள். சர்வர்க்கும் - எல் லார்க்கும். நாரீணும் - பெண்களுக்குள்ளே. உத்தமை - உத்தமி; பிராட்டி. அவஸ்தை - நிலை.

[2] 'ஸர்வலக்ஷண ஸம்பந்நா நாரீணா முத்தமாவதூः' என்பது, ஸ்ரீராமா. பால. 1:27.

அவ :—இந்த அகங்காரம், இழவிற்கும் அகங்காரமின்மை, பேற்றிற்கும் காரணமாம்படியை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'பிரஹ்மாவாய் இழந்து போதல் செய்யும்படியா யிருக்கும்' என்றது, திருஷ்டத்தில் மிக்க உயர்விற்குத் தக்க அகங்காரத்தால் மிக்கவனான பிரமன்[1] 'பிரமனே, இரண்டாவது பரார்த்தத்தின் முடிவில் என்னை அடைவதற்குத் தக்கவனாய்' என்றும், [2]'கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன், அடிக்கமலந்தன்னை அயன்?' என்றும் சொல்லுகிறபடியே இழந்து போதல் செய்யும்படியாயிருக்கும் இந்த அகங்காரத்தின் தன்மை என்றபடி. 'இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யும்படியாயிருக் கும்' என்றது, அஹங்கார காரணங்கள் ஒன்றும் இல்லாமை யாலே அஹங்காரம் அற்றவளாய் ஒன்றும் அறியாத இடைச்சி யான சிந்தயந்தியானவள் [3]"வேறொரு பெண்ணானவள் மோக்ஷத்தை அடைந்தாள்" என்னும்படி, அவன் திருவடிகளைப் பெற்றுவிடுதல் செய்யும்படியாயிருக்கும், இந்த அகங்கார மின் மையாகிற தன்மை என்றபடி.

இப்படி அகங்காரமும், அகங்காரமின்மையும் இறைவனை இழப்பதற்கும் பெறுதற்கும் உடலாகையாலே, ஸ்ரீ குலசேகரப் பெருமாள்[4] முதலானவர்கள் அகங்காரத்திற்குக் காரணமான பிறப்புகளை விரும்பாமல் அது இல்லாத பிறப்புகளை விரும்பி னார்கள் என்றபடி. (165)

---

[1] 'த்விபரார்த்தாவஸாநேமாம் ப்ராப்தும் அர்ஹஸிபத்மஜ' என்பது, பிரமாணம்.

[2] முதல் திருவந்தாதி, 56.

[3] 'முக்திம் கதாந்யா கோபகந்யகா' என்பது ஸ்ரீவிஷ்ணு புரா.

[4] முதலானவர்கள் என்றதனால், பெரியாழ்வார், ஆண்டாள், ஸ்ரீ சுகமுனிவர், உத்தவர், ஸ்ரீ ஆளவந்தார் என்னும் இவர்களைக் கொள்க.

## 246

இப்படி சர்வப்பிரகாரத்தாலும் நாச ஏதுவான அகங்காரத்துக்கும் அதன் காரியமான விஷயப் பிராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்துருவைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு வர்த்தகரான சம்சாரிகளைக் கண்டால் சர்ப்பத்தைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாற்போலேயும், ஈச்வரனைக் கண்டால் பிதாவைக் கண்டாற்போலேயும், ஆசாரியனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற்போலேயும், சிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலேயும் நினைத்து; அகங்கார அர்த்த காமங்கள் மூன்றும், அநுகூலர்பக்கல் அநாதரத்தையும், பிரதிகூலர்பக்கல் பிராவண்யத்தையும், உபேக்ஷிக்குமவர்கள் பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்கும் என்று அருசி; 'ஆத்ம குணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக்கொள்ளவொண்ணாது; சதாசார்ய பிரசாதமடியாக வருகிற பகவத் பிரசாதத்தாலே பிறக்குமத்தனை' என்று துணிந்து; தேக யாத்திரையில் உபேக்ஷையும், ஆத்ம யாத்திரையில் அபேக்ஷையும், பிராக்கிருத வஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவிருத்தியும், தேக தாரணம் பரமாத்ம சமாராதந சமாப்தி பிரசாத பிரதிபத்தி என்கிற புத்தி விசேஷமும், தனக்கு ஒரு கிலேசம் உண்டானால் கர்மபலம் என்றுதல் கிருபா பலம் என்றுதல் பிறக்கும் பிரீதியும், ஸ்வாநுஷ்டானத்தில் சாதனத்வபுத்தி நிவிருத்தியும், விலக்ஷணருடைய ஞானஅநுஷ்டானங்களில் வாஞ்சையும், உகந்தருளின நிலங்களில் ஆதராதிசயமும் மங்களாசாசனமும், இதர விஷயங்களில் அருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தந நியதியும், ஆகார நியதியும், அநுகூல சகவாசமும், பிரதிகூல சகவாச நிவிருத்தியும் சதாசார்ய பிர

சாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்.[1]

என்பது சூத்திரம்.

அவ :—"தன்னைத்தானே முடிக்கையாவது" என்று தொடங்கி மேற்சூத்திரம் இறுதியாக அகங்காரம் முதலானவற்றின் குற்றம் விசாரித்துச் சொல்லப்பட்டது. பின், பிராப்பிய பிரபாகங்கள் இரண்டும் அவனே என்றிருக்கும் பிரபந்த அதிகாரியுடைய தினசரியை ஆம் விசேஷம் சொல்லப்படுகிறது இச்சூத்திரத்தால்.

வியாக் :—இப்படி சர்வ பிரகாரத்தாலும் நாச ஏதுவான அகங்காரத்துக்கும் அதனுடைய காரியமான விஷயப் பிராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்துருவைக் கண்டாற் போலே நினைத்து, 'இப்படி' என்றது [2]மேலே கூறியவற்றைச் சுட்டுகிறது. 'சர்வ பிரகாரத்தாலும் நாச ஏதுவான' என்றது, அகங்காரமாகிற தன் வடிவத்திலே நின்று முடித்தும் பாகவத விரோதத்தை விளைத்து முடித்தும் பகவானை அடைவதற்கு விரோதியாயும், எல்லாப்படியாலும் [3]'அஸந்நேவ' என்கிறபடியே அறிவில் பொருளுக்கு ஒப்பாம்படி ஆன்மாவினை உருவழியப்பண்ணுமதாயிருத்தலைத் தெரிவித்தபடி. 'அகங்காரத்துக்கும்' என்றது, அகங்காரம் தான் சரீரத்தையே ஆன்மாவாக நினைக்கும் நினைவின் வடிவமாகவும், தேகத்திற்கு வேறுபட்ட ஆன்ம விஷயத்தில் [4]சுவாதந்திரிய அபிமான வடிவமாயும் இரண்டுவகைப்பட்டிறே இருப்பது; இவ்விடத்தில் அவ்விரண்டனையும் சேரச் சொல்லுகிறது.

---

1 மூன்றும் பிரகரணத்தில் உபாய உபேய அதிகாரத்திற்கு வேண்டிய தியாச்சிய உபதேயங்களில் சிலவற்றைச் சொல்லி, அவற்றுள் தினசரியையில் அடங்கிய தியாச்சிய உபாதேயங்களில் சிலவற்றை இச்சூத்திரத்தால் அருளிச்செய்கிறார். தினசரியையாவது, பேறு பெறுகின்ற வரையிலும் இங்கிருக்கிற நாள்களில் செய்ய வேண்டிய ஒழுக்க விசேடங்கள்.

2 'மேலே கூறியவற்றை' என்றது, 'இவை இரண்டும்' (சூத். 189) 'திருஷ்டத்தில்' (சூத். 241) என்பவைகளில் கூறியுள்ளனவற்றை.

3 'அவன் இல்லாதவனே ஆகிறான்' என்பது பொருள்.

4 சுவாதந்திரிய அபிமானம் - ஆன்மா தனக்கு உரியது; பிறர்க்கு உரியதன்று என்னும் எண்ணம்.

'அதனுடைய காரியமான விஷயப்பிராவண்யத்துக்கும்' என்றது, சரீரத்தையே ஆன்மாவாக நினைக்கும் நினைவும் சுவாதந்திரியமாக நினைக்கும் நினைவுமாகிய இரண்டுமே, மகளிர்களைத் தனக்கு இனிய பொருளாக விரும்புதற்கு மூலமாகையாலே மகளிர்பால் செல்லும் ஆசையை அகங்காரத்தின் காரியம் என்கிறது. ஈண்டு 'விஷயம்' என்றது, [1]மேல் நல்லதாகவும் தீயதாகவும் சொல்லப்பட்ட தன் மனைவியும் பிற மகளிருமாகிற இருவகையாரையும் சொல்லுகிறது. 'விளைநிலம் தான் ஆகையாலே' என்றது, இவை இரண்டற்கும் பிறப்பிடம், பகவானுடைய சொரூபத்தை மறைத்தல் முதலானவற்றைப் பண்ணக்கூடிய முக்குணங்களோடு கூடியதான பிரகிருதியினுடைய விகாரத்தின் வடிவாய், தன்னுடைய வினைவிசேடத்தாலே உண்டானதாய் இருக்கிற சரீரத்தோடு கூடியிருப்பவனுமான தான் ஆகையாலே என்றபடி. நல்வினை தீவினைகட்குத் தகுதியாக, ரஜோ குணத்தாலும் தமோ குணத்தாலும் கலங்க அடிக்கும் சரீரத்தோடு கூடியிருப்பதனாலே, மதி மயங்கி, தான் அல்லாத சரீரத்தைத் தானாகவும் தனக்கு உரியன் அல்லாத தன்னைச் சுவதந்திரனாகவும் நினைப்பதும், தனக்குக் கேட்டினைத் தரக்கூடியவர்களான பெண்கள் திறத்தில் மிக்க காதலைப் பண்ணுவதும் தானேயிறே. [2]'தன்னைக் கண்டால்' என்றது, இப்படி அநாதி காலம்போந்தவனாய் இப்பொழுதும் அவற்றிற்குத் தகுதியான சரீரத்தோடுகூடிய வனுமாயிருக்கிற தன்னைக் கண்டால் என்றபடி. [3]'சத்துருவைக் கண்டாற்போலே' என்றது, 'கொன்று அல்லது விடேன்' என்று பிடித்த ஆயுதத்தையுடையராய்ப் பல் கவ்வித் திரியும் பகைவரைக் கண்டாற்போலே குடல் கரித்து, தன்னை முடித்துக் கொல்லுகின்றவனாக நினைக்கக்கடவன்.

அவற்றுக்கு வர்த்தகரான சம்சாரிகளைக் கண்டால் [4]சர்ப்பத்தைக் கண்டாற்போலே நினைத்து—தங்களுடைய சொற்களாலும் செயல்களாலும் தீய எண்ணங்களை எழச் செய்து, அகங்காரம் முதலானவற்றை மேன்மேலும் வளரும்படி செய்யும்,

[1] 'மேல்' என்றது, 183 முதல் 187 வரை உள்ள சூத்திரங்களில் கூறியுள்ளவற்றை.

[2] 'தன்னைக்கண்டால்' என்றது, அகங்காரத்திற்குக் காரணமான தான் என்று, தேகத்தோடு கூடியிருக்கிற தன்னைக்கண்டால் என்றபடி.

[3] சத்துரு - கொல்லுகின்றவன்.

[4] சர்ப்பம் - மேலே சீறி விழுவது ; பாம்பு.

[1]மேலே கூறிய இரண்டற்கும் வசப்பட்டிருக்கின்றவர்களான சம்சாரிகளைக் கண்ணெதிரே கண்டால், அணுகில் மேல் விழுந்து அள்ளிக்கொள்ளும் மிகக் கொடியதான பாம்பினைக் கண்டாற்போலே அஞ்சி நடுங்கிப் பிற்காலித்து, ‘நமக்குத் தீங்கினைச் செய்பவர்’ என்று எண்ணக் கடவன்.

அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாற்போல நினைத்து—தங்களுடைய உபதேசம் அநுஷ்டானம் என்னும் இரண்டாலும் அகங்காரம் முதலாயினவற்றின் குற்றங்களை அறிவித்து, அவற்றைப்பற்றிப் பேசினாலும் அஞ்சும்படி பண்ணி, வாசனையோடு அவற்றை நீக்குவிக்கும் ‘நமః’பத நிஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், தன்னுடைய நன்மை தீமைகள் இரண்டும் தங்களுடையனவாய்த் தீயது விலக்கி நல்லதில் மூட்டிக் காப்பாற்றும் ஆப்த பந்துக்களைக் கண்டாற்போலே மிகமிக விரும்பி, ‘நமக்கு நற்றுணையாவார்கள்’ என்று எண்ணக் கடவன்.

ஈச்வரனைக் கண்டால் பிதாவைக் கண்டாற்போல நினைத்து—அடியில் உறுப்புகளோடு கூடிய சரீரத்தைத் தந்து, அவற்றைக் கொண்டு தீயவழி செல்லாமல் நல்வழி நடக்கும்படி சாஸ்திரங்களைக் காட்டி, தீயன செய்யுமிடத்தில் தண்டித்து, எல்லா நிலைகளிலும் தன்னுடைய நலத்தையே பார்த்துப்போரும் ஈச்வரனை அர்ச்சையாக எழுந்தருளியிருக்கின்ற திவ்விய தேசங்களிலே கண்கள் ஆரக்கண்டால், தன்னைப் பிறப்பித்தவனாய்க் கல்வியைக் கற்பித்தவனாய்த் தீய செயல்களில் செல்லாதபடி நியமித்து நடத்திக்கொண்டு போரும் நலத்தையே விரும்புகின்றவனான தந்தையைக் கண்டாற்போலே, அன்பும் அச்சமும் அடக்கமும் உடையவனாய்க் கொண்டு, ‘நம்முடைய நலத்திலே நோக்குடையவன்’ என்று எண்ணக் கடவன்.

ஆசாரியனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற்போல நினைத்து—அநாதிகாலம் ‘அஸந்நேவ—இல்லாதவன்’ என்னும்படி கிடந்த தன்னை, பகவானுடைய சம்பந்தத்தை அறிவித்து உளன் ஆக்கி, மேன்மேலும் தன்னுடைய உபதேசத்தாலே ஞானம் வைராக்கியம் பக்தி என்னுமிவற்றை விளைத்து, [2]கையிற்கனி என்ன பகவானைக் காட்டித் தரும் மஹோப

---

1 மேலே கூறிய இரண்டு - அகங்காரமும் ஐம்புல இன்பங்களும்.

2 இராமாநுச நூற்றந்தாதி, 104.

காரகனுமாய், [1] 'உன்சீரே உயிர்க்கு உயிராய்' என்றும், [2] 'உன் மெய்யிற் பிறங்கிய சீரன்றி வேண்டிலன்' என்றும் சொல்லும் படி குணங்களாலும் சரீரத்தாலும் தனக்குத் தாரகனுயும் இனிய பொருளாயுமிருக்கும் ஆசாரியனைக் கண்ணுக்கு இலக்காம்படி கண்டால், கண்ணுஞ்சுழலை இடும் பெரும்பசியன் தான் தரித் திருப்பதற்குக் காரணமாயும் இனிய பொருளாயுமிருக்கிற சோற் றைக் கண்டாற்போல மிக்க ஆசையோடு அநுபவித்து, 'நமக் குத் தாரகமாயும் இனிய பொருளாயுமிருக்கும் விஷயம்' என்றே எண்ணக் கடவன்.

சிஷ்யனைக் கண்டால் [3] அபிமத விஷயத்தைக் கண்டாற் போலே நினைத்து—வேறு பலன் ஒன்றையும் விரும்பாமை முதலான எல்லாத் தன்மைகளாலும் நிறைந்தவனுகையாலே, நன்றான ஞானத்தையும் பக்தியையுமுடையவனுயிருக்கிற நன் மாணுக்கனைக் கண்டால், தனக்கு ஆனந்தத்தை உண்டாக்குகிற மனைவியைக் கண்டாற்போலே, பகவானுடைய குணங்களை அநு சந்தானம் செய்யும் நிலையில் 'நாம் சொல்லுகிற பகவானுடைய குணங்களை விரும்பிக் கேட்பது, மீண்டும் சொல்லுவது, ஈடுபடு வது ஆம் தன்மைகளாலே நமக்கு ஆனந்தத்தை உண்டாக்கு கிறவன் இவன்' என்று எண்ணக் கடவன்.

[4] அகங்கார அர்த்த காமங்கள் மூன்றும் அநுகூலர்பக்கல் அநாதரத்தையும் பிரதிகூலர்பக்கல் பிராவண்யத்தையும் உபேக்ஷிக்குமவர்கள்பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்கும் என்று அஞ்சி—இம்மூன்றிலும் வைத்துக்கொண்டு 'அகங்காரம் அநுகூலர்பக்கல் அநாதரத்தைப் பிறப்பிக்கும்' என்று அஞ்சி— சேஷத்துவத்தைத் தன் முன்னிலையில் ஜீவிக்கவொட்டாதபடி யிறே அகங்காரத்தின் வலிமை இருப்பது; அகங்காரத்தை யுடையவன் [5] 'வணங்கமாட்டேன்' என்றிருக்குமதொழிய,

[1] இராமாநுச நூற். 25. [2] இராமாநுச நூற். 104.

[3] அபிமத விஷயம் - விருப்பத்திற்குரிய மனைவி.

[4] இந்த வாக்கியத்தை, அகங்காரம் அநுகூலர்பக்கல் அநாதரத்தை யும், அர்த்தம் பிரதிகூலர்பக்கல் பிராவண்யத்தையும், காமம் உபேக்ஷிக்குமவர்கள் பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்கும் என்று முறை நிரல்நிறையாகக்கொள்க. அர்த்தம் - பொருள். உபேக்ஷிக்கு மவர்கள் - பெண்கள்.

[5] 'நநமேயம்' என்பது ஸ்ரீராமா. யுத். 36 : 11. இது இராவணன் கூற்று.

ஒரு விஷயத்திலும் தலை தாழ்க்க இசையானே; ஆகையாலே, அகங்காரம் மேலிடுமாகில், சொரூபத்தை வளர்ப்பவராய்க் கொண்டு அநுகூலராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் 'நம்முடைய சேஷிகள்' என்று துடை நடுங்கி எழுந்திருந்து வணங்குதல் முதலானவை முன்னாக அவர்களைச் சார்ந்து ஒழுகுதலைப் பண்ணவொட்டாதே, தன்னை அவர்களைக்காட்டிலும் உயர்ந்தவனாகவாதல் அவர்களைத் தன்னோடு ஒத்தவராகவாதல் எண்ணி அநாதரித்திருக்கும்படி பண்ணும் என்று அஞ்ச வேண்டும்.

அர்த்தம் பிரதிகூலர்பக்கல் பிராவண்யத்தைப் பிறப்பிக்கும் என்று அஞ்சி—யாரையாவது ஒருவரைச் சென்று அணுகி அவர் வழி ஒழுகி ஒரு காசு பெற்றேனுமாய் விடவேண்டும் என்னும்படியிறே பொருள் ஆசை இருக்கும்படி; ஆகையால், அவ்வாசை, [1] சொரூபத்தை அழிக்கும் காரணத்தாலே, விரோதிகளான சம்சாரிகளைக் கண்டால் வெருவி ஓடிப்போக வேண்டியிருக்க, ஒரு காசினை நச்சி அவர்களோடே உறவு பண்ணி அவர்கள் இருந்த இடங்களுக்குப் பல காலம் செல்வது, அவர்களை அழைத்து விருந்திடுவது, அவர்களுடைய குணங்களை எடுத்துப் புகழ்வதாம்படி அவர்கள் விஷயத்திலே ஆசையை உண்டாக்கும் என்று அஞ்சக்கடவன்.

காமம் உபேக்ஷிக்குமவர்கள்பக்கல் அபேக்ஷையைப் பிறப்பிக்கும் என்று அஞ்சி—'காம்யத இதிகாமஃ' என்கிறபடியே காமம் என்ற சொல்லானது, மகளிர் கலவியால் உண்டாகும் சுகத்தைச் சொல்லுகிறது; அக்காமம் [2] 'ஈசிபோமின்' என்கிற திருப்பாசுரத்திற்சொல்லுகிறபடியே வறுமை முதுமை முதலானவைகள் அடியாகத் தன்னை முகம் பாராமல் தள்ளிக் கதவு அடைத்து வெறுக்கும் மகளிர் பக்கலிலே [3] 'ஏழையர்தாம் இழிப்பச்செல்வர்' என்கிறபடியே அவர்கள் வெறுத்தல் முதலானவற்றையே உத்தேசியமாகக்கொண்டு செல்லும்படி, பெரியோர்கள் கேட்டால் சிரிக்கும்படியான தாழ்வான விருப்பத்தை விளைக்கும் என்று அஞ்சக்கடவன்.

---

[1] சொரூபம் - சேஷத்துவ சொரூபம்.

[2] பெரிய திருமொழி, 1. 3 : 8.

[3] திருவாய். 4. 1 : 5.

ஆக, இப்படி அகங்காரம், பொருள், காமம் என்னும் இம் மூன்றும், [1] சொரூபத்தை வளர்க்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களை விரும்பாதபடியும், சொரூபத்தை அழிக்கின்ற சம்சாரிகளை விரும்பும்படியும், சொரூபத்தை அழிக்கும் தன்மையோடு வெறுத்துத் தள்ளும் தன்மையையுடைய மகளிரை விரும்பும் படியும் பண்ணும் என்று அவற்றின் கொடுமைகளை நினைந்து, 'என் செய்யத் தேடுகின்றனவோ !' என்று அஞ்சவேண்டும் என்றபடி.

இனி, 'அர்த்த காம அபிமானங்கள் மூன்றும்' என்பது பாடமாயின் [2] 'கர்வோபிமாநோஹங்காரঃ' என்கிறபடியே அபிமானம் என்ற சொல்லானது அகங்காரத்தைச் சொல்லுகிற தாகையாலே, மேலே கூறிய வாக்கியத்தை முறை நிரல் நிறையாகக் கொள்ளாமல் [3] மயக்க நிரல் நிறையாகக்கொண்டு மேற்கூறியவாறே பொருள் கூறுக.

'ஆத்ம குணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ளவொண்ணுது, சதாசார்ய பிரசாதம் அடியாக வருகிற பகவத் பிரசாதத்தாலே பிறக்குமத்தனை' என்று துணிந்து, [4] 'சமம் தமம் முதலான ஆத்ம குணங்கள், அநாதிகாலம் அகங் காரம் முதலானவைகளுக்கு விளைநிலமாய் ஆத்ம குணங்கள் அல்லாத மற்றைய தீய குணங்களைக் கூடு பூரித்துக்கொண்டு கருமங்களுக்குப் பரதந்திரப்பட்டிருக்கிற நம்முடைய முயற்சி யாலும், ஆத்ம குணங்கள் தோன்றுவதற்கு விரோதிகளான அகங்காரம் முதலாயினவற்றை வளர்ப்பவர்களாய் ஆத்ம குணங்கள் அல்லாத மற்றைய தீய குணங்கள் நிறைந்தவர் களாய்க் கருமங்களுக்குக் கட்டுப்பட்டவர்களாய் இருக்கிற பிற ருடைய முயற்சியாலும் பிறப்பித்துக்கொள்ளவொண்ணுது; ஆத்ம குணங்களுக்கெல்லாம் கொள்கலமாய் அடியிலே தம்

---

[1] சொரூபம் - சேஷத்துவ சொரூபம்.

[2] 'அபிமானம்' என்பது அகங்காரம் என்ற பொருளில் வருவதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'கர்வঃ' என்று தொடங்கி. இது நிகண்டு.

[3] 'அர்த்தம் பிரதிகூலர்பக்கல் பிராவண்யத்தையும், காமம் உபேக்ஷிக்குமவர்கள் பக்கல் அபேக்ஷையையும், அபிமானம் அநுகூலர் பக்கல் அநாதரத்தையும் விளைக்கும்' என்று கூட்டவேண்டும்.

[4] இவற்றின் இலக்கணத்தை 96ஆம் சூத்திரத்தின் வியாக்கியானத் தில் காண்க.

முடைய காரணம் பற்றாத அருளாலே நம்மை அங்கீகரித்தருளி, நமக்கு ஆத்ம குணங்கள் உண்டாவது எப்போதோ என்று பல காலம் கரைந்து பகவானை வேண்டிக்கொண்டு போரும் நல்லா சாரியனுடைய பேரருள் அடியாக வருகிற நமது ஆத்மகுணங் கள் தோன்றுவதற்குத் தடையாக இருக்கின்ற பாவங்களை யெல்லாம் அழித்து, [1] அமலங்களாக விழிக்கும் பகவானுடைய நிறைந்த திருவருளாலே பிறக்குமத்தனை ' என்று துணிந் திருக்கக் கடவன்.

தேக [2] யாத்திரையில் உபேக்ஷை—சரீரத்தைக் காப்பாற்று வதற்கான செயல்களில் விருப்பம் அற்றிருக்கை வரவேண்டும்.

ஆத்ம யாத்திரையில் அபேக்ஷை-சேஷத்துவமே வடிவமான ஆன்மாவிற்குத் தாரகம் முதலானவைகளான பகவானுடைய குணநுபவம், கைங்கரியம் ஆகிற செயல்களில், பெற்றவளவில் மனம் நிறைந்தவனுயிராமல் மேன்மேலும் ஆசைப்படுதல் வரவேண்டும்.

பிராக்ருத வஸ்துக்களில் போக்யதா புத்தி நிவிருத்தி— உண்டியே உடையே இவற்றிற்கு உறுப்பான இவ்வுலக சம்பந்த மான பொருள்களில் ஆசைக்கு அடியான இனிய பொருள் என்ற நினைவு தவிர்தல் வேண்டும்.

[3] தேகதாரணம், பரமாத்ம சமாராதன சமாப்தி பிரசாத பிரதிபத்தி என்கிற புத்தி விசேஷம்—உலக சம்பந்தப்பட்ட அப்பொருள்களில் சரீரம் தரித்திருக்கைக்குத் தக்க அளவு உண்ணல், பரமாத்மாவான சர்வேச்வரனுடைய ஆராதனத்தின் முடிவின் வடிவமான பிரசாத பிரதிபத்தி என்ற புத்தி விசேடம் வரவேண்டும். அன்றிக்கே, பரமாத்ம சமாராதன சமாப்தி என்கிற புத்தி விசேடமும், தத்பிரசாத பிரதிபத்தி என்கிற புத்தி விசேடமும் வரவேண்டும் என்னவுமாம்.

---

[1] திருவாய், 1. 9 : 9.

[2] யாத்திரை - செல்லுதல். அதாவது, மேலே உள்ள காலத்தோடு சம்பந்தப்படுதற்குரிய செயலாய், இரக்ஷணத்தின்பொருட்டாக இருப்பது.

[3] தேகதாரணம் - சரீரம் கீழே விழாமல் தரித்திருப்பதற்குக் காரணமான செயல். தேகதாரணம், பிரசாத பிரதிபத்தி என்கிற புத்தி விசேடம் என்க. யாகம், அநுயாகங்களைக் கூறியபடி.

தனக்கு ஒரு கிலேசம் உண்டானல் கர்ம பலம் என்றுதல், கிருபாபலம் என்றுதல் பிறக்கும் பிரீதி முமுக்ஷுவாய்ப்பிரபந்நன் ஆனாலும், எடுத்த இச்சரீரம் இருக்குமளவும் [1] மூவகைத் துன்பங்களும் வருகை தவிராதிறே. ஆகையாலே, இச்சரீரத்தோடே இருக்கிற தனக்கு, மூவகைத் துன்பங்களுள் ஏதேனும் ஒரு துன்பம் உண்டானல், 'இது அநுபவித்தே போக்கவேண்டிய தான பிராரப்த கர்மமிறே. இத்தகைய கர்மங்கள் உள்ளவை கழியுமளவிறே இச்சரீரத்தோடு நம்மை எம்பெருமான் வைக்கிறது. இறைவனை அடைவதற்குத் தடைகளாகவுள்ளனவற்றுள் ஒன்றுகிலும் கழியப் பெற்றோமே' என்கிற நினைவாலேயாதல்; 'தீய பழக்கத்தாலே இவ்வுடம்பை விட இசையாமல் இவ்வுலகப் பொருள்களையும் அநுபவித்துக்கொண்டு இவ்வுலக வாழ்விலே பொருந்தியிருக்கிற நம்மை, துன்பம் அநுபவித்தலைப் பண்ணுவித்து, இதினின்றும் பற்று அறுத்து, கொண்டுபோக நினைக்கிற சர்வேச்வரனுடைய கிருபையின் பலமிறே இது?' என்கிற நினைவாலேயாதல் உண்டாகக்கூடிய பிரீதி வரவேண்டும்.

[2] பூர்வாகம், உத்தராகம், பிராரப்த கண்டம் என்னும் எல்லாவற்றையும் கழிக்கிற இறைவனுக்கு, இந்தச் சரீரத்தில் அநுபவிக்கத் தக்க கர்மங்களையும் கழிக்கை அரிதன்றிறே? கர்மங்களின் பயனாய்த் தொடர்ந்து வருகின்ற துன்பங்களை அநுபவியாநின்றாலும் 'இச்சரீரத்தை விட இசையாத இவனைத் துன்பங்கள் அற்றவனாக ஆக்கி வைப்போமாயின், இச்சரீரத்தோடே நீண்டகாலம் இருக்க விரும்புதல், இன்னம் வேறு ஒரு சரீரத்தை விரும்புதல் செய்யுமாகையால், இச்சரீரத்திற்குள்ள கர்மங்களை அநுபவித்தே இறுக்கக்கடவன்' என்றிறே வைக்கிறது; ஆன பின்பு, மற்று உண்டான கர்மங்கள் எல்லாவற்றையும் கழித்து, இவ்வுலக வாழ்வினின்றும் நீக்கி,

---

[1] மூவகைத் துன்பங்கள் - தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றி வருவனவும், தெய்வத்தைப் பற்றி வருவனவுமாம்.

[2] 'துன்பத்தை அநுபவிக்கச் செய்தல் கிருபையின் பலன் என்று கூறுதல் பொருந்துமாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'பூர்வாகம்' என்று தொடங்கி. பூர்வாகம் - இறைவனைப் பற்றுவதற்கு முன்னே செய்த நல்வினை தீவினைகள். உத்தராகம் - பற்றின பிறகு தன்னை அறியாமல் செய்யும் நல்வினை தீவினைகள். பிராரப்த கண்டம் - மீண்டு வேறொரு உடலை எடுத்து அநுபவிக்கப்படும் நல்வினை தீவினைகளைக் குறிக்கின்றது.

இவனைக் கடுகத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகையில் உண்டான கிருபையாலே ஆயினது போன்று, [1] இத்தனையும் கழியாமல் வைத்ததும் [2] கிருபையாலேயிறே. அநாதி காலம் எடுத்த சரீரந்தோறும் அநுபவித்த துன்பம் பகவானுடைய தண்டனையின் பயன்; இது அவனுடைய அருளின் பயன்.[3] "எவனுக்கு அருள் செய்ய நினைக்கின்றேனோ, அவனுடைய செல்வத்தை நான் அழித்துவிடுகிறேன்" என்றாரிறே. ஆகையாலே, இதனைக் 'கிருபா பலம்' என்கிறது.

ஸ்வ அநுஷ்டானத்தில் சாதனத்வ புத்தி நிவிருத்தி— பிரபந்நனை தன்னுடைய அதிகாரத்திற்குத் தகுதியாகச் செய்து கொண்டு போரும் நல்லொழுக்கங்களை, பேற்றிற்குச் சாதனமாக நினையாதொழிகை வேண்டும்.

விலக்ஷணருடைய ஞான அநுஷ்டானங்களில் வாஞ்சை— [4] "நாட்டாரோடு இயல்வொழிந்து நாரணனை நண்ணி" இருக்கையாலே குற்றமற்ற ஞானத்தையும் குற்றமற்ற பக்தியையுமுடையராயிருக்கும் விலக்ஷணரான முன்னோர்களுடைய விலக்ஷணமான அந்த ஞானமும் அந்த நல்லொழுக்கமும் நமக்கு உண்டாகவேண்டும்' என்னும் ஆசையுடையனாகை வேண்டும்.

உகந்தருளின நிலங்களில் ஆதர அதிசயம்—[5] 'தான் உகந்த ஊர்' என்கிறபடியே சர்வேச்வரன் உகந்து வசிக்கிற திவ்யதேசங்கள் என்றால் [6] 'கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று மண்டினார்' என்கிறபடியே மனம் அங்கே மண்டி விழும்படி மேன்மேலும் பெருகுகிற அவா உண்டாக வேண்டும்.

---

[1] இத்தனையும் - இச்சரீரத்தால் அநுபவிக்கப்படுகிற நல்வினை தீவினைகள்.

[2] 'அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்;
மறத்திற்கு மஃதே துணை.'
என்ற திருக்குறளின் பொருளை அறிதல் தகும்.

[3] 'யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்யவித்தம் ஹராம் யஹம்' என்பது பிரமாணம்.

[4] திருவாய். 10. 6 : 2. [5] திருநெடுந்தாண்டகம், 6.

[6] திருக்குறுந்தாண்டகம், 19.

மங்களாசாசனம்—அந்த அந்தத் திவ்யதேசங்களில் விரும்பி வசிக்கின்றவனுடைய சௌகுமார்யத்தையும், அவன் தன்மை அறிந்து நோக்குபவர் இல்லாமையையும், விரோதிகளின் கூட்டங்களின் மிகுதியையும் நினைத்து, ஏங்கி, 'என் செய்யத்தேடுகிறது!' என்று வயிறு எரிந்து இரவும் பகலும் திருப்பல்லாண்டு பாடுகை வரவேண்டும்.

இதர விஷயங்களில் அருசி—பகவானுக்கு வேறுபட்டவைகளான சிற்றின்பங்களில் குற்றங்களைப் பார்த்தல் முதலாயினவைகளாலே விருப்பம் அற்றிருக்கை வரவேண்டும்.

ஆர்த்தி—மகளிர்பால் ஆசைக்குக் காரணமான இவ்வுடம்போடே இருள்தருமாஞாலத்தே இருக்கிற இதில் அடிக்கொதிப்பாலும், பேற்றின் வைலக்ஷண்யத்தைக் காண்டலால் வந்த பேற்றில் விளம்பத்தைப் பொறுமையாலும் படும் துன்பம் உண்டாக வேண்டும்.

அநுவர்த்தன நியதி—பகவான் திறத்திலும் பாகவதர் திறத்திலும் தன்னுடைய சேஷத்துவத்திற்குத் தகுதியாகப் பேசுகின்ற தாழ்ந்த வார்த்தைகளையும் செய்கின்ற தாழ்ந்த செயல்களையும், சம்சாரிகளிடத்தில் மறந்தும் பேசாதொழிகையும் செய்யாதொழிகையும் வரவேண்டும்.

ஆகாரநியதி—[1] "சாதி, ஆச்ரயம், நிமித்தம் என்னுமிவற்றால் குற்றங்கள் இல்லாதனவாய், சர்வேச்வரனுடையவும் அவன் அடியார்களுடையவும் பிரசாதங்களான பொருள்களையே ஆகாரமாகக் கொள்ளுமதொழிய, அவற்றின் வேறுபட்ட பொருள்களை ஆகாரமாகக் கொள்ளக்கடவோமல்லோம்' என்னுமிருப்பு வரவேண்டும்.

---

[1] ஈருள்ளி, வெள்ளுள்ளி, முருங்கை, வெண்கத்தரிக்காய் முதலான பொருள்கள் சாதியினாலே துஷ்டமானவை. துஷ்டம் - தோஷமுடையது. தோஷம் - குற்றம். சத்துவ குணமுடைய பொருள்களாய் இருந்தாலும், தேவதாந்தர சம்பந்தமுள்ள இடங்களில் உள்ள பொருள்கள், ஆசாரம் கெட்டவனிடத்துள்ள பொருள்கள், சம்சாரிகள் விரும்பிய பொருள்கள் என்னும் இவையெல்லாம் ஆச்ரயதுஷ்டங்களாம். ஆச்ரயம் - இருக்கும் இடம். மேலே கூறிய இரண்டு குற்றங்களும் இல்லாதனவாய் இருந்தாலும், சிரார்த்தம் முதலியவற்றால் கிடைக்கும் பொருள்கள் நிமித்த துஷ்டங்களாம். மணச்சோறு, பிணச்சோறு, விலைச்சோறு முதலானவை இவ்வினத்தில் சேர்ந்தவை.

அநுகூலசகவாசம்—தம்முடைய சம்பந்தத்தாலே ஞானம் அநுஷ்டானமாகிற இவைகளை வளரச் செய்யும் ஸ்ரீவைஷ்ண வர்களோடு கணநேரமும் பிரியாமல் சேர்ந்து வசித்தல் வரவேண்டும்.

பிரதிகூல சகவாச நிவிருத்தி—தம்முடைய சேர்க்கையாலே ஞானத்தையும் நல்லொழுக்கத்தையும் போக்குகின்ற பிரதிகூல ரானவருடன் கணநேரமும் சேராதிருத்தல் வரவேண்டும்.

இங்குக் கூறிய அநுகூலரும் பிரதிகூலரும் இன்னார் என்பதனை [1]மேலே இவர் தாமே அருளிச்செய்வர்.

சதாசார்ய பிரசாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக் கொண்டு போரக் கடவன்—மேலே கூறிய இவை இத்தனையும் ஞானத்தாலும் நல்லொழுக்கத்தாலும் நிறைந்தவனான நல்லாசிரி யனுடைய, எல்லா மங்களத்தையும் கொடுக்கக்கூடியதான பேரருளாலே தாமாகவே மேன்மேலும் வளரும்படி செய்து கொண்டு போரக்கடவன் என்றபடி.

நல்லாசிரியனுடைய நல்லருளாலே வளரும்படி இவன் பண்ணிக்கொண்டு போருகையாவது, அவன் நல்லருள்வளர்தற் குரிய காரியங்களை இவன் செய்துகொண்டு போருகை. நல் லருள் வளர்தற்குரிய அக்காரியங்கள் இன்னது இன்னது என்று மேலே விரித்து அருளிச்செய்வர். மேற்கூறிய இவையனைத்தும் அவசியம் அநுஷ்டானத்தில் இருக்கவேண்டும் என்பது தோற்றுகைக்காகப் 'போரக்கடவன்' என்று விதி முகத்தால் அருளிச்செய்கிறார். (166)

## 247

'மங்களாசாசனம் ஸ்வரூபவிருத்தமன்றோ?'

என்னில்,[2]

என்பது சூத்திரம்.

---

[1] 259, 263ஆம் சூத்திரங்களைக் காண்க.

[2] இச்சூத்திரமும் மேல் சூத்திரமும் ஒரு சூத்திரமாகத் தரப் பட்டிருக்கின்றன முன்னைய அச்சுப்பிரதிகளில். இரண்டு சூத்திரங் களாகவே இருத்தல் தகும். அவதாரிகை நோக்குக. ஸ்வரூபம் - சேஷத்துவ சொரூபம். விருத்தம் - முரண்.

அவ :—இந்தத் தினசரியையில் சொன்னவற்றுள் விவரிக்க வேண்டுவனவற்றை விவரிப்பதாகத் திருவுள்ளம் பற்றி முதலில் மங்களாசாசனத்தை விவரித்தருளுகிருர். ‘ எல்லாக் குற்றங்களுக்கும் எதிர்த்தட்டானவனுய் எல்லா நற்குணங்களுக்கும் நிலைக்களமானவனுய்த் தன்னை ஒழிந்த மற்றைய எல்லாப் பொருள்களையும் காக்கின்றவனுயிறே சர்வேச்வரன் இருப்பது; இப்படியிருக்கிற அவனைக்கொண்டு தனக்கு உண்டான அமங்களங்களைப் போக்கி, இல்லாத மங்களங்களை உண்டாக்கிக் கொள்ளக்கடவனுய், அவனுலே காப்பாற்றப்படுகின்றவனுன இவன், தன்னைக் காக்கின்றவனுன சர்வேச்வரனுக்குத் தான் மங்களத்தை உண்டாக்க விரும்புதல், அவனுலே காக்கப்படுகின்ற தன்மையதான இவன் சொரூபத்திற்கு முரண் அன்ருே?’ என்னும் வினுவினை அநுவதிக்கிருர் ‘ மங்களாசாசனம் ஸ்வரூப விருத்தம் அன்ருே என்னில் ’ என்று. (167)

## 248

ஞானதசையில் ரக்ஷ்ய ரக்ஷக[1] பாவம் தன் கப்பிலே கிடக்கும்; பிரேமதசையில் தட்டுமாறிக் கிடக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—அதனை, விடை இறுத்துப் போக்குகிருர் ‘ ஞான தசையில் ’ என்று தொடங்கி.

வியாக் :—

‘ ஞான தசையில் ’ என்றது, சர்வேச்வரனே காப்பாற்றுகின்றவனுகவும் தான் அவனுலே காப்பாற்றப்படும் பொருளாகவும் [2] பிரணவத்தில் சொல்லுகிறபடியே தெளியக்கண்டு, அதனை நினைத்திருக்கும் நிலை என்றபடி. ‘ ரக்ஷ்ய ரக்ஷக பாவம் தன் கப்பிலே கிடக்கும் ’ என்றது, அந்த ஞானநிலையில் [3] ‘ களைவாய் துன்பம், களையா தொழிவாய், களைகண் மற்றிலேன் ’ என்கிற

---

[1] ரக்ஷ்ய ரக்ஷகம் - காப்பவனும் காக்கப்படும் பொருளும். தன் கப்பிலே - தன்னிடத்திலே. பிரேமம் - அன்பு.

[2] அகாரம் காக்கின்ற இறைவனையும், மகாரம் காக்கப்படும் உயிர்களையும் சொல்லுகிறது.

[3] திருவாய்மொழி, 5. 8 : 8.

படியே தனக்கு விருப்பமில்லாதனவற்றை நீக்குதல் முதலான வற்றிற்கு அவனே கடவன் என்று இருக்கையாலே, காப்பவன் காக்கப்படும் பொருள் என்னும் தன்மை தனக்கு உரிய இடத்திலே கிடக்கும் என்றபடி.

'பிரேமதசையில்' என்றது, சர்வேச்வரனுடைய அழகினையும் மென்மையினையும் நினைத்து, 'இவனுக்கு என் வருகிறதோ!' என்று அஞ்ச வேண்டாத அவன் திறத்திலும் அச்சத்தாலே ஐயம் கொண்டு, அவன் தூய தன்மையை நினைப்பதற்கு ஆற்றல் இல்லாதவராய் மனம் உருகும்படியான நிலை என்றபடி. 'தட்டு மாறிக் கிடக்கும்' என்றது, இந்த நிலையில் ஈச்வரனைக் காப்பாற்றுவதற்கு வழிதேடித் தடுமாறுகையாலே, ஈச்வரன் பக்கலிலே காப்பாற்றப்படுகின்ற தன்மையும், இவன் பக்கலிலே காப்பாற்றும் தன்மையுமாகத் [1] தனக்கு அமைத்த இடத்தில் அன்றிக்கே மாறுடிக் கிடக்கும் என்றபடி. (168)

## 249

**அவன் ஸ்வரூபத்தை [2] அநுசந்தித்தால் அவனைக் கடகாகக் கொண்டு தன்னை நோக்கும்; சௌகுமார்யத்தை அநுசந்தித்தால் தன்னைக் கடகாகக் கொண்டு அவனை நோக்கும்.**

என்பது சூத்திரம்.

**அவ :—**மேலே கூறியவற்றை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'அவன் ஸ்வரூபத்தை அநுசந்தித்தால்' என்றது, பிரணவத்தில் முதல் எழுத்தான அகாரத்தில் சொல்லுகிறபடியே முற்றறிவினனாய், எல்லாவற்றையும் செய்து முடிக்கும் அளவிலாத ஆற்றலையுடையவனாய், எல்லாப் பொருள்களையும் காக்கின்றவனான அவ்விறைவனுடைய சொரூபத்தை நினைத்தால் என்றபடி. 'அவனைக் கடகாகக் கொண்டு தன்னை நோக்கும்' என்றது, அவனைத் தன்னுடைய விருப்பமின்மையையெல்லாம்

---

[1] தனக்கு அடைத்தவிடம் - காக்கும் தன்மை இறைவனிடத்திலும், காக்கப்படும் தன்மை இவனிடத்திலும்.

[2] ஸ்வரூபம் - எல்லாப் பொருள்களையும் காப்பாற்றும் அவன் தன்மை. கடகு - காவல். சௌகுமார்யம் - மென்மை.

நீக்குகின்றவனுகக் கொண்டு, அறிவில்லாதவனுய் ஆற்றல் இல்லாதவனுய்த் தகுதியில்லாதவனுன தன்னைக் காத்துக்கொள் வான் என்றபடி.

'ஸௌகுமார்யத்தை அநுசந்தித்தால்' என்றது, [1] பேசப் பிசகும்படியான அவனுடைய ஸௌகுமார்யத்தை நினைத்தால் என்றபடி. 'தன்னைக் கடகாகக் கொண்டு அவனை நோக்கும்' என்றது, எல்லாவற்றையும் செய்து முடிக்கும் அவனுடைய அள விலாத ஆற்றல் முதலாயினவற்றை மறந்து, [2] குழைச்சரக்காக நினைத்து, தன்னைக் காப்பாற்றுகின்றவனுகக்கொண்டு, மங்களா சாசனம் செய்து அவனைக் காப்பாற்றுவான் என்றபடி.

இவ்விடத்தில் அழகு சொல்லிற்றில்லையாகிலும், அதுவும் மங்களாசாசனத்திற்குக் காரணமாகையாலும் [3] மேலே சொல்லு கையாலும், ஸௌகுமார்யத்தைச் சொன்னது அதற்கும் உப லக்ஷணம். (169)

## 250

**இவ்வர்த்தம், சக்கரவர்த்தி, ஸ்ரீஜநகராஜன் திருமகள், விச்வாமித்திரன், ஸ்ரீதண்டகாரண்ய வாசிகளான ருஷிகள், திருவடி, மகாராஜர், ஸ்ரீநந்தகோபர், ஸ்ரீவிதுரர், பிள்ளையுறங்கா வில்லி தாசர் தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம்.**

என்பது சூத்திரம்.

அவ :—' இப்படி ஸௌகுமார்யம் முதலானவைகளைக் கண்டு கலங்கி, காப்பாற்றுகின்ற அவ்விறைவனுடைய ஆற்றலின் பெருமையை மறந்து, தான் அவனைக் காப்பாற்றுவான் என்னும் இவ்விஷயம் எங்கே காணலாம்?' என்னும் வினவிற்கு, இது சிஷ்டாசாரசித்தம் என்று விடை இறுக்கிறுர் மேல்.

---

[1] பேசப்பிசகுதல் - பேசினவளவிலே நலுங்குதல். 'பஞ்செனச் சிவக்கும் மென்கால் தேவி' என்றதனை நோக்குக. 'என' என்பது செயவெனெச்சம். கம்பராமா. யுத். விபீஷணனடைக். 123.

[2] குழைச்சரக்கு - குழைந்து போகும் பொருள்; வல்லவனுலே காப்பாற்றப்படும் பொருள்.

[3] 'மேலே' என்றது சூத். 252ஆம் சூத்திரத்தை.

**வியாக் :**—சக்கரவர்த்தி—பெருமாள் பிராட்டியைத் திருமணம் புணர்ந்து மீண்டு எழுந்தருளாநிற்க, பரசுராமன் வந்து தோன்றின அளவிலே, தாடகை, இவளுடைய புத்திரர்கள் என்னும் இவர்களைக் கொன்றதனாலே இவருடைய ஆற்றலின் பெருமையைத் தெளிவாக அறிந்திருக்கச் செய்தேயும், இவருடைய இளமையையும் சௌகுமார்யத்தையுமே பார்த்து 'என்னாகப்புகுகிறதோ' என்று அச்சுகத்தையுடையவனாய், தான் முன்னே ஓடிச்சென்று, [1]'நீர் க்ஷத்திரியர்களிடத்திலிருந்த சீற்றம் நீங்கினவராய்ப் பிராமணராய் மிக்க தேஜஸையடைந்திருக்கின்றீர்; இளம்பருவமுள்ள என் புத்திரர்களான இவர்களுக்கு அபயம் கொடுக்கக்கடவீர்' என்று சரணம் புக, பின்னையும் அவன் பெருமாள்மேலே அடர்ந்து சொல்லுகிறபடியைக் கண்டு மூர்ச்சையடைந்தவனாய் இருந்து, [2]'பரசுராமன் தோற்றுப் போனான் என்கிற வார்த்தையைக் கேட்டு அரசன் சந்தோஷம் அடைந்தவனாய்ப் பேரானந்தம் கொண்டான்; அப்போது தன் புத்திரர்களையும் தன்னையும் மறுபிறவி பிறந்தவர்களாக எண்ணினான்' என்கிறபடியே அவன் தோற்று மீண்டு போனான் என்று கேட்ட பின்பு தானும் பிள்ளைகளும் மறுபிறவி பிறந்தார்களாக நினைத்திருந்தானிறே.

ஸ்ரீஜனகராஜன் திருமகள்-[3] தலைநீர்ப்பாட்டிலே இவருடைய பெருமையெல்லாம் அறியுமவளாயிருக்கச்செய்தேயும், திருமுடி சூட்டுதற்காக அலங்காரம் செய்த திருமேனியையுடையராய்க் கொண்டு, சக்கரவர்த்தி திருமாளிகைக்கு எழுந்தருளுகிற போது, இவரது வடிவழகிலே தோற்று 'இதற்கு என்வருகிறதோ!' என்று பேரன்பினாலே கலங்கி, [4]'கறுத்த கண்களையுடைய

[1] க்ஷத்ரரோஷாத்-சூத். 250.
ப்ரசாந்தஸ்த்வம் ப்ராஹ்மணஶ்ச மஹாயஶா:
பாலாநாம் மமபுத்ராணாம் அபயம் தாதுமர்ஹஸி.
என்பது ஸ்ரீராமா. பால. 75 : 6.

[2] 'கதோ ராம இதிஶ்ருத்வா ஹ்ருஷ்ட: ப்ரமுதிதோந்ருப:
புநர்ஜாதம் ததாமேநே ஸுதாநாத்மாந மேவச.'
என்பது ஸ்ரீராமா. அயோத். 17 : 6.
இங்கு, கம்ப. பால. பரசுராமப் படலம் காண்க.

[3] தலைநீர்ப்பாடு - முதல் மடை. அதாவது, ஆதியிலே என்றபடி.

[4] 'பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா
ஆத்வார மநுவவ்ராஜ மங்களாநி அபிதத்புஷி.'
என்பது ஸ்ரீராமா. அயோத். 19 : 20

பிராட்டி பெருமாளால் கௌரவிக்கப்பட்டுப் பெருமாளை மங்களா சாசனம் செய்துகொண்டு வாசல் அளவும் உடன் சென்றாள்' என்கிறபடியே திருவாசல் அளவும் தான் மங்களாசாசனம் செய்துகொண்டு பின்சென்று, [1] 'கீழ்த்திசையில் இந்திரனும் தென்திசையில் யமனும் மேல்திசையில் வருணனும் வடதிசையில் குபேரனும் உம்மைப் பாதுகாக்கவேண்டும்' என்கிறபடியே திசை காவலர்களை இவர்க்குப் பாதுகாவலர்களாக விரும்பினாளிறே.

'ஜனகராஜன் திருமகள்' என்பதனை ஜனகராஜனும் திருமகளும் என்று பிரித்துச் சொல்லவுமாம். அப்போதைக்கு, ஸ்ரீ ஜனகராஜன், சிவபெருமானுடைய வில்லை ஒடித்ததனாலே பெருமாளுடைய ஆற்றலின் பெருமையைக் கண்டிருக்கச் செய்தேயும், [2] 'என்பெண்ணான இந்தச் சீதையானவள் நீர் செய்யும் தர்மங்களுக்கெல்லாம் துணையாக இருப்பாள்; இப்படிப்பட்ட இவளைத் திருவுள்ளம் பற்ற வேண்டும்; இவள் கையினை உம்முடைய திருக்கரத்தால் பிடித்துக்கொள்ளும்; உமக்கு மங்களம் உண்டாகுக!' என்கிறபடியே உயர்குலப் பிறப்பு முதலியவைகளால் வீறுடையளான இவளைக் கைக்கொண்டருளும் என்று காட்டிக் கொடுக்கிறவளவிலே இவருடைய அழகையும் சௌகுமார்யத்தையும் கண்டு கலங்கி, இச்சேர்த்திக்கு ஒரு தீங்கும் வாராதொழிய வேண்டும் என்று 'பத்ரந்தே—உமக்கு மங்களம் உண்டாகுக,' என்று மங்களாசாசனம் பண்ணினான் என்கை.

விசுவாமித்திரன்—தன்னுடைய வேள்வியைக் காக்கும் பொருட்டுப் பெருமாளை அழைத்துக்கொண்டு போகிறபோது, நடுவே தாடகை பேராரவாரத்தோடு எதிர்த்து வருகிறபடியைக் கண்டு [3] 'மகாத்மாவாயும் சத்திய பராக்கிரமத்தோடு கூடியவராயுமுள்ள ஸ்ரீராமபிரானை நான் அறிவேன்' என்கிறபடியே பெரு

---

[1] 'பூர்வாம்திஶம் வஜ்ரதரோ தக்ஷிணாம் பாதுதே யமঃ
வருணঃ பஶ்சிமாமாஶாம் தநேஶஸ்தூத்தராம்திஶம்.'
என்பது ஸ்ரீராமா. அயோத். 16 : 24.

[2] 'இயம்ஸீதா மமஸுதா ஸஹதர்மசரீ தவ
ப்ரதீச்சசைநாம் பத்ரம்தேபாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா'
என்பது ஸ்ரீராமா. பால. 73 : 27.

[3] 'அஹம்வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்.'
என்பது ஸ்ரீராமா. பால. 19 : 14.

மாளுடைய சக்தியின் பெருமையை அறிந்திருக்கச் செய்தேயும், சௌகுமார்யத்தைப் பார்த்துக் கலங்கி, [1] "பிரமரிஷியான விசுவாமித்திரரும் 'ஹும்' என்று அந்தத் தாடகையை விரட்டி விட்டு, இரகு 'குலத்தில் அவதரித்த பிள்ளைகள் இருவர்க்கும் மங்களமும் வெற்றியும் உண்டாகுக' என்று சொன்னார்" என்கிற படியே தான் முன்னே நின்று அவளை உங்காரத்தைச் செய்து, பெருமாளுக்கும் திருத்தம்பியார்க்கும் ஒரு தீங்கும் வாராதவாறு மங்களாசாசனம் செய்தானிறே.

ஸ்ரீதண்டகாரண்ய வாசிகளான ரிஷிகள்— [2]"தர்மத்தைச் செய்கின்றவர்களாயும் உறுதியான விரதங்களையுடையவர்களாயும் இருக்கும் அந்த இருடிகள், உதிக்கின்ற சந்திரன் போன்றவரான அந்தப் பெருமாளைப் பார்த்து மங்களாசாசனம் செய்துகொண்டு உபசாரம் செய்தார்கள் என்கிறபடியே தங்கள் விரோதிகளைப் போக்கி விருப்பத்தை முடித்துத் தருவார் இவரே என்று அதற்குரிய சாதனங்களைச் செய்துகொண்டிருக்கிற தாங்கள், இவர் அண்மையில் வந்தவாறே, அவற்றை மறந்து இவர் வடிவழகிலே துவக்குண்டு மங்களாசாசனம் செய்தார்களிறே.

திருவடி—முதன்முதலில் பார்த்த போதே [3] "நீண்டிருப்பனவும், அழகோடு கூடித்திரண்டிருப்பனவும், கணைய மரம் போன்றிருப்பனவும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கத் தக்கனவுமான தோள்கள் ஏன் அலங்கரிக்கப்படவில்லை?" என்கிற படியே கணைய மரங்கள் போலே இருக்கிற திருத்தோள்களின் மிடுக்கைக் கண்டு 'இவர் நம்மைக் காப்பாற்றுவதற்குக்குறை இல்லை' என்று எண்ணியிருக்கச் செய்தேயும், அவற்றின் அழகினைக் கண்டு ஈடுபட்டு, 'பிறர் கண்ணெச்சில் படில் செய்வது என்!' என்று ஐயங்கொண்டு, திருவாபரணங்களாலே இவற்றை

---

[1] 'விஶ்வாமித்ரஸ்து ப்ராஹ்மர்ஷிः ஹுங்காரேணாபி பர்த்ஸ்யதாம்.
ஸ்வஸ்தி ராகவயோரஸ்து ஜயஞ்சைவாப்ய பாஷத.'
என்பது ஸ்ரீராமா. பால. 26 : 14.

[2] 'தேதம் ஸோமமிவோத் யந்தம் த்ருஷ்ட்வாவை தர்ம சாரிணः
மங்களாநி ப்ரயுஞ்ஜாநாः ப்ரத்ய க்ருஹ்ணந் த்ருட வ்ரதாः'
என்பது ஸ்ரீராமா. ஆரண். 1 : 11.

[3] 'ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவः பரிகோபமாः
ஸர்வபூஷண பூஷார்ஹாःகிமர்த்தம் நவிபூஷிதாः'
என்பது ஸ்ரீராமா. கிஷ். 3 : 14.

மறைத்திட்டு வையாதே இப்படி வெளியிடக் காரணம் என்?' என்று வயிறு பிடித்து, பின்பும், பெருமாளுடைய சக்தி விசேடத்தைப் பலவகையில் காணுநிற்கச் செய்தேயும், சௌகுமார்யத்தை நினைத்தலாலே, 'இவர்க்கு என் வருகிறதோ' என்று துணுக்குத் துணுக்கு என்று எல்லா நிலைகளிலும் கூட நின்று[1] நோக்கிக் கொண்டு திரிந்தானிறே.

மகாராஜர்—வாலி வதை முதலியவைகளாலே பெருமாளுடைய சக்தி கௌரவத்தைக் கண்டிருக்கச் செய்தேயும், சௌகுமார்யத்தையே பார்த்துக் கலங்கி, ஸ்ரீவிபீஷணாழ்வான் தான் தன் துணைவர் நால்வரோடும் வந்து தோன்றினபோது [2] 'இராக்கதர் நால்வரோடு கூடினவனாய், எல்லா ஆயுதங்களையுமுடையவனாய், இந்த இராக்கதன் நம்மைக் கொல்ல வருகிறான்; இதில் ஒரு ஐயம் இல்லை; பாருங்கள்'' என்கிறபடியே நமக்கெல்லாம் ஓர் உயிராயிருக்கிற பெருமாளை நலிகிற வழியாலே நம்மை எல்லாரையும் முடிப்பதற்காக வருகின்றான் என்று அறுதியிட்டு, முதலிகளுக்குக் காட்டி, [3] ''ஸ்ரீராமபிரானைச் சரணம் அடைந்தேன்'', [4] ''ஸ்ரீராமபிரானுக்கு விபீஷணனாகிய என்னை விரைவில் அறிவியுங்கள்'' என்ற வார்த்தைகளைக் கேட்டுவைத்தும், [5] ''எந்தக் காரணத்தால் இந்த விபீஷணன் கொடியவனான இராவணனுடைய தம்பியோ, அக்காரணத்தால் இவன் கொடிய தண்டனையால் கொல்லப்படவேண்டும்'' என்கிறபடியே இராவணனுடைய சம்பந்தம் ஒன்றையே பார்த்து, இவனைச் சித்ரவதை

---

[1] நோக்கிக்கொண்டு திரிந்ததை யுத்த காண்டத்தில் காண்க.

[2] 'ஏஷஸர்வாயுதோ பேதஸ்சதுர்பிஸ்ஸஹ ராக்ஷஸை:
ராக்ஷஸோப்யேதி பஸ்யத்வம் அஸ்மாந் ஹந்தும் நஸம்ஸய:'
என்பது ஸ்ரீராமா. யுத். 17 : 5.

[3] 'ராகவம் ஸரணம் கத:'
என்பது, ஸ்ரீராமா. யுத். 17 : 16.

[4] 'நிவேதயதமாம் க்ஷிப்ரம்'
என்பது ஸ்ரீராமா. யுத். 17 : 13.

[5] 'வத்யதாமேஷ தண்டோ தீவ்ரேண ஸசிநவ: ஸஹ
ராவணஸ்ய ந்ருஸம்ஸஸ்யப்ராதாஹ்யேஷ விபீஷண:'
என்பது ஸ்ரீராமா. யுத். 17 : 27.

செய்யவேண்டும் என்பது, [1] "பொறுமையுள்ளவர்களுள் சிறந்தவரே, அந்த இராக்கதனை, இராவணனால் இரகசியமாக அனுப்பப்பட்டவன் என்று அறிய வேண்டும்; ஆகையால் நான் அவனுக்குத் தண்டனையே தகுந்தது என்று எண்ணுகிறேன்" என்கிறபடியே, இராவணன் வரவிட வந்தவனே என்று அவனைத் திருவுள்ளம் பற்றவேண்டும்; அவனைத் தண்டிப்பதே தக்கது என்று எண்ணுகிறேன் என்பதாய் இப்புடைகளிலே பலவற்றையும் சொல்லி இவனை ஒருபோதும் கைக்கொள்ளக்கூடாது என்று ஒரு நிலை நின்று, [2] "சுக்கிரீவரே, பிசாசர்களையும் தானவர்களையும் இயக்கர்களையும் இராக்கதர்களாய்ப் பூமியில் இருக்கின்ற அவர்களையும் விரும்பினேனாயின், ஒரு விரலின் நுனியால் கொல்லுவேன்!" என்று தம்முடைய வலிமையைக் காட்டியும், புறவின் சரிதை கண்டு முனிவர் கூறிய சரிதை என்னுமிவற்றை அருளிச்செய்தும் தெளிவித்து அச்சத்தைக் கெடுத்துச் [3] "சுக்கிரீவரே, இவனை அழைத்துக்கொண்டு வருக" என்ன வேண்டும்படி பெருமாளைக் குழைச்சரக்காக நினைத்துக் காத்துக்கொண்டு போந்தாரிறே.

மகாராஜர் [4] என்றது ஸ்ரீசடாயு மகாராஜரை என்றும் சொல்லுவர்கள். அதாவது, ஸ்ரீசடாயுமகாராஜர், பிராட்டிக்காக இராவணனோடே பொருது குற்றுயிராய்க் கிடக்கிற தம்மைப் பெருமாள் வந்து கண்டவளவிலே, ஜனஸ்தானத்திலிருந்த பதினாலாயிரம் இராக்கதர்களையும் தனி வீரம் செய்து நின்று

---

[1] 'ராவணேந ப்ரணிஹிதம் தமவைஹி நிஶாசரம்
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யேக்ஷமம் க்ஷமவதாம் வர.'
என்பது, ஸ்ரீராமா. யுத். 17 : 24.

[2] 'பிஶாசாந்தாநவாந்யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந்.
அங்குள்யக்ரேண தாந் ஹந்யாமிச்சந் ஹரிகணேஶ்வர.'
என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 23. 'ஒரு நிலை நின்று' என்பதனை, பின்னே வருகின்ற 'காத்துக்கொண்டு' என்பதனோடு கூட்டுக.

[3] 'ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட'
என்பது, ஸ்ரீராமா யுத். 18 : 34.

'கதிரோன்மைந்த, கோதிலா தவனை நீயே
என்வயின் கொணர்தி என்றான்.'
என்பது கம்ப ராமா. விபீட. 117.

[4] 'சொல்லுவர்கள்' என்றது 'ஆய்' என்னும் பெரியாரை.

கொன்ற தோள்வலியை அறிந்திருக்கச் செய்தேயும், [1] 'நீண்ட ஆயுளையுடையவரே, இந்தப் பெரிய காட்டில் அருமருந்தைத் தேடுவதைப்போன்று எந்தப்பிராட்டியைத் தேடுகின்றீரோ, அந்தப்பிராட்டியையும் என்னுடைய உயிரையும் இராவணன் கவர்ந்தான்' என்கிறபடியே 'அருமருந்து தேடுவார் அடவி தோறும் தடுமாறுவது போன்று யாவள் ஒருத்தியை இந்தப் பரந்த காட்டிலே தேடிக்கொண்டு திரிகிறீர்? எப்பொழுதும் உம்முடைய உயிரைப் போன்றவளான அவளும் என்னுடைய பிராணனும் ஆகிற இரண்டு பொருள்களும் இராவணன் என்னும் பையலாலே கவரப்பட்டனகாணும்' என்று சொல்லாநிற்கச் செய்தே, பிரிவினாலாய இவருடைய துன்பத்தால் வந்த தளர்த்தி யையும் சௌகுமார்யத்தையும் இராக்கதர்களுடைய கொடிய பகையையும் நினைத்து, 'என்னாகத் தேடுகிறதோ!' என்று அஞ்சி, 'ஆயுஷ்மந்' என்று ஆயுளைப் பிரார்த்தித்தாரிறே.

ஸ்ரீநந்தகோபர்—பூதனையைக் கொன்ற செயலாலே கிருஷ்ண னுடைய தெய்வத்தன்மை சேர்ந்த சக்தியைக் கண்டிருக்கச் செய்தேயும், இளமைப்பருவத்தோடு கூடின சௌகுமார் யத்தையே கண்டு கலங்கி, வயிறு எரிந்து, [2] 'எவனுடைய திருநாபியில் பிறந்த தாமரைப் பூவினின்றும் எல்லாவுலகங்களும் தோன்றினவோ, அத்தகைய எல்லாச் சராசரங்களுக்கும் காரணனான அந்த அரி உம்மைப் பாதுகாக்க' என்கிறபடியே எல்லாவுலகங்கட்கும் காரணனாய் எல்லா விரோதிகளையும் அழிக்கின்றவனான சர்வேச்வரன் உம்மைக் காப்பானாக என்று காப்புச் செய்தாரிறே.

ஸ்ரீவிதுரர்—கிருஷ்ணனுடைய எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் தன்மையையும் எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கும் அளவிலாவாற்றலுடைமையையும் அறிந்திருக்கச் செய்தேயும், துரியோதனன் அவைக்களத்திற்கு எழுந்தருளின போது, அவன் பொய்யாசனம் இட்டபடியைக் கண்டு அஞ்சி,

---

[1] 'யாமோஷதிமி வாயுஷ்மந் அந்வேஷஸி மஹாவநே
ஸதேவீ மமசபிராணா ராவணேநோபயம் ஹ்ருதம்'
என்பது ஸ்ரீராமா. ஆரண். 67 : 15.

[2] 'ரக்ஷது த்வாமஶேஷாணாம் பூதாநாம் ப்ரபவோ ஹரி:
யஸ்யநாபி ஸமுத்பூத பங்கஜா தபவத் ஜகத்.'
என்பது பாரதம்.

அன்பினுலே அறியாதவராகி, [1] "சிறந்த ஞானத்தையுடையவ ரான அந்த விதுரர், கண்ணபிரானுக்கு இட்ட ஆசனத்தைக் கையால் நன்கு அமுக்கிப் பார்த்தார்" என்கிறபடியே தம்முடைய திருமாளிகையில் தாம் இட்ட ஆசனத்தையும் ஐயம் கொண்டு தம் கையால் அமுக்கிப் பார்த்தாரிறே.

[2] பிள்ளையுறங்கா வில்லி தாசர்—இறைவனுடைய ஞானம் சக்தி முதலானவைகளையெல்லாம் அறிந்து, பெருமாளே நம்மைக் காப்பவர் என்றிரா நிற்கச்செய்தேயும், அன்பினுலே பரவசப்பட்டவராகையாலே பெருமாள் உலாவி வரும்போது எங்கேனும் ஒரு சலனம் பிறக்கில் நம்பிராணனை விடுமித்தனை என்று சொட்டையை உருவிப் பிடித்துக்கொண்டு சேவிப்பர் என்று பிரசித்தமிறே.

'தொடக்கமானவர்கள்' என்கிற இதனுல் [3] "முதியோர்களும் இளையோர்களுமான பெண்கள் இராமபிரானுடைய நலத்தை வேண்டினவர்களாய்க் காலையிலும் மாலையிலும் எல்லாத் தேவர்களையும் வணங்குகிருர்கள்" என்கிற திருவயோத்யை நகரில் வசிக்கும் மக்கள்; [4] 'முன்பு, அமுதம் கொண்டுவரவேண்டும் என்று வேண்டிக்கொள்ளப்பட்டவரான கருடனுக்கு எந்த மங்களம் உண்டாகவேண்டும் என்று விநதை விரும்பினுளோ, அந்த மங்களம் உனக்கு உண்டாகுக' என்ற ஸ்ரீகௌசலையார், [5] 'தேவதேவ, தலைவனே, திருவாழி திருச்சங்கு கதை இவற்றேடு அவதரித்த இந்தத் திவ்ய

---

[1] 'ஸம்ஸ்ப்ருஶந் நாஸநம் ஶௌரே: விதுரஸ்ஸ மஹாமதி:' என்பது பாரதம் உத்யோகபர்.

[2] பிள்ளை யுறங்காவில்லிதாசர்-இராமாநுசருடைய சிஷ்யர். பெருமாள் - திருவரங்கநாதன். சொட்டை - உடை வாள்.

[3] 'ஸ்த்திரியோ விருத்தா: தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா: ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:'
என்பது ஸ்ரீராமா. அயோத். 2 : 52.

[4] 'யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதா கல்பயத் புரா
அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்ய தத்தேபவது மங்களம்.'
என்பது ஸ்ரீராமா. அயோத். 52 : 33.

[5] 'ஜாதோஸி தேவதேவேஶ ஶங்க சக்ர கதா தர.
திவ்ய ரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம் ஹர.'
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 3 : 10.

உருவத்தைக் கிருபையால் மறைத்துக்கொள்ளவேண்டும்' என்ற ஸ்ரீவசுதேவர், [1]'சுவாமீ, அசுரப் பிறவியான இந்தக் கம்சன் தேவரீருடைய அவதாரத்தை அறிய வேண்டா. நான்கு தோள்களோடு கூடின இந்தத் திவ்விய உருவத்தை மறைக்க வேண்டும்' என்ற தேவகிப்பிராட்டி முதலானுரையெல்லாம் நினைக்கிறது. (170)

## 251

**இளையபெருமாளை ஸ்ரீகுகப்பெருமாள் [2]அதிசங்கை பண்ண, இருவரையும் அதிசங்கை பண்ணி, ஸ்ரீகுகப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே.**

என்பது சூத்திரம்.

**அவ:**—எம்பெருமானுடைய அழகு யாரையும் மங்களா சாசனத்தில் மூட்டும் என்னுமிடத்திற்கு இன்னம் ஓர் உதாரணம் காட்டுகிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'இளைய பெருமாளை ஸ்ரீகுகப் பெருமாள் அதிசங்கைபண்ண' என்றது, சிருங்கிபேரபுரத்திலே எழுந்தருளி ஸ்ரீகுகப் பெருமாளை அங்கீகரித்த அன்று, பாங்கு அறிந்து இளையபெருமாள் படுத்துக் கொடுத்த இலைப்படுக்கையிலே பெருமாளும் பிராட்டியும் பள்ளிகொண்டருளாநிற்க, இளமைப் பருவம் முதலே மிக்க அன்பினையுடையவராகையாலே 'என் வருகிறதோ!' என்று அஞ்சி, முதுகில் இட்ட அம்பறுத் தூணியும் கட்டிய விரற்சரடும் நாண் ஏறிட்டு நடுக்கோத்துப் பிடித்த வில்லும் தாமுமாய் நடையாடும் மதிள்போலே வளைய வருகிற இளையபெருமாளைக் கண்டு, ஸ்ரீகுகப்பெருமாள், "ஒரு தம்பி தாயைக்கொண்டு இராச்சியத்தை வாங்கிக் கட்டின காப்போடே காட்டிலே தள்ளிவிட்டான்; இவனும் அவனைப் போன்று ஒரு தம்பியன்ரூே, தனியிடத்தில் என்செய்ய நினைத்து

---

[1] 'உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதத் சதுர்புஜம்
ஜாநாது மாவதாரம் தே கம்ஸோயம் திதிஜந்மஜ:'
என்பது ஸ்ரீவிஷ்ணு பு. 5. 3 : 13.

[2] அதிசங்கை-ஐயம். இருவரையும்-இளைய பெருமாளையும் ஸ்ரீகுகப் பெருமாளையும். பரிகரம்-சேனை. பெருமாளை-ஸ்ரீராம பிரானை. நோக்கிற்று - பாதுகாத்தது.

இப்படி ஆயத்தமாய் நிற்கின்றான் என்று தெரியாது என்று ஐயம் கொண்டு, அப்படி ஏதேனும் ஒரு தீங்கு நினைக்கில் இவனைத் தீரக் காணக்கடவோம் என்று வில்லும் கோலுமாகக் கொண்டு [1] இவர் இட்ட அடியிலே அடியிட்டு நிற்க என்றபடி.

'இருவரையும் அதிசங்கை பண்ணி ஸ்ரீ குகப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே' என்றது, ஸ்ரீ குகப் பெருமாள் ஏவல் தொழில் செய்து திரியும் சேனை, [2] 'அவன் ஞாதி; இவன் குறும்பனான வன்னியன்; இவர்கள் இருவருமாக இவ்விஷயத்தை என்செய்யத் தேடுகிறார்களோ!' என்று இருவரையும் ஐயம் கொண்டு, அப்படிச்செய்யில் இவர்களை அழியச் செய்தும் நாம் அத்தலையை நோக்கக்கடவோம் என்று தனித் தனியே கையும் வில்லுமாய்க் கொண்டு பெருமாளைக் காப்பாற்றியதிறே என்றபடி.

ஸ்ரீ பரதாழ்வானுக்கு [3]விசேஷம் சொல்லுகிற இடத்திலே ஸ்ரீ குகப்பெருமாள் [4]'பகைவர்களை அடக்க வல்ல இளைய பெருமாள், அம்புகள் நிறைந்த அம்பறாத்தூணியை முதுகிலே கட்டிக்கொண்டு, கட்டிய விரற்சரட்டினையுடையராய், பெரிய

---

[1] இவர் - இளைய பெருமாள்.

[2] அவன் - இளைய பெருமாள். இவன்-குகப் பெருமாள். இவ்விஷயத்தை - ஸ்ரீராம பிரானை. அத்தலையை - ஸ்ரீராம பிரானை.

[3] விசேஷம் - சிருங்கிபேரபுரத்தில் அன்று இரவு நடந்த செயல்களை.

[4] நியம்ய ப்ருஷ்டேது தலாங்குளித்ரவாந்
ஶரைஸ் ஸுபூர்ணௌ விஷுதி திம்பரந்தப:
மஹத்தநுஸ் ஸஜ்ய மபோஹ்ய லக்ஷ்மணோ
நிஶாமதிஷ்டத் த்வபரிதோஸ்யகேவலம்.
ததஸ் த்வஹங் சோத்தம சாபபாணப்ருத்
ஸ்திதோபவம் தத்ர ஸயத்ர லக்ஷ்மண:
அதந்த்ரிபி: ஜ்ஞாதி பிராத்த கார்முகை:
மஹேந்த்ர கல்பம் பரிபாலயம் ஸ்ததா

என்பன, ஸ்ரீராமா. அயோத். 87 : 22, 23.

'தும்பியின் குழாத்தின் சுற்றும் சுற்றத்தன் தொடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் தனிமை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்.'
என்ற கம்பராமாயணச் செய்யுள் இங்கு நினைத்தல் தகும்.

வில்லை நாண் ஏற்றித் தரித்துக்கொண்டு, இரவு முழுதும் அந்தப் பெருமாளுக்குக் காவலாய் நான்கு புறமும் சுற்றிவந்தார்; அதன் பின்னர் நானும் உயர்ந்த அம்புகளையுடைய வில்லைத் தரித்து, ஜாக்கிரதையுள்ளவர்களாய் வில்லோடு கூடியவர்களா யிருக்கிற என் இனத்தார்களுடன், இந்திரனுக்கு ஒப்பான ஸ்ரீ ராமபிரானை அப்படியே காத்துக்கொண்டு, எந்த இடத்தில் இளையபெருமாள் நின்றுகொண்டிருந்தாரோ அந்த இடத்தில் நின்றுகொண்டிருந்தேன்' என்று அற்றை நாள் இரவு நடந்த செயல்களைச் சொன்னாரிறே. (171)

## 252

ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களை வடி வழகு படுத்தும் பாடாயிற்று இது.

என்பது சூத்திரம்.

அவ:—' ஸ்ரீ குகப்பெருமாளுக்கும் அவருடைய சேனைக்கும் அன்று கண்ட மாத்திரமொழிய, முன்பு பெருமாளுடன் பயிற்சி இல்லையிறே; இப்படி இருக்கச் செய்தே, இவர்களுக்கு இந்தத் தன்மை கூடினபடி என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—' ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்று இது' என்றது, நெடுநாள் பழகின பழக்கம் இன்றிக்கே, ஒரு நாள் முகத்தைக் கண்டவர்களையும் அவன் திருமேனி அழகு படுத்தும் பாடாயிற்று இது என்றபடி.

எப்பொழுதும் பார்த்துக்கொண்டேயிருக்கிற நித்திய சூரிகளைப்போன்று, ஒருகால் பார்த்தவர்களையும், அன்பினாலே அறியாமையையுடையவர்களாய், அவன் திறத்திலும் ' என் வருகிறதோ!' என்று அச்சத்தாலே [1]அநுகூலரிடத்திலும் ஐயம் கொண்டு பரிந்து நோக்கும்படி பண்ணவற்றாயிறே பகவானு டைய திருமேனியின் அழகு இருப்பது. (172)

---

[1] அநுகூலர்-ஈண்டு இளைய பெருமாளைக் கொள்க.

## 253

**இவர்கள் நம்முடைய கோடியிலே என்னும் படியாயிற்று ஆழ்வார்கள் நிலே.**

என்பது சூத்திரம்.

அவ :—இன்னமும் இவ்வர்த்தத்திற்கு உதாரணமாக, மேலே கூறியவர்களைக்காட்டிலும் வேறுபட்டவர்களான ஆழ்வார்களுடைய மங்களாசாசன நிஷ்டையை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'இவர்கள்' என்றது, சக்கரவர்த்தி முதலாக [2]மேலே கூறப்பட்ட அதிகாரிகள் எல்லாரையும் சுட்டுகிறது. 'ஆனால், பிராட்டியையும் ஒக்கச் சொல்லலாமோ?' எனின், ஆழ்வார்களுள் தலைவரான நம்மாழ்வாரைக்காட்டிலும் பெரியாழ்வார்க்கு ஏற்றம் சொல்லுகிறது போன்று, போகத்தில் பரவசப்பட்டிருக்கிற பிராட்டியைக்காட்டிலும் மங்களாசாசனத்தில் ஊற்றத்தாலே ஆழ்வார்களுக்கு ஏற்றம் சொல்லக் குறை இல்லே. ஆனாலும், 'நம்முடைய கோடியிலே' என்னலாமோ?' எனின், இம்மங்களாசாசன நிஷ்டையில் அவர்களுடைய உயர்வைக் காட்டுவதற்காகக் கூறியதாகையாலே விரோதம் இல்லே. ஆகையால், எம்பெருமானுடைய சௌகுமார்யத்தையும் அழகினையும் கண்டு கலங்கிய மனத்தினராய் இவர்க்கு என்வருகிறதோ என்று பரிந்து நோக்கினவர்களாக மேலே கூறப்பட்ட சக்கரவர்த்தி முதலான எல்லாரும் என்றபடி.

'நம்முடைய கோடியிலே என்னும்படி யாயிற்று' என்றது, மங்களாசாசனம் செய்வதில் சேர்ந்திருக்கச் செய்தேயும், அன்பு இன்மையாலே மங்களாசாசனத்தில் ஊற்றம் அற்றிருக்கிற நம்போல்வார் மாத்திரம் என்று சொல்லலாம்படியாயிற்று என்றபடி. 'ஆழ்வார்கள் நிலே' என்றது, மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆகையாலே எல்லேயில்லாத பக்தியையுடையவர்களான ஆழ்வார்களுடைய மங்களாசாசன நிஷ்டை என்றபடி. (173)

---

[1] கோடி - வரிசை. ஆழ்வார்கள் நிலே - ஆழ்வார்களுடைய மங்களாசாசன நிஷ்டை.

[2] 'மேலே' என்றது 250ஆம் சூத்திரத்தைக் காட்டுகிறது.

## 254

ஆழ்வார்கள் எல்லாரையும் போல அல்லர் பெரியாழ்வார்.

என்பது சூத்திரம்.

அவ :—'இவ்வாழ்வார்கள் தாம் [1]மங்களாசாசனத்தில் வந்தால் தங்களுள் ஒப்பர்களோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆழ்வார்கள் எல்லாரையும் போல அல்லர் பெரியாழ்வார்' என்றது, மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வார்க்கும் நெடுவாசி உண்டு என்றபடி. (174)

## 255

அவர்களுக்கு[2] இது காதாசித்கம்; இவர்க்கு இது நித்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—'அவர்களைக்காட்டிலும் இவர்க்கு இதில் ஏற்றம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அவர்களுக்கு இது காதாசித்கம்' என்றது, மயர்வற மதிநலம் அருளப்பெற்றமை ஒத்திருக்கச்செய்தே, [3] வயிரவுருக்காய் [4] ஆண்களையும் பெண்ணுடை உடுத்தப் பண்ணும் பகவானுடைய விக்கிரகத்தின் அழகினை நினைந்தால் மேலும் மேலும் அநுபவிக்க வேண்டும் என்று விரும்புகிற

---

[1] மங்களா சாசனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்களார் வத்தளவு தாமன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வார் என்னும் பெயர்.

என்பது உபதேசரத்தினமாலை.

[2] இது - மங்களாசாசனம். காதாசித்கம் - ஒரு காலத்தில் உண்டாவது. நித்யம் - எப்பொழுதும் இருப்பது.

[3] வயிரவுருக்கு - வயிரத்தையும் உருகச் செய்வது.

[4] 'ஆடவர் பெண்மையை அவாவும் தோள்களையுடையவன்' என்பது கருத்து.

மற்றைய ஆழ்வார்களுக்கு, பரனுடைய மங்களமே பிரயோஜன மான இந்த மங்களாசாசனம் எப்போதும் இல்லாமல் ஏதேனும் ஒரு சமயத்திலே தேடிப் பிடிக்க வேண்டும்படியாயிருக்கும் என்றபடி. 'இவர்க்கு இது நித்யம்' என்றது, பெருமானுடை அழகு முதலான வைலக்ஷண்யத்தைப் பார்த்த பின்னர் அவனைய அநுபவிப்பவர் ஆகை அன்றிக்கே, அவனுக்கு என் வருகிறதோ என்ற அச்சத்தாலே ஐயம் கொண்டு, திருப்பல்லாண்டு பாடும் அன்பின் வசப்பட்டவரான இவர்க்கு, இந்த மங்களாசாசனம் எல்லாக் காலங்களிலும் உள்ளது ஒன்றுகச் செல்லும் என்றபடி. (175)

## 256

அவர்களுடைய [1]ஆழங்கால்தானே இவர்க்கு மேடாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும்' என்றது, அநுபவத்தில் ஈடுபட்டிருக்கிற அவர் களைக் கண்ணையும் மனத்தையும் கவர்ந்து ஆழங்காற்படுத்தும் அவனுடைய அழகுதானே, அதற்கு என் வருகிறதோ என்று அஞ்சி, மேன்மேலும் காப்பு இடும்படி மங்களாசாசனத்தில் ஈடு பட்ட இவர்க்கு, தரித்து நின்று மங்களாசாசனம் செய்தற்குத் தக்கதான நிலமாகவிருக்கும் என்றபடி. (176)

## 257

அவர்களுக்கு [2] உபயசேஷத்துவத்தையும் அழித்து ஸ்வரூபத்தைக் குமிழ்நீர் உண்ணப்

---

[1] 'ஆழங்கால்தானே' என்றது, ஆழங்கால்படுதற்குக் காரணமான அழகினை. 'மேடாயிருக்கும்' என்றது தரித்து நிற்றற்குரிய நிலமாய் இருக்கும் என்றபடி.

[1] 'உபயசேஷத்துவம்' என்றது இறைவனுக்கு அடிமைப்பட்டிருத் தலையும் அவனுடைய அடியார்களுக்கு அடிமைப்பட்டிருத்தலையும் குறித்தபடி. உபயம் - இரண்டு. ஸ்வரூபம் - சேஷத்துவ சொரூபம்.

பண்ணுமது, இவர்க்கு உபயவிருத்திக்கும் ஏது வாய் ஸ்வரூபத்தைக் கரையேற்றும்.

என்பது சூத்திரம்.

அவ :—[1] 'அது யாங்ஙனம்?' என்னும் வினாவிற்கு, விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— 'அவர்களுக்கு உபயசேஷத்துவத்தையும் அழித்து ஸ்வரூபத்தைக் குமிழ்நீர் உண்ணப் பண்ணுமது' என்றது, பகவானுடைய அநுபவத்திலேயே ஈடுபட்டவர்களாய் அவ்வநுபவம் நீங்குகிற காலத்தில் ஆற்றாமை கரை புரளும்படியிருக்கும் [2] மற்றை ஆழ்வார்களுக்கு. [3] "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் மற்றொருவர்க்கு உரியேனோ?" என்றும், [4] "உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்றும் கூறும்படி, பிரணவத்தால் கிடைக்கிற பகவத்சேஷத்துவமும், நமः பதத்தால் கிடைக்கிற, பகவத் சேஷத்துவத்திற்கு எல்லை நிலமான பாகவத சேஷத்துவமும் ஆகிற இரு வகைப்பட்ட சேஷத்துவத்தையும், [5] "நமக்கே நலமாதலின்" என்னும்படி தங்களுடைய பிரயோஜனத்திலே மூட்டியும், விளம்பம் காரணமாக

---

குமிழ்நீர் உண்ணப்பண்ணுதல் - மூழ்குவித்தல். பண்ணுமது - பண்ணுகின்ற இறைவன் அழகு. உபயவிருத்திக்கும் - அவ்விரண்டின் வளர்ச்சிக்கும். அவ்விரண்டாவது பகவத்சேஷத்துவமும் பாகவதசேஷத்துவமும்.

'அவர்களைக் குமிழ்நீர் உண்ணப்பண்ணுகிற பகவானுடைய அழகு, இவருக்கு உபயத்தினுடைய விருத்திக்கும் ஏதுவாய் இவரைக் கரையேறப்பண்ணும்' என முடிக்க.

1 'அது யாங்ஙனம்?' என்றது, 'ஆழங்கால்தானே இவர்க்கு மேடாய் இருப்பது எப்படி?' என்றவாறு.

2 'மற்றை ஆழ்வார்களுக்கு' என்னுமிதனைப் பின்னே வருகின்ற 'மங்களாசாசனம் என்பது ஒன்று அறியாதபடி' என்பதனோடு கூட்டுக.

3 இது, பெரிய திருமொழி, 8. 9 : 3. இது பகவத் சேஷத்துவத்திற்கு உதாரணம்.

4 இது, பெரிய திருமொழி, 8. 10 : 3. இது பாகவத சேஷத்துவத்திற்கு உதாரணம்.

5 இது, பெரிய திருமொழி, 9. 3 : 9.

வந்த கோபத்தாலே [1] "போகு நம்பி", "கழகம் ஏறேல் நம்பி" என்னும்படி ஆக்கியும், 'நம்முடைய முயற்சியால் செய்யும் செயல் கூடாது' என்னுமளவில் [2] "உங்களோடு எங்களிடை இல்லை" என்று உதறும்படி பண்ணியும், "வெஞ்சிறைப்புள்" என்பது போன்றவைகளாலே வெறுத்து வார்த்தை சொல்லு வித்தும் அழித்து, எம்பெருமானுக்கு உயர்வினைக் கொடுக்கக் கூடிய காரியங்களைச் செய்யுமதுவே வடிவான சேஷத்துவ சொரூபத்தை, மங்களாசாசனம் என்பது ஒன்று அறியாதபடி தன்பக்கலிலே மூழ்கும்படி பண்ணுமதான பகவானுடைய அழகு என்றபடி.

'இவர்க்கு உபயவிருத்திக்கும் ஏதுவாய் சொரூபத்தைக் கரை ஏற்றும்' என்றது, அந்த அழகினைக் காணுமிடத்தில் அநுபவத்தில் நெஞ்சு செல்லாமல் அதற்கு என் வருகிறதோ என்று வயிறு எரிந்து காப்பு இடும்படியான [3] இவர்க்கு, [4] 'உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்றும், 'மங்கையும் பல்லாண்டு' என்றும், 'சுடராழியும் பல்லாண்டு' என்றும், 'அப்பாஞ்ச சந்நியமும் பல்லாண்டு' என்றும் அவனுக்கும் அவன் அடியார்களுக்கும் மங்களாசாசனத்தைப் பண்ணு விக்கையாலே, எம்பெருமானுக்கும் அவன் அடியார்களுக்கும் அடிமைப்பட்டிருத்தலாகிய அவ்விரு அடிமைகளும் வளர் வதற்கும் காரணமாய், சேஷத்துவமாகிற சொரூபத்தைத், தன்னிடத்தில் மூழ்காதபடி நடத்தும் என்றபடி.

---

[1] 'போகுநம்பீ', 'கழகம் ஏறேல் நம்பீ' என்ற இரண்டும் பகவத் சேஷத்துவத்தை அழித்ததற்கு உதாரணம். இவை திருவாய்மொழியில் 'மின்னிடைமடவார்' என்ற திருப்பதிகம்.

[2] 'உங்களோடு', 'வெஞ்சிறைப்புள்' என்ற இரண்டும் பாகவத சேஷத்துவத்தை அழித்ததற்கு உதாரணம். இவற்றுள் முன்னையது, திருவாய். 8. 2 : 7. பின்னையது, திருவாய். 1. 4 : 1.

[3] 'இவர்க்கு' என்பதனை, மேலே வருகின்ற 'அவ்விரு அடிமை களும் வளர்தற்குக் காரணமாய்' என்பதனோடு கூட்டுக.

[4] இங்குக் காட்டப்படும் உதாரணங்களை எல்லாம் 'திருப் பல்லாண்டு' என்னும் பிரபந்தத்தில் காண்க. இவற்றுள் 'உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு' என்பது ஒன்றும் இறைவனை மங்களா சாசனம் செய்தது. ஏனையவை எல்லாம் அடியார்களை மங்களாசாசனம் செய்தவை.

ஆக, அவர்களுக்கு அப்படிச் சொரூபத்தைக் குமிழ்நீர் உண்ணப்பண்ணுகிற அவன் அழகும் இவர்க்கு இப்படிச் செய்கையாலே, அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாய் இருக்கையாலே, அவர்களுக்குப் போலே ஒரு காலத்தில் உண்டாவதன்றிக்கே, மங்களாசாசனம் இவர்க்கு எப்பொழுதும் செல்லும் என்றதாயிற்று. (177)

## 258

**[1] பயநிவர்த்தகங்களுக்குப் பயப்படுவது, பிரதிகூலரையும் அநுகூலர் ஆக்கிக்கொள்ளுவது, அதீதகாலங்களில் அபதானங்களுக்கு உத்தர காலத்திலே வயிறு எரிவது, பிராப்தி பலமும் இதுவே என்பது, அநிமிஷரைப் பார்த்து 'உறகல் உறகல்' என்பதாய்க்கொண்டு இது தானே யாத்திரையாய் நடக்கும்.**

என்பது சூத்திரம்.

அவ :—மற்றை ஆழ்வார்களுக்கு மங்களாசாசனம் ஒவ்வொரு காலங்களில் உண்டாவதாகவிருக்கச் செய்தே, பெரியாழ்வார்க்கு நித்தியமாக இருப்பதற்குக் காரணத்தை அருளிச் செய்தார் மேல். இம்மங்களாசாசனந்தான் இவர்க்கு நித்தியமாகச் செல்லும்படியை விளக்கமாக அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'பயநிவர்த்தகங்களுக்குப்பயப்படுவது' என்றது, இறைவனுடைய சௌகுமார்யத்தைக் கண்டு கலங்கி, இவ்விஷயத்திற்கு என்வருகிறதோ என்று மறுகுகிற இவரச்சத்தைப் போக்குவதற்காக, [2] மல்லர்களை வருத்தம் சிறிதும் இன்றி அழித்த தோள் வலியைக் காட்ட, இத்தோள் வலியை நினைத்து,

---

[1] பயநிவர்த்தகம் - அச்சத்தைப் போக்குவதற்குரிய பொருள்கள். அதீதகாலம் - முன்னே சென்ற காலம். அபதானங்கள் - செய்த செயல்கள். உத்தரகாலம் - பிற்காலம். பிராப்தி - பேறு. இதுவே - இந்தத் திருப்பல்லாண்டு பாடுதலே. அநிமிஷர் - இமையாதவர்கள்; நித்திய சூரிகள். உறகல் - உறங்காதீர்.

[2] திருப்பல்லாண்டு என்ற பிரபந்தத்தில் 'மல்லாண்டதிண்தோள் மணிவண்ணா' என்ற அடியை நோக்கியது.

மதியாதே, அசுரர்களும் இராக்கதர்களும் கலந்த போரிலே புகில், என்னாகக் கடவது என்று அதற்கு அஞ்சி, அத்தோள்களுக்கு மங்களாசாசனம் பண்ணுவது; உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்கள் உண்டாகைக்கும் தன் கடாக்ஷம் அமைந்திருக்கிற இவள் "அகல கில்லேன் இறையும்" என்று நம்மைப் பிரிய மாட்டாதேயிருக்க, நமக்கு வருகிற அமங்களங்கள் ஒன்று உண்டோ? என் செய்யப்படுகின்றீர் என்று இலக்ஷ்மீ 'சம்பந்தத்தைக் காட்ட, இச்சேர்த்திக்கு ஒரு தீங்குவரில் செய்வது என்?' என்று அஞ்சி' [1] "மங்கையும் பல்லாண்டு" என்று மங்களாசாசனம் பண்ணுவது; இந்த அச்சத்தை நீக்குவதற்காக, இச்சேர்த்திக்கு ஒரு தீங்கு வாராதபடி கல் மதிள் இட்டாற்போலே இருக்கிற இவர்களைப் பாரீர் என்று இரண்டு பக்கங்களிலும் ஏந்தின ஆழ்வார்களைக்காட்ட, 'அவர்களுக்கு ஒரு தீங்குவரில் செய்வது என்?' என்று அஞ்சி, "சுடராழியும் பல்லாண்டு", "அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டு" என்று மங்களாசாசனம் பண்ணுவது என்றபடி.

'பிரதிகூலரையும் அநுகூலராக்கிக்கொள்ளுவது' என்றது, [2] வேறு பயன்களை விரும்பாமையாலே அநுகூலரான பகவத்சரணார்த்திகளை மங்களாசாசனத்திற்குத் துணையாகக் கூட்டிக்கொண்ட அளவால் மனம் நிறைவுபெறுமையாலே, வேறு பிரயோஜனங்களை விரும்புவதனாலே பிரதிகூலரான [3] கேவலரையும் [4] செல்வத்தை விரும்புகிறவர்களையும் திருத்தி மங்களாசாசனத்திற்கு ஆளாம்படி அநுகூலர் ஆக்கிக்கொள்வது என்றபடி.

'அதீத காலங்களில் அபதானங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறு எரிவது' என்றது, [5] "இலங்கை பாழாளாகப் படை

---

[1] திருப்பல்லாண்டு. 2.

[2] இதனைத் திருப்பல்லாண்டில் 3, 6, 9ஆம் பாசுரங்களில் காண்க. பகவத் சரணார்த்திகள் - பகவானுடைய திருவடிகளையே பயனாக விரும்புகிறவர்கள்; பகவானுடைய அநுபவத்தையே விரும்புகிற ஞானிகள் என்றபடி.

[3] கேவலரை அநுகூலராக்கியதை, திருப்பல்லாண்டில் 4, 7, 10ஆம் பாசுரங்களில் காண்க.

[4] செல்வத்தை விரும்புகிறவர்களை அநுகூலர் ஆக்கியது திருப்பல்லாண்டில், 5, 8. 11ஆம் பாசுரங்களில் காண்க.

[5] திருப்பல்லாண்டு, 3.

பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே'' என்பது போன்றவை களாலே முன்னே கழிந்து போன காலங்களில் அவன் செய்த செயல்களுக்குப் பிற்காலத்திலே, சமகாலத்திற்போலே வயிறு எரிந்து மங்களாசாசனம் பண்ணுவது என்றபடி.

'பிராப்தி பலமும் இதுவே என்பது' என்றது, [1] ''சூழ்ழ் திருந்து ஏத்துவர் பல்லாண்டே'' என்று பரமபதத்தில் இறைவனை அடைந்ததன் பலமும் இந்த மங்களாசாசனமே என்பது என்றபடி.

'அநிமிஷரைப் பார்த்து' [2] 'உறகல் உறகல்' என்பது' என்றது, [3] 'அன்பினாலே காரணம் இல்லாமலே காப்பதில் விய சனத்தையுடையவர்களான வில் சக்கரம் வாள் முதலியவர் களாலே' என்கிறபடியே இறைவனைக் காப்பாற்ற வேண்டும் என்ற வியசனத்தையுடையவர்களாகையாலே இமையாதவர் களாகவிருக்கிற திவ்விய ஆயுதஆழ்வார்கள் முதலாயினவர்களைப் பார்த்து, 'குணங்களில் ஈடுபட்டவர்களாய் நஞ்சு உண்டாரைப் போலே உங்களை அறியாதிருத்தல் அநுபவத்திலே அழுந்திக் கைங்கரியத்தில் ஈடுபட்டவர்களாயிருத்தல் செய்யாதே, உணர்ந்து நோக்குங்கோள்' என்று பலகாலும் சொல்லுவது என்றபடி.

'ஆக, இதுதானே யாத்திரையாய் நடக்கும்' என்றது, ஆக, இங்ஙனம் செய்து இம்மங்களாசாசனமே தொழிலாக நடக்கும் என்றபடி. (178)

---

[1] திருப்பல்லாண்டு, 12.

[2] 'உறகல் உறகல் உறகல் ஒண்சுட ராழியே சங்கே
அறவெறி நாந்தக வாளே அழகிய சார்ங்கமே தண்டே
இறவு படாம லிருந்த எண்மர் உலோகபா லீர்காள்
பறவை அரையா உறகல் பள்ளி யறைகுறிக் கொண்மின்.'

என்பது பெரியாழ்வார் திரு. 5. 2 : 9.

[3] 'ஸ்நேஹாதஸ்தாநரக்ஷா
வ்யஸநிபிரயம் ஶார்ங்க சக்ராஸிமுக்யை:'

என்பது, ஸ்ரீ குணரத்நகோசம், 24.

## 259

அல்லாதவர்களைப்போலே கேட்கிறவர்க ளுடையவும் சொல்லுகிறவர்களுடையவும் தனி மையைத் தவிர்க்கையன்றிக்கே, 'ஆளும் ஆளார்' என்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காக ஆயிற்று, பாஷ்யகாரரும் இவரும் உபதேசிப்பது.[1]

என்பது சூத்திரம்.

அவ:—' இப்படி, மங்களாசாசனத்திற்கு ஆள் தேடிப் பிரதி கூலரையும் அநுகூலர் ஆக்குகைக்குப் பண்ணுகிற உபதேசம் திருப்பல்லாண்டு ஒன்றிலும் அன்றோ உள்ளது? மேல் இவர் உபதேசித்தவிடங்களில் மற்றை ஆழ்வார்கள் செய்த உபதேசங் களைக்காட்டில் வேறுபாடு என்?' என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' அல்லாதாரைப் போலே' என்றது, பரோபதே சத்தில் வந்தால் மற்றுள்ள ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் போலே என்றபடி. ' கேட்கிறவர்களுடையவும் சொல்லுகிற வர்களுடையவும் தனிமையைத் தவிர்க்கை அன்றிக்கே' என் றது, உபதேசிக்கிற பொருளைக் கேட்கிற சம்சாரிகளுடைய அநாதியான அஞ்ஞானத்தாலே, நற்றுணையான பகவானை அகன்று திரிகையால் வந்த தனிமையையும், சொல்லுகின்றவர் களான [2] தங்களுடைய, பகவானுடைய குணங்களை அநுசந்திக் கிற நிலையில் ஒருவர்க்கொருவர் அறிவித்துக்கொள்ளுவதற்கு உசாத்துணை இல்லாமையால் வந்த தனிமையையும் தவிர்ப்பது பிரயோஜனமாக உபதேசித்தல் அன்றிக்கே என்றபடி.

[3] ' ஆளும் ஆளார் என்கிறவனுடைய தனிமையைத் தவிர்க் கைக்காக ஆயிற்று பாஷ்யகாரரும் இவரும் உபதேசிப்பது' என்றது, இறைவனுடைய சௌகுமார்யத்தைக் கண்டு வயிறு

---

[1] அல்லாதவர்கள் - மற்றைய ஆழ்வார்கள். ஆளும் ஆளார் என்கிறவன் - ஆளும் ஆளார் எனப்படுகின்ற இறைவன்: செயப்பாட்டு வினை. பாஷ்யகாரர் - இராமாநுசர். இவர் - பெரியாழ்வார்.

[2] ' தங்களுடைய' என்பதனை மேலே வருகின்ற ' தனிமையையும்' என்பதனோடு கூட்டுக.

[3] திருவாய். 8. 3 : 3.

மறுகின ஆழ்வார் ஆராய்ந்து பார்த்தவிடத்தில், எல்லாரும் வேறு விஷயங்களிலே ஈடுபட்டவர்களாகத் தோற்றுகையாலே, இரண்டு உலகங்களிலும் அன்புடைமை காட்டுதற்கு ஆள் இல்லை; தம்முடைய வாசியறிந்து பரிந்து நோக்குகைக்கும் ஓர் ஆளையும் ஆளுற்றிலர் என்று பேசும்படியிருக்கிற எல்லையில்லாத சௌகுமார்யத்தையுடையனான சர்வேச்வரனுடைய தனிமைதீர, 'மங்களா சாசனத்திற்கு இவர்கள் ஆளாகவேண்டும்' என்று இதுவே பிரயோஜனமாகவாயிற்று, [1] பிராமாணிகரான ஆசாரியர்களுள் இராமாநுசரும், மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்களுள் இப்பெரியாழ்வாரும் உபதேசித்தருளுவது என்றபடி.

ஆகையால், இவ்வாழ்வார், பிரதிகூலரை அநுகூலராக்க உபதேசிக்கும் இடங்கள் எல்லாம் மங்களாசாசனத்தின் பொருட்டு என்னக் குறை இல்லை என்பது கருத்து. எம்பெருமானார் என்னாதே பாஷ்யகாரர் என்றது, ஸ்ரீபாஷ்ய முகத்தாலே வேதாந்தங்களின் கருத்துப் பொருளை வரையறுத்து நிச்சயம் செய்தவர் என்னும் பெருமை தோற்றுகைக்காக என்பது. (179)

## 260

அல்லாதார்க்கு, சத்தாசம்ருத்திகள், தர்சன அநுபவ கைங்கரியங்களாலே; இவர்க்கு, மங்களா சாசனத்தாலே.[2]

என்பது சூத்திரம்.

அவ:—'மயர்வற மதிநலம் பெற்றவர்கள் எல்லார்க்கும் சத்தையும் சம்ருத்தியும், பகவானுடைய தரிசனத்தாலும் அநுபவத்தாலும் கைங்கரியத்தாலுமே அன்றோ தோற்றுகின்றன? அத்தன்மைகள் இவர்க்கும் ஒவ்வாதோ? அப்போதைக்கு மங்களா சாசனமே யாத்திரையாக நடக்கும் என்னுமிது கூடும்படி என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] பிராமாணிகர் - உபதேச சாஸ்திரங்களின் கருத்துப் பொருளான மங்களாசாசனத்தில் நிலை நின்றவர்கள்.

[2] அல்லாதார்க்கு - மற்றை ஆழ்வார்களுக்கு. சத்தை - உளராதல்; இருப்பு. சம்ருத்தி - தழைப்பு; நிறைவு. இச்சூத்திரத்திற்கு மூன்று வகையாகப் பொருள் அருளிச் செய்கிறார். முதற்பொருளுக்கு, அல்லாதார்க்குச் சத்தை - தரிசனத்தாலும், சம்ருத்தி - அநுபவ கைங்கரியங்களாலும் என்று சொற்களைப் பிரித்துக் கூட்டிக்கோடல் வேண்டும்.

வியாக் :—‘ அல்லாதார்க்கு சத்தா சம்ருத்திகள் தர்சன அநுபவ கைங்கரியங்களாலே’ என்றது, சத்தையாவது, தாங்கள் உளராகை. இது, பகவானுடைய காட்சியையும் அநுபவத்தையும் கைங்கரியத்தையும் விரும்பினவர்களான மற்றை ஆழ்வார்களுக்கு, அவனைக் காணாத போது தரிக்க மாட்டாமல் [1] ‘காணவாராய்’ என்று கூப்பிடுகையாலே அவனுடைய காட்சியாலேயாயிருக்கும்; [2] ‘அவர் ஆவி துவராமுன் அவர் வீதி ஒரு நாள் அருளாழிப்புள் கடவீர்’ என்று ‘எங்கள் சத்தை கிடப்பதற்கு ஜன்னல்களின் வழியாகவாவது ஒருகால் காணும்படி, எங்கள் தெருவே ஒரு நாள் போக அமையும் என்று சொல்’ என்கையாலே, அவனைக் காணுதலே சத்தைக்குக் காரணம் என்பது போதரும். சம்ருத்தியாவது, உளராகவிருக்கிற மாத்திரமன்றிக்கே மேல் உண்டாகிச் செல்லும் தழைப்பு. அது, அவர்களுக்கு [3] ‘அந்தாமத்தன்பு’, [4] ‘முடிச்சோதி’ என்பன போன்ற திருவாய்மொழிகளில் உண்டான அநுபவத்தாலும், [5] ‘ஒழிவில் காலமெல்லாம்’ என்ற திருவாய்மொழியின்படியே செய்யும் கைங்கரியத்தாலும் ஆக இருக்கும் என்றபடி.

[6] அன்றிக்கே, தரிசனம் அநுபவம் என்ற இரண்டாலும் சத்தையும், கைங்கரியத்தால் சம்ருத்தியும் ஆகச் சொல்லவுமாம்.

[7] அங்ஙனமன்றிக்கே, [8] ‘அந்தச்சத்தை பிராவண்ய காரியமான அநுபவம் இல்லாதபோது குலையும்’ என்று இவர் தாமே

---

[1] திருவாய். 8. 5 : 2. [2] திருவாய். 1. 4 : 6. [3] திருவாய். 2 : 5.
[4] திருவாய். 3 : 1. [5] திருவாய். 3 : 3.

[6] இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார் ‘அன்றிக்கே’ என்று தொடங்கி. இப்பொருளுக்கு, சத்தைக்கு - தரிசனம் அநுபவம் என்னும் இரண்டனையும், சம்ருத்திக்கு - கைங்கரியத்தையும் கோடல் வேண்டும்.

[7] மூன்ருவதான பொருளை அருளிச்செய்கிறார் ‘அங்ஙனம் அன்றிக்கே’ என்று தொடங்கி. இப்பொருளுக்கு, சத்தைக்கும், சம்ருத்திக்கும் ‘தரிசனம்’ முதலிய மூன்றனையும் தனித்தனியே கூட்டிக்கோடல் வேண்டும்.

[8] சத்தைக்கு, தரிசனம் காரணமாவதற்கு உதாரணம் மேலே காட்டினாராதலின், ஏனை இரண்டற்கும் காரணமாதலை விளக்குகிறார் ‘அந்தச் சத்தை’ என்று தொடங்கி. ‘அருளிச்செய்தது’ இந்த நூலில்.

முன்னே அருளிச்செய்தமையாலும், நாளை பயன்படுத்திக் கொள்ளுகிறோம் என்னில், அழுதற்குங்கூடச் சத்தை இல்லை என்று கைங்கரியத்தைச் சத்தைக்குக் காரணமாக [1] அநுசந்தானத்திலே சொல்லுகையாலும், [2] 'கண்டு களிப்பன்' என்று காட்சியைச் சம்ருத்திக்குக் [3] காரணமாகவும் சொல்லுகையாலும் சத்தைக்கும், சம்ருத்திக்கும் மூன்றும் காரணம் என்னவுமாம்.

'இவர்க்கு மங்களாசாசனத்தாலே' என்றது, மயர்வற மதிநலம் அருளப்பெற்ற அன்று முதல் பகவானுடைய சௌகுமார்யம் முதலாயினவற்றைக் கண்டு, 'இவற்றுக்கு என்வருகிறதோ!' என்று வயிறு எரிந்து மங்களாசாசனத்தில் பெரு விருப்பம் கொண்ட இவர்க்கு, மங்களாசாசனத்திற்குப் பிரிவு வரில் தாம் உளராக மாட்டாமையாலும், அப்படிப் பிரிவு இன்றிச் செல்லுகைதானே தழைப்புக்குக் காரணமாக இருத்தலாலும் சத்தை சம்ருத்தி என்னும் இரண்டும் மங்களாசாசனத்தாலேயே யிருக்கும் என்றபடி.

ஆகையால், இவர்க்கு மங்களாசாசனம் நித்தியமாகச் செல்லத் தட்டு இல்லை என்பது கருத்து. (180)

## 261

உகந்தருளின நிலங்களை அநுசந்தித்தால் ஊணும் உறக்கமும் இன்றிக்கே, இவருடைய யாத்திரையே நமக்கெல்லார்க்கும் யாத்திரை யாகவேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, மங்களாசாசனத்தில் பெரியாழ்வார்க்கு உண்டான என்றும் உள்ள நிலையை அருளிச்செய்தார் மேல். இனி, இவருடைய யாத்திரையே நமக்கு எல்லார்க்கும் யாத்திரையாக

1 'அநுசந்தானம்' என்பது ஒரு நூல்.

2 சம்ருத்திக்கு, அநுபவமும் கைங்கர்யமும் காரணமாதலை மேலே உதாரணம் கொண்டு விளக்கினாராதலின், 'தரிசனம்' காரணமாதற்கு உதாரணம் காட்டுகிறார் 'கண்டு களிப்பன்' என்று தொடங்கி.

3 'காரணமாகவுமாம்' என்ற உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை.

வேண்டும் என்று, [1] 'உகந்தருளின நிலங்களிலே ஆதராதிசயமும் மங்களாசாசனமும்' என்று முன்பு தினசரியையில் சொல்லப்பட்ட மங்களாசாசனம் அவசியம் செய்யத்தக்கது என்னு மதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'உகந்தருளின நிலங்களை அநுசந்தித்தால்' என்றது, மிக்க மென்மைத் தன்மையையையுடைய சர்வேச்வரன் தன்னைப் பற்றுகின்றவர்களுக்குச் சுலபனாகும்பொருட்டாகத் தன்னை அமைத்துக்கொண்டு, [2] "தான் உகந்த ஊர்" என்னும்படி தான் மிக்க ஆதரத்தைச்செய்து வசிக்கும் [3] கோயில், திருமலை முதலான திவ்விய தேசங்களை நினைத்தால் என்றபடி. 'ஊணும் உறக்கமும் இன்றிக்கே இவருடைய யாத்திரையே நமக்கு எல்லார்க்கும் யாத்திரையாகவேணும்' என்றது, 'அபாயம் மிக்க தேசமாகையாலே, இங்கு எழுந்தருளி நிற்கும் நிலைக்கு ஏதேனும் ஒரு தீங்கு வரின் என்னாகக்கடவது ? என்னும் வயிற்று எரிச்சலாலே, உண்டி உறக்கம் என்னும் இவைகளிலும் சம்பந்தம் இன்றிக்கே, எப்பொழுதும் நிறைந்த அன்பினையுடையவரான இவ்வாழ்வாருடைய, எப்பொழுதுமுள்ள மங்களாசாசன யாத்திரையே அடியவர்களான நமக்கு எல்லார்க்கும் யாத்திரையாக வேண்டும் என்றபடி. (181)

## 262

ஆகையாலே மங்களாசாசனம் ஸ்வரூப அநுகுணம்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறி வந்த பொருளை முடிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆகையாலே மங்களாசாசனம் ஸ்வரூப அநுகுணம்' என்றது, இப்படி அடிமையாக இருப்பவர்களுக்கெல்லாம் அவசியம் செய்யத்தக்கது ஒன்றாகையாலே, மங்களாசாசனம் சொரூபத்திற்குச் சேரும் என்றபடி.

---

[1] சூத். 246. பார்க்க.

[2] திருநெடுந்தாண்டகம், 6.

[3] கோயில் - திருவரங்கம், திருமலை - திருவேங்கடம்.

சேஷமாக இருக்கிற பொருளானல் சேஷியாக இருக்கிற தலைவனுக்கு அதிசயத்தை விளைப்பதனாலே தன் சொரூபம் நிலை பெறுமாகையாலே, சேஷிக்கு அதிசயத்தை விரும்புகிற [1] இது, சேஷமாக இருக்கிற இவனுடைய சொரூபத்திற்குத் தக்கதாமிறே. (182)

## 263

**அநுகூலராகிறார் ஞானபக்தி வைராக்கியங்கள் [2] இட்டு மாறினாற் போலே, வடிவிலே தொடை கொள்ளலாம்படியிருக்கும் பரமார்த்தர்.**

என்பது சூத்திரம்.

அவ: [3] ‘இப்படி, தினசரியையில் சொல்லப்பட்ட மங்களா சாசனம் சொரூபத்திற்கு முரண் அன்றோ?’ என்னும் ஐயத்தை நீக்கிய பின்னர், ‘அநுகூல ஸஹவாஸம்’ [4] என்றவிடத்தில் சொல்லப்பட்ட அநுகூலருடைய இலக்கணத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘அநுகூலர் ஆகிறார்’ என்றது, ஞானம் முதலாயினவற்றை வளர்ப்பவர்கள் ஆகையாலே, சேர்ந்து பழகுவதற்குத் தகுதியுடையவராக மேலே சொல்லப்பட்ட அநுகூலர் ஆகிறார் என்றபடி. [5] ‘ஞான பக்தி வைராக்கியங்கள்’ என்றது, உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்கின்ற ஞானமும், பகவானையே விஷயமாகக் கொண்ட பக்தியும், அந்த ஞானம் பக்தி என்னும் இரண்டனுடைய காரியமாய் வருகின்ற,

---

[1] இது - மங்களாசாசனம்.

[2] ‘இட்டு மாறினாற்போலே’ இதற்கு இரண்டு விதமாகப் பொருள் அருளிச்செய்கிறார். இப்பொருளை வியாக்கியானத்தில் காண்க. முதற் பொருளுக்கு ‘மாறியிட்டாற்போலே’ என்று சொற்களை மாற்றுக. தொடை - சம்பந்தம். கொள்ளலாம் - உணரலாம். பரமார்த்தர் - தனக்குமேல் ஒன்று இல்லாத துக்கத்தையுடையவர். பரமம் - தனக்கு மேல் ஒன்று இல்லாதது.

[3] ‘இப்படி’ என்பதனை, மேலே வருகின்ற ‘நீக்கிய பின்னர்’ என்றதனோடு கூட்டுக.

[4] ‘என்றவிடத்தில்’ என்றது, மேல் 246ஆம் சூத்திரத்தை நோக்கி.

[5] ஈண்டு ‘ஞானம்’ என்றது, உயிர்நிலை, இறைநிலை என்னும் இவற்றை உள்ளவாறு உணர்ந்த ஞானத்தை.

பகவானுக்குப் புறம்பாக இருக்கிற பொருள்களிலே விரக்தியும் என்றபடி. இவைதாம் வைஷ்ணவ அலங்காரங்களிறே. இவற்றைக் கொண்டிறே வைஷ்ணவர்களுக்கு ஏற்றம் சொல்லு கிறது? ஆகையிறே நாதமுனிகளுடைய திவ்விய பெருமையைச் சொல்லுகிற ஆளவந்தார், [1] "மனத்தால் அளவிடக் கூடாதவை களாயும் ஆச்சரியப்படத் தக்கவைகளாயும் வருத்தம் அற்றிருப் பனவைகளாயும் உள்ள ஞானமும் வைராக்கியமும் ஆகிய இவற்றினுடைய கூட்டமாயிருப்பவரும், முனிவரும், பகவானு டைய பக்திக்கு நிலை காணவொண்ணாத கடல் போன்ற வருமான நாதமுனியை வணங்குகிறேன்!" என்று அருளிச் செய்தது?

'இட்டு மாறினாற் போலே' என்றது, ஒரு பொருள் இருந்த ஒரு கலத்திலே வேறு ஒரு பொருளை இட்டு, முன்பிருந்த பொருளை மாற்றினால், அதுவே உள்ளதாய்த் தோற்றுமாறு போலே, இந்த ஞானம் முதலிய மூன்றும் ஒரே இடத்தில் இருக்கச் செய்தே, இவற்றுள் ஒரொன்றையே பார்க்குமளவில் ஒன்றையிட்டு மற்றையவற்றை மாற்றினாற் போலேஇதுவே இவ் விடத்தில் இருப்பது என்று தோற்றும்படியிருக்கை என்றபடி. 'வடிவிலே தொடை கொள்ளலாம்படி இருக்கும்' என்றது, இவர்கள் வடிவு கண்ட போதே இவற்றோடு இவர்களுக்கு உண்டான சம்பந்தம் உணரும்படியாக இருக்கும் என்றபடி.

[2] விட வேண்டுவனவற்றை விட்டுப் பற்றத் தகுந்ததனைப் பற்றும் பகுத்தறிவினையுடையனாய்ச் செய்யும் செயலாலே ஞானம் வடிவிலே தொடை கொள்ளலாம்; [3] "ஆனந்தத்தால் குளிர்ந்த கண்ணீரையுடையவர்கள்", [4] "காலும் எழா; கண்ண நீரும் நில்லா" என்கிறபடியே இருக்கையாலே பக்தியை வடிவிலே தொடை கொள்ளலாம்; மற்றைப் பொருள்களைக் கடைக் கணியாமல் இருப்பதனால் வைராக்கியம் வடிவிலே தொடை கொள்ளலாம்.

---

[1] 'அசிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞாந வைராக்யராஶயே, அகாத பகவத்பக்தி ஸிந்தவே' என்பது தோத்திரரத்நம், 1.

[2] இம்மூன்றையும் அவர்கள் வடிவிலே நாம் அறியுமாற்றை விளக்கு கிறார் 'விடவேண்டுவனவற்றை' என்று தொடங்கி.

[3] 'ஆஹ்லாத ஶீத நேத்ராம்பு:' என்பது பிரமாணம்.

[4] பெரியாழ்வார் திருமொழி, 3. 3 : 5.

[1] அன்றிக்கே, ஞானம் பக்தி வைராக்கியம் என்னும் இம் மூன்றும் புதிது புதிதாக வளர்ந்து வருகையாலே, முன்பு இல்லாத ஞானம் முதலானவற்றை இட்டு, முன்புள்ளனவற்றை மாற்றினாற்போலே, தங்கள் வடிவிலே இவை காணலாம்படியிருக்கும் என்னலுமாம். 'பரமார்த்தர்' என்றது, [2] சம்சாரத்தில் பொருந்தாமையாலும் பகவானைக் கிட்டப் பெறுமையாலும் 'இனி இதற்கு மேலில்லை' என்னும்படியான துக்கத்தையுடையவர்கள் என்றபடி. (183)

## 264

**ஒரு [3] செய் நிரம்ப நீர் நின்றால் அசல் செய் பொசிந்து காட்டுமாபோலே, இவையில்லாதார்க்கும் இவர்களோட்டை சம்பந்தத்தாலே உருவுதல் தீரக்கடவதாயிருக்கும்.**

என்பது சூத்திரம்.

**அவ :—**'இவர்களுடைய சம்பந்தத்தால் கிடைப்பனயாவை' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'ஒரு செய் நிரம்ப நீர் நின்றால் அசல் செய் பொசிந்து காட்டுமா போலே' என்றது, ஒரு வயலிலே நிரம்ப நீர் நின்றால், நீர் இல்லாமல் உருவிக்கிடக்கும் பக்கத்து வயல், அதன் சம்பந்தத்தால் வந்த பொசிவாலே வாட்டம் இன்றிக் கிடக்குமாறு போலே என்றபடி. 'இவை இல்லாதார்க்கும் இவர்களோட்டை சம்பந்தத்தால் உருவுதல் தீரக் கடவதாயிருக்கும்' என்றது, ஞானம் பக்தி வைராக்கியங்கள் என்னும் இவை இல்லாமையாலே சொரூபம் உருவிக்கிடக்கிறவர்களுக்கும், இவற்றால் நிறைவுற்றிருக்கிற இவர்களுடைய

[1] 'இட்டு மாறினாற்போலே' என்றதற்கு இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. முதற்பொருளில் 'ஒரு பொருள் இருந்த ஒரு கலத்திலே' என்று சில சொற்களைக் கொணர்ந்து கூட்டிப் பொருள் அருளிச்செய்துள்ளார். இங்கு அவ் வருமை இல்லை.

[2] 'பரமார்த்தர்' என்ற சொல்லின் பொருளை விளக்குகிறார் 'சம்சாரத்தில்' என்று தொடங்கி.

[3] செய் - வயல். இவர்களோட்டை - இவர்களுடைய. உருவுதல் - வாட்டம்.

சேர்க்கையாலாய சம்பந்தத்தால், [1] இவற்றிலே சிறிது சேர்க்கை உண்டாய், இவை நேராக இல்லாமையால் உண்டான உருவுதல் தீரக்கடவதாக இருக்கும் என்றபடி. (184)

## 265

**ஆறு நீர் வரவு அணித்தானால் அதுக்கு ஈடான அடையாளங்கள்[2] உண்டாமா போலே, பிராப்தி அணித்தானவாறே இந்த ஸ்வபாவ விசேஷங்கள் தன்னடையே விளையக் கடவன வாய் இருக்கும்.**

என்பது சூத்திரம்.

அவ: 'இவர்களுடைய சேர்க்கையால் இப்படி உருவுதல் தீர்ந்து கிடக்கும் அளவேயோ?' என்னில், இவ்வளவுமே அன்று; இந்தத் தன்மை விசேடங்கள் பேற்றிற்கு முன்னே பூர்ணமாக விளைந்தறும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'ஆறு நீர் வரவு அணித்தானால் அதுக்கு ஈடான அடையாளங்கள் உண்டாமாபோலே' என்றது, வற்றிக்கிடக்கிற ஆறானது, நீரின் வரவு அணித்தானவாறே, அதற்கு அடையாளங்களான மண் பொசிதல் முதலானவைகள் உண்டாமாறு போலே என்றபடி. 'பிராப்தி அணித்தானவாறே இந்தச் சுபாவ விசேஷங்கள் தன்னடையே விளையக்கடவனவாய் இருக்கும்' என்றது, பகவானை அடையும் காலம் அண்மையில் வந்தவாறே, அதற்கு அடையாளங்களான இந்த ஞானம் முதலான தன்மை விசேடங்கள் தாமாகவே விளையக்கடவனவாக இருக்கும் என்றபடி. (185)

---

[1] இவற்றிலே - இந்த ஞானம் பக்தி வைராக்கியம் என்னும் இவற்றிலே.

[2] உண்டாமா போலே - ஆற்றிலே உண்டாகுமாறு போலே. பிராப்தி - பேறு. இந்தச் சுபாவ விசேடங்கள் - இந்த ஞானம் பக்தி வைராக்கியம் என்னும் தன்மை விசேடங்கள். விளைதல் - பூர்ணமாதல்; நிறைதல்.

## 266

[1] இவற்றைக் கொண்டு சரம சரீரம் என்று தனக்குத்தானே அறுதியிடலாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'இவை இப்படி விளைந்து வரப்புக்கால் பேறு அணித்து என்று தோற்றியிருக்குமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறூர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவற்றைக் கொண்டு சரம சரீரம் என்று தனக்குத்தானே அறுதியிடலாய் இருக்கும்' என்றது, இப்படி மேன்மேலும் புதுக்கணித்து விளைந்து வருகிற ஞானம் பக்தி வைராக்கியம் என்னும் இவற்றைக்கொண்டு 'இனி நமக்கு வேறு ஒரு சரீரத்தைக் கோடல் இல்லை; இது முடிவான சரீரம்' என்று தன் மனத்திற்குள்ளே நிச்சயித்துக்கொள்ளலாம்படி இருக்கும் என்றபடி. (186)

## 267

[2] பிரதிகூலர் ஆகிறூர், தேகாத்மாபிமானிகளும், ஸ்வதந்திரரும், அந்யசேஷ பூதரும், உபாயாந்தர நிஷ்டரும், ஸ்வப்பிரயோஜநபரரும்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, இப்படிச் சேர்க்கை விஷயமாகத் தினசரியையில் சொன்ன அநுகூலருடைய இலக்கணத்தையும் அவர்களுடைய சேர்க்கையாலாய பயனையும் அருளிச்செய்து, அதன் பின்னர், சேர்க்கையினின்றும் நீங்க வேண்டும் என்று சொன்ன பிரதிகூலர் இன்னூர் என்பதனை அருளிச்செய்கிறூர் இச்சூத்திரத்தால்.

---

[1] இவற்றைக்கொண்டு - இந்த ஞானம் பக்தி வைராக்கியங்கள் வளர்ந்து வருதலைக்கொண்டு. சரமசரீரம் - முடிவான சரீரம்; இறுதிச் சரீரம் என்றபடி.

[2] தேகாத்ம அபிமாநி - சரீரத்தையே ஆன்மாவாக நினைத்திருப்பவன். சுவதந்திரன் - தனக்கு உரியவன்; ஆன்மாவையே பிரதானமாகக் கொண்டவன் என்றபடி. அந்ய சேஷபூதன் - பிறர்க்கு அடிமையாய் இருப்பவன். உபாயாந்தர நிஷ்டன் - வேறு உபாயங்களைப் பற்றினவன். சுவப்பிரயோஜனன் - தான் செய்யும் பிரபத்தியை உபாயமாகவும் தான் செய்யும் கைங்கரியத்தைத் தனக்குப் போக்கியமாகவும் கொண்டிருப்பவன்.

**வியாக் :**—'பிரதிகூலர் ஆகிறார்' என்றது, ஞானம் முதலாயினவற்றைக் கெடுப்பவர்கள் ஆகையாலே' சகவாசத்திற்குத் தகுதியில்லாதவர்களாக [1] மேலே கூறிய பிரதிகூலர் ஆகிறார் என்றபடி. 'தேக ஆத்ம அபிமாநிகளும்' என்றது, காண்கிற இச்சரீரத்திற்கு அப்பால் ஓர் ஆன்மா உண்டு என்று அறியாமல் சரீரத்திலே நான் என்ற புத்தியைப் பண்ணி, அதனையே ஆன்மாவாக விரும்பியிருக்குமவர்களும் என்றபடி. 'சுவதந்திரரும்' என்றது, சரீரத்திற்கு வேறான ஆன்மாவை அறிந்திருக்கச்செய்தே, அதனைத் தமக்கு உரித்தாகவே நினைத்து, ஒரு விஷயத்திலும் சேஷத்துவத்திற்கு இசையாதவர்களும் என்றபடி. 'அந்யசேஷபூதரும்' என்றது, சேஷத்துவத்தை இசைந்திருக்கச் செய்தே, அதனை, அடைதற்குத் தகுதி இல்லாத [2] மற்றைய விஷயங்களிலே பயன்படுத்துகிறவர்களும் என்றபடி. 'உபாயாந்தர நிஷ்டரும்' என்றது, [3] வகுத்த சேஷி விஷயமான சேஷத்வத்தையுடையராயிருக்கச் செய்தே, அவனைப் பற்றுவதற்குரிய உபாயம் அவனுடைய திருவடித் தாமரைகளில் சரணாகதி செய்தல் என்று இராமல், கர்மம் ஞானம் முதலானவைகளை உபாயமாகப்பற்றி நிற்பவர்களும் என்றபடி. 'சுவப்பிரயோஜன பரரும்' என்றது, வகுத்த சேஷியானவனுடைய திருவடித்தாமரைகளை உபாயமாகப் பற்றியிருக்கச் செய்தேயும், தாங்கள் செய்த பிரபத்தியை உபாயமாக நினைத்தும் புருஷார்த்தமான கைங்கரியத்தைத் தங்களுக்கு இனியதாக நினைத்தும் இருக்குமவர்களும் என்றபடி.

[4] இப்படியிருக்குமவர்கள், [5]பிரணவத்தில் மூன்றாம் எழுத்தான மகாரத்தால் ஆன்மா சரீரத்திற்கு வேறுபட்டிருக்கும் தன்மையையும், முதல் எழுத்தான அகாரத்தில் ஏறிக்கழிந்த

---

[1] 'மேலே கூறிய' என்றது, 246 ஆம் சூத்திரத்திற்கூறியதனை.

[2] மற்றை விஷயங்களிலே - வேறு தெய்வங்கள் முதலானவர்கள் திறத்திலே.

[3] வகுத்த சேஷி - திருமகள் கேள்வன்.

[4] 'இப்படியிருக்குமவர்கள்' என்றது சூத்திரத்திற்கூறிய 'தேகாத்மாபிமாநிகள்' முதலிய ஐவரையும். இதனை, மேலே வருகின்ற 'பிரதிகூலரிறே' என்றதனோடு கூட்டுக. அதாவது, 'இப்படியிருக்குமவர்கள் - பிரதிகூலரிறே' என்றபடி.

[5] 'இவர்கள் யாருக்குப் பிரதிகூலர்?' என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரணவத்தில்' என்று தொடங்கி. 'பிரணவத்தில்'

நான்காம் வேற்றுமையால் ஆன்மா இறைவனுக்கு அடிமைப் பட்டிருக்கும் தன்மையையும், நடு எழுத்தான உகாரத்தால் ஆன்மா இறைவன் ஒருவனுக்கேயன்றிப் பிறருக்கு அடிமைப் படாத தன்மையையும், 'நமஃ' பதத்தால் ஆன்மா இறைவன் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருக்கும் தன்மையையும், 'நாராயணாய' என்னும் பதத்தால், ஆன்மா இறைவன் ஒருவனையே இனியன் ஆகக்கொண்டிருக்கும் தன்மையையும் அறிந்திருக்கும் அதிகாரிக்குப் பிரதிகூலரிறே. (187)

## 268

[1] இவர்களுக்கு, உத்தேசியரும் உபாய உபயங்களும் பேதித்திருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—இந்தப் [2] பிராதிகூல்யத்தை விளக்குவதற்காக, இவர்களுடைய மயக்கவுணர்ச்சி காரணமான உத்தேசியம் முதலான பேதங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—உத்தேசியர்—விரும்பப்படுகின்றவர்கள். இவ்விடத்தில் அவர்கள் ஆகிறார், தாங்கள் விரும்பியவற்றைக் கொடுக்கின்றவர்கள். உபாயங்களாவன, தாங்கள் விரும்பின பேற்றினை அடைதற்குரிய சாதனங்கள். உபேயங்களாவன, தாங்கள் விரும்பிய பேறுகள். இவை பேதித்திருத்தலாவது, தம் தம் மயக்கவுணர்ச்சிக்குத் தகுதியாக வேறுபட்டிருக்கும் என்றவாறு. (188)

---

என்று தொடங்கிக் கூறுமவையெல்லாம் அதிகாரிக்கு விசேஷணங்கள். இவ்விசேஷணங்கள் ஐந்தையும் மேலே கூறிய ஐவரோடும் முறைநிரல் நிறையாகச் சேர்த்தால் அவர்கள் இவ்வதிகாரிக்குப் பிரதிகூலராய் இருத்தல் விளங்கும். 'யாங்ஙனம்?' எனின், தேகாத்மாபிமாநிகள், பிரணவத்தில் மூன்றும் எழுத்தான மகாரத்தால் ஆன்மா சரீரத்திற்கு வேறுபட்டிருக்கும் தன்மையை அறிந்திருக்கும் அதிகாரிக்குப் பிரதிகூலர் என்று சேர்த்தல் வேண்டும். இங்ஙனமே ஏனைய நான்கனையும் சேர்த்துக்கொள்க.

[1] இவர்களுக்கு - மேலே கூறப்பட்ட ஐவர்க்கும். உத்தேசியர் - விரும்பப்படுகின்றவர்கள். உபாயமும் உபேயமும் என்க.

[2] பிராதிகூல்யம் - உண்மை ஞானத்திற்கு விரோதமாயிருக்கும் தன்மை.

## 269

[1] தேகாத்மாபிமானிகளுக்கு - உத்தேசியர் தேகவர்த்தகரான மனிதர்கள். உபாயம் அர்த்தம், உபேயம் ஐஹிக போகம். ஸ்வதந்திரருக்கு- உத்தேசியர் சுவர்க்காதி போகப்பிரதர், உபாயம் கர்மாநுஷ்டானம், உபேயம் சுவர்க்காதிபோகம். அந்யசேஷபூதர்க்கு - உத்தேசியர் பிரமருத்திராதிகள் ; உபாயம் தத்சமாச்ரயணம் ; உபேயம் தத்சாயுஜ்யம். உபாயாந்தர நிஷ்டருக்கு - உத்தேசியன் தேவதாந்தர்யாமியான சர்வேச்வரன். உபாயம் கர்மஜ்ஞான பக்திகள், உபேயம் பகவதநுபவம். ஸ்வப்ரயோஜபநரர்க்கு - உத்தேசியன் "நெஞ்சிஞல் நினைப்பான் எவன்?" என்கிறவன் ; உபாயம் ஸ்வகீயஸ்வீகாரம் ; உபேயம் ஸ்வார்த் தகைங்கர்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறியவற்றை முறையே விளக்குகிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—தேக ஆத்ம அபிமானிகளுக்கு உத்தேசியர், தேகவர்த்தகரான மனிதர்கள்—தேகத்தையே தாமாக நினைத்திருக்கின்றவர்களுக்கு உத்தேசியர், [2]தாரக போஷக போக்கியப் பொருள்களை இட்டுத் தேகத்தை நன்ருக வளர்த்துக்கொண்டு செல்லும் மனிதர்கள். உபாயம் அர்த்தம்—தாம் விரும்பிய பொருள்களைப் பெறுதற்குச் சாதனம், பொன் முதலான பொருள்கள். உபேயம் ஐஹிகபோகம்—விரும்பப்படுகின்ற பேறு, இவ்வுலகத்தில் உண்டான பெண்கள் சோறு தண்ணீர் முதலான விஷயங்களின் நுகர்ச்சி.

---

[1] தேகவர்த்தகர் - சரீரத்தை வளர்ப்பவர்கள். அர்த்தம் - பொருள். ஐஹிகம் - இவ்வுலகத்தில் உண்டாவது. பிரதர் - கொடுப்பவர். தத்சமாச்ரயணம் - அவர்களை அடைதல். சாயுஜ்யம் - சமானமான இன்பத்தை அநுபவித்தல். என்கிறவன் - என்று சொல்லப்படுகிறவன். ஸ்வகீய ஸ்வீகாரம் - தான்பற்றுகிற பற்று. ஸ்வார்த்தம் - தன்பொருட்டு.

[2] தாரகம் - சோறு முதலானவை. போஷகம் - தண்ணீர் முதலானவை. போக்கியம் - வெற்றிலை முதலானவை.

ஸ்வதந்திரர்க்கு உத்தேசியர் சுவர்க்காதிபோகப் பிரதர் - சரீரத்திற்கு வேறுபட்டவனாயிருப்பவனான ஆன்மா ஒருவன் உளன்; அவன்தான் அறிகின்றவனாயும் செய்கின்றவனாயும் நுகர்கின்றவனாயும் இருப்பான் [1]என்கிற மாத்திரத்தை சாஸ்திரங்களின் மூலமாக அறிந்து, தங்களைச் சுவதந்திரராக நினைத்திருக்குமவர்களுக்கு உத்தேசியர், செய்யப்பட்ட சாதனங்களுக்குத் தகுதியாகச் சுவர்க்கம் முதலான மேலுலகவின்பங்களைக் கொடுக்கும் நெருப்பு இந்திரன் முதலான தேவர்கள். உபாயம் கர்மாநுஷ்டானம்—உபாயம் [2]"சுவர்க்கத்தை விரும்புகிறவன் ஜோதிஷ்டோமம் என்னும் யாகத்தைச் செய்யவேண்டும்" என்பது போன்றவைகளாலே சொல்லப்படுகின்ற பலனை விரும்புதலோடு கூடின யாகம் முதலான கர்மங்களைச் செய்தல். உபேயம் சுவர்க்காதிபோகம்—இவ்வுலகவின்பத்தைக்காட்டிலும் பன்மடங்கு சிறப்புடையவான சுவர்க்கம் முதலான உலகங்களின் அநுபவம்.

அந்யசேஷபூதர்க்கு உத்தேசியர் பிரம ருத்திராதிகள் - "உலகம் தைவாதீநம்—தெய்வத்திற்கு உரிமைப்பட்டது" என்னுமதனைச் சாஸ்திரங்களில் கேட்கையாலே சேஷத்துவத்தை இசைந்துவைத்தே, அதனைப் பரம்பொருள் அளவாகப் போக அறியாமல், ஆராயாமல் மேலெழப்பார்க்குமளவில் தெய்வங்களாகத் தோற்றுகின்றவர்களுள் யாதேனும் ஒரு தெய்வத்தைப் பற்றி நிற்கும் அந்நிய சேஷபூதர்க்கு உத்தேசியர், உலகத்தைப் படைத்தல் அழித்தல்களாகிற காரியங்களைச் செய்கையாலே பரம்பொருள் என்று நினைத்தற்குத் தக்கவர்களான பிரமன் சிவன் முதலானவர்கள். உபாயம் தத்சமாச்ரயணம்—எளிய முறையிலன்றி அரிய முறைகளாலே ஆராதிக்கப்படுமவர்களான அவர்கள்பால் பண்ணும் [3]துஷ்கரசமாச்ரயணம் உபாயம். உபேயம் தத்சாயுஜ்யம்—அவர்களோடு ஒத்த

---

[1] 'என்கிற மாத்திரத்தை' என்பது ஆன்மசொரூபமாகிற சேஷத்துவத்தை அறியாமையைக் குறித்து நிற்கிறது.

[2] 'ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க காமோ யஜேத' என்பது, பிரமாணம்.

[3] துஷ்கரசமாச்ரயணம் - செய்தற்கு அரிய செயல்களைச் செய்து, அக்காரியங்களை உபாயமாகக் கொண்டு பற்றுதல். இதனை இராவணன் முதலாயினோரிடத்தில் காணலாம்.

இன்பத்தை உடையவர்களாகிற சாயுஜ்யம் உபேயம். [1]"இவ்விடத்தில் சீவான்மாவிற்கும் பரமான்மாவிற்கும் அநுபவிக்கப்படும் இன்பப் பொருள்கள் சமானமாகவிருக்கும் என்பது எதுவோ, அது சாயுஜ்யம் எனப்படும். நுகரப்படும் பொருள்களின் அநுபவத்தில் உயர்வு தாழ்வுகள் இல்லாமற்போவது எதுவோ, அது சார்ஷ்டிதை என்று சொல்லப்படும்" என்னக்கடவதிறே.

உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேசியன் தேவதாந்தர்யாமியான சர்வேச்வரன்—ஆன்மாவினுடைய தன்மை பகவான் ஒருவனுக்கே அடிமைப்பட்டது என்னுமிடத்தை வேதாந்த மூலமாக அறிந்து வைத்தும், தாம் விரும்பிய பேற்றிற்கு அவனையே உபாயமாகப் பற்றுவதற்கு அறியாமல் உபாயாந்தர நிஷ்டரானவர்களுக்கு உத்தேசியன், நெருப்பு இந்திரன் முதலான தேவர்களுக்கு அந்தர்யாமியான ஈச்வரன். [2] இது, கர்மயோகத்திற்கு நன்கு பொருந்தும்; ஞானயோகத்திற்கும் பக்தி யோகத்திற்கும் அசாதாரண விக்கிரகம் விஷயமாகவிருந்ததேயாகிலும், [3] அவை கர்மாநுஷ்டானத்தை அடியாகக்கொண்டு எழுந்தவையாகையாலும், கர்ம யோகத்தால் ஆராதிக்கப்படுகின்றவனை அவனே தன்னுடைய அசாதாரண விக்கிரகத்தோடு கூடிய தன்மையை நமக்குப் பிரகாசிப்பித்தான் என்னும் [4] நினைவு

---

[1] சாயுஜ்யம் என்பதற்கு இவர் அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார். 'இவ்விடத்தில் சீவான்மாவிற்கும்' என்று தொடங்கி,

ஸாயுஜ்ய முபயோரத்ர போக்தவ்யஸ்யாவிஶிஷ்டதா
ஸார்ஷ்டிதாதத்ர போகஸ்ய தாரதம்ய விஹீநதா.

என்பது பிரமாணம்.

[2] 'கர்மத்தை உபாயமாகப்பற்றி நிற்கும் உபாயாந்தர நிஷ்டருக்குத் தேவதாந்தர்யாமியான ஈச்வரன் உத்தேசியன் என்பது பொருந்தும்; ஞானத்தையும் பக்தியையும் உபாயமாகப்பற்றி நிற்கும் உபாயாந்தர நிஷ்டருக்குத் தேவதாந்தர்யாமியான ஈச்வரன் உத்தேசியன் என்பது பொருந்தாதே?' என்னும் வினாவை அநுவதித்துக்கொண்டு அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இது' என்று தொடங்கி. 'இது' என்றது, தேவதாந்தர்யாமியான ஈச்வரன் உத்தேசியன் என்னும் இது என்றபடி.

[3] அவை - ஞானமும் பக்தியும்.

[4] 'நினைவு நடக்கையாலும்' என்றது, ஞானத்தையும் பக்தியையும் உபாயமாகக் கொண்டவர்களுக்கு நினைவு ஆதலாலும் என்றபடி.

நடக்கையாலும் தேவதாந்தர்யாமியான ஈச்வரனே உத்தேசியனு கச் சொல்லுகிறது என்று கொள்ளவேண்டும். உபாயம் கர்ம ஞான பக்திகள்—[1] உபாயம், தனித்தனியே மோக்ஷத்திற்குச் சாதனமாகச் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள கர்மமும் ஞான மும் பக்தியும். [2] இவை தனித்தனியே உபாயமாமிடத்தில் ஒன் றுக்கு மற்றவை இரண்டும் அங்கங்களாகவிருக்கும். [3] "ஞானத் தோடும் பக்தியோடும் கூடின கர்மயோகம் சனகன் முதலானவர் களிடத்தில் காணப்படுகிறது; கர்மத்தோடும் பக்தியோடும் கூடின ஞானயோகம் ஜடபரதன் முதலாயினுர்களிடத்தில் பெரும் பாலும் காணப்படுகிறது; கர்மத்தோடும் ஞானத்தோடும் கூடின பக்தியோகம் பிரஹ்லாதன் முதலாயினுர்களிடத்தில் அடைந் திருக்கிறது" என்னக் கடவதிறே. [4] அன்றிக்கே, கர்ம ஞான பக்திகள் என்கிறவிடத்தில், வேதாந்தத்தில் சொல்லியிருப்பது போன்று, கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகிற பக்தியே உபாயமாய், அதற்கு அங்கமாகக் கர்மத்தையும் ஞானத்தையும் உபாயமாக உபசரித்துச் சொல்லுகிறதாகவுமாம். உபேயம்—[5] "அவன் எல்லாக் கல்யாண குணங்களையும் பரமாத்மாவோடு

---

[1] 'உபாயங்கள்' எனப் பன்மையாகக் கூறுமல் 'உபாயம்' என்று ஒருமையில் கூறியிருப்பதற்குத் தக, பொருள் அருளிச்செய்கிறுர் 'உபாயம் தனித்தனியே' என்று தொடங்கி.

[2] அவற்றை விளக்குகிறுர் 'இவை தனித்தனியே' என்று தொடங்கி. என்றது, கர்மம் உபாயமாமிடத்தில் ஏனை ஞானமும் பக்தி யும் அதற்கு அங்கங்கள். ஞானம் உபாயமாமிடத்தில் ஏனைய கர்மமும் பக்தியும் அதற்கு அங்கங்கள். இங்ஙனமே மற்றையதையும் கொள்க.

[3] அங்ஙனமாதற்கு உதாரணம் காட்டுகிறுர் 'ஞானத்தோடும்' என்று தொடங்கி.

"ஜ்ஞாந பக்தி அந்விதம் கர்ம ஜநகாதிஷு த்ருஶ்யதே
கர்ம பக்தி அந்விதம் ஜ்ஞாநம் ப்ராயேண பரதாதிஷு
கர்மஜ்ஞாநாந்விதாபக்தி: ப்ரஹ்லாத ப்ரமுகாஶ்ரயா."

என்பது பிரமாணம்.

[4] உபாயம் என ஒருமையில் அருளிச்செய்ததற்கு வேருெரு காரணமும் அருளிச்செய்கிறுர் 'அன்றிக்கே' என்று தொடங்கி. இப் பொருளுக்குப் பக்தி ஒன்றையுமே உபாயமாகக் கொண்டார் என்பது கருத்து. கர்மத்தையும் ஞானத்தையும் சேர்த்துக் கூறியது ஔப சாரிகம்.

[5] "ஸோ஽ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" என்பது தைத்திரீய உப.

அநுபவிக்கிறன்'' என்பது போன்ற சுருதிகளாலும், [1] "போக் கடிக்கப்பட்டிருக்கிற அதிசயத்தையுடைத்தாயிருக்கிற சந்தோஷத்தின் வடிவமான இன்பம் ஒன்றையே இலக்கணமாகவுடைத்தாயும் துக்கங்களோடு சேராததாயும் நித்தியமாயுமிருக்கிற பகவானுடைய அநுபவமானது சம்சார துக்கத்திற்கு மருந்தாக விருக்கும்'' என்று சுருதி உபப்பிரும்ஹணங்களாலும் சொல்லப்படுகிற தனக்கு மேல் ஒன்றில்லாததான ஆனந்தரூபமான பகவானுடைய அநுபவம்.

இந்தச் சுலோகத்தில் 'பகவத் பிராப்தி' என்கிற இதற்கு, பகவானுடைய அநுபவமாகவிறே நம்மாசாரியர்கள் தங்களுடைய பிரபந்தங்களிலே அருளிச் செய்தது.

ஸ்வப்பிரயோஜனபரர்க்கு உத்தேசியன் [2] "நெஞ்சினால் நினைப்பான் எவன்'' என்கிறவன்—கர்மம் முதலான உபாயங்கள் செய்தற்கரியவை என்கிற எண்ணத்தாலே அவற்றைவிட்டு, செய்தற்கு எளிது என்ற எண்ணத்தாலே பிரபத்தியில் இழிந்த சுவப்பிரயோஜனபரர்க்கு உத்தேசியன், "நெஞ்சினால் நினைப்பான் எவன்'' என்கிறபடியே தன்னைப் பற்றினவர்கள், தங்கள் மனத்தாலே யாதொரு பொருளைத் தனக்குத் திருமேனியாகக் கோலினர்கள்? அதனையே தனக்குத் திருமேனியாக விரும்பி, அதிலே பரமபதத்திலே உள்ள விக்கிரகத்தில் பண்ணும் ஆதரத்தைப் பண்ணிக்கொண்டு மிகமிகச் சுலபனாகவிருக்கிற அர்ச்சாவதாரமான ஈச்வரன். உபாயம் ஸ்வகீய ஸ்வீகாரம் - உபாயம், விருப்பமில்லாதனவற்றை நீக்குவதற்கும் விருப்பமுள்ளனவற்றை அடைவதற்குமாக நினைத்துத் தான் பற்றின பற்று. உபேயம் ஸ்வார்த்த கைங்கர்யம்—உபேயம் தன் உகப்புக்காகப் பண்ணும் கைங்கரியம்.[3] (189)

---

[1] நிரஸ்தாதிஶயாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணா
பேஷஜம் பகமத் ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா.
என்பது ஸ்ரீவிஷ்ணு புரா. 6. 5 : 59.

[2] திருவாய்மொழி, 3. 6 : 9

[3] அவனையே உபாயமாகவும், அவன் உகப்புக்காகப் பண்ணும் கைங்கரியமே உபேயமாகவும் கொள்ளும் மரபிற்கு இவை முரண்.

## 270

[1]முதல் சொன்ன மூவரும் நிக்கிரகத்துக்கு இலக்கு ; மற்றை இருவரும் அநுக்கிரகத்துக்கு இலக்கு.

என்பது சூத்திரம்.

வியாக் :—ஆக, உத்தேசியர் முதலான பேதங்களாலே இவர்களுக்கு உண்டான வெவ்வேறான விசேஷத்தை அருளிச் செய்தார் மேல். இவர்களுள், பகவானோடு ஒட்டு அற நின்ற மூவர்க்கும், பகவானையே பற்றி நின்ற இருவர்க்கும் உண்டான விசேஷத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'முதல் சொன்ன மூவரும் நிக்கிரகத்துக்கு இலக்கு' என்றது, தேகாத்ம அபிமானமும், ஸ்வாதந்திரியமும், அந்யசேஷத்துவமுமாகிற இவற்றிற்கு அவ்வருகு ஒன்று அறியாமையாலே, பகவானுடைய சம்பந்தம் சிறிதும் இல்லாதவர்களான மூவரும் [2] "க்ஷிபாமி—தள்ளுகிறேன்" என்கிற பகவானுடைய தண்டனைக்கு இலக்கு ஆனவர்கள் என்றபடி. 'மற்றை இருவரும் அநுக்கிரகத்துக்கு இலக்கு' என்றது, சரீரத்தினின்றும் வேறுபட்டதாய்ப் பகவானுக்கே சேஷமான ஆன்மாவின் தன்மையை அறிந்து [3] பகவானுடைய அநுபவத்தையும் கைங்கரியத்தையும் புருஷார்த்தமாகக் கொள்ளுகையாலே, வேறு பயன்களைக் கருதாதவர்களாய், கர்மம் ஞானம் பக்தி என்னும் [4] உபாயாந்தரங்களிலும், பிரபத்தியிலும் நிஷ்டரான இருவரும் [5] "ததாமி—கொடுக்கிறேன்" என்றும், [6] "மோக்ஷயிஷ்யாமி—

---

[1] நிக்கிரகத்திற்கு இலக்கு - இறைவனுடைய தண்டனைக்கு உரியவர்கள். அநுக்கிரகத்திற்கு இலக்கு-திருவருள் பெறுதற்கு உரியவர்கள்.

[2] ஸ்ரீகீதை, 16 : 19.

[3] 'பகவானுடைய அனுபவத்தைப் புருஷார்த்தமாகக் கொள்ளுகையாலே' என்றும், 'பகவானுடைய கைங்கரியத்தைப் புருஷார்த்தமாகக் கொள்ளுகையாலே' என்றும் தனித்தனியே கூட்டுக.

[4] 'உபாயாந்தரங்களில் நிஷ்டரானவர்கள்' என்றும், 'பிரபத்தியில் நிஷ்டரானவர்கள்' என்றும் தனித்தனியே கூட்டுக. பகவானுடைய அநுபவத்தைப் புருஷார்த்தமாகக் கொண்டவர்கள் உபாயாந்தர நிஷ்டர்கள். கைங்கரியத்தைப் புருஷார்த்தமாகக் கொண்டவர்கள் பிரபத்தி நிஷ்டர்கள்.

[5] ஸ்ரீகீதை, 10 : 16. இது உபாயாந்தர நிஷ்டர்களுக்கு.

[6] ஸ்ரீகீதை, 18 : 16. இது பிரபத்தி நிஷ்டர்களுக்கு.

விடுவிக்கிறேன்'' என்றும் சொல்லப்படுகிற பகவானுடைய திருவருளுக்கு இலக்கு ஆனவர்கள் என்றபடி. (190)

## 271

[1]மூவருடையவும் கர்மம், அநுபவ விநாச்யம்;
நாலாம் அதிகாரிக்குப் பிராயச்சித்த விநாச்யம்;
அஞ்சாம் அதிகாரிக்குப் புருஷகார விநாச்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—இவர்களுடைய நல்வினை தீவினைகளாகிற கர்மங்கள் அழிதற்கு ஆய காரண வேறுபாடுகளால் வரும் வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'மூவருடையவும் கர்மம் அநுபவ விநாச்யம்' என்றது, இறைவனுடைய தண்டனைக்கு இலக்கான மூவருடையவும் அநாதிகாலமாக ஈட்டப்பெற்ற நல்வினை தீவினைகள் [2] ''செய்யப்பட்ட நல்வினை தீவினைகளாகிற கர்மங்கள் அவசியம் அநுபவிக்கத்தக்கன; நூறு கோடி பிரமகல்பம் ஆனாலும் அநுபவியாமல் அழியமாட்டாவாம்'' என்கிறபடியே அவற்றின் பலத்தை அவசியம் அநுபவித்தால் அன்றி அழியாமையாலே 'அநுபவித்தே கழிக்கவேண்டும்' என்கிறார். 'நாலாம் அதிகாரிக்குப் பிராயச்சித்த விநாச்யம்' என்றது, திருவருளுக்கு இலக்காகச் சொன்ன இருவருள் உபாயாந்தர நிஷ்டனான நாலாம் அதிகாரிக்கு, கர்மம் ஞானம் பக்தி என்கிற உபாயவிசேடங்களுள் ஒன்றனைச் செய்தால் அதனைப் பிராயச்சித்தத்திலே ஒன்றாக்கி, ஈச்வரன் எல்லாப் புண்ணிய பாவங்களையும் கழிக்கையாலே, கர்மங்கள் பிராயச்சித்தத்தாலே அழிவனவாம் என்கிறார்.

---

[1] மேலே கூறப்பட்ட ஐவருள் முதல் மூவரும் பாவங்களை அநுபவித்தே கழிக்க வேண்டும். நாலாம் அதிகாரி - உபாயாந்தரபரர். பிராயச்சித்தத்தால் அழியும். பிராயச்சித்தம் - பாவங்களை அழிப்பது. அஞ்சாம் அதிகாரி - பிரபத்தி நிஷ்டர். புருஷகாரம் - பிராட்டி. விநாச்யம் - போக்கப்படுவது. பிரபத்தி செயற்படும்போது புருஷகார பூதையான பிராட்டியின் அதீனமாகையாலே பிராதாந்யம் பற்றிப் 'புருஷகார விநாச்யம்' என்கிறார்.

[2] அவஶ்யம் அநுபோக்தவ்யம் க்ருதம் கர்மஶுபாஶுபம்
நாபுக்தம்க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி:

என்பது, பிரமாணம்.

'அஞ்சாம் அதிகாரிக்குப் புருஷகார விநாசம்' என்றது, பிரபத்தி நிஷ்டனான ஐந்தாம் அதிகாரிக்கு, இறைவனைப் பற்று கிற வேளையிலே, அநாதிகாலமாகச் செய்த பாவங்களுக்கு அஞ் சினவனாய், ஈச்வரன் பொறுப்பதற்கு உறுப்பாகப் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுப் பற்றுகையாலே, அவளுக்காக இவ னுடைய பாவங்களையெல்லாம் பொறுத்து அங்கீகரித்து இவ னுடைய நல்வினை தீவினைகள் எல்லாவற்றையும் தள்ளிப் பொகடுகையாலே புருஷகாரத்தாலே அழியும் என்கிறார். (191)

## 272

[1]உபாயம், ஸ்வீகாரகாலத்தில் புருஷ சாபேக்ஷமுமாய், புருஷகார சாபேக்ஷமுமாய் இருக்கும்; காரியகாலத்தில் உபயநிரபேக்ஷமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ:—'இப்படி, புருஷகாரத்தை விரும்பி நிற்கும் என்னில், 'சித்தோபாயம் வேறு ஒரு உபாயத்தையும் விரும்பி நிற்காது என்னுமதற்குக் குற்றம் வாராதோ?' என்னும் வினாவினைத் திருவுள்ளம்பற்றி, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத் திரத்தால்.

வியாக் :—'உபாயம் ஸ்வீகாரகாலத்தில் புருஷசாபேக்ஷமு மாய்ப் புருஷகார சாபேக்ஷமுமாய் இருக்கும்' என்றது, வேறு ஒரு உபாயத்தின் துணையைப் பொறுததான சித்தோபாயம், உபாயமாகப்பற்றுதலாகிற பிரபத்தி பண்ணுகிற காலத்தில் பிர பத்தி செய்கிற புருஷனையும் சேர்ப்பிக்கும் புருஷகாரத்தையும் விரும்பியிருக்கும் என்றபடி. 'காரியகாலத்தில் உபயநிரபேக்ஷ மாய் இருக்கும்' என்றது, பற்றப்படுகின்றவனான இறைவன் இவனுக்கு விருப்பமின்மையை நீக்குதல் முன்னாக விருப்ப

---

1 ஸ்வீகார காலத்தில் - இறைவனைப் பற்றுகிற காலத்தில். புருஷ சாபேக்ஷம் - பற்றுகிற ஆடவனை விரும்பியிருத்தல். புருஷகாரசாபே க்ஷம் - பிராட்டியை விரும்பியிருத்தல். உபய நிரபேக்ஷம் - மேலே கூறிய இருவரையும் விரும்பாமை. புருஷன் எவ்வாறு வேண்டியவனோ அவ்வாறே புருஷகாரமும் வேண்டும் என்பதற்குத் திருஷ்டாந்தத்திற் காகப் புருஷனையும் கூறுகிறார். இச்சூத்திரம் சுபக்கத்திலே உண்டான வினாவிற்கு விடை.

முடைமையாகிற பேற்றினைப் பண்ணுகையாகிற காரியகாலத்தில், புருஷனும் புருஷகாரமும் ஆகிற இரண்டனையும் விரும்பாமல், தானே செய்து தலைக்கட்டுவான் என்றபடி.

காரியத்தைச் செய்கிற காலத்தில் வேறொரு துணையை விரும்பினாலன்றோ, 'சித்தோபாயம் வேறு ஒரு துணையையும் விரும்பாது' என்பதற்குக் குற்றம் வருவது என்பது கருத்து. (192)

## 273

[1] 'ஸ்வப்பிரயோஜனபரர் எல்லாரையும்பிரதிகூலராக நினைக்கலாமோ?' என்னில்

என்பது சூத்திரம்.

அவ :—ஸ்வப்பிரயோஜனபரரைப்பிரதிகூலர் என்று பொதுவாக அருளிச்செய்தாரிறே [2] மேல். தன்னுடைய பிரயோஜனத்தில் நோக்குடைமையாகிற இது, அநுகூலர்களுக்குள் தலைவர்களான ஆழ்வார்கள் பக்கலிலும் தோன்றியிருக்கையாலே, அது காரணமான விரோதம் அவர்கள்பக்கல் வாராதபடி நீக்க வேண்டும் என்று திருவுள்ளம்பற்றி அது சம்பந்தமான வினாவை அநுவதிக்கிறார் இச்சூத்திரத்தால்.

என்றது, [3] 'நமக்கே நலமாதலில்' என்றும், [4] 'நான் கண்டு உகந்து கூத்தாட—ஞாலத்தூடே நடவாயே' என்றும், [5] 'கண்டு நான் உன்னை உகக்க' என்றும் வருகின்ற திருப்பாசுரங்களின் பகுதிகளாலும், [6] 'மடல் எடுத்தல்' முதலான செயல்களாலும் ஆழ்வார்களுக்கும் தன்னுடைய பிரயோஜனத்தில் நோக்குடைமையாகிற இது உண்டாகக் காண்கிறோமிறே; ஆன பின்பு ஸ்வப்பிரயோஜனபரர் எல்லாரையும் பிரதிகூலர் என்று சொல்லப்பார்க்கில் ஆழ்வார்களையும் அப்படி நினைக்க வேண்டி வாராதோ என்பது வினாவின் கருத்து என்றபடி. (193)

---

1 ஸ்வப்பிரயோஜனபரர் - தம் நலத்திலே நோக்குடையவர்.

2 'மேல்' என்றது, 267ஆம் சூத்திரத்தை.

3 பெரிய திருமொழி, 9. 3 : 9. 4 திருவாய்மொழி, 6. 9 : 2.

5 பெரியாழ்வார் திரு. 2. 7 : 9.

6 மடல் எடுத்தலை, திருவாய்மொழி, 5. 3 : 9, 10ஆம் திருப்பாசுரங்களாலும், சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற பிரபந்தங்களாலும் அறிதல் தகும்.

## 274

இங்கு ஸ்வப்பிரயோஜனம் [1] என்கிறது,
ஆச்ரயதோஷ ஜந்யமானத்தை.

என்பது சூத்திரம்.

அவ :—அவ்வினாவிற்கு விடை அளிக்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இங்கு ஸ்வப்பிரயோஜனம் என்கிறது, ஆச்ரய தோஷஜந்யமானத்தை' என்றது, பிரதிகூலர்வகை சொல்லுகிற இவ்விடத்தில் 'ஸ்வப்பிரயோஜனம்' என்கிறது, பகவானுடைய அநுபவத்திற்கும் கைங்கரியத்திற்கும் நிலைக்களமான இவனுடைய [2] 'அவித்யை' முதலான குற்றங்களால் வந்த ஸ்வப்பிரயோஜனத்தை என்றபடி.

இதனை 'ஆச்ரயதோஷ ஜந்யம்' என்று ஓதுக்குகையாலே ஆழ்வார்களுடைய ஸ்வப்பிரயோஜனம் [3] விஷயதோஷத்தால் உண்டானது என்பது கருத்து. இதனை "விஷயதோஷத்தால் வருமவை' என்று [4] மேலே விளக்கமாக அருளிச்செய்கிறாரே. (194)

## 275

ஆகையாலே தோஷம் இல்லை.[5]

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய பொருளை முடிக்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] ஆச்ரயதோஷ ஜன்யமானம் - தன்னுடைய அறிவின்மை காரணமாக உண்டாவது. அதாவது, ஸ்வப்பிரயோஜன புத்திக்குக் காரணமான தன்னுடைய தோஷத்தால் உண்டாகுமவை என்றபடி. ஆச்ரயம்-இடம். ஜன்யம் - உண்டாவது.

[2] அவித்யை - அறிவின்மை. 'முதலான' என்றதனால், ருசி, வாசனை என்னும் இவற்றையும் கொள்க.

[3] விஷயம் - இறைவனுடைய திருமேனியின் அழகு முதலாயின.

[4] 'மேலே' என்றது, 276 ; 277ஆம் சூத்திரங்களை.

[5] இச்சூத்திரத்திற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். ஆதலால், ஆழ்வார்கள்பக்கல் அக்குற்றம் இல்லை என்பது முதற்பொருள். இரண்டாவது பொருள், ஆகையால், ஸ்வப்பிரயோஜனபரரைப் பிரதிகூலர் என்று கூறியதில் குற்றம் இல்லை என்பது. இரு

வியாக் :—'ஆகையாலே தோஷம் இல்லை' என்றது, விரோதத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட சுவப்பிரயோஜனம், ஆச்ரயதோஷத்தால் உண்டாவதாயிருக்கையாலே, அந்த விரோதம், ஆழ்வார்கள் பக்கலிலும் வரும் என்கிற குற்றம் இல்லை என்றபடி.

அன்றிக்கே, சுவப்பிரயோஜனபரரைப் பொதுவாகப் 'பிரதிகூலர்' என்று சொல்லுமளவில், அநுகூலர்களான ஆழ்வார்கள் பக்கலிலும் சுவப்பிரயோஜனத்தில் நோக்குடைமை காண்கையாலே ஆழ்வார்களையும் 'பிரதிகூலர்' என்று நினைக்க வேண்டி வருகையால், சுவப்பிரயோஜனபரரைப் 'பிரதிகூலர்' என்று கூறுதல் குற்றம் அன்றோ என்று நினைத்துப் பண்ணும் வினவை அநுவதிக்கிறார் 'ஸ்வப் பிரயோஜனபரர் எல்லாரையும் பிரதிகூலர் என்னலாமோ? என்னில்' என்று. அதற்கு விடை அளிக்கிறார் 'இங்கு' என்று தொடங்கும் சூத்திரத்தால். இவ்விரு சூத்திரங்கட்கும் பொருள் முன்பு கூறியதைப் போன்றே இங்கும் கொள்க. மேலே கூறிய பொருளை முடிக்கிறார் 'ஆகையால் தோஷம் இல்லை' என்று. 'ஆகையால்' என்பதற்குப் பொருள் முன்பு கூறியதனையே கொள்க. இனி, 'தோஷம் இல்லை' என்பதற்குப் பொருள், சுவப்பிரயோஜனபரரைப் பிரதிகூலர் என்று கூறியதில் குற்றம் இல்லை என்பதாம் என்று இங்ஙனே யோஜிக்கவுமாம் என்றபடி. (195)

## 276

[1] விஷய தோஷத்தால் வருமவை எல்லாம் துஸ்த்யஜமாயிறே இருப்பது.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி ஆச்ரய தோஷத்தால் உண்டாமவை அன்றிக்கே, விஷய தோஷத்தால் உண்டானவையானாலும், ஆன்மாவின் தன்மைக்கு முரண் ஆனது விலக்கத்தக்கதன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

வகையான பொருள்களுக்கும் கூறியுள்ள அநுவாதத்தை நோக்கல் தகும்.

[1] விஷயம் - இறைவனுடைய திருமேனியின் அழகு முதலாயின: துஸ்த்யஜம் - விலக்க முடியாதது; நீக்க முடியாதது. துஸ்த்யஜம். தொகுதி ஒருமை. 'வருமவையெல்லாம்' என்ற பன்மையை நோக்குக.

வியாக் :—'விஷய தோஷத்தால் வருமவை எல்லாம்' என்றது, அநுபவ விஷயமான இறைவனுடைய வயிரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடையுடுத்தும்படியான விக்கிரக வைலக்ஷண்யமாகிற குற்றத்தாலே வருகிற தன் பிரயோஜனத்திலே நோக்கு, அதற்குக் காரணமான ஆசை, அந்த ஆசை [1] நிறைவேறுதற்கான செயல்கள் ஆகிற இவை எல்லாம் என்றபடி. 'துஸ்த்யஜமாயிறே இருப்பது' என்றது, ஆன்மாவின் தன்மைக்கு முரண்பட்டவை என்று விடப் பார்த்தாலும் விடுதற்கு அரிதாயிறே இருப்பது என்றபடி.

[2] 'விஷய தோஷத்தாலே வருமது' என்பது பாடமான போது சுவப்பிரயோஜன மாத்திரத்தையே சொல்லுகிறது. (196)

## 277

'ஊமையரோடு [3] செவிடர் வார்த்தை',
'கதமந்யதிச்சதி'.
என்பது சூத்திரம்.

அவ :—விஷய தோஷத்தால் வருமவற்றை விடுதற்கு இயலாதென்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஊமையரோடு செவிடர் வார்த்தை' என்றது: 'மற்றிருந்தீர்கட்கு' என்று தொடங்கி, [4] 'அத்தலையாலே பேறு என்று அறுதியிட்டால் அவன் வருமளவும் [5] கிரமப் பிராப்தி

---

[1] 'நிறைவேறுதற்கான செயல்கள்' என்றது, மடல் ஊர்தல் முதலாயினவற்றை.

[2] இந்த ஒருமைக்கு, அதற்குக் காரணமான ஆசை, நிறைவேறுதற்கு உரிய செயல்கள் இவற்றை நீக்கிப் பொருள் கொள்ள வேண்டும். 'வருமது' என்ற ஒருமைக்கு, 'துஸ்த்யஜம்' என்பதனைத் தொகுதியொருமையாகக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் இல்லையே.

[3] 'ஊமையரோடு' என்பது நாய்ச்சியார் திருமொழி, 12 : 1. 'கதம் அந்யத்' என்பது தோத்திர ரத்நம், 27.

[4] திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார். 'அத்தலையாலே' என்று தொடங்கி. அத்தலை - இறைவன்.

[5] கிரமப்பிராப்தி - கிடைக்கும் காலத்திலே கிடைக்கும் பேறு.

பார்த்து ஆறியிருக்கவேண்டுங்காண். நீ இங்ஙனே பதற லாகாதுகாண்' என்ற தாய்மாரைக் குறித்து, இறைவன்பால் பக்தி இன்றிக்கே, என்னுடைய நிலைக்கு வேருகவிருந்த உங்களுக்கு, எனக்கு ஒடுகிற நிலை அறியப் போகாது; அவன் அவன் என்று வாய் பிதற்றும்படி திருமகள் கேள்வன் விஷய மான பேராசையை மறுபாடு உருவ உடையேனாய், இப்படி அவனை ஒழியச் செல்லாமை உண்டானால் அவன் இருந்த விடத்தே சென்று கிட்டுகை செய்யத் தக்கதாக இருக்க, அதற்குக் கால் நடை தாராதபடி இருக்கிற எனக்கு, நான் அவனோடே சென்று சேராமைக்கு உறுப்பாக நீங்கள் சொல்லும் வார்த்தை, கேட்கைக்கு உறுப்பு இல்லாத செவிடரோடே சொல்லுகைக்கு உறுப்பு இல்லாத ஊமைகள் மாற்றங்கள் சொல்லுவது போன்று இருப்பதொன்று என்று ஆண்டாள் அருளிச்செய்கையாலும் என்றபடி.

'கதம் அந்யத் இச்சதி' என்றது, [1]'தவாம்ருதஸ்யந்திநி' என்று தொடங்கி, 'வகுத்த சேஷியான தேவரீருடைய தேனே மலரும் திருவடித் தாமரைகளில் இனிமையிலே அழுந்தின நெஞ்சு, மற்றொரு தாழ்ந்த விஷயத்தை விரும்பும்படி எங்ஙனே? மதுவையே உண்டு அதனால் பிழைத்திருக்கின்ற வண்டு, மது நிறைந்திருக்கிற தாமரைப் பூவானது இருக்கச் செய்தே, அதன் சுவடு அறிந்த தான், கிட்டுகை அரிதாய்க் கிட்டினாலும் நாக்கு நனைக்கவும் போகாததாயிருக்கிற முள்ளிப்பூவிற்சென்று படியாத மாத்திரமன்றிக்கே, அதனைப் பார்ப்பதும் செய்யாதிறே' என்று ஆளவந்தார் அருளிச்செய்கையாலும் என்றபடி.

ஆக, இவற்றால் இறைவனுடைய திருமேனியின் அழகினைக் கண்டு ஆசை கொண்டவர்களை மீட்க அரிது என்று தோற்றுகை யாலே, விஷய தோஷத்தால் வருமது விடுதற்கு அரிது என்பது சித்தமிறே.

---

[1] தவ அம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே
நிவேஶிதாத்மா கதமந்யதிச்சதி
ஸ்திதே ரவிந்தே மகரந்த நிர்ப்பரே
மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹிவீக்ஷதே.

இச்சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'வகுத்த சேஷி யான' என்று தொடங்கி.

## 278

[1]இப்படி இவையித்தனையும் சதாசார்ய பிரசாதத்தாலே வர்த்திக்கும் போதைக்கு வஸ்தவ்யம் - ஆசார்ய சந்நிதியும் பகவத் சந்நிதியும்; வக்தவ்யம் - ஆசார்ய வைபவமும் ஸ்வநிகர்ஷமும்; ஜப்தவ்யம் - குருபரம்பரையும் துவயமும்; பரிக்கிராஹ்யம் - பூர்வாசார்யர்களுடைய வசனமும் அநுஷ்டானமும்; பரித்தியாஜ்யம் அவைஷ்ணவ சகவாசமும் அபிமானமும்; கர்த்தவ்யம் - ஆசார்ய கைங்கர்யமும் பகவத் கைங்கர்யமும்.

என்பது சூத்திரம்.

அவ:—ஆக, [2] தினசர்யையில் சொல்லப்பட்ட மங்களாசாசனத்திற்கு அநுகூலருடைய சேர்க்கை, பிரதிகூலருடைய சேர்க்கையினின்றும் நீங்குதல் என்னுமிவற்றை விவரித்தார் மேல். "சதாசார்ய பிரசாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக் கொண்டு போரக்கடவன்" [3] என்றதனை விவரிக்கிறார் இனி.

வியாக்:—'இப்படி இவை இத்தனையும் சதாசார்ய பிரசாதத்தாலே வர்த்திக்கும் போதைக்கு' என்றது, மேலே கூறிய வகையிலே இந்தத்தன்மை விசேடங்களெல்லாம் நல்லாசிரியனுடைய திருவருளாலே கொழுந்துவிட்டு வளர்ந்து வரும் போதைக்கு என்றபடி. 'வஸ்தவ்யம் ஆசாரியன் சந்நிதியும் பகவத்சந்நிதியும்' என்றது, இவனுக்கு வசிக்கு

[1] சதாசார்யன் - நல்லாசிரியன். பிரசாதம் - திருவருள். வர்த்தித்தல் - வளர்த்தல். வஸ்தவ்யம் - வசிக்க வேண்டும் இடம். வக்தவ்யம் - சொல்ல வேண்டுவது. ஸ்வநிகர்ஷம் - தன்னுடைய தாழ்வு. ஜப்தவ்யம் - ஜபிக்க வேண்டியது. பரிக்ராஹ்யம் - கொள்ள வேண்டுவது. பரித்தியாஜ்யம் - விலக்க வேண்டுவது. அவைஷ்ணவன் - வைணவன் அல்லாதவன், கர்த்தவ்யம் - செய்ய வேண்டுவது.

[2] தினசரியை, 246ஆம் சூத்திரம். 247 முதல் 262 முடிய உள்ள சூத்திரங்களில் மங்களாசாசனமும், 263 முதல் 277 முடிய உள்ள சூத்திரங்களில் அநுகூலருடைய சேர்க்கை பிரதிகூலருடைய சேர்க்கையினின்றும் நீங்குதலும் சொல்லப்பட்டன.

[3] என்றது, 246ஆம் சூத்திரத்தில்.

மிடம், நலத்தையே எண்ணுகின்றவனாய் உபதேசம் முதலியவை களாலே இவற்றைத் தோற்றுவிப்பவனான தன் ஆசாரியனுடைய சந்நிதியும், அவன் காட்டிக்கொடுக்கக் கைக்கொண்டு அவன் உகந்த விஷயமாய்த் தன் பக்கலிலே விசேடமான திருவருளைப் பண்ணிக்கொண்டு போரும் அர்ச்சாவதாரமான பகவான் சந்நிதியும் என்றபடி. [1] இது சமுச்சயமும் அன்று; சமவிகல்பமும் அன்று. ஆசாரியன் சந்நிதியே பிரதானம்; அது இல்லாவிட்டால் அர்ச்சாவதார சந்நிதி என்றபடி. [2] "என் அடியார்களோடு கூடி வசிக்க வேண்டும்; அது கிடைக்காவிடில் என்னோடாவது வசிக்கவேண்டும்" என்பதன்றோ பகவானுடைய வார்த்தையும்;

இனி, [3] மேல் வருவனவெல்லாம் சமுச்சயம்.

'வக்தவ்யம் ஆசார்ய வைபவமும் ஸ்வநிகர்ஷமும்' என்றது, இவனுக்கு எல்லாக்காலங்களிலும் வாயினால் சொல்லப்படுமது, தீவினைகளையே பற்றாசாகத் தன்னை அங்கீகரித்தருளின ஆசாரியனுடைய அருள் பொறுமை முதலிய பெருமையும், எத்தனையேனும் அருள் முதலிய குணங்கள் நிறைந்த பெரியோர்களும் ஏறிட்டுப்பார்க்க அருவருக்கும்படி நின்ற ஆன்ம

---

[1] 'ஆசாரியன் சந்நிதியும் பகவத் சந்நிதியும்' என்பதற்கு, வசிப்பதற்கு ஆசாரியன் சந்நிதியே சிறந்தது; அது இல்லாத இடங்களில் பகவானுடைய சந்நிதி அமையும் என்பதனைக் கருத்தாகக் கொள்க. இக்கருத்தைப் புலப்படுத்தவே ஆசாரியன் சந்நிதியை முற்பட அருளிச் செய்ததாஉம் என்க. இதனையே விளக்குகிறார் 'இது' என்று தொடங்கி. இது - 'ஆசாரியன் சந்நிதியும் பகவத் சந்நிதியும்' என்ற இத்தொடர் மொழி. சமுச்சயம் - சேர்த்துச் சொல்லுதல். இதுவாதல் அதுவாதல் என்பது, சம விகற்பம். இவ்விரண்டனுள் ஒன்றாக இத்தொடர் மொழி இருந்தால், 'இரண்டும் ஒத்த பெருமையையுடையன' என்ற பொருளைக் காட்டும். இங்கு ஆசாரியன் சந்நிதிக்கு ஏற்றம் சொல்லவேண்டிய இடமாகையாலே, 'சமுச்சயமுமன்று, சம விகற்பமுமன்று' என்கிறார்.

[2] இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'என் அடியார்களோடு' என்று தொடங்கி.

மத்பக்தைஸ்ஸஹ ஸம்வாஸஸ்ததஸித்தௌமயாபிவா "
என்பது ஸ்ரீபாஞ்சராத்ரம்.

[3] 'மேல் வருவனவெல்லாம்' என்றது, மேலே வருகின்ற 'ஆசார்யவைபவமும் ஸ்வநிகர்ஷமும்' என்பது போன்று மேலே வருகின்றவையெல்லாம் என்றபடி. 'சமுச்சயம்' என்றது, சேர்த்துச் சொல்லப்படுபவை; உயர்வு தாழ்வுகள் கருதியவை அல்ல என்றபடி.

குணங்கள் அல்லாத மற்றைக் குணங்கள் நிறைந்திருத்தலாகிற தன்னுடைய தாழ்வும் ஆகிற இவை என்றபடி. ஸ்ரீமதுரகவியாழ்வார் [1] 'நன்மையால் மிக்க' என்கிற திருப்பாசுரம் தொடங்கி இவை இரண்டையும் விரிவாக அருளிச்செய்தாரிறே.

'ஜப்தவ்யம் குருபரம்பரையும் துவயமும்' என்றது, இவனுக்குப் போதுபோக்குதற்கும் அநுபவத்திற்கும் உறுப்பாகப் பிறர் அறியாமல் சொல்லிக்கொண்டு போரப்படுமது, [2] "ஏவரதனே, இராமாநுசருடைய திருவடிகளில் சிஷ்யனாக இருக்கிறேன். அவரோ, ஆளவந்தாருடைய வமிசத்தை விளங்கச் செய்தவராகவிருந்தார், அந்த ஆளவந்தாரும் நாதமுனிகள் வமிசத்தில் அவதரித்தவர். நாதமுனிகளும் நம்மாழ்வாருடைய வமிசத்தில் அவதரித்தவர். அந்த நம்மாழ்வாரும் தேவரீருடைய தேவியான பெரிய பிராட்டியாருக்கு அடியவர். ஆகையால், தேவரீருடைய திருவருளுக்குக் கொள்கலமாகவிருக்கிறேன்" என்கிறபடியே சர்வேச்வரன் குளிர நோக்குகைக்கு உடலாய் [3] "அந்த ஆசாரியருடைய வமிசம் அறிந்துகொள்ளத்தக்கது' ஆசாரியர்களுள் சிறப்பாக இறைவன் வரையில் இவரிவர் என்று அறியவேண்டும்" என்கிறபடியே தன் ஆசாரியன் முதற்கொண்டு பரமாசாரியனான இறைவன் இறுதியாக உள்ள குருபரம்பரையும், அந்தக் குருபரம்பரை அடியாகத் தன் ஆசாரியன் தனக்குத் தஞ்சமாக உபதேசித்த துவயமும் என்றபடி. [4] இதனால் குருபரம்பரை முன்னாக வந்த துவயமே இவனுக்கு இரகசியமாகச் சொல்லிக்கொண்டு போரப்படும்

---

[1] இது, கண்ணிநுண்சிறுத்தாம்பு, 4. இந்தத் திருப்பாசுரத்தில் முன்னிரண்டு அடிகளால் தம்முடைய தாழ்வினையும், பின்னிரண்டு அடிகளால் ஆசாரியருடைய பெருமையினையும் பேசியிருத்தல் காண்க.

[2] ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி குலப்ரதீபஸ்
த்வாஸீத் ஸயாமுந முநேஸ்ஸச நாதவம்ஶ்ய:
வம்ஶ்ய: பராங்குஶ முநேஸ்ஸச ஸோபிதேவ்யா:
தாஸஸ்தவேதி வரதாஸ்மி தவேக்ஷணீய:
என்பது வரதராஜ ஸ்தவம், 102.

[3] ஸசாசார்ய வம்ஶோ ஜ்ஞேய:
ஆசார்யாணமஸா வஸா வித்யா பகவத்த:
என்பது பிரமாணம்.

[4] இதனால் ஏனைய மந்திரங்களுக்குக் குருபரம்பரை இல்லை என்பது தெளிதல் தகும்.

ன்றதனைத் தெரிவித்தவாறு. [1] பாஷ்யகாரர்க்குப் போது பாக்கும் வகையை அருளிச் செய்கிறவிடத்தில் "எப்போதும் ந்தத் துவய மந்திரத்தைப் பொருள் உணர்வோடுகூடச் சொல்லிக்கொண்டிருப்பாய்" என்றிறே பெரிய பெருமாள் அருளிச்செய்தது.

'பரிக்கிராஹ்யம் பூர்வாசாரியர்களுடைய வசனமும் அநுஷ்டானமும்' என்றது, தனக்கு ஞானமும் அநுஷ்டானமும் பற்றிருக்கைக்கு உறுப்பாகக் கண்ட கண்ட இடங்களிலே இவனால் கொள்ளப்படுமது, நாதமுனிகள் முதலாக இவ்வருள்ள பூர்வாசாரியர்களுடைய அறியவேண்டிய பொருள்களை விளக்குகின்ற திவ்விய வார்த்தைகளும், அந்த வார்த்தைகளுக்குத் தகுதியாக மறுவற்ற ஒழுக்கங்களும் என்றபடி. [2] "உதிரி நெல்லைக்கொண்டு ஜீவிக்கிறவன் அந்த நெல்லை எப்படிச் சேகரிப்பானோ அப்படியே, அறிவுள்ள ஒருவன் மகாத்மாக்களுடைய குற்றமற்ற வார்த்தைகளையும் அப்படிப்பட்ட ஒழுக்கங்களையும் அவ்வவ்விடங்களில் சேகரித்துக்கொண்டிருக்க வேண்டும்" என்னக்கடவதிறே.

'பரித்தியாஜ்யம் அவைஷ்ணவ சகவாசமும் அபிமானமும்' என்றது, ஞானத்தையும் அநுஷ்டானத்தையும் அழித்துவிடும் என்னும் அச்சத்தாலே இவனுக்கு அடியோடு விடப்படுமது, வைஷ்ணவர்களுக்கு உரிய இலக்கணம் இல்லாதவர்களுடைய கூட்டும், அவர்கள் 'இவன் நம்முடையவன்' என்று ஒவ்வொரு சம்பந்தத்தாலே தன் திறத்தில் பண்ணும் அன்பும் என்றபடி.

'கர்த்தவ்யம் ஆசாரிய கைங்கரியமும் பகவத்கைங்கரியமும்' என்றது, இவனுக்கு எப்பொழுதும் இவன் தன்மைக்குத் தகுதியாகவே செய்யப்படுமது, பெரிய உபகாரத்தைச் செய்த தன் ஆசாரியன் விஷயத்தில் அன்பு முன்னாகப் பண்ணும் கைங்கரிய

---

[1] துவயம் சிறந்தது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பாஷ்யகாரருக்கு' என்று தொடங்கி.

"த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா"

என்பது சரணாகதி கத்யம்.

பெரியபெருமாள்-திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன்.

[2] ஸூவ்யாஹ்ருதாநி மஹதாம் ஸூக்ருதாநி ததஸ்தத:
ஸஞ்சிந்வந் தீர ஆஸீத ஸிலஹாரீ ஸிலம் யதா.

என்பது லக்ஷ்மீ தந்திரம்.

மும், அவனுடைய ஏவலுக்குக் கட்டுப்பட்டவனுய்ச் செய்யும் பகவானுடைய கைங்கரியமும் என்றபடி.

ஆக, தினசரியையில் சொன்ன தன்மை விசேடங்கள் எல்லாம் 'சதாசாரிய பிரசாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக் கொண்டு போருகை'யாவது, இப்படியிருந்துள்ள வசிக்கப்படுமதும் சொல்லப்படுமதும் ஜபிக்கப்படுமதும் கொள்ளப்படுமதும் தள்ளப்படுமதும் செய்யப்படுமதும் ஆகியவற்றை அறிந்து இவற்றிலே நிலே நின்றவனுய்ப் போருகை என்றதாயிற்று. (198)

## 279

**கீழ்ச்சொன்ன பகவத் கைங்கரியம் அறிவது, சாஸ்திர முகத்தாலே; ஆசார்ய கைங்கரியம் அறிவது, சாஸ்திர முகத்தாலும் ஆசார்ய வசனத்தாலும்.**

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி, செய்யத் தக்கனவான [1]கைங்கரியங்கள் இரண்டனேயும் அறிவது எம்முகத்தாலே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'கீழ்' என்றது, 'வசிக்கத்தகுவது' முதலானவைகளேச் சொன்ன எண்ணரிக்கையில் என்றபடி. 'பகவத்கைங்கரியம் அறிவது சாஸ்திரமுகத்தாலே' என்றது, பகவான், இவனுக்கு இப்போது வாய் திறந்து ஒன்றையும் அருளிச் செய்யாமையாலே, அந்தக் கைங்கரியங்களேச் சொல்லுகிற சுருதி ஸ்மிருதி முதலான சாஸ்திரங்களின் முகத்தாலே அறிய வேண்டும் என்றபடி. 'ஆசார்யகைங்கரியம் அறிவது சாஸ்திர முகத்தாலும் ஆசார்யவசனத்தாலும்' என்றது, ஆசாரியன் விஷயத்தில் செய்யும் தொண்டுகளின் வகைகளேச் சொல்லுகின்ற சாஸ்திரங்களின் முகத்தாலும் தனக்கு விருப்பமுள்ளது இன்னது விருப்பமில்லாதது இன்னது என்னுமிடத்தை அவன் அருளிச்செய்யும் வார்த்தைகள் மூலமாகவும் அறியவேண்டும் என்றபடி. (199)

---

[1] 'கைங்கரியங்கள் இரண்டையும்' என்றது ஆசாரிய கைங்கரியத்தையும் பகவானுக்குச் செய்யும் கைங்கரியத்தையும்.

## 280

கைங்கரியந்தான் இரண்டு.[1]

என்பது சூத்திரம்.

அவ :—இனி, மேல் கைங்கரியத்தின் இலக்கணத்தை அறிவிக்கைக்காக, 'கைங்கரியந்தான் இரண்டு, என்கிறார் இச் சூத்திரத்தால். (200)

## 281

அதாவது, இஷ்டம் செய்கையும் அநிஷ்டம் தவிருகையும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அதாவது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—அதாவது, [2] விருப்பமுள்ளனவற்றைச் செய்கையும், விருப்பம் இல்லனவற்றைச் செய்யாதொழிகையும் என்றபடி. (201)

## 282

[3] இஷ்டாநிஷ்டங்கள் வர்ணாச்ரமங்களையும் ஆத்மஸ்வரூபத்தையும் அவலம்பித்திருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'இவை இரண்டும் எவற்றைப்பற்றி நிற்கும்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] கைங்கரியம் - கிங்கரனது செயல். கிங்கரனாவான் - தனக்கு என்று ஒரு பயனையும் கருதாது, தலைவனுடைய விருப்பின்படியே செய்பவன். எதையும் செய்கிறவன் என்றவாறு. கைங்கரியத்தின் இலக்கணம் அடுத்த சூத்திரத்தில் கூறப்படுகிறது.

[2] 'விருப்பமுள்ளனவற்றை' என்றதற்கு முன், 'ஆசாரியனுக்கும் இறைவனுக்கும்' என்ற சொற்களைக் கொணர்ந்து சேர்க்க.

[3] இஷ்டத்தையும் அநிஷ்டத்தையும், வர்ணாச்ரமங்களோடும் ஆத்ம சொரூபத்தோடும் தனித்தனியே கூட்டுக. இஷ்டம் - விருப்பம். அநிஷ்டம் - விருப்பமில்லாதது. அவலம்பித்திருக்கும் - பற்றியிருக்கும். இச்சூத்திரத்திற்கு மூன்று வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார்.

வியாக் :—'இஷ்ட அநிஷ்டங்கள், வர்ண ஆச்ரமங்களையும் ஆத்மஸ்வரூபத்தையும் அவலம்பித்திருக்கும்' என்றது, மேலே கூறிய கைங்கரியத்தை ஏற்றுக்கொள்ளுகின்றவர்கள் [1] இருவருடைய விருப்பமும் விருப்பமின்மையும், இவ்வதிகாரியினுடைய வர்ணம் ஆச்ரமம் ஆகியவற்றையும் ஆன்மசொரூபத்தையும் பற்றியிருக்கும் என்றபடி.

இஷ்ட அநிஷ்டங்கள் வர்ணத்தையும் ஆச்ரமத்தையும் பற்றியிருக்கையாவது, தன்னுடைய சாதிக்கும் ஆச்ரமத்திற்கும் உசிதமான தர்மங்களைப் பிறர்பொருட்டுச் செய்கை விருப்பமாய், தன்பொருட்டுச் செய்கை விருப்பம் இல்லாததாய் இருக்கை. [2] பிறர் பொருட்டுச் செய்கையாவது, உலகத்தாரின் நன்மைக்காகவும் சிஷ்யர்கள் புத்திரர்கள் இவர்களுடைய உஜ்ஜீவனத்தின் பொருட்டும் பேரருளாலே செய்தல். இப்பொருளை [3] "இனி, இவற்றில் நம்மாசாரியர்கள் அநுஷ்டிக்கிறவை சிஷ்யபுத்திரர்களுடைய உஜ்ஜீவனார்த்தமாக ஆந்ருசம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கிறார்களித்தனை. இப்படி அநுஷ்டியாதபோது பகவத் விபூதிபூதரான சேதனர்க்கு நாசஹேதுவாகையாலே, ஈச்வரனுக்கு அநபிமதபூதன் ஆவன். ஆகையாலே, யாதோரளவாலே லோக சங்கிரஹம் பிறக்கும்? யாதோரளவாலே சிஷ்யபுத்திரர்களுக்கு உஜ்ஜீவனம் உண்டாம்? அவ்வளவும் அநுஷ்டேயம் என்றதாயிற்று. [4] பிரவிருத்தி தருமந்தானே அபிசந்தி பேதத்தாலே

[1] இருவர் - ஆசாரியனும் சர்வேசவரனும்.

[2] பிறர்பொருட்டுச் செய்கை - தனக்கு என்று ஒரு பயனையும் கருதாமல் செய்தல். தன்பொருட்டுச் செய்கையாவது, தனக்கு என்று ஒரு பயனைக் கருதிச் செய்தல். இவற்றை விளக்குகிறார் 'பிறர் பொருட்டுச் செய்கையாவது' என்று தொடங்கி.

[3] தாம் அருளிச்செய்த இப்பொருளுக்கு, இந்நூலாசிரியர் அருளிச்செய்த வேறு நூலினின்றும் பிரமாணம் காட்டுகிறார் 'இனி இவற்றில்' என்று தொடங்கி. ஆந்ருசம்ஸ்யம் - உயிர்கள் மாட்டு வைத்த அருள். விபூதி - இறைவனுடைய நியமனத்திற்கு உட்பட்ட பொருள்கள். பகவத் விபூதி பூதரான - பகவானுடைய நியமனத்திற்கு உட்பட்ட பொருள்களான. அநபிமதபூதன் - வெறுப்பிற்குரியவன். சங்கிரஹம் - நன்மை. அநுஷ்டேயம் - செய்யத் தக்கது.

[4] 'பலனைக் கருதாது பிறர்பொருட்டுச் செய்கிற நிவிருத்தி தருமம் கைங்கரியமாயவாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'பிரவிருத்தி தருமந்தானே' என்று தொடங்கி. பிரவிருத்தி தருமம் - ஒரு பலனைக் கருதிச் செய்யப்படும் தருமம். அபிசந்தி

நிவிருத்தி தருமமானவோபாதி இந்த நிவிருத்தி தருமமும் பிராப்பியமாகக் கடவது. இவ்விடத்தில் அகரணேபிரத்திய வாயம் எம்பெருமானுடைய அநபிமதத்வமும் தன்னுடைய புருஷார்த்தஹாநியுமாகக்கடவது'' என்று தனிச் சுலோகத்திலே இவர்தாமே அருளிச்செய்தாரிறே.

இனி, தன்பொருட்டுச் செய்கையாவது, தன் சாதிக்கும் ஆச்ரமத்திற்கும் உசிதமாகச் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவை யாகையாலே, 'நாம் இவற்றைச் செய்யாதொழியில் செய்ய வேண்டியவற்றைச் செய்யாமையாகிற பாவம் வரும் என்று நினைத்து அவற்றைச் செய்கை.

இனி, இஷ்ட அநிஷ்டங்கள் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி யிருக்கையாவது, [1] 'இச்சை ஸ்வரூபம்' என்கிறபடியே [2] உபயோகப்படுகிற நிலையில் சேஷியுடைய விருப்பத்திற்குத் தகுதியாகச் சேஷத்துவத்தையும் பாரதந்திரியத்தையும் உப யோகப்படுத்துதல் விருப்பமாய், தட்டுமாறி உபயோகப் படுத்துகிற காலத்தில், தன்னுடைய சேஷத்துவத்தை இட்டு இருய்த்தல் பாரதந்திரியத்தை இட்டு எதிர்விழி கொடாதொழிதல் செய்கை விருப்பமில்லாததாகவிருக்கும்.

இங்ஙன் அன்றிக்கே, இச்சூத்திரத்திற்குத், 'தன்னுடைய சாதிக்கும் ஆச்ரமத்திற்கும் [3] உசிதமானவற்றைச் செய்தல் விருப்பம்; அவற்றிற்குச் சேராதனவற்றைச் செய்தல் விருப்பம் இல்லாதது' என்றும், [4] 'ஆன்ம சொரூபத்திற்கு உசிதமான

---

பேதம் - எண்ணத்தின் வேறுபாடு. நிவிருத்தி தருமம் - பலனைக் கருதாது செய்யும் தருமம். தருமமானவோபாதி - தருமம் ஆவதைப் போன்று. இந்த நிவிருத்தி தருமமும் - இறைவனுக்கு விருப்பமுள்ள தாய்ப் பிறர்பொருட்டுச் செய்யப்படுவதாய இந்தத் தருமமும் தானே பிராப்பியமாகக் கடவது; கைங்கரியமாகக் கடவது.

[1] ''இச்சை சொரூபம்'' என்பது, நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி.

[2] இவ்விடத்தில் 164 முதல் 167 முடியவுள்ள சூத்திரங்களின் வியாக்கியானங்களை நினைவுகூர்தல் தகும்.

[3] 'உசிதமானவற்றை' என்றது, சந்தியாவந்தனம் முதலான வற்றை. 'அவற்றைச் சேராதனவற்றை' என்றது, உண்ணத்தகாதன வற்றை உண்ணல்.

[4] 'ஆன்ம சொரூபத்திற்கு உசிதமானவற்றை' என்றது, இறை வனுடைய குணநுபவத்தை. 'உசிதமல்லாதனவற்றை' என்றது, உலகவின்பங்களிலே ஈடுபடுதலை.

வற்றைச் செய்தல் விருப்பம்; உசிதம் அல்லாதனவற்றைச் செய்வது விருப்பம் இல்லாதது' என்றும் பொருள் கூறலுமாம்.

இனி, இங்ஙனம் அன்றிக்கே, இச்சூத்திரத்திற்கு, [1] 'ஒரு காரணம்பற்றி வந்தவையாய் நிலை நில்லாதனவுமான சாதியிலும் ஆச்ரமத்திலும் ஊற்றிருக்கை விருப்பம் இல்லாதது; காரணம் இல்லாமலே என்றும் சேஷமாகவிருக்கிற ஆன்ம சொரூபத்திலே ஊற்றிருத்தல் விருப்பம்' என்று பொருள் கூறலுமாம்.

[2] இங்ஙனம் விருப்பத்தையும் விருப்பமின்மையையும் ஊற்றத்தை இட்டுச் சொல்லுகையன்றிக்கே, [3] 'விருப்பமின்மை வர்ணத்தையும் ஆச்ரமத்தையும் பற்றியிருக்கும்; விருப்பம் ஆன்மசொரூபத்தைப் பற்றியிருக்கும்' என்று இங்ஙனம் பிரித்து, வர்ண ஆச்ரம ஆசாரங்களை விருப்பம் இல்லாத கூட்டத்திலே சேர்த்துச் சொல்லப் பார்க்கில் [4] "வேதங்களும் மநு முதலான ஸ்மிருதிகளும் என்னுடைய கட்டளைகளே; எவன் அவற்றைப் பொருட்படுத்தாமல் கடந்து இருக்கிறானோ, அவன் என்னுடைய கட்டளையை மீறினவனாவன்; எனக்குத் தீங்கிழைத்தவன் ஆதலால், அவன் என்னிடத்தில் பக்தியுள்ளவனாயினும்

---

[1] 'ஒரு காரணம்' என்றது, கர்மம் காரணமாக வந்ததனை நோக்கி. 'நிலை நில்லாதன' என்றது, சரீரத்தை நோக்கி. ஊற்றிருத்தல் - ஊன்றியிருத்தல். இப்பொருளுக்குச் சூத்திரப் பொருளை எதிர் நிரல் நிறையாகக் கொள்க.

[2] 'இங்ஙனம்' என்றது, மூன்றாவதாக அருளிச்செய்த பொருளைச் சுட்டுகிறது.

[3] ஆய் வியாக்கியானத்தை அநுவதிக்கிறார் 'விருப்பமின்மை' என்று தொடங்கி. ஆய் வியாக்கியானத்திற்கும் சூத்திரப் பொருளை எதிர் நிரல்நிறையாகக் கொள்க.

[4] ஆய் வியாக்கியானம், இறைவன் திருவுள்ளத்திற்கும் பிராட்டி திருவுள்ளத்திற்கும் பொருந்தாது என்று காரணம் காட்டி அதனை மறுக்கிறார் 'வேதங்களும்' என்று தொடங்கி. 'சொல்லப் பார்க்கில்' என்பதனை மேலே வருகின்ற 'விரோதிக்குமிறே' என்றதனோடு கூட்டுக.

ஶ்ருதி: ஸ்மிருதிர் மமைவாஜ்ஞாயஸ்தா முல்லங்க்ய வர்த்ததே
ஆஜ்ஞாச்சேதீமம த்ரோஹீமத்பக்தோபி நவைஷ்ணவ:
என்பது பாஞ்சராத்திரம்.

வைஷ்ணவன் அல்லன்'' என்றும், [1]''வர்ண ஆச்ரமதர்மங்கள் அழியாமல் இருக்கும்பொருட்டும் குலதர்மங்களைக் காப்பாற்றும் பொருட்டும் உலகத்தினுடைய நன்மையின்பொருட்டும் சாஸ்திர மரியாதைகளை நிலை நிறுத்தும்பொருட்டும், விஷ்ணுவும் தேவ தேவனும் சார்ங்கதரனுமான இறைவனுக்கும் எனக்கும் மகிழ்ச்சி உண்டாகும்பொருட்டும் மனத்தினை அடக்கிய அறிவுள்ள ஒருவன் வைதிக ஆசாரங்களை மனத்தினாலும் மீறக் கூடாது; அரசனால் வெட்டப்பட்டதும் உலகத்திற்கு உபயோகமாக விருப்பதும் குற்றம் அற்றதும் நெற்பயிர்கள் விளைவதற்குக் காரணமாகவிருப்பதுமான ஒரு நதியை, அரசனுக்கு வேண்டிய ஒருவன், விரும்பாவிடினும், அதனை அசுத்தம் செய்வானே யாயின், அவன் அரசனாலே கழுவிலே ஏற்றப்படுவது போன்று, வேத தர்மங்களை மீறின ஒருவன், எனக்கு விருப்பமுள்ளவனா யினும் என்னுடைய ஆணையைக் கடந்தவனாகையாலே என்னால் விரும்பப்படுமவன் அல்லன்; ஆனால், பெரியோர்கள் அத் தர்மங்களைச் செய்யும் போது அவற்றை உபாயம் என்று நினைத்தல் கூடாது'' என்றும் சர்வேச்வரனும் பிராட்டியும் அருளிச்செய்த வசனங்களோடும் பூர்வாசாரியர்களுடைய வசனங்களோடும் அநுஷ்டானங்களோடும் விரோதிக்குமிறே. ஆன பின்பு மேற்கூறியவாறே இதற்குப் பொருள் ஆகக்கடவது. (202)

---

[1]அவிப்லவாய தர்மாணாம் பாலநாய குலஸ்யச
ஸங்க்ரஹாயச லோகஸ்ய மர்யாதா ஸ்தாபநாயச
ப்ரியாயமம விஷ்ணோச்ச தேவதேவஸ்ய சார்ங்கிண:
மநிஷீவைதிகாசாரம் மநஸாபி நலங்கயேத்.
யதாஹி வல்லபோ ராஜ்ஞோ நதீம்ராஜ்ஞா ப்ரவர்த்திதாம்
லோகோபயோகிநீம் ரம்யாம் பஹுஸஸ்ய விவர்த்தநீம்
லங்கயந் சூலமாரோஹே தநபேக்ஷோऽபி தாம்ப்ரதி
ஏவம் விலங்கயந் மர்த்யோ மர்யாதாம் வேதநிர்மிதாம்
ப்ரியோபி நப்ரியோஸௌமே மதாஜ்ஞா வ்யதிவர்த்தநாத்
உபாயத்வ க்ரஹம்தத்ர வர்ஜயேந்மநஸா ஸுதீ:
என்பது லக்ஷ்மீ தந்திரம்.

## 283

புண்ணியத்துக்கு அஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே.[1]

என்பது சூத்திரம்.

**அவ:—**'மேலே கூறிய மூன்று வகையான பொருள்களுக்கும் இச்சூத்திரத்தோடு இயைபு என்?' என்னில், முதற்பொருளில், இப்படி வர்ணுச்ரம அநுஷ்டானத்தில் நினைவு விசேடங்களிலும், ஆன்ம சொரூபத்தினுடைய விநியோக நிலையில் ஆநுகூல்ய பிராதிகூல்யங்களிலுமாக விருப்பத்திற்கும் விருப்பமின்மைக்கும் விஷயங்களைப் பிரிக்க வேண்டுமோ? வர்ணுச்ரமங்களுக்குத் தக்கனவாயும் சொரூபத்திற்குத் தக்கனவாயும் உள்ளவற்றைச் செய்கை விருப்பம், அவற்றிற்குச் சேராதனவாகவுள்ள செய்யத் தக்காத காரியங்களைச் செய்தல் விருப்பம் இல்லாதது என்றுலோ? எனின், "புண்ணியத்துக்கு அஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே" என்கிருர் அதற்கு விடையாக. இரண்டாவது பொருளில், 'இப்படி வர்ணுச்ரமங்களுக்குச் சேராதனவற்றையும் சொரூபத்திற்குச் சேராதனவற்றையும் செய்கை விருப்பம் இல்லாதது என்று சொல்லித் தவிர்ப்பிக்கைதான் வேண்டுமோ?' என்ன, அதற்கு விடை, 'புண்ணியத்துக்கு அஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே' என்பது. மூன்ருவது பொருளில், 'இப்படி வர்ணுச்ரமங்களில் ஊற்றம் அறுத்தால் செய்யத் தகாதன வற்றைச் செய்தல் வந்து புகுராதோ?' என்ன, அதற்கு விடை "புண்ணியத்துக்கு அஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே" என்பது.

**வியாக் :—**'புண்ணியத்துக்கு அஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே' என்றது, பகவானுடைய திருவருளைப் பெறுவதற்குக் காரணமாய், சாஸ்திரங்களால் சொல்லப்பட்டனவாய் இருக்கச் செய்தேயும், 'மோக்ஷ விரோதி' என்னுமதனுலே புண்ணியம் செய்தற்கு உட்பட அஞ்சுகிற இவ்வதிகாரி, பகவானுடைய தண்டனைக்குக் காரணமாய்ச் சாஸ்திரங்களால் சொல்லப்பட்டனவாய் 'நரகத்தைக் கொடுப்பன' என்று பொது மக்களும் உட்படச் செய்யாத பாவத்தை ஒரு காலும் செய்யானிறே என்றபடி. (203)

---

[1] பிரபந்நனுடைய தன்மையைச் சொல்லிக்கொண்டு வருகின்ற இடம் இது என்பது நினைவில் இருத்தல் வேண்டும்.

## 284

[1] இவன் புண்ணியத்தைப் பாவம் என்றிருக்கும்; அவன் பாவத்தைப் புண்ணியம் என்றிருக்கும்; அவனுக்கு அது கிடையாது; இவன் அது செய்யான்.

என்பது சூத்திரம்.

அவ :—இவன் புண்ணியத்திற்கு அஞ்சும்படியையும், [2] வத்சலனான ஈச்வரனுக்கும் இடம் அறும்படி பாவச் செயல்களில் சம்பந்தம் அற்றிருக்கும்படியையும் அருளிச்செய்கிறார் மூன்று வாக்கியங்களாலாய இச்சூத்திரத்தால்.

வியாக் :—' இவன் புண்ணியத்தைப் பாவம் என்றிருக்கும் ' என்றது, [3] " அந்தக் காலத்தில் அந்த ஞானியானவன் இவ்வுலக சம்பந்தமில்லாதவனாய் நல்வினை தீவினைகளை அழித்து மேலான ஒப்புமையை அடைகிறான் " என்கையாலே ' புண்ணிய பாவங்கள் இரண்டும் மோக்ஷ விரோதி ' என்றிருக்கும் இவ்வதிகாரி, நாட்டார் சுகத்திற்குக் காரணம் என்று விரும்பியிருக்கும் புண்ணியத்தை, பகவானை அடைவதற்குத் தடையாகிற விருப்பமின்மையைக் கொடுப்பதாகையாலே, துக்கத்திற்குக் காரணமான பாவம் என்று நினைத்து வெருவியிருக்கும் என்றபடி. ' அவன் பாவத்தைப் புண்ணியம் என்றிருக்கும் ' என்றது, அடியார்கள்

---

[1] இவன் - இந்தப் பிரபந்த அதிகாரி. ' இருக்கும் ' - செய்யும் என் முற்று. அவன் - இறைவன். இவன் அது செய்யான், ஆதலால், அவனுக்கு அது கிடையாது என மாற்றுக. அது - பாவத்தைப் புண்ணியமாகக் கொள்ளும் அத்தன்மை.

[2] வத்சலன் - பேரன்பினனான இறைவன். இடம் அறும்படி - தோஷத்தைப் போக்கியமாகக் கொள்ளுதலாகிற வாத்சல்ய குணத்திற்கு இடம் இல்லாதபடி. ' மூன்று வாக்கியத்தால் ' என்று அவதாரிகை இருப்பதால், சூத்திரத்தில் ' இவன் அது செய்யான் ' என்பது மிகை. பிற்சேர்க்கையாக இருக்கவேண்டும்.

[3] " ததா வித்வான் புண்ய பாபே விதூய நிரஞ்சநః
பரமம் ஸாம்யம் உபைதி "

என்பது, முண்டகோபநிடதம், 3 : 1. ஈண்டு, ' இருள்சேர் இருவினையும் சேரா ' என்ற திருக்குறளையும் ' நல்வினையும் பிறத்தற்கேதுவாகலான் ' இருவினையும் சேரா ' என்று கூறினார் ' என்ற பரிமேலழகர் உரையினையும் நோக்கல் தகும்.

செய்த குற்றத்தை நற்றமாகவே கொள்ளும் பேரன்பினனுன ஈச்வரன், இவ்வதிகாரி ஏதேனும் ஒரு பாவத்தைப் பண்ணிலும் அதனைக் குற்றமாக நினையாமல் நற்றமாக நினைத்து உகந்திருக்கும் என்றபடி.

'இவன் அது செய்யான். அவனுக்கு அது கிடையாது' என்றது, அவன் அப்படியிருந்தானேயாகிலும் இவ்வதிகாரி பாவச் செயல்களில் சம்பந்தம் இல்லாமல் வரையறைக்குட்பட்டு நடக்கின்றவனுகையாலே, பாபத்தைப் புண்ணியமாகக் கொள்ளும் பேரன்பினனுன இறைவனுக்கு அது ஆசைப்பட்டுப் போகவேண்டுமத்தனை ஒழியக் கிடையாது என்றபடி.

[1] ஆக, மேல் செய்யத்தக்கதாகச் சொன்ன கைங்கரியம் அறிவது இவற்ருலே என்றும், கைங்கரியந்தான் இரண்டு வகைப் படும் என்றும், அவைதாம் இன்னவை என்றும், அவ்விரண்டும் இன்னவற்றைப் பற்றி நிற்கும் என்றும் சொல்லி, அவற்றில் பிராசங்கிகமாக வந்த ஐயத்திற்கு விடையும் கூறப்பட்டன. (204)

## 285

[2] கைங்கரியந்தான் பக்தி மூலமல்லாத
போது பீதி மூலமாய் வரவேணும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—இத்தகைய கைங்கரியம் இவனுக்கு ஏதேனும் ஒரு வழியாலேயாகிலும் உண்டாகவேண்டும் என்று, இதனுடைய அவசியம் செய்யத்தக்க தன்மையை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—' பக்தி மூலமாய் வருகை'யாவது, சேஷியுடைய முகமலர்த்திக்கு உறுப்பானவற்றையே செய்துகொண்டு நிற்க வேண்டும்படியான அவன் திறத்தில் உளதாகும் அன்பு

---

1 279 முதல் 282 முடிய உள்ள சூத்திரங்களில் கூறப்பட்டவற்றைச் சுருக்கி அருளிச்செய்கிருர் ' ஆக ' என்று தொடங்கி. இவற்றுள் இறுதிச் சூத்திரங்கள் இரண்டும் பிராசங்கிகம்.

2 இச்சூத்திரம், 'கைங்கரியந்தான் பக்தி மூலமாய் வரவேணும்; அல்லாத போது பீதி மூலமாய் வரவேணும்' என்றிருக்க வேண்டும். வியாக்கியானத்தை உற்று நோக்கிஞல் இது தெளிவாம். இப்பொழுது அச்சுப்பிரதியில் உள்ள பாடம் பிழை. பீதி - அச்சம்.

காரணமாக வரவேண்டும் என்றபடி. 'அல்லாத போது பீதி மூலமாய் வரவேணும்' என்றது, அதின்றிக்கே ஒழிந்தால் [1] "கைங்கரியம் செய்யாதவனுக்கு சேஷத்துவம் பொருந்தாது" என்கிறபடியே, கைங்கரியம் இல்லாத போது அடிமைத் தன்மைக்கு அழிவு வரும் என்னும் அச்சம் காரணமாக வர வேண்டும் என்றபடி.

இவற்றுள், பக்தி மூலமானதுவே சிறந்தது. அது இன்றாயின், அச்சம் அடியாகவேனும் வரவேண்டும் என்றவாறு. (205)

## 286

[2] அதுவும் இல்லாத போது அதிகாரத்திலும் உபாய உபேயங்களிலும் அந்வயம் இன்றிக்கே ஒழியும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அது தானும் இல்லாவிடில் செய்வது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அதுவும் இல்லாத போது' என்றது, சிறப்பில்லாத அச்சம் காரணமாக வருகின்ற கைங்கரியந்தானும் இல்லாத போது என்றபடி. 'அதிகாரத்திலும் உபாய உபேயங்களிலும் அந்வயம் இன்றிக்கே ஒழியும்' என்றது, கைங்கரியம் இல்லாமையாலே, சேஷத்துவ வடிவான அதிகாரத்திலும், அதிகாரியை விரும்பியிருக்கின்ற சேஷியுடைய அருள் வடிவான உபாயத்திலும், இவனுடைய கைங்கரியத்தை விரும்பியிருக்கிற அவனுடைய முகமலர்த்தியாகிற உபேயத்திலும் சம்பந்தம் அற்றுவிடும் என்றபடி. (206)

---

1 'அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி:' என்பது பிரமாணம். என்றது, சொரூப யோக்கியமான சேஷத்துவத்தின் பலம் கைங்கரியம்; அது இல்லாத போது சொரூபயோக்கியதா ரூபமான சேஷத்துவம் இல்லை என்றபடி.

2 அதுவும் - அச்சம் காரணமாக வருகின்ற அந்தக் கைங்கரியமும். அந்வயம் - சம்பந்தம்.

## 287

கைங்கரியம் தன்னைப் பல [1] சாதனம் ஆக்காதே பலமாக்க வேணும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—ஆக, மேல் இரண்டு சூத்திரங்களாலும் கைங்கரியம் அவசியம் செய்யவேண்டும் என்னுமதுவும், கைங்கரியம் செய்யாவிடில் வரும் கேடுகளும் காட்டப்பட்டன. இந்த விதமான கைங்கரியத்தில் சாதன புத்தி கூடாது என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'கைங்கரியம் தன்னைப் பலசாதனம் ஆக்காதே பலம் ஆக்கவேணும்' என்றது, இப்படி 'அவசியம் செய்யத் தக்கது' என்று மேலே கூறப்பட்ட கைங்கரியத்தைச் செய்யுமளவில், இம்மை மறுமை வீடு ஆகிற பயன்களில் யாதேனும் ஒன்றற்கு அதனைச் சாதனமாக நினையாமல், கைங்கரியம் செய்யும் அதனையே ஒரு பயனாக நினைக்கவேண்டும் என்றபடி. (207)

## 288

[2] அதாவது, தான் கை ஏலாதே அவனைக் கை ஏற்கப்பண்ணுகை.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே கூறியதனை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'அதாவது' என்றது, இதனைச் சாதனம் ஆக்காமல் பலம்ஆக்குகையாவது என்றபடி. 'தான் கை ஏலாதே அவனைக் கை ஏற்கப்பண்ணுகை' என்றது, கைங்கரியம் செய்கிற தான் அதற்குப் பலமாக அவன் பக்கல் ஒன்றனை விரும்பாமல், கைங்கரியம் செய்தலையே ஒரு பிரயோஜனமாகக் கொண்டு செய்யாநின்றுகொண்டு, கைங்கரியம் கொள்ளுகிற அவனை

---

[1] சாதனம் - ஒரு பலனைப் பெறுதற்குக் கருவியாக இருப்பது. பலமாக்குதல் - இறைவனுடைய பிரீதி ஒன்றனையே கருதுதல். 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்பதும் இப்பொருட்டு.

[2] அதாவது - கைங்கரியத்தைச் சாதனமாக்காமல் பலமாக்குதலாவது.

[1] "பரமை காந்திகளால் எந்தக் கைங்கரியங்கள் செய்யப் படுகின்றனவோ அந்தக் கைங்கரியங்களை எல்லாம் இறைவன் தலையாலே ஏற்றுக்கொள்ளுகிறான்" என்கிறபடியே தன் நிறைவினைப் பாராமலே விருப்பத்தோடு கூடியவனாய் விரும்பிக் கைக்கொள்ளும்படி பண்ணுகை என்றபடி (208)

## 289

கொடுத்துக்கொள்ளாதே, கொண்டதற்குக் கைக்கூலி கொடுக்க வேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—தன் கை ஏலாது அவனைக் கை ஏற்கப்பண்ணுதல் மாத்திரம் போதாது; தான் கொடுத்தவனை அவன் ஏற்றுக் கொண்டதற்குப் பிரதியுபகாரம் செய்யவும் வேண்டும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'கொடுத்துக் கொள்ளாதே' என்றது, [2] "எனக்குக்கொடு; உனக்குக் கொடுக்கிறேன்" என்கிறபடியே, தான் அவனுக்கு ஒன்றனைக் கொடுத்து, அவனிடம் ஒரு பிரயோஜனம் கொள்ளாமல் என்றபடி. 'கொண்டதற்குக் கைக்கூலி கொடுக்கவேணும்' என்றது, [3] "இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில் நான், ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்,' என்ற பெரியாழ்வார் திருமகளைப் போலே, தான் கொடுத்த பொருளை அவன் அங்கீகரித்த உபகாரத்திற்காக, அப்படியிருந்துள்ளவற்றைத் தன் ஆசைக்குத் தகுதியாக நிறையக் கொண்டு வந்து கொடுத்துப் பின்னையும் அடிமை செய்கையாகிற கைக்கூலி கொடுக்க வேண்டும் என்றபடி. (209)

---

1 "யாঃ க்ரியாঃ ஸம்ப்ரயுக்தாஸ்யுரேகாந்தகத புத்திபிঃ
தாஸ்ஸர்வாঃ ஶிரஸாதேவঃ ப்ரதிக்ருஹ்ணாதி வைஸ்வயம்"
என்பது பாரதம்.

2 "தேஹிமே ததாமி தே" என்பது பிரமாணம்.

3 நாய்ச்சியார் திருமொழி, ௯: 7.

## 290

ஸ்ரீ விதுரரையும், [1] ஸ்ரீ மாலாகாரரையும், கூனியையும் போலே கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம் பெறுவது.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி வேறுபயன்களைக் கருதாதவனாய்க் கைங்கரியத்தைச் செய்தாலாயிற்று, ஆன்மா ஒளிபெறுவது என்னுமதனை எடுத்துக்காட்டோடு அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால். (210)

## 291

மடி தடவாத சோறும், [2] சுறு நாறுத பூவும், சுண்ணாம்பு படாத சாந்துமிறே இவர்கள் கொடுத்தது.

என்பது சூத்திரம்.

அவ :—மேல் சூத்திரத்தில் திருஷ்டாந்தமாக எடுத்துக்குக் காட்டப்பட்ட அவர்கள் கைங்கரியம் செய்த வகையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'மடிதடவாத சோறும்' என்றது, முந்துற ஆசையோடே இட்டு, பின்னை 'இதற்குக் காசு தரலாகாதோ?' என்று மடிச்சீரை சோதிக்கைக்காக மடியைப்பிடித்துத் தடவி, உண்டவன் நெஞ்சு உளையும்படி பண்ணும் ஒரு பிரயோசனத்திலே நோக்குள்ளவர்கள் இடுகின்ற சோறு போலன்றிக்கே, உண்டவன்

---

[1] மாலாகாரர்-கிருஷ்ணனுக்கும் பலராமனுக்கும் அணிந்துகொள்ள மலர்மாலை கொடுத்தவர். கூனி - இராமாயணத்தில் வருகின்ற கூனி அல்லள்; இவள், கிருஷ்ணனுக்குப் பூசிக்கொள்ளுவதற்குச் சாந்து கொடுத்தவள்.

[2] 'சுறுநாறுத பூவும்' என்பதே சிறந்த பாடம். சுறு என்பது, மலர், மயிர் முதலானவை நெருப்பிலே பட்டுப் பொசுங்கும்போது உண்டாகின்றதொரு நாற்ற விசேடம்.

ஊறுகின் றனகிணறு உதிரம் ; ஒண்நகர்
ஆறுகின் றிலதுஅழல் ; அகிலின் ஆவிஒத்து,
கூறுமங் கையர்நறுங் கூந்த லின்சுறு
நாறுகின் றதுநுகர்ந் திருந்த நாமெலாம்

என்ற செய்யுளை ஈண்டு ஒப்பு நோக்குக. கம்பரா. யுத். இராவணன் மந்திரப்பட. செ. 13. "சுருள் நாறுத பூவும்" என்ற பாடம் பொருட் சிறப்பின்று.

நெஞ்சு உகக்கும்படியான வேறு ஒரு பயனையும் கருதாத சோறு என்றபடி. இப்படியிருந்துள்ள சோறிறே, [1] "பிராமணர்கள் உண்ட பின், உயர்ந்த ஆசனத்தில் வீற்றிருந்துகொண்டு தூயனவாயும் இனியனவாயும் இருந்த விதுரர் இட்ட உணவை ஸ்ரீ கண்ணபிரான் அமுது செய்தருளினர்" என்கிறபடியே தூய்மையாலும் இனிமையாலும் கொண்டாடும்படி ஸ்ரீவிதுரர் அவ்விறைவனுக்கு அளித்தது.

'சுறு நாருத பூவும்' என்றது, நெருப்பின் சம்பந்தம் உண்டானல் சுறு நாறும்படியிறே மலரின் தன்மை இருப்பது; அப்படியே வேறு ஒரு பயனைக் கருதுதலாகிற சுறுநாற்றம் இல்லாதபடி, வேறு ஒரு பயனைக் கருதாத தன்மையாகிற வாசனையோடு கூடிய மலர் என்றபடி. இப்படியிருந்துள்ள மலரிறே, [2] "அருள் செய்தலையே முதன்மையாகக் கொண்டுள்ளவர்களான பலராமனும் கிருஷ்ணனும் அடியேனுடைய குடிலுக்கு எழுந்தருளினர்கள்; நல்வினையேனன நான் பூசை செய்யப் போகிறேன் என்று மாலைகட்டி விற்கும் மாலாகாரன் என்பவன் சொன்னன்" என்று பராசர முனிவர் புகழும்படி சிறந்த பக்திமுன்னகை ஸ்ரீ மாலாகாரர் அவ்விறைவனுக்கு அளித்தது.

'சுண்ணம்பு படாத சாந்தும்' என்றது, ஆயிரம் பொன் செலவு செய்து கலவை செய்தும் சுண்ணம்பு திவலை படக் கெடும்படியிறே சாந்தின் தன்மை இருப்பது; அப்படியே வேறு பயனைக்கருதுதல் ஆகிற குற்றம் இன்றிக்கே, வேறு ஒரு பயனையும் கருதாத சாந்தும் என்றபடி. இப்படியிருந்துள்ள சாந்திறே, [3] "ஏ அழகு பொருந்திய முகமுடைய கூனியே, இது வாசனைப் பொருள் கலந்தது; இது அரசர்களுக்குத் தகுந்தது; இது குங்குமப்பூவின் நிறத்தையுடையது; ஆகையால், எங்களுடைய

---

[1] புக்தவத்ஸு'த்விஜாக்ரேஷு நிஷண்ண: பரமாஸநே
விதுராந்நாநி புபுஜே ஶுசீநி குணவந்திச.
என்பது பாரதம் உத்யோக பர்.

[2] ப்ரஸாத பரமௌநாதௌ மமகேஹமுபாகதௌ
தந்யோஹம் அர்ச்சயிஷ்யாமீத்யாஹமால்யோபஜீவந:
என்பது ஸ்ரீ விஷ்ணுபு. 5. 9 : 20.

[3] ஸுகந்தமேதத் ராஜார்ஹம் ருசிரம் ருசிராநநே
ஆவயோர் காத்ர ஸத்ருஶம் தீயதாமநுலேபநம்.
என்பது ஸ்ரீ விஷ்ணுபு. 5. 20 : 3.

சரீரத்திற்குத் தகுந்த உயர்ந்த சந்தனத்தைக் கொடு'' என்று அவன் விரும்பிக் கேட்ட பின் பூசும் சாந்தம்படி கூனி கொடுத்தது.

ஆக, இப்படி வேறு ஒரு பயனையும் கருதாமல் செய்தாலாயிற்று, கைங்கரியம் செய்தற்கு உரியதான ஆன்மா ஒளிபெறுவது என்றபடி.

ஆக, இவ்வளவும் [1] வஸ்தவ்யம்'' முதலான எண்ணிக் கைகளில் ஈற்றிலே கூறப்பட்ட கைங்கரியத்தைக் குற்றங் களைந்து, அத்தகைய கைங்கரியத்தாலே ஆன்மா நிறம் பெறுவதாம் என்னுமதனையும் அருளிச்செய்தாராயிற்று. (211)

## 292

கைங்கரிய தசைபோலே, [2]முன்புள்ள தசைகளிலும் ஸ்வரூபத்தை உஜ்ஜவலம் ஆக்க வேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி வேறுபயன்களைக் கருதாதவனுய்க்கொண்டு கைங்கரியம் செய்தாலே ஆன்மா ஒளி பெறும் என்று சொன்ன இதிலே, முக்தராகிய நிலையிலே கைங்கரிய தசையில் ஆன்மாவின் ஒளியுடைமையும் பொருளாற்றலால் சொல்லப்பட்டதாம் என்று நினைத்து, இப்படிக் கைங்கரிய தசையில் ஆன்மாவின் ஒளியுடையது ஆக்குமாறு போன்று, அந்தக் கைங்கரிய தசைக்கு முன்னே இருக்கின்ற நிலை விசேடங்களிலும் ஆன்மாவினை ஒளிபெறச் செய்யவேண்டும் என்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'முன்புள்ள தசைகளிலும்' என்றது, கைங்கரிய தசைக்கு முன்னே உள்ள தசைகளிலும் என்றபடி. (212)

---

[1] 278ஆம் சூத்திரத்தில் ஈற்றில் கூறியது.

[2] 'முன்புள்ள தசைகளிலும்' என்றது ஞானதசை, வரணதசை, பிராப்திதசை, பிராப்பியாநுபவ தசை என்னும் நான்கு தசைகளையும். ஐந்தாவது தசை, கைங்கரிய தசை. இந்த நான்கு தசைகளையும் மேலே விரித்து அருளிச்செய்வர். உஜ்வலமாக்குதல் - ஒளிபெறச் செய்தல்.

## 293

முன்பே நாலு தசை உண்டு.

என்பது சூத்திரம்.

அவ :—முன்னே எத்தனை நிலைகள் உண்டு என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால். (213)

## 294

[1]அதாவது ஞானதசையும், வரண தசையும், பிராப்தி தசையும், பிராப்பிய அநுபவ தசையும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அந்த நான்கு தசைகள்தாம் யாவை?' என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஞான தசையாவது, ஆசாரியனுடைய உபதேசத்தாலே தனக்கு ஞானம் பிறந்து செல்லுகிறநிலை. வரண தசையாவது, சித்தோபாயமாக இருக்கிற சர்வேச்வரனைத் தனக்கு உபாயமாகப் பற்றுகிற நிலை. பிராப்தி தசையாவது, இவ்வுலக வாழ்க்கையால் உளவாய எல்லாப் பாவங்களும் நீங்குதல் முன்னாக அவன் திருவடிகளை அடைகிறநிலை. பிராப்ய அநுபவ தசையாவது, அடையத்தக்கவனான சர்வேச்வரனைக் கிட்டி அநுபவிக்கிற நிலை.

இந்த அநுபவத்தால் உண்டாகின்ற பிரீதியின் காரியமான கைங்கரியமிறே பரம புருஷார்த்தம். [2] முதலில் வேண்டுவதான உண்மை ஞானமும், அந்த ஞானத்தின் பலமான உபாய வரணமும், அந்த வரணத்தின் பலமான அடைதலும், அடைதலின் பலமான அநுபவமும், அநுபவத்தால் உண்டாகிற பிரீதியின் காரியமான கைங்கரியமுமாயிறே முறை

[1] 'அதாவது' என்பது தொகுதி ஒருமை. வரணம் - நீ உபாயமாக வேண்டும் என்று பிரார்த்தித்தல்; பற்றுதல். பிராப்தி தசை - அடைகிற நிலை. பிராப்பிய அநுபவதசை - அடையத்தக்க இறைவனை அடைந்து அநுபவிக்கிற நிலை.

[2] இந்த நான்கு நிலைகளும் ஒன்றற்கு ஒன்று காரணமாய், ஈற்றிலே கைங்கரியத்திலே சென்று முடிவதனை விளக்குகிறார் 'முதலில்' என்று தொடங்கி.

இருப்பது. ஆகையாலே, கைங்கரிய தசை இறுதி நிலையாய், முன்னே உள்ள நான்கு நிலைகளும் இதிலேவந்து ஏறுகைக்கு இட்டபடி ஒழுங்காகவிருக்கும் என்றவாறு. (214)

## 295

ஞான தசையில் அஜ்ஞானத்தை முன்னிடும்; வரண தசையில் அபூர்த்தியை முன்னிடும்; பிராப்தி தசையில் ஆர்த்தியை முன்னிடும்; பிராப்பிய அநுபவ தசையில் அபிநிவேசத்தை முன்னிடும்[1]

என்பது சூத்திரம்.

**அவ :**—இந்த இந்த நிலைகளில் ஆன்மாவினை ஒளி மயமாக்கும்படியை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஞான தசையில் அஜ்ஞானத்தை முன்னிடும்' என்றது, ஆசாரியன், தனக்கு மேல் மேல் அறியாதனவற்றை அறிவிக்கும்படி, [2] தத்துவம் ஹிதம் புருஷார்த்தம் என்னுமிவற்றில் தனக்குள்ள அறிவின்மையைப் பலகாலும் தெரிவித்தல் என்றபடி. 'வரணதசையில் அபூர்த்தியை முன்னிடும்' என்றது, [3] 'நோற்ற நோன்பிலேன்', [4] 'கர்மயோகத்தில் பற்றுடையேன் அல்லேன்', [5] 'வேள்வி, தானம் முதலிய நல்ல காரியங்களில் சிலவற்றையேனும் செய்யப்போகிறேன் இலேன்' என்பன போன்றவற்றில் கூறுகிறபடியே பேற்றுக்குக் காரணமாகக் கொள்ளலாவதொரு புண்ணியம் முதலானவைகள் ஒன்றும் தனக்கு இல்லாமையாகிற [6] ஆகிஞ்சந்யத்தை முன்னிடுதல் என்றபடி.

---

[1] 'முன்னிடும்' என்பதற்கு வினைமுதல் சேதனன். அபூர்த்தி - நிறைவில்லாதது; குறை. ஆர்த்தி - துக்கம். அபிநிவேசம் - காதல்.

[2] தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் - சொரூபம், உபாயம், பேறு.

[3] திருவாய்மொழி, 5. 7 : 1.

[4] 'நதர்ம நிஷ்டோஸ்மி' என்பது தோத்திரரத்நம், 22.

[5] "ஸத்கர்ம நைவகில கிஞ்சந ஸஞ்சிநோமி" என்பது வைகுண்ட ஸ்தவம், 88.

[6] ஆகிஞ்சந்யம் - சாதனம் வேறு இல்லாமை.

'பிராப்தி தசையில் ஆர்த்தியை முன்னிடும்' என்றது, 'பெற்ற போது பெறுகிறோம்; என்று இராமல் [1] 'வானுலகம் தெளிந்தே என்று எய்வது' என்றும், [2] 'தரியேன் இனி' என்றும் [3] 'கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ?' என்றும் கூறுகிறபடியே காலதாமதத்தைப் பொறுமைக்குக் காரணமான தன்னுடைய துக்கத்தின் மிகுதியைக் காட்டுதல் என்றபடி. 'பிராப்பிய அநுபவ தசையில் தன்னுடைய அபிநிவேசத்தை முன்னிடும்' என்றது, பெருவிடாயனுக்குக் குடித்த தண்ணீர் ஆராதவாறு போன்று, அநுபவித்தவற்றால் மனம் நிறைவு பெறாது, மேல்மேலும் தனக்கு விளைந்து செல்லுகிற அநுபவத்திலே உள்ள பெருவிடாயைக் காட்டுதல் என்றபடி.

[4] ஆக, ஞானதசை முதலான நான்கு தசைகளிலும் ஆன்மாவை ஒளிமயமாக்குகையாவது, இந்த இந்தத் தன்மைகளை முன்னிடுதல் என்பது கருத்து. (215)

## 296

**அஜ்ஞானம் போவது ஆசாரிய ஞானத்தாலே; அபூர்த்தி போவது ஈச்வரபூர்த்தியாலே; ஆர்த்தி போவது அருளாலே; அபிநிவேசம் போவது அநுபவத்தாலே.**

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி இவன் இவற்றை முன்னிட்டால் இவனுக்கு இவை போவன எவற்றாலே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அஜ்ஞானம் போவது ஆசாரிய ஞானத்தாலே' என்றது, தத்துவம் ஹிதம் [5] முதலானவற்றில் இவனுக்கு உள்ள அறியாமை அடியோடு நீங்குவது, அவற்றை அலகு அலகாகக் காண்பித்து, அறியாதனவற்றை அறிவிக்கைக்கு ஈடான ஆசாரி

[1] பெரிய திருமொழி, 6. 3 : 8. [2] திருவாய்மொழி, 5. 8 : 7.

[3] திருவாய்மொழி, 6. 9 : 9.

[4] அவதாரிகையில் கூறியதனை விளக்குகிறார் 'ஆக' என்று தொடங்கி.

[5] 'முதலானவற்றில்' என்றதனால், புருஷார்த்தம், பகவதபசாரம், பாகவத அபசாரம் என்பனவற்றைக் கொள்க.

யனுடைய ஞானத்தாலே என்றபடி. அபூர்த்தி போவது ஈச்வர பூர்த்தியாலே' என்றது, பேற்றிற்குக் காரணமாக உள்ள நல்ல காரியங்கள் ஒன்றும் தனக்கு இல்லாமையாகிற குறை நீங்குவது, இவனிடத்தில் உள்ளது ஒன்றனையும் விரும்பாமல் காரியம் செய்யும், உபாயமாகவிருக்கின்ற இறைவனுடைய, வேறொரு துணையும் வேண்டாமையாகிற நிறைவினாலே என்றபடி. 'ஆர்த்தி போவது அருளாலே' என்றது, விரைவிலே திருவடிகளைப் பெருமையால் உண்டான துக்கம் தீருவது, துக்கத்தைக் கண்டு ஆற்ற மாட்டாமல் அப்போதே காரியம் செய்து தலைக்கட்டுகைக்கு உறுப்பான பிறருடைய துக்கத்தைப் பொறுமையாகிற அவனுடைய திருவருளாலே என்றபடி. 'அபிநிவேசம் போவது அநுபவத்தாலே' என்றது, அநுபவதசையில் கணந்தோறும் பிறக்கும் காதல் அடங்குவது, அவனை மேன்மேலும் அநுபவிக்கையாலே என்றபடி. (216)

## 297

அஜ்ஞானத்துக்கு அடி [1]அபராதம்; அபூர்த்திக்கு அடி ஞானபூர்த்தி; ஆர்த்திக்கு அடி அலாபம்; அபிநிவேசத்துக்கு அடி அழகு.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய அஜ்ஞானம் முதலான நான்கிற்கும் காரணங்கள் யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அஜ்ஞானத்துக்கு அடி அபராதம்' என்றது, [2]ஞான தசையில் முன்னிடுகிற அறியாமைக்குக் காரணம், அநாதி காலமாகச் செய்யப்பட்ட [3]அக்ருத்யகரணம் க்ருத்ய அகரணம் முதலானவையாகிற பாவங்கள். 'அபூர்த்திக்கு அடி ஞானபூர்த்தி' என்றது, இறைவனைப் பற்றுகிற காலத்தில் முன்னிடுகிற குறைவிற்குக் காரணம், பேற்றிற்குக் காரணமாக நினைக்கலாவது, ஒன்றும் தனக்கு இல்லாமையைக் காண்கைக்கு

[1] அபராதம் - குற்றம்; பாவம். அபூர்த்தி - குறைவு. பூர்த்தி - நிறைவு. அலாபம் - பெறவேண்டியவற்றைப் பெறுமை.

[2] 295ஆம் சூத்திரத்தை நோக்குக.

[3] அக்ருத்யகரணம் - செய்யத்தகாதனவற்றைச் செய்தல். க்ருத்ய அகரணம் - செய்ய வேண்டுமவற்றைச் செய்யாமை.

உடலான ஞானத்தின் நிறைவு என்றபடி. 'ஆர்த்திக்கு அடி அலாபம்' என்றது, அடைகிற காலத்தில் முன்னிடுகிற துக்கத்திற்குக் காரணம், அடையத்தக்க பொருளை விரைவில் கிட்டப் பெறுமையாகிற அலாபம் என்றபடி. 'அபிநிவேசத்திற்கு அடி அழகு' என்றது, அடையத்தக்க பொருளை அடைந்து அநுபவிக்கிற அநுபவ தசையில் முன்னிடுகிற காதலுக்குக் காரணம், அநுபவித்த அளவில் மனம் நிறைவு பெறுமல் மேன்மேலும் ஆசைப்படப்பண்ணும் அவனுடைய வடிவழகு என்றபடி (217)

## 298

ஆர்த்தியும் அபிநிவேசமும் இருக்கும்படி
[1] அர்ச்சிராதி கதியிலே சொன்னேம்.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆர்த்தியும் அபிநிவேசமும் இருக்கும்படி என்'? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆர்த்தியும் அபிநிவேசமும் இருக்கும்படி அர்ச்சிராதிகதியில் சொன்னேம்' என்றது, [2]'இந்நின்ற நீர்மை இனியாம் உறுமை' என்று தொடங்கி, [3]'திருவாணை நின்ஆணை கண்டாய்' என்று தடுத்தும் வளைத்தும் பெறவேண்டும்படி [4]பரமபக்தி தலை எடுத்தல்' என்னுமளவாக 'ஆர்த்தி' இருக்கும்படியையும், [5]'செய்ய உடையும் திருமுகமும் செங்கனி வாயும் குழலும் கண்டு' என்கிறபடியே 'முன்னைய அழகை அநுபவித்து என்று தொடங்கி, தன்னைப் பெற்ற பிரீதியால் வந்த செவ்வியை அநுபவித்து' [6]என்னுமளவாக 'அபிநிவேசம்' இருக்கும்படியையும் அந்தப் பிரபந்தத்திலே மிகத்தெளிவாக அருளிச்செய்தாரிறே என்றபடி.

---

[1] அர்ச்சிராதிகதி - இந்நூலாசிரியர் அருளிச்செய்த பதினெட்டு நூல்களுள் ஒன்று.

[2] திருவிருத்தம், 1. [3] திருவாய்மொழி, 10. 10 : 2.

[4] பரமபக்தி – பிரியில் தரியாமையாகிற நிலை. பிரிவிற்கு அஞ்சுதலாம்.

[5] பெருமாள் திருமொழி, 6 : 7.

[6] 293 முதல் 298 முடிய உள்ள சூத்திரங்களை முறையே ஈண்டு நோக்குக.

ஆக [6]கைங்கரிய தசைக்கு முன்னே நான்கு தசைகள் உண்டு என்றும், அவைதாம் இன்னவை என்றும், அந்த அந்தத் தசைகளுக்குத் தகுதியான அஜ்ஞானம் முதலானவற்றை முன்னிடவே அந்தத் தசைகளில் ஆன்மா ஒளி பெறும் என்றும், அந்த அஜ்ஞானம் முதலானவற்றைப்போக்குமவை ஆசாரியனுடைய ஞானம் முதலானவை என்றும், அந்த அஜ்ஞானம் முதலானவற்றிற்குக் காரணங்களும் சொல்லிற்றாயிற்று. (218)

## 299

இவன் தனக்கு நாலு தசை போலே நாலு குணம் உண்டு.

என்பது சூத்திரம்.

அவ :—இந்த நான்கு தசைகளையும் அருளிச்செய்கிற இவ்விடத்திலே இவனுடைய நான்கு குணங்களையும் அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவன்தனக்கு நாலு தசை போலே நாலு குணம் உண்டு' என்றது, இவ்வதிகாரிக்கு ஆன்மா ஒளியுடைமைக்குக் காரணமாக மேலே சொல்லப்பட்ட நான்கு தசைகள் போன்று ஆன்மா ஒளியுடைமைக்குக் காரணமான நான்கு குணங்களும் உண்டு என்றபடி. (219)

## 300

[1]அதாவது, ஞானமும் அஜ்ஞானமும் சக்தியும் அசக்தியும்.

என்பது சூத்திரம்.

அவ:—'அவைதாம் எவை?' என்னும் வினாவிற்கு விடையாக, அக்குணங்களை எடுத்து அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால். (220)

---

[1] 'அதாவது' என்றது, தொகுதி ஒருமை.

## 301

[1] இதுதான் அவனுக்கும் உண்டு.

என்பது சூத்திரம்.

அவ :—இவனுடைய நான்கு குணங்களையும் சொன்ன இவ்விடத்திலே ஈச்வரனுக்கும் இவை உண்டு என்னுமதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அவன்' என்பது மேலே சொல்லிக்கொண்டு வந்த இறைவனைச் சுட்டுகிறது. (221)

## 302

[2] அவனுடைய ஞானத்துக்கு இலக்கு இவனுடைய குணம்; அஜ்ஞானத்துக்கு இலக்கு இவனுடைய தோஷம்; சக்திக்கு இலக்கு இவனுடைய ரக்ஷணம்; அசக்திக்கு இலக்குப் பரித்தியாகம்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படியிருந்துள்ள [3]இருவருடைய குணங்களுக்கு விஷயங்கள் இவை என்று அவற்றைப் பிரித்து அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தாலும் மேற்சூத்திரத்தாலும். மேல் எடுத்த அடைவில் அன்றிக்கே ஈச்வரனுடைய குணங்களுக்கு உரிய விஷயங்களை முந்துற அருளிச்செய்தது, மேல் சேதனருடைய குணங்களை அருளிச்செய்து அதன் பின்னர்ப் பிராசங்கிகமாக, [4] தள்ளத்தக்கனவான நான்கு வகைக் குற்றங்களையும் விரிவாக அருளிச்செய்கைக்காக எனக் கொள்க.

வியாக் :—'அவனுடைய ஞானத்துக்கு இலக்கு இவனுடைய குணம்' என்றது. [5] 'எவன் எல்லாவற்றையும்

---

[1] 'இதுதான்' என்பது, தொகுதி ஒருமை.

[2] அவனுடைய - இறைவனுடைய. இவனுடைய - சேதனனுடைய. பரித்தியாகம் - கைவிடுதல்.

[3] 'இருவருடைய' என்றது, இறைவனையும் சேதனனையும்.

[4] 'தள்ளத் தக்கனவான நான்குவகைக் குற்றங்களையும்' என்றது, சேதனர்கள் மாட்டு உளவாகும் குற்றங்கள். அவற்றை 304ஆம் சூத்திரம் முதல் காண்க.

[5] 'யஸ்ஸர்வஜ்ஞ:' என்பது மாண்டூக்கிய உப.

அறிந்தவன்' என்றும், [1] 'எல்லையில்லாத ஞானத்தையுடைய வன்' என்றும் சொல்லுகிறபடியே முற்றறிவினனான அவ னுடைய திவ்விய ஞானத்திற்கு விஷயம், [2] அத்வேஷம் ஆபி முக்யம் தொடங்கி இவனிடத்தில் உண்டான ஆத்ம குணங் கள் என்றபடி. 'அஜ்ஞானத்துக்கு இலக்கு இவனுடைய தோஷம்' என்றது, [3] 'அடியார்களுடைய குற்றங்களை அறியா தவன், எல்லையில் ஞானத்தையுடையவன்' என்றும், [4] 'தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடைய இறைவன் எப் பொழுதும் மனத்திலிருந்துகொண்டு எல்லா உலகங்களையும் பார்த்துக்கொண்டிருந்தாலும், அடியார்களுடைய குற்றங்களை அறியாதவன் அல்லவா?' என்றும் சொல்லுகிறபடியே எல்லா வற்றையும் அறிகின்றவனாயிருக்கச் செய்தே, அறியாதவனாக விருக்கும் அவனுடைய அஜ்ஞானத்திற்கு விஷயம், சரீரத்தில் கட்டுப்பட்டவனாயிருக்கும் இவனுடைய செய்யத் தகாதனவற் றைச் செய்தலாலாய பாவங்கள் என்றபடி.

'சக்திக்கு இலக்கு இவனுடைய ரக்ஷணம்,' என்றது, [5] 'இந்த இறைவனுடைய சிறந்த சக்தியானது பல விதமாகச் சுருதிகளில் சொல்லப்படுகிறது' என்கிறபடியே எல்லா வித மான ஆற்றல்களும் பொருந்திய அவனுடைய [6] 'அகடிதகட நாசாமர்த்தியமாகிற சக்திக்கு விஷயம், இவனுடைய விருப்ப மின்மைகள் எல்லாவற்றையும் போக்கி, சேஷத்துவ சொரூபத் திற்குத் தகுதியான எல்லா விருப்பங்களையும் கொடுத்தலாகிற காத்தல் என்றபடி. 'அசக்திக்கு இலக்குப் பரித்தியாகம்' என்றது, அப்படி சர்வசக்தியான அவனுடைய சக்தியின்மைக்கு விஷயம், பொறுக்க முடியாதனவாக இவன் செய்யும் பாவங்களைக் கண்டு சீறிக் கைவிடுதல் என்றபடி. (222)

---

[1] 'ஸஹஸ்ராம்ஶு:' என்பது, சஹஸ்ரநாமம்.

[2] அத்வேஷம் - வெறுப்பின்மை. அதாவது, தீமனம் இன்மை. ஆபிமுக்யம் - அன்புடைமை. அதாவது மருவித் தொழுமனமுடைமை.

[3] 'அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:' என்பது, சஹஸ்ரநாமம்.

[4] 'அவிஜ்ஞாதாஹி பக்தாநா மாகஸ்ஸு கமலேக்ஷண:, ஸதாஜகத் ஸமஸ்தஞ்ச பஶ்யந்நபி ஹ்ருதிஸ்தித:' என்பது பிரமாணம்.

[5] 'பராஸ்ய ஶக்தி: விவிதைவ ஶ்ரூயதே' என்பது சுவேதா ஶ்வதரஉப.

[6] அகடித கடநம் - சேராதனவற்றையும் சேர்த்து வைத்தல்.

## 303

[1] இவனுடைய ஞானத்துக்கு இலக்கு ஆசார்ய குணம்; அஜ்ஞானத்துக்கு இலக்கு ஆசார்ய தோஷம்; சக்திக்கு இலக்கு ஆசார்ய கைங்கரியம்; அசக்திக்கு இலக்கு நிஷித்த அநுஷ்டானம்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி ஈச்வரனுடைய குணங்களுக்குரிய விஷயங்களை அருளிச்செய்து, சேதனனுடைய குணங்களுக்கு உரிய விஷயங்களை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவனுடைய ஞானத்துக்கு இலக்கு ஆசார்ய குணம்' என்றது, இவனுடைய ஞானத்திற்கு விஷயம், பேருதவியாளனான ஆசாரியனுடைய நற்குணங்கள் என்றபடி. 'அஜ்ஞானத்துக்கு இலக்கு ஆசாரிய தோஷம்' என்றது, இவனுடைய அஜ்ஞானத்திற்கு விஷயம், ஆசாரியனுடைய [2] திருமேனியின் தன்மையால் வருவனவாய் ஆகந்துகமாய் உள்ள குற்றம் என்றபடி. 'சக்திக்கு இலக்கு ஆசார்ய கைங்கரியம்' என்றது, இவனால் செய்யப்படுகின்ற செயலின் சக்திக்கு விஷயம், தன்னுடைய ஆசாரியனுக்கு உகப்பாகச் செய்யும் கைங்கரியம் என்றபடி. 'அசக்திக்கு இலக்கு நிஷித்த அநுஷ்டானம்' என்றது, இவனுடைய அசக்திக்கு விஷயம், சொரூப உபாய புருஷார்த்தங்களுக்கு விரோதிகளாய்ச் சாஸ்திரங்களால் விலக்கப்பட்டவைகளாய் உள்ளனவற்றைச் செய்தல் என்றபடி. (223)

## 304

நிஷித்தந்தானும் நாலுபடியாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—மேல் சூத்திரத்தில் கூறப்பட்ட நிஷித்தத்தினுடைய வகையை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

---

[1] இவனுடைய - சேதனனுடைய. நிஷித்த அநுஷ்டானம் - விலக்கப்பட்டனவான பாவ காரியங்களைச் செய்தல்.

[2] 'திருமேனியின் தன்மையால் வருவன' என்றது, நோய் முதலானவற்றை. ஆகந்துகம் - இடையில் வருவது.

வியாக் :—' நிஷித்தந்தானும் நாலுபடியாய் இருக்கும்' என்றது, கொள்ளத்தக்கவையான நான்கு குணங்கள்போலே, தள்ளத்தக்கவையான குற்றங்களும் நான்கு விதமாய் இருக்கும் என்றபடி. (224)

## 305

அதாவது, [1] அக்ருத்ய கரணமும், பகவதப சாரமும், பாகவதாபசாரமும், அஸஹ்யாப சாரமும்.

என்பது சூத்திரம்.

அவ :—' அவைதாம் யாவை?' என்னும் வினாவிற்கு, அவை அக்ருத்யகரணமும், பகவதபசாரமும், பாகவத அபசாரமும், அஸஹ்ய அபசாரமும் என்று அவைதம்மை [2] உத்தேசிக்கிருர் இச்சூத்திரத்தால். (225)

## 306

அக்ருத்ய கரணமாவது [3] பரஹிம்சை, பர ஸ்தோத்திரம், பரதார பரிக்கிரஹம், பரதிரவிய அபஹாரம், அசத்ய கதனம், அபக்ஷ்ய பக்ஷணம் தொடக்கமானவை.

என்பது சூத்திரம்.

அவ :—' இவற்றினுடைய உட்பிரிவுகள்தாம் யாவை?' என்னும் வினவில், இவற்றை முறையே விரித்து அருளிச் செய்கிருர்.

---

[1] அக்ருத்யகரணம் - செய்யத் தகாதனவற்றைச் செய்தல். பகவத் அபசாரம் - பகவானுக்குச் செய்யும் விரோதம். பாகவத அபசாரம் - அடியார்களுக்குச் செய்யும் விரோதம். அசஹ்ய அபசாரம் - இறைவனும் பொறுக்க முடியாத பாவம்.

[2] உத்தேசித்தல் - பொருள்களைப் பெயர் மாத்திரத்தால் கூறுதல்.

[3] பரஹிம்சை - சாஸ்திரவரம்பைக் கடந்து செய்யும் உயிர்க்கொலை. பரம் - கடத்தல். பரஸ்தோத்திரம் - பிறரைத் துதித்தல். ஈண்டு இறைவன் பிறன் ஆகான்; ஆதலால் அவனை நீக்குக. பரதார பரிக்கிரஹம் - பிறருடைய மனைவியைக் கொள்ளுதல். பரதிரவிய அபஹாரம் - பிறர் பொருளைக் கோடல். அசத்யகதநம் - பொய் பேசுதல். அபக்ஷ்ய பக்ஷணம் - உண்ணத்தகாத பொருள்களை உண்ணல்.

வியாக் :—'பரஹிம்சை' என்றது, [1] 'எந்த உயிரையும் துன்புறுத்தக் கூடாது' என்ற விதியைக் கடந்து செய்யும் உயிர்க்கொலை என்றபடி. 'பர ஸ்தோத்திரம்' என்றது, வகுத்த சர்வேச்வரனைத் துதிப்பதற்குத் தக்கதான இந்தச் சரீரத்தைக் கொண்டு தகுதியில்லாத மற்றையோரைத் துதித்தல் என்றபடி. 'பரதார பரிக்கிரஹம்' என்றது, பிறருடைய மனைவிகளை மோகம் [2] முதலாயினவற்றால் கைக்கொள்ளுதல் என்றபடி. 'பரதிரவிய அபஹாரம்' என்றது, பிறருடைய பொருள்களை அவர்களுடைய இசைவின்றிக்கேயிருக்க, அவர்கள் அறியவாதல் அறியாமலாதல் கொள்ளுதல் என்றபடி. 'அசத்ய கதனம்' என்றது, தான் கண்டனவும் உயிர்களுக்கு நன்மை பயப்பனவும் இல்லாதனவான வார்த்தைகளைப் பேசுதல் என்றபடி. 'அபக்ஷ்ய பக்ஷணம்' என்றது, [3] சாதியாலும் இடத்தாலும் நிமித்தத்தாலும் குற்றமுடையனவாய்த் தான் உண்ணத் தகாதனவாய் இருக்குமவற்றை உண்ணல் என்றபடி.

மேலும், [4] "பிறருடைய பொருளை வௌவுதற்கு விரும்புதலும் பிறர்க்கு விருப்பம் இல்லாதனவற்றை மனத்தாலும் நினைத்தலும் வீணான பேராசையும் ஆகிற மூன்றும் மனத்தின்கண்

1 'நஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி' என்பது பிரமாணம்.

2 'முதலாயின' என்றதனால் ஒரு பாகவதருடைய முகமலர்ச்சிக்காகச் செய்தலையும் கொள்க.

3 இதன் விளக்கத்தை மேலே பக். காண்க.

4 'பரத்ரவ்யேஷ்வபித்யாநம் மநஸா நிஷ்ட சிந்தநம் விததாபிநிவேஶஶ்ச த்ரிவிதம் கர்மமாநஸம். பாருஷ்ய மந்ருதம் சைவ பைஶுநஞ் சைவ ஸர்வஶ: அநிபத்தப்ரலாபஶ்ச வாங்மயம் ஸ்யாச்சதுர்விதம். அதத்தாநாம் உபாதாநம் ஹிம்ஸாசைவாவிதாநத: பரதாரோபஸேவாச ஶாரீரம்த்ரிவிதம் ஸ்ம்ருதம்.' என்பது மநுஸ்மிருதி.

"கொலையே களவே காமத் தீவிழை
உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்,
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும்,
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னில் உருப்பன மூன்றுமெனப்
பத்து வகையால் பயன்தெரி புலவர்
இத்திறம் படரார்"

என்பது மணிமேகலை, 24ம் காதை, 125 - 131.

நிகழும் பாவங்கள். கடுஞ்சொல்லும் பொய்யும் குறளையும் சாஸ்திரங்களுக்குக் கட்டுப்படாமல் பேசுதலும் ஆகிற நான்கும் வாக்கின்கண் நிகழும் பாவங்கள். ஒருவன் விரும்பிக் கொடுக்காத பொருளை எடுத்தலும் சாஸ்திரங்களில் விதிக்கப்படாத கொலையைச் செய்தலும் பிறனில்லாளோடு கலத்தலும் ஆகிற இம்மூன்றும் சரீரத்தின்கண் நிகழும் பாவங்கள் என்று நினைத்தல் வேண்டும்'' என்பன போன்றவைகளாலே மநு முதலான ஸ்மிருதிகளில் சொல்லப்படுவன பல ஆகையாலே 'தொடக்கமானவை' என்கிருர். (226)

## 307

**பகவத் அபசாரமாவது, [1] தேவதாந்தரங்களோடு ஒக்க ஈச்வரனை நினைக்கையும், ராம கிருஷ்ணுதியவதாரங்களில் மநுஷ்ய சஜாதீயதா புத்தியும், வர்ணுச்ரம விபரீதமான உபசாரமும், அர்ச்சாவதாரத்தில் உபாதான நிரூபணமும், ஆத்மாபகாரமும், பகவத்திரவிய அபகாரமும் தொடக்கமானவை.**

என்பது சூத்திரம்.

**அவ:**—பின்னர் பகவானுக்குச் செய்யும் அபசாரத்தை விவரிக்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'தேவதாந்தரங்களோடு ஒக்க ஈச்வரனை நினைக்கை' என்றது, [2] ''எவர்கள் புருடோத்தமனைப் பிரமன் சிவன் முதலாயினவர்களோடு சமமாக நினைக்கிருர்களோ அவர்கள் பாஷண்டிகள் என்று நினைக்கப்படுவார்கள்; அவர்கள்

---

[1] தேவதாந்தரங்கள் - சிவன் முதலான வேறு தெய்வங்கள். மநுஷ்ய சஜாதீயபுத்தி - மனித சாதியினனுக நினைத்தல். உபசாரம் - இறைவனுக்குச் செய்யும் ஆராதனை. உபாதாந நிரூபணம் - அந்த விக்கிரகத்தைச் செய்வதற்குரிய முதற்காரணப் பொருளை ஆராய்தல். ஆத்மாபகாரம் - இறைவனுக்கு அடிமையாகவுள்ள ஆன்மாவினைத் தனக்குரித்தாக நினைத்தல்.

[2] யேது ஸாமாந்ய பாவேந மந்யந்தே புருஷோத்தமம்
தேவை பாஷாண்டிநோ ஜ்ஞேயாঃ ஸர்வகர்மபஹிஷ்க்ருதாঃ
யஸ்து நாராயணம்தேவம் ஸாமாந்யே நாபிமந்யதே
ஸயாதி நரகம்கோரம் யாவச் சந்த்ர திவாகரம்.

என்பது பிரமாணம்.

எல்லாக் கர்மங்களினின்றும் விலக்கப்பட்டவர்களாவர்கள் ; எவன் நாராயணனை தேவனை மற்றைத் தேவர்களுக்குச் சமமானவன் என்று நினைக்கின்றானோ, அவன் சூரியன் சந்திரன் இருக்கிற வரையிலும் நரகத்தை அடைகிறான்'' என்று மற்றைத் தேவர்களோடு ஈச்வரனைச் சமமாக எண்ணலாகாது என்று சாஸ்திரம் சொல்லாநிற்க, [1] ''மக்களுடைய மனங்களில் இருந்துகொண்டு அவர்களை நியமிக்கின்றவனும் அவர்களுடைய உயிர்களுக்குள் உயிராயும் இருக்கின்றான்'' என்றும், [2] ''பிரமன் முதலான தேவர்களுக்கும் மேலான மகேஸ்வரனை அந்தச் சர்வேச்வரனை'' என்றும், [3] ''சர்வேச்வரனோடு ஒத்தவனும் அவனுக்கு மிக்கவனும் காணப்படவில்லை'' என்றும் சொல்லப்படுகிறபடியே தனக்கு வேறுபட்ட எல்லா ஆன்மாக்களையும் நியமிக்கின்றவனாய் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனை ஈச்வரனை, [4] ''எல்லாத் தேவர்களும் அவனுக்குச் சரீரமாகச் சொல்லப்படுகின்ற பிரமன் முதலான தேவர்களோடு ஒத்தவன் என்று நினைத்தல் என்றபடி.

'ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் மநுஷ்ய சஜாதீயதா புத்தியும்' என்றது, [5] ''பிறப்பு இல்லாதவனாயும் அழிவில்லாதவனாயும் எல்லா உயிர்களுக்கும் தலைவனாயும் நான் இருந்து கொண்டு என்னுடையதான அப்ராக்ருத விக்கிரகத்தை அதிஷ்டித்து என் இச்சையால் அவதரிக்கிறேன்'' என்கிறபடியே, விடாத சுபாவத்தையுடையவனாய், பிரகிருதி சம்பந்தப்படாத திவ்விய திருமேனியை மனித சரீரமாக்கிக்கொண்டு [6] துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றி நிற்கிற நிலை அறி

---

[1] '' அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா ''
என்பது யஜுர் வேதம்.

[2] '' தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் ''
என்பது சுவேதாஶ்வதர உப.

[3] '' நதத் ஸமஶ்ச அப்யதிகஶ்ச த்ருஶ்யதே ''
என்பது சுவேதாஶ்வதரஉப.

[4] '' அங்காந்யந்யா தேவதா: ''
என்பது, தைத்திரீயஉப.

[5] அஜோபிஸந் நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோபிஸந்
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம் யாத்ம மாயயா.
என்பது ஸ்ரீகீதை, 4 : 6.

[6] திருவாய். 3. 10 : 6.

யாதே, அவதாரத்தில் உண்மையை அறிவிக்கைக்காக அவன் செய்து காட்டின கருவில் தங்கியிருத்தல், பிறத்தல், சோகித்தல், மோகித்தல் முதலானவற்றைக் கொண்டு வினைவயப்பட்ட மனிதர்களோடு ஒத்தவனாக அவனை நினைத்தல் என்றபடி.

'வர்ண ஆச்ரம விபரீதமான உபசாரமும்' என்றது, அவனை ஆராதிக்கின்ற நிலையில் முதல் மூன்று வர்ணங்களுக்கு உரியனவான [1] வேத மந்திரங்களைக் கொண்டு நான்காம் வருணத்தார் ஆராதித்தலும், துறவறத்தில் நின்றவர்கள் முதலாயினார் இல்லறத்தாரைப் போன்று தாம்பூல நிவேதனம் முதலானவற்றைச் செய்தலும் போல்வன என்றபடி.

'அர்ச்சாவதாரத்தில் உபாதாந நிரூபணம்' என்றது, [2] "தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்ற திருப்பாசுரத்தின்படியே அடியார்களுக்கு விருப்பமானதுயாதேனும் ஒரு பொருளைத் திருமேனியாக அங்கீகரித்து, அதில் பரமபதத்திலுள்ள விக்கிரகத்தில் பண்ணும் ஆதரத்தைப் பண்ணி எழுந்தருளியிருக்கிற ஏற்றத்தை அறியாமல் [3] மாத்ருயோநி பரீக்ஷகரைப் போலே இந்த விக்கிரகம் இன்ன பொருளால் செய்யப்பட்டதன்றோ என்று அதற்கு முதற்காரணமாக உள்ள பொருளை ஆராய்ந்து பார்த்தல் என்றபடி.

'ஆத்ம அபகாரம்' என்றது, [4] "இறைவனுக்கு அடிமையாக இருக்கிற ஆன்மாவை எவன் தனக்கு உரியதாக எண்ணுகிறானோ ஆன்மாவைக் களவு செய்த அந்தத் திருடனாலே எந்தப் பாவந்தான் செய்யத்தக்கதாக இல்லை" என்கிறபடியே எல்லாப் பாவங்களுக்கும் காரணமாகச் சொல்லப்படுகிற பகவானுக்கே

---

[1] வேத மந்திரம் – புருஷசூக்தம்,, விஷ்ணுகாயத்திரி முதலானவை.

[2] முதல் திருவந். 44.

[3] 201ஆம் சூத்திரம் பார்க்கவும்.

[4] யோந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே
கிந்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபகாரிணா.

என்பது பாரதம் ஆதிபர்வம், 74 : 27.

'பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை என்னதென்று
கொண்டேனைக் கள்வனென்று கூறாதே—மண்தலத்தே;
புள்வாய் பிளந்த புயலே! உனைக்கச்சிக்
கள்வாவென் றோதுவதென் கண்டு?'

(நூற்றெட்டுத் திருப்பதி அந்.) என்பதூஉம் இப்பொருட்டு.

சேஷமாகவிருக்கிற ஆன்மாவினைத் தனக்கு உரியதாக நினைக்கும் நினைவு என்றபடி.

'பகவத் திரவிய அபகாரம்' என்றது, அமுதுபடி, சாத்துபடி என்னும் இவற்றிற்குத் தகுதியானவற்றைத் தெரிந்தாதல் தெரியாமலாதல் தனக்கு ஆக்குதல் என்றபடி.

இன்னம் இப்படிக் கொடுமையுடையனவாகச் சாஸ்திரங்களில் சொல்லப்படுமவை பலவும் உளவாகையாலே 'தொடக்கமானவை' என்கிறது. [1] முப்பத்திரண்டு அபசாரங்களும் உண்டிறே. (227)

## 308

பகவத் திரவியத்தைத் தான் அபகரிக்கையும், அபகரிக்கிறவர்களுக்குச் [2] சககரிக்கையும், அவர்கள்பக்கலிலே யாசிதமாகவும் அயாசிதமாகவும் பரிக்கிரகிக்கையும் பகவானுக்கு அநிஷ்டமாயிருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'மேலே கூறியவற்றைப் போன்று, பகவானுடைய பொருளைக் களவு காணுதலும் பகவானுக்கு விருப்பம் இல்லாததாக இருக்குமோ?' என்னும் வினவிற்குத் தான் களவு காணுதல் மாத்திரமன்றிக்கே, களவு காண்பார்க்குத் துணையாகவிருத்தல் முதலாயினவும் அவனுக்கு விருப்பமில்லாததாகவிருக்கும் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் : 'பகவத் திரவியத்தைத் தான் அபகரிக்கை' என்றது, நேரே தானே இதற்குக் கருத்தாவாகச் செய்கை என்றபடி. 'அபகரிக்கிறவர்களுக்குச் சககரிக்கையும்' என்றது, 'நாம் களவு செய்கிறோம் இல்லையன்றோ' என்று நினைத்து, களவு செய்கிறவர்களுக்கு அநுமதி கொடுத்தல் முதலியவைகளாலே

---

[1] பிரபந்த பாரிஜாதம் என்ற நூலில் இந்த முப்பத்திரண்டு அபசாரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன என்பர்.

[2] சககரிக்கை - துணை செய்தல். யாசிதமாகப் பரிக்கிரகித்தல், அயாசிதமாகப் பரிக்கிரகித்தல் என்று தனித்தனியே கூட்டுக. கேட்டும் கேளாமலும் கொள்ளுதல் என்பது பொருள்.

துணையாகவிருத்தல் என்றபடி. 'அவர்கள் பக்கலிலே யாசிதமாகப் பரிக்கிரகிக்கையும்' என்றது, 'நாம் இக்களவிற்குக் கூட்டு அன்றோ' என்று நினைத்து, தான் அவர்கள் பக்கலிலே சிலவற்றை விரும்பி வாங்கிக்கொள்ளுதல் என்றபடி. 'அவர்கள் பக்கலிலே அயாசிதமாகப் பரிக்கிரகிக்கையும்' என்றது, 'நாம் விரும்பவில்லையே' என்று நினைத்து, அவர்கள் தாங்களே தருமவற்றை வாங்குதல் என்றபடி. 'பகவானுக்கு அநிஷ்டமாய் இருக்கும்' என்றது, இவையித்தனையும், இவனுடைய உஜ்ஜீவனத்தில் நோக்குள்ளவனாய்ச் செயல் புரிந்து செல்லும் சர்வேச்வரனுடைய திருவுள்ளத்திற்கு வெறுப்புள்ளனவாக இருக்கும் என்றபடி. (228)

## 309

**பாகவத அபசாரமாவது அகங்கார [1]அர்த்த காமங்கள் அடியாக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம்.**

என்பது சூத்திரம்.

அவ :—பின்பு பாகவத அபசாரத்தை விவரிக்கிறார் இச்சூத்திரத்தால்,

வியாக் :—'அகங்கார அர்த்த காமங்கள் அடியாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம்' என்றது, [2]பிறருடைய உயர்வு கண்டு பொறுமைக்கும் தனக்கு உயர்வு வேண்டும் என்ற எண்ணத்திற்கும் காரணமான அகங்காரம் அடியாகவும், அவர்களுடைய வைஷ்ணவ ஆகாரத்தைப் புத்திபண்ணி, 'இவர்கள் ஆசைப்பட்டது ஒன்றாகில் இவற்றை விட்டு வேறொன்றனைப் பற்றுவோம்' என்றிராமல் பொருள் காரணமாகவும், ஆசை காரணமாகவும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் செய்யும் விரோதம் என்றபடி. (229)

---

[1] அர்த்தம் - பொருள். காமம் - ஆசைப்பட்ட பொருள். மகளிர் பக்கல் செய்யும் காமம் அன்று. கன்னிகையை விவாஹம் செய்து கொள்ள விரும்புதலும் ஆம்.

[2] அகங்காரம் உண்டாவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'பிறருடைய' என்று தொடங்கி.

## 310

[1] அஸஹ்ய அபசாரமாவது, நிர்நிபந்தனமாகப் பகவத் பாகவத விஷயம் என்றால் அஸஹமானனாயிருக்கையும், ஆசார்ய அபசாரமும் தத்பக்த அபசாரமும்.

என்பது சூத்திரம்.

அவ :— பின்பு அஸஹ்ய அபசாரத்தை விவரிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— மற்றைய அபசாரங்களைக்காட்டிலும் ஈச்வரனுக்கு இது சிறிதும் பொறுக்க முடியாததாகவிருத்தலின், 'அஸஹ்ய அபசாரம்' என்கிறது. [2] "பகவானாலே பொறுக்க முடியாத பாபங்களில் நான் ஆசையுள்ளவன்" என்றிறே பட்டர் அருளிச் செய்தது. 'நிர்நிபந்தனமாகப் பகவத் பாகவத விஷயம் என்றால் அஸஹமானனாயிருக்கையும்' என்றது, மேலே கூறியவாறு பொருள், ஆசை முதலிய காரணங்கள் இல்லாமலே, இரணியனைப்போலே பகவத் விஷயம் பாகவத விஷயம் என்றால் காணக் கேட்கப் பொறாதபடி இருக்கை என்றபடி. 'ஆசார்ய அபசாரமும்' என்றது, அவன் அருளிச்செய்த பொருளின்படி நடவாமையும், அவன் உபதேசித்த மந்திரங்களையும் அவற்றின் பொருள்களையும் சிறிய பயன்களை நச்சி அதிகாரிகள் அல்லாதார்க்கு உபதேசிக்கையும் முதலானவை என்றபடி. 'தத் பக்த அபசாரமும்' என்றது, ஆசார்யருடைய அடியார்களான ஒரு சாலை மாணாக்கர்களோடு சுகத்தில் ஒரு தன்மையனாய் வாழ வேண்டியிருக்க, அது செய்யாதே, அவர்கள் திறத்தில் செய்யும் பொறாமையும் அவமானமும் முதலானவை என்றபடி. (230)

---

[1] அஸஹ்ய அபசாரம் - இறைவனாலும் பொறுக்க முடியாத குற்றம். நிர்நிபந்தனம் - காரணம் இல்லாமல். 'பகவத் விஷயம்' என்றும், 'பாகவத விஷயம்' என்றும் தனித்தனியே கூட்டுக. அசஹமானன் - பொறாதவன். ஆசார்ய அபசாரம் - ஆசாரியனுக்குச் செய்யும் விரோதம். தக்பக்த அபசாரம் - அந்த ஆசாரியனுடைய பக்தர்களுக்கு-ஒருசாலை மாணாக்கர்களுக்குச் செய்யும் விரோதம்.

[2] மேலே தாம் அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பகவானாலே' என்று தொடங்கி.

"பகவதீ அஸஹ நீயாகஸிரத:"

என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத். 91.

## 311

[1] இவை ஒன்றுக்கு ஒன்று குரூரங்களுமாய், உபாய விரோதிகளுமாய், உபேய விரோதிகளுமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :—** இப்படி, அகிருத்யகரணம் முதலிய நான்கனையும் அடைவே விவரித்தருளி, இவற்றினுடைய கொடுமை விசேடங்களையும் இவைதாம் இன்னது இன்னதற்கு விரோதிகளாய் இருக்கும் என்னுமதனையும் அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** 'இவை ஒன்றுக்கு ஒன்று குரூரங்களுமாய் இருக்கும்' என்றது, அக்ருத்ய கரணத்தைக்காட்டிலும் பகவத் அபசாரம் கொடிது; பகவத் அபசாரத்தைக் காட்டிலும் பாகவத அபசாரம் கொடிது; அதைக்காட்டிலும் அஸஹ்ய அபசாரம் கொடிது என்றபடி. இதற்குக் காரணம், முன் முன் உள்ளதைக்காட்டிலும் பின் பின் உள்ளதற்கு இறைவனுடைய தண்டனைமிக்கிருத்தல். 'யாங்ஙனம்?' எனின், [2] 'அக்ருத்ய கரணத்தில் 'தன்னுடைய ஆணையைக் கடந்தான்' என்பது காரணமாக வந்த சீற்றமிறே. அவ்வளவு அன்றிறே, இவனுடைய உயிருக்கு உயிராய் அதனுடைய இருப்பையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும் தன் திறத்தில் செய்யும் அபசாரத்தால் வரும் சீற்றம்? அவ்வளவும் அன்றிறே, [3] 'ஞானியானவன் என் உயிர்' என்கிறபடியே தனக்கு உயிராக நினைத்திருக்கும் பாகவதர்கள் திறத்தில் அகங்காரம் முதலியவற்றால் பண்ணும் அபசாரத்தால் வரும் சீற்றம்? அது தன்னளவும் அன்றிறே, ஒரு காரணமும் பற்றாமல் தன் பக்கலிலும் தன்னுடையார் பக்கலிலுமாதல், [4] இருவருடைய

---

[1] 'இவை' என்றது, மேலே கூறிய அக்ருத்ய கரணம், பகவதபசாரம், பாகவத அபசாரம், அசஹ்ய அபசாரம் என்னும் நான்கனையும் 'உபாயம்' என்றது ஈண்டு, பகவானுடைய இரக்கத்தை. உபேயம் என்றது, இறைவனுடைய மகிழ்ச்சியை.

[2] தண்டனை மிக்கிருத்தலை விளக்குகிறார் 'அக்ருத்ய கரணத்தில்' என்று தொடங்கி.

[3] "ஜ்ஞாநீத்வாத்மைவ" என்பது ஸ்ரீகீதை, 7 : 18.

[4] இருவருடைய - பகவானும் பாகவதர்களும் ஆகிற இருவருடைய.

பெருமைகளையும் அறிவிக்கின்றவனும் அவ்விருவர்களாலும் விரும்பப்படுமவனுன ஆசாரியன் பக்கலிலேயாதல், [1] மூவர்க்கும் விருப்பம் உள்ளவர்களான ஆசார்ய பக்தர்கள் திறத்திலேயாதல் செய்யும் அபசாரத்தால் வரும் சீற்றம்? ஆகையால், ஒன்றுக்கு ஒன்று கொடியதாய் இருக்கும் என்றபடி.

அக்ருத்ய கரணத்திலே பகவத் அபசாரம் முதலானவைகளும் அடங்குவனவாகவிருக்க, தனித்தனி இப்படிப் பிரித்துச் சொல்லுகிறது. இவற்றினுடைய கொடுமை விசேடங்களைப் பற்றவிறே.

'உபாய விரோதிகளுமாய் உபேய விரோதிகளுமாய் இருக்கும்' என்றது, இவ்வான்மாவினுடைய உஜ்ஜீவனத்தில் ஒருப்பட்டு மேலும் மேலும் செயல் புரிகைக்கு உறுப்பான எம்பெருமானுடைய அருளுக்கும், எப்போதும் இவனுக்குப் பேருகவிருந்துள்ள அவனுடைய திருமுக மலர்ச்சிக்கும் விலக்காகவிருக்கும் என்றபடி. [2] "இரக்கம் உபாயம், இனிமை உபேயம்" என்னக்கடவதிறே. [3] ஆகையால், இந்த அக்ருத்ய கரணம் முதலானவைகள் நீரிலே நெருப்பு எழுமாறு போன்று அவன் திருவுள்ளத்திலே சீற்றத்தை எழுப்பி, அவனுடைய கிருபையும் உகப்பும் இவன் பக்கல் அறும்படி பண்ணுகையாலே அவற்றை உபாயத்திற்கும் உபேயத்திற்கும் விரோதிகள் என்னத் தட்டு இல்லை என்றவாறு.

[4] 'தனக்குத் தான் தேடும் நன்மை' என்று தொடங்கி 'நமః' பதத்தின் பொருளை விரிவாகப் பேசுகையாலும்,

---

[1] மூவர்க்கும் - பகவானும் பாகவதர்களும் ஆசாரியனும் ஆகிற மூவர்க்கும்.

[2] தாம் கூறிய பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிருர் 'இரக்கம் உபாயம்' என்று தொடங்கி. இது, நம் பிள்ளையின் திருவாக்கு.

[3] அகிருத்யகரணம் முதலிய நான்கும், உபாயத்திற்கும் உபேயத்திற்கும் தடைகளாகவிருக்குமாற்றை விளக்குகிருர் 'ஆகையால்' என்று தொடங்கி.

[4] இந்நூல் துவயத்தின் பொருளை விரித்துக் கூறுகின்றது என்று பாயிரத்திற்கூறியவாறே, துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருளை விரித்துக் கூறுமாற்றை முன்னர் விளக்கினுர். பின் வாக்கியத்தின் பொருளை விரித்துக் கூறுமாற்றை விளக்குகிருர் 'தனக்குத்தானே' என்று தொடங்கி. இது 164 சூத்.

[1] ‘உகந்தருளின நிலங்களில் ஆதராதிசயமும்’ என்று உகந்தருளின நிலத்தைக் கூறுகையாலும்; மேலே [2] ‘பகவத் கைங்கரியமும்’ என்கிறவிடத்தில் ‘பகவான்’ என்ற சொல்லாலும், கைங்கரியத்தை ஏற்றுக்கொள்கின்றவர்களைக் கூறுகின்ற ‘ஸ்ரீமத்’ பதம் ‘நாராயண’ பதம் என்னும் இவற்றினுடைய அர்த்தங்களைக் குறிப்பாகக் காட்டுகையாலும், [3] மங்களாசாசனத்தைப்பற்றிக் கூறுகையாலும், [4] ‘கர்த்தவ்யம் ஆசார்ய கைங்கரியமும் பகவத் கைங்கரியமும்’ என்று தொடங்கி, [5] “கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம் பெறுவது” என்னுமளவாகவும் ‘ஆய’ என்னும் நான்காம் வேற்றுமை உருபின் பொருளை அருளிச் செய்கையாலும்; [6] நான்கு வகையான குற்றங்களைக் கூறும் மூலமாகப் பிராசங்கிகமாக மீளவும் ‘நம:’ பதத்தின் பொருளைப் பேசுகையாலும் இவ்வளவும் துவயத்தில் பின் வாக்கியத்தின் பொருளை அருளிச் செய்தாராயிற்று. (231)

ஆக, இப்பிரகரணத்தால், மேலே முதல் பிரகரணத்தாலும் இரண்டாம் பிரகரணத்தாலும் கூறப்பட்ட உபாயத்தைக் கொண்டு [7] உபேயத்தைப் பெறும் அறிவுள்ள ஒருவனுக்கு, உபாய உபேய அதிகாரத்திற்கு இன்றியமையாமல் வேண்டப் படுவனவற்றையும், [8] அவனை ஒழிந்த மற்றைய உபாயங்களை விடுவதற்குக் காரணமான சொரூப நாசகம் முதலானவற்றையும், [9] பிரபத்தியினுடைய சொரூபத்திற்கு அநுகூலமாக இருப்பன முதலானவற்றையும், [10] ஸ்வகத ஸ்வீகாரம் உபாயமாகாமையையும், பரகதஸ்வீகாரமே உபாயமாமாற்றையும், [11] அந்தப் பரகத

---

[1] இது, 246 சூத். [2] இது, 278 சூத்.

[3] 247 முதல் 261 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[4] இது, 278 சூத். [5] இது, 290 சூத்.

[6] 304 முதல் 311ஆம் சூத்திரம் முடிய காண்க.

[7] இப்பிரகரணத்தில் கூறப்பட்டவற்றைச் சுருக்கி அருளிச்செய்கிறார் ‘ஆக’ என்று தொடங்கி.

[8] இதனை, 81 முதல் 118 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[9] இதனை, 119 முதல் 137 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[10] இதனை, 138 முதல் 145 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[11] இதனை, 146 முதல் 151 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

ஸ்வீகாரத்தினுடைய வலிமையையும், [1] அவனே வந்து நம்மைப் பற்றுமிடத்திலும் புருஷகாரத்தை முன்னிடும்படியையும், [2] சேதனனும் இறைவனும் ஆகிய இருவரும் முன்னிடுகைக்குப் பிரயோஜன விசேடங்களையும், [3] உபேய தசையிலும் பிராப்தி தசையிலும் இவனுடைய சேஷத்துவமும் பாரதந்திரியமும் ஸ்வதோஷ நிவிருத்தியும் இறைவன் அநுபவிக்கும் அநுபவத் திற்குத் தடையாம்படியையும், [4] தன்னால் வரும் நன்மையைக் காட்டிலும் அவனால் வரும் நன்மைக்கு உள்ள வேறுபாட்டினை யும், [5] ஈச்வரனே காப்பவன் தான் தன்னை அழித்துக்கொள்ளு கிறவன் என்பதனையும், [6] தான் தன்னை அழித்துக்கொள்ளும் வகையினையும், [7] அகங்காரமும் மகளிரும் தாமான நிலையாலும் பாகவத விரோதத்தை விளைவிக்கும் நிலையாலும் இவன் சொரூபத்தை அழிக்கும்படியையும், [8] பாகவத அபசாரத்தின் கொடுமையையும், [9] அதனைக் கூறுமுகத்தால் நினைவில் கொண்ட பாகவதர்களுடைய பெருமையையும், [10] இவன் தினசர்யையும், [11] தினசர்யையில் சொல்லப்பட்டவையனைத்தும் நல்லாசிரியனுடைய திருவருளாலே வளரும் போதைக்கு வேண்டப்படுவனவான வஸ்தவ்யம் முதலானவற்றையும், [12] அவற்றின் ஈற்றில் சொல்லப்பட்ட அவசியம் செய்யத்தக்கதான கைங்கரியத்தின் தன்மையையும், [13] கைங்கரிய தசை அதற்கு முன் உள்ள தசைகளில் சொரூபத்தை ஒளி பெறச் செய்யும்

[1] இதனை, 152 முதல் 154 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[2] இதனை, 155ஆம் சூத். காண்க.

[3] இதனை, 156 முதல் 163 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[4] இதனை, 164 முதல் 180 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[5] இதனை, 181ஆம் சூத். காண்க.

[6] இதனை, 182, 183ஆம் சூத். காண்க.

[7] இதனை, 184 முதல் 192 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[8] இதனை, 193ஆம் சூத். காண்க.

[9] இதனை, 194 முதல் 207 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[10] இதனை, 208 முதல் 245 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[11] இதனை, 246 முதல் 277 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[12] இதனை, 278ஆம் சூத். காண்க.

[13] இதனை, 280 முதல் 291 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

படியையும், [1] இவனுக்கு உண்டான நான்கு குணங்களையும், அது சம்பந்தமான வேறுபாட்டினையும், [2] அவற்றில் அசக்திக்கு இலக்கான நால்வகையான குற்றங்களையும் சொல்லுகையாலே அதிகாரி நிஷ்டையின் க்ரமம் சொல்லப்பட்டது ஆறு ப்ரகணங்களுள்.[3]

**மூன்றாவதான அதிகாரி நிஷ்டா க்ரமம் முற்றிற்று.**

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.

மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க !

மாறன் மலரடி வாழ்க !

[1] இதனை, 292 முதல் 298 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[2] இதனை, 299 முதல் 303 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[3] இதனை, 304 முதல் 311 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய: நம:

# நான்காவது பிரகரணம்

# சதாசார்ய அநுவர்த்தன கிரமம்

## 312

[1] தான் ஹிதோபதேசம் பண்ணும் போது தன்னையும் சிஷ்யனையும் பலத்தையும் மாறடி நினைக்கை குரூர நிஷித்தம்.

என்பது சூத்திரம்.

அவ :—பின்பு, இச்சூத்திரத்திலிருந்து [2] "உகப்பும் உபகார ஸ்மிருதியும் நடக்கவேணும்" என்ற சூத்திரம் இறுதியாக, இவ்வதிகாரிக்கு மேலே கூறிய அர்த்த விசேடங்களையெல்லாம் உபதேசிக்கின்றவனை ஆசாரியன் விஷயத்தில் உண்டாக வேண்டும் எண்ணத்தையும், நடந்துகொள்ளவேண்டிய முறைகளையும் வெளியிடுகைக்காக, [3] நல்லாசாரியன் இலக்கணம், [4] நன்மாணுக்கன் இலக்கணம், இவ்விருவரும் ஒருவர் மற்றொருவரிடத்தில் [5] நடந்துகொள்ளவேண்டிய முறை ஆகிய இவையிருக்கும்படியைப் [6] பிரசக்த அநுப்பிரசக்தமாக அருளிச்

---

நல்லாசிரியன் நன்மாணுக்கன் இவர்களுடைய இலக்கணமும் ஒழுகலாறும் கூறப்படுகின்றன இப்பகுதியில். அநுவர்த்தனம் - ஒழுக்கம்.

[1] தான் - ஆசிரியன். ஹிதோபதேசம் - நலத்தைக்கூறல். குரூரம் - கொடிது. நிஷித்தம் - விலக்கப்பட்டது.

[2] இது 368ஆவது சூத்.

[3] 312 முதல் 320 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[4] 325 முதல் 329 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[5] 330 முதல் 351 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க.

[6] பிரசக்தம் - நினைவிற்கு வந்ததனைவிட முடியாதிருத்தல். அதாவது, ஒரு விஷயத்தைப் பேசிக்கொண்டு வரும்போது நினைவிற்கு வரும் வேறு விஷயங்களையும் கூறுதல் என்றபடி. அநுபிரசக்தம் - அதன் பின் தொடர்ந்து வருவது.

செய்கிறார். இவ்வதிகாரிக்கு [1] அசக்திக்கு விஷயமாக விலக்கப் பட்டனவற்றைச் சொன்ன [2] பிரசங்கத்திலே அவையெல்லா வற்றுள்ளும் மிகக் கொடிய நிஷித்தம், பரோபதேசம் செய்யும் சமயத்தில் மாறுபட்ட எண்ணம் என்பதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'தான் ஹித உபதேசம் பண்ணும் போது' என்றது, மேல் பிரகரணத்தில் சொல்லப்பட்ட அதிகாரி இலக்கணங்கள் எல்லாவற்றாலும் குறைவு அற்றிருக்கிற தான், உய்வு பெறவேண்டும் என்ற எண்ணமுள்ளவர்களாய் வந்து தன்னை அடைந்தவர்களுக்கு, உய்வு பெறுதற்குக் காரணமான மந்திரவடிவமான நலத்தை உபதேசிக்கும் காலத்தில் என்றபடி. தன்னையும் சிஷ்யனையும் பலத்தையும் மாறாடி நினைக்கை க்ரூர நிஷித்தம்' என்றது, உபதேசிக்கின்றவனான தன்னையும், உபதேசத்தைக் கேட்கின்றவனான மாணாக்கனையும் உபதேசத் தால் உளதாகும் பயனையும் மாறுபாடாக நினைத்தல், மேல் பிரகரணத்தில் சொன்ன விலக்கியனவற்றைக்காட்டிலும் மிகக் கொடியதாக விலக்கப்பட்டதாகும் என்றபடி.

[3] மேலே கூறியவை இவ்வதிகாரிக்குக் கேட்டினை விளைக்கு மித்தனையிறே. அங்ஙன் அன்றிக்கே இவனுக்கும் இவனுடைய உபதேசத்தைக் கேட்டவனுக்கும் கேட்டினை விளைப்பதாம் ஆகை யாலே இதனை அவற்றைக்காட்டிலும் கொடியது என்கிறது. [4] 'இருவருக்கும் சொரூப சித்தியில்லை' என்றிறே மேலே சொல்லுகிறது. (1)

---

[1] 304 முதல் 311 முடிய உள்ள சூத்திரங்களைக் காண்க. இவற்றில் கூறப்பட்ட பொருள் பிரசக்தம். இவற்றிற்கு மேல் இங்குக் கூறப்படும் பொருள் அநுப்பிரசக்தம்.

[2] பிரசங்கம் - சொல்ல வேண்டிவர அதனைச் சொல்லுதல்.

[3] மேல் சூத்திரங்களில் கூறப்பட்டனவற்றைக்காட்டிலும் இது கொடியது என்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'மேலே கூறியவை' என்று தொடங்கி.

[4] 316ஆவது சூத்.

## 313

தன்னை மாருடி நினைக்கையாவது, தன்னை ஆசார்யன் என்று நினைக்கை ; சிஷ்யனை மாருடி நினைக்கையாவது, தனக்குச் சிஷ்யன் என்று நினைக்கை ; பலத்தை மாருடி நினைக்கையாவது, [1] திருஷ்ட பிரயோஜனத்தையும் சிஷ்யனுடைய உஜ்ஜீவனத்தையும் பகவத் கைங்கர்யத்தையும் சகவாசத்தையும் பலமாக நினைக்கை.

என்பது சூத்திரம்.

அவ :—'தன்னையும் சிஷ்யனையும் பலத்தையும் மாருடி நினைக்கையாவது யாங்ஙனம் ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :** 'தன்னை மாருடி நினைக்கையாவது, தன்னை ஆசார்யன் என்று நினைக்கை,' என்றது, உபதேசிக்கின்ற காலத்தில், தன்னுடைய ஆசாரியனையே இவனுக்கு உபதேசிக் கின்றவனுகவும், தான் [2] அங்குத்தைக்குக் கரணனுகவிருப்பவன் என்றும் நினைத்துக்கொண்டு உபதேசிக்க வேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல், தன் ஆசாரியனுக்குப் பரதந்திரனுக விருக்கிற தன்னை இவனுக்கு ஆசாரியன் என்று நினைத்தல் என்றபடி. சிஷ்யனை மாருடி நினைக்கையாவது, தனக்குச் சிஷ்யன் என்று நினைக்கை. என்றது, தன்னைப்போன்று இவனையும் தன் ஆசாரியனுக்கு மாணுக்கன் என்று நினைத்து உபதேசிக்க வேண்டியிருக்க, அது செய்யாமல், இவனைத் தனக்கு மாணுக்கன் என்று நினைத்தல் என்றபடி.

பலத்தை மாருடி நினைக்கையாவது, திருஷ்டபலத்தையும் சிஷ்யனுடைய உஜ்ஜீவனத்தையும் பகவத் கைங்கரியத்தையும் சகவாசத்தையும் பலமாக நினைத்தல். என்றது, உபதேசம் செய்யுமளவில் இவ்வான்மா திருந்தி, [3] 'ஆளும் ஆளார்' என்கிற இறைவனுக்கு மங்களாசாசனம் செய்வதற்கு ஆளாக

---

[1] திருஷ்டப்ரயோஜனம் - இவ்வுலகத்தில் கிடைக்கும் பலன்கள். சகவாசம் - சேர்ந்து வசித்தல்.

[2] அங்குத்தைக்கு - தன் ஆசாரியனுக்கு.

[3] திருவாய்மொழி, 8·3 : 3.

வேண்டும் என்னும் இதுவே பயனாக உபதேசிக்கவேண்டி யிருக்க, அது செய்யாமல், இவனால் வரும்பொருள், இவனால் செய்யப்படும் தொண்டு முதலியனவான இவ்வுலகப்பயன்களை யாதல், சம்சாரத்தைக் கடந்தவனாய் வாழ்தலாகிற உஜ்ஜீ வனத்தையாதல், திருநந்தனவனம் முதலானவற்றை வைப் பதைக்காட்டிலும் ஓர் ஆன்மாவைத் திருத்தினால் எம்பெருமான் திருவுள்ளம் உகக்கையாலே இப்படியிருந்துள்ள பகவத் கைங்க ரியத்தையாதல், இவ்வுலகில் இருக்கும் நாள் தன் தனிமை தீரக் கூடி வாழ்தலாகிற சேர்க்கையையாதல் உபதேசத்திற்குப் பலமாக நினைத்தல் என்றபடி. (2)

## 314

'நினையாதிருக்க இந்நாலு பலமும் சித்திக் கிறபடி என்?' என்னில், சேஷபூதனான சிஷ்யன் நினைவாலே திருஷ்டபலம் சித்திக்கும்; ஈச்வரன் நினைவாலே உஜ்ஜீவனம் சித்திக்கும்; ஆசார் யன் நினைவாலே பகவத் கைங்கர்யம் சித்திக் கும்; உபகாரஸ்மிருதியாலே[1] சகவாசம் சித்திக் கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி இவன் நினையாதிருக்க, இந்நான்கு பலன் களும் கிடைக்கிறபடிதான் என்?' என்று அறிதற்கு விரும்புகின்ற வனுடைய வினாவை அநுவதித்துக்கொண்டு, அவை கிடைக்கும் வழியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சேஷபூதனான சிஷ்யன் நினைவாலே திருஷ்ட பலம் சித்திக்கும்' என்றது, சிஷ்யனானவன் சேஷத்துவமே தனக்குரிய தன்மை என்று நினைத்திருக்கையாலே, 'கைங்கரியம் செய்யாத போது சேஷத்துவம் இல்லையாம்' என்று தன் சேஷத்துவத்தைப் பெறுவதற்காகத் தன்னாலான கைங்கரியத் தைச் செய்துகொண்டு போருகையாலே பொருளும் தொண்டு செய்தலுமாகிற இவ்வுலகப்பயன்கள் கிடைக்கும் என்றபடி. 'ஈச்வரன் நினைவாலே உஜ்ஜீவனம் சித்திக்கும்' என்றது, [2]எதிர் சூழல் புக்குத் திரிந்து, தன் விசேஷகடாக்ஷங்களாலே

[1] உபகாரஸ்மிருதி - செய்ந்நன்றியை நினைத்தல்.

[2] திருவாய்மொழி, 2·7 : 6.

வெறுப்பின்மை முதலானவற்றை உண்டாக்கி, ஆசாரியனைப் பற்றும்படி செய்து, இவ்வாசாரியனுடைய உபதேசத்தைப் பெறும்படி செய்து, அது காரணமாக இவனைப் பிறவிப்பெருங் கடலினின்றும் அக்கரை ஏறச் செய்ய வேண்டும் என்கிற எம்பெருமானுடைய திருவருளின் காரியமான நினைவாலே சிஷ்யனுடைய உஜ்ஜீவனம் சித்திக்கும் என்றபடி.

'ஆசாரியன் நினைவாலே பகவத்கைங்கரியம் சித்திக்கும்' என்றது, இவன் நலத்தை உத்தேசித்து மங்களாசாசனத்திற்கு ஆளாம்படி ஒருவனைத் திருத்துகிற இது, எம்பெருமான் திருவுள்ளத்திற்கு மிகவும் உகப்பு ஆகையாலே, இது பகவத் கைங்கரியமன்றோ என்று நினைத்திருக்கும் தன் ஆசார்யன் நினைவாலே, உபதேசிக்கிறவனான தனக்குப் பகவத் கைங்கரியம் கிடைக்கும் என்றபடி. 'உபகார ஸ்மிருதியாலே சகவாசம் சித்திக்கும்' என்றது, அநாதிகாலம் யான் எனது என்னும் செருக்காலே அழிந்தவனைப் போன்று கிடந்த என்னை ஒரு காரணமும் பற்றாது அங்கீகரித்து, அறியாமையைப் போக்குகிற வழியாலே அவற்றிலே ருசியை மாற்றி, மங்களாசாசனத்திற்கு ஆளாம்படி செய்த சீரியர் அன்றோ என்கிற உபகாரத்தின் நினைவாலே,' சிஷ்யனானவன் கணநேரமும் பிரிவதற்குப் பொறுக்கிக் கூடியே இருப்பதனால் உண்டான சேர்க்கை தன்னடையே கிடைக்கும் என்றபடி. (3)

## 315

[1] 'சாக்ஷாத் பலமும் ஆசார்யத்வமும் சித்திக்கும்படி என்?' என்னில், தன் நினைவாலும் ஈச்வரன் நினைவாலும் சித்திக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—' இப்படி, இவன் நினையாதிருக்க, இந்நான்கு பலன்களும் சிஷ்யன் ஈச்வரன் ஆசாரியன் என்னும் இவர்களுடைய நினைவாலே சித்திக்கும் என்பதனை அருளிச்செய்து, உபதேசத்திற்கு நேரே பலமாகவுள்ளதும், ஆசாரியனுக்குப் பரதந்திரனாய்

---

[1] சாக்ஷாத் பலம் - நேரான பலம். ஆசாரியத்வம் - ஆசாரியனாகும் தன்மை. 'சாக்ஷாத் பலம் தன் நினைவாலே சித்திக்கும்; ஆசாரியத்வம் ஈச்வரன் நினைவாலே சித்திக்கும்' என நிரல் நிறையே கொள்க. சூத்திரத்தில் 'தன்' என்றது சிஷ்யனை.

உபதேசிக்கின்றவனுக்கு, உபதேசத்திற்குப் பாத்திரனான சிஷ்யனைக் குறித்து உண்டாகும் ஆசாரியனும் தன்மையும் சித்திக்கும்படி என்?' என்னும் வினாவினை எழுப்பிக்கொண்டு அதற்கு விடையும் அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—சாக்ஷாத்பலமாவது, உபதேசத்திற்குப் பாத்திரமான இவன், திருந்தி மங்களாசாசனத்திற்கு ஆள் ஆதல். இது, தன் நினைவாலே சித்திக்கையாவது, உபதேசிக்கின்றவனான தான், [1] மாறுபட்ட எண்ணங்கள் ஒன்றும் இன்றி, இதுவே பலமாக நினைத்து உபதேசிக்கவே, அவன் அப்படித் திருந்தி மங்களாசாசனத்திற்கு அதிகாரியாதல். ஆசார்யத்வமாவது, தன்னை ஆசார்யனுக்குப் பரதந்திரனாகவே நினைத்திருக்கிற இவன், தன்பக்கல் உபதேசம் கேட்கிறவனுக்கு ஆசார்யனாதல். இது, 'ஈச்வரன் நினைவால் சித்திக்கும்' என்றது, [2] 'இப்படித் தன்னையும் சிஷ்யனையும் பலனையும் மாறுபட எண்ணாமல் உள்ளபடி நினைத்து உபதேசிக்கும் நிலையுடையவனான இவன் இவனுக்கு ஆசார்யன்' என்று இறைவன் நினைக்கையாலே, இவனுக்கு ஆசாரியனும் தன்மை உண்டாகும் என்றபடி. (4)

## 316

இப்படி ஒழிய உபதேசிக்கில், இருவர்க்கும் [3] சொரூப சித்தி இல்லை.

என்பது சூத்திரம்.

**அவ :**—இங்ஙன் அன்றி மிகக்கொடிய குற்றமாக மேலே கூறிய மாறுபட்ட எண்ணத்தோடு உபதேசிக்கில், உபதேசிக்கிறவனுக்கு ஆசாரியனும் தன்மையும் கேட்கிறவனுக்குச் சிஷ்யனும் தன்மையும் சித்தியா என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இப்படி ஒழிய உபதேசிக்கில் இருவர்க்கும் சொரூபசித்தி இல்லை' என்றது, மேலே கூறியவாறே உள்ளவாறான எண்ணத்தோடு உபதேசிக்கில் ஒழிய, ஈச்வரன் இவனை

[1] மாறுபட்ட எண்ணத்தை 313ஆம் சூத்திரத்தில் காண்க.

[2] 'உள்ளவாறே இவன் உபதேசிக்க, அதனைக் கண்டு, ஈச்வரன் 'இவனுக்கு இவன் ஆசாரியன்' என்று நினைப்பிடுகையாலே ஆசாரியத்வம் சித்திக்கும்' என்பதாம்.

[3] சொரூபம் - ஆசாரியனாகிற சொரூபமும் சிஷ்யனாகிற சொரூபமும்.

ஆசாரியனுக நினைப்பிடாமையாலே உபதேசிக்கிறவனுக்கு ஆசாரியனும் தன்மையாகிற சொரூபம் நிலைபெருது. அப்படி உள்ளவாருன எண்ணத்தோடு இவன் உபதேசியாத அளவில் உபதேசத்தில் தூய்மை இல்லாமையாலே உபதேசத்தைக் கேட்கிற அவனுக்குச் சிஷ்யனும் தன்மையாகிற சொரூபம் நிலைபெருது என்றபடி. (5)

## 317

**ஆசாரியனுக்குச் சிஷ்யன்பக்கல் கிருபையும், [1] ஸ்வாசாரியன்பக்கல் பாரதந்திரியமும் வேணும்.**

என்பது சூத்திரம்.

**அவ :**—ஆசாரியனுக்கு இரண்டு குணங்கள் ஒருதலையாக வேண்டும் என்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—' ஆசாரியனுக்குச் சிஷ்யன்பக்கல் கிருபை வேணும் ' என்றது, உபதேசிக்கின்றவனுன ஆசாரியனுக்கு உஜ்ஜீவிப்பதில் விருப்பமுள்ளவனுய் வந்து தன்னை அடைந்த சிஷ்யன்பக்கல் 'ஐயோ!' என்று இரங்கி, அவன் உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பான உபதேசம் முதலானவற்றைச் செய்கைக்கு ஈடான பேரருள் ஒரு தலையாக வேண்டும் என்றபடி. ' ஸ்வஆசாரியன் பக்கல் பாரதந்திரியம் வேணும் ' என்றது, தன்னை உபதேசிக்கின்ற தலைவனுக நினையாமல், ஆசாரியனுடைய உறுப்பாக நினைக்கைக்கு ஈடான, தன் ஆசாரியன் விஷயத்தில் பாரதந்திரியம் ஒருதலையாக வேண்டும் என்றபடி. (6)

## 318

**கிருபையாலே சிஷ்யன் சொரூபம் சித்திக்கும் ; பாரதந்திரியத்தாலே [2] தன் சொரூபம் சித்திக்கும்.**

என்பது சூத்திரம்.

**அவ :**—மேற்சூத்திரத்தில் கூறியவற்ருல் பலிக்குமவற்றை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

[1] ஸ்வஆசாரியன் - தன்னுடைய ஆசாரியன்.

[2] தன் - ஆசாரியனுகிய தன்னுடைய.

**வியாக் :**—'கிருபையாலே சிஷ்யன் சொரூபம் சித்திக்கும்' என்றது, அப்படி அவன் சொரூபம் திருந்துமளவும் உபதேசம் முதலானவற்றைச் செய்துகொண்டு போரும் இவனுடைய கிருபையாலே, நாளுக்கு நாளும் சொரூபம் தூய்மையாம் ஆகையாலே சிஷ்யனுடைய சொரூபம் சித்திக்கும் என்றபடி. 'பாரதந்திரியத்தாலே தன் சொரூபம் சித்திக்கும்' என்றது, 'நான் செய்கிறேன்' என்ற எண்ணம் நீங்கித் தன் ஆசாரியனுடைய அவயவமாகத் தன்னை நினைத்திருக்கைக்கும் மற்றும் எல்லாக் காரியங்களிலும் அவனுக்கு வசப்பட்டவனாய் நடப்பதற்கும் உடலான பாரதந்திரியத்தாலே ஆசாரியனான தன்னுடைய சொரூபம் சித்திக்கும் என்றபடி.

ஆக, நலத்தை உபதேசிக்கும் சமயத்தில், தன் விஷயத்திலும் சிஷ்யன் விஷயத்திலும் பலத்தின் விஷயத்திலும் உண்டாகும் மாறுபட்ட எண்ணங்கள் மிகவும் தகாதன என்றும், அவைதாம் இன்னவை என்றும், இவன் நினையாதிருக்க இவ்வுலகப் பயன் முதலானவை வந்து சித்திக்கும் வழியையும், நேரான பலன் ஆசாரியனும் தன்மை என்னுமிவை சித்திக்கும் வழியையும், இப்படியில்லாமல் மாறுபட்ட எண்ணத்தோடு உபதேசிக்கில் இருவருடைய சொரூபமும் சித்தியாமையையும், ஆசாரியனுக்கு அவசியம் வேண்டற்பாலவான இரண்டு குணங்களையும், அவ்விரண்டு குணங்களின் பலன்களையும் சொல்லியருளினாராயிற்று. (7)

## 819

நேரே ஆசாரியன்என்பது, சம்சார[1] நிவர்த்தகமான பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனை.

என்பது சூத்திரம்.

**அவ :**—இப்படி உபதேசத்திற்குத் தகுதியான நியமங்களை அருளிச்செய்த பின்னர், உபதேசிக்கும் போது இன்ன மந்திரத்தை உபதேசித்தவனையே நேரே ஆசார்யன் என்ன வேண்டும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] நிவர்த்தகமான - விடுவிப்பதான. பெரிய திருமந்திரம் - திருவெட்டெழுத்து.

வியாக் :—‘ நேரே ஆசாரியன் என்பது ’ என்றது, ஆசாரியனும் தன்மை குறைவு அறவின்றியிருக்கச் செய்தே மேலெழத் தோன்றும் தோற்றத்தை மாத்திரம் கொண்டு சொல்லுமளவன்றிக்கே, நேரே ஆசாரியன் என்று சொல்லுவது என்றபடி. ‘சம்சார நிவர்த்தகமான பெரியதிருமந்திரத்தை உபதேசித்தவனை’ என்றது, [1]‘ பெண்டு பிள்ளைகள் முதலான இவ்வுலகத்தின் செல்வத்தையும் சுவர்க்காநுபவம் முதலான மேலுலகங்களின் செல்வங்களையும் கைவல்யத்தையும் பகவானுடைய அநுபவத்தையும் கொடுக்கும்’ என்கிறபடியே எல்லாப்பலன்களையும் கொடுக்கத்தக்கதாயிருந்ததேயாகிலும், மற்றைய பலன்களில் கருத்து இன்றிக்கே மோக்ஷமாகிற பலத்திலே நோக்காகவிருக்கையாலே [2]‘வேதாந்தங்கள் எல்லாவற்றினுடைய கருத்துப் பொருளையுடையதாயும் பிறவிப் பெருங்கடலைக் கடக்கச் செய்வதுமான திருவெட்டெழுத்தாகிற மந்திரமானது மீண்டும் பிறப்பதற்கு விரும்பாத மக்களுக்குப் புகலிடம்’ என்கிறபடியே, பிறவிப்பெருங்கடலைக் கடக்கச்செய்வதாய், ஆதலால் [3]‘ அநாதியான இந்த மூலமந்திரமானது மந்திரங்களுக்குள் மிக உயர்ந்த மந்திரம் ; இரகஸ்யங்களுக்குள் உயர்ந்த இரகஸ்யம்; தூய்மையானவற்றுக்கும் மிகத்தூய்மையை அளிப்பதாம்’ என்கிறபடியே மற்றைய மந்திரங்கள் எல்லாவற்றுள்ளும் உயர்ந்த பெருமையையுடைத்தான திருமந்திரத்தை, பிறவிப் பெருங்கடலினின்றும் கடத்துவிக்கும் தன்மையது என்ற எண்ணத்தோடு உபதேசித்தவனை என்றபடி.

---

1 ‘ ஐஹலௌகிக மைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம்
கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி.’
என்பது ஸ்ரீபாஞ்சராத்ரம். இது திருவெட்டெழுத்து எல்லாப் பலன்களையும் கொடுக்கும் என்பதற்கு மேற்கோள்.

2 ‘ ஸர்வவேதாந்த ஸாரார்த்த ஸம்ஸாரார்ணவ தாரகঃ
கதிரஷ்டாக்ஷரோ ந்ருணாமபுநர்பவ காங்க்ஷிணாம்.’
என்பது ஸ்ரீபாஞ்சராத்ரம். இது, மேலே கூறியவாறு எல்லாப் பலன்களையும் திருவெட்டெழுத்துத் தருவதாயினும், மோக்ஷத்தைக் கொடுப்பதிலேயே முழு நோக்கு என்பதற்குப் பிரமாணம்.

3 ‘ மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம்
பவித்ரஞ்ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாதநঃ ’
என்பது, ஸ்ரீபாஞ்சராத்ரம்

[1] துவயத்தின் முன்வாக்கியமும் பின்வாக்கியமும், திருமந்திரத்தின் நடுப்பதம் இறுதிப்பதம் ஆகிய இரண்டு பதங்களினுடைய விவரணமாய் இருத்தலாலும் சரமச்சுலோகம் முன்பாதியும் பின்பாதியும் துவயத்தில் முன்பின் உள்ள இரண்டு வாக்கியங்களினுடைய விவரணமாக இருத்தலாலும், [2] துவயம் சரமச்சுலோகம் என்னும் மற்றைய இரகசியங்கள் இரண்டும், பிரதம ரகஸ்யமான இத்திருமந்திரத்தின் வேருக இன்மையால் இதனைக் கூறிய போது அவற்றினுடைய உபதேசமும் தன்னடையே கூறிற்ரும் என்று திருவுள்ளம்பற்றிப் 'பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனை' என்கிருர். ஆகையால், இது மூன்று இரகசியங்களை உபதேசிப்பதற்கும் உபலக்ஷணம். (8)

## 820

சம்சார [3] வர்த்தகங்களுமாய் க்ஷுத்ரங்களுமான பகவந் மந்திரங்களை உபதேசித்தவர்களுக்கு ஆசாரியத்வ பூர்த்தி இல்லை.

என்பது சூத்திரம்.

அவ :—'பகவானுடைய மந்திரங்களுள் யாதேனும் ஒன்றை உபதேசித்தவர்களுக்கு ஆசாரியராகும் தன்மை இல்லையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சம்சார வர்த்தகங்களுமாய் க்ஷுத்ரங்களுமான பகவன் மந்திரங்களை உபதேசித்தவர்களுக்கு ஆசாரியத்வ பூர்த்தி இல்லை' என்றது, சம்சாரத்தை விலகச் செய்யாத மாத்திரமன்றிக்கே அதனை வளர்க்குமவையாய், பெருமையுடையனவன்றிக்கே சிறியனவாயுமிருந்துள்ள, பகவானுடைய மற்றைய மந்திரங்களை உபதேசிக்கிறவர்களுக்கு, உபதேசித்தலை அடியாகக்

[1] 'திருமந்திரம், துவயம், சரமச்சுலோகம் என்னும் மூன்றனுள் திருவெட்டெழுத்தினை மாத்திரம் விதந்து கூறியது பொருந்துமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'துவயத்தின்' என்று தொடங்கி.

[2] விவரணமாய் இருத்தலை இரஹஸ்யத்திரய வியாக்கியானத்தால் உணர்தல் தகும்.

[3] வர்த்தகங்கள் - வளர்ப்பவை. க்ஷுத்ரங்கள் - சிறியவை. ஆசாரியத்வ பூர்த்தி - ஆசாரியனுகிற தன்மைக்குரிய குணங்களின் நிறைவு.

கொண்ட ஆசாரியனுரும் தன்மையின் தோற்றமேயன்றி ஆசாரியனுக்குரிய நிறைவில்லை என்றவாறு. (9)

## 321

பகவந் மந்திரங்களை க்ஷுத்ரங்கள் என்கிறது பலத்வாரா.[1]

என்பது சூத்திரம்.

அவ :—'சிறியவை என்பது, சிறு தெய்வங்களின் மந்திரங்களை அன்ருே? பகவானுடைய மந்திரங்களை இப்படிச் சொல்லுகிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பகவந் மந்திரங்களை க்ஷுத்ரங்கள் என்கிறது பலத்வாரா' என்றது, பரம்பொருளான பகவான் விஷயமாகையாலே வந்த பெருமையையுடைய மந்திரங்களைச் 'சிறியவை' என்று சொல்லுகிறது, பொருள், காமம், புத்திரர், கல்வி முதலான சிறிய பலன்களைக் கொடுக்கிற வழியாலே என்றவாறு. (10)

## 322

சம்சார வர்த்தகங்கள் என்கிறதும் அத்தாலே.[2]

என்பது சூத்திரம்.

அவ :—'சம்சாரத்தை வளர்ப்பவை என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சம்சார வர்த்தங்கள் என்கிறதும் அத்தாலே' என்றது, மேலே கூறிய, பற்றுக்குக் காரணமான சிறிய பலன்களைக் கொடுக்கையாலே என்றபடி. (11)

## 323

இதுதான் ஔபாதிகம்[3].

என்பது சூத்திரம்.

---

[1] பல த்வாரா - பலனைக் கொடுக்கும் வழியாலே.

[2] அத்தாலே - சிறிய பலன்களைக் கொடுக்கும் வழியாலே.

[3] ஔபாதிகம் - காரணம் பற்றி வந்தது. 'இயற்கை அன்று' என்றபடி.

அவ :—'ஆனால், இவற்றிற்கு இது இயல்பான தன்மையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இதுதான் ஔபாதிகம்' என்றது, ஒரு காரணம் அடியாகச் சொல்லப்படுகிறது என்றவாறு. இதுதான் என்றது, சிறிய பலன்களைக் கொடுத்தலைச் சுட்டுகிறது. (12)

## 324

சேதனனுடைய ருசியாலே வருகையாலே.

என்பது சூத்திரம்.

அவ :—ஒரு காரணம் பற்றிவந்தது என மேலே கூறியதனை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சேதனனுடைய ருசியாலே வருகையாலே' என்றது, பகவானுடைய மந்திரங்கள் ஆகையாலே மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய சக்தியும் உண்டாயிருக்கச் செய்தே, சிறிய பலன்களைக் கொடுக்கக்கூடிய இந்தத் தன்மை, சரீரத்தின் வசப்பட்டிருக்கின்ற இவனுடைய சிறிய பலன்களிலே உள்ள ருசியாலே வருகையாலே என்றபடி.

செல்வத்தை விரும்புகிறவர்களுக்குக் கோபால மந்திரங்கள் முதலானவையும்,[1] புத்திரர்களை விரும்புகிறவர்களுக்கு இராம மந்திரங்கள் முதலானவையும், கல்வியை விரும்புகிறவர்களுக்கு ஹயக்கிரீவ மந்திரம் முதலானவைகளும், வெற்றியை விரும்புகிறவர்களுக்குச் சுதரிசன மந்திரம் நரசிம்ம மந்திரம் முதலானவைகளுமாய், இப்படி நியதியாகச் சிறிய பலன்களையே கொடுத்துப் போருகிற இத்தன்மைகள், மக்களுடைய ருசிக்குத் தகுதியாக 'இந்த இந்த மந்திரங்கள் இந்த இந்தப் பலன்களைக் கொடுக்கக் கடவன' என்று ஈச்வரன் ஒரு நியதியாகக் கல்பித்து வைத்தவை ஆகும். ஆகையாலே, அவற்றிற்கு அவை இயல்பான தன்மைகள் அல்ல; காரணம்பற்றி வந்தவை என்னலாமிறே என்றவாறு. (13)

---

1 'முதலானவை' என்றதனால் சந்தானகோபால மந்திரம், வராக மந்திரம், மச்சமூர்த்தி மந்திரம், கல்கி மந்திரம் என்பவற்றைக் கொள்க.

## 325

சிஷ்யன் என்பது[1] சாத்தியாந்தர நிவிருத்தியும், பலசாதன சுச்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநசூயையும் உடையவனே.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, 'தான் ஹிதோபதேசம் பண்ணும்போது' என்றது முதல் 'ஆசாரியத்வ பூர்த்தி இல்லை' என்றது இறுதியாக, ஆசாரியனுடைய சொரூபத்தை விளக்கி அருளிச்செய்து, [2] அதன்மேல் பிராசங்கிகமாக வந்த ஐயங்களுக்கும் விடை அருளிச்செய்தார் மேல். இனி, சிஷ்யனுடைய சொரூபத்தை விளக்கி அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சிஷ்யன் என்பது' என்றது, உபதேசத்தைக் கேட்கிற அளவைக்கொண்டு மேலெழுந்தவாரியாகச் சொல்லுகை அன்றிக்கே, [3] சிஷ்யன் என்று ஒருதலையாகச் சொல்லுவது என்றபடி. 'சாத்தியாந்தர நிவிருத்தியும்' என்றது, சிஷ்யனுகிற சொரூபத்திற்குத் தடைகளான செல்வமும் கைவல்யமுமாகிற மற்றைய பலன்களில் மறந்தும் ஆசைவையாதிருத்தல் என்றபடி. அன்றிக்கே, இந்த ஆசாரியனை ஒழிய, அடையத்தக்க வேறொரு பொருளை அறியேன் என்றிருக்கையாகவுமாம். 'பலசாதன சுச்ரூஷையும்' என்றது, [4] 'கல்வியானது ஆசாரியனுக்குச் செய்யும் தொண்டினாலே' என்கிறபடியே தான் செய்யும் தொண்டினால் ஆசாரியனை மகிழ்வித்து, அவனாலே ஞானோபதேசம் பெறுதல் தக்கதாகையாலே, ஆசாரியன், தனக்குக் கொடுக்கிற தத்துவ ஞானமாகிற பலன் சித்திப்பதற்குக் கருவியாக ஆசாரியனுக்குச்

---

[1] சாத்தியாந்தர நிவிருத்தி - மற்றைய பலன்களில் தொடர்பு அற்றிருத்தல். பலசாதநசுச்ரூஷை - பலத்திற்குச் சாதனமானவற்றைக் கேட்பதில் விருப்பம். ஆர்த்தி - துன்பம். ஆதரம் - விருப்பம். அநசூயை - பொறாமை இல்லாமை. 319ஆம் சூத்திரத்திலுள்ள 'நேரே' என்ற சொல்லை 'நேரே சிஷ்யன் என்பது' என்று இங்கும் கூட்டுக.

[2] 'அதன்மேல் பிராசங்கிகமாக' என்றது அதற்கு மேலே கூறிய நான்கு சூத்திரங்களை.

[3] 'என' என்பது போன்று 'என்பது' என்பதும் சிறப்புப் பொருளைக் காட்டும். அதனையே அருளிச்செய்கிறார். 'சிஷ்யன் என்று ஒரு தலையாகச் சொல்வது' என்று.

[4] 'குருசுஸ்ரூஷயா வித்யா' என்பது கஸ்யப சம்ஹிதை.

செய்யும் தொண்டு என்றபடி. அன்றிக்கே, சிஷ்யனுகிற தன்னுடைய சொரூபத்திற்குத் தகுதியான பலத்திலும் அதனைப் பெறுதற்குரிய சாதனத்திலும் உண்டான கேட்கவேண்டும் என்கிற இச்சையாகவுமாம். அப்படி அன்றிக்கே, ஆசாரியனுடைய முகமலர்ச்சியாகிற பலத்திற்குச் சாதனமான, அவனுக்குச் செய்யும் தொண்டு என்னவுமாம்.

'ஆர்த்தி'யாவது,[1] "இருள்தருமா ஞாலம்" என்கிறபடியே பிறந்த ஞானத்திற்கு விரோதியான இவ்வுலகத்தினின்றும் கடுகப் போகப் பெறுமையாலே உள்ள துக்கம். அன்றிக்கே, ஆசாரியனுடைய திருமேனியை அநுபவிக்கப் பெறுமையால் உளதாம் துக்கம் என்னலுமாம். 'ஆதரம்' ஆவது, மேலும் மேலும் அநுபவிக்கவேண்டும் என்னும் இச்சை பிறக்கும்படி ஆசாரியன் அருளிச்செய்கிற பகவானுடைய குணநுபவத்தில் மேன்மேலும் உண்டாகாநிற்கும் விருப்பம். அன்றிக்கே, ஆசாரியனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற் போலே அவனை அநுபவிக்கத் தக்க கைங்கரியங்களிலே மண்டி விழும்படியான விருப்பம் ஆகவுமாம்.

'அநசூயை'யாவது, ஆசாரியன், பகவானுடைய வைபவங்களையும் பாகவதர்களுடைய வைபவங்களையும் பரக்க விளக்கிப் பேசாநின்றால்[2] "பொறாமை இல்லாத உனக்குச் சொல்லுகிறேன்" என்னும்படி இவற்றில் பொறாமையற்று இருக்கை. அன்றிக்கே, ஆசாரியனுடைய உயர்வினையும் ஒரு சாலை மாணுக்கர்களுடைய உயர்வினையும் கண்டால் அவற்றில் பொறாமையற்றிருக்கை என்னவுமாம்.[3] 'அஸூயொப்ரஸவபூ:' என்கிற இதற்கு 'ஹிதம் சொன்னவனுடைய உத்கர்ஷமே யாயிற்றுப் பொறாதது' என்றிறே முன்னோர்கள் அருளிச்செய்தது. பகவான் விஷயத்தில் உட்படப் பொறாமைகொள்வானேயானுல், அவன் அடியார்கள் விஷயத்தில் சொல்லவேண்டுமோ?[4]

[1] திருவாய். 10. 6 : 1.

[2] 'ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே' என்பது, ஸ்ரீ கீதை, 9 : 1.

[3] ஆசாரியன் விஷயத்தில் பொறாமை உண்டாவதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அஸூயொப்ரஸவபூ:' என்று. இது தோத்திரரத்நம், 62. 'முன்னோர்கள்' என்றது நம்பிள்ளையை.

[4] 'இதம் துதே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே.' என்பது ஸ்ரீ கீதை, 9 : 1. இது பகவானிடத்தில் பொறாமை காட்டுவதற்கு மேற்கோள்.

"இரகசியமாகப் போற்றி வைக்கத் தக்க இந்த ஞானத்தை பொருமை அற்றிருக்கிற உனக்குச் சொல்லுகிறேன்" என்ருனிறே.

ஆக, இப்படியிருந்துள்ள நற்குணங்கள் நிறைந்தவனை யாயிற்று நேரே சிஷ்யன் என்கிறது. (14)

## 326

**மந்திரமும் தேவதையும் பலமும் பலாநுபந்திகளும்[1] பலசாதனமும் ஐஹிகபோகமும் எல்லாம் ஆசாரியனே என்று நினைக்கக் கடவன்.**

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறப்பட்ட இலக்கணத்தையுடையனை இத்தகைய சிஷ்யனுக்குத் தன் ஆசாரியன் விஷயத்தில் உண்டாக வேண்டிய எண்ணங்களை விதிக்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[2] மந்திரமும்—'மந்தாரம் த்ராயத இதிமந்த்ர:' என்கிறபடியே தியானம் பண்ணுகிறவர்களைக் காப்பாற்றுகிற திருமந்திரமும், தேவதையும்—அந்தத் திருமந்திரத்தில் சொல்லப்படுகிற பரம்பொருளும், பலமும்—அவனுடைய அருளால் கிடைக்கின்ற கைங்கரிய ரூபமான மகாபலமும், பல அநுபந்திகளும்—அதனோடு சேர்ந்தவைகளான, அவித்யை[3] முதலானவைகள் நீங்குதல் முன்னுக உண்டாகிற[4] தன்னுடைய சொரூபத்தின் தோற்றமும் சாலோக்கியம்[5] முதலானவைகளும் ஆகிற இவையும், பல சாதனமும்—அப்படிப்பட்ட பலன்களைக் கொடுக்கின்ற

---

[1] பலாநுபந்திகள் - பலத்தோடு தொடர்ந்து சம்பந்தப்பட்டிருப்பவைகள். பல சாதனம் - பலத்திற்குச் சாதனமாகவிருப்பது. ஐஹிக போகம் - இவ்வுலகவின்பங்கள்.

[2] மந்திரம் - தன்னை நினைப்பவர்களைக் காப்பாற்றுவது. இங்குத் திருவெட்டெழுத்தினைக் குறிக்கிருர்.

[3] 'முதலானவை' என்றதனுல் கர்மம், வாசனை, ருசி, பிரகிருதி சம்பந்தம் என்பனவற்றைக் கொள்க.

[4] தன்னுடைய சொரூபம் - ஆன்ம சொரூபம்.

[5] 'முதலானவை' என்றதனுல் சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்யம் என்னுமிவற்றைக் கொள்க. சாயுஜ்யம் - சமானமான இன்பத்தை யுடையனுதல்.

சாதனங்களும், ஐஹிகபோகமும் எல்லாம்—புத்திரர்கள் மனைவி வீடு நிலம் பசு சோறு முதலான அநுபவ ரூபமான இவ்வுலகத்தில் இனிய பொருள்களாகிற இவையெல்லாம், ஆசாரியனே என்று நினைக்கக் கடவன்—நமக்கு நம்முடைய ஆசாரியனே என்று நினைக்கக் கடவன் என்றவாறு. [1]'ஆசாரியனே மேலான தெய்வம், ஆசாரியனே மேலான சாதனம், ஆசாரியனே உயர்ந்த மந்திரம், ஆசாரியனே மேலான பயன், ஆசாரியனே விரும்பப் படுகின்ற பொருள், ஆசாரியனே மேலான செல்வம், இத்தகைய ஆசாரியன் யாதொரு காரணத்தாலே மந்திரத்தை உபதேசித் தாரோ அந்தக் காரணத்தால் அந்த ஆசாரியனே ஆசாரியர்கள் அனைவரினும் சிறந்தவன்' என்றும்,[2] 'இவ்வுலகவின்பம் மேலுலகவின்பம் ஆகிற எல்லாம் திருவெட்டெழுத்தினை உபதேசித்த ஆசாரியனே என்று இந்தவிதமாக எவர்கள் நினைக்க வில்லையோ அவர்கள் பெரியோர்களால் விடத்தக்கவர்கள்' என்றும் இப்படிச் சாஸ்திரங்களில் சொல்லுகையாலே 'நினைக்கக் கடவன்' என்று விதிக்கிறார். (15)

## 327

'மாதா பிதா யுவதய:' என்கிற சுலோகத்திலே இவ்வர்த்தத்தைப் பரமாசாரியரும்[3] அருளிச்செய்தார்.

என்பது சூத்திரம்.

---

1 குருரேவபரம்ப்ரஹ்ம குருரேவ பராகதி:
குருரேவ பராவித்யா குருரேவ பராயணம்
குருரேவ பர: காம: குருரேவ பரம்தனம்
யஸ்மாத் தது பதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:

என்பது, பிரமாணம்.

2 ஐஹிகாமுஷ்மிகம் ஸர்வம் ஸசாஷ்டாக்ஷரதோ குரு:
இத்யேவம் யே நமந்யந்தே த்யக்தவ்யாஸ்தே மநீஷிபி:

என்பது, பிரமாணம்.

3 பரமாசாரியர் - ஸ்ரீ ஆளவந்தார்.
மாதா பிதா யுவதய: தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதே: வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

என்பது, தோத்திரரத்நம். இதன் பொருளை இந்நூலின் தொடக்கத்தில் காண்க.

அவ :—இப்படி, தாம் அருளிச் செய்த இந்த அர்த்தத்தில் நம்புதலுக்கு உடலாக, இது பரமாசாரியருடைய வசனத்தாலும் சித்திக்கிறது என்று அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—''மாதா பிதா யுவதய: தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்'' என்று இவ்வுலக இன்பங்களையும், சொல்லப்படாத மற்றைய எல்லாம் என்ற பொருள்களைக் காட்டுகிற ''ஸர்வம்'' என்ற சொல்லைச் சேர்த்து அருளிச் செய்கையாலே, மந்திரம் தெய்வம் பலம் முதலானவைகளையும் கூறி, இத்தனையும் ஆழ்வார் திருவடிகளே என்று அருளிச் செய்கையாலே, அந்தச் சுலோகத்திலே இவ்வர்த்தத்தைப் பரமாசாரியரான ஆளவந்தாரும் அருளிச்செய்தார் என்றவாறு. (16)

## 328

இதற்கு அடி [1] உபகார ஸ்மிருதி.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி, எல்லாம் ஆசாரியனே என்று நினைப்பதற்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இதற்கு அடி உபகாரஸ்மிருதி' என்றது, இப்படி, 'நமக்கு எல்லாப் பொருள்களும் ஆசாரியனே' என்று நினைத்தற்குக் காரணம், பிறப்பு இறப்புகளிலே உழன்று கிடந்த தன்னை உபதேசம் முதலானவைகளாலே திருத்தி, நித்திய சூரிகளுடைய அநுபவத்திற்குத் தக்கவனும்படி செய்த உபகாரத்தை நினைக்கும் நினைவு என்றபடி. (17)

## 329

உபகாரஸ்மிருதிக்கு முதலடி ஆசாரியன் பக்கல் கிருதஜ்ஞதை; முடிந்த நிலம் ஈச்வரன் பக்கல் கிருதஜ்ஞதை.[2]

என்பது சூத்திரம்.

---

[1] உபகாரஸ்மிருதி - செய்ந்நன்றியறிதல்.

[2] கிருதஜ்ஞதை - நன்றி பாராட்டுதல்.

அவ :—இந்தச் செய்ந்நன்றியறிதலைச் சொல்லுகின்ற இவ்விடத்திலே முதல் நிலம் முடிந்த நிலங்களை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'உபகாரஸ்மிருதிக்கு முதல் அடி ஆசாரியன் பக்கல் கிருதஜ்ஞதை' என்றது, இந்தச் சேதனன் முத்துற நினைப்பது, அறிவின்மையைப் போக்குதல் முகத்தாலே தனக்கு அறியவேண்டிய அர்த்த விசேடங்கள் அனைத்தையும் அறிவித்துப் பகவானைக் கைப்படுத்தின ஆசாரியன் செய்த உபகாரத்தை ஆகையாலே 'உபகாரஸ்மிருதிக்கு முதல் அடி ஆசாரியன் பக்கல் கிருதஜ்ஞதை' என்கிறார். கிருதஜ்ஞதை, உபகாரஸ்மிருதி என்னும் இரண்டும் ஒருபொருட்சொற்கள். ஆசாரியனுடைய பெருமை நெஞ்சில் படப்பட, ஆசாரியன் பக்கல் தன்னைக் கொண்டுவந்து சேர்த்த இறைவன் செய்த செயல்களின் பரம்பரையைப் பின்னர் நினைக்கையாலே 'முடிந்த நிலம் ஈச்வரன்பக்கல் கிருதஜ்ஞதை என்கிறார்' என்றபடி.

இதனால், பகவத் விஷயத்தை அளித்த ஆசாரியன் செய்த உபகாரத்தை நினைக்க இழிந்தால் ஆசாரியனுடைய பெருமை நெஞ்சிலே ஊற்றிருந்தவாறே, 'இப்படி இருக்கிற ஆசாரியனை நாம் பெற்றது எம்பெருமானாலே அன்றோ?' என்று இறைவன் செய்த உபகாரத்தை நினைக்கும் நினைவிலே சென்று தலைக்கட்டும் என்றதாயிற்று. (18)

## 330

சிஷ்யனும் ஆசாரியனும் [1] அந்யோந்யம் ப்ரிய ஹிதங்களை நடத்தக்கடவர்கள்.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, இந்த நல்லாசிரியன் நன்மாணுக்கன் இவர்களுடைய பரிமாற்றம் இருக்கும்படியை அருளிச்செய்கிறார் மேல்.

வியாக் :—அந்யோந்யம் பிரிய ஹிதங்களை நடத்துகையாவது, சிஷ்யன் ஆசாரியனுக்குப் பிரியமானவற்றையும் நலமான

[1] அந்யோந்யம் - ஒருவர்க்கு ஒருவர். பிரியம் - முதலிலே அநுகூலமாக - இனிதாக இருப்பது. ஹிதம் - முதலில் இனிதாகத் தோற்றாது, பின் இனிதாக, அநுகூலமாக இருப்பது.

வற்றையும் நடத்துகையும், ஆசாரியன் சிஷ்யனுக்குப் பிரியமான வற்றையும் நலமானவற்றையும் நடத்துகையும் என்றவாறு.

இவை ஒருதலையாகச் செய்யப்படவேண்டியவை என்பது தோற்றுகைக்காக 'நடத்தக்கடவர்கள்' என்று அருளிச்செய் கிறார். (19)

## 331

**சிஷ்யன், தான் பிரியத்தை நடத்தக் கடவன்; ஈச்வரனைக்கொண்டு ஹிதத்தை நடத் தக் கடவன். ஆசாரியன் மாறுடி நடத்தக் கடவன்.[1]**

என்பது சூத்திரம்.

அவ :—இருவரும் 'இரண்டனையும் ஒருவருக்கு ஒருவர் நடத் தும் முறை என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சிஷ்யன், தான் பிரியத்தை நடத்தக் கடவன்' என்றது, சிஷ்யன் ஆசாரியனுக்கு இரண்டனையும் நடத்துமிடத் தில், தன்னுடைய சிஷ்யனும் தன்மைக்குத் தகுதியாக, 'ஆசாரிய னுடைய முகமலர்த்தியே நமக்குப் பேறு' என்று நினைத்துத் தன்னுடைய தொண்டு முதலியவைகளாலே தான் ஆசாரியனுக்கு எல்லாக் காலங்களிலும் விருப்பமானவற்றையே நடத்திக் கொண்டுபோரக் கடவன் என்றபடி. 'ஈச்வரனைக் கொண்டு ஹிதத்தை நடத்தக் கடவன்' என்றது, மங்களாசாசனத்தில் நோக்குள்ளவனுகையாலே, இவ்வுலக இயற்கையால் திருவுள்ளத் தில் ஒரு கலக்கம் வாராதொழியவேண்டும் என்றும், அப்படி ஏதேனும் ஒரு கலக்கம் வந்த காலத்தில் அதனைப் போக்கித் தந்தருள வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டு இறைவனைக் கொண்டு நலத்தை நடத்தக்கடவன் என்றபடி.

'ஆசாரியன் மாறுடி நடத்தக் கடவன்' என்றது, சிஷ்ய னுடைய நலத்திலே நோக்குள்ளவனுகையாலே, இவனுடைய

---

[1] 'ஆசாரியன் மாறுடி நடத்தக்கடவன்' என்றது, ஆசாரியன், தான் சிஷ்யனுக்கு ஹிதத்தை நடத்தக்கடவன், 'ஈச்வரனைக் கொண்டு பிரியத்தை நடத்தக்கடவன்' என்று மாற்றிக்கோடல் வேண்டும் என்றபடி.

சொரூபத்திற்குக் கேடுவாராதபடி, விடவேண்டியவற்றை விடுதலிலும் பற்ற வேண்டியவற்றைப் பற்றுதலிலும் [1] ஸ்காலித்தியம் பிறவாமல் நியமித்து, எல்லாக் காலங்களிலும் நல்வழி நடத்திக் கொண்டுபோருகையாகிற நலத்தைத் தான் நடத்தி, இவ்வுலகத்தில் வறுமையாலே இவன் மிகவும் கலங்குமளவில் ‘இருந்த நாளைக்கு இவன் கலங்காமல் இவையும் அவனுக்கு உண்டாம்படி திருவுள்ளம் பற்றியருள வேண்டும்’ என்று வேண்டிக்கொண்டு, ஈச்வரனைக்கொண்டு பிரியத்தை நடத்தக் கடவன் என்றபடி. (20)

## 332

சிஷ்யன் உகப்பிலே ஊன்றிப்போரும்;
ஆசாரியன் உஜ்ஜீவனத்திலே ஊன்றிப்போரும்.[2]

என்பது சூத்திரம்.

**அவ** :—‘இப்படிச் செய்து போருமிடத்தில் இருவருக்கும் இரண்டும் ஒத்தனவாக இருக்குமோ?’ என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—‘சிஷ்யன் உகப்பிலே ஊன்றிப்போரும்’ என்றது, சிஷ்யன் அடியவனாகையாலே தலைவனான ஆசாரியனுக்கு விருப்பமானவற்றிலே ஊற்றமாய்ப்போரும் என்றபடி. ‘ஆசாரியன் உஜ்ஜீவனத்திலே ஊன்றிப்போரும்’ என்றது, ஆசாரியன் பேரருளாளனாகையாலே தன்னுடைய சிஷ்யனை இவன் பிறவிப் பெருங்கடலைக் கடந்தவனாய் உஜ்ஜீவிக்க வேண்டும் என்பதிலே ஊற்றமாய்ப்போரும் என்றபடி.

ஆகையால் மாணாக்கனுக்கு இனிமையைச் செய்தலும், ஆசாரியனுக்கு நன்மையைச் செய்தலும் முக்கியமென்பது கருத்து. (21)

---

[1] ஸ்காலித்தியம் - பற்றவேண்டியவற்றை விடுதலும், விடவேண்டியவற்றைப் பற்றுதலும். அதாவது, மாறுபாடு.

[2] ‘போரும்’ என்பது, ‘போதரும்’ என்ற சொல்லின் சிதைவு. உகப்பு - பிரியம். உஜ்ஜீவனம் - ஹிதம்; நலம்.

## 333

ஆகையால், சிஷ்யன் ஆசாரியனுடைய [1]தோஷத்துக்கு இலக்காகை ஒழிய, ரோஷத்துக்கு இலக்கு ஆகைக்கு அவகாசம் இல்லை.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறியவற்றால் போதருமதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[2] 'ஆகையால் சிஷ்யன்.........அவகாசம் இல்லை' என்றது, சிஷ்யன் ஆசாரியனுடைய பிரியத்தைச் செய்தலையும், ஆசாரியன் சிஷ்யனுடைய நலத்தைச் செய்தலையும் முக்கியமாகக் கொண்டு நடத்திக்கொண்டு போருகையாலே, சிஷ்யனை இவன் ஆசாரியனுடைய அன்பிற்கு இலக்காகப் போருகை ஒழிய, விருப்பமில்லாதனவற்றைச் செய்தல் முதலியவைகளாலே சீற்றத்திற்கு இலக்கு ஆகைக்கு இடந்தான் முதலிலே இல்லை என்றபடி.

'ஆகையால்' என்றது, 'உகப்பிலே ஊன்றிப்போரும்' என்று மேலே கூறியது ஒன்றனையும் அநுவதிக்கின்றது என்னவுமாம். (22)

## 334

[3]நிக்கிரகத்துக்குப் பாத்திரமாம்போது அது ஹிதரூபமாகையாலே இருவர்க்கும் உபாதேயம்.

என்பது சூத்திரம்.

---

1 'ஹர்ஷத்துக்கு' என்றும் பாடம். 'தோஷம்' என்ற பாடமே சிறக்கும். எதுகை நயம் காண்க. தோஷம் - சந்தோஷம்; மகிழ்ச்சி.

2 'ஆகையால்' என்பது, சிஷ்யன் ஆசாரியனுடைய உகப்பிலும், ஆசாரியன் சிஷ்யனுடைய ஹிதத்திலும் ஊன்றிப்போகின்ற அக்காரணத்தாலே என்று இரண்டனையும் அநுவதிக்கிறதாகத் திருவுள்ளம் பற்றி 'ஆகையால்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்தார்மேல். இங்கு, அவ்விரண்டனுள் ஒன்றனை மாத்திரம் அநுவதிக்கிறது என்று கோடலுமாம் என்கிறார் 'ஆகையால் என்றது' என்று தொடங்கி.

3 நிக்கிரகம் - சீற்றம். உபாதேயம் - கொள்ளத்தக்கது. 'சிஷ்யன் நிக்கிரகத்திற்குப் பாத்திரமாம் போது' என்று சிஷ்யன் என்ற சொல்லைக் கூட்டிக்கொள்க. 'இருவர்க்கும்' என்றது, அதிகாரத்தால், ஈண்டுச் சிஷ்யனையும் ஆசாரியனையும் காட்டுகிறது.

அவ :—'சரீரத்தோடே கூடியிருக்கிறவனுக்கு எப்பொழுதும் ஒருபடிப்பட்டிருக்க முடியுமோ? கலக்கங்கள் உண்டாகாவோ? அவை அடியாகக் கோபத்திற்குப் பாத்திரமாம்போது, அந்தச் சீற்றம் இருவர்க்கும் எங்ஙனே ஆகக்கடவது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' நிக்கிரகத்துக்குப் பாத்திரமாம்போது ' என்றது, விருப்பமில்லாதனவற்றைச் செய்தல் காரணமாக ஆசாரியனுடைய சீற்றத்திற்கு இலக்காகும் காலத்தில் என்றபடி. ' அது ஹிதரூபமாகையாலே இருவர்க்கும் உபாதேயம் ' என்றது, அந்தச் சீற்றம், சிஷ்யனை இவனை அல்வழியில் செல்லாதபடி நியமித்து, நல்வழியிலே நடத்துகைக்கு உறுப்பாய்க்கொண்டு, நலத்தின் வடிவாய் இருப்பதொன்றாகையாலே, ' இப்படி நம்மைச் சீறுவதே ' என்று இவன் நெஞ்சுளைதல், ' இவனை இப்படிச் சீறவேண்டுகிறதே ' என்று ஆசாரியன் நெஞ்சுளைதல் செய்கையன்றிக்கே, சீற்றத்திற்கு இலக்கான இவனுக்கும் சீற்றத்தைச் செய்த ஆசாரியனுக்கும் அங்கீகரிக்கத் தக்கதாம் என்றபடி. (23)

## 335

சிஷ்யனுக்கு [1]நிக்கிரக காரணம் தியாஜ்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—'சீற்றம் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகில், சீற்றத்திற்குக் காரணமான குற்றங்களும் செய்யத்தக்கன ஆகாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' சிஷ்யனுக்கு நிக்கிரக காரணம் தியாஜ்யம் ' என்றது, சீற்றம் ஏற்றுக்கொள்ளத்தக்கது என்று நினைத்து, மீளவும் சீற்றத்திற்குக் காரணமான குற்றத்தைச் செய்யலாகாது. யாதொரு காரணத்தாலே நீரிலே நெருப்பு எழுமாறு போன்று, தன் திறத்தில் குளிர்ந்து தெளிந்திருக்கிற ஆசாரியனுடைய திருவுள்ளத்தில் சீற்றம் எழுந்தது, அந்தக் காரணத்தை மறுவலிடாதவாறு விடவேண்டும் என்றபடி. (24)

---

[1] நிக்கிரக காரணம் - சீற்றத்திற்குக் காரணமான குற்றங்கள். சீற்றத்திற்குக் காரணமான குற்றங்களைச் செய்யலாகாது என்றவாறு.

## 336

நிக்கிரகந்தான், [1]பகவன் நிக்கிரகம் போலே பிராப்பியாந்தர்க்கதம்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறிய ஆசாரியனுக்கு உண்டாகும் சீற்றம் நன்மைபயப்பது என்று விதிக்கப்பட்டதாய் ஏற்றுக்கொள்ளப் படும் தன்மையதாய் இருத்தலன்றிக்கே, இவனுக்குப் பெறத் தக்க பேற்றின் வரிசையிலே சேர்ந்ததாகவிருக்கும் என்னு மதனைத் [2] திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—‘நிக்கிரகந்தான் பகவன் நிக்கிரகம் போலே பிராப்பிய அந்தர்க்கதம்’ என்றது, தன் திறத்தில் தன் ஆசாரி யன் நலத்தின்பொருட்டுச் செய்யும் சீற்றந்தான், தன் தடை நீங்குதற்கு உறுப்பு ஆகையாலே, [3]‘கொண்ட சீற்றம் ஒன்று உண்டு’, [4]‘செய்யேல் தீவினை’ என்பன போன்றவைகளால் சொல்லப்படுகிற இறைவனுல் கொள்ளப்படும் சீற்றத்தினைப் போன்று புருஷார்த்தங்களின் வரிசையிலே சேரும் என்றபடி.

[5]“ஆசாரியன் அர்த்த காமங்களில் நசை அற்றவன் ஆகை யாலே அவை ஏதுவாகப் பொறுக்கவும் வெறுக்கவும் பிராப்தி இல்லை; இனி, இவனுடைய ஹித ரூபமாக வெறுத்தானுகில் அதுவும் பிராப்பியாந்தர்க்கதமாகக் கடவது’ என்று இதனை மாணிக்கமாலையிலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே. (25)

---

[1] பகவன் நிக்கிரஹம் - இறைவன் கொள்ளும் சீற்றம். பிராப்பி யாந்தர்க்கதம் - புருஷார்த்தத்திலே - பேற்றிலே சேர்ந்ததாம்.

[2] ‘பகவந் நிக்கிரஹம் போலே’ என்றது திருஷ்டாந்தம்.

[3] பெரிய திருமொழி, 5. 8 : 3. [4] திருவாய். 2. 9 : 3.

[5] சூத்திரப்பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிருர் ‘ஆசாரியன்’ என்று தொடங்கி. மாணிக்கமாலை என்பது ஒரு நூல். ஆச்சான் பிள்ளை - பெரியவாச்சான் பிள்ளை.

## 337

ஆசாரியன், சிஷ்யனுடைய [1]சொரூபத்தைப் பேணக்கடவன்; சிஷ்யன், ஆசாரியனுடைய தேகத்தைப் பேணக்கடவன்.

என்பது சூத்திரம்.

**அவ** :—மேலே இருவர்க்கும் ஒருதலையாகச் செய்யத் தக்கவை என்று சொன்ன நலத்தைச் செய்தல், பிரியத்தைச் செய்தல் என்னும் இவற்றினுடைய தன்மையை விளக்கமாக அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—'ஆசாரியன் சிஷ்யனுடைய சொரூபத்தைப் பேணக்கடவன்' என்றது, உஜ்ஜீவனத்திலே நோக்குள்ளவனை ஆசாரியன், உஜ்ஜீவிக்கவேண்டும் என்று எண்ணிவந்து தன்னை அடைந்து, உகப்பிலே ஊன்றிப்போருகின்ற சிஷ்யனுடைய சொரூபத்தை, மறந்தாகிலும் ஒரு பழுது வாராதவாறு ஒன்றிலேயே கருத்து ஊன்றினவனாய்க்கொண்டு உபதேசம் [1] முதலியவைகளாலே நோக்கிக்கொண்டு போரக்கடவன் என்றபடி. [2] 'சிஷ்யன் ஆசாரியனுடைய தேகத்தைப் பேணக்கடவன்' என்றது, ஆசாரியனுடைய பிரியத்திலே நோக்குள்ளவனை சிஷ்யன், தன்னுடைய உஜ்ஜீவனத்தில் நோக்குள்ளவனாய்த் தன்னுடைய சொரூபத்தைப் பாதுகாத்தலையே செய்துகொண்டு போருகிற ஆசாரியனுடைய திருமேனியை, தக்கனவான கைங்கரியங்களாலே எல்லாக் காலங்களிலும் அதிலே கருத்து ஊன்றினவனாய் நோக்கிக்கொண்டு போரக்கடவன் என்றபடி. (26)

---

1 சொரூபத்தை - ஆன்மாவினை.

'ஆசாரியன்சிச்சன் ஆருயிரைப் பேணுமவன்
தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை—நேசமுடன்
நோக்கு மவனென்னும் நுண்ணறிவைக் கேட்டுவைத்தும்
ஆர்க்குமந்நேர் நிற்கையரி தாம்.'

என்பது உபதேசரத்தினமாலை.

2 நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகிய பெருமாள் சீயர் சரிதம் இங்கு நினைத்தல் தகும்.

## 338

[1] இரண்டும் இருவர்க்கும் சொரூபமுமாய்ப் பகவத் கைங்கரியமுமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி இருவரும் இரண்டையும் பேணினல், இரண்டுதலைக்கும் பலிக்குமவற்றை அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'இரண்டும் இருவர்க்கும் சொரூபமுமாய்' என்றது, ஆசாரியனுல் சிஷ்யனுடைய சொரூபத்தைப் பேணுகையும், சிஷ்யனுல் ஆசாரியனுடைய சரீரத்தைப் பேணுகையும் அவர் அவர்களுக்கேயுரிய தன்மைகள் ஆகையாலே, இரண்டும் இருவர்க்கும் சொரூபமுமாய் என்றபடி. 'பகவத் கைங்கரியமுமாய் இருக்கும்' என்றது, [2] 'நான் இனியன்' என்கிறபடியே [3] அவனுக்கு இனியனுகைக்குத் தகுதியுள்ளவனுகவிருந்தும், அநாதிகாலம் அப்படி உபயோகப்படப் பெருமல் கிடந்த [4] இவன் சொரூபம் அப்படிப்பட்ட உபயோகத்திற்குத்தக்கதாம்படி திருந்துமாறு பேணிக்கொண்டு போருகையும், [5] 'நன்கென்னுடலம் கைவிடான்' என்கிறபடியே அவனுக்கு விட்டுப்பிடிக்கச் சகியாதபடி இனியதாக இருக்கிற ஆசாரியனுடைய திருமேனியைப் பேணிக்கொண்டு போருகையும், பகவானுக்கு மிகவும் உகப்பு ஆகையாலே, இவைதாம், [6] இவற்றின் இயல்பால் பகவானுடைய கைங்கரியமுமாகவிருச்கும் என்றபடி. (27)

---

[1] இரண்டும் - உயிரைப் பேணுதலும் உடலைப் பேணுதலுமாகிற இரண்டும். சொரூபம் - தன்மை.

[2] 'அஹமந்நம்' என்பது, உபநிடதம்.

[3] அவனுக்கு - இறைவனுக்கு.

[4] இவன் சொரூபம் - சிஷ்யனுடைய தன்மை.

[5] திருவாய். 10. 7 : 4.

[6] மங்களாசாசனத்திற்காக ஆசாரியன் சிஷ்யனைத் திருத்துகையும், ஆசாரியன் முகமலர்த்திக்காகச் சிஷ்யன் அவன் சரீரத்தைப்பேணுகையும் ஆகையாலே 'இவற்றின் இயல்பால்' என்கிருர்.

## 339

**ஆசாரியனுக்கு தேஹரக்ஷணம் சொரூப ஹாநி[1]; சிஷ்யனுக்கு ஆத்மரக்ஷணம் சொரூப ஹாநி.**

என்பது சூத்திரம்.

**அவ:**—'இப்படி வரையறை செய்ய வேண்டுமோ? ஆசாரியன் தன்னுடைய சரீரத்தைத் தான் பாதுகாத்துக்கொண்டும், சிஷ்யன் தன்னுடைய சொரூபத்தைத் தான் பாதுகாத்துக் கொண்டும் போந்தால் வருமது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'ஆசாரியனுக்கு தேஹரக்ஷணம் சொரூப ஹாநி' என்றது, ஆசாரியன் தன்னுடைய சரீரத்தைப் பாதுகாப்பதில் விருப்பமில்லாதவனாக இருக்க, சிஷ்யனானவன் 'இதுவே நமக்குச் சொரூபம்' என்று இவனுடைய சரீரத்தைப் பேணிக்கொண்டு போருகை ஒழிய, தன்னுடைய சரீரத்தைத் தான் பாதுகாத்தலாகிற இது, ஆசாரியனுக்கு ஆசாரியனும் தன்மைக்குக் கேடு என்றபடி. 'சிஷ்யனுக்கு ஆத்ம ரக்ஷணம் சொரூபஹாநி' என்றது, சிஷ்யனாகிற தான், ஆசாரியன் பக்கல் தன் பாரத்தை எல்லாம் வைத்த பின்பு, [2]தன் சொரூபத்தை அவன் பேணிக்கொண்டு போகக் கண்டிருக்கை ஒழிய, தான் தன் ஆன்மாவைப் பாதுகாத்தலாகிற இது சிஷ்யனுக்குச் சிஷ்யனும் தன்மைக்குக் கேடு ஆம் என்றபடி.

ஆகையால், சிஷ்யன் மறந்தும் தன் சொரூபத்தைத் தான் பாதுகாத்தலும், ஆசாரியன் மறந்தும் தன் சரீரத்தைத் தான் பாதுகாத்தலும் செய்யத்தக்கவையல்ல என்றாராயிற்று. (28)

---

[1] சொரூப ஹாநி - அவன் தன்மைக்குக்கேடு. இவன் தன்மைக்குக் கேடு.

[2] தன் சொரூபத்தை - தன் உயிரை.

## 340

ஆசாரியன் ஆத்ம ரக்ஷணம் பண்ணுமிடத்தில் அகங்காரம்[1] விரோதி; சிஷ்யன் தேக ரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம் விரோதி.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, ஆசாரியனும் சிஷ்யனும் தத்தமக்கு வரையறுக்கப்பட்டவைகளான ஆன்மாவைப் பாதுகாத்தல், சரீரத்தைப் பாதுகாத்தல் என்னுமிவற்றைச் செய்யுமிடத்தில் அவசியம் நீக்கத் தக்கவைகளான விரோதிகளை அருளிச்செய்கிறுர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'ஆசாரியன் ஆத்ம ரக்ஷணம் பண்ணுமிடத்தில் அகங்காரம் விரோதி' என்றது, சிஷ்யனுடைய நலத்திலே நோக்குடைய ஆசாரியன், தன்னுடைய உபதேசம் முதலானவைகளாலே சிஷ்யனுடைய ஆன்மாவைக் காப்பாற்றுமிடத்தில் 'நான் பாதுகாத்துக்கொண்டு போகிறேன்' என்னும் அகங்காரம், தன் ஆசிரியனுக்குப் பரதந்திரப்பட்டிருத்தலாகிற தன் அதிகாரத்திற்கு விரோதியாம் என்றபடி. [2]'சிஷ்யன் தேக ரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம் விரோதி' என்றது, ஆசாரியனுடைய பிரியத்தையே செய்து போருகிற சிஷ்யன், பொருள் முதலியவற்ருல் தன் ஆசாரியனுடைய சரீரத்தைப் பாதுகாக்குமிடத்தில் 'என்னுடைய பொருள்களாலும் உறுப்புக்களாலும் இப்படிப் பாதுகாத்துக்கொண்டு போருகிறேன்' என்கிற மமகாரம், 'தன் சரீரம் செல்வம் உயிர் முதலானவை எல்லாம் ஆசாரியனுக்கு உரியவை' என்று இருக்கவேண்டியதன் அதிகாரத்திற்கு விரோதியாம் என்றபடி. (29)

---

[1] அகங்காரம் - கர்த்தாவாக நான் செய்கிறேன் என்று நினைக்கும் நினைவு. விரோதி - குற்றம். மமகாரம் - என்னுடைய பொருளைக் கொண்டு காப்பாற்றுகிறேன் என்று நினைக்கும் நினைவு.

[2] இங்கு 313, 317ஆம் சூத்திரங்களையும் அவற்றின் வியாக்கியானங்களையும் பார்க்க.

## 341

**ஆசாரியன் தன்னுடைய தேக ரக்ஷணம்[1] தன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்; சிஷ்யன் ஸ்வதேக ரக்ஷணம் ஆசாரியன் வஸ்து வைக்கொண்டு பண்ணக்கடவன்.**

என்பது சூத்திரம்.

**அவ:**—ஆசாரியனுக்கும் சிஷ்யனுக்கும் தங்களுடைய சரீரங்களைப் பாதுகாத்தல் செய்யும் நிலையில் உண்டாகவேண்டிய நினைவு விசேடங்களை வகுத்து அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'ஆசாரியன் தன்னுடைய தேக ரக்ஷணம் தன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்' என்றது, [2]'நல்லாசாரியனுக்கு ஒருவன் தன் உடலையும் உயிரையும் பொருளையும் தரக்கடவன்' என்கிறபடியே சிஷ்யனுடைய எல்லாப் பொருள்களும் அடியிலே ஆசாரியனுக்குக் கொடுக்கப்பட்டவை ஆகையாலே, தன் சரீரத்தைப் பாதுகாத்தலுக்கு உறுப்பாகச் சிஷ்யன் அவ்வக்காலங்களுக்குத் தகுதியாகக் கொடுக்கின்றவற்றைச் சிஷ்யனுடைமை என்ற எண்ணம் இல்லாமல், தன்னுடைமை என்றே வாங்கி உபயோகித்துக்கொள்ளக்கடவன் என்றபடி. 'சிஷ்யன் ஸ்வதேக ரக்ஷணம் ஆசாரியன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்' என்றது, தனக்கு என்று ஓர் உடைமை வைத்துக்கொள்ளாமல் எல்லாப் பொருள்களையும் ஆசாரியனுக்கே உரிமையாக்கிவிட்டமையால், தன் சரீரத்தைப் பாதுகாத்தலுக்கு உறுப்பாக உபயோகப்படுத்திக்கொள்ளுமவற்றை 'ஆசாரியன் உடைமை இவை' என்று நினைத்து உபயோகப் படுத்திக்கொள்ளக்கடவன் என்றபடி. (30)

---

[1] ஸ்வதேக ரக்ஷணம் - தன் தேகத்தைப் பாதுகாத்தல். வஸ்து - பொருள். 'வாங்கி' என்னாமல் 'கொண்டு' என்றதன் நயத்தை நோக்குக.

[2] 'ஶரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்' என்பது பிரமாணம்.

## 342

ஆசாரியன், சிஷ்யன் வஸ்துவைக் கொள்ளக்கடவன் அல்லன்; சிஷ்யன், தன் வஸ்துவைக் கொடுக்கக்கடவன் அல்லன்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆசாரியனுடைய சரீரத்தைப் பாதுகாப்பதில் வந்தால் சிஷ்யன் 'தனக்கு உள்ளனவெல்லாம் அங்குத்தை உடைமை' என்னும் நினைவாலே கொடுக்கையும், ஆசாரியனும் அத்தகைய பொருள்களை வாங்குகையும் ஒழிய, 'என்னுடைமை' என்னும் செருக்கினாலே கொடுக்கப்பட்ட சிஷ்யனுடைய பொருளை அவனும் கொடுக்கத்தக்கவன் அல்லன், இவனும் வாங்கத்தக்கவன் அல்லன் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆசாரியன் சிஷ்யன் வஸ்துவைக் கொள்ளக் கடவன் அல்லன்' என்றது, சிஷ்யன் 'என்னுடைமை' என்று அபிமானித்திருக்கும் பொருளை மறந்தும் ஆசாரியன் அங்கீகரிக்கக்கடவன் அல்லன் என்றபடி. 'சிஷ்யன் தன் வஸ்துவைக் கொடுக்கக்கடவன் அல்லன்' என்றது, 'தனக்கு உரியவை' என்று அபிமானித்திருக்கும் பொருள்களை, 'அகங்கார மமகாரங்களின் சம்பந்தமுள்ள பொருள் விஷம்' என்று வெருவியிருக்கும் ஆசாரியனுக்கு, அப்பொருளை விஷத்தை இடுமாறு போலே கொடுக்கக்கடவன் அல்லன் என்றபடி. (31)

## 343

கொள்ளில் மிடியனும்[1]; கொடுக்கில் கள்ளனும்.

என்பது சூத்திரம்.

அவ :—'அப்படிக் கொள்ளுதலையும் கொடுத்தலையும் செய்தால் வருவன யாவை?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'கொள்ளில் மிடியனும்' என்றது, சிஷ்யன் 'என்னது' என்றிருக்கும் பொருளை ஆசையால் ஏற்றுக்கொள்

---

[1] மிடியன் - வறியவன்; தரித்திரன்.

ளில், 'இறைவன் எல்லாப் பாரத்திற்கும் தலைவனுகைப் போருகை யாலே நமக்கு என்ன குறை உண்டு?' என்றிருத்தலால் ஒரு பொருளாலும் குறைவில்லாத தான், சரீர வாழ்க்கையை நடத்து வதற்குங்கூடப் பொருள் இல்லாத வறியனும் என்றபடி. 'கொடுக்கில் கள்ளனும்' என்றது, 'என்னது' என்று நினைத்து ஒன்றை ஆசாரியனுக்குக் கொடுக்கில் [1] "தன் உடலையும் பொரு ளையும் உயிரையும் நல்லாசிரியனுக்குக் கொடுக்கக்கடவன்" என் கிறபடியே அடியிலே கொடுக்கப்பட்டவை ஆகையாலே, ஆசா ரியன் உடைமையாக இருக்கிற அவற்றைத் 'தன்னுடைமை' என்று நினைக்கையாலே, ஆசாரியனுடைய பொருளைக் களவாடிய வன் ஆவான் என்றபடி. (32)

## 344

கொள் கொடை உண்டாளுல் சம்பந்தம்[2] குலையும்.

என்பது சூத்திரம்.

அவ:—மேலே கூறிய அளவே அன்று; சம்பந்தத்திற்குக் கேடும் வரும் என்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'கொள் கொடை உண்டாளுல் சம்பந்தம் குலையும்' என்றது, சிஷ்யனும் ஆசாரியனும் ஆகிற சம்பந்தம் உண்டாளுல், அடியவனுன சிஷ்யன் [3] "உடலையும் பொருளையும் உயிரையும் நல்லாசிரியனுக்குக் கொடுக்கக்கடவன்" என்கிற படியே 'எல்லாப் பொருள்களும் அங்குத்தையது' என்னும் நினைவாலே கொடுக்கையும், அப்படிக் கொடுத்தவற்றைச் சேஷி யான ஆசாரியன் அங்கீகரிக்கையும் முறையாகவிருக்க, இவன் 'தன்னது' என்று அபிமானித்தவற்றை ஆசாரியன் ஏற்றுக் கொள்ளுகையும், இவன் 'என்னது' என்று அபிமானித்தது ஒன்றை ஆசாரியனுக்குக் கொடுக்கையும் ஆகிற முறை கேடான கொள்ளுதலும், கொடுத்தலும் உண்டான போது சிஷ்யனும் ஆசாரியனுமாகிற சம்பந்தம் குலைந்துவிடும் என்றபடி. (33)

[1] 'ஶரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்' என்பது பிரமாணம்.

[2] சம்பந்தம் - குரு சிஷ்ய சம்பந்தம்.

[3] இப்பொருளைக் கொண்ட சுலோகத்தை மேலே காண்க.

## 345

இவன் மிடியன்[1] ஆகையாலே கொடான்;
அவன் பூர்ணன் ஆகையாலே கொள்ளான்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி வறுமையும் களவும் ஆகிற இவை வருவதும், சம்பந்தம் குலைவதும், கொள்ளுதலும் கொடுத்தலும் உண்டாகி லிறே; அவற்றை அவர்கள் செய்யார்கள் என்னுமிடத்தைக் காரணத்தோடு அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவன் மிடியன் ஆகையாலே கொடான்' என்றது, சிஷ்யனானவன் 'எல்லாப் பொருள்களும் ஆசாரியன் உடைமையாகும்; நம்மது என்று கொடுக்கலாவது ஒன்றும் இல்லை' என்றிருக்கும் வறியன் ஆகையாலே, 'நாம் அங்குத் தைக்கு ஒன்றைக் கொடுக்கிறோம்' என்று கொடான் என்றபடி. 'அவன் பூர்ணன் ஆகையாலே கொள்ளான்' என்றது, ஆசாரி யனானவன், இறைவன் எல்லாப் பாரங்களையும் தாங்கினவனாய் நடத்திக்கொண்டு போருகையாலே 'நமக்கு இனி என்ன குறை உண்டு?' என்றிருக்கும் பரிபூர்ணனாயிருக்கையாலே இவன் 'என்னுடைமை' என்று அபிமானித்ததனாலே குற்றத்தை யடைந்த பொருள்களுள் ஒன்றையும் அங்கீகரியான் என்றபடி. (34)

## 346

அவனுக்குப் பூர்த்தியாலே சொரூபம்[2]
ஜீவித்தது; இவனுக்கு மிடியாலே சொரூபம்
ஜீவித்தது.

என்பது சூத்திரம்.

அவ : இந்த நிறைவு, வறுமை என்னுமிவற்றால் இருவர்க் கும் பலித்தவற்றை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் : 'அவனுக்குப் பூர்த்தியாலே சொரூபம் ஜீவித் தது' என்றது, ஆசாரியனுக்கு, சிஷ்யன் 'என்னுடையது' என்று நினைத்தலால் குற்றம் அடைந்த பொருள்களுள் ஒன்றை

[1] மிடியன் - தரித்திரன். பூர்ணன் - எல்லாம் நிறைந்தவன்.

[2] சொரூபம் - ஆசாரியனாகிற தன்மை. இவனுக்கு - சிஷ்யனுக்கு. சொரூபம் - சிஷ்யனாகிற சொரூபம். ஜீவித்தது - நிலைத்தது.

யும் கொள்ளாமைக்கு உடலான நிறைவாலே, ஆசாரியனும் தன்மையாகிற சொரூபம் நிலை பெற்றது என்றபடி. 'இவனுக்கு மிடியாலே சொரூபம் ஜீவித்தது' என்றது, சிஷ்யனை இவனுக்குத் 'தன்னுடைமை' என்ற நினைவாலே ஒன்றையும் கொடுப்பதற்குத் தகுதியில்லாத, 'எல்லாம் ஆசாரியன் உடைமை' என்று நினைத்தலால் உண்டான வறுமையாலே, சிஷ்யனும் தன்மையாகிற சொரூபம் நிலை பெற்றது என்றபடி. (35)

## 347

**'ஆனால், சிஷ்யன் ஆசாரியனுக்குப் பண்ணும் உபகாரம் ஒன்றும் இல்லையோ?' என்னில்,**

**என்பது சூத்திரம்.**

**அவ:—இனி,** சிஷ்யன், ஆசாரியனுக்குப் பண்ணும் உபகாரம் 'இன்னது' என்று அருளிச்செய்வதாக, அது சம்பந்தமான வினவினை அநுவதிக்கிறார்[1] இச்சூத்திரத்தால்.

வியாக்:—'ஆனால் சிஷ்யன் ஆசாரியனுக்குப் பண்ணும் உபகாரம் ஒன்றும் இல்லையோ?' என்னில் என்றது, 'இப்படிக் கொள்ளுவதற்கும் கொடுப்பதற்கும் தகுதியில்லையேயாகிலும், செய்ந்நன்றியறிதலையுடைய சிஷ்யன், மிகப் பெரிய உபகாரத்தைச் செய்தவனான ஆசாரியனுக்குப் பண்ணும் உபகாரம் ஒன்றும் இல்லையோ? என்னில்' என்றபடி. (36)

## 348

**ஆசாரியன் நினைவாலே உண்டு.**

**என்பது சூத்திரம்.**

**அவ:—அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.**

**வியாக்:**—'ஆசாரியன் நினைவாலே உண்டு' என்றது, சொரூப ஞானத்தையுடைய சிஷ்யன் நினைவாலே ஒருக்காலும் ஒன்றும் இல்லை; தன் உபதேசத்தால் சிஷ்யனுக்கு உண்டான ஞானம் முதலானவற்றைக் கண்டு மகிழ்ச்சி கொள்ளுகின்றவனை ஆசாரியன் நினைவாலே உண்டு என்றபடி. (37)

---

[1] 'அநுவதித்தல்' என்றது. இங்கு, 'ஒருவன் கூறியதைத் தான் எடுத்துச் சொல்லுதல்.

## 349

**அதாவது ஞான வியவசாய[1] பிரேம சமாசாரங்கள்.**

என்பது சூத்திரம்.

அவ :—மேற்சூத்திரத்தில் உண்டு என்றதனை விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஞான வியவசாய பிரேம சமாசாரங்கள்' என்றது, ஆன்மாவினை உள்ளபடி அறிகிற ஞானமும், அதற்குத் தகுந்தவைகளான உபாயத்தில் துணிவும், உபேயத்தில் அவாவும், இவை மூன்றற்கும் தகுதியான நல்ல ஒழுக்கமும் என்றபடி.

இதனால்[2] திருமந்திரத்தில் மூன்று பதங்களாலும் சொல்லப்படுகின்ற சொரூப உபாய புருஷார்த்தங்களில், ஞானத்தையும் துணிவையும் அவாவினையும், அவற்றிற்குத் தக்கனவான ஒழுக்கங்களையும் சொல்லுகிறது என்றவாறு. (38)

## 350

**ஆசாரிய பிரீதியர்த்தமாக[3] இவனுக்குத் தவிர வேண்டுவது, பகவத்திரவியத்தை அபகரிக்கையும், பகவத் போஜனத்தை விலக்குகையும், குருமந்திர தேவதா பரிபவமும்.**

என்பது சூத்திரம்.

---

[1] வியவசாயம் - துணிவு. பிரேமம் - அன்பு. சமாசாரம் - நல்லொழுக்கம்; அநுஷ்டானம்.

[2] பிரணவத்தால் சொல்லப்படுகின்ற சொரூபத்தில் யாதாத்மிய ஞானமும், 'நமஃ' பதத்தால் சொல்லப்படுகின்ற உபாயத்தில் துணிவும், 'நாராயணாய' பதத்தால் சொல்லப்படுகின்ற புருஷார்த்தத்தில் அவாவும் என நிரல் நிறையே கொள்க. 'அவற்றிற்குத் தக்கனவான ஒழுக்கங்கள்' என்றது, துவயம், சரமச்சுலோகம் என்பனவற்றில் சொல்லப்படும் அநுஷ்டானத்தை.

[3] பிரீதியர்த்தமாக - பிரீதியின்பொருட்டு. பகவத்திரவியத்தை அபகரித்தல் - பண்டே அவன் தொண்டாம் பழவுயிரை இவன் என்னதென்று கொள்ளுதல். பகவத் போஜனத்தை விலக்குதல் - அவனுடைய பாதுகாத்தலை விலக்குதல். போஜனம் - இங்குப் பாதுகாத்தல். 'குரு மந்திர தேவதா பரிபவம்' என்பதனை, குரு பரிபவம், மந்திர பரிபவம்,

அவ :—ஆசாரியனுக்கு உகப்பாக இவன் செய்யும் கைங்கரியந்தான், செய்வதும் தவிர்வதுமாகவிருக்கையாலே, செய்யத் தருவனவற்றை அருளிச் செய்த பின்னர், தவிர்வனவற்றை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பகவத் திரவியத்தை' என்று தொடங்கி அவற்றை [1] உத்தேசிக்கிறார். (39)

## 351

**பகவத்திரவிய அபகாரமாவது, சுவாதந்திரியமும், அந்ய சேஷத்துவமும்; பகவத் போஜனத்தை விலக்குகையாவது, அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை;[2] அவனுடைய ரக்ஷகத்வ கிரமம் பிரபந்ந பரித்திராணத்திலே சொன்னோம்.** குரு பரிபவமாவது - கேட்ட அர்த்தத்தின்படி அநுஷ்டியாதொழிகையும், அநதிகாரிகளுக்கு உபதேசிக்கையும்; மந்திர பரிபவமாவது, அர்த்தத்தில் விஸ்மிருதியும், விபரீதார்த்தப் பிரதிபத்தியும்; தேவதா பரிபவமாவது, கரணத்திரயத்தையும் அப்ராப்த விஷயங்

தேவதா பரிபவம் எனப் பிரித்துக் கூட்டுக. இவற்றின் விளக்கத்தை அடுத்த சூத்திரத்தில் காண்க.

[1] 'உத்தேசிக்கிறார்' என்றது, அவற்றின் பெயர்களை மாத்திரம் எடுத்துச் சொல்லுகிறார் என்றபடி.

[2] இதனை, 'அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை' என்பது முடிய ஒரு சூத்திரமாகவும், அதற்குமேல் உள்ளனவற்றை ஒரு சூத்திரமாகவும் கொண்டு இரண்டு சூத்திரங்கள் ஆக்கிப் பதிப்பித்துள்ளார்கள் முன்னைய பதிப்புகளில். பொருள் அமைதியை நோக்கின் ஒரு சூத்திரமாகவே கோடல் தகும். இரண்டு சூத்திரங்களாகக் கொள்ளின் பொருட்டொடர்பு அற்றொழியும். மேலும், இரண்டாம் சூத்திரத்திற்கு எழுதப்பட்டுள்ள 'அவன் ரக்ஷித்தருளும் கிரமந்தான் என்?' என்னா, அருளிச்செய்கிறார் 'அவனுடைய' என்று தொடங்கி" என்ற அவதாரிகையும், சூத்திரப்பொருளை முற்றவும் கொண்டு மொழிந்ததாக அமையவில்லை. ஆய் வியாக்கியானத்திலும் இதனை ஒரு சூத்திரமாகவே கொண்டு பொருள் எழுதப்பட்டிருக்கின்றது. அங்கும் சூத்திரத்திற்குக் கொடுத்திருக்கும் எண் மிகை.

களிலே பிரவணமாக்குகையும், தத்விஷயத்தில் பிரவணமாக்காதொழிகையும்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி உத்தேசித்தவற்றின் தன்மைகளை அடைவே விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பகவத்திரவியம்' என்கிறது, [1] "பிறர் நன் பொருள்" என்னும்படி ஸ்ரீ கௌஸ்துபம் போலே ஈச்வரனுக்கு விரும்பக் கூடியதான ஆன்மவஸ்துவை. சுவாதந்திரியமாவது, சேஷத்துவத்தாலேயே நிரூபிக்கப்படுகின்ற ஆன்மாவைத் தனக்கு உரித்தாக நினைத்திருக்கை. அந்ய சேஷத்துவமாவது, பகவானுக்கே சேஷமான ஆன்மாவை மற்றையோர்க்குச் சேஷமாக நினைத்திருத்தல். இதுதான், தாய் தந்தை தமையன் அரசன் மற்றைத் தெய்வங்கள் அளவாகவிருக்கும். இவை இரண்டும் [2] பிரணவத்தில் முதல் எழுத்தில் ஏறிக்கழிந்த நான்காம் வேற்றுமையாலும், நடு எழுத்தான உகாரத்தாலும் கழிக்கப்படுகின்றனவிறே. [3] "ஆன்மாவைக் களவு கண்ட திருடனால் எந்தப்பாவந்தான் செய்யப்படவில்லை?" என்று இதனை எல்லாப் பாவங்களுக்கும் மூலமாகச் சொல்லாநின்றதிறே.

'பகவத் போஜனத்தை விலக்குகையாவது, அவனுடைய ரக்ஷகத்தை விலக்குகை' என்றது, பாதுகாத்தலை இறைவனுக்கு உணவு என்கிறது; பாதுகாத்தல், இறைவனுக்கு, பசித்

---

1 கண்ணிநுண் சிறுத்தாம்பு, 5. கௌஸ்துபம் - இறைவன் திருமார்பில் அணிந்துகொண்டிருக்கும் ஓர் இரத்தின விசேடம்.

2 அகாரத்தில் ஏறிக்கழிந்த நான்காம் வேற்றுமையால் உயிர்கள் எல்லாம் இறைவனுக்கு அடிமை என்பது கூறப்படுகின்றது. இரண்டாம் எழுத்தான உகாரத்தால் அவனுக்கே அடிமை என்பது கூறப்படுகின்றது. உகாரம் பிரிநிலைப் பொருளது. 'இவை இரண்டும் கழிக்கப்படுகின்றன' எனக்கூட்டுக. கழிக்கப்படுகின்றன - விலக்கப்படுகின்றன.

3 'பகவத்திரவிய அபகாரம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஆன்மாவை' என்று தொடங்கி.

'கிந்தேந நக்ருதம் பாவம் சோரேணாத்மாப ஹாரிணா' என்பது பாரதம், ஆதி பர். 74 : 27.

தவனுக்கு உணவு போலே தாரகமாயிருக்கையாலே. [1] "மண்ணும் விண்ணும் எல்லாம் உடன் உண்ட" என்றவிடத்தில் 'ரக்ஷணம் அவனுக்குத் தாரகமாயிருக்கையாலே 'உண்ட' என்கிறது; இல்லையாகில் 'காக்கும்' என்ன அமையும்' என்றிறே நம்பிள்ளை அருளிச்செய்தது. இத்தகையதான இறைவனுடைய 'ரக்ஷகத்வத்தை விலக்குகை'யாவது, 'அவ - ரக்ஷணே' என்கிற தாதுவாலே ஒரு காரணமும் பற்றுமல் எல்லாப் பொருள்களையும் பாதுகாப்பவனுகச் சொல்லப்படுகிற அவனுக்குப் பாதுகாத்தற்கு இடம் அறும்படி தன் முயற்சியாலேயாதல், பிறராலேயாதல் தன்னைப் பாதுகாத்துக்கொள்வதில் ஈடுபடுதல் என்றபடி. இதுதான், பகவானுலேயே காக்கப்படுமவை என்பதனைச் சொல்லுகிற [2] 'நம:' பதத்தாலே கழிக்கப்படுகிறதிறே.

'அவனுடைய ரக்ஷகத்வ க்ரமம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னேம்' என்றது, அவன் காப்பாற்றியருளும் முறையைப் [3] ப்ரபந்நபரித்ராணம் என்ற ப்ரபந்தத்திலே விரிவாகச் சொன்னேம்; அங்கே கண்டுகொள்வது என்றபடி. [4] அப்ப்ரபந்தத்திலே அவனை ஒழிந்தார் அடங்கலும் காப்பாற்றுபவர் அல்லர் என்னுமதனை அருளிச்செய்தபின்னர் "ஈச்வரன் மாதா பிதாக்கள் கைவிட்ட அவஸ்தையிலும் [5] 'பின்னும் நின்று அடியேனுக்கு உற்றுனாய் வளர்த்து' என்கிறபடியே தன்னுருக் கொடுத்து வேற்றுருக்கொண்டு தாய் முகம் காட்டி இன்சொற் சொல்லியும்" என்று தொடங்கி 'இவனே எல்லார்க்கும் ரக்ஷகன்' என்னும் தளவாக அவனுடைய ரக்ஷகத்வ க்ரமத்தை மிக விரிவாக அருளிச் செய்தாரிறே.

---

[1] பாதுகாத்தல் இறைவனுக்குத் தாரகமாயிருக்கும் என்று தாம் அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறுர் 'மண்ணும்' என்று தொடங்கி. இது, திருவாய். 2. 2 : 1.

[2] நம: பதம் என்றது, திருமந்திரமான திருவெட்டெழுத்தில் உள்ள நடுப்பதம்.

[3] 'ப்ரபந்ந பரித்ராணம்' என்பது இந்நூலாசிரியர் அருளிச் செய்த பதினெட்டு நூல்களுள் ஒன்று.

[4] அந்நூலில் இவர் தாம் அருளிச்செய்திருக்கும் முறையை உரையாசிரியர் எடுத்துக்காட்டுகின்றுர் 'அப்ப்ரபந்தத்திலே' என்று தொடங்கி.

[5] பெரிய திருமொழி, 8. 9 : 7.

'குருபரிபவமாவது, கேட்ட அர்த்தத்தின்படி அநுஷ்டியா தொழிகையும் [1]அநதிகாரிகளுக்கு உபதேசிக்கையும்' என்றது, தன்னுடைய உஜ்ஜீவனத்தின்பொருட்டு ஆசாரியன் அருளிச் செய்யக்கேட்ட, விடத்தக்கனவும் பற்றத்தக்கனவுமான அர்த்த விசேடங்களுக்குத் தகுதியாக விருந்துள்ள விடத்தக்கனவும் செய்யத்தக்கனவுமான ஒழுக்கங்களை மேற்கொள்ளாதொழிகையும், தனக்குத்தஞ்சமாக ஆசாரியன் உபதேசித்த சாரார்த்தங்களை நாஸ்திகம் முதலானவைகளாலே இதற்கு அதிகாரிகள் அல்லாதவர்களுக்குப் புகழ், பொருள் முதலானவைகளை நச்சி உபதேசிக்கையும் என்றபடி.

'மந்திர பரிபவமாவது, அர்த்தத்தில் [2]விஸ்மிருதியும் விபரீத அர்த்தப் பிரிதிபத்தியும்' என்றது, ஆசாரியன் அந்த மந்திரத்திற்கு அருளிச்செய்த உண்மைப் பொருள்களைப் பலகாலும் நினைந்து நோக்கிக்கொண்டு போருகையன்றிக்கே, உதாசீனத்தாலே மறந்துவிடுகையும், ஆசாரியன் அருளிச் செய்த வகை அன்றிக்கே மந்திரத்திற்கு மாறுபாடாக இருக்கும் அர்த்தங்களை மந்திரத்திற்கு அர்த்தம் என்று மயக்கத்தாலே நினைத்திருக்கையும் என்றபடி.

'தேவதா பரிபவமாவது, [3]கரணத்திரயத்தையும் அப்ராப்த விஷயத்திலே பிரவணமாக்குகையும், தத் விஷயத்தில் பிரவணம் ஆக்காதொழிகையும்' என்றது, [4]'விசித்திரமாயும் கைகால் முதலிய உறுப்புகளோடு கூடினதாயும் உள்ள இந்தச் சரீரசம்பந்தமானது, ஈச்வரனை வணங்கும் பொருட்டு முன்பே படைக்கப்பட்டது' என்றும், [5]'மாயவன் தன்னை வணங்கவைத்த கரணம் இவை' என்றும் சொல்லுகிறபடியே பகவானுக்குத் தொண்டு செய்யும்பொருட்டுப் படைக்கப்

---

1 அநதிகாரிகள் - அதிகாரிகள் அல்லாதவர்கள்.

2 விஸ்மிருதி - மறத்தல். விபரீத அர்த்தப் பிரதிபத்தி - மாறுபாடுள்ள பொருள்களை நினைத்தல்.

3 கரணத்திரயம் - மனம் வாக்குக்காயங்கள். அப்ராப்த விஷயம் - தக்கதல்லாத வேறு விஷயங்கள். பிரவணம் - மிக்க அன்பு. தத் விஷயத்தில் - இறைவனிடத்தில்.

4 'விசித்ரா தேஹ ஸம்பத்திः ஈச்வராய நிவேதிதும்' என்பது, விஷ்ணுதத்வம்.

5 இராமாநுச நூற்றந்தாதி, 67.

பட்டவையாய் [1]'உன் சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்து ஏத்திக் கைதொழவே' என்கிறபடியே அவனை நினைத்தற்கும் துதித்தற்கும் வணங்குதற்கும் உறுப்புகளான உள்ளம் உரை சரீரம் என்னும் இம்மூன்றனையும் [2]சொரூபத்திற்குத் தகுதியில்லாத இழிந்த விஷயங்களிலே, மேட்டில் நீர் பள்ளத்தில் விழுமாறு போலே, அன்பு உள்ளவைகளாம்படி பண்ணுகையும், [3]'மால்கொண்ட சிந்தையராய்' என்றும், [4]'நாத்தழும்பு எழ நாரணா என்று அழைத்து மெய்தழும்பத் தொழுது ஏத்தி' என்றும் வருவன போல்வனவற்றில் சொல்லுகிறபடியே சொரூபத்திற்குத் தக்கதான அவ்விறைவன் விஷயத்தில் மண்டி விழும்படி பண்ணுவியாதொழிகையும் என்றபடி.

[5]ஆக 'மந்திரத்தினிடத்திலும் அதனையுடைய தெய்வத்திடத்திலும் அம்மந்திரத்தை உபதேசித்த ஆசாரியனிடத்திலும் பக்தியானது எப்பொழுதும் செய்யத்தக்கது' என்றும், [6]'மந்திரத்தையுடைய தெய்வத்தையும் ஆசாரியனையும் மந்திரத்தையும் ஒரே தன்மையாக அறியவேண்டும்' என்றும் பூசிக்கத்தக்கனவாகச் சொல்லப்படுகிற இம்மூன்று விஷயங்களையும் பரிபவிக்கையாவது இவையாயிற்று (40)

---

[1] திருவாய்மொழி, 7.1 : 8,

[2] சொரூபத்திற்கு - சேஷத்துவ சொரூபத்திற்கு.

[3] பெருமாள் திருமொழி, 2 : 1.

[4] பெருமாள் திருமொழி, 2 : 4.

[5] மேலே கூறிய மூன்றும் பூசிக்கத்தக்கவை என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், ஆக 'மந்திரத்தினிடத்திலும்' என்று தொடங்கி.

'மந்த்ரே தத்தேவதாயாம்ச ததாமந்த்ர ப்ரதேகுரௌ
த்ரிஷுபக்தி: ஸதா கார்யா ஸாஹிப்ரதம ஸாதனம்.'

என்பது, விஷ்ணுதத்வம்.

[6] 'மந்த்ரநாதம் குரும் மந்த்ரம் ஸமத்வேந அநுபாவயேத்.' என்பது பிரமாணம்.

## 352

**இவனுக்குச் சரீர [1] அவசாநத்தளவும் ஆசாரிய விஷயத்தில் 'என்னைத் தீமனம் கெடுத்தாய்', 'மருவித் தொழும் மனமேதந்தாய்' என்று உபகாரஸ்மிருதி நடக்கவேணும்.**

என்பது சூத்திரம்.

**அவ :—** ஆக, இப்படி ஆசாரியனுடைய பிரீதியின் பொருட்டுச் செய்யவேண்டுமவையும் தவிரவேண்டுமவையும் அருளிச்செய்தார் மேல். இன்னமும் இவ்வதிகாரிக்கு வேண்டிய தாய் இருப்பது ஒன்றை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** இவனுக்குச் சரீர அவசாநத்தளவும் ஆசாரிய விஷயத்தில் 'என்னைத் தீமனம் கெடுத்தாய்', 'மருவித் தொழும் மனமேதந்தாய்' என்று உபகாரஸ்மிருதி நடக்கவேணும்' என்றது, இந்த அதிகாரிக்குச் சரீரத்தோடு இருக்கும் காலமத்தனையும் பேருதவியைச் செய்தவனை ஆசாரியன் பக்கல் 'என்னுடைய தீய மனத்தினைப் போக்கினாய்', 'வேறொருபயனையும் கருதாது அநுகூலமான தொண்டுகளைப் பண்ணும் மனத்தினைத் தந்தாய்' என்னும் செய்ந்நன்றியறிவு தொடர்ந்து நடக்க வேண்டும் என்றபடி. (41)

## 353

**மனத்துக்குத் தீமையாவது, [2] ஸ்வகுணத்தையும் பகவத்பாகவத தோஷத்தையும் நினைக்கை.**

என்பது சூத்திரம்.

**அவ :—** 'மனத்துக்குத் தீமையாவது யாது?' என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—** 'ஸ்வகுணத்தை நினைக்கை' என்றது, சமம் தமம் முதலான ஆத்ம குணங்கள் உண்டானாலும், [3] 'நிறைவு

---

[1] அவசாநம் - முடிவு. 'என்னைத் தீமனம்' என்பது, திருவாய். 2. 7 : 8. 'மருவித்தொழும்' என்பது, திருவாய். 2. 7 : 7.

[2] ஸ்வகுணம் - தன்னுடைய குணம்.

[3] திருவாய். 3. 3 : 4.

ஒன்றுமிலேன்', [1]'நலந்தான் ஒன்றுமிலேன்' என்கிறபடியே 'நமக்கு ஓர் ஆத்மகுணமும் இல்லை' என்று தன் வறுமையை நினைத்திருக்கவேண்டியிருக்க, 'இவை எல்லாம் நமக்கு இப்போது உண்டு' என்று தனக்கு உண்டான நற்குணங்களைப் போரப் பொலிய நினைத்தல் என்றபடி.

'பகவத் தோஷத்தை நினைக்கை' என்றது, பகவானுகிய தனக்குப் பரதந்திரப்பட்டிருக்கிற இவ்வான்மாவினைத் தன்னுடைய உபேக்ஷையாலே அநாதிகாலம் நம் கர்மங்களை வியாஜமாக்கிக் கைவிட்டிருந்தவன்; அவ்வளவுமன்றிக்கே, அருள் அற்றவரைப் போன்று கர்மங்கட்குத் தகுதியாய்ப் பலன்களைக் கொடுப்பவனும் நரகங்களிலே தள்ளி அறுத்து அறுத்துத்[2] தீற்றுபவன்; கைக்கொண்டாலும், தடையற்ற சுவதந்திரன் ஆகையாலே இன்னபோது இன்னபடி செய்வான் என்று நம்ப வொண்ணுதவன் என்பன போலவும், கிருஷ்ணுவதாரத்தில் தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டு வந்து பிறந்தவனுக்குத் தன் விருப்பின்படி விளையாடுதலை மேற்கொண்டு 'இங்ஙன் செய்தல்' முறையாய் இருந்ததில்லை என்பது போலவும் நினைத்தல் என்றபடி. இங்ஙனம் அல்லது எல்லா நற்குணங்களுக்கும் கொள்கலமான இறைவன் விஷயத்தில் நினைக்கவாவது ஒரு குற்றம் இல்லையிறே.

'பாகவத தோஷத்தை நினைக்கை' என்றது, திருமேனியோடே இருக்கையாலே மேலெழத் தோன்றுகிற தன்மைகளைக் கொண்டு 'இவ்வுலகவின்பங்களிலே வசப்பட்டவர், அகங்காரம் முதலானவற்றில் நோக்குள்ளவர்' என்பன போன்று நினைத்தல் என்றபடி.

ஆக, இது, தன் குணத்தையும் பகவானுடைய தோஷத்தையும் பாகவதர்களுடைய தோஷங்களையும் நினைக்கையாவது. (42)

## 354

தோஷம் நினையாதொழிகிறது குணம் போலே உண்டாயிருக்க அன்று; இல்லாமையாலே.

என்பது சூத்திரம்.

[1] பெரிய திருமொழி, 1. 9 : 4.

[2] தீற்றுமவன் - அநுபவிப்பவன். 'தீர்த்துமவன்' என்றும் பாடம்.

அவ :—'ஆனால், தனக்குக் குணங்கள் சில உளவாக விருக்கவும் அவற்றை நினைக்கலாகாது என்பது போன்று, 'அத்தலைக்கும்[1] தோஷங்கள் சில உளவாகவிருக்க அவற்றை நினைக்கலாகாது என்கிறதோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'தோஷம் நினையாதொழிகிறது குணம் போலே உண்டாயிருக்க அன்று; இல்லாமையாலே' என்றது, பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் தோஷம் நினையாதொழி கிறது, தனக்குக் குணம் உண்டாயிருக்க அதனை நினையா திருப்பது போன்று உண்டாயிருக்க நினையாதொழிகிறதன்று; முதலிலே இவர்கள் திறத்திலே அது இல்லாமையாலே என்றபடி.

'யாங்ஙனம்?' என்னில், [2] எல்லாரும் முத்தி பெறுதற்கு உரியவர்கள் என்ற தன்மை வாராதபடி தான் இட்ட கட்டளையிலே அங்கீகரிக்கைக்காக [3] 'ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான்' என்றும், [4] 'எதிர்சூழல் புக்கு' என்றும் சொல்லுகிறபடியே எல்லாவுயிர்களும் உய்வு பெறுதற்காகப் படைத்தலும் அவதரித் தலும் முதலியவைகளாலே கிருஷிபண்ணிக்கொண்டு போரு கையாலே, 'அநாதிகாலம் நம்மை உபேக்ஷித்தவனாய்க் கைவிட்டிருந்தான்' என்னவொண்ணாது; அருள் அற்றவரைப் போலே கர்மங்கட்குத் தகுதியாகத் தண்டிப்பதும், மண் தின்ற குழந்தையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் தாயைப் போன்று நலத்திலே நோக்குடையவனாய்ச் செய்கையாலே உய்வு பெறுதற்கு உடலாமித்தனை; தடையற்ற [5] சுவாதந்திரியம், முன்பு பிறப்பிற்குக் காரணமாகப் போந்ததேயாகிலும் கிருபைக்குப் பரதந்திரப்பட்டு அங்கீகரித்த பின்பு பிறப்பு இறப்புகளிலே உழன்று போரும் இவனை நித்திய சூரிகளோடு சமானமான போகத்தை அடைகிறவனாகச் செய்யுமளவில் தடை செய்வார் இல்லாமல் செய்கைக்கு உறுப்பாமித்தனையாகையாலே நன்றேயாமித்தனை.

---

[1] அத்தலைக்கும் - பகவானுக்கும் பாகவதர்களுக்கும்.

[2] இங்கு, 'போற்றி மற்றோர் தெய்வம்' (திருவாய். 4. 10 : 6.) என்ற திருப்பாசுரம் நினைத்தல் தகும்.

[3] திருவாய். 3. 9 : 10. [4] திருவாய். 2. 7 : 6.

[5] 'சுவாதந்திரியம் செய்கைக்கு உறுப்பாமித்தனை' என்று கூட்டுக.

கிருஷ்ணாவதாரத்தில் தன் விருப்பின்படி செய்த செயல்கள் [1] "பிரமசரியவிரதம் இருக்கும் பக்ஷத்தில்" என்கிறபடியே தனக்கு இந்தப் போகத்தில் ஒட்டு இல்லாமையை வெளியிடுகைக்காகவும், [2] "கோபியர்கள் காமத்தினாலே" என்கிறபடியே அவ்வழியாலே அவர்களைத் தன்பக்கலிலே அன்புடையவர்கள் ஆக்கி மேல் நிலைக்குக் கொண்டு போவதற்காகவும் செய்ததாகையாலே குணமேயல்லது குற்றம் அன்று.

இனி, பாகவதர்களும் [3] "குற்றம் இன்றிக் குணம் பெருக்கி" என்கிறபடியே குற்றம் இல்லாதவர்களாய் எல்லையில்லாத குணங்களையுடையவர்களாய் இருக்கையாலே உள்ளூர ஆராய்ந்து பார்த்தால் அவர்கள் பக்கலிலும் காணலாவதொரு குற்றம் இல்லையிறே.

மற்றும் இப்புடைகளிலே பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் குற்றங்கள் தோன்றினவாகில் அவற்றிற்குச் சமாதானம் கண்டுகொள்வது. இவையெல்லாம் திருவுள்ளம் பற்றியாயிற்று 'இல்லாமையாலே' என்று அருளிச்செய்தது. (43)

### 355

தோஷம் உண்டு என்று நினைக்கில், [4] அது
பரதோஷம் அன்று; ஸ்வதோஷம்.

என்பது சூத்திரம்.

அவ:—தோஷம் இல்லை என்று சுபக்கத்தாலே சாதித்தார் மேல். இனி, பரபக்கத்தாலே தோஷம் உண்மையை அங்கீகரித்துக்கொண்டு அதற்கு விடையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக:—'தோஷம் உண்டு என்று நினைக்கில் அது பரதோஷம் அன்று; ஸ்வதோஷம்' என்றது, மேலே கூறியபடி

[1] 'யதிமேப்ரஹ்மசர்யம் ஸ்யாத்' என்பது, பிரமாணம்.

[2] 'கோப்ய: காமாத்' என்பது, ஸ்ரீ பாகவதம்.

[3] பெரியாழ்வார் திருமொழி, 4. 4 : 2.

[4] 'நினைக்கில்' என்பதனாலே இது தம்முடைய மதம் அன்று என்பது போதரும். மேற்சூத்திரம் சுபக்கம். இச்சூத்திரம் பரபக்கம். பரதோஷம் அன்று - பிறருடைய குற்றம் அன்று. ஸ்வதோஷம் - தனது குற்றம்.

அன்றிக்கே, பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் குற்றம் உண்டு என்று நினைக்கில், அவர்கள் பக்கல் தனக்குத் தோற்றுகிற குற்றம் அவர்கள் குற்றம் அன்று; அதனைப் பார்க்கின்றவனுடைய தன்னுடைய குற்றம் என்றபடி. (44)

## 356

'ஸ்வதோஷமானபடி என்?' என்னில்,

அவ :—அது, தன்னுடைய குற்றமே என்பதனை உறுதிப் படுத்துவதற்காக, அது சம்பந்தமான வினவினை அநுவதிக் கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஸ்வதோஷமானபடி என்? என்னில்' என்றது, பிறருடைய குற்றமாகிற அது, தன்னுடைய குற்றமாயவாறு யாங்ஙனம்? எனின், என்றபடி. (45)

## 357

[1] ஸ்வதோஷத்தாலும் பந்தத்தாலும்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'தோஷத்தாலும்' என்றது, கண்ணோய் முதலான குற்றம் உள்ள ஒருவனுக்கு ஒரு சந்திரன் இரண்டு சந்திரர் களாகத் தோற்றுமாறு போலே, குற்றம் இல்லாதவர்கள் திறத்திலே குற்றம் தோன்றும்படியான தீயபயிற்சியையுடைய மனத்தையுடையனாகிற தன்னுடைய குற்றத்தாலே என்றபடி. 'பந்தத்தாலும்' என்றது, மாதாபிதாக்களுடைய குற்றம் மக்களுடையது ஆமாறு போன்று, அவர்களுக்கு உண்டான குற்றம் தன்னதாம்படி அவர்களோடு தனக்கு உண்டான உறவு விசேடத்தாலே என்றபடி.

---

[1] 'ஸ்வதோஷத்தாலும்' என்றது, மேலே கூறிய சுபக்கத்தை நோக்கிக் கூறியது. 'பந்தத்தாலும்' என்றது, மேலே கூறிய பர பக்கத்தை நோக்கிக் கூறியது. 'பந்தம்' என்றது நாராயண பதத்தால் கிடைக்கிற குடல் தொடக்குச் சம்பந்தம்.

354, 355ஆம் சூத்திரங்களைப் பார்க்க.

'ஸ்வதோஷத்தாலும்' என்கிற இது அவர்கள் திறத்தில் குற்றம் இன்மையைப்பற்றிச் சொல்லுகிறது. 'பந்தத்தாலும்' என்கிற இது அவர்கள் திறத்துக் குற்றத்தை அங்கீகரித்துக் கொண்டு சொல்லுகிறது. (46)

## 358

[1] தோஷம் இல்லையாகில் குணப்பிரதிபத்தி நடக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ:**—'தன்னுடைய குற்றத்தாலே' என்பதற்குத் 'தன்னிடத்தில் குற்றம் இருந்தாலன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'தோஷம் இல்லையாகில் குணப்பிரதிபத்தி நடக்கும்' என்றது, ஒரு சந்திரன் இரண்டு சந்திரர்களாகத் தோன்றுவதற்குக் காரணமான கண்ணோய் இல்லாதபோது ஒரு சந்திரனே தோன்றுமாறு போலே, குற்றத்தைக் காணுதற்குக் காரணமான தன் மனக்குற்றம் இல்லாத போது, பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் குணத்தின் நினைவே நடக்கும் என்றபடி. குணத்தின் நினைவு நடவாமையால், குற்றம் உண்டு என்று கொள்ளவேண்டும் என்பது கருத்து. (47)

## 359

[2] நடந்தது இல்லையாகில் தோஷஞானமே தோஷமாம்.

என்பது சூத்திரம்.

**அவ:**—'நடந்தது இல்லையாகில் வரும் தோஷம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'நடந்தது இல்லையாகில் தோஷஞானமே தோஷமாம்' என்றது, குணத்தின் நினைவு நடவாதொழிந்தால் குற்றத்தின் நினைவிறே நடப்பது; அந்தத் தோஷ ஞானந்

---

[1] 'தோஷம் இல்லையாகில்' என்பதும் பாடம். குணப்பிரதிபத்தி - குணங்களின் நினைவு.

[1] நடந்ததில்லையாகில் - குணஞானம் நடந்தது இல்லையாகில்.

தானே இவனுக்குப் பகவானுடைய சீற்றத்திற்குக் காரணமான தோஷமாம் என்றபடி.

[1] இது அடியாக வேறு ஒரு தோஷம் உண்டாம் என்ன வேண்டா என்றபடி. இதனால் இது அவசியம் நீக்கத்தக்கது என்னுமிடம் சொல்லிற்றாயிற்று. (48)

## 360

இது தனக்கு அவசரம் [2] இல்லை.

என்பது சூத்திரம்.

அவ :—இவையெல்லாம் சொல்ல வேண்டுவது, இதற்கு அவகாசம் இவனுக்கு உண்டானாலிறே என்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'இது தனக்கு அவசரம் இல்லை' என்றது, பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் குற்றத்தை நினைத்தலாகிற இதற்குச் சமயந்தான் முதலிலே இவனுக்கு இல்லை என்றபடி. (49)

## 361

[3]ஸ்வதோஷத்துக்கும் பகவத் பாகவத குணங்களுக்குமே காலம் போருகையாலே

என்பது சூத்திரம்.

அவ :—'அது எதனாலே?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஸ்வதோஷத்துக்கும்' என்றது, [4] "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்றும், [5] "பொய்ந்நின்ற ஞானமும்

---

[1] 'தோஷ ஞானமே' என்றதிலுள்ள ஏகாரத்தை நோக்கி, 'இது அடியாக' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். ஈற்றில் உள்ள 'தோஷம்' என்ற சொல் இறைவனுடைய சீற்றத்திற்கு உரிய தோஷத்தைக் காட்டுகிறது.

[2] அவசரம் - சமயம்; காலம்.

[3] 'ஸ்வதோஷத்தை நினைத்தற்கும் பகவத்பாகவத குணங்களை நினைத்தற்குமே காலம் போருகையாலே' என்று நினைத்தற்கும் என்ற ஒரு சொல்லைக் கொணர்ந்து கூட்டுக.

[4] திருவாய், 3. 3 : 4. [5] திருவிருத்தம், 1.

பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை' என்றும், 'வேதத்தில் சொல்லப்பட்ட மரியாதையைத் தவிர்ந்தவனையும், நீச விஷயங்களில் ஆசையுள்ளவனையும், நிலையில்லாத புத்தியையுடையவனையும், பொறாமைக்குப் பிறப்பிடமாயும், உபகாரத்தைச் செய்தவர்களுக்கு அபகாரத்தைச் செய்கிறவனையும், ஈச்வரோஹம் என்றிருப்பவனையும், மன்மதனுக்குப் பாரதந்திரனையும், வஞ்சிக்கிறவனையும், அன்புடையார்களிடத்தில் கொடியவனையும், பாவத்தில் நிலை நின்றவனையும் இருக்கிற அடியேன் கரை காண ஒண்ணாததான இந்தத் துக்கக்கடலினின்றும் எப்படிக் கரை ஏறினவனாய்த் தேவரீருடைய திருவடிகளில் கைங்கரியம் செய்யப்போகிறேன்' [1] என்றும்,

[2] 'காரணம் இல்லாத வைரம், சாதி முதலாயினவற்றால் உண்டாகும் கர்வம், மதம், விஷயங்களில் ஆசை, உலோபம், மோகம் என்பன முதலாயினவற்றிற்குப் பிறப்பிடமாய் இந்தச் சம்சாரத்தில் முழுகிக்கொண்டிருக்கிற அடியேன், ஒப்பு இல்லாதனவும் என்றும் உள்ளனவும் குற்றம் இல்லாதனவுமான குணங்களையுடைய வரதனே, தேவரீரை அடைவதற்கும் சேவிப்பதற்கும் எத்தகையேன்?' என்றும்,

[3] 'திருவரங்கநாதனே, தேவரீரால் விதிக்கப்பட்டனவற்றையும் விலக்கப்பட்டனவற்றையும் மீறியவனாய், தேவரீருக்கும் தேவரீருடைய அடியார்களுக்கும் முக்கரணங்களாலும் தெரிந்தும்

---

[1] 'அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயாப்ரஸவபூ:
க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவசோ வஞ்சநபர:
ந்ருசம்ஸ: பாபிஷ்ட: கதமஹமிதோ துக்கஜலதே:
அபாராது உத்தீர்ணஸ்தவ பரிசரேயம் சரணயோ:'
என்பது, தோத்திரரத்நம், 62.

[2] வித்வேஷமாநமதராக விலோப மோஹாதி
அஜ்ஞாநபூமி: அஹமத்ர பவேநிமஜ்ஜந்
நிர்த்வந்த்வ நித்ய நிரவத்ய மகாகுணம்த்வாம்
ஹஸ்தீச கஸ்ச்ரயிது மீக்ஷிது மீப்ஸிதும்வா
என்பது, வரதராஜ ஸ்தவம், 76.

[3] 'அதிக்ராமந் நாஜ்ஞாம் தவவிதி நிஷேதேஷுபவதேபி
அபித்ருஹ்யந் வாக்தீக்ருதிபிரபி பக்தாய ஸததம்
அஜாநந் ஜாநந்வா பவதஸஹநீயாகஸிரதஸ்
ஸஹிஷ்ணுத்வாத்ரங்க ப்ரவண தவமாபூவமபர:'
என்பது, ஸ்ரீரங்கராஜ ஸ்தவம், உத்தரசதகம் 91.

தெரியாமலும் எப்பொழுதும் தீங்குகளைச் செய்துகொண்டு, தேவரீரால் பொறுக்கமுடியாத குற்றங்களாலும் நிறைந்தவனான அடியேன் பொறுக்கும் தன்மையையுடைய தேவரீரால் தாங்கத் தகுந்தவன் ஆகிறேன் '' என்றும்,

[1] ' ஏ திருவரங்கநாதனே, தேவரீருடைய குணங்களைப் போலவே எங்களுடைய குற்றங்களுக்கும் கரை அறிந்தவன் யாவன்? பெரு வெள்ளத்தில் பயன் அற்ற நீர் வேட்கை போன்று விரும்புகிறவர்களுடைய விருப்பத்தளவும் அருள் செய்கிற தேவரீருடைய குணங்களுக்குப் பாத்திரமாக ஆகிறேன் அல்லேன் ' என்றும் இவை போல்வனவற்றில் சொல்லுகிற படியே தன்னுடைய எல்லையில்லாத குற்றங்களை நினைத்தற்கும் என்றபடி.

' பகவத் பாகவத குணங்களுக்குமே காலம் போருகை யாலே ' என்றது, அந்தக் குற்றங்களைப் பாராமல் அங்கீகரித் தருளின பகவானுடைய, [2] ' எல்லாக் கல்யாண குணங்களுக்கும் அமுதக்கடல் போலே இருக்கிறீர் ' என்றும், [3] ' எண்ணிறந்த கல்யாண குணங்களின் கூட்டத்திற்குக் கடலைப் போன்றிருக் கின்றீர் '; [4] ' ஏ புத்திரனே, கடலில் உள்ள இரத்தினங்களை எங்ஙனம் எண்ணற்றவையோ அப்படியே மகாத்துமாவான சர்வேச்வரனுடைய குணங்களும் எண்ணற்றவை ' என்றும் சொல்லப்படுகின்ற [5] எல்லையில்லாத குணங்களையும், [6] ' வேதம்

---

[1] 'ஸ்ரீரங்கேஶத்வத் குணாமிவாஸ்மத் தோஷா
ணாம்கः பாரத்ருஶ்வாயதோஹம்
ஓகேமோகோதந்யவத் த்வத்குணாநாம்
த்ருஷ்ணாபூரம் வர்ஷதாம் நாஸ்மிபாத்ரம் '
என்பது, ஸ்ரீரங்கராஜ ஸ்தவம், உத்தரசதகம், 94.

[2] ' ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததிः '
என்பது, தோத்திரரத்நம், 18.

[3] ' அஸங்க்யேய கல்யாண குணகணௌக மஹார்ணவ '
என்பது, சரணாகதி கத்யம்.

[4] 'யதாரத்நாநி ஜலதேர ஸங்க்யேயாநி புத்ரக
ததாகுணாஹ்யநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மநः'
என்பது, பிரமாணம்.

[5] 'பகவானுடைய எல்லையில்லாத குணங்களையும்' என முடிக்க.

[6] அடுத்தபடி பாகவதர்களைப்பற்றி அருளிச்செய்கின்றார். ' வேதம் வல்லார் ' என்பது, திருவாய். 4. 6 : 8.

வல்லார்களைக் கொண்டு' என்றும், [1]'ஒருவர்க்கொருவர் அறிவித்துக்கொண்டு' என்றும், [2]'அவன் அடியார் சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய, நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப் புகுதல் உறுமோ?' என்றும், [3]புருஷகாரமும் உசாத்துணையும் அடையத்தக்கவருமான பாகவதர்களுடைய [4]'பிரமனுக்கும் அறிய முடியாத பாகவதர்களுடைய குணங்களை நான் சொல்லுதற்கு ஆற்றலுடையேன் அல்லேன்' என்று சொல்லப்படுகிற எல்லையில்லாத குணங்களையும் நினைப்பதற்குமே காலம் போந்து மற்றொன்றற்குக் காலம் இல்லாமையாலே என்றபடி.

'இவற்றுக்கே காலம் போருகையாலே' என்கையாலே, [5]தன்னுடைய குணங்களை நினைத்தற்குக் காலம் இல்லை என்பதும் பொருள் ஆற்றலால் போதருமிறே. (50)

## 362

சம்சாரிகள் தோஷம் ஸ்வதோஷம் என்று நினைக்கக்கடவன்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, 'மனத்துக்குத் தீமையாவது' என்றது முதல் இதுகாறும் பகவத் பாகவததோஷம் நினைத்தல் ஆகாது என்னுமிடமும், அவர்களிடத்தில் குற்றம் இல்லாமையும், குற்றம் உண்டு என்று நினைக்கில் அது அவர்களுடைய குற்றம் அன்று, தன் குற்றமே என்றும், அது தன் குற்றமாகைக்குக் காரணங்களும், 'அது தன் குற்றமாதல் யாங்ஙனம்?' என்னும் வினாவிற்கு விடையும், குற்றம் என்ற எண்ணம் நடந்தால் அதுதானே இவனுக்குப் பெரிய குற்றமாம் என்றும், தன் குற்றத்தையும் பகவானுடைய குணங்களையும் பாகவதர்களுடைய குணங்களை

[1] 'போதயந்த: பரஸ்பரம்' என்பது, ஸ்ரீகீதை, 10 : 9.

[2] திருவாய். 8. 10 : 3.

[3] 'புருஷகாரமும் உசாத்துணையும் அடையத் தக்கவரும்' என்ற மூன்றையும் மேலே காட்டிய பிரமாணங்கள் மூன்றற்கும் நிரல் நிறையே கொள்க.

[4] 'நாஹம் ஸமர்த்தோ பகவத் ப்ரியாணாம்
வக்தும் குணாந் பத்ம புவோப்யகம்யாந்'

என்பது, பிரமாணம்.

[5] 353ஆம் சூத்திரம் காண்க.

யும் நினைத்தற்கே காலம் போருகையால் பிறர் குற்றத்தை நினைத்தற்கு இவனுக்குக் காலம் இல்லை என்றும் அருளிச்செய்தார்.

இப்படித் தனக்கு உத்தேசியமான பகவான் திறத்திலும் பாகவதர்கள் திறத்திலும் குற்றம் நினையாமலும், நினைத்தாளுகிலும் அது தன் குற்றமாக நினைத்திருக்க வேண்டும் என்று அருளிச்செய்த இவ்விடத்திலே, சம்சாரிகளுடைய குற்றங்களை நினைத்தலும் இன்னபடியாக வேண்டும் என்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சம்சாரிகள் தோஷம் ஸ்வதோஷம் என்று நினைக்கக்கடவன்' என்றது, சம்சாரிகளிடத்தில் உள்ள பகவானிடத்தில் பக்தி இல்லாமை, ஆன்மாவல்லாத சரீரத்தை ஆன்மாவாக நினைத்தல், தன்னது அல்லாதனவற்றைத் தன்னுடைமை என்று நினைத்தல் முதலான குற்றங்களைக் கண்டால், அக்குற்றங்களைக்கொண்டு, அவர்களை இகழ்ந்து, 'இவர்களுக்கும் நமக்கும் பணி என்?' என்றிராமல், அவர்களுடைய குற்றமும் தன்னுடைய குற்றம் என்று நினைத்திருக்கக் கடவன் என்றபடி. (51)

## 363

அதற்கு ஏது [1]பந்த ஞானம்.

என்பது சூத்திரம்.

அவ :—'அதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அதற்கு ஏது பந்த ஞானம்' என்றது, தனக்குச் சேஷிகளான பகவானும் பாகவதர்களுமான இவர்களுடைய குற்றங்களைத் தன் குற்றங்களாக நினைத்திருக்கைக்குக் காரணம் அவர்களோடு தனக்கு உண்டான சம்பந்தஞானம் ஆனது போன்று, சம்சாரிகளுடைய குற்றங்களைத் தன் குற்றங்களாக நினைக்க வேண்டியதற்குக் காரணம் [2] நாராயணன் ஆம் தன்மை அடியாக வருகின்ற சம்பந்தஞானம் என்றபடி.

---

[1] பந்தம் - சம்பந்தம்.

[2] 'நாராயணன் ஆம் தன்மை அடியாக வருகின்ற சம்பந்தம்' என்றது, நாராயண பதத்தால் அறியப்படுகின்ற ஒன்பது வகையான சம்பந்தங்களுள் ஒன்ருன பிதா புத்திர சம்பந்தம். நாராயணன் ஒருவனே தந்தை, மற்றை அனைவரும் புத்திரர்கள்.

எல்லார்க்கும் ஈச்வரனோடு சம்பந்தம் ஒத்திருக்கையாலே, அவ்வழியாலே தனக்கும் அவர்களுக்கும் சம்பந்தம் உண்டாகையாலே, தனக்கு விலக்க முடியாதவர்களான சரீர பந்துக்களுக்கு வந்த குற்றத்தைத் தனக்கு வந்ததாக நினைத்திருக்குமாறு போன்று, சம்சாரிகளுக்கு உண்டான குற்றத்தைத் தன்னுடையதாகவே நினைக்கக் குறையில்லையிறே. (52)

## 364

**[1] 'இறைப்பொழுதும் எண்ணோம்' என்கையாலே அதுதான் தோன்றாது.**

என்பது சூத்திரம்.

**அவ :**—'இங்ஙனம் அவர்கள் குற்றத்தைத் தன் குற்றமாக நினைப்பது அவர்கள் குற்றந்தான் இவனுக்குத் தோன்றினாலிறே, அதுதான் முதலிலே இவனுக்குத் தோன்றாது' என்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'இறைப்பொழுதும் எண்ணோம் என்கையாலே அதுதான் இவனுக்குத் தோன்றாது' என்றது, 'கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே' என்று பரமபதத்திலே நித்தியசூரிகள் பரிந்து தொண்டு செய்யவிருக்கும் பெருமையையுடையனாய் வைத்து, திருக்கடல்மல்லையிலே வந்து, தங்களைப் பெறுகைக்காகத் தரைக் கிடையிலே கிடக்கிற நீர்மையையுடையவனை, 'இது ஒரு நீர்மை இருக்கும்படி என்?' என்று அந்நீர்மையிலே தோற்று எப்பொழுதும் நினைந்துகொண்டேயிருக்கவேண்டியிருக்க, அவன் இடையாட்டம் கொண்டு காரியம் அற்று, கேவலம் சரீரத்தைப் பாதுகாத்தலிலேயே நோக்குள்ளவர்களாகவிருக்கிற சம்சாரிகளை இறைப்பொழுதும் நினையோம் என்கையாலே, சம்சாரிகள் குற்றங்கள்தாம் இவ்வதிகாரிக்குத் தோன்றா என்றபடி.

[2] திருமங்கையாழ்வார் அருளிச்செய்த இது ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லார்க்கும் ஒக்குமிறே. (53)

---

[1] 'இறைப் பொழுதும் எண்ணோம்' என்பது பெரிய திருமொழி, 2·6 : 1. இறைப் பொழுது - சிறிது நேரம். அது தான் - அந்தக் குற்றந்தான்.

[2] 'இத்திருப்பாசுரம் திருமங்கையாழ்வார் அருளிச்செய்ததன்றோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருமங்கையாழ்வார்' என்று தொடங்கி.

## 365

**தோன்றுவது [1] நிவர்த்தநார்த்தமாக.**

என்பது சூத்திரம்.

அவ :—'தோன்றுது' என்னப்போமோ? [2]சொன்னால் விரோதம்,''[3] ''ஒரு நாயகம்[4]'', ''கொண்ட பெண்டிர்'' என்பன போன்ற திருப்பதிகங்களிலே ஆழ்வார்க்கும் உட்படச் சம்சாரிகள் குற்றம் தோன்றிற்றில்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'தோன்றுவது நிவர்த்தந அர்த்தமாக' என்றது, சம்சாரிகளுடைய குற்றங்கள் தோன்றுவது அக்குற்றங்களி னின்றும் அவர்களை நீக்குவித்தற்காக என்றபடி.

''சொன்னால் விரோதம்'' என்ற திருப்பதிகம் முதலாயின வற்றால் ஆழ்வாரும் அதில் திருவுள்ளம் வைத்தது, பாடத் தகாதவர்களைப் பாடுதல் முதலாயினவற்றினின்றும் அவர்களை நீக்குவித்தற்காகவிறே. அது எல்லார்க்கும் ஒக்கும் என்பது கருத்து. (54)

## 366

**[5]பிராட்டி, ராக்ஷசிகள் குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவியாதவா போலே, தனக்குப் பிறர் செய்த குற்றங்களைப் பகவத் பாகவதர் விஷயங்களில் அறிவிக்கக் கடவன் அல்லன்.**

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, இவ்வதிகாரி சம்சாரிகளுடைய குற்றங்களைக் கண்டால் நினைத்திருக்கும் விதமும், அவர்களுடைய குற்றங்கள்

---

1 நிவர்த்தன அர்த்தம் - (அக்குற்றங்களினின்றும் அவர்களை) விடுவிக்கும்பொருட்டு.

2 'சொன்னால்' என்பது, திருவாய். 3 : 9.

3 'ஒருநாயகம்' என்பது, திருவாய். 4 : 1.

4 'கொண்ட' என்பது திருவாய். 9 : 1.
இவையெல்லாம் பரோபதேசம் செய்யும் திருப்பதிகங்கள்.

5 பிராட்டி - சீதா பிராட்டி. பெருமாள் - ஸ்ரீராமபிரான். திருவடி - அநுமான்.

இவனுக்குத் தோன்ருது என்னுமிடமும், தோன்றுவது இன்ன தற்காக என்றும் அருளிச்செய்தார் மேல். இப்படியாதாயினும் ஒருகாலத்தில் தோன்றுகிற சம்சாரிகள் குற்றங்களைத் தன் குற்றங்களாக நினைக்கின்றவனையும் அக்குற்றங்களினின்றும் அவர்களை நீக்குகின்றவனையும் போருமளவன்றிக்கே, தன் திறத்திலே அவர்கள் குற்றங்களைச் செய்தால் இவன் இருக்கவேண்டும்படியை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பிராட்டி ராக்ஷசிகள் குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவியாதவா போலே தனக்குப் பிறர் செய்த குற்றங்களைப் பகவத் பாகவத விஷயங்களில் அறிவிக்கக் கடவன் அல்லனர்' என்றது, ஏகாக்ஷீ, ஏககர்ணீ முதலான எழுநூறு அரக்கிகள் ஒரு நாள் போலே பத்து மாதங்கள் [1] தர்ஜநம் பர்த்ஸனம் பண்ணவிருந்த பிராட்டி, இவர்கள் அப்படிச் செய்த குற்றத்தைப் பகவானுன பெருமாளுக்கும் பாகவதனுன திருவடிக்கும் அறிவியாதவாறு போன்று, தன் திறத்தில் பிறர் செய்த குற்றங்களைப் பகவானிடத்திலாதல் பாகவதர்களிடத்திலாதல் மறந்தும் விண்ணப்பம் செய்யக்கடவன் அல்லன் என்றபடி. (55)

'அறிவிக்கக் கடவனல்லன்' என்றது, [2]அவர்கள் திருவுள்ளத்திலே புண்பட்டால் பண்டே அறிந்து கிடக்கிற இவர்களுக்கு மிக்க அழிவிற்குக் காரணமாம் என்று நினைத்து.

## 367

[3] அறிவிக்கவுரியவன் அகப்பட வாய்திறவாதே, சர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்கும் என்றுநின்றதிறே.

என்பது சூத்திரம்.

---

[1] தர்ஜனம் - கையால் அதட்டுவது. பர்த்ஸனம் - வாயால் மிரட்டுவது. 'தீக்குறளை சென்று ஓதோம்' என்ற திருப்பாவையில் இங்கு நினைத்தல் தகும்.

[2] 'அவர்கள் திருவுள்ளம்' என்றது இவர்கள் செய்த குற்றங்களை அறிவிக்கக் கேட்ட பகவான் திருவுள்ளத்திலும் பாகவதர்கள் திருவுள்ளங்களிலும் என்றபடி.

[3] அறிவிக்கவுரியவன் - சர்வேசுவரன். சர்வஜ்ஞ விஷயங்கள் - பிராட்டிமார்கள். 'வாய் திறவாதே மறைக்கும்' எனக் கூட்டுக. 'என்றுநின்றது' என்றது, நம்மாழ்வார் அருளிச்செய்த பெரிய திரு

அவ :—மேலே கூறியது[1] கிம்புநர் நியாய சித்தமாம்படி, ஈச்வரன் தன்மையை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' அறிவிக்கவுரியவன் அகப்பட வாய் திறவாதே, சர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்கும் என்ருநின்றதிறே ' என்றது, '' எதிர்சூழல் புக்கு '' என்கிறபடியே தம்முடைய சீலம் சௌலப்யம் முதலிய குணங்களைக் காட்டி, இவ்வுலக மக்களைத் தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளுவதாக வந்து அவதரித்து, 'தமக்கு அடியார் வேண்டும்' என்று விரும்பிஞல், அவர்கள் இப்படி அநுகூலராகத் தோன்ருதொழிந்தாலும், 'இவர்கள் செய்தபடி செய்கிருர்கள். நாம் இவர்களுக்கு உறுப்பாகப் பெற்ருேமிறே' என்று அதுதானே இனியதாக இருப்பர்; அதற்குமேல் 'அவர்கள் தன்னை விரும்பவில்லை' என்று அவர்கள் குற்றத்தைத் தனியிருப்பிலே பிராட்டிக்கும் அருளிச்செய்யார் என்கிற [2]''சூழ்ந்தடியார்'' திருப்பாசுரத்திலே மக்கள் செய்த குற்றங்களைத் தன் திருவுள்ளத்திற்கு உகந்தவர்களுடன் அறிவிக்கைக்கு உரியனை சர்வேச்வரனும் உட்படத் தன் திருப்பவளம் திறந்து அருளிச்செய்யாதே, தான் அருளிச்செய்யாதொழிந்தாலும் அறியவல்ல முற்றறிவினர்களுக்கும் மறைக்கும் என்று சொல்லா நின்றதிறே என்றபடி.

[3] இதஞல் 'அவனுட்பட இப்படி மறையாநின்ருல், இவனுக்குப் பிள்ளை சொல்ல வேண்டுமோ ?' என்றபடி. (56)

---

வந்தாதியில் 'சூழ்ந்தடியார்' என்ற திருப்பாசுரத்தில் சொல்லப்படுகின்றதன்றே என்றபடி.

[1] கிம்புநர் நியாயம் - 'வேறு கூறுவது ஏன் ?' என்ற நியாயம்.

[2] 'சூழ்ந்தடியார் வேண்டினக்கால் தோன்ருது விட்டாலும்
வாழ்ந்திடுவர் பின்னும்தம் வாய்திறவார்—சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள் போலரக்கன் வன்தலைகள் தாமிடியத்
தாள்வரைவில் ஏந்திஞர் தாம்.'

என்பது, பெரிய திருவந். 17.

[3] 'கிம்புநர் நியாயம்' என்று மேலே கூறியதை விளக்குகிருர் 'இதஞல்' என்று தொடங்கி.

## 368

**குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் கிருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்மிருதியும் நடக்க வேணும்.**[1]

**அவ** :—' இப்படி, தனக்கு வேண்டியவர்களுக்கு அறிவியாதிருத்தல் மாத்திரம் போராது ; குற்றம் செய்தவர்கள் திறத்தில் பொறுமை, அருள் முதலானவைகளும் நடக்க வேண்டும்' என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—' குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும்' என்றது, அவர்கள் செய்த குற்றத்திற்கு மாறாக வேறொரு தீங்கினைத் தாம் அவர்களுக்குச் செய்தல், அக்குற்றத்தைக் கண்டு தாம் நெஞ்சிலே கன்றியிருத்தல் என்னுமிவற்றைச் செய்யாமையாகிற பொறையுடைமையும் என்றபடி.

' குற்றம் செய்தவர்கள் பக்கல் கிருபையும்' என்றது, ' ' இவர்கள் செய்த குற்றத்தை நாம் பொறுத்திருந்தோமாகிலும் எம்பெருமான் அக்குற்றத்திற்குத் தக்க தண்டனையைச் செய்யவன்றோ புகுகிறான் ?' ஐயகோ ! இதற்கு இனி என் செய்வோம் !' என்று பிறர் படப்போகும் துக்கத்திற்கு இரங்குதலும் என்றபடி.

' குற்றம் செய்தவர்கள் பக்கல் சிரிப்பும்' என்றது, 'மேலுலக வின்பதற்குத் தடையாக இவர்களால் ஒன்றும் செய்யவியலாது ; கடுஞ்சொல் கூறல் முதலியவைகளால் இவ்வுலகவின்பத்திற்கு விரோதங்களாக உள்ளன சிலவற்றையிறே இவர்கள் செய்வது ; அப்படிச் சிலவற்றைச் செய்தால், இவர்களைப்போன்று நாமும் இவற்றிலே நசையுடையோமாய் இவை கிடையாமையைக் கண்டு

---

[1] ' திறனல்ல தன்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று.'
' இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.'
என்னும் திருக்குறள்கள் இங்கு அறிதல் தகும்.

கூரத்தாழ்வான் நாலூரானுக்குச் செய்த திருவருளை இங்கு நினைத்தல் தகும்.

' தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வரே என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்.'
என்றார் பிறரும்.

நெஞ்சாறல் பட்டுத் தளர்வோம் என்று நினைந்திருந்தார்களே அன்றோ, இவர்கள் அறிவு கேடு இருந்தபடி என்?' என்று செய்யும் சிரிப்பும் என்றபடி.

'குற்றம் செய்தவர்கள் பக்கல் [1] உகப்பும்' என்றது, அவர்கள் செய்யும் பரிபவம் முதலானவற்றிற்கு உரியதான சரீரத்தைத் தனக்குப் பகையாகவும், அவர்கள் செய்யும் கேட்டிற்கு இலக்காக வுள்ள இவ்வுலகப் பொருள்களைத் தனக்கு விரோதிகளாகவும் நினைத்திருக்கையாலே, தன் பகைவன் திறத்தில் ஒருவன் பரிபவம் முதலானவற்றைச் செய்தாலும் தனக்கு விரோதங்களாக உள்ளனவற்றை நீக்குதல் செய்தாலும் அவற்றிற்கு உகக்குமாறு போன்று, அவர்கள் திறத்துப் பிறக்கும் பிரீதியும் என்றபடி.

'குற்றம் செய்தவர்கள் பக்கல் உபகாரஸ்மிருதியும்' என்றது, 'நம்முடைய குற்றங்களை நாம் மறந்திருக்கும் நிலைகளிலே நமக்கு உணர்த்தியும், நமக்கு இவ்விருப்பிலே நசை அறும்படியான செறுப்புகளைச் செய்தும் நமக்கு இவர்கள் செய்யும் உபகாரம் என்தான்?' என்றிருக்கும் [2] செய்ந்நன்றியறிவும் என்றபடி.

'நடக்கவேணும்' என்றது, இவை இத்தனையும் குற்றம் செய்தவர்கள் திறத்திலே இவனுக்கு அவசியம் உண்டாக வேண்டும் என்பது தோற்றுகைக்காக. (57)

[3] ஆக, இப்பிரகரணத்தால், "ஹிதோபதேசம் செய்யுங்காலத்தில் தகாத எண்ணங்களின் விசேடங்களும், [5] அந்தத் தகாத

---

[1] சிரிப்பு வேறு; உவகை வேறு. சிரிப்பு, முகத்தின்கண் தோன்றுவது. உவகை, மனத்தின்கண் தோன்றுவது. சிரிப்பு - நகை என்றும் கூறப்படும். 'நகை என்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவேசிரித்தலும், பெருகச்சிரித்தலும் என மூன்று என்ப.' என்பது பேராசிரியருரை.

'எள்ளல் இளமை பேதைமை மடன்என்று
உள்ளப் பட்ட நகைநான் கென்ப.'

என்பது, தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல்.

[2] இங்கு, திருவரங்கநாதன் திருவோலக்கத்திலே தன்னைப் பரிபவித்த ஒருவனுக்கு, நாம் அறியாத நம் குற்றங்களை எடுத்துக்காட்டின இம்மஹோபகாரகனுக்கு என் செய்வோம் என்று, தாம் அணிந்திருந்த முத்துமாலையைக் கழற்றி அவனுக்குப் பரிசிலாகக் கொடுத்தார் என்ற பட்டர் சரித்திரம் நினைத்தல் தகும்.

[3] இப்பிரகரணத்தில் கூறியுள்ளனவற்றையெல்லாம் தொகுத்து அருளிச்செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

[4] இதனை, 312, 313ஆம் சூத். காண்க.

[5] இதனை, 314ஆம் சூத். காண்க.

எண்ணங்கள் இல்லாமல் உபதேசிக்க வேண்டும் என்னுமிடமும், [1] உபதேசத்திற்கு நேரான பலனும், உபதேசிக்கின்றவனுக்கு ஆசாரியனாகும் தன்மையும் சித்திக்கும் வழிகளும், [2] தகாத எண்ணங்களுடன் உபதேசிக்கில் ஆசாரியனுக்கும் சிஷ்யனுக்கும் சொரூப சித்தியில்லாமையும், [3] உபதேசிக்கின்ற ஆசாரியனுக்கு அவசியம் இருக்கத்தக்க இரண்டு குணங்களும், [4] நேராக ஆசாரியனாம் தன்மை இன்ன மந்திரத்தை உபதேசித்தவனுக்கு என்றும் சொல்லுகையாலே நல்லாசாரியன் இலக்கணத்தையும், அதன் பின்னர் [5] நன்மாணுக்கன் இலக்கணத்தையும், [6] அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் நடந்துகொள்ள வேண்டிய முறைகளையும், [7] சிஷ்யனுக்கு ஆசாரியன் திறத்தில் 'தீமனம் கெடுத்தாய்' என்பது போன்றவைகளில் சொல்லுகிறபடியே சரீரம் முடியும் வரையிலும் செய்ந்நன்றியறிதல் நடக்கவேண்டும் என்னுமதனையும், [8] மனத்திற்குத் தீமை இன்னது என்னுமிடத்தையும்,[9] அவற்றுள் விளக்க வேண்டியவற்றைப் பற்றிய விளக்கத்தையும், அவற்றைச் சொல்லிய முறையிலே மற்றும் இவனுக்கு வேண்டற்பாலவான [10] அர்த்த விசேடங்களையும் சொல்லுகையாலே, மேலே கூறிய துவய மந்திரத்தின் அநுஷ்டானத்திலே நிலை நின்றவனான அதிகாரிக்கு அந்த மந்திரத்தை உபதேசித்தவனான ஆசாரியன் திறத்தில் உண்டாக வேண்டும் எண்ணங்களின் வகைகளும் அவனைச் சார்ந்து ஒழுக வேண்டிய ஒழுக்க முறைகளும் சொல்லப்பட்டன.

நான்காவதான சதாசார்ய
அநுவர்த்தன கிரமம் முற்றிற்று.

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!

---

1 இதனை, 315ஆம் சூத். காண்க.
2 இதனை 316ஆம் சூத். காண்க.
3 இதனை 317, 318ஆம் சூத். காண்க.
4 இதனை 319, 320ஆம் சூத். காண்க.
5 இதனை 325 முதல் 329 முடிய உள்ள சூத். காண்க.
6 இதனை 330 முதல் 351 முடிய உள்ள சூத். காண்க.
7 இதனை 352ஆம் சூத். காண்க.
8 இதனை 353ஆம் சூத். காண்க.
9 இதனை 354 முதல் 367 முடிய உள்ள சூத். காண்க.
10 இதனை 368ஆம் சூத். காண்க.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஐந்தாவது பிரகரணம்

# பகவந் நிர்ஹேதுக கிருபா பிரபாவம்

## 369

[1]ஸ்வதோஷ அநுசந்தானம்பய ஏது; பகவத் குண அநுசந்தானம் அபய ஏது.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, 'ஸ்வதோஷ அநுசந்தானம் பய ஏது' என்ற இச்சூத்திரம் முதல் [2]'நிவர்த்திய ஞானம் பய ஏது, நிவர்த்தக ஞானம் அபய ஏது' என்ற சூத்திரம் முடிய, இவ்வதி காரிக்கு அநாதி காலமாக ஈட்டப்பெற்ற கர்மங்கள் அழிவதற்குக் [3]காரணமாய், [4]அத்வேஷம் முதலாகப் பிராப்தி முடிவாக நடு உள்ள பேறுகளுக்கெல்லாம் முதன்மையான காரணமான 'பக வன் நிர்ஹேதுக கிருபா வைபவம்' சொல்லப்படுகிறது.

[5]'சம்சாரிகள் குற்றமும் தன் குற்றம் என்று நினைத்தல்' முதலாகப் பிரசக்த அநுப்பிரசக்தமாக வந்த அர்த்த விசேடங் களை அருளிச்செய்து தலைக்கட்டின பின்பு, மேல் [6]'ஸ்வதோ

---

[1] இறைவன், தான் திருவருள் செய்ய நினைத்தவர்களுக்கு, ஒரு காரணமும் பற்றாது செய்யும் திருவருளின் பெருமை என்பது பொருள்.

ஸ்வதோஷம் - தன் குற்றம். அநுசந்தாநம் - நினைவு. அபயம் - அச்சம் இன்மை.

[2] இது, இப்பிரகரணத்தின் ஈற்றில் உள்ள சூத்திரம்.

[3] 'காரணமாய்' என்பதனைப் பின் வருகின்ற 'காரணமான' என்றதனோடு முடிக்க.

[4] 'அத்வேஷம் முதலாக' என்றது அத்வேஷம், ஆபிமுக்யம், சாத்வித சம்பாஷணம், சதாசார்ய சமாஸ்ரயணம், தத்வஞானம், பகவத் சரணவரணம் என்பனவற்றை.

[5] 362ஆம் சூத்திரம் முதலானவற்றைக் காண்க.

[6] 361ஆம் சூத்திரம்.

ஷத்துக்கு " என்று தொடங்கும் சூத்திரத்தில் இவனுக்கு எப்பொழுதும் செய்யத்தக்கனவாகச் சொன்ன தன் குற்றத்தை நினைத்தல், பகவானுடைய குணங்களை நினைத்தல், பாகவதர்களுடைய குணங்களை நினைத்தல் என்னும் இவற்றுள், பாகவதர்களுடைய குணங்களை நினைத்தல், இங்குச் சொல்லப்படும் துவய அதிகாரத்திற்கு வேண்டாவாகையாலே அதனை விட்டு, அதற்கு வேண்டுவனவாகிய தன் குற்றத்தை நினைத்தல், பகவானுடைய குணங்களை நினைத்தல் என்னும் இவற்றை அங்கீகரித்துக் கொண்டு அவை இரண்டற்கும் பிரயோஜனம் இன்னது என்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—' ஸ்வதோஷ அநுசந்தானம் பய ஏது ' என்றது, ' ஆத்ம குணங்களுக்கு மாறுபட்ட குணங்களும் அவற்றிற்கு மூலமாய் அநாதி காலமே பிடித்துக் காழ்ப்பேறிக் கிடக்கிற [7] அவித்தை முதலானவைகளும் ஆகிற இவற்றை நினைப்பதானது இதுவிது காரணமாக இன்னம் பிறவி வரில் செய்வது என் ?' என்னும் அச்சத்திற்குக் காரணமாம் என்றபடி. ' பகவத் குண அநுசந்தானம் அபய ஏது ' என்றது, இக்குற்றங்களைக் கண்டு இகழாமல் அங்கீகரித்து, இவற்றைப் பொறுத்து, இவ்வான்மாவைத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகைக்கு உடலான அவனுடைய, பொறுமை முதலான குணங்களை நினைப்பதானது, அநாதி காலம் பிறப்பதற்குக் காரணமாகப் போந்த தன் குற்றத்தினுடைய வன்மையைப் பார்த்து, ' இன்னமும் அப்படியாகில் செய்வது ஏன்? ' என்கிற அச்சமானது நீங்குதற்குக் காரணமாம் என்றபடி.

[8] " கடக்க முடியாததாய், ஆதியற்றதாய், எத்தகையோரும் பிற்காலிக்கும்படியிருப்பதாய், மிகப்பெரியதாய் உள்ள பாவத்

---

[7] அவித்தை, கர்மம், வாசனை, ருசி என்பவைகள்.

[8] தன் குற்றத்தை நினைத்தல் அச்சத்திற்குக் காரணம் என்பதற்கும், அவனுடைய குணங்களை நினைத்தல் அவ்வச்சம் நீங்குதற்குக் காரணம் என்பதற்கும் பிரமாணம் காட்டுகிறார், ' கடக்க ' என்று தொடங்கி.

' துரந்தஸ் யாநாதேர பரிஹரணீயஸ்ய மஹதோ
நிஹிநாசா ரோஹம் நிருபஶ¬ரஶ¬பஸ்யாஸ்பதமபி
தயாஸிந்தோபந்தோ நிரவதிஹ வரத்ஸல்ய ஜலதே
தவஸ்மாரம் ஸ்மாரம் குணகணமிதீச்தாமி கதபீ:'

என்பது, தோத்திரரத்நம், 48.

திற்குத் தீய ஒழுக்கமுடையவனும் மிருகத்தைப் போன்றவனும் இருக்கிற நான், இருப்பிடமானாலும், தயாநிதியே, காரணமில்லாத பந்துவே, எல்லையில்லாத வாத்சல்ய குணத்திற்குக் கடல் போன்றவரே, தேவரீருடைய கல்யாண குணங்களின் கூட்டத்தை நினைந்து நினைந்து அச்சம் நீங்கினவனாகிப் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை விரும்புகிறேன்,'' என்னக் கடவதிறே. (1)

## 370

பயாபயங்கள் இரண்டும் மாறாடில், [1] அஜ்ஞதையே சித்திக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி, இவ்விடத்திலே அச்சத்திற்குக் காரணமான எல்லாக் குற்றங்களையும் அச்சமின்மைக்குக் காரணமான எல்லாக் குணங்களையும் சேரச் சொல்லியிருந்தும், [2] 'இழவுக்கு அடி கர்மம் ; பேற்றுக்கு அடி கிருபை' என்றும், [3] 'கர்மபலம் போலே கிருபா பலமும் அநுபவித்தேயறவேணும்' என்றும், [4] கர்மத்தை இழவிற்கும் கிருபையைப் பேற்றிற்கும் காரணமாகச் சொல்லிக்கொண்டு சென்று, 'பய ஏது கர்மம்; அபய ஏது காருண்யம்' என்று முடித்தது, இவையெல்லாவற்றுள்ளும் இவனுக்குப் பிறப்பிற்கும் பேற்றிற்கும் முதன்மையான காரணங்கள் இவையாகையாலே. இவை இரண்டையும் பின் செல்லும் மற்றுள்ளவையும் இவை புக்கவிடத்தே தாமே வந்துவிடுமிறே. [5] இங்ஙன் அன்றிக்கே, அவன்படியை நினைத்து அச்சமின்மையுமாம் அளவில் அறிவின்மையே பலிக்கும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பய அபயங்கள் இரண்டும் மாறாடில், அஜ்ஞதையே சித்திக்கும்' என்றது, 'மேலே கூறியபடி அன்றிக்கே,

---

[1] அஜ்ஞதை - அறிவின்மை.

[2] 377ஆம் சூத்திரம்.

[3] 406ஆம் சூத்திரம்.

[4] 408ஆம் சூத்திரம்.

[5] 'இங்ஙன் அன்றிக்கே' என்றது, தன்படியை நினைந்து அஞ்சுதலும், அவன் படியை நினைந்து அச்சம் கெட்டிருத்தலும் செய்ய வேண்டும்; அங்ஙனம் அல்லாமல் என்றபடி.

[1] தனக்குப் பரதந்திரமான இந்த ஆன்மாவை அநாதி காலம் கர்மங்களை வியாஜமாகக் கொண்டு பிறந்தும் இறந்தும் உழலச் செய்தவன் அன்றோ, தடையற்ற சுவாதந்திரியத்தையுடையவன் ? இன்னமும் பிறந்து இறந்து உழலச் செய்யில் செய்வது என் ?' என்று அவன்படியை நினைந்து அஞ்சுதலும், [2] 'முன்பு போல அன்றிக்கே, நமக்கு இப்போது ஆத்ம குணங்கள் உளவாகை யாலே பேற்றில் கண்ணழிவு இல்லை' என்று தன்படியை நினைந்து அச்சம் கெடுகையுமாமளவில், தான் தனக்கு நாசகன் என்று அஞ்சுதலும் 'ஈச்வரனே காப்பாற்றுகிறவன்' என்று அச்சம் கெட்டிருக்கையுமாகிற [3] அறியுந்தன்மை இல்லாமையாலே அறி வின்மையே பலித்துவிடும் என்றபடி. (2)

## 371

'ஆனால் [1] [4] 'நலிவான் இன்னம் எண்ணு கின்றாய்', 'ஆற்றங்கரை வாழ்மரம்போல் அஞ்சு கின்றேன்' என்கிற பாசுரங்களுக்கு அடி என்?' என்னில்,

என்பது சூத்திரம்.

அவ :—'அஜ்ஞதையே சித்திக்கும்' என்ற இதனை மறுப் பதற்காக, ஆழ்வார்கள் பாசுரங்களைக்கொண்டு, மாறுபடு கின்றவர்கள் கேட்கும் வினவை அநுவதிக்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] அவன் படியை நினைந்து அஞ்சுதலுக்குரிய காரணங்களைக் காட்டுகிறார் 'தனக்கு' என்று தொடங்கி. தனக்கு - இறைவனுக்கு.

[2] தன் படியை நினைந்து அஞ்சாமைக்குரிய காரணம், 'முன் போல...உளவாகையாலே' என்பது.

[3] 'அறியும் தன்மை' என்றது திருமந்திரத்தால் கிடைக்கும் ஞானத்தை. 'தான் தனக்கு நாசகன்' என்றது 'நம:' பதத்திலே 'ம:' என்றதனால் கிடைக்கும் பொருள். 'ஈசுவரனே காப்பாற்று கிறவன்' என்பது 'ஓம்' என்ற பிரணவத்தால் கிடைக்கும் பொருள்.

[4] 'நலிவான்' என்பது திருவாய். 7. 1 : 1.

'ஆற்றங்கரை' என்றது, பெரிய திருமொழி, 11. 8 : 1.

'மேலே காட்டிய திருப்பாசுரங்களில் இறைவனுடைய சுவாதந்திரி யத்தை நினைந்து ஆழ்வார்கள் அஞ்சியிருக்கின்றார்களே? அவனுடைய சுவாதந்திரியத்தை நினைந்து அஞ்சுதல் அறிவின்மைக்குக் காரணமாம் என்றது பொருந்துமாறு யாங்ஙனம்?' என்பது இச்சூத்திரத்திற்குக் கருத்து.

வியாக் :—‘ ஆனால், ‘ நலிவான் இன்னம் எண்ணுகின்றாய் ’, ‘ ஆற்றங்கரை வாழ் மரம் போல் அஞ்சுகின்றேன் ’ என்கிற பாசுரங்களுக்கு அடி என் ?’ என்றது, [1] ‘ இப்படியாகில், உண்மையை உள்ளவாறு அறிந்தவர்களுள் தலைவர்களான ஆழ்வார்கள் ‘ உண்ணிலாவிய ஐவரால் குமை தீற்றி என்னை உன் பாதபங்கயம் நண்ணிலா வகையே நலிவான் இன்னம் எண்ணுகின்றாய் ’ என்று, [2] ‘ காட்டிப்படுப்பாயோ ’ என்கிற படியே விஷயங்களைக் காணில் முடியும்படியான என்னை, எப்பொழுதும் உள்ளே வசிக்கையாலே உட்பகைவர்களாக விருக்கிற இந்திரியங்கள் ஐந்தாலும் நலிவுபடும்படி செய்து, தக்கனவும் இனியனவுமான உன் திருவடிகளைக் கிட்டாத படியாகவே, நான் உன்னை அடைந்த பின்பும் இவ்வுலக வாழ்விலே வைத்து நலிய எண்ணுகின்றாய் ’ என்றும்,

‘ மக்கள், தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல் என்று இன்னம், ஆற்றங்கரை வாழ் மரம் போல் அஞ்சுகின்றேன் ’ என்று, மக்களுடைய கருக்குழியிலே என்னுடைய கர்மங் களுக்குத் தகுதியாக இன்னம் பிறப்பிக்கிறாயோ ’ என்று, ‘ இப் போது போயிற்று, இப்போது போயிற்று ’ என்னும்படி அச்சத் திற்கு இடமான ஆற்றங்கரையிலே இருக்கிற மரம் போலே, உன் சுவாதந்திரியத்தை நினைந்து அஞ்சாநின்றேன் ’ என்றும் அருளிச்செய்த பாசுரங்களுக்குக் காரணம் என் ’? என்னில் என்றபடி. (3)

## 372

[3] பந்தாநுசந்தானம்

என்பது சூத்திரம்.

அவ :—அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ பந்த அநுசந்தானம் ’ என்றது, பேறு இழவுகள் இரண்டும் அவனாலே என்னலாம்படி ஒரு காரணமும் பற்றாமலே காப்பாற்றுகின்றவனை அவனோடு தங்களுக்கு உண் டான சம்பந்தத்தை நினைக்கும் நினைவு என்றபடி. (4)

---

[1] ‘ இப்படியாகில் ’ என்றது, ‘ அறிவின்மையே பலிக்குமாகில் ’ என்றபடி.

[2] திருவாய். 6. 9 : 9.

[3] பந்தம் - உறவு. அதாவது, பிதா புத்திர சம்பந்தமும், காப்பவன் காப்பாற்றப்படுமவர்கள் என்ற சம்பந்தமும்.

## 373

**[1]பிரஜை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமா போலே, நிருபாதிகபந்துவாய்ச் சக்தனுயிருக்கிறவன் விலக்காதொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே.**

என்பது சூத்திரம்.

**அவ :—**'அவனுக்கும் தனக்கும் உள்ள சம்பந்தத்தை நினைக்கும் நினைவாலே, இப்படித் தன்னுல் வருமவற்றை அவன் குறையாகச் சொல்லலாமோ?' என்ன, 'ஆம்' என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'பிரஜை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமா போலே' என்றது, விளையாடுதல் நிமித்தமாகத் தெருவிலே ஓடித் திரிகின்ற குழந்தை, அங்கே இடறிக்கால் நொந்தவாறே, அழுதுகொண்டே வீட்டிற்கு வந்து, தனக்கு இத்துன்பம் வந்தது தாயாலேயாக நினைத்து, அவள் முதுகிலே குத்துமாறு போலே என்றபடி. 'நிருபாதிகபந்துவாய்ச் சக்தனுய் இருக்கிறவன் விலக்காதொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே' என்றது, ஒரு காரணம் பற்றி வந்தது அல்லாமையாலே ஒழிக்க ஒழியாத உறவினையுடையனுமாய், இவனுடைய கர்மத்தோடு பிரகிருதியோடு பிரகிருதியின் காரியமான பொருள்களோடு வேற்றுமை அற எல்லாமும் தன் வயமாகையாலே வினைக்குத் தக்கவாறு பிரகிருதி பிராகிருதங்களாலே இவன் படுகிற நலிவைத் தவிர்க்கைக்கு ஆற்றலுடையனுமாய் இருக்கிற அவன், நலிவு படவிட்டு விலக்காதொழிந்தால், அவன் 'இவற்றை இட்டு நலிவிக்கிருன்' என்னலாமிறே என்றபடி. (5)

---

[1] பிரஜை - குழந்தை. நிருபாதிக பந்து - ஒரு காரணமும் பற்ருமல் வந்த தந்தை. சக்தன் - ஆற்றல் உள்ளவன். இருக்கிறவன் - இறைவன்.

## 374

பிரஜையைக் கிணற்றின் கரையினின்றும் வாங்காதொழிந்தால், தாயே தள்ளினுள் என்னக் கடவதிறே.[1]

என்பது சூத்திரம்.

அவ :—'விலக்காத மாத்திரம் கொண்டு அவன் செய்தான் என்னலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'பிரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால், தாயே தள்ளினுள் என்னக் கடவதிறே' என்றது, கிணற்றின் கரையிலே குழந்தை இருக்கிறபடியைக் கண்ட தாயானவள், அப்போதே ஓடிச்சென்று கிணற்றின் கரையினின்றும் வாங்காதொழிந்தால், அக்கிணற்றிலே குழந்தை விழுந்த அளவில், 'தாய் அப்பொழுதே சென்று எடுத்தாளாகில் குழந்தை விழுமோ? கிணற்றின் கரையில் இருப்பை இவள் சம்மதித்திருக்கையாலேயன்றே குழந்தை விழுந்தது? ஆன பின்பு, இவள் அன்றே தள்ளினுள்?' என்று உலகம் சொல்லக் கடவதிறே என்றபடி. (6)

## 375

இவனுடைய [2]அநுமதி பேற்றுக்கு ஏது அல்லாதவா போலே, அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஏது அன்று.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனல், [3]'அப்ரதிஷித்தம் அநுமதம்' என்கிற நியாயத்தாலே விலக்காமையானது அநுமதியாயற்ற பின்பு,

---

1 'தன்குழவி வான்கிணற்றைச் சார்ந்திருக்கக் கண்டிருந்தாள்
என்பதன்றே அன்னைபழி யேற்கின்ருள்—நன்குணரில்
என்னலே என்நாச மேனும் எதிராசா
உன்னலே யாமுறவை ஓர்.'

என்ற திருப்பாசுரம் இங்கு நினைத்தல் தகும்.

2 அநுமதி - இசைவு. பேற்றுக்கு - மோக்ஷத்திற்கு. அவன் - இறைவன்.

3 அப்ரதிஷித்தம் - வேண்டா என்று விலக்காதிருத்தல். அநுமதம் - உடன்பட்டதாம்.

இறைவனுடைய அநுமதியோ பின்னை இவன் இழவிற்குக் காரணம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'இவனுடைய அநுமதி பேற்றுக்கு ஏது அல்லாதவா போலே' என்றது, காக்கப்படுகின்றவனை [1] இவனுடைய காக்கப்படுதற்கு இசையும் இசைவு, [2] 'அசித்தைக் காட்டிலும் வேறுபட்டவன்' என்பதனைக் காட்டுகின்ற விசேஷத் தன்மையாகையாலே, பகவானை அடைதற்குக் காரணம் அல்லாதவாறு போன்று என்றபடி. 'அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஏது அன்று' என்றது, பாதுகாப்பவனை இறைவன், இவன் பிறந்து இறந்து உழல்வதற்கு இசைந்திருக்கும் இசைவும், தன்னுடைய ஆணை உருவமான சாஸ்திர மரியாதை நிலைத் திருப்பதற்காக, 'முறைப்படி அங்கீகரிப்போம்' என்று இவனுடைய ருசியைப் பார்த்திருக்கிற இருப்பு ஆகையாலே, இவன் இறைவனை அடையாமைக்குக் காரணம் ஆகாது. (7)

## 376

இரண்டும் இருவர்க்கும் சொரூபம்.

என்பது சூத்திரம்.

**அவ** —'இவ்விருவருடைய அநுமதியும் பின்னை யாதாவது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'இரண்டும் இருவர்க்கும் சொரூபம்' என்றது, பரதந்திரனும் சுவதந்திரனும் இருக்கிற இருவர்க்கும், இரண்டும் தனித்தனியே அவர் அவர்கட்கே உரிய தன்மைகளாம் என்றவாறு. என்றது, பரதந்திரனை இவனுக்குத் தன்னைப் [பா]துகாப்பதற்கு இசையும் இசைவு, இவனுடைய சொரூபத்திற்கு மாறுபட்டது அல்லாமையாலே, இவனுக்குச் சொரூபம்; சுவதந்திரனை அவனுக்கு, தன்னால் பாதுகாக்கப்படுகின்ற பொருள்களைப் பாதுகாப்பதில், தன்னுடைய ஆணை உருவமான சாஸ்திரங்களுக்குத் தகுதியாக நடத்தற்குக் காரணமான சம்சார அநுமதி, சுவாதந்திரியத்திற்கு உரிய விசேஷமான தன்மை யாகையாலே, அவனுக்குச் சொரூபம் என்றபடி. (8)

---

[3] 'இவனுடைய இசைவு' எனக்கூட்டுக.

[4] 'இசைவு பகவானை அடைதற்குக் காரணம் அல்லாதவாறு போன்று' எனக்கூட்டுக.

## 377

[1] இழவுக்கு அடி கர்மம்; பேற்றுக்கு அடி கிருபை.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆனல், இழவிற்கும் பேற்றிற்கும் காரணங்கள் யாவை?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத் தால்.

வியாக் :—'இழவுக்கு அடி கர்மம்' என்றது, பகவானை அநாதி காலம் இழந்திருத்தற்குக் காரணம் [2]'முன்செய்த முழுவினை' என்னும்படி அநாதி காலம் ஈட்டப்பெற்ற இவ னுடைய கர்மம் என்றபடி. 'பேற்றுக்கு அடி கிருபை' என்றது, இப்படி இழந்து கிடந்தவன் பகவானைப்பெறுதற்குக் காரணம் [3]'விதிவாய்க்கின்று காப்பாரார்' என்னும்படி [4]இருகரையும் அழியப் பெருகும் பகவானுடைய அருள் என்றபடி. (9)

## 378

மற்றைப்படி சொல்லில் இழவுக்கு உறுப்பாம்.

என்பது சூத்திரம்.

அவ :—இங்ஙன் அன்றிக்கே மாறிச்சொல்லுமளவில் வரும் கேட்டினை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'மற்றைப்படி சொல்லில் இழவுக்கு உறுப்பாம்' என்றது, இப்படி அன்றிக்கே, [5]'பயாபயங்கள் இரண்டும் மாருடில்' என்கிறவிடத்தில் போலே, இழவுக்கு அடி ஈச்வர னுடைய சுவாதந்திரியம், பேற்றிற்கு அடி இவனுடைய நற்குணங்கள் என்று இழவு பேறுகளுக்குக் காரணத்தை மாற்றிச் சொல்லில், ஈச்வரன் கைவாங்குகையாலே, அவன் திருவடிகளைப் பெருமல் இழந்து போதற்குக் காரணமாம் என்றபடி.

---

1 இழவு - பகவானை அடையாமல் இழத்தல்.

2 திருவாய். 1. 4 : 2.

3 திருவாய். 5. 1 : 1.

4 இருகரை - இவனுடைய பாவங்களாகிற கரையும், அவனுடைய சாஸ்திர மரியாதையாகிற கரையும்.

5 370ஆம் சூத்திரம்.

இனி, இச்சூத்திரத்திற்கு 'இழவிற்கு அடி இவனுடைய கர்மம்; பேற்றிற்கு அடி ஈச்வரன் கிருபை' என்று, இழவு இவனாலும் பேறு அவனாலும் சொன்னபடி அன்றிக்கே, 'இழவு பேறுகள் இரண்டற்கும் அடி ஈச்வரனுடைய சுவாதந்திரியம்' என்று, அநாதி காலம் இழந்ததற்கும் காரணம் அவனைச் சொல்லில், அவன் கைவாங்குகையாலே, அவனைப்பெறுமலே இழந்து போகைக்கு உடலாய்விடும் என்று பொருள் கூறலுமாம். (10)

## 379

எடுக்க நினைக்கிறவனைத் 'தள்ளினாய்' என்கை எடாமைக்கு உறுப்பிறே.

என்பது சூத்திரம்.

**அவ :—இப்படிச்** சொல்லுமளவில் ஈச்வரன் கைவாங்கும் என்னுமதனை உலகில் வழங்கும் நியாயத்தை எடுத்துக்கொண்டு விளக்குகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'எடுக்க நினைக்கிறவனைத் 'தள்ளினாய்' என்கை எடாமைக்கு உறுப்பிறே' என்றது, ஆழ்ந்த கிணற்றிலே தன் கர்மங்களுக்குத் தகுதியாக, குறிக்கோள் இன்மையாலே விழுந்தவனை, அருகே நின்ற பேரருளாளன் ஒருவன் எடுப்பதாக முயற்சி செய்யுமளவில், தான் விழுகிற போது அவன் அருகில் இருந்தான் என்ற அளவைக்கொண்டு, அவன் தன்னைத் தள்ளினானாக நினைத்து, 'இக்கிணற்றிலே என்னைத் தள்ளினாயும் நீ அன்றோ'? என்றால், 'நான் செய்யாத காரியத்தை இவன் சொல்லுவதே!' என்று சீற்றம் அடைந்து எடாமல் கைவாங்குகைக்கு உறுப்பு ஆமாறு போலே, தன்னுடைய கர்மத்தாலே இவ்வுலக வாழ்வாகிற படுகுழியிலே விழுந்து கிடக்கிற தன்னை எடுக்க நினைக்கிற பேரருளாளனான ஈச்வரனை 'இத்தனை காலமும் என்னைச் சம்சாரத்திலே தள்ளிவிட்டு வைத்தாயும் நீயே' என்றால், சீறிக் கைவாங்கி, 'பட்டது படுகிறான்' என்று இருந்து விடுதற்கு உறுப்பாமிறே என்றபடி. (11)

## 380

'சீற்றமுள' என்று, அநந்தரத்திலே இவ் வர்த்தத்தைத் தாமே அருளிச்செய்தாரிறே.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படிச் சொல்லுகை ஈச்வரனுக்குச் சீற்றத்திற்குக் காரணம் என்னுமிது உலக நியாயம் கொண்டு சொல்ல வேண்டுமோ? உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்த திருமங்கையாழ்வார் முன் செய்யுளுக்குப் பின்னே தாமே அருளிச் செய்தாரிறே' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[1] சீற்றம் உள என்று [2] 'இன்னம் மக்கள் தோற்றக் குழி தோற்றுவிப்பாய் கொல்?' என்று ஈச்வரன் தன் சுவாதந்திரியத்தாலே பிறந்து இறந்து உழலும்படி செய்கிறு ஞகைச் சொன்ன இது, கர்மங்கட்குத் தகுதியாகப் பிறந்து உழலு கின்ற ஆன்மாவைச் சம்சாரத்தினின்றும் எடுப்பதற்குக் கிருஷிபண்ணிப்போரும் அவன் திருவுள்ளம் சீறுகைக்கு உடல் என்று நினைத்து, மேலே விண்ணப்பம் செய்த வார்த்தையாலே

---

[1] 'சீற்றமுள என்ற' என்பது முன்னைய பதிப்புகளில் கண்ட பாடம். அப்பாடம் பொருள் அமைதிக்குப் பொருந்துமாறு இல்லை. 'வெறிதே அருள் செய்வர் என்று இவ்வர்த்தத்தை ஸ்பஷ்டமாக அருளிச் செய்தாரிறே' (சூத். 396) என்பது போன்று இச்சூத்திரமும் அமைந்திருக்க வேண்டும். 'நிர்கிருணன் என்று வாய் மூடுவதற்கு முன்னே' (சூத். 423) என்று முன்புள்ள பாடத்தை 'நிர்கிருணன் என்ற வாய் மூடுவதற்கு முன்னே' என்று திருத்தியது போன்று, இது வும் திருத்தப்பட்ட பாடமாகும். 'நன்று. 'அநந்தரத்திலே' என்பதற்கு அநந்தரப்பாட்டிலே என்று பொருள் கொள்ளின் பொருள் அமையுமே?' எனின், ஆசிரியர் அக்கருத்தினராயின், 'மேம்பொருளுக்கு மேலில் பாட்டுகளிலும்' (சூத். 229) என்று விதந்து கூறியது போன்று ஈண்டும் 'அநந்தரப் பாட்டிலே' என்று விதந்து கூறுவர்; அங்ஙனம் கூருமையானும், தாம் அருளிச்செய்யும் பொருள்களில் சிறிதும் ஐயம் திரிபுகள் தோன்ருதவாறு தெளிவாகக் கூறும் திறன் வாய்ந்த மணவாள மாமுனிகளும் இச்சூத்திர அவதாரிகையில் 'பூர்வ உக்திக்கு அநந்தரத் திலே' என்றும், வியாக்கியானத்தில் 'முதல் வார்த்தைக்கு அநந்தரத் திலே' என்றுமே பொருள் அருளிச்செய்கையாலும், அப்பொருளில் அச்சொல்லினை நூலாசிரியரும் உரையாசிரியரும் யாண்டும் ஆளாமை யானும் அப்பொருள் அமைதியாகாது.

[2] பெரிய திருமொழி, 11. 8 : 1.

[1] திருவுள்ளத்திற்குச் சீற்றம் உண்டு என்று, அனந்தரத்திலே—[2] முதல் வார்த்தைக்குப் பின்னே. இவ்வர்த்தத்தை—'இழவுக்கு அடி அவனுகச் சொல்லுகை சீற்றத்திற்குக் காரணம்' என்னும் இவ்வர்த்தத்தை, தாமே அருளிச் செய்தாரிறே—[3] முன்பு அப்படி அருளிச் செய்த தாமே அருளிச்செய்தார் என்றபடி. (12)

## 381

**'சீற்றம் உண்டு என்று அறிந்தால் சொல்லும்படி என்'? [4]என்னில், அருளும் ஆர்த்தியும் அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும்.**

என்பது சூத்திரம்.

**அவ :—**'சீற்றம் உள' என்ற பின்பும் 'ஆகிலும் செப்புவன்' என்று முன்பு சொன்னதனையே சொல்லுகைக்கு உரிய காரணத்தை விஞவும் விடையுமாக அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

**வியாக் :—**'சீற்றம் உண்டு என்று அறிந்தால் சொல்லும் படி என்? என்னில்' என்றது, மேலே கூறிய 'இதனுலே ஈச்வரன் திருவுள்ளத்திலே சீற்றம் உண்டு என்று அறிந்தால், பின்னையும், இவ்வார்த்தையைக் கூசாமல் திருமுன்பே சொல்லும்படி எங்ஙனே?' என்னில் என்றபடி. 'அருளும் ஆர்த்தியும் அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும்' என்றது, அவன்

---

[1] 'சீற்றம் உண்டு என்று' என்பதனை மேலே வருகின்ற 'தாமே அருளிச்செய்தாரிறே' என்பதனேடு கூட்டுக.

[2] 'முதல் வார்த்தைக்குப் பின்னே' என்றது, 'மாற்றமுள' என்கிற முன் செய்யுளுக்குப் பின்னே என்றபடி.

[3] 'முன்பு அப்படி அருளிச்செய்த'- முதற்செய்யுளிலே மக்கள் தோற்றக் குழி தோற்றுவிப்பாய்கொல் என்று ஆற்றங்கரை வாழ்மரம் போல் அஞ்சுகின்றேன் என்று அருளிச்செய்த தாமே என்றபடி.

[4] 'சொல்லும்படி என்? என்னில்' என்றது, 'தாம் கூறிய வார்த்தைகள் இறைவன் திருவுள்ளத்தில் சீற்றத்தை உண்டுபண்ணிவிட்டன என்று அறிந்தால், பின்னர் அவ்வார்த்தைகளை அவன் திருமுன்பு கூருதொழியவேண்டாவோ! மீண்டும் மீண்டும் அவ்வார்த்தையைக் கூறுதற்குக் காரணம் என்!' என்னில் என்றபடி. ஆர்த்தி - துன்பம். அநந்யகதித்வம் - வேறு புகலிடம் இல்லாமை. 'என்? என்னில்' என்பது முடிய விஞ. அதற்குமேல் உள்ளன விடை.

சீற்றத்தைத் தன் அருகில் நிற்கவொட்டாதபடி [1]செய்யும் பிறர் துக்கத்தைக் கண்டால் பொறுக்கமாட்டாமையாகிற அருளும், சீற்றம் கண்டு அஞ்சிவாய்மூடவொட்டாதபடி கரை அழிந்து செல்லுகிற பிறவித் துன்பமும், சீறி எடுத்து எறியிலும் வேறு புகல் இல்லாமையாகிற அநந்யகதித்வமும் சொல்லும்படி செய்யும் என்றபடி.

[2]இத்திருமொழியிலே 'அடைய அருளாய் எனக்கு உன்றன்னருளே' என்றும், 'துணியேன் இனி நின்னருள் அல்லது எனக்கு' என்றும், 'தொண்டரானவர்க்கு இன்னருள் செய்வாய்' என்றும் பலவிடங்களிலே அவன் அருளையும்; 'ஆற்றங்கரை வாழ் மரம்போல் அஞ்சுகின்றேன்' என்றும், 'காற்றத்திடைப்பட்ட கலவர் மனம் போல், ஆற்றத்துளங்கா நிற்பன்' என்றும், 'பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற் போல், தாங்காது உள்ளம் தள்ளும்' என்றும் 'இருபாடு எரி கொள்ளியினுள் எறும்பேபோல், உருகா நிற்கும் என்னுள்ளம்!' என்றும், 'வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே உள்ளம் துளங்கா நிற்பன்' என்றும் பல உவமைகளால் தம்முடைய துன்பத்தையும் அநந்யகதித்வத்தையும் அருளிச்செய்தாரிறே. (13)

## 382

சீறினாலும், காலைக் கட்டிக்கொள்ளலாம்படி இருப்பான் ஒருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே.

என்பது சூத்திரம்.

அவ :—' இப்படி வேறு புகல் இல்லாமை முதலானவைகள் உண்டானாலும், அவனுக்குச் சீற்றம் பிறக்கும்படி சிலவற்றைச் சொல்லலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

[1] 'செய்யும் அருளும்' என்று கூட்டுக.

[2] அவனுடைய அருளைக்கொண்டும், தம்முடைய ஆர்த்தியைக் கொண்டும் அநந்யகதித்வத்தைக் கொண்டும் அங்ஙனம் அருளிச்செய்கிறார் என்பதனை, அவர் தம் திருமொழியைக் கொண்டு விளக்குகிறார், 'இத்திருமொழியிலே' என்று தொடங்கி. இது பெரிய திருமொழியில் 11ஆம் பத்தில் 8ஆம் திருப்பதிகம்.

வியாக் :— ‘சீறினாலும் காலைக் கட்டிக்கொள்ளலாம்படி இருப்பான் ஒருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே’ என்றது, சீறின காலத்திலும், சீற்றத்திற்கு இலக்கானவர்கள் சென்று திருவடிகளைப் பூண்டு கொள்ளலாம்படி பேரருளாளனாய் இருப்பான் ஒருவனைப் பெற்றால் நினைத்தபடி யெல்லாம் சொல்லலாமிறே என்றபடி. (14)

## 383

‘கிருபயா பர்யபாலயத்’ ‘அரிசினத்தால்’ **என்பது சூத்திரம்.**

**அவ :—சீறிய நிலையிலும் காலைக்கட்டிக்கொள்ளலாய் இருக்கலாம்படிக்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.**

**வியாக்** :—‘கிருபயா பர்யபாலயத்’ என்றது, [1] ‘தரையில் விழுந்து கிடப்பவனும் சரணாகதி செய்தவனுமான அந்தக் காகாசுரன் கொல்லுதற்கு உரியனாயினும், எல்லார்க்கும் புகலிட மாயுள்ள அந்த ஸ்ரீ ராமபிரான் அருளாலே அவனைக் காப்பாற்றினார்’ என்கிறபடியே குற்றத்தைத் தீரக் கழியச் செய்து, பிரமாஸ்திரத்திற்கு இலக்காய்ப் புறம்பு புகல் அற்றவாறே வந்து திருவடிகளிலே விழுந்த காகத்தை அருளாலே காப்பாற்றினார் என்று ஸ்ரீராமாயணம் கூறுதலாலும் என்றபடி. ‘அரிசினத் தால்’ என்றது, [2] ‘அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன், அருள்நினைந்தே யழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே!’ என்கிறபடியே ‘பெறுகைக்கு வருந்தி வரம் கிடந்து பெற்ற தாயானவள், இது செய்த தீங்கினைக் கண்டு, எறிந்து பொகடவேண்டும்படியான சீற்றத்தையுடையளாய்க் கொண்டு, அண்மையில் வரவொண்ணாதபடி தள்ளிவிட்டாலும், வேறு போக்கடி அற்று, சீறி எடுத்து எறிகின்ற அவளுடைய முகத்தின் இரக்கத்தையே நினைந்து அழுது காலைத் தழுவிக் கொள்ளும் குழந்தையைப் போன்று, என் குற்றத்தைக்கண்டு அருகுவாராதபடி தேவர் தள்ளிவிடப் பார்க்கிலும், திருவடிகள்

---

[1] ‘ஸதம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம்
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்’
என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 26.

[2] பெருமாள் திருமொழி, 5 : 1.

அல்லது வேறு போக்கடி அற்று இருந்தேன்' என்று குலசேகரப் பெருமாள் அருளிச்செய்கையாலும் என்றபடி.

இவற்ருல் ' சீறிஞலும் காலைக்கட்டிக்கொள்ளலாம்படி இருப்பான் ஒருவன் ' என்னுமிடம் தெளிவாதல் காண்க.

இப்படி ஆழ்வார் அருளிச்செய்த இப்பொருளை, [1] 'காப்பாற்றக் கூடியவரான தேவரீர் அடியேனை விடப் பார்த்தாலும், சர்வேசுவரனே, தேவரீருடைய திருவடிகளை விட்டு நீங்க விரும்புகின்றிலன். 'அஃது என் போல?' எனின், முலைப் பால் குடிக்கும் குழந்தையானது, சீற்றத்தாலே தள்ளப் பட்டாலும், அணைத்தபோதோடு தள்ளியபோதோடு வேற்றுமை இல்லாமல் தாயாருடைய கால்களை விட்டு நீங்குவதற்கு ஒருப் படுவதில்லை என்பது போன்று,' என்று ஆளவந்தார் அருளிச் செய்தாரிறே.

ஆக, இவ்வளவும் [2] 'பயாபயங்கள் இரண்டும் மாருடில் அஜ்ஞதையே சித்திக்கும்,' என்ற சூத்திரப் பொருள்மேல் வந்த ஐயத்தினைத் தக்க விடைகள் கூறி நீக்கினுராயிற்று. (15)

## 384

**திரிபாத் விபூதியிலே பரிபூர்ணுநுபவம் நடவாநிற்க, அது உண்டது உருக்காட்டாதே, தேசாந்தரகதனை புத்திரன் பக்கலிலே பித்ரு இருதயம் கிடக்குமா போலே, சம்சாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய், இவர்களைப் பிரிந்தால் ஆற்ற மாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரண களேபரங் களைக் கொடுத்து, அவற்றைக்கொண்டு வியா**

---

[1] ' நிராஸ கஸ்யாபி நதாவத்ருதீ ஸஹே
மஹேஶ ஹாதும் தவ பாதபங்கஜம்
ருஷா நிரஸ்தோபி ஶிஶுஸ் ஸ்தநந்தயோ:
நஜாது மாதுஶ் சரணௌ ஜிஹாஸதி '
என்பது, ஸ்தோத்திரரத்நம், 26.

[2] 370ஆம் சூத்திரம்.

பரிக்கைக்கு ஈடான சக்தி விசேடங்களையும் கொடுத்து, கண் காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவார்கள் என்று கண்ணுக்குத் தோற்றாத படி, உறங்குகிற பிரஜையைத் தாய் முதுகிலே அணைத்துக்கொண்டு கிடக்குமா போலே தான் அறிந்த சம்பந்தமே ஏதுவாக விடமாட்டாதே அகவாயிலே அணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்று என்று விடாதே சத்தையை நோக்கி, உடன் கேடனாய், இவர்கள் அசத் கர்மங்களிலே பிரவர்த்திக்கும் போதும் மீட்க மாட்டாதே அநுமதி தானத்தைப் பண்ணி உதாசீனரைப் போலே இருந்து மீட்கைக்கு இடம் பார்த்து, நன்மை என்று பேரிடலாவது ஒரு தீமையும் காணாதே, நெற்றியைக் கொத்திப் பார்த்தால் ஒருவழியாலும் பசை காணாதொழிந் தால் அப்ராப்யம் என்று கண்ண நீரோடே மீள்வது, தனக்கேற இடம் பெற்ற அளவிலே, 'என் ஊரைச் சொன்னாய்; என் பேரைச் சொன்னாய்; என் அடியாரை நோக்கினாய்; அவர்கள் விடாயைத் தீர்த்தாய்; அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றாற்போலே சிலவற்றை ஏறிட்டு, மடிமாங்காய் இட்டு, பொன் வாணியன் பொன்னை உரைகல்லிலே உரைத்து மெழுகாலே எடுத்துக் கால்கழஞ்சு என்று திரட்டுமாபோலே ஜந்மபரம்பரைகள்தோறும் யாத்ருச்சிகம் பிராசங்கிகம் ஆநுஷங்கிகம் என்கிற சுகிருத விசேஷங்களைக் கற்பித்துக் கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்.

என்பது சூத்திரம்.

அவ:—இனி, 'பகவத்குண அநுசந்தானம் அபய ஏது' என்று மேலே அருளிச்செய்ததனை விவரிக்கைக்காக ஈசுவரன் இந்த மக்கள் உய்யும்பொருட்டுச் செய்கிற கிருஷிபரம்பரையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—[1]' திரிபாத் விபூதியிலே' என்றது, 'அந்தப்பரம் பொருளுக்கு அழிவில்லாததான பரமபதம் கால் பாகங்கள் கொண்டது' என்கையாலே பரமபதத்தைத் 'திரிபாத் விபூதி' என்னக்கடவதிறே. இதனுடைய மூன்று கால் பாகங்கள் உடையதாம் தன்மையைப் பலபடியாக அருளிச்செய்வர். 'யாங்ஙனம்?' என்னில், [2]'பகவானுக்கு இந்த உலகத்திலிருக்கிற அறிவுடைப்பொருள் அறிவில் பொருள்கள் அனைத்தும் ஒரு கால் பாகம்; அழிவில்லாத பரமபதத்தில் மூன்று கால் பாகங்கள்' என்கிறபடியே இவ்வுலகத்தில் எல்லா உயிர்களும் நாலில் ஒன்று என்னலாம்படி சிறியதாய் இருக்கும். பரமாகாசத்தில் இவனுடைய நித்தியமான விபூதி மூன்று கால் பாகம் என்னும் படி மும்மடங்காக இருக்கும், [3]'இந்த விபூதித்துவய விஷயமான பாதசப்தமும் திரிபாத் சப்தமும் சிறுமை பெருமைகளுக்கு உபலக்ஷணமித்தனை ஒழிய, பரிச்சேத பரமன்று; லீலா விபூதியில் அண்டங்கள்தானே அசங்க்கியாதங்களாயிறே இருப்பது?' என்று தீபப்பிரகாசத்திலே ஜீயர் அருளிச்செய்கையாலே இவ் விபூதியில் காரியரூபமான பிரதேசத்தைப் பற்றப்பரமாகாசத்தில் பரமபதம் மும்மடங்காய் இருக்கும் என்னவுமாம்.

அன்றிக்கே, [4]''த்வி' இதி அப்ராக்ருதம் ஸ்த்தாநம் உச்யதேத் திரிபாத்வஞ்ச அப்ராக்ருதைர் போக்ய போகோப

---

[1] திரிபாத் விபூதி - பரமபதம்; மோக்ஷம். பரமபதத்தைத் 'திரி பாத் விபூதி' என்ற பெயரால் கூறியதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அந்தப் [1] பரம்பொருளுக்கு' என்று தொடங்கி. 'திரிபாத் அஸ்ய அம்ருதம் திவி' என்பது, புருஷசூக்தம்.

[2] 'பாதோஸ்ய விஸ்வபூதாநி த்ரிபாத் அஸ்ய அம்ருதம்திவி' என்பது புருஷ சூக்தம்.

[3] இந்த லீலாவிபூதி நித்யவிபூதி என்னும் இரண்டு உலகங்களின் விஷயமான பாதம் என்ற சொல்லும் திரிபாத் என்ற சொல்லும் சிறியது பெரியது என்பனவற்றைக் காட்டுகின்றனவே ஒழிய அளவிட்டுக் கூறிய தன்று; 'ஏன்?' எனில், லீலாவிபூதியிலும் அண்டங்கள் எல்லையில்லாதன வாகவன்றோ இருக்கின்றன என்பது மேற்கோள் வசனத்தின் பொருள். தீபப் பிரகாசம் என்பது ஒரு நூல். ஜீயர் - வாதிகேசரி அழகிய மண வாளச்சீயர்.

[4] திவி என்பது பிரகிருதி சம்பந்தம் இல்லாத பரமபதத்தைச் சொல்லுகிறது. பிரகிருதி சம்பந்தம் இல்லாமலிருக்கிற போக்கிய விசேஷங்கள், போக உபகரண விசேஷங்கள் போகத்தான விசேஷங்கள்

கரண போகஸ்தாந விசேஷைர்வா, பூஷணாஸ்திராதி ரூபேண ஜகநந்தர்கதவஸ்து அபிமாநிபிః நித்யைః பகவதநுபவமாத்ர பரைஶ்ச நித்யசித்தைః முக்தைஶ்ச ஆத்மபிர்வா ஸம்பவதி' என்று சுருதப்பிரகாசிகையில் பட்டர் அருளிச்செய்தபடியே பிரகிருதி சம்பந்தம் இல்லாமல் இருந்துள்ள போக்கிய விசேஷங்கள் போக உபகரண விசேஷங்கள் போகஸ்தாந விசேஷங்கள் ஆகிற மூன்று பாகங்களோடு கூடி இருக்கையாலே யாதல்; அல்லது, [1] அஸ்தரபூஷண அத்தியாயத்தில் படியே ஆபரணங்கள் ஆயுதங்கள் இவற்றின் வடிவங்களாலே உலகத்திலே உள்ள பொருள்களையெல்லாம் விரும்பியிருக்கின்றவர்களான நித்தியரும் கேவலம் பகவானுடைய அநுபவத்திலே நோக்காயிருக்கிற நித்தியரும் முக்தரும் ஆக இப்படி மூன்று பிரிவுகளாகவிருக்கும் ஆத்மாக்களை உடைத்தாகையாலேயாதல் 'திரிபாத்' என்னவுமாம். ஆக, இப்படி லீலா விபூதியைக் காட்டிலும் மிக்க சிறப்பையுடைத்தாகையாலே எல்லை இல்லாத இன்பத்தை அளிப்பதான பரமபதத்திலே என்றபடி.

'பரிபூர்ண அனுபவம் நடவாநிற்க' என்றது, நித்தியரோடும் முக்தரோடும் கூடியிருந்து, ஓர் ஒன்றே எல்லை இல்லாத ஆனந்தத்தை உண்டுபண்ணுமவையான சொரூப ரூப குண விபூதிகள் எல்லாவற்றையும் ஒரே காலத்தில் அநுபவித்தலாகிற நிறைந்த அநுபவம் இடையீடு இல்லாமல் செல்லாநிற்க என்றபடி. 'அது உண்டது உருக்காட்டாதே' என்றது, அப்போது அப்போது வடிவிலே இட்டு மாறினாற்போலே புதுக்கணித்து வரப்பண்ணும் அந்த அநுபவம் ஒன்றும் வடிவிலே தோற்றாதே என்றபடி.

---

ஆகிற மூன்று நிலைகளோடு கூடியிருப்பதனால் திரிபாத் விபூதி என்று சொல்லப்படுகிறது; சுருதப்பிரகாசிகை என்பது ஸ்ரீபாஷ்யத்தை விளக்குவதற்கு எழுந்த ஒரு நூல். பட்டர் - சுதரிசன பட்டர்; இவர் ஆழ்வான் திருக்குமாரர் அல்லர்; அம்மரபில் வந்த ஒரு பெரியார்.

[1] அல்லது, 'ஆபரணங்கள் ஆயுதங்கள் முதலான உருவங்களாலே உலகத்திலே உள்ள பொருள்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிற நித்திய சூரிகளும், கேவலம் பகவானுடைய அநுபவத்திலே நோக்காயிருக்கிற நித்தியசூரிகளும், முக்தரும் ஆகிற மூவகைப்பட்ட உயிர்களையுடைமையாலே 'திரிபாத் விபூதி' என்று கூறப்படுகிறது,' என்பது 'அஸ்தர' என்று தொடங்கும் வாக்கியத்தின் பொருள்.

[1] 'தேசாந்தரகதனுன புத்திரன் பக்கலிலே பித்ருஹிருதயம் கிடக்குமா போலே சம்சாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய்' என்றது, புத்திரர்கள் பலருள் ஒருவன் தன் கர்மங்கட்குத் தகுதி யாக வேறு தேசத்திற்குச் சென்ருல், மற்று உண்டான புத்திரர் களும் தானுமாகவிருந்து வாழாநிற்கச்செய்தேயும், 'இவர்களைப் போன்று அவனும் கூடியிருந்து வாழ்வதற்கு இட்டுப் பிறந்து வைத்தும் இதனை ஒழிந்து கிடக்கிருனே!' என்று, வேறு தேசத் திலே உள்ள அந்தப் புத்திரன் பக்கலிலே தந்தையினுடைய மனம் கிடக்குமாறு போலே, நித்தியரும் முக்தரும் தானும் கூடி யிருந்து வாழச்செய்தே, 'இந்த இன்பத்தில் சம்பந்தம் உண்டா யிருக்க, இவர்கள் இதனை இழந்து கிடப்பதே!' என்று, இவ்வுல கத்தினரான சம்சாரிகள் பக்கலிலே திருவுள்ளம் நேராகப்போய் என்றபடி.

'இவர்களைப் பிரிந்தால் ஆற்ற மாட்டாதே' என்றது, உடல் உறுப்புகள் இல்லாத காலத்தில், அதாவது சங்கார காலத்தில், இவ்வுலகில் பிறந்து உழலுகின்ற மக்களைப் பிரிந்து பரமபதத் திலே தான் இருக்குமளவில், புத்திரர் பௌத்திரர் முதலானவர் களோடு வாழ்ந்தவன் அவர்களை இழந்து தனியன் ஆயினுற் போன்று [2] 'அந்தப் பரமாத்மா ஒருவனுகவிருந்துகொண்டு துன்புற்ருன்' என்கிறபடியே அப்பிரிவு பொறுக்க மாட்டாமல் என்றபடி [3] உடல் உறுப்புக்கள் இல்லாதவர்களாய்க் கிடக்குமள விலும் இவர்களைச் சரீரமாகக்கொண்டு தான் ஆன்மாவாய் இருக்கச்செய்தேயும், அதனை ஒரு கலவியாக நினையாமல், உடல் உறுப்புகளோடு கூடினவர்களாய் அவர்கள் வாழ்கிற காலத்தில் உயிர்க்கு உயிராகவிருந்துகொண்டு செயல்களைச் செய்தல், செய்யாமையை நடத்திக்கொண்டிருக்கை முதலானவற்றை இவர்களோடு கலக்கும் கலவியாகவும், இவர்கள் உடல் உறுப்பு கள் இல்லாதவர்களாய் அசித்தைக்காட்டிலும் வேறுபாடு இல்லாத வர்களாய்க் கிடக்கத் தான் பரமபதத்திலே இருக்கும் இருப்பை இவர்களைப் பிரிந்திருக்கிற இருப்பாகவும் அவன் நினைத்திருக்கை யாலே 'இவர்களைப் பிரிந்தால்' என்று அருளிச்செய்கிருர்.

---

[1] தேசாந்தரகதன் - வேறு தேசத்திலே இருப்பவன். பித்ரு - தந்தை. ஹிருதயம் - மனம்.

[2] 'ஸஏகாகீ நரமேத' என்பது மஹோபநிடதம்.

[3] இங்குக் கூறிய 'பிரிவு' இன்னது என்று விளக்குகிருர் 'உடல் உறுப்புகள்' என்று தொடங்கி.

'இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் [1] கரணகளேபரங்களைக் கொடுத்து' என்றது, உள் உயிராக இருப்பதாலும் இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களாலும் அர்ச்சாவதாரத்தாலும் இவர்களோடே கலந்து பழகுவதற்கு உறுப்பாக [2] 'விசித்திரமாயும் கைகால் முதலிய உறுப்புக்களோடு கூடியதாயும் உள்ள இச்சரீரம் இறைவனை வணங்குவதற்காக முன்னே படைக்கப்பட்டது' என்கிறபடியே தன்னுடைய திருவடித் தாமரைகளை அடைதற்கு உறுப்பான உடல் உறுப்புகளை அருளையுடைய மனத்தையுடையவனுய்க் கொடுத்து என்றபடி.

'அவற்றைக்கொண்டு [3] வியாபரிக்கைக்கு ஈடான சக்தி விசேஷங்களையும் கொடுத்து' என்றது, அந்தச் சரீரத்தைக் கொண்டு அறிய வேண்டுமவற்றை அறிந்து செய்யவேண்டுமவற்றைச் செய்து, தவிரவேண்டுமவற்றைத் தவிர்ந்து, இப்படிச் செயல் புரிதற்கு ஈடான ஞானசக்தி, [4] பிரவிருத்தி சக்தி, நிவிருத்தி சக்திகளாகிற சக்தி விசேடங்களையும் கொடுத்து என்றபடி.

'கண் காண நிற்கில் ஆணை இட்டு விலக்குவார்கள் என்று கண்ணுக்குத் தோற்றுதபடி' என்றது, இத்தனையும் செய்து [5] ஸ்வாமித்வ பிராப்தி தோற்ற இவர்கள் கண்ணுக்கு விஷயமாய் நிற்கில் [6] 'நீ எனக்கு உரியவன்' என்ருல் பொறுக்காமல் 'நான் எனக்கு உரியவன்' என்னும் சுவதந்திரர்கள் ஆகையாலே, எங்கள் கண் முகப்பே நீ ஒருகாலும் நிற்கக்கடவையல்லை என்று [7] திரு ஆணை இட்டு விலக்குவர்கள்' என்று நினைத்து,

---

[1] கரண களேபரம் - உறுப்புகளோடு கூடின உடல்.

[2] 'விசித்திரா தேஹஸம்பத்தி: ஈஶ்வராய நிவேதிதும்
பூர்வமேவக்ருதா ப்ரஹ்மன் ஹஸ்தபாதாம் ஸம்யுதா.'
என்பது, விஷ்ணு தத்வம்.

[3] வியாபரித்தல் - செயல் புரிதல்.

[4] பிரவிருத்தி - செயல் புரிதல். நிவிருத்தி - செயலைச் செய்யாமை; தவிர்தல்.

[5] ஸ்வாமித்வபிராப்தி - சொத்தையுடையவன் என்னும் சம்பந்தம். ஸ்வம் - சொத்து. ஸ்வாமி - சொத்தையுடையவன்.

[6] 'நீ எனக்கு உரியவன்' என்பது இறைவன் திருவார்த்தை. 'நான் எனக்கு உரியவன்' என்பது மக்கள் வார்த்தை.

[7] திரு ஆணை - திருமகள்மேல் ஆணை. திருவாய். 10.10 : 2.

[1] 'ஒருவனும் இறைவனைப் புறக்கண்களால் காண்பதில்லை' என்றும், [2] 'கட்கிலீ' என்றும் சொல்லுகிறபடியே இவர்கள் கண்களுக்கு ஒருகாலும் விஷயமாகாதபடி என்றபடி.

'உறங்குகிற பிரஜையைத் தாய் முதுகிலே அணைத்துக் கொண்டு கிடக்குமா போலே தான் அறிந்த சம்பந்தமே ஏதுவாக விட மாட்டாதே அகவாயிலே அணைத்துக்கொண்டு' என்றது, தன்னையும் தாயையும் அறியாதே கிடந்து உறங்குகிற குழந்தையை அன்புடைய தாயானவள் தான் அறிந்த [3] ரக்ஷ்யரக்ஷக சம்பந்தம் காரணமாக முதுகிலே அணைத்துக்கொண்டு கிடக்குமாறு போன்று, அநாதி மாயையாலே உறங்குகிறவர்களாய், [4] தன் தன்மை பரம்பொருள் தன்மை என்னும் இவைகளுள் ஒன்றையும் அறியாதவர்களாய்க் கிடக்கிற இம்மக்களைச் சேஷியானதான் அறிந்த ரக்ஷ்யரக்ஷக சம்பந்தமே காரணமாக விடுதற்கு இயலாதவனாகி [5] 'எவன் ஆத்மாவிடத்தில் இருக்கின்றானோ' என்கிறபடியே உள் உயிராய் இருக்கின்ற தன்மையாலே இவர்களைத் தீண்டிக்கொண்டு என்றவாறு.

[6] 'ஆட்சியில் தொடர்ச்சி நன்று என்று விடாதே சத்தையை நோக்கி' என்றது, ஒருவன் உடைமையை ஒருவன் கவர்ந்து ஆளாநிற்க, உடையவனாயிருந்து பொருளை இழந்தவன் 'தன்னது' என்னும் இடம் தோற்றப் பல நாள்கள் தொடர்ந்து போந்தால், பின்பு வியவகாரத்தில் வெற்றிக்குக் காரணமாகா நிற்குமிறே; அப்படியே [7] 'அநுபவத்தின் பெருமையாலே' என்கிற இம்மக்களுடைய ஆட்சியிலும் 'நம்மது' என்னுமிடம்

[1] 'நசக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்' என்பது தைத்திரீய உபநிடதம்.

[2] திருவாய். 7.2 : 3.

[3] ரக்ஷ்ய ரக்ஷக சம்பந்தம் - காக்கப்படும் பொருள் காப்பவன் என்ற சம்பந்தம்.

[4] தன் தன்மை - ஆன்மசொரூபம்; சேஷத்வமும் பாரதந்திரியமும்.

[5] 'யஆத்மநிதிஷ்டந்' என்பது பிருஹதாரண்ய உபநிடதம்.

[6] ஆட்சி - அநுபவம். தொடர்ச்சி - தொடர்ந்துகொண்டே நிற்றல். சத்தை - ஆன்மா.

[7] 'த்வம்மே அஹம்மே குதஃதத் ததபிகுதஃ இதம்வேத
மூலபிரமாணாத் ஏதச்ச அநாதி சித்தாத் அநுபவவிபவாத்'
என்பது பட்டர் ஸ்ரீசூக்தி.

தோற்ற ஒருதலையைப் பற்றிக்கொண்டு போருகிற தொடர்ச்சி பிரபலம் என்று நினைத்து, உள்ளுயிராகத் தங்கியிருக்கிற தான் இவர்களை ஒருகாலும் கைவிடாதே தாரகனாய்க்கொண்டு தரிக்கப்படுகின்றவர்களான இவர்களுடைய உயிர்கள் அழிந்து போகாதவாறு நோக்கி என்றபடி.

'உடன் கேடனாய்' என்றது, இப்படி அவர்களுடைய உயிர்களைத் தரித்துக்கொண்டிருப்பதனால், சுவர்க்கத்தை அடைதல், நரகத்தையடைதல் முதலிய எல்லா நிலைகளிலும் இவர்களுக்குத் துணையாகப் போந்து என்றபடி. 'உடன் கேடன்' என்பது உவன் கேட்டினைத் தன் கேடாக இருக்குமவனையிறே.

'இவர்கள் [1] அசத் கர்மங்களிலே பிரவர்த்திக்கும்போதும் மீட்கமாட்டாதே அநுமதி தானத்தைப்பண்ணி உதாசினரைப் போலே இருந்து மீட்கைக்கு இடம் பார்த்து' என்றது, [2] 'ஆதியிலே இறைவனாலே கொடுக்கப்பட்டதான சுவாதந்திரியமாகிற சக்தியிலே, ஒரு மகன், தானே அந்த ஞானத்தையும் இச்சையையும் முயற்சியையும் பிறப்பித்துக்கொண்டு இருக்கிறான்' என்கிறபடியே அடியிலே தான் கொடுத்த ஞானத்தையுடையவனாகிற சுவாதந்திரிய சக்தியாலே, தங்களுடைய ருசிக்குத் தகுதியாகச் செயல்களைச் செய்துகொண்டு போருகைக்குத் தக்கவர்களான இம்மக்கள், துர்வாசனையின் பலத்தாலே பாவச்செயல்களிலே ஈடுபடுகின்ற காலத்திலும், உள் உயிராக இருக்கிற தான் நினைத்தால் மீட்கலாய் இருக்கச்செய்தேயும், அப்படிச் செய்கையில், தன்னுடைய ஆணையின் உருவமான சாஸ்திரங்களின் பயனுடையதாம் தன்மை அற்றுவிடும் என்னு மதனைப் பற்றவும், 'எல்லாரும் முத்தி பெறுதற்கு உரியவர்கள்' என்பது வரும் என்னுமதனைப் பற்றவும் மீட்கமாட்டாமல் அநுமதியைக் கொடுத்தும், உதாசீனன் அன்றிக்கே இருக்கச் செய்தே, 'இவர்கள் என்பட்டால் நலலது?' என்றிருக்கும் உதாசீனரைப்போலே இருந்தும், அவற்றினின்றும் அவர்களை

---

[1] அசத்கர்மங்கள் - தீய செயல்கள். பிரவர்த்திக்கும் போதும் - செய்ய முயற்சி செய்யும்போதும். அநுமதி தானம் பண்ணுதல் - இசைந்திருத்தல். மீட்கை - தீய செயல்களினின்றும் மாற்றுதல்.

[2] 'ஆதாவீஶ்வர தத்தையைவ புருஷஃ ஸ்வாதந்த்ரிய ஸக்த்யாஸ்வயம் தத்தத்ஜ்ஞாந சிகீர்ஷண ப்ரயத்நாந் யுத்பாதயந் வர்த்ததே.' என்பது, தத்வசாரம்.

மீட்கைக்கு உறுப்பாகச் சொல்லிக்கொள்ளத் தக்கதொரு நன்மையாகிற இடம் பார்த்து என்றபடி.

'நன்மை என்று பேரிடலாவது ஒரு தீமையும் காணுதே' என்றது, இப்படி இடம் பார்த்துப் போருமளவில், சாஸ்திர மரியாதைக்குத் தகுதியாகவாதல், தான் அறிந்ததாக ஆரோ[1] பித்துக்கொண்டாதல், இவர்களைத் தீய செயல்களினுன்றும் மீட்கைக்கு இடமாயிருப்பது ஒரு நன்மை காணுத அளவன்றிக்கே, அத்தீய செயல்களிலே நன்மை என்று பேரிட்டுக் கொள்ளலாவது ஒரு தீமைதானும் உட்படக் காணப் பெருமல் என்றபடி. 'நன்மை என்று பேரிடலாவது ஒரு தீமை' என்றது, பிறரை வருத்துவது செய்துகொண்டு திரியா நிற்கச்செய்தே, பகவானுக்கும் பாகவதர்களுக்கும் விரோதி களாக இருப்பாரை யாத்ருச்சிகமாக வருத்துதல், பெண்களிடத் தில் ஆசையுள்ளவனுய்த் தேவதாசிகளைப் பின்பற்றிப் பலகாலம் கோயில்களிலே புக்குப்புறப்படுதல், வயலில் மேய்ந்த பசுவைத் தொடர்ந்தவாறே, அது ஒரு கோயிலை வளையவருமாகில் அதனை அடிக்க வேண்டும் என்ற சீற்றத்தாலே தானும் வளைய வருதல், [2] பழித்தல் நிமித்தமாக இறைவனுடைய திருப்பெயர்களைச் சொல்லுதல் முதலாயினவற்றை.

[3] 'நெற்றியைக் கொத்திப்பார்த்தால் ஒரு வழியாலும் பசை காணுதொழிந்தால் அப்ராப்பியம் என்று கண்ண நீரோடே மீளுவது' என்றது, பாம்பு கடித்து இறந்தவர்களைப் போன்று கிடக்கின்றவர்களை மந்திரம் முதலாயினவற்றைக் கொண்டு எழுப்புதற்கு உயிர் உண்டோ இல்லையோ என்று ஆராயும்பொருட்டு நெற்றியைக் கொத்திப் பார்த்து ஒரு வகை யாலும் இரத்தப்பசை காணுதவளவில் 'இவன் இறந்துபோனுன்' என்று இழவோடே கை வாங்கும் பந்துக்களைப் போன்று, நன்மை காணுதவளவில் விடாதே, நன்மை என்று பேரிடலாவது ஒரு தீமைதான் உண்டோ என்னுமளவாகப் பார்த்தவளவிலும்

---

[1] ஆரோபித்தல் - ஏற்றுதல்.

[2] பழித்தல் நிமித்தமாக இறைவனுடைய திருப்பெயர்களைச் சொல்லுதல், சிசுபாலன் முதலாயினுரிடத்துக் காண்க.

[3] 'நன்மை என்று பேரிடலாவது ஒரு தீமையும் காணுதே' என்ற தனுடைய அநுவாதம் 'நெற்றியைக் கொத்திப் பார்த்தால்' என்ற வாக்கியம்.

ஒரு வகையாலும் இவர்கள் பக்கல் பசைகாணுவிட்டால் 'இவன் நமக்கு அடையக்கூடியவன் அல்லன். இவனை இழந்தோம்' என்று அழுது கண்ண நீரோடே மீளுவது என்றபடி.

அன்றிக்கே, 'நன்மை என்று பேர் இடலாவது ஒரு தீமை' என்பதற்கு, 'பிறரைக் கொல்ல நினைக்கின்றவன் சேநயாகத்தைச் செய்யக்கடவன்' என்று ஆஸ்திகபுத்தி உண்டாவதற்கு விதிக்கப்பட்டதாகையாலே நன்மை என்று பேர் இடலாயிருக்குமதாய், பரஹிம்சையாகையாலே தீமையாகவிருக்கிற சேநயாகத்தைச் செய்வதைக் குறித்ததாய், [1] அங்கீகாரத்திற்கு உடலாயிருப்பது ஒரு நன்மை காணுத அளவன்றிக்கே, சாஸ்திர மரியாதையிலே மேல்தான் ஆயிலும் ஆக்கிக்கொள்ளுகைக்குத் தகுதியான சாஸ்திரங்களிலே நம்பிக்கை உண்டாவதற்கு உடலானது [2] அது தானுமுட்பட இவர்கள் பக்கல் காணப்பெருதே என்று பொருள் கோடலுமாம். அப்போதைக்கு, 'நெற்றியைக் கொத்திப் பார்த்தால் ஒரு வழியாலும் பசை காணுது ஒழிந்தால் அப்ராப்பியம் என்று கண்ண நீரோடே மீளுவது' என்றதனுல் [3] அறிந்து செய்த நல்வினைக்குத் தகுதி இல்லாமையாலே அறியாமலே செய்த புண்ணியந்தான் உண்டோ என்று ஆராய்ந்து, அதுவும் இல்லாமையாலே ஒரு வழியாலும் அங்கீகாரத்திற்குத் தகுதி இல்லாமை அறிந்து இழவோடே மீளும்படி சொல்லுகிறது.

'தனக்கு ஏற இடம் பெற்ற அளவில்' என்றது, இப்படி மீண்டாற்போலே மீண்டுவிடுகை அன்றிக்கே, இவர்களை உஜ்ஜீவிப்பிக்கையில் உண்டான ஆசையாலே பின்னையும் அங்கீகரிக்கைக்கு இடம் பார்த்துத் திரியும் தனக்குத் தகுந்த இடம் பெற்ற அளவிலே என்றபடி.

---

[1] 'அங்கீகாரத்திற்கு உடலாயிருப்பதொரு நன்மை காணுதவளவு அன்றிக்கே' என்றது அறிந்து செய்யப்படும் புண்ணியங்களை. இப் பொருள் 'தீமையும்' என்ற உம்மையால் போந்த பொருள்.

[2] 'அதுதானும்' என்றது, ஆஸ்திகபுத்திக்குக் காரணமாய் பரஹிம்சையாகவிருக்கிற சேநயாகத்தை.

[3] இந்த இரண்டாவது பொருளில் 'நெற்றியைக் கொத்திப் பார்த்தால்' என்ற வாக்கியத்திற்குப் பொருள் 'அறியாமல் செய்த நல்வினை' என்பது. இதனையே அருளிச்செய்கிருர், 'அறிந்து செய்த' என்று தொடங்கி.

'என் ஊரைச் சொன்னாய்; என் பேரைச் சொன்னாய்; என் அடியாரை நோக்கினாய்; அவர்கள் விடாயைத் தீர்த்தாய்; அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றாற்போலே சிலவற்றை ஏறிட்டு என்றது, அவ்வூர் இவ்வூர் என்று இவன் பல ஊர்களையும் சொல்லாநிற்க, கோயில், திருமலை முதலாகத் தான் உகந்த ஊர்களிலே ஏதேனும் ஒன்றைச் சொன்னால், அதனையே பற்றாசாகக் கொண்டு 'என் ஊரைச் சொன்னாய்' என்றும்; அவர் இவர் என்பன போலே சொல்லாநிற்க, ஒருவன் பெயரைச் சொல்லுகிறதாக இறைவன் திருப்பெயர்களிலே ஒன்றைச் சொன்னால் அவ்வளவைக் கொண்டு 'என் பெயரைச் சொன்னாய்' என்றும்; பாகவதர் சிலர் காட்டிலே செல்லாநிற்க, அவர்களை வருத்திக் கையில் உள்ளதைப் பறிப்பதாக வழி பறிக்காரர் முயற்சி செய்கிறவளவில், தன் காரியமாகப் போகிறான் சேவகன் ஒருவன் அவர்கள் பின்னே தோன்ற, அவனை இவர்களைப் பாதுகாப்பதற்காக வருகிறானாக நினைத்து, அவர்கள் அஞ்சிப் பறியாதொழிய, அது காரணமாக அந்தச் சேவகனை 'என் அடியாரை நோக்கினாய்' என்றும்; ஒருவன், வேனிற்காலத்திலே தன்வயல் தீயப்புக்கவாறே, நீர் உள்ளவிடத்தினின்றும் வயலிற்கு வரும்படி நெடுந்தூரத்திலே துலை இட்டு இறையா நிற்க, [1] மருபூமியிலே நெடுந்தூரம் நடந்து, 'சிறிது தண்ணீர் பெறில் நம் உயிர் தரிக்கும்' என்னும்படி இளைத்து வரும் பாகவதர் சிலர் அவன் அறியாமல், அந்தத் தண்ணீரிலே தங்கள் திருவடி முதலானவற்றை விளக்கி இளைப்பாறிப் போனால் அது அடியாக 'என் அடியார் விடாயைத் தீர்த்தாய்' என்றும்; ஒருவன் தனக்குச் சூது சதுரங்கம் பொருகைக்கும் காற்றை விரும்பும் போது வந்து இருத்தற்கும் ஆகப் புறத்திண்ணை கட்டி வைக்க, மழையிலே நனைந்தவர்களாய் 'எங்கே ஒதுங்குவோம்!' என்று வருகிற பாகவதர் சிலர் அங்கே ஒதுங்கியிருந்து போக, அவ்வளவைக்கொண்டு 'என் அடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றும் இப்படைகளிலே சிலவற்றை அவர்கள் அறியாதிருக்கத் தானே ஏறிட்டு என்றபடி.

'மடிமாங்காய் இட்டு' மாங்காய் எடாமலே வாளா வழி போகிறவன் மடியிலே, மாங்காயை மறைத்துக்கொண்டு சென்று

---

[1] மருபூமி – பாலை நிலம். நீரும் நிழலும் இல்லாத இடம். 'மணி நீரும் மண்ணும்' என்ற திருக்குறள் காண்க.

இட்டு 'மாங்காய் களவு கண்டாய்' என்று கூறுதல் போன்று என்றபடி. இது, வலிய ஏறிடுமதற்கு உவமை.

'பொன் வாணியன் பொன்னை உரைகல்லிலே உரைத்து மெழுகாலே எடுத்துக் கால் கழஞ்சு என்று திரட்டுமா போலே ஜந்மபரம்பரைகள்தோறும் யாத்ருச்சிகம் பிராசங்கிகம் ஆநுஷங்கிகம் என்கிற சுக்ருத விசேஷங்களைக் கற்பித்துத்துக் கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்' என்றது, பொன்வாணிகம் செய்வான் ஒருவன் எவரேனும் பரீட்சித்தற்குக் காட்டின பொன்னை உரைகல்லிலே உரைத்துப் பொன் சேராதபடி மெழுகாலே ஒத்தி எடுத்து நாளோட்டத்துடனே கால் பொன்னாயிற்று, கழஞ்சு பொன்னாயிற்று என்று திரட்டுமாறு போலே, ஒரு பிறவி இரு பிறவிகள் அளவன்றிக்கே மக்களுடைய ஜந்மபரம்பரைகள்தோறும், 'விடாயைத் தீர்த்தாய், ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்பன போலே உண்டாக்கும் [1] யாத்ருச்சிகம், 'ஊரைச் சொன்னாய், பேரைச் சொன்னாய் என்பது போலே வரும் பிராசங்கிகம், 'அடியாரை நோக்கினாய்' என்பது போலே உண்டாகும் ஆநுஷிங்கிகம் என்கிற புண்ணிய விசேஷங்கள், சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்டனவும் மக்களாலே அறியப்பட்டனவுமன்றியிருக்க, அவற்றைப் புண்ணியம் என்று தானே கல்பித்துக் கல்பிதமானவற்றை ஒன்றைப் பல ஆக்கி நடத்திக்கொண்டு போதரும் என்றபடி. (16)

## 385

**லலிதா சரிதாதிகளிலே[2] இவ்வர்த்தம் சுருக்கம் ஒழியக் காணலாம்.**

என்பது சூத்திரம்.

---

[1] யாத்ருச்சிகம் - யதிருச்சாயாம்பவம் - யாதிருச்சிகம்; யாரோ ஒருவனுடைய இச்சையில் உண்டாவது. பிரசங்கேபவம் - பிராசங்கிகம்; பிரசங்கத்திலே உண்டாவது. பிரசங்கமாவது, புத்திக்கு விஷயமானவற்றை விடமுடியாமலிருப்பது. இதற்கு இருவர் இருத்தல் வேண்டும். ஆநுஷங்கிகம் - அநுஷங்கத்திலே உண்டானது. அநுஷங்கமாவது, பின்னால் உண்டாகும் சம்பந்தம். இதற்கு மூவர் தேவை.

சூத்திரத்தில் 'அது உண்டது' என்றவிடத்து 'அது உள்ளது' என்றிருத்தல் நலம்.

[2] லலிதை - காசிராஜன் மனைவி. சரித ஆதி - சரித்திரம் முதலானவற்றிலே. சுருக்கம் ஒழிய - விரிவாக.

அவ :—'அறியப்படாத இப்புண்ணியம் காரணமாக ஈச்வரன் அங்கீகரிக்கும் என்னுமது காணலாம் இடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'லலிதா சரித ஆதிகளிலே இவ்வர்த்தம் சுருக்கம் ஒழியக் காணலாம்' என்றது, விதர்ப்பராஜன் மகளாய்க் காசி ராஜன் மனைவியான லலிதை, அந்தக் காசிராஜனுடைய மற்றைய முந்நூறு மனைவிமார்களைக்காட்டிலும் அழகு, கணவனை மிகவும் வசப்படுத்தும் ஆற்றல், சரீர ஒளி முதலிய எல்லாக் குணங்களும் நிறைந்தவளாய், பகல் இரவு என்ற வேறுபாடு இல்லாமல் பகவானுடைய சந்நிதியில் திருவிளக்குகள் பலவற்றை ஏற்றி அதிலே ஈடுபட்டவளாய்ப் போதருகிறபடியைக் கண்டு, 'உனக்கு இவ் வழகு முதலானவைகளுக்கும் திருவிளக்கு ஏற்றும் கைங்கரியத்தில் பேரவாவிற்கும் காரணம் என்?' என்று மற்றைய மனைவிமார்கள் கேட்க, அவள் முன்பிறவி அறிவோடே பிறந்தவள் ஆகையாலே [1]'பெண்காள், என்னுடைய எந்த விருத்தாந்தத்தை நீங்கள் கேட்பீர்களோ, அதனை நான் சொல்லுகிறேன்' என்று தொடங்கி, [2]'சௌவீரராஜனுடைய புரோகிதனை மைத்திரேயன், தேவி ஆற்றங்கரையில் எம்பெருமானுக்கு ஒரு கோயிலை உண்டாக்கி, நாள்தோறும் அக்கோயிலிலே எல்லாக் கைங்கரியங்களையும் செய்துகொண்டு வாழ்ந்து வந்தபடியையும், [3]கார்த்திகை மாசத்திலே அவன் அந்த எம்பெருமான் சந்நிதியில்

---

[1] 'தத்தேஷா கதயம் யேதத் யத்வ்ருத்தம் மம ஶோபநா:' என்பது விஷ்ணு தர்மம்.

[2] 'ஸௌவீர ராஜஸ்யபுரோ மைத்ரேயோபூத் புரோஹித:
தேநசாயதநம் விஷ்ணோ: காரிதம் தேவிகாதடே
அஹந்யஹநி ஶுஶ்ரூஷாம் புஷ்பதூபாம் புலேபநை:
தீபதாநாதிபிஶ்சைவ சக்ரேதத்ர வஸந்த்விஜ:'
என்பன விஷ்ணு தர்மம்.

[3] கார்த்திகே தீபிதோதீப உபாத்தஸ்தேநசை கதா
ஆவீந் நிர்வாண பூயிஷ்டோ தேவஸ்ய புரதோநிஶி
தேவதாய தநேசாஸம் தத்ராஹமயி மூஷிகா
ப்ரதீபவர்த்தி க்ரஹணேக்ருத புத்திரர் வராநநா:
க்ருஹீதாச மயாவர்த்தீ: ப்ருஷதம்ஶோ ரராவச
நஷ்டாசாஹம் ததஸ்தஸ்ய மார்ஜாலஸ்ய பயாநுகா
வக்த்ர ப்ராந்தேந நஶ்யந்த்யா ஸதீப: ப்ரேரிதோமயா
ஜஜ்வாலபூர்வவத் தீப்த்யா தஸ்மிந் நாயதேநபுந:
என்பன விஷ்ணு தர்மம்.

ஏற்றின திருவிளக்கு அவியப்போகும் அளவிலே, அக்கோயிலிலே ஒரு பெண் எலியாய் வசித்துக்கொண்டிருந்த தான், அத்திரு விளக்கில் திரியைக் கவ்விக்கொண்டு செல்ல நினைத்துச் சென்று கவ்வின அளவிலே, ஒரு பூனை கத்தின குரலைக் கேட்டு அஞ்சி மரணத்தை அடைய, அப்போது அச்சத்தாலே நடுங்குகின்ற தன் மூஞ்சியாலே அத்திரி தூண்டப்பட்டு முன்போலே அத்திரு விளக்கு ஒளி விட்டு எரிந்தபடியையும், [1] பின்பு தான் இறந்து விதர்ப்ப ராஜனுக்கு மகளாய் முற்பிறவியின் அறிவு முதலானவை களோடே பிறந்த படியையும், [2] தான் அறியாமற்செய்த அந்தப் புண்ணியத்தின் பலனாகத் தனக்கு இவ்வேற்றங்கள் எல்லாம் உண்டானபடியையும் சொன்னாள்' என்று [3] ஸ்ரீ விஷ்ணு தர்மத்திலே லலிதாவின் சரிதை விரிவாகச் சொல்லப்பட்டதிறே.

இனி, 'ஆதி' என்றதனால் கொள்ளப்பட வேண்டியவற்றுள் சில வருமாறு :—

தத்துவங்களை அறிந்தவனாய் இருப்பான் ஒரு பிராமணனுடைய புத்திரியான சுவிரதை, மிக்க இளமையிலேயே தாயை இழந்தவளாய், அது தோற்றாதவாறு அருள் நிறைந்தவனான தந்தை வளர்த்துக்கொண்டு வர வளர்ந்து, இனி, ஒருவர்க்குத் திருமணம் செய்து கொடுக்கத்தக்க பருவம் வந்தவளவிலே அந்தத் தந்தையும் இறந்துவிடவே, மிக்க சோகத்தையுடையவளாய், [4] "இளம் பெண்ணான நான் எவராலே வளர்க்கப்

[1] 'ம்ருதாசாஹம் ததோ ஜாதா வைதர்பீ ராஜகந்யகா
ஜாதிஸ்மரா காந்திமதீ பவதீநாம் பராகுணை:
என்பது விஷ்ணுதர்மம்.'

[2] 'ஏஷப்ரபாவோ தீபஸ்ய கார்த்திகேமாஸிஶோபநா:
தத்தஸ்ய விஷ்ண்வாயதநேயஸ்யேயம் வ்யுஷ்டிருதிதமா
அஸங்கல்பிதமப்ஸ்ய ப்ரேரணம் யத்க்ருதம் மயா
விஷ்ண்வாயதந தீபஸ்ய தஸ்யை தத்புஜ்யதேபலம்
ததோஜாதி ஸ்மிருதிர்ஜந்ம மாநுஷ்யம் ஶோபநம்வபு:
வஶ்ய: பதிர்மே ஸர்வாஸாம் கிம்புநர்தீபதாயி நாம்.'
என்பன விஷ்ணு தர்மம்.

[3] விஷ்ணுதர்மம் என்பது மகாபாரதத்தில் உள்ளது ஒரு பகுதி.

[4] 'யேநஸம்வர்திதா பாலா யேநாஸ்மி பரிரக்ஷிதா
தேநபித்ரா வியுக்தாஹம் நஜிவேயக கதஞ்சந
நத்யாம்வா நிபதிஷ்யாமி ஸ்மித்தேவா ஹுதாஶநே
பர்வதாத்வா பதிஷ்யாமி பித்ருஹீநா நிராஶ்ரயா'
என்பன இதிகாச சமுச்சயம்.

பட்டேனோ, எவராலே பாதுகாக்கப்பட்டேனோ அந்தத் தந்தை என்னை விட்டு நீங்கிய பின் ஒருபோதும் உயிர்வாழேன்! தந்தை இல்லாதவளாயும் இருக்கிற நான் நதியிலாவது விழுகிறேன்; நன்றாக எரிகிற தீயிலாவது விழுகிறேன்; மலையிலிருந்தாவது கீழே விழுகிறேன்!' என்று சரீரத்தை விடுவதற்கு முயற்சி செய்யுமளவில்,[1] 'எல்லா உயிர்களிடத்திலும் அன்புடையவனான யமன் அருளுடையவனாய் முதிய பிராமண உருவத்தைப் பூண்டுவந்து அப்பொழுது இந்த வார்த்தையைச் சொன்னான்' என்கிறபடியே எல்லா உயிர்களுடைய நலத்திலே நோக்குடையவனான யமன் அருளையுடையவனாய் ஒரு முதிய பிராமண உருவத்தைக் கொண்டு வந்து,[2] 'மிக்க துக்கத்தை அடைந்திருக்கின்ற பரந்த கண்களையுடைய இளம்பெண்ணே, அழுவது போதும்; உன் தந்தை மீண்டும் உன்னை அடையமாட்டார்; ஆகையால் துக்கப்படுதற்குத் தகுந்தவள் அல்லை. ஆதலால்,[3] இந்தத் துக்கத்தை விட்டு, உன் தாய்தந்தையர்களுடைய பிரிவு உன்னுடைய எந்தக் கர்மத்தாலே உண்டாயிற்று அதனைச் சொல்லக் கேள்' என்று தான் சொல்லி, [4]'நீ முற்காலத்தில் நடனத்திலும் பாட்டு முதலிய கல்வியாலும் வல்லவளாய், வீணையிலும் வேய்ங்குழலிலும் நல்ல தேர்ச்சியுடையவளாய் அழகுடையவளாய்ச் சுந்தரி என்ற பெயரையுடையவளான தாசி' என்று தொடங்கி, 'நீ முற்பிறவியிலே சுந்தரி என்ற பெயரையுடைய விலைமகள்; உன்னாலே வசீகரிக்கப்பட்டவனாய் உன்னைப் புணர்ந்து செல்வான் ஒரு பிராமண புத்திரனை, உன் நிமித்தமாகப் பொறாமையாலே சூத்திரன் ஒருவன் கொல்ல, அவனுடைய தாய்தந்தையர்கள்

---

[1] 'ஆகத்ய கருணாவிஷ்டோ யமஸ்ஸர்வ ஹிதேரத:
ஸ்தவிர: ப்ராஹ்மணோ பூத்வாப்ரோவாசேதக வசஸ்ததா.'
என்பது இதிகாச சமுச்சயம்.

[2] 'அலம்பாலே விசாலாக்ஷி ரோதநேநாதி விஹ்வலே
நபூய: ப்ராப்யதே தாதஸ்தஸ்மாந் நார்ஹஸிஶோசிதும்.'
என்பது இதிகாச சமுச்சயம்.

[3] 'தஸ்மாத் த்வம்துக்க முத்ஸ்ருஜ்ய ஶ்ரோதுமர்ஹஸிஸுவ்ரதே
பித்ருப்யாம் விப்ரயோகோயம் யேநாபூத் கர்மணாதவ.'
என்பது இதிகாச சமுச்சயம்.

[4] 'புராத்வம் சுந்தரீ நாம வேஶ்யா பரமசுந்தரீ
ந்ருத்தகீதாதி நிபுணாவீணா வேணு விசக்ஷணா'
என்பது இதிகாச சமுச்சயம்.

'எங்கள் புத்திரனைக் கொல்லுவித்த நீ இனி ஒருபிறவியிலே தாய் தந்தையர்களை இழந்து கலங்கி வருந்தக்கடவாய்' என்று சபித்த படியாலேகாண் உனக்கு இந்தச் சோகம்வந்தது' என்ன, 'ஆனால், அத்தகைய பாவியான நான் பிராமணப் பிறவியிலே பிறப்பதற்குக் காரணம் என்?' என்று கேட்க, [1] 'சிறந்த அறிவினையுடையவளே, இந்தப் பிராமண ஜன்மத்தில் நீ பிறந்த காரணத்தை நான் சொல்லக் கேள்' என்று தொடங்கி, 'ஞானத்தில் மேம்பட்டவனாய், ஒன்றிலும் பற்று அற்று எல்லா உயிர்களையும் சமமாகக் காண்கிறவனாய், பகவானையே தியானிக்கின்றவனாய், [2] 'கிராமைகராத்ர' நியாயத்தாலே எங்கும் சஞ்சரிப்பானுகிற பாகவதன் ஒருவன் ஓர் இரவு உன்வாசலில் புறத்திண்ணையில் தங்கினவளவிலே, [3] தடாரிக்காரர் அவனைக் கள்ளன் என்று பிடித்துக் கட்ட, அவ்வளவிலே நீ ஓடிச்சென்று அக்கட்டை விடுவித்து, அந்தப் பாகவதனை உன் வீட்டிற்கு அழைத்துச் சென்று தேறுதல் கூறினாய். அதனாலே உனக்கு இது உண்டாயிற்று' என்று இதிகாச சமுச்சயத்திலே சொல்லப்பட்ட சுவிரத உபாக்கியானமும்;

ஒரு பெண் யமதூதர்களாலே நன்றாகத் துன்புறுத்தப் பட்டவளாய் ஆகாசத்திலே காப்பாற்றுவானை விரும்பிக் கூப்பிட்டுக்கொண்டு [4] வாராநிற்க, அசுவதத் தீர்த்தத்திலே பல காலம் தவம் செய்துகொண்டிருக்கிற மாதவி அதனைக் கேட்டு, அருள் கூர்ந்து, ஒருநாள் செய்த தவத்தின் பலனைத் தான் அவளுக்குக் கொடுக்க, அப்போதே, யமதூதரும் உறவினர் போன்றவராக, யமலோகத்திற்குச் செல்லுகிற வழியும் சுகத்தைத் தரக்கூடியதாக யாதனாசரீரம் நீங்கித் தேவசரீரமாக, இத்தகைய இவளையும் கொண்டு அவர்கள் யமனுடைய முன்னிலையில்

---

[1] 'ஶ்ருணு தஸ்ய மஹாப்ராஜ்ஞே நிமித்தம் கததோமம
யேநத்வம் ப்ராஹ்மணஸ்யாஸ்ய குலேஜாதா மஹாத்மந:'
என்பது,

[2] ஓர் ஊரில் ஓர் இரவே தங்கலாம் என்ற நியாயம்.

[3] தடாரிக்காரர் - தடாரி என்ற பறையையுடையவர்; தலையாரி. 'தளாடிக்காரர்' என்பது முன்னுள்ள பாடம்.

[4] வாராநிற்க - திருவரங்கத்திற்கு வந்து சேர. அசுவத்த தீர்த்தம் - கோயிலுக்குள் இருக்கும் ஒரு தீர்த்த விசேடம்.

சென்றவளவில் [1] யமன் தந்தையைப் போன்று மலர்ந்த முகத்தையுடையவனாய் இவளைப் பார்த்து இன்சொற்களைக் கூறிப் பின், [2] 'நன்மையையுடையவளே, இந்தப் பிறவியில் உன்னால் புண்ணியம் சிறிதும் செய்யப்படவில்லை; இந்தச் சன்மத்திற்குப் பன்னிரண்டாவது சன்மத்தின் இறுதியிலே சித்த புருஷனான விஷ்ணு பக்தன் ஒருவன் ஒருநாள் இரவு உன் வீட்டிலே தங்கிப் போவதற்காக வந்து உட்கார்ந்தான்; அவனுடைய [3] சந்நிதானத்தின் பெருமையாலே உனக்குச் சாதுசங்கமானது உண்டாயிற்று; அதனால் பிரமஞானமுடையவளான நீ திருவரங்கத்தை அடைந்து, அந்த இடத்தில் உள்ள அசுவத்தம் என்ற பெயரையுடைய தீர்த்தத்தையும் அடைந்தாய்; நல்ல ஞானத்தையும் ஒழுக்கத்தையு முடையவளாய் இருந்தாய். அதனால், மாதவியுடைய அங்கீகாரம் உனக்கு வருகைக்கு உறுப்பாக நீ அறியச் செய்தது ஒரு நன்மை இல்லை; இந்தச் சன்மத்திற்குப் பன்னிரண்டாம் சன்மத்திலே உன்வீட்டிலே தங்கிப்போகைக்காக ஓர் இரவு பாகவதன் ஒருவன் வந்து உன்னைக்கிட்டி இருந்து போனான்; அவனுடைய சந்நிதானத்தாலே உண்டானதுகாண் உனக்கு இந்தச் சாதுவின் சேர்க்கை என்று முன்பே நடந்ததான தான் அறியாதது ஒரு புண்ணியத்தை இவள் பேற்றிற்கு அடியாகச் சொன்னான்' என்கிற காருடபுராணத்திலே கோயில் மாகாத்மியத்தில் கதையும் கொள்க.

'சுருக்கம் ஒழியக் காணலாம்' என்றது, விரிவாகக் காணலாம் என்றபடி. [4] தாம் அறியாமல் செய்த இந்தப் புண்ணி

---

[1] 'பிதேவ தர்மராஜோபூத் தஸ்யாஸ்தத் ப்ரியதர்சநః
ஸாந்த்வயநிஸ மஹாதேஜா வ்யாஜஹாரச தாம்பிரதி.'
என்பது காருடபுராணம்.

[2] 'பத்ரே த்வயா ஸுஷ்டுக்ருதம் நகிஞ்சிதிஹவித்யதே
இதோத்வாதஸ ஜந்மாந்தேத்வாம் கஸ்சித் சித்தஆவிஸத்
விஷ்ணுபக்தோ நிவாஸார்தம் ராத்ரியாந்து தவவிஸத்வேஸ்மநி
தத்ஸந்நிதாந ப்ரபவஸ்தவ ஸாது ஸமாகமః
ஸாஹிவை ப்ரஹ்மவிதுஷீ ஸ்ரீமந்ரங்க முபாஸ்ரிதா
தத்ரதீர்த்தோத்தமம் ஸ்ரீமதஸ்வத்தம் நாமஸம்ஸ்ரிதா
தர்மஜ்ஞா தர்மபரமாயஸ்யாஸ்தே ஸங்கமோபவத்.'
என்பன காருடபுராணம்.

[3] சந்நிதானம் - சம்பந்தம். சாது - மாதவி.

[4] சூத்திரப்பொருளைப் பொருத்திக் காட்டுகிறார் 'தான் அறியாமல்' என்று தொடங்கி.

யங்கள் அடியான பகவானுடைய கடாக்ஷமே இவர்களுக்கு இந்தப் பலன்கள் வருகைக்குக் காரணம் ஆகையாலே, 'தான் அறியாமல் செய்த புண்ணியங்களைப் பற்றுசாகக் கொண்டு ஈச்வரன் அங்கிகரிப்பன்' என்னும் இதற்கு இவை உதாரணம் ஆகலாமிறே. (17)

## 386

[1] அஜ்ஞரான மனுஷ்யர்கள் 'வாளா தந் தான்' என்று இருப்பார்கள்.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, சர்வேச்வரன் யாதொரு காரணமும் இல்லாத தன்னுடைய கிருபையாலே இவ்வுலக மக்களை வாழ்விக்கையிலே முயற்சியுள்ளவனாய் உறுப்புகளோடு கூடிய சரீரங்களைக் [2] கொடுத்து, தன்னுடைய ஆணையின் உருவமான சாஸ்திரங் களுக்குத் தகுதியாக இவர்கள் பக்கலிலே சில புண்ணிய விசேடங் களைக் கண்டு அங்கீகரிக்கலாம் வழி உண்டோ என்று பார்த்து, அவை இல்லாமையாலே, [3] சர்வ முக்தி பிரசங்கமும் ஒப்ப நோக்குதல் இல்லாமையும் அருள் இல்லாமையும் வாராமைக் காக, [4] தாங்கள் அறியாத புண்ணியங்களைத் தானே கல்பித்து, அவற்றைத் தொடர்ந்து வருகிற பிறவிகள்தோறும் ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்படியை [5] விரிவாக அருளிச் செய்து, தாங்கள் அறியாத புண்ணியங்களும் அங்கீகாரத்திற்குக் காரணமாம்படியையும் காட்டினர் மேல். ஒரு காரணமும் பற்றுமலே அங்கீகரிக்கின்ற இவ்வங்கீகாரத்தின் சிறப்பினை அறியாதவர்கள், இதற்கு இசைந்து வைத்தும் அதனை நினைத்து ஈடுபடாமல் இருப்பர்கள் என்கிருர் இச்சூத்திரத்தால்.

---

[1] அஜ்ஞர்-அறிவில்லாதவர். 'தந்தான் என்று வாளா இருப்பர்கள்' என்று பிரித்துக் கூட்டுக. வாளா - ஈடுபடாமல்.

[2] 'கொடுத்து' என்பதனைப் பின்னே வருகின்ற 'பார்த்து' என்பது துடன் கூட்டுக.

[3] சர்வமுக்தி பிரசங்கம் - எல்லாரும் மோக்ஷத்திற்கு உரியவராதல்.

[4] தாங்கள் - மக்கள். தானே - இறைவனுகிய தானே.

[5] விரிவாக அருளிச்செய்தது, 384ஆம் சூத்திரத்தில். 'அங்கீகாரத் திற்குக் காரணமாம்படியைக் காட்டி' என்றது, 385ஆம் சூத்திரத்தில் கூறியதை.

**வியாக் :**—'அஜ்ஞான மநுஷ்யர்கள் வாளா தந்தான் என்று இருப்பார்கள்' என்றது, ஒரு காரணமும் பற்றுமலே அங்கீ கரிப்பதனுடைய பெருமையை அறியாதவர்கள், 'இப்படி அருள் செய்வதே' என்று [1] தலை சீய்த்து ஈடுபட வேண்டியிருக்க, அது செய்யாமல், 'அருள் செய்தான்' என்ற மாத்திரத்தை நினைந்து வெறுமனே இருந்துவிடுவர்கள் என்றவாறு. (18)

## 387

**ஞாநவான்கள், 'இன்று என்னைப் பொருள் ஆக்கித் தன்னை என்னுள் வைத்தான்', 'எந் நன்றி செய்தேனு என்னெஞ்சில் திகழ்வதுவே', 'நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன்', 'அறியாதன அறிவித்(த) அத்தா நீ செய்தன அடியேன் அறியேனே', 'பொருள் அல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய்', 'என்னைத் தீமனம் கெடுத்தாய்', 'மருவித் தொழும் மனமே தந்தாய்' என்று ஈடுபடா நிற்பர்கள்.**

என்பது சூத்திரம்.

**அவ :**—[2] நிர்ஹேதுகவிஷயீகாரத்தின் சிறப்பினை அறிந்த வர்கள் ஈடுபடும்படியை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'ஞானவான்கள்' என்றது, நிர்ஹேதுக விஷயீ காரத்தின் பெருமையை உள்ளபடி அறியுமவர்கள் என்றபடி. [3] 'இன்று என்னைப் பொருள் ஆக்கித் தன்னை என்னுள் வைத்தான்', [4] 'எந்நன்றி செய்தேனு என் நெஞ்சில் திகழ் வதுவே'—அநாதி காலம் ஒரு பொருள் அல்லாமல் கிடந்த என்னை இன்று ஒரு பொருள் ஆக்கி, நித்தியசூரிகளுக்கும் அவ் வருகான தன்னை, நித்திய சம்சாரிகளுக்கும் இவ்வருகான என்னுடைய புல்லிய நெஞ்சிலே வைத்தான், பெரியவுடையாரைப் போலே தடையோடே முடிந்தேனோ, திருவடியைப் போலே

---

[1] 'தலைசீய்த்து' என்றது, 'மிகுதியும்' என்றபடி.

[2] நிர்ஹேதுகவிஷயீகாரம் – ஒரு காரணமும் பற்றுமல் அங்கீகரித் தல்.

[3] திருவாய். 10. 8 : 9. [4] திருவாய். 10. 6 : 8.

[1] 'கண்டேன் சீதையை' என்று வந்தேனே, அன்றி, தன்னுடைய ஆணையின் வழி ஒழுகினேனும்படி சாஸ்திரங்களில் விதித்த கர்மங்களைச் செய்தேனே, என்ன நன்மை செய்தேனாக என் நெஞ்சிலே புகுந்து பெருப்பேறு பெற்றானாய் விளங்குகிறது என்றும்,

[2] 'நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன்'—இவ்வுலகப் பொருள்களிலே பெருவிருப்பினனாய்ப் போகாநிற்க, நடுவே வந்து உய்யக்கொள்கின்ற சுவாமி என்றும்,

[3] 'அறியாதன அறிவித்(து)தஅத்தா நீ செய்தன அடியேன் அறியேனே'—'அறியாதனவற்றை எல்லாம் எனக்கு அறிவித்துச் சுவாமியான நீ அடியவனான என் பக்கல் செய்த உபகாரம் உபகரித்த நீ அறியில் அறியுமித்தனை, என்னால் சொல்லித் தலைக்கட்டப் போமோ?' என்றும்,

[4] 'பொருள் அல்லாத என்னைப் பொருள் ஆக்கி அடிமை கொண்டாய்'—[5] 'பரம்பொருள் இல்லை என்று அறிகிறானேயாகில் சொல்லுகிற அவன் இல்லாதவன் ஆகிறான்' என்கிற படியே அறிவில்லாத பொருளைப் போன்று கிடந்த என்னைப் 'பரம்பொருள் உண்டு என்று அறிகிறானாகில் இவனை உள்ளவனாகவே அறிகிறார்கள்' என்கிறபடியே உள்ளவனாய் ஒரு பொருளாம்படி பண்ணி அந்த உளனும் தன்மை நிலை நிற்கும்படி கைங்கரியத்தையும் கொண்டருளினாய்' என்றும்,

[6] 'என்னைத் தீமனம் கெடுத்தாய்'—'அமுதினையும் விஷத்தையும் ஒக்க விரும்புவாரைப் போன்று உன்னையும் உகந்து இவ்வுலகப் பொருள்களையும் விரும்பும் பொல்லாத நெஞ்சினைப் போக்கினாய்' என்றும்,

---

[1] 'திருஷ்டா ஸீதா' என்பது, ஸ்ரீராமா. பால. 1 : 78. 'கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்' என்பது கம்பரா. சுந்.

[2] திருவாய். 1. 7 : 5.

[3] திருவாய். 2. 3 : 2.

[4] திருவாய். 5. 7 : 3.

[5] 'அஸந்நேவ ஸபவதி அஸத்ப்ரஹ்மேதி வேதசேத்
அஸ்தி ப்ரஹ்மேதிசத் வேதஸந்தமேநம் ததோ விதுரிதி:'
என்பது தைத்திரீய உபநிடதம்.

[6] திருவாய். 2. 7 : 8.

[1] 'மருவித்தொழும் மனமே தந்தாய்'—'வேறு ஒரு பயனையும் கருதாதவனாய்க்கொண்டு உன்னையே அநுபவிக்கும் மனத்தினைத் தந்தாய்' என்றும், ஈடுபடா நிற்பர்கள்—என்று அவன் நிர்ஹேதுகமாகச்செய்த உபகார விஷயங்களை நினைத்துத் தலைசீய்த்து ஈடுபடாநிற்பர்கள் என்றபடி.

அன்றிக்கே, மேல் சூத்திரத்தில் 'வாளார் தந்தார்' என்பது பாடமான போது, 'இப்படி சர்வேச்வரன் தன் நிர்ஹேதுக கிருபையாலே தங்களை உய்விக்கக் கிருஷி பண்ணிக்கொண்டு வரும் பிரகாரத்தை அறியாத மனிதர்கள், வாள் வலியாலே வாழ்ந்து திரியும் மக்கள் தங்களுக்கு வந்தது ஒரு செல்வத்தின் நிறைவினை 'நம்முடைய வாளார் தந்தார்' [2] என்று நினைத்திருக்குமாறு போன்று, நிர்ஹேதுகமாக வந்த பகவானுடைய அங்கீகாரத்தைத் தங்களுடைய புண்ணியத்தின் பலத்தாலே வந்ததாக நினைத்திருப்பர்கள் என்று பொருள் கொள்க. [3] அப்போதைக்கு, எல்லாம் அவன் அருளாலே வந்தது என்று தெளியக் கண்டவர்கள், அவன் நிர்ஹேதுகமாகப் பண்ணின உபகார விசேஷங்களை நினைந்து ஈடுபடும்படியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால் என்று இச்சூத்திரத்திற்கு அவதாரிகை கொள்க. (19)

## 388

[4] பாஷ்யகாரரர் காலத்திலே ஒரு நாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்து, பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகள் எல்லாம் திரளவிருந்த அளவிலே இவ்வர்த்தம்

---

[1] திருவாய். 2. 7 : 7.

[2] புறநானூற்றுச்செய்யுளை ஈண்டு நோக்கல் தகும்.

[3] 'அப்போதைக்கு' என்றது, 'வாளார் தந்தார்' என்ற பாடமான போதைக்கு என்றபடி.

[4] பாஷ்யகாரர் - இராமாநுசர். பெருமாள் - நம்பெருமாள். பெரிய திருமண்டபம் - திருவரங்கம் பெரிய கோயிலிலே உள்ளதொரு மண்டபம். முதலிகள் - பூர்வாசாரியர்கள். இவ்வர்த்தம் - நிர்ஹேதுகமாக அங்கீகரித்தலாகிய இப்பொருள். பிரஸ்துதமாக - தோன்ற; அதாவது, 'ஆராய்ச்சிக்கு வர' என்றபடி. ஸ்மரிப்பது - நினைப்பது.

பிரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது.

என்பது சூத்திரம்.

அவ :—இந்த நிர்ஹேதுக விஷயீகாரத்தை உறுதிப்படுத்துவதான ஒரு பழைய வரலாற்றினை நினைப்பூட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பாஷ்யகாரர் காலத்திலே' என்றது, சகல வேதங்களின் கருத்துப் பொருள்கள் எல்லாம் ஐயம் திரிபு அற நடந்து செல்லுகிற நல்லடிக்காலமான பாஷ்யகாரர் காலத்திலே என்றபடி. ஒரு நாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகள் எல்லாரும் திரள இருந்த அளவிலே இவ்வர்த்தம் பிரஸ்துதமாகப் பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது' என்றது, ஒரு நாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்திற்குக் கீழாக ஞானத்தில் மேம்பட்டவர்களான முதலிகள் எல்லாரும் திரண்டு இருந்த அளவிலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'இது யார் வாசலிலே நெடுங்காலம் அவர்கள் புறப்பாடு பார்த்திருந்தேமோ தெரியாது; இன்று வகுத்த சேஷியான பெருமாள் புறப்பாடு பார்த்து வந்திருக்க என்ன புண்ணியம் பண்ணினோம்' என்ன, அது அடியாக, 'பிறப்பு இறப்புகளிலே உழன்று திரிகின்ற ஒருவனுக்குப் பகவத் விஷயத்தில் ருசி பிறக்கைக்கு அடி என்?' என்று ஆராய்கின்ற பொழுது 'நாம் அறியாமல் செய்த புண்ணியம்' என்பார் சிலரும், 'நாம் அறிந்து செய்த புண்ணியம்' என்பார் சிலருமாகப் பேசாநிற்க, அவ்வளவிலே, அங்கிருந்தவரான [1] கிடாம்பிப் பெருமாள் 'நமக்குப் பகவத் விஷயம் போலே சுக்ருததேவர் என்பார் ஒருவர் உளரோ பற்றத்தக்கவர்?' என்ன, பிள்ளை திருநறையூர் அரையர் 'சுக்ருதம் என்று சொல்லுகிறதும் நீ நினைக்கிற விஷயத்தையேகாண்' என்று அருளிச்செய்ய, ஆக, இப்படிப் பின்பு பிறந்த வார்த்தைகளை இங்கே நினைப்பது என்றபடி.

இவ்வரலாற்றினைத் [2] 'தருதுயரம் தடாயேல்' என்கிற திருப்பாசுரத்தின் வியாக்கியானத்திலே சுருக்கமாகப் பூர்வர்கள் அருளிச்செய்துவைத்தார்களிறே.

---

[1] கிடாம்பிப் பெருமாள் - ஒரு பெரியார்; இராமாநுசருடைய மாணுக்கர். சுக்ருததேவர் - புண்ணியம்.

[2] பெருமாள் திருமொழி, 5 : 1, பூர்வர்கள் - பெரியவாச்சான்பிள்ளை.

இதனால், நாம் அறியாத புண்ணியங்கள் உளவாயினவே யாகிலும் அவை பலத்திற்குக் காரணம் ஆகா; அவற்றை வியாஜமாக்கி அங்கீகரிக்கும் ஈச்வரனே பலத்திற்குக் காரணன் என்றதாயிற்று. (20)

## 389

ஆகையால், [1] அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக் கொண்டு கடாக்ஷியா நிற்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே கூறப்பட்ட பொருளை முடிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆகையால், அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக்கொண்டு கடாக்ஷியாநிற்கும்' என்றது, மேலே கூறிய வகையாலே சர்வமுக்தி பிரசங்கம் [2] முதலானவைகள் வாராமைக்காக, இவன் அறியாமல் விளையுமவையான சில நன்மை விசேடங்களையே இவனை அங்கீகரிக்கைக்குப் பற்றாசாகப் பிடித்துக்கொண்டு விசேடமான திருவருளைச் செய்யாநிற்கும் என்றபடி. (21)

## 390

[3] இவையுங்கூட இவனுக்கு விளையும்படியிறே இவன் தன்னை முதலிலே அவன் சிருஷ்டித்தது.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி, இவன் அறியாத நன்மைகளையேயாகிலும் காரணமாகக்கொண்டு அருள் புரியுமளவில், அங்ஙனம் அருள்

[1] அஜ்ஞாதமான - அறியப்படாதவையான. பற்றுசு - பிடித்துச் செல்லும் கோல் - தடி என்பர். 'ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப்படப் பற்றுசிட்டு விளக்கினாற்போல' என்பது யாப்பருங் கலக்காரிகை உரை.

[2] 'முதலானவைகள்' என்றதனால், ஒப்ப நோக்குதல் இல்லாமை, அருள் இல்லாமை என்னும் இவற்றைக் கொள்க.

[3] இவையுங்கூட - தான் அறியாமல் செய்கின்ற புண்ணியங்களும். அவன் - இறைவன்.

புரிதல், காரணத்தால் வந்ததாகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவையுங்கூட இவனுக்கு விளையும்படியிறே இவன் தன்னை முதலிலே அவன் சிருஷ்டித்தது' என்றது, தான் அறியாமல் வருகின்ற இந்தப் புண்ணிய விசேடங்களும் உட்பட இவனுக்கு உண்டாம்படியிறே, இவற்றிற்கும் தகுதி இல்லாதபடி உறுப்பும் உடலும் இல்லாதவனாய்க் கிடந்த இவனைப் படைப்புக் காலத்திலே உறுப்புகளோடுகூடிய உடலைக் கொடுத்து அவன் உண்டாக்கினான் என்றபடி. இதனால், திருவருள் புரிதற்குக் காரணமாகச் சொன்ன [1] யாதிருச்சிகம் முதலானவைகளும் அவனுடைய கிருஷியின் பலன் என்பதனைத் தெரிவித்தவாறு.

'இவையும்' என்ற உம்மையால், [2] துல்ய நியாயத்தாலே அறிந்து செய்கிற நன்மைகளுக்கும் அடி அவன் செய்த கிருஷி என்கிறது. அன்றிக்கே, அவ்வும்மை [3] மேலே சொல்லப்போகிற நிரூபண விசேஷங்களைத் தழுவுகிறது என்னவுமாம். 'நன்று. [4] படைப்புதான் மக்களுடைய கர்மங்கட்குத் தகுதியாக அன்றோ? என்னில், படைப்பது கர்மங்கட்குத் தகுதியாகவே யாயினும், யௌகபத்யம் அநுக்கிரகத்தின் காரியமிறே. (22)

## 391

அதுதன்னை [5] நிரூபித்தால் இவன்தனக்கு
ஒன்றும் செய்ய வேண்டாதபடியாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

---

[1] யாதிருச்சிகம் என்றதன் பொருளை 384ஆம் சூத்திரவுரையில் காண்க.

[2] கரண களேபரங்களாலே சாதிக்கப்படுகின்ற ஒப்புமை இரண்டற்கும் இருப்பதனாலே 'துல்ய நியாயத்தாலே' என்கிறார். துல்யம் - ஒத்தது.

[3] 'மேலே சொல்லப்போகிற' என்றது, 394ஆம் சூத்திரத்தில் கூறப்படுவதனை.

[4] 'இவையுங்கூட இவனுக்கு விளையும்படியிறே இவனை முதலிலே சிருஷ்டித்தது?' என்ற சூத்திரப்பொருளை நோக்கி, இவ்வினாவை எழுப்புகிறார் 'படைப்புதான்' என்று தொடங்கி. யௌகபத்யம் - ஒரே காலத்தில் படைப்பது.

[5] நிரூபித்தல் - ஆராய்தல்; விசாரித்தல்.

அவ :—அவன் உடலையும் உறுப்புக்களையும் தந்த விஷயத்தை ஆராய்ந்து பார்த்தால், இவனுக்கு உண்டாகுமவற்றை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'அதுதன்னை நிரூபித்தால்' என்றது, அசித்தைக்காட்டிலும் வேறுபாடு இல்லாதவனாய்க் கிடந்த நிலையிலே, உஜ்ஜீவனத்திற்குத் தக்கவையான உடலையும் உறுப்புகளையும், பரமகிருபையையுடையவனாய் அவன் தந்தபடியை நினைத்தால் என்றபடி. 'இவன் தனக்கு ஒன்றும் செய்ய வேண்டாதபடியாய் இருக்கும்' என்றது, அவனுக்குப் பரதந்திரமான சொரூபம், நிலைபேறு முதலியவற்றையுடையவனான இவனுக்கு, தான் பெறுதற்குரிய வழி வகைகளில் அவன் செய்தபடி கண்டிருக்கை ஒழியத் தான் ஒரு செயலைச் செய்ய வேண்டாதபடியாயிருக்கும் என்றபடி. (23)

## 392

பழையதாக உழுவது நடுவது விளைவதாய்ப் போரும் [1] க்ஷேத்திரத்திலே உதிரி முளைத்துப் பலபர்யந்தமாமாபோலே, இவைதாம் தன்னடையே விளையும்படியாயிற்று; பத்தியுழவன் பழம்புனத்தைச் சிருஷ்டித்த கட்டளை.

என்பது சூத்திரம்.

அவ :—ஈச்வரனுடைய படைப்பால் இவனுக்கு விளையும் அங்கீகாரத்திற்கு உரிய பற்றுசுகள், யாத்ருச்சிகம் முதலானவைகள் மாத்திரமே அல்ல; இன்னம் சில உண்டு என்று காட்டுகிறார் இச்சூத்திரத்தால். அன்றிக்கே, மேலே கூறிய அவைதாம் உண்டாகும் வகையை விளக்குகிறாராகவுமாம்.

வியாக் :—'பழையதாக உழுவது நடுவது விளைவதாய்ப் போரும் க்ஷேத்திரத்திலே உதிரி முளைத்துப் பலபர்யந்தம் ஆமாபோலே' என்றது, புதியதாகத் தரிசு திருத்தினதன்றிக்கே, பழையதாக உழுவது நடுவது விளைவதாய்க்கொண்டு செய்

---

[1] க்ஷேத்திரம் - வயல். ஆமாபோலே - ஆமாறு போலே. 'அந்தம் ஆமா பாடி' என்பது திருவெம்பாவை, 14. 'பத்தியுழவன் பழம் புனம்' நான்முகன் திருவந். 23.

காலாகப் போரும் வயலிலே, உழவன் அதற்கு என்று ஒரு செயலும் செய்யாதிருக்க, உதிரியானது முளைத்து விளைந்து தலைக்கட்டுமாறுபோலே என்றபடி. 'இவைதாம் தன்னடையே விளையும்படி ஆயிற்று, பத்தி உழவன் பழம்புனத்தைச் சிருஷ்டித்த கட்டளை' என்றது, [1] மேலே சொல்லப்புகுகிற நிருபண விசேஷங்களாதல், [2] மேலே கூறிய யாத்ருச்சிகம் முதலானவைகளாதல் இதற்கு என்று ஒரு செயலும் செய்ய வேண்டாதே, இம்மக்கள்பால் தன்னடையே விளையும்படியாயிற்று, பக்தியை விளைவிக்கிறவனான ஈச்வரன் [3] பிரிவாக ரூபமாக நடக்கிற இந்தச் சம்சாரமாகிற பழம்புனத்தைப் படைத்துத் திருத்திப்போருவது என்றபடி. (24)

## 393

**'அவைதாம் எவை?' என்றால்**

**என்பது சூத்திரம்.**

அவ :—'இவை' என்று மேலே அருளிச்செய்தவற்றை விரித்துரைப்பதற்காக, அது சம்பந்தமான வினாவினை அநுவதிக்கிறார் 'அவைதாம் எவை என்றால்' என்று. (25)

## 394

[4] பூர்வகிருத புண்ணியாபுண்ணிய பலன்களைச் சிரகாலம் புஜித்து, உத்தர காலத்தில் வாசனை கொண்டு பிரவர்த்திக்குமத்தனை என்னும்படி கையொழிந்த தசையிலே, 'நாம் ஆர்? நாம் நின்ற நிலை எது?' என்று பிறப்பன சில

---

1 'மேலே சொல்லப்புகுகிற' என்றது 394ஆம் சூத்திரத்தை நோக்கியது.

2 384ஆம் சூத்திரம்.

3 பிரவாகம் - ஆற்று வெள்ளம்.

4 பூர்வகிருத - முற்பிறவிகளில் செய்த. சிரகாலம் - பல காலம். புஜித்து - அநுபவித்து. உத்தரகாலம் - மேலே வரும் காலம். பிரவர்த்திக்கும் - செயல்களைச் செய்ய இறங்கும். நிரூபணம் - ஆராய்தல். கை ஒழிந்ததசை - செயல் அற்ற நிலை. 'முன்பு சொன்னவை' என்றது, முன் கூறிய யாத்ருச்சிகம் முதலாயினவற்றை. 384ஆம் சூத். காண்க.

நிரூபண விசேஷங்கள் உண்டு, அவையாதல் - முன்பு சொன்னவையாதல்.

என்பது சூத்திரம்.

அவ :—மேலே வினவிய வினவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பூர்வகிருத புண்ணிய அபுண்ணிய பலன்களைச் சூரகாலம் புஜித்து' என்றது. முற்பிறவிகளில் செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் என்னும் இரண்டனுடைய பலன்களைச் சுவர்க்கம் நரகம் முதலானவைகளிலே பல காலம் அநுபவித்து என்றபடி. 'உத்தர காலத்தில் வாசனை கொண்டு பிரவர்த்திக்கு மத்தனை என்னும்படி கையொழிந்த தசையிலே' என்றது, மேல் வருங்காலத்தில் முற்பிறவிகளில் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளாகிற செயல்களில் ஈடுபடுவான் என்று சொல்லத்தக்கதாம்படி, சூக்ஷ்மமான கர்மங்களையுடையவனாய்க் கர்மங்களின் பலன்களை அநுபவிப்பதில் செயல் அற்று நின்ற நிலையிலே என்றபடி.

'நாம் ஆர்? நாம் நின்ற நிலை எது? நமக்கு இனிமேல் போக்கடி எது' என்று பிறப்பன சில நிரூபண விசேஷங்கள் உண்டு அவையாதல்' என்றது, 'காண்கிற தேகமோ, தேகத்திற்கு வேறுபட்டவரோ, சுவதந்திரரோ, பரதந்திரரோ நாம் ஆர்?' என்றும், 'அழியும்படி நின்றேமோ? உய்யும்படி நின்றேமோ? நாம் நின்ற நிலை யாது?' என்றும், 'இப்படி நின்ற நமக்கு இனிமேல் ஈடேறுகைக்கு ஈடான போக்கடி எது?' என்றும் தன்னடையே உண்டாவன சில நிரூபண விசேஷங்கள் உண்டு; அந்நிரூபண விசேஷங்களை ஆதல் என்றபடி. 'முன்பு சொன்னவையாதல்' என்றது, மேலே கூறப்பட்டவைகளான யாத்ருச்சிகம் முதலான புண்ணியங்களாதல் என்றபடி. (26)

## 395

[1]'யதாஹிமோஷகா: பாந்தே' என்று தொடங்கி, இதனுடைய கிரமத்தைப் பகவச் சாஸ்திரத்திலே சொல்லிற்று.

---

1 யதா - எப்படி. மோஷகா: - திருடர்கள். பாந்தே - வழியிலே செல்கிறவன்.

அவ :—' நிர்ஹேதுகமாக அங்கீகரிக்கிற இந்த அங்கீகாரத்தினுடைய முறை, சாஸ்திரத்தில் எங்கே சொல்லிற்று?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' யதாஹி மோக்ஷகா: பாந்தே' என்று தொடங்கி இதனுடைய கிரமத்தைப் பகவத் சாஸ்திரத்திலே சொல்லிற்று என்றது, [1]'பகவத் சாஸ்திரம் நூற்றெட்டு சம்ஹிதையாயிறே இருப்பது; அவற்றுள் ஒன்றிறே அஹிர்புத்திந்ய சம்ஹிதை. [2]'பாஞ்சராத்திர சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் அருளிச்செய்தவன் நாராயணனே' என்கிறபடியே எல்லாவற்றிற்கும் [3]ஆதிவக்தா பகவானாகவிருக்கச்செய்தே, ஒவ்வொரு சம்ஹிதையிலும் வேறு வேறு வக்தாக்களும் உண்டிறே. அவற்றுள் இந்தச் சம்ஹிதைக்கு அஹிர்புத்திந்ய [4]சம்ஜ்ஞிகனான சிவன் வக்தாவாகையாலே இது 'அஹிர்புத்திந்ய சம்ஹிதை' என்று சொல்லப்படுகிறது. இந்தச் சம்ஹிதையிலே [5]'நுண்ணுணர்வின் நீலார் கண்டத் தம்மான்' என்கிறபடியே சத்துவ குணம் தலையெடுத்த போது நுண்ணுணர்வினனாயிருக்கும் சிவனை, தேவரிஷியாய், பரம்பொருளை அறிந்தவர்களுள் தலைவனான ஸ்ரீ நாரத பகவான் சென்று அடைந்து வணங்கித் தன்னுடைய ஐயங்களை எல்லாம் கேட்க, அவன் விடையிறுத்துக் கொண்டு வாராநிற்க, பதினான்காம் அத்தியாயத்தில் இவன் வினவிய வினாவிற்கு விடையாக, [6]'பிறப்பு இறப்புகளிலே உழன்று திரிவதற்கும் மோக்ஷத்தை அடைவதற்கும் காரணங்களான நிக்கிரகசக்தி, அநுக்கிரகசக்தி என்று, சர்வேச்வரனுக்கு இரண்டு சக்திகள்

---

[1] பகவத் சாஸ்திரம் என்றது, பாஞ்சராத்திர ஆகமத்தை. சம்ஹிதை - காண்டம், பர்வம் என்பன போன்று, நூலிலே உள்ள ஒரு பெரும்பிரிவிற்குப் பெயர்.

[2] 'பஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்.' என்பது, பாஞ்சராத்திரம்.

[3] ஆதி வக்தா - முதலிலே அருளிச்செய்தவன்.

[4] சம்ஜ்ஞிகன் - பெயரையுடையவன்.

[5] திருவாய்மொழி, 6. 10 : 8.

[6] உழன்று திரிவதற்கு நிக்கிரக சக்தி, மோக்ஷத்தையடைவதற்கு அநுக்கிரக சக்தி என்று நிரல் நிறையே கொள்க.

உண்டு என்று [1]பிரதிஜ்ஞை செய்து, அவற்றுள் [2]'ஞானத்தை மறைக்கின்ற நிக்கிரகம் என்ற பெயரையுடைய அந்தச் சக்தியானது சீவன் என்ற பெயரையுடைய புருஷனைத் தானே மறைக்கிறது' என்று தொடங்கி, நிக்கிரகத்தின் உருவமான சக்தியாலே மறைக்கப்பட்ட சொரூபம் முதலானவைகளையுடையனாய் இந்தச் சீவான்மா உழன்று திரிகின்றபடியை விரிவாகப் பேசி, பின்னர், அநுக்கிரகத்தின் வடிவமான சக்தியாலே இந்தச் சம்சாரத்தினின்றும் நீங்கி முக்தனாம்படியைச் சொல்லுவதாகத் தொடங்கி, [3]'பிறவியாகிற சக்கரத்தில் சுழன்றுகொண்டிருப்பவனாய்த் துக்கத்தால் கலங்கினவனான இந்தச் சீவான்மா விஷயமாகச் சர்வேச்வரனுக்கு ஓர் அருள் உண்டாகும்படியையும், அந்த அருள் அடியாக உண்டான அவன் கடாக்ஷத்திற்கு இலக்கு ஆகி இவன் கர்ம சாம்யத்தை அடைகிறான் என்னுமிடத்தையும், அநுக்கிரகத்தின் வடிவமான அந்தச் சக்தியினுடைய உண்மை இவனைச் சம்சாரத்தினின்றும் நீக்கி உயர்நிலையை அடையச் செய்யும் என்னுமிடத்தையும், [4]மேலே 'கர்மசாம்யம்' என்ற தன் கருத்தையும்' சுருக்கமாகச் சொல்லி, பின்னர், [5]"வழி

---

[1] பிரதிஜ்ஞை - மலை நெருப்புடையது என்பது போன்று சொல்லுதல்.

[2] 'திரோதா நகரீ ஶக்திஸ்ஸா நிக்ரஹ ஸமாஹ்வயா
புமாம்ஸம் ஜீவஸம்ஜ்ஞம் ஸாதிரோபாவயதி ஸ்வயம்.'
என்பது பிரமாணம்.

[3] 'ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபிঃ
ஜீவே துக்காகுலே விஷ்ணோঃ க்ருபாகாப் யுபஜாயதே.
ஸமீக்ஷிதஸ்து தாஸோயம் கருணாவர்ஷ ரூபயா
கர்மஸாம்யம் பஜத்யேவ ஜீவோ விஷ்ணு ஸமீக்ஷயா.
ஶக்திபாவஸ் ஸவை ஜீவமுத்தாரயதி ஸம்ஸ்ருதேঃ
கர்மணீச ஸமேதத்ர தூஷ்ணீம் பாவமுபாகதே.'
என்பன பிரமாணங்கள்.

[4] 'மேலே கர்மசாம்யம் என்றதன் கருத்தையும்' என்றதில், மேல் சுலோகத்தில் உள்ள ஈற்றடியை நோக்கி. 'அப்போது சமமான புண்ணிய பாவங்கள் சாந்த நிலையை அடைகின்றன' என்பது அதன் பொருள். கர்ம சாம்யத்தை - இருவினை ஒப்பு என்பர்.

[5] 'யதாஹிமோஷகாঃ பாந்தே பரிபர்ஹ முபேயுஷி
நிவ்ருத்த மோக்ஷணேத் யோகாஸ் ததாஸந்த உதாஸதே.
அநுக்ரஹாத்மிகா யாஸ்து ஶக்தேঃ பாதக்ஷணே ததா
உதாஸாதே ஸமீபூய கர்மணீதே ஶுபாஶுபே.

போகிறவன் சம்பாரத்தை வைத்து மறைய நின்ற அளவிலே, அவனுடைய சம்பாரத்தைக் கவர்வதற்கு முயற்சி செய்கிற கள்ளர்கள், அந்தச் சம்பாரத்தை அவன் வந்து கைப்பற்றின அளவில், திருடுகின்ற தன்மையினின்றும் நீங்கினவர்களாய்க் கொண்டு எப்போதும் உதாசீனர்களாய் இருந்துவிடுவர்கள்; அப்படியே, பகவானுடைய அநுக்கிரக சக்தி இவன்பால் வந்து விழுந்த அந்தக் கணத்திலே, இந்த ஆன்மாவைத் தன்வழியே இழுப்பதாகாநின்ற புண்ணிய பாவகர்மங்கள் இரண்டும் இவனை வந்து மேலிடாமல் உதாசீனித்து இருந்துவிடும்; அந்த அநுக்கிரகத்தின் உருவமான சக்தி இவன்பால் வந்த பின்பு இவன் மோக்ஷத்தில் விருப்பத்தையுடையவனாய், விருத்தியடைந்த வைராக்கியத்தை யுடையவனாய், பகுத்தறிவதில் ஆசையுடையவனாய், சாஸ்திரங்களில் அன்புள்ளவனாய், நற்குருவை அடைந்து [1] சத்தையுடையவனாய் ஞானத்தையுடையவனாய் அந்த ஞானத்தைப் போற்றிக்கொண்டு சாரத்தை அறிந்தவனாய் நல்லதும் தக்கதுமான உபாயத்தைப் பற்றுவதனாலே இப் பிறப்பாகிற கடலைத் தாண்டினவனாய்ப் பரமபதத்தை அடைவான்'' என்று அந்த அத்தியாயத்திலே மேல் உள்ள பாகத்தாலே சொன்னாரிறே.

ஆகையாலே, 'யதாஹிமோஷகாః பாந்தே' என்று தொடங்கி இந்த நிர்ஹேதுகமாக அங்கீகரிப்பதனுடைய கிரமத்தை நம்பத்தக்க பிரமாணமான பகவத்சாஸ்திரத்திலே சொல்லிற்று என்கிறார். (27)

---

தத்பாதாநந்தரம் ஜந்துர்யுக்தோ மோக்ஷ ஸமீக்ஷயா
ப்ரவர்த்தமாந வைராக்யோ விவேகேஷபி நிவேஶவாந்.
ஆகமாநநு ஸஞ்சிந்த்ய குரூநப்யுப ஸர்ப்யச
லப்தஸத்தః ப்ரகாரைஸ்தைః ப்ரபுத்தோ போதபாலநః'
என்பன பாஞ்சராத்திரம்.

சம்பாரம் - தலையிலே சுமந்து வருகின்ற பொருள்கள்.

[1] சத்தை - சொரூபம்.

## 396

[1]'வெறிதே அருள் செய்வர்' என்று இவ் வார்த்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படிச் சாஸ்திரம் சொன்ன அளவன்றிக்கே, நிர்ஹேதுகமான அங்கீகாரத்திற்கு நேரே பாத்திரருமாய் நம்பத் தக்க உயர்ந்தவர்களுள் தலைவரான ஆழ்வார் இவ்வர்த்தத்தைத் தெளிய அருளிச்செய்தார் என்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'வெறிதே அருள்செய்வர்' என்று இவ்வர்த் தத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே என்றது, நிர்ஹேதுக மாக அங்கீகரித்தலாகிற இந்த இரகசியப் பொருளை ஐயம் திரிபு அற எல்லாரும் அறியும்படி தெளிவாக அருளிச்செய்தார் என்ற படி. வெறிதே அருள்செய்வர்—ஒரு காரணமும் பற்றுமல் அருள் புரிவர். (28)

## 397

'செய்வார்கட்கு' என்று, அருளுக்கு ஏது 'சுக்ருதம்' என்னுநின்றதே? என்னில், அப் போது 'வெறிதே' என்கிற இடம் சேராது.[2]

என்பது சூத்திரம்.

அவ :—'வெறிதே அருள்செய்வர்' என்ற அந்தத் தொடர் மொழிக்கு அடுத்துள்ள 'செய்வார்கட்கு' என்ற பதத்தின் பொருளை அறியாதாருடைய வினுவினை அநுவதித்து, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'செய்வார்கட்கு' என்று அருளுக்கு ஏது 'சுக்ருதம்' என்னு நின்றதே? என்னில் என்றது, 'அருள்

---

1 'வெறிதே' என்பது திருவாய்மொழி, 8. 7 : 8.

ஸ்பஷ்டமாக - தெளிவாக. அருளிச்செய்தவர் நம்மாழ்வார். சாஸ்திரங்களைக்காட்டிலும் பெரியோர்களுடைய அநுஷ்டானம் மிக உயர்ந்ததாகையாலே, அவ்வநுஷ்டானத்தைக் காட்டுகிறுர் இச்சூத்திரத் தால். நிர்ஹேதுகம் - ஒரு காரணமும் பற்றுமல்.

2 'அறியேன் மற்றருள் என்னை ஆளும்பிரானுர்
வெறிதே அருள்செய்வர் செய்வார்கட்குகந்து'
என்பது அத்திருப்பாசுரப் பகுதி.

செய்வர்' என்றதன்பின் யாருக்கு என்ற வினுவிற்கு விடையாகச் 'செய்வார்கட்கு' என்று, அருளுகைக்கு உறுப்பாகத் திருவுள்ளம் உகக்கும்படி சிலவற்றைச் செய்வார்கட்கு என்கையாலே; அவன் திருவருள் புரிதற்குக் காரணம், 'மக்கள் செய்த புண்ணியம்' என்னுநின்றதே என்னில் என்றபடி. 'அப்போது 'வெறிதே' என்ற இடம் சேராது' என்றது, 'அப்படிச் சொல்லும்போது ஒரு காரணமும் பற்ருமல் என்ற பொருளைக் காட்டுகின்ற 'வெறிதே' என்ற சொல் பொருந்தாதே?' என்றபடி. ஆகையால், செய்வார்கட்கு என்ற சொல்லுக்குப் பொருள், தான் அருள் செய்ய நினைத்தவர்களுக்கு என்பதாம். (29)

## 398

**[1]பகவதாபி முக்கியம் சுக்ருதத்தால் அன்றிக்கே பகவத் கிருபையாலே பிறக்கிறது; அத்வேஷம் சுக்ருதத்தாலே என்னில், இந்தப் பல விசேஷத்துக்கு அத்தைச் சாதனம் ஆக்க ஒண்ணுது.**

என்பது சூத்திரம்.

அவ:—ஆபி முக்கியத்திற்குப் பகவானுடைய திருவருள் காரணம்; துவேஷம் இன்றி இருத்தற்குப் புண்ணியம் காரணம் என்று நினைத்துச் சொல்லுவார் வார்த்தையை அநுவதித்து, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'பகவத் ஆபி முக்கியம் சுக்ருதத்தால் அன்றிக்கே பகவத் கிருபையாலே பிறக்கிறது' என்றது, அநாதிகாலம் முகம் மாறினவனுய்—அன்பில்லாதவனுய்ப் போந்த இவனுக்குப் பகவானிடத்தில் பிறக்கிற ஆபி முக்கியம், இவனுடைய புண்ணியம் காரணமாக அன்றிக்கே, கேவலம் பகவானுடைய கிருபையாலே பிறக்கிறது என்பது நன்றே என்றபடி. 'அத்வேஷம் சுக்ருதத்தாலே என்னில்' என்றது, 'அந்த ஆபி முக்கியத்திற்கு முன்னே

---

[1] பகவத் ஆபிமுக்கியம் - பகவானுக்கு நேர்முகமாதல். அதாவது, மருவித்தொழும் மனமுடையனுதல். சுக்ருதம் - புண்ணியம். 'ஆபி முக்கியம் பிறக்கிறது' என்று சேர்க்க. அத்வேஷம் - துவேஷம் இன்மை. அதாவது, மனத்தில் தீமை நீங்கியிருத்தல். இந்தப் பல விசேஷம் - அத்வேஷம் உண்டாதலாகிற விசேடமான பலத்திற்கு. அத்தை - யாத்ருச்சிகம் முதலிய புண்ணியங்களை.

உண்டாகின்ற துவேஷமின்மை என்பது புண்ணியம் அடியாகப் பிறக்கிறது என்று கூறினால் என்?' என்னில் என்றபடி. 'இந்தப் பல விசேஷத்துக்கு அத்தைச் சாதனம் ஆக்க ஒண்ணாது' என்றது, ஆத்ம குணங்கள் எல்லாவற்றிற்கும் காரணமாய் ஆன்மாவினுடைய உஜ்ஜீவனத்திற்கு [1] அங்குரமாய் இருந்துள்ள பகவத் அத்வேஷமாகிற இந்தப் பலவிசேடத்திற்கு, மிகச் சிறியதான யாத்ருச்சிகம் முதலான புண்ணியங்களைக் காரணம் ஆக்க ஒண்ணாது என்றபடி.

ஆகையால், அத்வேஷத்திற்கும் பகவானுடைய கிருபையே காரணம் என்று சொல்ல வேண்டும் என்பது கருத்து. (30)

## 399

[2]'சாஸ்திரமும் விதியாதே நாமும் அறியாதே இருக்கிற இத்தை, 'சுக்ருதம்' என்று நாம் பேர் இடுகிறபடி என்?' என்னில், நாம் அன்று; ஈச்வரன் என்று கேட்டிருக்கையாயிருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—சாஸ்திரங்களில் விதிக்கப்படாதனவுமாய் மக்களால் அறியப்படாதனவுமாய் இருந்துள்ள இந்த யாத்ருச்சிகம் முதலானவற்றுக்குச் 'சுக்ருதம்' [1] என்று பெயர் இட்டார் இன்னார் என்னுமிடத்தை வினவும் விடையுமாக அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'சாஸ்திரமும் விதியாதே நாமும் அறியாதே இருக்கிற இத்தைச் சுக்ருதம் என்று நாம் பேர் இடுகிறபடி என்? என்னில்' என்றது, 'இதம் குர்யாத்—இதனைச் செய்' என்று சாஸ்திரங்களிலே விதிக்கப்பட்டதுமாய்ச் செய்கின்றவர்களான மக்களாலே புத்திபூர்வமாகச் செய்யப்பட்டதுமான ஒன்றையிறே 'சுக்ருதம்' என்பது; 'அப்படியே 'இதனைச் செய்வான்' என்று சாஸ்திரமும் விதிக்காமல், 'இன்ன சுக்ருதம் பண்ணினோம்'

---

[1] அங்குரம் - முளை.

[2] சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டனவாய் நாம் புத்தி பூர்வமாகச் செய்யப்படுவனவற்றிற்கே 'சுக்ருதம்' என்பது பெயர். 'மேற்கூறிய இரண்டன் சம்பந்தமும் இல்லாத ஒன்றைச் 'சுக்ருதம்' என்ற பெயரால் கூறல் பொருந்துமா?' என்பது சூத்திரத்தின் முற்பகுதியின் கருத்து.

என்று அவற்றைச் செய்தவர்களான நாமும் அறியாதே இருக்கிற இந்த யாத்ருச்சிகம் முதலானவற்றைச் 'சுக்ருதம்' என்று நாம் பெயர் இடுகிறபடி எங்ஙனே ?' என்னில் என்றபடி. 'நாம் அன்று, ஈச்வரன் என்று கேட்டிருக்கையாய் இருக்கும்' என்றது, இதற்குச் 'சுக்ருதம்' என்று பெயர் இடுகிறவர்கள் நாம் அன்று; [1] 'சர்வமுக்தி பிரசங்கம்' வாராமைக்கா, முற்றறிவினனான ஈச்வரன் 'சுக்ருதம்' என்று பெயர் இட்டு வைத்தான் என்று, உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்தவர்களான ஆசாரியர்கள் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாய் இருக்கும் என்றபடி.

ஆக, மேல் 'வெறிதே அருள் செய்வர்' என்று, மயர்வற மதி நலம் அருளப்பெற்றவர்களுள் தலைவரான நம்மாழ்வார் நிர்ஹேதுக விஷயீகாரம் ஆகிற இவ்வர்த்தத்தைத் தெளிவாக அருளிச்செய்தபடியைக் காட்டி, அதற்குமேல் உண்டாகும் வினாக்களுக்கு விடைகளும் அருளிச்செய்தாராயிற்று. (31)

## 400

> [2]இவ்வர்த்த விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பரஸ்பர விருத்தம் போலே தோற்றுமவற்றுக்குச் சொல்லுகிற பரிகாரமும் மற்றும் உண்டான வக்தவ்யங்களும் விஸ்தரபயத்தாலே சொல்லுகிறிலோம்.

என்பது சூத்திரம்.

**அவ** :—இனி, இங்குக் கூறிய இப்பொருள் விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் ஒன்றிற்கு ஒன்று மாறுபட்டது போன்று தோன்றுமவற்றிற்குச் சமாதானமும், இப்பொருளை நிலைநிறுத்துவதற்காக மற்றும் சொல்லவேண்டும் பிரமாணங்களும் தர்க்கங்களும் இவ்விடத்திலே தாம் அருளிச்செய்யாமைக்குக் காரணம் இன்னது என்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] சர்வமுக்தி பிரசங்கம் - எல்லாரும் மோக்ஷத்தைப் பெறுதற்கு உரியவர் என்ற தன்மை.

[2] இவ்வர்த்த விஷயமாக - இந்த நிர்ஹேதுக விஷயீகாரம் விஷயமாக. பரஸ்பரம் - ஒன்றற்கொன்று. விருத்தம் - முரண். 'தோற்றும் அவற்றில்' என்பது முன்புள்ள பாடம். பரிகாரம் - விடை; சமாதானம். வக்தவ்யங்கள் - சொல்லப்பட வேண்டியவைகள். விஸ்தாரம் - விரிவு.

**வியாக்** :—'இவ்வர்த்த விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பரஸ்பர விருத்தம் போலே தோற்றுமவற்றுக்குப் பரிகாரமும்' என்றது, ஒரு காரணமும் பற்றுமல் அங்கீகரிக்கின்ற இவ்வர்த்தம் விஷயமாக, இந்நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காய்மயர்வற மதி நலம் அருளப்பெற்ற [1] ஆழ்வார்களுடைய, பகவானுடைய அங்கீகாரத்தை வெளிப்படுத்துவனவான திருப்பாசுரங்களுள். [2] 'வெறிதேயருள் செய்வர்', 'எந்நன்றி செய்தேனு என் னெஞ்சில் திகழ்வதுவே' என்றும், [3] 'திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்ன', 'மாதவன் என்றதே கொண்டு' என்றும், [4] 'நல்லதோர் அறம் செய்துமிலேன்' என்றும், [5] 'நோற்றேன் பலபிறவி' என்றும், [6] 'யான் எத்தவத்தால் காண்பன்கொல் இன்று ?' என்றும், [7] 'யானே தவம் செய்தேன்' என்றும் வருவன போன்ற திருப்பாசுரங்களாலே, பகவானுடைய அங்கீகாரத்திற்கு உரிய காரணங்கள் ஒன்றும் தங்கள் பக்கல் இல்லை என்பது, இருப்பன போலே சொல்லுவது ஆகையாலே, கருத்து அறியாதவர்களுக்கு ஒன்றற்கு ஒன்று மாறுபட்டது போன்று தோன்றும்.

அவற்றிற்குச் சொல்லும் சமாதானங்களாவன :—'மாதவன்' என்றதும், 'திருமாலிருஞ்சோலைமலை' என்றதும் மற்றென்றினின்றும் வேறுபடுத்தும் மாத்திரமான [8] சொற்களா

---

1 'ஆழ்வார்களுடைய திருப்பாசுரங்களுள்' என்று சேர்க்கவும்.

2 'வெறிதே', 'எந்நன்றி' என்னும் இவ்விரண்டு திருப்பாசுரப் பகுதிகளும் நிர்ஹேதுகமாக அருள் செய்தலைக் குறிப்பன. இவை, திருவாய்மொழி, 8. 7 : 8, 10. 6 : 8.

3 'திருமாலிருஞ்சோலை', 'மாதவன்' என்னும் இவ்விரண்டு திருப்பாசுரப் பகுதிகளும் அருள் செய்தற்கு ஒரு காரணம் உள்ளது போன்று தோன்றுவன. இவை, திருவாய்மொழி, 10. 8 : 1, 2. 7 : 3.

4 'நல்லதோர் அறம்' என்பது நிர்ஹேதுகத்தைக் குறிப்பது. இது, பெரிய திருமொழி, 1. 9 : 4.

5 'நோற்றேன்'—இது அருள் செய்தற்கு ஒரு காரணம் உள்ளது போன்று தோன்றுவது. இது, பெரிய திருமொழி, 1. 9 : 8.

6 'யான், எத்தவத்தால்'—இது நிர்ஹேதுகம். இரண்டாந்திருவந். 86.

7 'யானே தவம்'—இது அருள் புரிதற்குக் காரணம் உள்ளது போன்று தோன்றுவது. இது, இரண். திருவந். 74.

8 'சொற்கள் ஆகையாலே' என்பதனை மேலே வருகின்ற 'அவை காரணம் அல்ல என்பது தெளிவு' என்றதனோடு சேர்க்க.

கையாலே, அவற்றை வியாஜமாகக் கொண்டு வந்து மேல் விழு கிற பகவானுடைய கிருபையே அங்கீகாரத்திற்குக் காரணம்; அவை காரணம் அல்ல என்பது தெளிவு. 'நோற்றேன் பல்பிறவி' என்றது, 'எனக்குப் பலபிறவிகள் உண்டாம்படியாக ஆயிற்று நான் சாதனங்களைச் செய்து போந்தது' என்று தம் முடைய தாழ்வினைச் சொன்னதித்தனை; 'பல பிறவிகளில் உன்னைப் பெறுகைக்குச் சாதனங்களைச் செய்து போந்தேன் என்கிறது அன்று. [1] 'யானே தவம் செய்தேன்' என்றது, 'இருந்தமிழ் நன்மாலை இணை அடிக்கே சொல்லப்பெற்ற பிரீதி யின் மிகுதியாலே என்னைப் போலே புண்ணியம் செய்தார் இலர்' என்று இப்பேறு பெற்ற தம்மைப் புகழ்ந்துகொண்டதித்தனை என்று, இப்புடைகளிலே 'நிர்ஹேதுகமாக அருள் செய்தான்' என்று கூறுகின்ற திருப்பாசுரங்களுக்கு விரோதம் வாராதவாறு 'ஒரு காரணத்தைப்பற்றி அருள் செய்தான்' என்று கூறுவன போன்று தோற்றுகிற திருப்பாசுரங்களுக்குச் சொல்லும் சமா தானங்கள் என்றபடி.

மற்றும் உண்டான வக்தவ்யங்களாவன:—மற்றும், 'இறை வன் அருள் நிர்ஹேதுகம்' என்பதனை நிலை நிறுத்தும் பொருட்டுச் சொல்ல வேண்டுமவையான [2] 'சிறந்த ஞானத்தையுடைய நாரத முனிவரே, என்னுடைய நிர்ஹேதுக மான அருளால் உண்டாகின்ற ஆசாரியனுடைய அங்கீகாரத் தால் ஒருவன் பரமபதத்தை அடைகிறான்', 'நான் ஒருவரு டைய புருஷகாரத்தாலும் அருள் செய்வதில்லை; வேறு காரணங் களைக் கொண்டும் அருள் செய்வதில்லை. நான் என்னுடைய இச்சையாலேயே ஒருவனை ஒரு காலத்தில் கடாக்ஷிக்கிறேன்' என்பன போன்ற பிரமாணங்களும் இவற்றிற்கு அநுகூலமான தர்க்கங்களும் ஆம். 'விஸ்தரபயத்தாலே சொல்லுகிறிலோம்' என்றது, இவை எல்லாம் சொல்லப்பார்க்குமளவில் நூல் விரியும் என்று அஞ்சிச் சொல்லுகிறோம் இல்லை என்றபடி. (32)

---

[1] இரண்டாந்திருவந். 74.

[2] 'நிர்ஹேதுக கடாக்ஷேண மதீயேந மஹாமதே
ஆசார்ய விஷயீகாராத் ப்ராப்நுவந்தி பராம்கதிம்.
நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா
கேவலம் ஸ்வேச்சை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந.'
என்பன பாஞ்சராத்திரம்.

## 401

[1] ஆகையால், இவன் விமுகனான தசை யிலுங்கூட உஜ்ஜீவிக்கைக்குக் கிருஷி பண் ணின ஈச்வரனை அநுசந்தித்தால், எப்போதும் நிர்ப்பரனாயே இருக்குமித்தனை.

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, மேல் [2] 'பகவத் குண அநுசந்தானம் அபய ஹேது' என்று எடுத்துக் கூறியதற்கு விளக்கமாகத் [3] 'திரிபாத் விபூதியிலே' என்று தொடங்கி இதுகாறும் ஈச்வரன், இவ் வான்மா உய்வு பெற்று ஈடு ஏறும்பொருட்டு, விமுகதசையே பிடித்துக் கிருஷி பண்ணிப் போதரும்படியை விரிவாக அருளிச் செய்தார். அவற்றை முடிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆகையால்' என்றது, ஈச்வரன், இந்த ஆன்மாவினுடைய உஜ்ஜீவனத்திற்குக் கிருஷி பண்ணும் கட்டளை இதுவாகையாலே என்றபடி. 'இவன் விமுகனான தசை யிலுங்கூட உஜ்ஜீவிக்கைக்குக் கிருஷிபண்ணின ஈச்வரனை அநு சந்தித்தால்' என்றது, இப்படி, இவன், இறைவனை தன்பக்கல் விமுகனான நிலையிலும் உட்பட இவன் உஜ்ஜீவிக்கைக்குக் கிருஷி பண்ணிப் போந்த, குணங்களில் மேம்பட்டவனான அவ்விறைவனை நினைந்தால் என்றபடி. 'எப்போதும் நிர்ப் பரனாயே இருக்குமித்தனை' என்றது, இத்தகைய ஈச்வரன், இந்த நிலைகளை அடையும்படிசெய்து, நம்மைக் கர்மங்கட்குத் தகுதியாகப் பிறவிகளிலே உழன்று திரியும்படிவிடான் என்று அவனுடைய குணங்களிலே உள்ள நம்பிக்கையாலே, எல்லாக் காலங்களிலும் பாரம் இல்லாதவனாகவே இருக்கு மித்தனை. அச்சத்திற்குக் காரணம் இல்லை என்றபடி. (33)

---

[1] 'ஆகையால்' என்றது, மேலே கூறியனவற்றைக் குறிக்கின்றது. விமுகன் - முகம் மாறி நிற்பவன்; அதாவது, மனத்தில் விருப்பம் இன்மையையுடையவன். நிர்ப்பரன் - பாரம் இல்லாதவன்.

[2] 369ஆம் சூத்திரம். [3] 384ஆம் சூத்திரம்.

## 402

எதிர் சூழல் புக்கு.[1]

என்பது சூத்திரம்.

அவ :—'விமுகனுன தசையிலுங்கூட உஜ்ஜீவிக்கக் கிருஷி பண்ணின ஈச்வரனை நினைந்தால்' என்று மேலே தாம் அருளிச்செய்த அர்த்தத்தில் நம்பிக்கைக்கு உறுப்பாக, ஞானத் தால் மேம்பட்டவருடைய விசேஷ அநுசந்தானத்தை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'எதிர் சூழல் புக்கு' என்றது, 'எனக்குத்தப்ப ஒண்ணுதபடி பார்த்த இடம் எங்கும் தானேயாம்படி எங்கும் பரந்திருப்பதிலே உள்புக்கு' என்றபடி.

'எதிர் சூழல் புக்கு' என்பதற்கு [2]மற்றுள்ளாராலே அவதார பரமாக வியாக்கியானம் செய்யப்பட்டதாயினும், இப் போது இவர் இவ்விடத்திலே அதற்குப் 'பரந்திருத்தல்' என்று பொருள் அருளிச்செய்கிருர். [3]பல விதமான கருத்துகள் உண்டாயிறே இருப்பது. (34)

## 403

ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போலே.[4]

என்பது சூத்திரம்.

அவ :—அதனை ஓர் உவமை முகத்தால் விளக்குகிருர் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளை வாரைப் போலே' என்றது, ஒருவனைப் பிடிக்க நினைத்தவன் அவனைத் தப்பாமல் பிடிக்கவேண்டும் என்ற ஆசையாலே அவ்வூரைச் சேரவளையுமாறு போலே ஆயிற்று, ஓர் ஆன்மாவை

---

[1] இது, திருவாய்மொழி, 2·7 : 6. சூழல் - பரந்திருத்தல்.

[2] மற்றுள்ளார் - பெரியவாச்சான் பிள்ளை முதலான பெரியோர்கள்.

[3] 'அவர்களுடைய கருத்துக்கு முரண்படக் கூறலாமோ ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'பல விதமான' என்று தொடங்கி.

[4] உவமையாகக் கூறிய இச்சூத்திரப் பொருளோடு மேற்சூத்திரப் பொருளை இயைத்துக் காட்டுகிருர் 'ஓர் ஆன்மாவை' என்று தொடங்கி.

அகப்படுத்திக்கொள்ளுகைக்காக, உயிர்ப்பொருள் உயிரில் பொருள்கள் எல்லாவற்றிலும் பரந்து நிற்கும்படி என்றவாறு. (35)

## 404

[1] வியாப்தியும் ஸ்வார்த்தமாக என்றிறே
ஞாநாதிகர் அநுசந்திப்பது.

என்பது சூத்திரம்.

அவ :—ஆகையால், எங்கும் பரந்திருத்தலும் தம்பொருட்டு என்றிறே ஞானத்தில் உயர்ந்தோர் நினைத்திருப்பது என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'வியாப்தியும்'—எல்லா உயிர்களுடைய இருப்பிற்குக் காரணமான அந்தவியாப்தியும் உட்பட என்றபடி. (36)

---

[1] வியாப்தியும் - பரந்திருத்தலும். ஸ்வார்த்தமாக - தம் பொருட்டாக. ஞாநாதிகர் - ஈண்டு நம்மாழ்வார். 'எதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய விதி சூழ்ந்ததால் எனக்கேல் அம்மான் திரிவிக்கிரமனையே.' என்கிற திருப்பாசுரப் பகுதியை இங்கு நினைவு கூர்க. திருவாய் (2. 7 : 6.) இச்சூத்திரத்தில் உள்ள 'வியாப்தியும்' என்கிற பதத்தை மேற்சூத்திரத்தின் இறுதியிலும், 'ஸ்வார்த்தமாக என்றிறே ஞாநாதிகர் அநுசந்திப்பது' என்கிற தொடர்மொழியை, இதனையடுத்துப் பின்னே வருகின்ற சூத்திரத்தின் இறுதியிலும் சேர்த்துப் பதிப்பித்துள்ளனர் முன்னைய பதிப்பாசிரியர்கள். அச்சேர்க்கை மணவாள மாமுனிகளுடைய வியாக்கியானத்திற்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. வியாக்கியானத்தை நிதானமாகக் கூர்ந்து நோக்குக. வியாக்கியானத்தின் வழியே சென்று அந்நிலையை மாற்றி மூன்று சூத்திரங்களாக அமைத்துள்ளேன். இம்மாற்றத்தை அறிஞர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்பது என் எண்ணம். 'எதிர் சூழல்புக்கு' என்கிற சூத்திரப் பொருளை ஓர் உவமை முகத்தால் விளக்குகிறார் 'ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போலே' என்கிற அடுத்த சூத்திரத்தால். எதிர் சூழல் புகுதலாகிற அந்த வியாப்தியை ஞானாதிகர் நினைத்திருக்கு மாற்றை விளக்குகிறார். 'வியாப்தியும் ஸ்வார்த்தமாக என்றிறே ஞாநாதிகர் அநுசந்திப்பது' என்கிற சூத்திரத்தால். அங்ஙனம் அநுசந்தித்திருத்தலை ஓர் உவமை முகத்தால் விளக்குகிறார் 'சிருஷ்டி அவதாராதிகளைப் போலே' என்கிற சூத்திரத்தால். ஆக, மேலே கூறிய இயைபில் இந்த நான்கு சூத்திரங்களும் அமைந்திருக்கின்றன.

## 405

சிருஷ்டி அவதாராதிகளைப் போலே.

என்பது சூத்திரம்.

அவ :—படைத்தல் அவதாரம் முதலானவற்றைத் தம் பொருட்டு என்று நினைத்தலை உள்ளனவாகக்கொண்டு அவற்றை இதற்கு[1] உவமையாக அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'சிருஷ்டி அவதாராதிகளைப்போலே' என்றது, [2] 'முந்நீர் ஞாலம்' என்ற திருப்பதிகத்தில் முதல் திருப்பாசுரத்திலே, படைத்தலைத் தம் பொருட்டாகவும் இரண்டாந் திருப்பாசுரத்திலும் மூன்றும் திருப்பாசுரத்திலும் அவதாரங்களைத் தம் பொருட்டாகவும் [3] இவர்தாமே அருளிச்செய்தாரிறே. 'அவதாராதிகள்' என்றதிலே உள்ள 'ஆதி' என்ற சொல்லால் குணங்களையும் செயல்களையும் கொள்க. (37)

## 406

கர்மபலம் போலே கிருபா பலமும் அநுபவித்தே அறவேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—இவன் இப்படி முகம் மாறி நிற்கும் நிலையிலும், படைத்தல் அவதாரம் முதலானவைகளாலே இவனுடைய உஜ்ஜீவனத்திற்கு அவன் கிருஷி பண்ணிப் போருகிறது தன்னுடைய [4] 'நிர்ஹேதுகமான கிருபையாலேயிறே. அத்தகைய கிருபையின் பலன் இவனுக்கு அவசியம் அநுபவிக்கத்தக்கது என்னுமதனை ஓர் உவமை முகத்தால் அருளிச்

---

[1] அவற்றை - படைத்தலையும் அவதாரத்தையும். அதற்கு - தம் பொருட்டாக நினைத்திருக்கும் வியாப்திக்கு.

[2] 'முந்நீர் ஞாலம்' என்றது, திருவாய்மொழி.

[3] 'இவர்தாமே' என்றது, நம்மாழ்வாரை. வியாப்தி தம் பொருட்டாக என்பதனை 'மதுசூதனை' என்ற திருப்பாசுரத்திலும், படைப்பும் அவதாரமும் தம்பொருட்டு என்பதனை 'முந்நீர் ஞாலம்' என்ற திருப்பதிகத்திலும் அருளிச்செய்திருக்கிறார் என்க.

[4] நிர்ஹேதுகம் - ஒரு காரணமும் பற்றாமல்.

செய்யாநின்றுகொண்டு, [1] மேல் ‘ நிர்ப்பரனாய் இருக்குமித்தனை ’ என்றதனை உறுதிப்படுத்துகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—‘ கர்ம பலம் போலே கிருபா பலமும் அநுபவித்தே அறவேணும் ’ என்றது, தான் செய்த புண்ணிய பாவங்களின் பலனை [2] ‘ அவசியம் அநுபவிக்கத்தக்கது ’ என்கிறபடியே அநுபவித்தேயற வேண்டுமாறு போன்று, எஞ்ஞான்றும் பிறந்து உழல்வதற்குக் காரணமான நல்வினை தீவினைகளைப் போக்கி, நித்திய சூரிகளோடு ஒத்த போகத்தைப் பெறுகின்றவனாகச் செய்வதற்குக் காரணமான அவனுடைய கிருபையின் பலனும் அவனுக்கு இச்சை இல்லையாகிலும் அவசியம் அநுபவித்தேவிட வேண்டும் என்றபடி. (38)

## 407

கிருபை பெருகப் புக்கால், [3] இருவர் சுவாதந்திரியத்தாலும் தகைய ஒண்ணாதபடி இரு கரையும் அழியப் பெருகும்.

என்பது சூத்திரம்.

அவ :—‘ இத்தகைய கிருபையானது, அநாதி காலமாக இருக்கச் செய்தே, நல்வினை தீவினைகளைச் செய்கின்ற மக்களுடைய சுவாதந்திரியத்தாலும் அந்நல்வினை தீவினைகளின் பலன்களை அநுபவிக்கச் செய்கின்ற இறைவனுடைய சுவாதந்திரியத்தாலும் தகையப்பட்டன்றோ கிடந்து போந்தது? இன்னமும் அப்படி ஆனாலோ ?’ என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ கிருபை பெருகப்புக்கால் ’ என்றது, [4] கிருபையாகிற குணம், வேறு ஒன்றனால் தடை செய்யப்படாத சுவதந்திரத்தையுடைய [5] இறைவன் ‘ தான் இட்ட கட்டளையிலே

---

[1] ‘ மேல் ’ என்றது, 401ஆம் சூத்திரத்தில்.

[2] ‘ அவஶ்யம் அநுபோக்தவ்யம் ’ என்பது பிரமாணம்.

[3] இருவர் - சேதனனும் இறைவனும். இரு கரை - இருவருடைய சுவாதந்திரியங்களாகிற இரண்டு கரைகள்.

[4] ‘ கிருபையாகிற குணம் ’ என்பதனை, மேலே வருகின்ற ‘ உடலாம்படி பெருகுமளவில் ’ என்பதனோடு கூட்டுக.

[5] ‘ ஈச்வரனுடைய ’ என்பதனை மேலே வருகின்ற ‘ சுவாதந்திரியத்தாலும் ’ என்பதனோடு கூட்டுக.

வந்தவாறே அங்கீகரிக்கக் கடவோம்' என்று இவனைக் கர்மங்கட்குத் தகுதியாக நடத்துமளவில், இருவருடைய சுவாதந்திரியங்களாலும் தகையப்பட்டு நிற்குமே ஒழிய, அக்கட்டளையில் வாராமையாலே, இவனுடைய துர்க்கதியே பற்றுசாக இவனை அவ்விறைவன் தானே மேல் விழுந்து அங்கீகரிக்கைக்கு உடலாம்படி பெருகுமளவில் என்றபடி. 'இருவர் சுவாதந்திரியத்தாலும் தகைய ஒண்ணாதபடி' என்றது, கிருபைக்கு நிலைக்களமான ஈச்வரனுடைய, 'மக்களுடைய கர்மங்கட்குத் தகுதியாகவே நடத்தக் கடவோம்' என்று இருக்கிற சுவாதந்தரியத்தாலும் இறைவனுடைய கிருபைக்கு விஷயமான, [1] மக்களுடைய, [2] 'வேதங்களும் மநு முதலான ஸ்மிருதிகளும் என்னுடைய ஆணையேயாம்; எவன் அவற்றைக்கடந்து செல்லுகிறானோ' என்கிறபடியே இறைவனுடைய ஆணையைக் கடந்து நடத்தற்கு அடியான சுவாதந்திரியத்தாலும் தடை செய்ய ஒண்ணாதவாறு என்றபடி. 'இரு கரையும் அழியப் பெருகும்' என்றது, [3] 'விதிவாய்க்கின்று காப்பாரார்' என்கிறபடியே இருவருடைய சுவாதந்தரியங்களின் வடிவமான இரண்டு கரைகளும் உடைந்து அழியும்படி ஒரு [4] மட்டில் நில்லாமல் மேன்மேலும் பெருகா நிற்கும் என்றபடி. (39)

## 408

பய ஏது கர்மம்[5]; அபய ஏது காருண்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—இந்தப் பிரகரணத்தில் முதலில் [6] அச்சத்திற்கும் அச்சம் இன்மைக்கும் காரணங்களாகச் சொல்லப்பட்ட

---

[1] 'மக்களுடைய' என்றதனை மேல் வருகின்ற 'சுவாதந்திரியத்தாலும்' என்றதனோடு கூட்டுக.

[2] 'ஶ்ருதி ஸ்மிருதிர் மமைவாஜ்ஞாயஸ்தாம் உல்லங்க்ய வர்த்ததே' என்பது, பாஞ்சராத்திரம்.

[3] திருவாய். 5. 1 : 1. [4] மட்டில் – அளவில்.

[5] கர்மம், காருண்யம் என்று இருந்தனவேயாகிலும், கர்மத்தை நினைத்தலும், கிருபையை நினைத்தலும் என்று அச்சொற்களுக்குப் பொருள் கொள்க.

[6] அச்சத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்டவை தன் தோஷங்கள்; அச்சமின்மைக்குக் காரணமாகச் சொல்லப்பட்டவை பகவானுடைய குணங்கள்; சூத். 369.

தன்னுடைய தோஷங்களிலும் பகவானுடைய குணங்களிலும் பிரதானமானவை சேதனனுடைய கர்மங்களும் பகவானுடைய கிருபையுமேயாகையாலே, அவற்றை விரித்து அருளிச்செய்து கொண்டுவந்தார் மேல். அவற்றை முடிக்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பய ஏது கர்மம்' என்றது, 'ஈச்வரனே உபாயம் என்று இருக்கிற இவ்வதிகாரிக்கு இன்னமும் பிறப்பு வந்து தொடரின் செய்வது என்?' என்கிற அச்சத்திற்குக் காரணம், அநாதிகாலம் பிறந்து உழலுவதற்குக் காரணமாகப் போந்த தன் கர்மங்களை—நல்வினை தீவினைகளை—நினைத்தலாம் என்றபடி. 'அபய ஏது காருண்யம்' என்றது, [1]'சூழ்பிறப்பும் மருங்கே வரப்பெறுமே' என்கிறபடியே 'பிறப்பு இனி நம்மருகும் வர மாட்டாது; இந்தச் சரீரத்தின் முடிவிலே மோக்ஷத்தை அடைவதற்குக் கண்ணழிவில்லை' என்று அச்சம் இல்லாதவனுய் இருக்கைக்குக் காரணம், நாம் செய்த கர்மங்களைப் பாராமல் அங்கிகரித்துப் பிறப்பினை அடியோடு அறுத்துத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகைக்கு உறுப்பான இறைவனுடைய நிர்ஹேதுகமான கிருபையை நினைத்தல் என்றபடி.

[2] மேலே 'ஸ்வதோஷ அநுசந்தானம்', 'பகவத்குண அநுசந்தானம்' என்று தொடங்கினவற்றை முடிக்கின்ற இடம் ஆகையாலே, இச்சூத்திரத்தில் 'கர்மம், காருண்யம்' என்கிற பதங்களுக்குக் கர்மங்களை நினைத்தல், காருண்யத்தை நினைத்தல் என்று பொருள் கோடல் வேண்டும். (40)

## 409

[3] பயாபயங்கள் இரண்டும் மாறிமாறிப் பிராப்தியளவும் நடக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'இந்த அச்சமும் அச்சமின்மையும் எது வரையிலும் நடக்கும்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

1 திருவிருத்தம், 45.

2 கர்மம், காருண்யம் என்பனவற்றிற்கு, கர்மத்தை நினைத்தல், கிருபையை நினைத்தல் என்று பொருள் அருளிச்செய்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் 'மேலே' என்று தொடங்கி. 369ஆம் சூத்.

3 பிராப்தி அளவும் - மோக்ஷத்தை அடைகிற காலம் வரையிலும்.

வியாக் :—'பயம் அபயம் இரண்டும் மாறிமாறிப் பிராப்தி அளவும் நடக்கும்' என்றது, பகவானுடைய கிருபைக்கு விஷய[1] மாகியும், இந்தச் சரீரத்தோடே இருக்கையாலே அநாதிகாலம் பிறப்பிற்குக் காரணமாகப் போந்த தன் நல்வினை தீவினைகளை நினைப்பது, அவற்றைப் பாராமல் அங்கீகரித்த பகவானுடைய கிருபையை நினைப்பதாய்க் கொண்டிறே இவ்வதிகாரி இருப்பது; அவற்றுள் நல்வினை தீவினைகளை நினைத்தபோது அச்சமும், பகவானுடைய கிருபையை நினைத்த போது அச்சமின்மையும் ஆக இரண்டும் மாறிமாறி, இந்தச் சரீர சம்பந்தம் அற்று மோக்ஷத்தை அடையுமளவும் நடக்கும் என்றபடி. (41)

## 410

**[2] நிவர்த்திய ஞானம் பய ஏது; நிவர்த்தக ஞானம் அபய ஏது.**

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படி அச்சமும் அச்சமின்மையும் மாறி மாறி, மோக்ஷத்தை அடையுமளவும் நிற்பது என்? அவனுடைய குணங்களிலே நமக்குள்ள பக்தி நிறைந்த நம்பிக்கையாலே எப்போதும் ஒக்க அச்சமில்லாமலேயே இருக்க ஒண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'நிவர்த்திய ஞானம் பய ஏது' என்றது, இறைவனுடைய அருளாலே நீக்கப்படுமவையான [3] அவித்யை, கர்மம், வாசனை, ருசி, இந்தச் சரீரம் என்னும் இவற்றினுடைய சம்பந்த விஷய ஞானம் இவை கிடக்கையாலே, 'இன்னமும்

---

[1] 'ஆகியும்' என்பதனை, மேலே வருகின்ற 'நினைப்பதாய்க் கொண்டிறே இவ்வதிகாரி இருப்பது' என்றதனோடு சேர்க்க.

[2] நிவர்த்தியம் - நிவர்த்திக்கப்படுவது; போக்கப்படுவது. அதாவது, நல்வினை தீவினை முதலானவைகள். இவை சம்பந்தமான ஞானம், நிவர்த்திய ஞானம். நிவர்த்தகன் - போக்குகின்றவன்; இறைவன். இவற்றைப் போக்குகிற இறைவன் சம்பந்தமான ஞானம், நிவர்த்தக ஞானம்.

[3] அவித்யை - அறிவின்மை.

பிறப்பு மேலிட்டால் செய்வது என்?' என்கிற அச்சத்திற்குக் காரணம். 'நிவர்த்தக ஞானம் அபய ஏது' என்றது, [1] 'எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன்' என்று சர்வேச்வரன் இவற்றை நீக்குகையாலே, இவற்றைப் போக்குகின்றவனை அவனுடைய கிருபை விஷயமான ஞானம், அந்த அச்சம் நீங்குவதற்குக் காரணம் என்றபடி.

புண்ணிய பாவங்கள் ஆகிற கர்மங்களை நீக்குகின்ற இறைவனுடைய வலிமையை அறிந்தாலும், இந்தச்சரீரம் கிடக்குமளவும் அச்சமும் இடை இடையே கலசிச் செல்லும் என்பது கருத்து. (42)

ஆக, இந்தப் பிரகரணத்தால் இவனுக்கு, [2] அச்சத்திற்கும் அச்சமின்மைக்கும் உரிய காரணங்களும், [3] அவ்விரண்டு காரணங்களும் மாறுடில் சித்திக்குமதுவும், [4] அவை காரணமாக வந்த வினவும் அதற்கு விடையும், [5] சர்வேச்வரன் இவ்வுலக மக்களுடைய உஜ்ஜீவனத்திற்குக் கிருஷி பண்ணும்படியும், தாம் அறியாத புண்ணியங்கள் பகவானுடைய அங்கீகாரத்திற்குக் காரணமாம்படியும், [6] இந்த நிர்ஹேதுகவிஷயீகாரத்தின் பெருமையை அறியாதவர்களுடைய தன்மையும், [7] இந்த நிர்ஹேதுக அங்கீகாரத்தின் பெருமையை அறிந்தவர்களுடைய தன்மையும், [8] இந்த நிர்ஹேதுகவிஷயீகாரம் பெரியோர்களுடைய வார்த்தைகளால் சித்தம் என்னுமதுவும், [9] நாம் அறியாத புண்ணியங்களை வியாஜமாகக் கொண்டு இறைவன் அங்கீகரிக்கும்படியும், [10] அங்கீகாரத்திற்குக் காரணம் ஆக்குகின்ற நாம் அறியாத புண்ணியங்கள் அவனுடைய கிருஷியின் பலனாக வருகின்ற தன்மையும், [11] அந்தக் கிருஷியின் நிரூபணத்தால் போதரும் பொருளும், [12] அங்கீகாரத்திற்குப் பற்றுசாக இருக்கின்ற யாத்ருச்சிகம்

---

[1] 'சர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்பது, ஸ்ரீகீதை, 18 : 66.

[2] இந்தப் பிரகரணத்திற்கூறப்பட்டவற்றைத் தொகுத்து அருளிச் செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

[3] 369ஆம் சூத். [4] 370ஆம் சூத்.

[5] 371 முதல் 383 முடிய உள்ள சூத். [6] 384, 385 சூத்.

[7] 386ஆம் சூத். [8] 387ஆம் சூத். [9] 388ஆம் சூத்.

[10] 389ஆம் சூத். [11] 390ஆம் சூத். [12] 391ஆம் சூத்.

முதலான புண்ணியங்களை ஒவ்வொரு காலத்தில் இறைவன் தானே உண்டாக்குவதற்குக் காரணமும், [1] அவற்றினுடைய இரு வகைப்பட்ட பிரிவுகளும், இந்த [2] நிர்ஹேதுகவிஷயீகாரம் சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டுள்ளது என்பதும், [3] இந்த நிர்ஹேதுகமானவிஷயீகாரத்தைப் பெற்றவர் இதனை வெளிப் படையாகப் பேசினபடியும், [4] இதனை அறியாதவர்களுடைய கூற்றுக்கு விடையும், [5] ஆபிமுக்கியத்தைப் போன்று அத்வேஷமும் இறைவனுடைய கிருபையாலேயே உண்டாம் என்பதும், [6] யாத்ருச்சிகம் முதலானவற்றிற்குச் 'சுக்ருதம்' என்ற பெயர் இறைவனாலே வைக்கப்பட்டது என்பதும், [7] இந்த நிர்ஹேதுகமாக அங்கீகரித்தல் விஷயமாகப் பெரியோர்களுடைய திருப் பாசுரங்களில் பரஸ்பரம் விரோதமாகக் காணப்படுவனவற்றிற்குச் சமாதானம் சொல்லாமைக்குக் காரணமும், [8] மேலே விரிவாகப் பேசிப் போந்ததனால் போதரும் பொருளும், [9] அவனை அடைதற்குக் காரணமாக ஞானத்தில் உயர்ந்தோருடைய அநுசந்தானமும், [10] நிர்ஹேதுகமான கிருபையின் பலனும் அவசியம் அநுபவித்தே அறவேண்டும் என்னுமதும், [11] இத்தகைய கிருபையாகிற வெள்ளத்தைத் தடை செய்ய முடியாது என்பதும், [12] பிரகரணத்தின் தொடக்கத்திலே எடுத்துக்கொண்ட பொருளை முடித்தலும், [13] அச்சமும் அச்சமின்மையும் தொடர்ந்து வருகின்ற காலத்தின் எல்லையும், [14] இந்த அச்சத்திற்கும் அச்சமின்மைக்கும் காரணமான ஞான விசேடங்களும் சொல்லுகையாலே, இந்த அதிகாரிக்கு அத்வேஷம் முதற்கொண்டு மோக்ஷத்தை அடைதல் ஈறாக உள்ள எல்லாப் பலன்களுக்கும்

---

1 392ஆம் சூத்.
2 393, 394 சூத்.
3 395ஆம் சூத்.
4 396ஆம் சூத்.
5 397ஆம் சூத்.
6 398ஆம் சூத்.
7 399ஆம் சூத்.
8 400ஆம் சூத்.
9 401ஆம் சூத்.
10 402-405 சூத்.
11 406ஆம் சூத்.
12 407ஆம் சூத்.
13 408ஆம் சூத்.
14 409ஆம் சூத்.
15 410ஆம் சூத்.

16 இந்தப் பிரகரணம் துவயத்தின் பொருளாகுமாற்றை விளக்குகிறார் 'இதனால்' என்று தொடங்கி.

காரணமான பகவானுடைய நிர்ஹேதுகமான கிருபையின் பெருமை விரிவாகச் சொல்லப்பட்டது.

இதனால், துவயத்தை உபதேசிக்கிறவரான ஆசாரியனை வழி படுதல் முதலானவற்றிற்கும் அவனாலே உபதேசிக்கப்பட்ட துவயத்தின் பொருளான ஞானம் முதலானவற்றிற்கும் காரண மான பகவானுடைய நிர்ஹேதுகமான கிருபையின் பெருமை சொல்லப்பட்டது. (42)

**ஆறு பிரகரணங்களுள் ஐந்தாவதான**
**பகவந் நிர்ஹேதுக கிருபா பிரபாவம் முற்றிற்று.**

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.

மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க!

மாறன் மலரடி வாழ்க!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# ஆறும் பிரகரணம்

# *சரமபருவ நிஷ்டை நிருபணம்

## 411

[1]ஸ்வதந்திரனே உபாயமாகத் தான் பற்றின போதிறே இப்பிரசங்கந்தான் உள்ளது.

என்பது சூத்திரம்.

அவ :—இப்பிரபந்தத்தில் தொடக்கமே பிடித்து இதுகாறும் [2] சித்தோபாயமாக இருக்கிற [3] சர்வேச்வரனே, மக்களுக்குப் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைப் பெறுதற்கு நிரபேக்ஷசாதனம் என்று அருளிச்செய்து, உபாயமாக இருக்கின்ற சர்வேச்வரன் கர்மம் காரணமாகப் பிறப்பிக்கவும் கிருபை காரணமாக மோக்ஷத்தைக் கொடுக்கவும் வல்ல [4]நிரங்குச சுவதந்திரன் ஆகையாலே, அவனை உபாயமாகப்பற்றியிருப்பார்க்குத் தம்முடைய நல்வினை தீவினைகள் ஆகிற கர்மங்களை நினைக்கும் நினைவாலும் இறைவனுடைய கிருபையை நினைக்கும் நினைவாலும் வருகின்ற அச்சமும் அச்சமின்மையும் மோக்ஷத்தைப் பெறுகிற அளவும் மாறி மாறி [5] நடக்கும்படியையும் அருளிச்செய்தார் மேல்.

---

* சரமபருவம் - முடிந்த நிலமான - எல்லை நிலமான பகுதி. நிஷ்டை - நிலை.

[1] சுவதந்திரன் - இறைவன். பிரசங்கம் - மேலே கூறிய அச்சமும் அச்சமின்மையுமாகிற தன்மைகள். 'உபாயமாகத்தான்' என்பதில் உள்ள 'தான்' என்பது அசைநிலை.

[2] சித்தமாகவிருக்கும் உபாயம் சித்தோபாயம்; இறைவன்.

[3] 'சர்வேசுவரனே நிரபேக்ஷ சாதனம்' எனக் கூட்டுக. நிரபேக்ஷ சாதனம் - வேறு ஒரு சாதனத்தை வேண்டாத சாதனம்.

[4] நிரங்குசம் - தடையில்லாதது.

[5] 'நடக்கும்படியையும்' என்ற உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. மேலே உள்ள 'நிரபேக்ஷசாதனம் என்று அருளிச் செய்து' என்பதனைத் தழுவுகிறது.

[1] இனி, மேல் [2] 'தேவனுகிற ஸ்ரீமந் நாராயணனே மனித வடிவைக் கொண்டு' என்றும், [3] 'திருமாமகள் கொழுநன், தானே குருவாகி' என்றும் சொல்லுகையாலே அந்தச் சித்தோபாயமான நாராயணனுக்குப் புறம்பாக இல்லாமல் அவனுக்கு எல்லை நிலமாய், பிறப்பிற்கும் மோக்ஷத்திற்கும் [4] பொதுவாகையன்றிக்கே மோக்ஷத்திற்கே காரணமாக இருக்கையாலே, அதிலே ஊன்றியிருப்பவர்களுக்கு அச்சத்திற்கு இடம் இல்லாமலே எப்போதும் ஒக்க அச்சமற்றவர்களாய்க்கொண்டு இருக்கலாம்படியாய், எல்லை நிலமான [5] சொரூபத்திற்கும் பேற்றிற்கும் தகுதியான முடிந்த உபாயம் [6] சதாசாரியனுடைய அபிமானமே என்று, சகல வேதாந்தங்களினுடைய சாரப் பொருளை நன்கு அறிந்தவர்களான பூர்வாசாரியர்கள் தங்களுக்குத் தஞ்சமாக நினைந்தும் உபதேசித்தும் போந்த இரகசியப்பொருளை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்குமாறு, இந்த நூலில் மேலுள்ள பாகத்தாலே மிகத்தெளிவாக அருளிச்செய்கிருர்.

'அவற்றுள், இப்படி [7] அச்சமும் அச்சமின்மையும் ஆகிற இரண்டும் மாறி மாறித் தொடர்ந்து வாராமல், எப்போதும் ஒக்க அச்சமில்லாதவனுயிருக்கலாவது ஒரு வழி இல்லையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'சுவதந்திரனை உபாயமாகத் தான் பற்றின போதிறே இப்பிரசங்கந்தான் உள்ளது' என்றது, நம்முடைய கர்மங்கட்குத் தகுதியாகப் பிறப்பிக்கவும் தன்னுடைய கிருபைக்குத் தகுதியாகப் பிறப்பு இறப்புகளை நீக்கித் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவும் வல்ல நிரங்குச சுவதந்திரனை

---

[1] சித்தோபாயத்தைக்காட்டிலும் சரமோபாயத்திற்கு உள்ள ஏற்றத்தை அருளிச்செய்கிருர் 'இனி' என்று தொடங்கி.

[2] 'ஸாக்ஷாந் நாராயணோதேவః க்ருத்வாமர்த்யமயீம் தநும்.' என்பது நாரதீயம்.

[3] ஞானசாரம், 38.

[4] பொதுவாகை - சித்தோபாயம். அதிலே - சரமோபாயத்திலே.

[5] சொரூபத்திற்கு - அவன் அடியார்கட்கு அடிமையாக இருக்கும் தன்மைக்கு. பேற்றிற்கு - அவன் அடியார்கட்குச் செய்யும் தொண்டிற்கு.

[6] சதாசாரியன் - நல்ல ஆசாரியன்.

[7] 409, 410ஆம் சூத்திரங்களைக் காண்க.

ஈச்வரனை, விரும்பினவற்றைப் பெறுதற்கும் விருப்பமில்லாதன வற்றை நீக்குதற்கும் உபாயமாகப் பற்றின போதிறே, மோக்ஷத்தைப் பெறுகிற அளவும் அச்சமும் அச்சமின்மையுமாகிற இரண்டும் மாறி மாறி நடக்கும் என்னும் இத்தன்மைதான் உள்ளது என்றபடி.

[1] பரதந்திர சொரூபனுய் மோக்ஷத்திற்கே காரணமான தன் ஆசாரியனை உபாயமாகப் பற்றினுல் 'அச்சமும் அச்சமின்மையும் மாறி மாறி வருதலாகிற இத்தன்மை இல்லை; எப்பொழுதும் அச்சம் இல்லாதவனுய் இருக்கலாம்' என்பது கருத்து. 'உபாயமாகத்தான்' என்பதில் உள்ள 'தான்' அசைநிலை. (1)

## 412

**உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணுத போது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப் பேர் உண்டிறே; அவர்கள் பாசுரம் கொண்டன்று, இவ்வர்த்தம் அறுதியிடுவது; அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே, அவர் பாசுரம் கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக் கடவோம்.[2]**

என்பது சூத்திரம்.

அவ :—[3] 'பிரமாணத்தாலே பிரமேயத்தை நிச்சயம் பண்ண வேண்டுமிறே; [4] இவ்வர்த்தம் என் கொண்டு நிச்சயிக்கக்

---

[1] சூத்திரத்தால் போதரும் கருத்துப் பொருளை அருளிச்செய்கிருர் 'பரதந்திர சொரூபனுய்' என்று தொடங்கி.

[2] இச்சூத்திரமும் இரண்டு சூத்திரங்களாக முன்னைய அச்சுப் பிரதிகளில் தரப்பட்டிருக்கின்றது. உண்ட போது - இறைவனை அநுபவிக்கும் போது. உண்ணுத போது - இறைவனுடைய அநுபவம் இல்லாத போது. இவ்வர்த்தம் - ஆசாரியனே உபாயம் என்னும் இந்தப் பொருள். அவரைச் சிரித்திருப்பார் ஒருவர் - ஸ்ரீமதுரகவி ஆழ்வார்.

[3] பிரமாணம் - அறிதற்குக் கருவியாய் இருப்பது. பிரமேயம் - பிரமாணத்தால் அறியப்படும் பொருள்.

[4] 'நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் - உற்றதும் உன்னடியார்க்கு அடிமை' என்ற ஸ்ரீசூக்தியின் ஆழ்பொருளை இங்கு நினைத்தல் தகும். பெரிய திருமொழி, 8.10 : 3.

கடவோம்?'' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

**வியாக் :**—'உண்ட போது ஒரு வார்த்தையும் உண்ணாதபோது ஒருவார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே' என்றது, மயர்வற மதிநலம் அருளப்பெற்றுப் பகவானுடைய அநுபவங்களையே தங்களுக்குத் தாரகமாகக் கொண்டிருக்கும் ஆழ்வார்களுக்கு உண்ட போதும் உண்ணாத போதும் ஆவன, பகவானை அநுபவிக்கும் காலமும் பகவானுடைய அநுபவம் இல்லாத காலமும் ஆம்.

அவற்றுள், பகவானை அநுபவித்து ஆனந்தம் கொண்டவர்களாய் இருக்கும்போது, இறைவன் விஷயமான [3]சேஷத்துவத்தினுடைய விசேஷமான வளர்ச்சியில் ஆசையுள்ளவர்கள் ஆகையாலே, அவன் அடியார்களுடைய சேஷத்துவத்திலே கருத்து ஊன்றிப் [1]'பயிலும் பிறப்பிடை தோறும் எம்மையாளும் பரமர்', [2]'நாளும் பிறப்பிடைதோறு எம்மையாளுடை நாதர்', [3]'வருமையும் இம்மையும் நம்மை அளிக்கும் பிராக்கள்', [4]'சலிப்பின்றி ஆண்டு எம்மைச் சன்மசன்மாந்தரம் காப்பர்', [5]'நன்மை பெறுத்து எம்மை நாள் உய்யக் கொள்கின்ற நம்பர்', [6]'எம் பல் பிறப்பிடைதோறு எம் தொழுகுலம் தாங்கள்', [7]'அவன் அடியார் சிறு மாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரியவே, செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப் புகுதல், உறுமோ பாவியேனுக்கு?' என்றும், [8]'ஆர் எண்ணும் நெஞ்சுடையார் அவர் எம்மை ஆள்வாரே?', [9]'ஞானத்தின் ஒளியுருவை நினைவார் என்நாயகரே', [10]'நச்சித்தொழுவாரை நச்சு என்றன் நன்னெஞ்சே', [11]'பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே', [12]'கண்ணாரக் கண்டு உருகிக் கையாரத் தொழுவாரைக் கருதுங்கால், உண்ணாது வெங்கூற்றம் ஓவாது பாவங்கள் சேரா' என்றும், [13]'ஈட்டம் கண்டிடக்

---

[1] திருவாய். 3.7 : 1. [2] திருவாய். 8.7 : 2.
[3] திருவாய். 3.7 : 5. [4] திருவாய். 3.7 : 6.
[5] திருவாய். 3.7 : 7. [6] திருவாய். 3.7 : 8.
[7] திருவாய். 8.10 : 3. [8] பெரிய திருமொழி, 2.6 : 2.
[9] பெரிய திரு. 2.6 : 3. [10] பெரிய திரு. 2.6 : 5.
[11] பெரிய திரு. 7.4 : 4. [12] பெரிய திரு. 7.4 : 8.
[13] பெருமாள் திரு. 2 : 1.

கூடுமேல் அது காணும் கண்பயனாவதே', [1] 'தொண்டரடிப் பொடி ஆட நாம் பெறில் கங்கை நீர் குடைந்தாடும் வேட்கை என்னாவதே?', [2] 'இன்புறும் தொண்டர் சேவடி ஏத்தி வாழ்த்தும் என்னெஞ்சமே' என்றும் வருகின்ற இவை போன்ற திருப்பாசுரங்களாலே இறைவனைக்காட்டிலும் இறைவனுக்கு அடிமைப்பட்ட அடியவர்களே நமக்குச் [3] சேஷிகளும் உபாயமாக விருப்பவரும் உபேயமாக விருப்பவரும் என்று மிக்க விருப்பத்தைச்செய்து பேசுவது.

பகவானுடைய அநுபவம் இல்லாமல் வருந்துகிற காலத்தில், அப்படிப் பரமசேஷிகளும் [4] பரமப் பிராப்பியரும் பரமப் பிராபகருமான அவன் அடியார்கள் அண்மையில் இருந்தாலும் அவர்கள் திறத்தில் நெஞ்சுசெல்லாமல், பகவானையே [5] பிராப்பியமும் பிராபகமுமாக நினைத்துக் [6] 'காணவாராய்'', [7] 'காணுமாறு அருளாய்', [8] 'வரிகொள் வெஞ்சிலை வளைவித்த மைந்தனும் வந்திலன் என்செய்கேன்!', [9] 'வெஞ்சமத்து அடுசரம் துரந்த எம்மடிகளும் வாரானால்', [10] 'வாசுதேவா உன் வரவு பார்த்து, வார்மணல் குன்றில் புலர நின்றேன்' என்பன போன்ற திருப்பாசுரங்களாலே துன்பத்திற்குப் பரவசப்பட்டவர்களாய் [11] அலற்றுவது ஊடுவது; [12] 'வெஞ்சிறைப்புள்',

---

[1] பெருமாள் திரு. 2 : 2. [2] பெருமாள் திரு. 2 : 4.

[3] 'சேஷிகள்' என்பதனை மேலே காட்டிய திருவாய்மொழிப் பாசுரங்களாலும், 'உபாயம்' என்பதனை மேலே காட்டிய பெரிய திருமொழிப் பாசுரங்களாலும், 'உபேயம்' என்பதனை மேலே காட்டிய பெருமாள் திருமொழிப் பாசுரங்களாலும் உணர்தல் தகும்.

[4] பிராப்பியர் - பலமாய் இருப்பவர்; உபேயம். பிராபகர் - வழியாயிருப்பவர்; உபாயம்.

[5] பிராப்பியமும் பிராபகமும் - பேறும் அதனை அடைதற்கு உரிய வழியும்.

[6] திருவாய். 8.5 : 2. [7] திருவாய். 8.1 : 2.

[8] பெரிய திரு. 8.5 : 6. [9] பெரிய திரு. 8.5 : 7.

[10] பெருமாள் திருமொழி, 6 : 1.

[11] மேலே காட்டிய ஐந்து திருப்பாசுரங்களுள் பெருமாள் திருமொழிப் பாசுரம் ஊடுவது. ஏனைய நான்கும் அலற்றுவன எனக் கொள்க.

[12] திருவாய். 1.4 : 1.

[1] 'உங்களோடு எங்களிடை இல்லை' என்பன போன்ற திருப்பாசுரங்களாலே [2] வெறுப்பது உதறுவது ஆகையாலே 'உண்ட போது ஒரு வார்த்தையும் உண்ணாத போது ஒரு வார்த்தையும் சொல்லுவார்' என்கிறார் என்றபடி.

[3] ஆழ்வார்கள் எல்லாரும் ஒரேதன்மையராய் ஏககண்டராய் இருக்கையாலே 'பத்துப்பேர் உண்டிறே' என்கிறார்.

'அவர்கள் பாசுரம் கொண்டு அன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது' என்றது, மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள் ஆகையாலே [4] பிரதமபர்வத்தைக்காட்டிலும் சரமபர்வத்திற்கு உள்ள தன்னேற்றமடையத் தெளியக் கண்டு பேசினார்களேயாகிலும், சரமபர்வத்தில் மாத்திரம் ஊன்றினவர்களாயிருத்தல் அன்றியே, பிரதமபர்வத்திலே மண்டி அவனுடைய அநுபவத்தாலே ஆனந்தத்தையுடையரான போது ஒன்றைச் சொல்லுவது, அவன் அநுபவம் இல்லாமல் வருந்துகிறபோது ஒன்றைச் சொல்லுவதாய் ஒருபடிப்பாடர் அல்லாதவர்கள் பாசுரம் கொண்டு அன்று, 'ஆசாரியனே உபாயம்' என்ற இவ்வர்த்தம் நிச்சயம் பண்ணுவது என்றபடி.

'பின்னை யார் பாசுரம் கொண்டு அறுதியிடுவது?' எனில், 'அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே ; அவர் பாசுரம் கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக்கடவோம்' என்கிறார். 'அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே' என்றது, [5] 'மேவினேன் அவன் பொன்னடி, தேவுமற்று அறியேன்' என்று தம்

---

[1] திருவாய். 8.2 : 7.

[2] 'வெஞ்சிறைப்புள்' என்பது வெறுப்பது. 'உங்களோடு' என்பது உறுவது.

[3] 'உண்ட போது ஒரு வார்த்தையும் உண்ணாத போது ஒரு வார்த்தையும் சொல்லுவார் மேலே காட்டிய நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார் என்னும் மூவருமேயாக, 'பத்துப் பேர்' என்றது பொருந்துமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஒரே தன்மையராய்' என்று தொடங்கி. ஏககண்டர் - ஒரே கருத்துடையவர். முரண்பாடு இல்லாத வார்த்தைகளையுடையவர்கள் என்றபடி.

[4] பிரதமபர்வம் - இறைவனை வணங்குதல். சரமபர்வம் - அடியார்களை வணங்குதல்.

[5] கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.

முடைய ஆசாரியரான ஆழ்வாருடைய திருவடிகளைப் பிராப் பியமும் பிராபகமுமாகப் புரையறப்பற்றி வேறு ஒரு தெய்வத்தை அறியாதவராய் [1]'நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்' என்று அவரைப்பேசுவதால் உண்டான ஆநந்தத்தாலே நிறைவுற்றவராய், [2]'அடியேன் சதிர்த்தேன் இன்று' என்று [3]உறுவது அறிந்து பற்றின [4]சதுரராய் இருக்கையாலே, [5]சரமபர்வத்தின் ஏற்றம் அறிந்து பேசாநிற்கச்செய்தே, அந்தச் சரமபர்வத்திலேயே ஊன்றின நிலையினராயில்லாமல், பிரதமபர்வத்திலே மண்டி, அவனுடைய அழகிலே பரவசப்பட்ட வர்களாய், உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணாத போது ஒரு வார்த்தையும் சொல்லுகிற ஆழ்வார்கள் பதின்மர்களையும், [6]'அடியிலே ஓர் ஆசாரியன் திருவடிகளைப்பற்றி, எப்பொழுதும் ஆனந்தத்தையுடையவர்களாயிருக்கப் பெறாமல், தன்னுடைய அழகினாலே பிச்சு ஏற்றும் பகவான் திறத்திலே முந்துற முன்னம் இழிந்து அவனை அநுபவிக்கிற போது ஒன்றைச் சொல்லுவது, அவன் அநுபவம் கிடையாத காலத்தில் ஒன்றைச் சொல்லுவதாய் இவர்கள் படுகிற பாடு என்!' என்று நகையாடி இருக்கின்ற ஸ்ரீமதுரகவி ஆழ்வார் ஒருவர் உண்டிறே என்றபடி.

'அவர் பாசுரம் கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக் கடவோம்' என்றது, சரம பர்வத்தில் நிலை நின்றவராய் எப் பொழுதும் ஒரே நிலையான பாசுரங்களையுடையவராய் இருக் கின்ற இவருடைய பாசுரமான 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற நூலைக்கொண்டு இவ்வர்த்தத்தை ஐயம் திரிபுகள் சிறிதும் இல்லாமல் நிச்சயிக்கக் கடவோம் என்றபடி.

---

[1] கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.

[2] கண்ணிநுண் சிறுத்தாம்பு, 5.

[3] உறுவது - அடையத் தக்கது; பேறு.

[4] 'சதுரராயிருக்கையாலே' என்பதனை மேலே வருகின்ற 'இவர்கள் படுகிறபாடு என் என்று நகையாடியிருக்கிற' என்றதனோடு கூட்டுக.

[5] 'சரமபர்வத்தின் ஏற்றம் அறிந்து பேசாநிற்கச்செய்தே' என்றது ஆழ்வார்களை.

[6] அவர் இவர்களைச் சிரித்திருந்தற்குக் காரணத்தை அருளிச்செய் கிறார் 'அடியிலே' என்று தொடங்கி.

[1] அன்றிக்கே, ‘உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணுத போது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே’ என்பதற்கு, பகவானுடைய அநுபவத்தை அநுபவிக்கும் போது [2] ‘உண்டுகளித்தேற்கு உம்பர் என் குறை’, [3] ‘யாவர் நிகர் அகல் வானத்தே?’, [4] ‘மாறு உளதோ இம் மண்ணின் மிசை’ என்று இப்படிப் பகவானுடைய அநுபவத்தால் உண்டாகின்ற மிக்க ஆனந்தத்தாலே செருக்கினைக் காட்டுவதான ஒரு வார்த்தையும், அவனுடைய அநுபவம் பெருத போது [5] ‘மதியெல்லாம் உள்கலங்கி மயங்குமால்’, [6] ‘சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்’, [7] ‘காணவாராய் என்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து’, [8] ‘தீயோடு உடன்சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ’ என்று சோகவேகத்தால் உண்டாவதான ஒரு வார்த்தையும் சொல்லுவார் [9] ஒருவர் இருவர் அன்றிக்கே பத்துப் பேர் உண்டிறே என்றும், ‘அவர்கள் பாசுரம் கொண்டன்று இவ் வர்த்தம் அறுதியிடுவது’ என்பதற்கு, அவன் அடியார்களே, சேஷிகளும் உபாயமாக இருப்பவர்களும் உபேயமாக இருப்பவர்களும் என்று அறிந்திருக்கச்செய்தே, அதற்குத் தகுதியாக நிற்க மாட்டாமல், பகவானுடைய அழகிலே ஈடுபட்டவர்களாய் இப்படி, [10] போது ஒரு வார்த்தை சொல்லுகிறவர்களுடைய பாசுரம் கொண்டு அன்று, தன்னுடைய ஆசாரியனுடைய இரண்டு திருவடிகளே உபாயம் என்கிற இந்த மேலான அர்த்தத்தை நிச்சயம் பண்ணுவது என்றும், ‘அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே; அவர் பாசுரம் கொண்டு இவ்

---

[1] சூத்திரத்திற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறுர் ‘அன்றிக்கே’ என்று தொடங்கி.

[2] திருவாய். 10. 8 : 7. [3] திருவாய். 4. 5 : 8.

[4] திருவாய். 6. 4 : 9. [5] திருவாய். 1. 4 : 3.

[6] திருவாய். 1. 4 : 9. [7] திருவாய். 8. 5 : 2.

[8] திருவாய். 6. 9 : 6.

[9] ஆனந்தத்தாலும் சோக வேகத்தாலும் பதின்மரும் பேசியுள்ளார்கள் ஆதலின், ‘ஒருவர் இருவர் அன்றிக்கே பத்துப் பேர்’ என்கிறுர்.

[10] ‘உண்டபோது’ என்பது இப்பொழுது அச்சுப் பிரதிகளில் உள்ள பாடம். ‘போது’ என்றே இருத்தல் வேண்டும். ‘உண்ட’ என்பது பொருளுக்குச் சேரவில்லை. ஆதலால், அது இடைச்செருகல்; இடையிலே ஒருவரால் சேர்க்கப்பட்டது. போது ஒரு வார்த்தை - வேளைக்கு ஒரு வார்த்தை. போது - வேளை.

வர்த்தம் அறுதியிடக் கடவோம்' என்பதற்கு, ஆழ்வார் திருவடிகளையே தமக்குத் தஞ்சமாகப்பற்றித் "தேவுமற் றறியேன்" என்றிருக்கையாலே, பிரதம பர்வத்திலே மண்டி ஆனந்தத்திற்கும், சோகத்திற்கும் பரவசப்பட்டவர்களாய்ப் பேசுகிறவர்களை நகையாடியிருப்பார் ஒருவர் உண்டிறே; அப்படியிருந்துள்ள ஸ்ரீமதுர கவிகள் திவ்விய சூக்தியைக் கொண்டு இவ் வர்த்தம் நிச்சயம் பண்ணக்கடவோம் என்றும் இங்ஙனே பொருள் கூறலுமாம். (2)

## 413

[1]சொரூபத்துக்கும் பிராப்பியத்துக்கும் சேர்ந் திருக்க வேணுமிறே பிராபகம்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி, பிரமாணத்தாலே பெறப்பட்ட பொருளை உபபத்தியாலே—பொருந்துமாற்றால் நிலை நிறுத்துகிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'சொரூபத்துக்கும் பிராப்பியத்துக்கும் சேர்ந் திருக்கவேணுமிறே பிராபகம்' என்றது, சொரூப உபாய புருஷார்த்தங்களை நிச்சயம் பண்ணுமளவில், முதலில் சொரூபத்தை உள்ளபடி நிச்சயித்துப் பின்பு பலத்தை அந்தச் சொரூபத்திற்குத் தகுதியாக நிச்சயித்து, அதனைப் பெறுதற்குரிய வழியை அந்த இரண்டற்கும் தகுதியாக நிச்சயிக்க வேணுமிறே என்றபடி.

[2] அறிகிற நிலையில் பலன் முற்பட்டு அதனைப் பெறுதற்கு உரிய வழி பிற்பட்டிருக்கும். அநுஷ்டான நிலையில் உபாயம் முற்பட்டுப் பலன் பிற்பட்டிருக்கும்.

---

[1] சொரூபம் - ஆன்மாவின் தன்மை; ஆசாரியனுக்குச் சேஷப்பட்டிருத்தல். பிராப்பியம் - ஆசாரியன் திருவடிகளில் செய்யும் தொண்டு; பலன். பிராபகம் - ஆசாரியன் திருவடிகள்; வழி.

[2] 'பலனைப் பெறுதற்கு உரிய வழியை முற்கூறிப் பின் அதனால் அடைதற்குரிய பலனைக் கூறுதல் முறையாகவிருக்க, சூத்திரத்தில், பிராப்பியத்தை முற்கூறிப் பிராபகத்தைப் பிற்கூறியது என்னை?' என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அறிகிற நிலையில்' என்று தொடங்கி.

சொரூபத்திற்கும் பலத்திற்கும் சேராமையாலேயிறே [1] மற்றைய உபாயத்தை விட்டது. ஆகையால், 'சொரூபத்திற்கும் பலத்திற்கும் சேர்ந்திருக்க வேணுமிறே' என்கிறார்.

இனி, சொரூபத்தை ஆராய்ந்தால், ஞானமும் ஆனந்தமும் புறவிதழ் என்னும்படி பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையே வடிவாய், அதனுடைய உண்மை நிலை, பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையும் புறவிதழ் என்னும்படி அவன் அடியார்களுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையே வடிவாயிறே இருப்பது. இத்தகைய ஆன்மாவினுடைய தன்மைக்குத் தகுதியான பலத்தை ஆராய்ந்தால் இறைவனுக்குச் செய்யும் தொண்டு முதற்படியாய் அவன் அடியார்களுக்குச் செய்யும் தொண்டு முடிந்த நிலமாக இருக்கும்.

ஆன்மாவின் தன்மையும் பலத்தின் தன்மையும் இவை ஆகையாலே, இவை இரண்டற்கும் தகுதியாக உபாயமும் அவன் அடியார்களேயாக வேண்டியிறே இருப்பது.

இனி, அவனுடைய அந்த அடியார்களுள், முதல் அடியிலே தன்னை அங்கீகரித்துத் தத்துவஞானத்தை அளித்த மகா உபகாரகனான தன் ஆசாரியனுக்கே அடிமையாக இருக்கை, எல்லாப் பாகவதர்களுடைய உகப்புமாய், தன் சொரூபத்தினுடைய எல்லை நிலமுமாகவிருக்கும். இந்த ஆன்மாவினுடைய தன்மைக்குத் தகுதியான பலனும், தன் ஆசாரியனுடைய திருவடிகளில் பண்ணும் கைங்கரியமாகவிருக்கும். இப்படி ஆன்மாவினுடைய தன்மையும் பலனுமாக முடிந்தால் இவை இரண்டற்கும் ஒத்ததான உபாயமும் தன் ஆசாரியனுடைய இரண்டு திருவடிகளுமாக வேணும் என்கை.

இதுவே ஆன்மாவின் தன்மைக்கும் பலத்திற்கும் சேர்ந்த உபாயம் என்கையாலே, ஈச்வரனுடைய சுவாதந்திரியத்தைக் கண்டு அஞ்சிய அச்சத்தாலே அதனை விட்டு அச்சம் இன்மையை நோக்கி இதில் போந்த அளவு அன்று; முக்கிய உபாயம் இதுவே என்னுமிடம் [2] சம்பிரதிபந்நம். (3)

---

[1] மற்றைய உபாயம் - பக்தி முதலானவைகள்.

[2] சம்பிரதிபந்நம் - தடை இன்றி ஒத்துக்கொள்ளப்பட்டது.

## 414

**[1]வடுகநம்பி, ஆழ்வானையும் ஆண்டானையும் இரு கரையர் என்பர்.**

என்பது சூத்திரம்.

**அவ** :—இவ்வர்த்த விஷயமாக ஓர் [2] ஐதிஹ்யத்தை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—வடுகநம்பி—ஆழ்வார் திருவடிகளில் [3] ஸ்ரீமதுர கவிகள் இருந்தாற்போன்று, பேறும் பேற்றினைப் பெறுதற்குரிய வழியும் ஆகிய இரண்டும் [4] எம்பெருமானார் திருவடிகளே என்று நினைந்து [5] 'தேவுமற்று அறியேன்' என்று இருக்கும் வடுக நம்பி. 'ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையர் என்பர்' என்றது, எம்பெருமானார்க்கு [6] நிழலும் அடிதாறும் போலே விட்டுப் பிரியாதவர்களாய் [7] 'இராமாநுசருடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்' என்றும், [8] 'உடையவரிடத்தி லேயே இருந்துகொண்டு அடியேன் கைங்கரியம் செய்ய வேண்டும்' என்றும் 'பேற்றினைப் பெறுதற்குரிய வழி அவர் திருவடிகள்; பேறு அவர் திருவடிகளில் செய்யும் கைங்கரியம்' என்று இருக்கும் கூரத்தாழ்வானையும் அவரைப் போன்றவரான முதலியாண்டானையும், [9] 'இவ்வுலக வாழ்வில் இருப்பில் அடிக்

---

[1] இங்குக் கூறப்பட்ட மூவரும் இராமாநுசருடைய மாணுக்கர். ஆழ்வான் - கூரத்தாழ்வான். ஆண்டான் - முதலியாண்டான்.

[2] ஐதிஹ்யம் - சம்பிரதாயம் அடியாக வந்த ஒரு வார்த்தை.

[3] ஸ்ரீமதுரகவிகள் - மதுரகவி ஆழ்வார். ஆழ்வார் விஷயமாக, கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பிரபந்தம் பாடியவர் இவர்.

[4] எம்பெருமானார் - இராமாநுசர்.

[5] கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.

[6] நிழல் - சாயை. அடி தாறு - பாத ரேகை.

[7] 'ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே' என்பது தனியன்.

[8] 'ராமாநுஜார்ய வஶக: பரிவர்த்திஷீய' என்பது, சுந்தரபாகுஸ் தவம்.

[9] 'இருகரையர்' என்பதற்குரிய காரணத்தை அருளிச்செய்கிறார் 'இவ்வுலக வாழ்வில்' என்று தொடங்கி. 'இவ்வளவைக் கொண்டு' என்பது முடிய உரையாசிரியர் கூறும் காரணம். அதற்குமேல் வடுக நம்பியினுடைய கருத்தினைக் கூறுவது.

கொதிப்பால் வந்த துன்பத்தின் மிகுதியாலே கலங்கி ஒவ்வொரு சமயத்தில் பெருமாள் பக்கலிலும் சென்று பல்லைக் காட்டுவது, அவனுடைய அழகினைக் கண்டவாறே அவனிடத்தில் அன்புடையவராய்ப் போதருவது' ஆம் இவ்வளவைக்கொண்டு, எம்பெருமானார் திருவடிகளே உபாயமும் பலனுமானால் 'தேவுமற்று அறியேன்' என்று இருக்க வேண்டாவோ? அங்ஙனன்றிக்கே, [1] சரமாவதியிலும் பிரதமாவதியிலும் கைவைத்து நிற்கிற இவர்கள் இருகரையர் என்று அருளிச்செய்வர் என்றபடி. (4)

## 415

[2] பிராப்பியத்துக்குப் பிரதமபர்வம் ஆசார்ய கைங்கரியம்; மத்தியமபர்வம் பகவத்கைங்கரியம்; சர்மபர்வம் பாகவதகைங்கரியம்.

என்பது சூத்திரம்.

அவ :—[3] 'சொரூபத்துக்கும் பிராப்பியத்துக்கும் சேர்ந்திருக்கவேணுமிறே' என்கிறவிடத்தில் [4] சொரூபத்தை ஒரு வழியால் இசைந்து, 'பகவானுக்குச் செய்யும் கைங்கரியமன்றோ பேறு? பேற்றிற்கு ஒத்ததாகவேணும்' என்றபடி யாங்ஙனம்?' என்பாருடைய வினாவிற்கு விடை அளிப்பதற்காக, முதலில் பலத்தினுடைய விசேஷத்தன்மையை ஓடவைத்துக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—[5] பிராப்பியமாவது, சேஷத்துவத்தாலேயே நிரூபிக்கப்படுகின்ற ஆன்மாவிற்குப் புருஷார்த்தமான கைங்கரியம்.

---

[1] சரமாவதி - அடியார்களைப் பற்றுவது. பிரதமாவதி - இறைவனைப் பற்றுவது.

[2] பிராப்பியம் - பேறு. ஆசார்ய கைங்கரியம் - ஆசாரியனுக்குப் பிரியமாகப் பகவானுக்குச் செய்யும் கைங்கரியம். பகவத் கைங்கரியம் - பகவானுக்குப் பிரியமாக அடியார்களுக்குச் செய்யும் கைங்கரியம். பாகவத கைங்கரியம் - பாகவதர்களுக்குப் பிரியமாக ஆசாரியனுக்குச் செய்யும் கைங்கரியம்.

[3] 413ஆம் சூத்திரம்.

[4] 'ஒரு வழியால்' என்றது, பகவானுக்குச் சேஷப்பட்டிருத்தலை மாத்திரம் இசைந்து, பாகவதர்களுக்கும் ஆசாரியனுக்கும் சேஷப்பட்டிருத்தலை இசையாமல் என்றபடி. ஓடவைத்தல் - விரித்துக் கூறல்.

[5] பேறு - பிராப்பியம். எம்பெருமான் மாத்திரம் அல்லன் என்பதனைக் காட்டுகிறார் 'பிராப்பியமாவது' என்று தொடங்கி.

பர்வம் என்ற சொல், ஒரு பகுதி என்ற பொருளைக் காட்டுவது. இங்குப் பிரதம பர்வமாகச் சொல்லுகிற ஆசாரிய கைங்கரிய மாவது, [1] 'திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கியபின்' என்கிறபடியே முதலடியிலே தன்னை அங்கீகரித்துப் பகவானுக்கு ஆளாம்படி திருத்தின ஆசாரியனுக்கு உகப்பாகப் பகவானுக்குச் செய்யும் கைங்கரியம். மத்தியம பர்வமாகச் சொல்லுகிற பகவத் கைங்கரியமாவது, [2] 'அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்' என்கிறபடியே தான் உகந்தாரைத் தன்னடியார்க்கு அடிமைப் படுத்தும் பகவானுக்கு உகப்பாக, பாகவதர்களுக்குச் செய்யும் கைங்கரியம். சரமபர்வமாகச் சொல்லுகிற பாகவத கைங்கரிய மாவது, [3] 'ஆசாரியவான்' என்று உகக்குமவர்களாய் ஆசாரிய னுடைய பெருமையை அறிவிக்கின்றவர்களாய் ஆசாரிய கைங் கரியத்தின் ஏற்றம் அறியுமவர்களான பாகவதர்கள் எல்லார்க்கும் உகப்பாக ஆசாரியனுக்குச் செய்யும் கைங்கரியம்.

ஆக, ஆசாரியனுடைய பிரீதிக்கு விஷயமான பகவானுக்குச் செய்யும் கைங்கரியத்தை 'ஆசாரிய கைங்கரியம்' என்றும், பகவானுடைய பிரீதிக்கு விஷயமான பாகவதர்களுக்குச் செய்யும் கைங்கரியத்தைப் 'பகவத் கைங்கரியம்' என்றும், பாகவதர் களுடைய பிரீதிக்கு விஷயமான ஆசாரியனுக்குச் செய்யும் கைங்கரியத்தைப் 'பாகவத கைங்கரியம்' என்றும் சொல்லிற்று யிற்று. ஆகையால், 'ஆசார்ய கைங்கரியம் பிராப்பியம்' என்று சொன்ன இதில் குறை இல்லை என்பது கருத்து. (5)

## 416

[4] சொரூபப் பிராப்தியைச் சாஸ்திரம் புரு ஷார்த்தமாகச் சொல்லாநிற்க, பிராப்தி பல மாய்க்கொண்டு கைங்கரியம் வருகிறவா போலே,

---

[1] இராமாநுச நூற்றந்தாதி, 78. [2] அமலனுதிபிரான், 1.

[3] ஆசாரியவான் – ஆசாரியனையுடையவன்.

[4] சொரூபப் பிராப்தி – ஆன்மா, தனக்கே அசாதாரணமாக உள்ள தன்மையைப் பெறுவது. அசாதாரணமான தன்மைகளாவன :— சேஷத்துவம், பாவம் அற்றவனுகவிருத்தல், மூப்பு அற்றவனுகவிருத் தல், மரணம் அற்றவனுகவிருத்தல், சோகமற்றவனுகவிருத்தல், பசி யற்றவனுகவிருத்தல், தாகமற்றவனுகவிருத்தல், விரும்பின பொருளை யுடையவனுகவிருத்தல், எண்ணியவாறே செய்து முடிப்பவனுகவிருத்

சாத்திய விவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வம் வரக்கடவது.

என்பது சூத்திரம்.

அவ :—' இப்படி ஆசார்ய கைங்கரியமே சரமபர்வம் என்று சாஸ்திரம் சொல்லாதிருக்கச்செய்தே, இது வருகிற வழிதான் என்?' என்கிற வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—' சொரூபப் பிராப்தியைச் சாஸ்திரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க' என்கிறது, [1] ' பரமாத்மாவை அடைந்து தனக்கு அசாதாரணமான ஆகாரத்தினால் தோன்றுகிறான்' என்று பகவானை [2] அடைதலை முன்னாகவுடையதாய், அநாதியான கர்மம் காரணமான பிரகிருதியின் சம்பந்தத்தாலே, அழுக்கினாலே மூடப்பட்ட மணியின் ஒளி போலே மறைக்கப்பட்ட தன்னுடைய அசாதாரணமான தன்மையினுடைய ஆவிர்ப்பாவமாகிற சொரூபப் பிராப்தியை வேதாந்த சாஸ்திரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க என்றபடி. ' பிராப்தி பலமாய்க்கொண்டு கைங்கரியம் வருகிறவா போலே' என்றது, இப்படித் தோற்றிய சொரூபத்தையுடைய ஆன்மா, சேஷத்துவத்தாலேயே அறியப்படுமதாகையாலே, சேஷி விஷயமாகச் செய்யப்படுகிற கைங்கரியத்தால் அல்லது செல்லாதபடியாயிருக்கையாலே, தோற்றமடைந்த [3] அந்தச் சொரூபத்தினுடைய பலமாய்க்கொண்டு, பகவானை அனுபவித்தலால் உண்டாகிற பிரீதியின் காரியமான கைங்கரியம் வருகிறவாறு போலே' என்றபடி.

---

தல் என்பனவாம். சாத்தியவிவ்ருத்தி - பகவானுக்குச் செய்யும் கைங்கரியத்தினுடைய விசேஷமான வளர்ச்சி. சரமபர்வம் - ஆசாரிய கைங்கரியம்.

[1] ' பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே' என்பது, சாந்தோக்ய உப. 8. 12 : 2.

[2] அடைதலை முன்னாகவுடையதாய்,'பிரகிருதியின் சம்பந்தத்தாலே மறைக்கப்பட்ட தன்னுடைய அசாதாரணமான தன்மை' என்று கூட்டுக. ' தன்னுடைய' என்றது ஆன்மாவினுடைய என்றபடி. ' அழுக்கினாலே மூடப்பட்ட மணியின் ஒளிபோலே' என்பது பிரகிருதியின் சம்பந்தத்தாலே மறைக்கப்பட்ட ஆன்மாவின் தன்மையை விளக்க வந்த உவமை. ஆவிர்ப்பாவம் - தோன்றுதல்.

[3] அந்தச் சொரூபம் - சேஷத்துவ சொரூபம்.

[1] 'சாத்திய விவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வம் வரக்கட வது' என்றது, சேஷியான பகவானுக்குத் தன் திறத்தில் செய் கிற கைங்கரியத்தைக்காட்டிலும் தன்னடியார் திறத்தில் செய்யும் கைங்கரியம் உகப்பு ஆகையாலே, பகவானுக்குச்செய்யும் அந்தக் கைங்கரியமாகிற பலத்தின் வளர்ச்சியாய்க்கொண்டு மத்திய பர்வமான பாகவத கைங்கரியம் வரக்கடவதாய், அந்தப் பாகவதர் கள் எல்லார்க்கும் தம் திறத்தில் செய்யும் கைங்கரியத்தைக் காட் டிலும் தங்களுக்கு உபகாரகனுன ஆசாரியன் திறத்தில் செய்யும் கைங்கரியமே உகப்பு ஆகையாலே, அந்தப் பலத்தினுடைய விசேஷ வளர்ச்சியாய்க்கொண்டு சரமபர்வமான ஆசார்ய கைங் கரியம் வரக்கடவதாக இருக்கும் என்றபடி. (6)

## 417

**[2]இதுதான் துர்லபம்.**

என்பது சூத்திரம்.

அவ :—இந்தச் சரமபர்வம் வருதற்குரிய அருமையை அருளிச்செய்கிறுர் 'இதுதான் துர்லபம் என்று. (7)

## 418

**விஷயப் பிரவணனுக்கு அத்தை விட்டுப் பகவத் விஷயத்திலே வருகைக்கு உள்ள அருமைபோல அன்று; பிரதம பர்வத்தை விட்டுச் சரம பர்வத்திலே வருகைக்கு உள்ள அருமை.[3]**

என்பது சூத்திரம்.

அவ :—அந்த அருமையை விவரிக்கிறுர் இச்சூத்திரத்தால்.

---

1 சாத்தியம் - பலம்; பேறு.

2 துர்லபம் - அடைவதற்கு அருமையானது.

3 'பிரதம பர்வத்தை விட்டுச் சரம பர்வத்திலே வருகைக்கு உள்ள அருமை,......அருமைபோல் அன்று' என்று வாக்கியத்தை மாற்றுக. விஷயப்பிரவணன் - சிற்றின்பத்திலே - (மகளிர்பால்) ஆசையுள்ளவன். பிரதமபர்வம் - இறைவனுக்கு . அடிமையாகவிருத்தல். சரமபர்வம் - ஆசாரியனுக்கு அடிமைப்பட்டிருத்தல்.

**வியாக் :**—பிரதம பர்வத்தை விட்டுச் சரம பர்வத்திலே வருகைக்கு உள்ள அருமை—பிரதம பர்வமான பகவத் கைங்கரியத்தை விட்டுச் சரம பர்வமான ஆசாரிய கைங்கரியத்திற்கு வருகைக்கு உள்ள அருமை, 'விஷயப் பிரவணனுக்கு அத்தைவிட்டுப் பகவத் விஷயத்திலே வருகைக்கு உள்ள அருமை போல அன்று' என்றது, மகளிர்பால் புறப்பூச்சான அழகினைக் கண்டு ஈடுபட்டு மீட்க ஒண்ணாதபடி அவர்களிடத்தில் அன்புள்ளவனாய் நின்றவனுக்கு அவர்களைக் கைவிட்டு, வகுத்த விஷயமான பகவானிடத்தில் வருகைக்கு உள்ள அருமை போன்றது அன்று என்றபடி. (8)

## 419

[1] அங்குத் தோஷ தரிசனத்தாலே மீளலாம்;
இங்கு அது செய்யவொண்ணாது.

என்பது சூத்திரம்.

**அவ :**—'அது எவ்வாறு?' என்னும் வினாவில் அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—அங்குத் தோஷ தரிசனத்தாலே மீளலாம்—மகளிர் திறத்துச் சரீரதோஷம் முதலானவைகளும், [2]சிறிது, நிலையற்றது முதலான தோஷங்களும் உண்டாயிருக்கையாலே அவற்றைக் காணவே அருவருத்து மீளலாம்படியிருக்கும். இங்கு அது செய்ய வொண்ணாது—விலக்ஷணமான திருமேனியையுடையவனாய் எல்லா நற்குணங்களையும் இயல்பாக உடையவனாய் நித்தியனாய் அளவிட்டு அறியவொண்ணாதவனாய் இருக்கிற பகவானிடத்தில் குற்றம் சிறிதும் இல்லாமையால் குற்றத்தைக் கண்டு மீளப்போகாது என்றவாறு. [3]"சார்ங்கம் என்னும் வில்லைத் தரித்த பகவானுடைய கல்யாண குணங்களும் குற்றங்களும் எண்ண முடியா; முதலில் கூறிய கல்யாண குணங்கள் எல்லையில்லாமல் இருப்பதனால் எண்ண முடியா;

---

[1] அங்கு - மகளிரிடத்தில். தரிசனம் - காணுதல். இங்கு - இறைவனிடத்தில்.

[2] 'சிறிது, நிலையற்றது' என்றது சிற்றின்பத்தினை.

[3] 'ஸங்க்யாதும் நைவஶக்யந்தே குணதோஷாஶ்ச ஶார்ங்கிண:
ஆநந்த்யாத் ப்ரதமோராஶி: அபாவாதேவ பஶ்சிம:'
என்பது, பிரமாணம்.

இரண்டாவதாகக் கூறிய குற்றங்கள் இல்லாமையாலே எண்ண முடியா'[1] என்னக் கடவதிறே. (9)

## 420

### தோஷம் உண்டானாலும் குணம் போலே [2] உபாதேயமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'மகளிர் திறத்தில் சொல்லுகிற குற்றங்களுள் ஒன்றும் இங்குச் சொல்லலாவது இல்லையாகிலும், தன் திறத்தில் பக்தியினாலே பரவசப்பட்டவர்களுக்குக் கலவியாலாய இன்பத்தை முடிய நடத்தாதே பிரிந்து துன்பத்தை விளைக்கையாலே [3] 'கடியன் கொடியன்' என்பது போன்று சொல்லலாம்படி தோற்றுவன சில குற்றங்கள் உண்டே, அவைதாம் மீளுகைக்கு உடல் ஆனாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'தோஷம் உண்டானாலும் குணம் போலே உபாதேயமாய் இருக்கும்' என்றது, அப்படி, ஆற்றாமையாலே தோற்றுவன சில குற்றங்கள் உளவானாலும் [4] 'கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும்' என்று அவற்றையே விரும்பி மேல் விழும்படி இருக்கையாலே, அவை விடத்தக்கன வாகா; அவனை விரும்பி மேல் விழுகைக்கு உடலான குணம் போலே பற்றக் கூடியனவாகவிருக்கும். (10)

## 421

### லோக விபரீதமாயிறே இருப்பது.[5]

என்பது சூத்திரம்.

அவ :—'உலகத்தில் குற்றம் விடக்கூடியதாய், குணம்பற்றக் கூடியதாயிறே இருக்கின்றன; குற்றம், குணம் போலே

---

[1] இச்சூத்திரம், முன் சூத்திரத்தின் கருத்துப்பொருளாகிய குற்றமும் குற்றமின்மையும் பற்றி விளக்கியவாறு எனக் கொள்க.

[2] உபாதேயம் - பற்றக்கூடியது.

[3] திருவாய்மொழி, 5. 3 : 5. [4] திருவாய்மொழி, 5. 3 : 5.

[5] எல்லாவுயிர்களுக்கும் வேறுபட்டவன் அவனாகையாலே, அவனிடத்துள்ளவைகளும் வேறுபட்டேயிருக்கும் என்றவாறு.

கொள்ளக்கூடியதாக இருக்குமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'லோக விபரீதமாயிறே இருப்பது' என்றது, குற்றம் விடுதற்குக் காரணமாய்க் குணம் பற்றுதற்குக் காரண மாய் இருக்கும் உலகத்தன்மை அன்றியே, குற்றமும் குணம் போலே பற்றக் கூடியதாயிறே இறைவன் திறத்தில் இருப்பது என்றபடி. (11)

## 422

**குணம் உபாதேயம்[1] ஆகைக்கு ஈடான ஏது,**
**தோஷத்துக்கும் உண்டிறே.**

என்பது சூத்திரம்.

**அவ :—**'எல்லாம் செய்தாலும், குற்றம், குணம் போன்று பற்றக் கூடியதாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய் கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'குணம் உபாதேயம் ஆகைக்கு ஈடான ஏது தோஷத்துக்கும் உண்டிறே' என்றது, பகவானுடைய குணங் கள், அவனிடத்தில் அன்புள்ளவர்களுக்குப் பற்றக்கூடியதற்குத் [2]தக்கதான, உரிய சேஷியினிடத்தில் உள்ளவை என்ற காரணம், அவன் திறத்துத் தோன்றுகிற குற்றங்களுக்கும் உண்டிறே என்றபடி.

இதனால், அவன்பால் உள்ளவை என்னுமதனாலே குணங்கள் பற்றக்கூடியனவாயிருத்தலைப்போன்று, அவன்பால் உள்ளது என்னுமதனைப் பற்றக் குற்றமும் பற்றக் கூடியதாகக் குறை யில்லை என்றதாயிற்று.

[3]உண்மை இதுவாகையாலே, தோஷம் உண்டானாலும் அது மீளுகைக்கு உடலாகாது என்பது கருத்து. (11)

---

[1] உபாதேயம் - பற்றக்கூடியது. ஏது - காரணம்.

[2] 'தக்கதான காரணம்' 'சேஷியினிடத்தில் உள்ளவை என்ற காரணம்' என்றும் கூட்டுக.

[3] 420ஆம் சூத்திரப் பொருளை முடித்துக் காட்டுகிறார் 'உண்மை' என்று தொடங்கி.

## 423

[1]‘ நிர்கிருணன் ’ என்று வாய்மூடுவதற்கு முன்னே ‘ கிருணுவான் ’ என்று சொல்லும்படியாய் இருந்ததிறே.

என்பது சூத்திரம்.

அவ :—[2]பிரிந்த நிலையிலே தோன்றும் அருள் இல்லாமை முதலான குற்றங்களை அங்கீகரித்து, அக்குற்றங்களும் குணங்களைப் போன்று பற்றக் கூடியனவாம்படி இருக்கும் தன்மையை அருளிச்செய்தார் மேல். அருளின்மை முதலான அந்தக் குற்றங்கள்தாம், முதலிலே இறைவன் திறத்தில் இல்லை என்னுமிடத்தைப் பெரியார் பாசுரங்களைக்கொண்டு விளக்குகிறார் மேல். அவற்றுள், முன்னர் ஆழ்வாருடைய திருவாக்கினைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ நிர்கிருணன் என்று வாய்மூடுவதற்கு முன்னே, கிருணுவான் என்று சொல்லும்படியாய் இருந்ததிறே ’ என்றது, [3]‘ எனதவ்வளவண்ணர் தகவுகளே ’—‘ எங்ஙனே இருந்தன தூய தன்மையரான உம்முடைய கிருபைகள்? நாட்டிலே இப்படி நேர்மையாளருமாய்ப் பிறர் துக்கத்தைப் பொறுதவருமாய் இருப்பார் தார்மிகர் சிலர் நடையாட, வலி இல்லாத பெண்களுக்கு அழகியதாக வாழலாம்படி யிருந்தது ’ என்று, பெண் பிள்ளையின் ஆற்றாமைக்கு உதவாமையைக் கொண்டு திருத்தாயார் ‘ அருள் இல்லாதவன் ’ என்று வாய் மூடுவதற்கு முன்னே, அவள் வாயைப் புதைத்தாற்போன்று [4]‘ தகவுடையவனே ’ என்று ‘ கெடுவாய், [5]ஆகரத்தில் தகவு மறுக்குமோ? அது நம்

---

[1] நிர்கிருணன் - அருள் இல்லாதவன். கிருணுவான் - அருள் உள்ளவன். திருவாய்மொழி, இரண்டாம் பத்து, நான்காம் திருப்பதிகம், ஐந்தும் ஆறும் ஆகிற திருப்பாசுரங்களையும் அவற்றின் வியாக்கியானத்தையும் ஈண்டுக்காண்க.

[2] ‘ பிரிந்த நிலையில் ’ என்றது, தலைவன் தலைவியைப் பிரிந்த நிலையில் என்றபடி.

[3] திருவாய். 2. 4 : 5. இதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் ‘ எங்ஙனே இருந்தன ?’ என்று தொடங்கி.

[4] திருவாய். 2. 4 : 6.

[5] ஆகரம் - நிதியைப் போன்று அழியாத இடம்.

குற்றங்காண்' என்று அருளுடையனும் தன்மையைச் சொல்லும் படியாய் இருந்ததிறே என்றபடி. (12)

## 424

இப்படிச் சொல்லும்படி பண்ணிற்று கிருபை யாலே என்று, சிநேகமும் உபகார ஸ்மிருதியும் நடந்ததிறே.[1]

என்பது சூத்திரம்.

அவ :—[2] 'இந்த வார்த்தைதான், தாயார் சொன்ன அவனு டைய குணக்கேட்டிற்கு ஒரு பரிஹாரம் பண்ணின மாத்திரமோ, அல்லது, மனத்தொடு பட்டு வந்த வார்த்தையோ?' என்று வினு யினுர்க்கு அது மனத்தொடு பட்ட வார்த்தையே என்பதனை மூதலிக்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இப்படிச் சொல்லும்படி பண்ணிற்று கிருபை யாலே என்று சிநேகமும் உபகாரஸ்மிருதியும் நடந்ததிறே' என்றது, 'குணம் இல்லாதவன்' என்று சொன்ன வார்த்தை யைத் தள்ளிக் 'குணமுடையவன்' என்று சொல்லும்படி பண்ணிற்று கிருபையாலே என்று, [3] 'மிகவிரும்பும்' என்று சிநேகமும், 'பிரான்' என்று செய்ந்நன்றியறிதலும் நடந்த திறே; ஆகையால், 'தகவுடையவனே' என்பது மனத்தொடு பட்ட வார்த்தையே என்றபடி. (13)

---

[1] நடந்தது - ஆழ்வார் நாயகியின் திருவுள்ளத்தில் நடந்தது. உப கார ஸ்மிருதி - செய்ந்நன்றி அறிதல். 'கிருபையாலே என்று நடந்த திறே' என்று முடிக்க.

[2] இந்த வார்த்தை - 'தகவுடையவனே' என்று தலைவி கூறிய இந்த வார்த்தை.

[3] 'தகவுடையவனே! என்னும், பின்னும்
மிகவிரும்பும், பிரான்! என்னும், என்
தகவுயிர்க்கமுதே! என்னும், உள்ளம்
உகவுருகி நின்றுள்ளுளே.'

என்பது அத்திருப்பாசுரம்.

## 425

**[1] நிர்கிருணனாகச் சங்கித்துச் சொல்லும் அவஸ்தையிலும் காரணத்தைச் சுவகதமாக விறே சொல்லிற்று.**

என்பது சூத்திரம்.

**அவ :—**பின்பு, பிராட்டியினுடைய வார்த்தையைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'நிர்கிருணனாகச் சங்கித்துச் சொல்லும் அவஸ்தையிலும் காரணத்தைச் சுவகதமாகவிறே சொல்லிற்று' என்றது, பிரிவாற்றாமையாலே மிக அதிகமாகக் கலங்கின ஸ்ரீ ஜனகராஜன் திருமகள், பெருமாள், தன் ஆற்றாமைக்கு உதவ வந்து முகம் காட்டாத இன்னாப்பாலே 'அறிவுள்ளவராகவும் நன்றியறிதலுள்ளவராகவும் அருள் உள்ளவராகவும் நல்லொழுக்கமுடையவராகவும் பிரசித்தி பெற்ற ஸ்ரீராமபிரான், என் புண்ணியக் குறைவினால் அருள் இல்லாதவராயிருக்கிறார் என்று சந்தேகிக்கிறேன்'[2] என்று, பெருமாளைக் குணம் இல்லாதவராக ஐயப்பட்டுச் சொல்லுகிற நிலையிலும், 'இப்படி ஐயப்படுதற்கு அடி என்னுடைய நல்வினை இன்மை' என்கையாலே, ஐயப்படுதற்கு உரிய காரணம் தன்னிடத்தில் இருப்பதாகச் சொன்னாள் என்றபடி. (14)

## 426

**[3] குணதோஷங்கள் இரண்டும், க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்.**

என்பது சூத்திரம்.

---

[1] நிர்கிருணன் - அருள் இல்லாதவன். சங்கித்து - ஐயப்பட்டு. சுவகதம் - தன்னிடத்தில் உள்ளது.

[2] 'க்யாதః ப்ராஜ்ஞః க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்சராகவః
ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶః ஶங்கே மத்பாக்ய ஸங்க்ஷயாத்.'
என்பது, ஸ்ரீராமா. சுந். 26 : 13.

[3] 'குணம், க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்; தோஷம் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்' என்று தனித்தனியே கூட்டுக. க்ஷுத்ர புருஷார்த்தம் - சிற்றின்பம். புருஷார்த்த காஷ்டை - சரமபர்வமான அடியார்களுக்கு அடிமைப்பட்டிருத்தல். காஷ்டை - எல்லை.

அவ :—[1] 'பிரதமபர்வத்தை விட்டு' என்ற இடத்தில் பொருள் ஆற்றலால் கூறப்பட்ட பகவானுடைய கலவியும், [2] 'தோஷம் உண்டானலும்' என்ற விடத்தில் பொருள் ஆற்ற லால் கூறப்பட்ட பகவானுடைய பிரிவும் ஆகிற இவை இரண்டும் செய்யுமவற்றை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'குணதோஷங்கள் இரண்டும்' என்ற இவற்றுள் குணமாவது, இறைவன் தன் அழகு முதலானவற்றை அடியார் களுக்கு முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கும் கலவி. தோஷமாவது, அந்த அநுபவம் பெருமையாலே அவர் கள் கண்ணுஞ்சுழலை இட்டுத் துடிக்க, தான் முகம் காட்டாதிருக் கையாகிற பிரிவு.

இவற்றுள், 'குணம் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புரு ஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்' என்றது, [3] 'மால்பால் மனம் சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' என்றும், [4] 'மனைப் பால், பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம், துறந்தார் தொழுதாரத் தோள்' என்றும், அவனுடைய அழகாலே, சிற்றின்பத்திலே வைராக்கியத்தைப் பிறப்பிக்கையாலே, மகளிர் பால் உள்ள சம்பந்தத்தைக் குலைக்கையும், [5] 'பயிலும்சுட ரொளி' என்ற திருப்பதிகத்திலே அடியார்கட்கு அடிமையாம் தன்மையில் ஊன்றின ஆழ்வாரை, அந்த அடியார்களுடைய தன் மையைக் காட்டும் முறையில் [6] சொல்லப்பட்டவையான அவனு டைய அழகு சீலம் முதலியவைகளாலே, அடியார்கட்கு அடிமைப் பட்டிருத்தலால் உண்டாகும் சுவையை மறந்து, அவனை அநுப விக்கையில் ஆசை கரைபுரண்டு அத்திருப்பதிகத்திற்கு அடுத்த தான 'முடியானே' என்ற திருப்பதிகத்தில் தாமும் தம்முடைய உறுப்புகளும் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிடும்படி பண்ணினுற் போன்று, [7] வேருென்றற்காகப் புகுந்தாலும் தன்னை ஒழியப்

[1] 418ஆம் சூத்திரம். [2] 420ஆம் சூத்திரம்.

[3] மூன்ரும் திருவந்தாதி, 14. [4] இரண்டாந்திருவந்தாதி, 42.

[5] திருவாய். 3 : 7.

[6] 'சொல்லப்பட்டவை' என்றது, 'பயிலும் சுடரொளி மூர்த்தியை, பங்கயக் கண்ணனை பயில இனிய நம் பாற்கடற் சேர்ந்த பரமனை' என்பன போன்று சொல்லப்பட்ட தொடர்மொழிகளை.

[7] 'வேறு ஒன்றற்காகப் புகுந்தாலும்' என்றது, அடியார்களுக்கு அடிமை செய்யப் புகுந்தாலும் என்றபடி.

புறம்பு ஒன்றற்கு ஆள் ஆகாதவாறு பண்ணிக் கண்டவர் தம் மனத்தினைக் கவரும்படியானவன் பக்கலிலே சுழியாறுபடுத்தி, பேற்றின் எல்லை நிலமானஅடியார்களுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையைக் குலைக்கையும் என்றபடி.

இனி, 'தோஷம் க்ஷுத்ரபுருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்' என்றது, இறைவனுடைய அநுபவம் பெறாத துன்பத்தாலே எல்லாக் காலங்களிலும் அவன் பக்கலிலேயே மனம் பதிந்தவர்களாய், [1] 'உண்டு அறியாள் உறக்கம் பேணாள்' என்றும், [2] 'பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பால் ஊட்டாள் பாவை பேணாள்' என்றும் சொல்லுகிறபடியே முன்பு அநுபவித்துப் போந்த இவ்வுலக இன்பங்களாகிற சிற்றின்பங்களில் நெஞ்சு பொருந்தாமையை விளைக்கையும், [3] 'அவன் அடியார் சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய, செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரை நாள் மலரடிக்கீழ்ப் புகுதல், உறுமோ பாவியே னுக்கு?' என்றும், [4] 'தனிமாத் தெய்வத்தளிர் அடிக்கீழ்ப் புகுதல் அன்றி, அவன் அடியார் நனிமாக்கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே' என்றும், இப்படி இறைவ னுடைய கலவி வேண்டாதபடி, அடியார்களுடைய சேர்க்கையா லாய இன்பமே அமையும் என்று இருக்குமவர்களையும், அந்த அடியார்களோடு கூடியிருந்தாலும், அவர்கள்பால் மனம் அற்று, இறைவனை அநுபவிக்கையில் ஆசையாலே [5] 'காண வாராய்' என்றும், [6] 'காணுமாறு அருளாய்' என்றும் கூப்பிடுவது, [7] 'வெஞ்சிறைப்புள்' என்பது போன்றவை களாலே அவர்களை வெறுத்து வார்த்தை சொல்லுவதாம் படி பண்ணுகையாலே புருஷார்த்தத்தின் எல்லை நிலத்திலே மனம் பற்றாதபடி பண்ணுகையும் என்றபடி. (15)

---

[1] திருநெடுந்தாண்டகம், 12.

[2] பெரிய திருமொழி, 5. 5 : 9.

[3] திருவாய். 8. 10 : 3.

[4] திருவாய். 8. 10 : 7.

[5] திருவாய். 8. 5 : 2.

[6] திருவாய். 8. 1 : 2.

[7] திருவாய். 1. 4 : 1.

## 427

நித்திய சத்துருவாயிறே இருப்பது.[1]

என்பது சூத்திரம்.

அவ :—மேல் சூத்திரத்தில் 'க்ஷுத்ரபுருஷார்த்தத்தைக் குலைக்கும்' என்ற இது, இறைவன் தன்பால் அகப்பட்டாரைப் புறம்பு ஒரு விஷயத்தையும் அறியாதவாறு பண்ணுவான் என்று அவனுடைய தன்மையைச் சொல்லுவதற்காகக் கூட்டிக்கொண்ட தித்தனை. 'புருஷார்த்தத்தின் எல்லை நிலத்தைக் குலைக்கும்' என்னுமதுவே இவ்விடத்தில் வேண்டுவது. ஆனபின்பு 'க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்கும்' என்னுமது ஈண்டு இடைப் பிறவரல் ஆகையாலே இங்கு எடுத்துக்கொண்ட அதிகாரத்திற்கு ஏலாததான அதனை விட்டு, இங்கு எடுத்துக்கொண்ட அதிகாரத் திற்கு ஏற்றதான 'புருஷார்த்த காஷ்டையைக் குலைக்கும்' என்னுமதனை மூதலிக்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :— 'நித்திய சத்துருவாயிறே இருப்பது' என்றது, [2] 'சத்துருக்கனன் என்றும் நிலைத்த பகைவர்களான ஐம்பொறி களையும் வென்றவன்' என்கிறபடியே பெருமாளுக்கு மிக இனியனான ஸ்ரீபரதாழ்வானையே தமக்கு உத்தேசியராகப்பற்றி, அவனை அல்லது அறியாதே இருக்கும் ஸ்ரீசத்ருக்நாழ்வான் ஸ்ரீபரதாழ்வானுக்குத் தொண்டு செய்வதற்கு விரோதியான 'ஸ்ரீராம சௌந்தர்யமாகிற நிலைத்த பகையை வென்றிருப்பவன்' என்கையாலே, அடியார்களுடைய கைங்கரியத்திலே ஊன்றி நிற்பவர்களுக்கு நித்தியமான பகையாகவன்றோ பகவானுடைய அழகு இருப்பது என்றபடி.

[3] ஆகையால், இப்படி அழியாத அழகையுடையவனான இறைவன் திறத்தில் உண்டாகும் கலவியும் பிரிவும் ஆகிற இரண்டும், புருஷார்த்தத்தின் எல்லை நிலையைக் குலைக்கும் என்னக் குறை இல்லை என்பது கருத்து.

---

[1] 'இறைவனுடைய அழகு நித்தியசத்துருவாயிறே இருப்பது' என்று 'இறைவனுடைய அழகு என்பதனைக் கொணர்ந்து கூட்டிச் சூத்திரப் பொருளை முடிக்க.

[2] 'ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நঃ' என்பது, ஸ்ரீராமா. அயோத். 1:1.

[3] மேற்சூத்திரப் பொருளை முடித்துக் காட்டுகிறார் 'ஆகையால்' என்று தொடங்கி.

[1] அன்றிக்கே, [2] மேலே கூறிய குணமும் தோஷமும் ஆகிற இரண்டும் செய்யுமவற்றை அருளிச்செய்கிறார், [3] 'குண தோஷங்கள் இரண்டும்' என்று தொடங்கி. குணமாவது, [4] 'இங்கு அது செய்ய ஒண்ணுது' என்றவிடத்தில் சொன்ன, பார்க்கின்ற ஆடவர்களுடைய மனத்தினைக் கவர்கின்றவையான அழகு, சீலம் முதலானவைகள். தோஷமாவது, [5] 'குணம் போலே உபாதேயமாயிருக்கும்' என்றவிடத்தில் சொன்ன [6] 'கடியன் கொடியன்' என்பன போன்றவைகள். 'இரண்டும் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்' என்றது, ஓரொன்றே இரண்டையும் குலைக்கும் என்றபடி.

குணம் இரண்டையும் குலைக்கையாவது, [7] 'மனைப்பால், பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பமெல்லாம், துறந்தார் தொழுதாரத்தோள்' என்பது போன்றவைகளால் சொல்லுகிற படியே க்ஷுத்ரபுருஷார்த்தத்தைக் குலைக்கையும், தன்னுடைய அழகு முதலானவைகளாலே ஆழங்கால்படுத்திப் புருஷார்த்தத்தின் எல்லை நிலமான அடியார்களுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையைக் குலைக்கையும்.

இனி, தோஷம் இரண்டையும் குலைக்கையாவது, குணம் போலே பற்றத் தக்கதாய் [8] 'அவன் என்றே கிடக்கும்'படி

---

[1] 426ஆம் சூத்திரத்திற்கு அங்குக் கூறிய பொருளே அன்றி வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. அங்குக் கூறிய பொருள், குணம் என்பதற்குக் கலவி என்பதும், தோஷம் என்பதற்குப் பிரிவு என்பதும் ஆம். இங்கு, குணம் என்பதற்கு அழகு சீலம் முதலான குணங்கள் என்பதும், தோஷம் என்பதற்குக் 'கடியன் கொடியன்' என்பன போன்று சொல்லப்படுகின்ற குற்றங்கள் என்பதும் ஆம்.

[2] 'மேலே கூறிய' என்பது 419, 420, 421ஆம் சூத்திரங்களில் கூறியுள்ளனவற்றைக் குறிக்கிறது.

[3] இது, 426ஆம் சூத்திரம்.

[4] இது, 419ஆம் சூத்திரம். 'சொன்ன' என்பதனைப் பின்னே வருகின்ற 'அழகு சீலம் முதலானவைகள்' என்றதனோடு கூட்டுக.

[5] இது, 420ஆவது சூத்திரம்.

[6] திருவாய். 5. 3 : 5. [7] இரண்டாந்திருவந். 42.

[8] முற்கூறிய பொருள், அழகு முதலான குணங்கள் என்பது. இங்குக் கூறும் பொருள், குணங்களோடு கூடிய இறைவன் என்பது.

பண்ணுகையாலே, ஊண் உறக்கம் பந்து கழல் முதலான வற்றில் பொருந்தாமையை விளைத்து க்ஷுத்ரபுருஷார்த்தத்தைக் குலைக்கையும், 'சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய, நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப்புகுதல் உறுமோ?' என்னும்படியான புருஷார்த்தத்தின் எல்லை நிலத்தைக் குலைக்கை யும் என்று இங்ஙனே, மேலே போந்த சூத்திரத்திற்குப் பொருள் கூறலுமாம். இப்பொருளுக்கு, இச்சூத்திரத்தில் கூறிய [1]'நித்யசத்ருர்' என்ற தொடர்மொழிக்கு அழகு முதலான வற்றோடு கூடிய இறைவன் என்று பொருள் கொள்க.

இனி, [2]அங்ஙனமும் அன்றிக்கே, குணம், புருஷார்த்த காஷ்டையைக் குலைக்கும்; தோஷம், க்ஷுத்ரபுருஷார்த்தத்தைக் குலைக்கும் என்று இங்ஙனம் பிரித்துக் கூட்டிப் பொருள் கூறு வாரும் உளர். அங்ஙனம் பிரித்துக் கூட்டிப் பொருள் கூறு மிடத்தும், குணம் புருஷார்த்த காஷ்டையைக் குலைக்கும் என்னு மதற்கும், தோஷம் க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்கும் என்னுமதற்கும் முன்பு கூறிய பொருள்களில் கூறிய படியே பொருளாகக்கடவது.

இறைவனுடைய தன்மை இதுவாகையாலே, சரமபர்வமான ஆசாரிய கைங்கரியமாகிற [3]'இதுதான் துர்லபம்' என்று சிம்ஹாவலோகன நியாயத்தாலே மேலே போந்த சூத்திரத்தோடு கூட்டுக. (16)

---

[1] இனி, ஏனையோர் கூறும் வேறும் ஒரு கருத்தை அருளிச் செய்கிறார் 'இனி அங்ஙனமு மன்றிக்கே' என்று தொடங்கி. இப் பொருளுக்கு, 'குணதோஷங்கள்' என்னும் இரண்டனையும் எதிர் நிரல் நிறையாகக் கொள்க. 'அந்தப் பகவத் விஷயத்தின் ஸ்வரூப குணமும் ரூபசௌந்தர்யதோஷமுமாகிற இரண்டிலும் வைத்துக்கொண்டு, குணம், அல்பாஸ்திரமான க்ஷுத்ர புருஷார்த்தங்களைக் கவ்வி நிற்கிற நிலையைக் குலைத்துத் தன் பக்கலிலே வர வசீகரிக்கும். அழகாகிற தோஷம், பகவத் கைங்கர்ய புருஷார்த்த காஷ்டையான ஆசாரிய கைங்கர்யத்தைப் பற்றி நிற்கிற நிலையைக் குலைத்துத் தன் பக்கலிலே சுழித்து அழுத்தும்' என்பது ஆய் வியாக்கியானம்.

[2] 'இறைவனுடைய தன்மை இதுவாகையாலே' என்றது, 418 முதல் 426 முடிய உள்ள சூத்திரங்களில் கூறியவற்றையெல்லாம் தொகுத்துக் கூறியவாறு.

[3] 417ஆம் சூத்திரம். । சிம்ஹாவலோகனம் - சிங்கநோக்கு. கடந்த வழியைத் திரும்பிப் பார்த்தல் சிங்கத்திற்கு இயல்பு.

## 428

இப்படிப் பிராப்பியத்தை[1] அறுதியிட்டால்,
அதற்குச் சத்ருசமாகவேணுமிறே பிராபகம்.

என்பது சூத்திரம்.

**அவ :—**[2] 'சொரூபத்துக்கும் பிராப்பியத்துக்கும் சேர்ந்திருக்கவேணுமிறே பிராபகம்' என்ற சூத்திரம் முதல் ஆன்மாவிற்குத் தக்கதான பேறு, எல்லை நிலமான ஆசாரிய கைங்கரியம் என்று நிர்ணயித்தாராய் நின்ருர் இதுகாறும். இத்தகைய பேற்றிற்குத் தக்கதான உபாயத்தை நிர்ணயம் பண்ணுகிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**' இப்படிப் பிராப்பியத்தை அறுதியிட்டால் அதற்குச் சத்ருசமாகவேணுமிறே பிராபகம்' என்றது, இப்படி ஆசாரியனுக்குச் செய்யும் கைங்கரியமே பேறு என்று அறுதியிட்டால், இந்தப் பேற்றிற்குத் தகுதியாக வேண்டுமிறே அதனைப் பெறுதற்கு உரிய உபாயம் என்றபடி.

இதனுல், ஆசாரிய கைங்கரியம் ஆகிற முடிந்த பேற்றிற்கு ஆசாரியனே உபாயமாக வேண்டும் என்றபடி. (17)

## 429

அல்லாத போது பிராப்பிய பிராபகங்களுக்கு
ஐக்கியம் இல்லை.

என்பது சூத்திரம்.

**அவ :—**' இப்படி அல்லாத போது வரும் குற்றம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியா :—**' அல்லாத போது ' என்றது, இப்படிப் பேற்றிற்கு ஒத்ததாம்படி ஆசாரியனை உபாயமாகக் கொள்ளாமல் ஈச்வரனை உபாயமாகக்கொள்ளும்போது என்றபடி. ' பிராப்பிய பிராபகங்களுக்கு ஐக்கியம் இல்லை' என்றது, பேற்றிற்கும் பேற்றினை அடைதற்குரிய நெறிக்கும் ஒற்றுமை இல்லை என்றவாறு.

---

[1] பிராப்பியம் - பலன். சத்ருசம் - ஒப்பு, சமானம். பிராபகம் - வழி.

[2] 413ஆம் சூத்திரம்.

[1] பிரதமபர்வத்திற்கு உண்டான பலத்திற்கும் பலத்தை அடைதற்கு உரிய நெறிக்கும் உள்ள ஒற்றுமை, சரமபர்வத்திற்கும் ஒக்குமிறே. ஆகையாலேயிறே, [2] பிள்ளை அமுதனார் [3] 'பேறு ஒன்று மற்றில்லை நின்சரண் அன்றி, அப்பேறு அளித்தற்கு ஆறு ஒன்றுமில்லை மற்று அச்சரண் அன்றி', என்று, பலனும் பலனைப் பெறுதற்கு உரிய வழியும் ஆகிற இரண்டும் ஒரே விஷயமாக அருளிச்செய்தது. (18)

## 430

**ஈசுவரனைப் பற்றுகை, கையைப்பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி;[4] ஆசாரியனைப் பற்றுகை, காலைப்பிடித்துக் காரியம்கொள்ளுமோபாதி.**

என்பது சூத்திரம்.

அவ :—'இப்பிரபந்தத்தில் முதலில் இருந்து [5] 'நிவர்த்திய ஞானம்' என்ற சூத்திரம் முடிய, சித்தோபாயமாக எல்லாச் சாஸ்திரங்களாலும் ஒருமுகமாகப் பேசப்படுகின்ற ஈச்வரனை மேலான உபாயமாகவும், ஆசாரியன் அறியாதனவற்றை அறிவித்துத் தெளிவிக்கு முறையால் பேருபகாரகனாகவுமிறே சொல்லிப் போந்தது; இப்போது ஈச்வரனை விட்டு ஆசாரியனே உபாயம் என்னுமளவில் சாஸ்திரங்களுக்கு விரோதமும் தாம் முற்கூறிய கூற்றிற்கு விரோதமும் நேராதோ? ஈச்வரனை உபாயமாகப் பற்றுவதைக்காட்டிலும் ஆசாரியனை உபாயமாகப் பற்றினால் வரும் ஏற்றந்தான் யாதோ?' என்ன, அவற்றிற்கு விடை அருளிச்செய்கிறார் மேல்.

**வியாக் :—**'ஈச்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி' என்றது, ஈச்வரனைப் பற்றுதல் அவன்

---

[1] பிரதமபர்வம் - பகவானைப் பற்றுதல். சரமபர்வம் - ஆசாரியனைப் பற்றுதல்.

[2] பிள்ளையமுதனார் - திருவரங்கத்தமுதனார்.

[3] இராமாநுச நூற்றந்தாதி, 45. 'ஒரே விஷயம்' என்றது, இராமாநுசருடைய திருவடிகளை.

[4] கொள்ளுமோபாதி - கொள்ளுவதைப் போன்றது.

[5] 410ஆம் சூத்திரம்.

கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுதலைப் போன்றது ஆம் என்றபடி. 'ஆசாரியனைப் பற்றுகை காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி' என்றது, ஆசாரியனைப் பற்றுதல் அவ் விறைவனுடைய காலைப்பிடித்துக் காரியம் கொள்ளுதலைப் போன்றதும் ஆம் என்றபடி.

[1]இங்ஙனங் கூறியவாற்றால் ஈச்வரனைக்காட்டிலும் ஆசாரியன் [2]வேறு ஆகான் என்பதும், ஈச்வரனைப் பற்றுவதைக்காட்டிலும் ஆசாரியனைப் பற்றினால் காரியம் பழுதாகாமல், கருதிய பயனைப் பெறலாம் என்பதும் தோன்றுதல் காண்க.

'யாங்ஙனம்?' எனின், ('காலைப்பிடித்து' என்றதனால் ஈச்வரனைக்காட்டிலும் வேறாகாதவன் என்பது தெளிவாம்.) 'ஈச்வரனைப் பற்றுகை, அவன் கையைப்பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி' என்கையாலே, கோடீசுவரனாகவிருப்பான் ஒருவனை வசீகரித்துக் காரியம் கொள்ளுவான் ஒருவன், அவன் கையைப்பிடித்து வேண்டிக்கொண்டு காரியம் கொள்ளப் பார்க்கு மளவில், நீர்மையால் மனம் இரங்கிக் காரியம் செய்யவுமாய், சுவாதந்திரியத்தாலே உதறிவிடவுமாய் இருக்கையாலே, இன்ன படி என்று அறுதியிடவொண்ணாதவாறு போன்று, பற்றினவனை இவனுடைய விரும்பிய காரியம், தன்னுடைய அருளாலே மனம் இரங்கிக் காரியம் செய்யில் பலிக்கும்படியாய், சுவாதந்திரியத்தாலே முறுகிச் செய்யாதொழியில் பலன் கிடையாதபடியாய் இருக்கையாலும்; ஆசாரியனைப் பற்றுகை, 'அவன் காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி' என்கையாலே, அத் தகைய பிரபுவானவன்தன்னையே காலைப்பிடித்து வேண்டிக் கொண்டு காரியம் கொள்ளுமளவில் அருள்வசப்பட்டவனாய்க் காரியம் செய்தல்லது நில்லாமையாலே தப்பாமல் காரியம் சித்திக்குமாறு போன்று, பற்றினவனை இவனுடைய விரும்பிய காரியம் நிச்சயமாகப் பலிக்கும்படியிருக்கையாலும் என்க. (19)

1 'இங்ஙனங்கூறியவாற்றால்' என்றது, 'கையை, காலை' என்று கூறியதால் என்றபடி.

2 'வேறு ஆகான்' என்றது, ஆசாரியனிடத்தில் ஈச்வரன் அதிஷ்டித்து நிற்கும் காரணத்தால்.

## 431

ஆசாரியன் இருவர்க்கும் உபகாரகன்.[1]

என்பது சூத்திரம்.

அவ :—ஆக, 'பேற்றினை அறுதியிட்டு, [2] 'அதற்குச் சத்ருசமாக வேணுமிறே பிராபகம்' என்னுமதனாலே ஆசாரிய கைங்கரியமாகிற முடிவான பேற்றிற்கு, ஆசாரியனே ஒத்த உபாயம் என்னுமதனைச் சொல்லி, [3] அப்படி அன்றிக்கே ஈச்வரனை உபாயமாகக் கொள்ளுமளவில் [4] வரும் விரோதத்தைக் காட்டி, ஆசாரியனுக்குப் பிராப்பியத்வம் ஈச்வரனுடைய சம்பந்தத்தாலேயாமாறு போன்று [5] பிராபகத்வமும் ஈச்வரனுக்கு வேறாகாதவனாகவிருக்கும் காரணத்தால் என்னுமதனையும் ஈச்வரனைப் பற்றுவதைக்காட்டிலும் ஆசாரியனைப் பற்றுவதற்கு உள்ள ஏற்றத்தையும் அருளிச்செய்தார் மேல். இனி, ஆசாரியனை உபாயமாகப் பற்றுமவர்களுக்கு ருசியும் விச்வாசமும் விளைகைக்கு உறுப்பாக, ஆசாரியனுடைய பெருமையைப் பல காரணங்களைக் காட்டிப் பிரகாசிப்பிக்கிறார் மேல். அவற்றுள், இச்சூத்திரத்தால், இறைவன் ஆன்மா என்னும் இருவர்க்கும் ஆசாரியன் உபகாரகன் ஆனமையை அருளிச்செய்கிறார்.

வியாக் :—'ஆசாரியன் இருவர்க்கும் உபகாரகன்' என்றது, இப்படி உபாயமாக மேலே சொல்லப்பட்ட ஆசாரியன், சேஷியான ஈச்வரனுக்கும் சேஷமான ஆன்மாவிற்கும் விருப்பமான பொருள்களைக் கொடுத்த உபகாரகன் என்றபடி. (20)

---

[1] இப்பிரகரணத்தில் முதல் நான்கு சூத்திரங்களால் பிராப்பியத்தை அறுதியிட்டார்.

[2] 428ஆம் சூத்திரம்.

[3] 'அப்படி அன்றிக்கே' என்றது, ஆசாரியனுடைய அபிமானத்தை உபாயமாகக் கொள்ளாவிட்டால் என்றபடி.

[4] வரும் விரோதத்தைக் காட்டியது, 429ஆம் சூத்திரத்தால்.

[5] 430ஆம் சூத்திரம்.

## 432

ஈச்வரனுக்குச் [1] சேஷவஸ்துவை உபகரித்தான்; சேதனனுக்குச் சேஷியை உபகரித்தான்.

என்பது சூத்திரம்.

அவ :—'இருவர்க்கும் இவன் உபகரித்தவை எவை?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஈச்வரனுக்குச் சேஷவஸ்துவை உபகரித்தான்' என்றது, மேன்மேலும் படைத்தும் அவதாரங்கள் முதலானவைகளைச் செய்தும் வசீகரிக்கப் பார்த்தவிடத்திலும் ஓர் ஆன்மவஸ்துவும் தன்னை வந்து சாராமையாலே இழவாளனுகவிருக்கிற ஈச்வரனுக்கு, அடிமையான ஆன்மவஸ்துவை, அறியாதனவற்றை அறிவித்தல் மூலமாகத் திருத்தி, அவனுடைய விருப்பத்திற்குத்தக விநியோகமாம்படி கைப்படுத்திஞன் என்றபடி. 'சேதனனுக்குச் சேஷியை உபகரித்தான்' என்றது, பகவானை அறியத்தக்க ஞானம் இன்மையாலே அநாதிகாலம் இல்லாத பொருளைப்போன்று கிடந்த இவனுக்கு, பகவானுடைய சம்பந்தத்தை அறிவித்துச் சேஷியான அவனைக் காட்டிக்கொடுத்தான் என்றபடி.

இதனால், இறைவன், ஆன்மா என்னும் இருவர்க்கும் உபகாரகன் ஆகையாகிற ஆசாரியனுடைய பெருமை சொல்லப்பட்டது. (21)

## 433

ஈச்வரன்தானும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டிருக்கும்.[2]

என்பது சூத்திரம்.

அவ :—இன்னம் ஒருவகையால் ஆசாரியனுடைய பெருமையைப் பிரகாசிப்பிக்கிறுர் இச்சூத்திரத்தால்.

---

[1] ஈண்டு 'உபகாரம்' என்றது, திருத்தி ஆட்படுத்தியது. சேஷவஸ்து - ஆன்மா. சேஷி - ஏவுகின்றவன்; இறைவன்.

[2] மற்று எல்லாக் காரியங்கட்கும் சங்கல்பம் மாத்திரம் காரணம்; அது வேண்டாதவனும் ஆசாரியனுக இருத்தல் நேரான காரணம்.

வியாக் :—' ஈச்வரன் தானும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட் டிருக்கும்' என்றது, [1] இதற்கு இட்டுப்பிறவாத ஈச்வரன்தானும், ஆசாரியனாகவிருக்கும் தன்மையின் ஏற்றத்தை நோக்கி, இதிலே ஆசை கொண்டிருப்பன் என்றபடி. (22)

## 434

ஆகையிறே, குருபரம்பரையிலே [2] அந்வ யித்ததும், ஸ்ரீகீதையும் அபயப்பிரதானமும் அருளிச் செய்ததும்.

என்பது சூத்திரம்.

அவ :—' அது கண்டது எங்கே?' என்ன, அதனை மூதலிக் கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஆகையிறே - ஆசாரியனாகும் தன்மையை ஆசைப்பட்டிருக்கையாலேயன்றோ, குருபரம்பரையில் அந்வயித் ததும் - [3] ' ஆசாரியனுடைய வம்சத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்; ஆசாரியர்கள் நடுவில் இன்னார் இன்னார் என்று எம்பெருமான் அளவும் அநுசந்திக்க வேண்டும்' என்னும்படி குருபரம்பரையிலே, துவயத்தை உபதேசித்தவனாக வந்து சேர்ந் ததும், ஸ்ரீகீதை அருளிச்செய்ததும் - ஆசாரியனுடைய செயலை ஏறிட்டுக்கொண்டு அருச்சுனனைக் குறித்துத் தத்துவ விவேகம் முதல் சரமோபாயம் முடிய உள்ள அர்த்தங்களைச் சொல்லுவ தான ஸ்ரீகீதை அருளிச்செய்ததும், அபயப்பிரதானம் அருளிச்-

---

[1] இதற்கு - ஆசாரியனாம் தன்மைக்கு.

[2] குருபரம்பரையில் அந்வயித்தது, துவயத்தைப் பெரிய பிராட்டி யார்க்கு ஸ்ரீவைகுண்டலோகத்தில் அருளிச்செய்தது. அந்வயித்தல் - சேர்தல். ஸ்ரீகீதை, அருச்சுனனுக்கு அருளிச்செய்தது. அபயப் பிரதானம் - விபீஷணன்பொருட்டுச் சுக்கிரீவனுக்கு அருளிச்செய்தது. அபயப் பிரதானம் - அச்சமின்மையைக் கொடுத்தல். ஒன்றற்கொன்று உயர்வும் உயர்வின்மையும் நோக்கி, இம்மூன்றையும் இம்முறையில் அருளிச்செய்தார். இன்றேல், ஸ்ரீ கீதைக்கு முன் அபயப்பிரதானத்தை அருளிச்செய்தல் வேண்டும்.

[3] ' ஸசாசார்ய வம்ஶோ ஜ்ஞேயஃ
ஆசார்யாணும் அஸாவஸா வித்யாபகவத்தஃ'
என்பது பிரமாணம்.

செய்ததும் - ஸ்ரீவிபீஷணாழ்வான் நிமித்தமாக, [1] "ஒருமுறை பிரபத்தி செய்தவனுக்கும் 'உமக்கு அடியவன் நான்' என்று கூறுகின்றவனுக்கும் எல்லாப் பிராணிகளிடத்தினின்றும் அச்சம் இன்மையைக் கொடுக்கிறேன்" என்று அபயப்பிரதானம் அருளிச்செய்ததும் என்றவாறு.

இதனால் 'ஈச்வரனும் ஆசைப்படும்படியன்றோ ஆசாரியனாகும் தன்மையின் பெருமை?' என்று ஆசாரியவைபவம் சொல்லிற்றாயிற்று. (23)

## 435

**ஆசாரியனுக்குச் [2] சத்ருச பிரதியுபகாரம் பண்ணலாவது, விபூதி சதுஷ்டயமும் ஈச்வரத் துவயமும் உண்டாகில்.**

என்பது சூத்திரம்.

அவ :—இன்னமும் ஒரு வழியாலே ஆசாரிய வைபவத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஆசாரியனுக்குச் சத்ருச பிரதியுபகாரம் பண்ணலாவது - இரண்டு உலகங்களையும் இரண்டு உலகங்களையுமுடையனான ஈச்வரனையும் தான் இட்டது வழக்காம்படி பண்ணிக் கொடுத்த ஆசாரியன் செய்த உபகாரத்திற்கு ஒத்ததாகப் பிரதியுபகாரம் பண்ணலாவது, விபூதிசதுஷ்டயமும் ஈச்வரத்துவயமும் உண்டாகில் - இப்படியே இன்னமும் இரண்டு உலகங்களும் இவ்வுலகங்களையுடையனாய் இருப்பான் ஓர் ஈச்வரனும் வேறே உண்டாகில் என்றவாறு. [3] 'எவர் தனக்குத் தத்துவ ஞானத்தை

[1] 'ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிச யாசதே
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம்மம.'
என்பது ஸ்ரீராமா. யுத். 18 : 33

[2] சத்ருசம் - ஒத்தது. விபூதி - ஏவப்படும் பொருள்களின் கூட்டம்; மோக்ஷ உலகமும் இந்த உலகங்களும் ஆகிற இரண்டு உலகங்களும். சதுஷ்டயம் - நான்கு. துவயம் - இரண்டு.

[3] 'யோ தத்யாத் பகவத் ஜ்ஞாநம் குர்யாத்தர்மோபஸேவநம்
க்ருத்ஸ்நாம்வா ப்ருதிவீம் தத்யாத் நதத்துல்யம் கதஞ்சந'
என்பது பிரமாணம். சுலோகத்திலே உள்ள 'வா' என்றதனால் நித்திய விபூதியைக் கோடல் வேண்டும்.

உபதேசித்தாரோ, அவருக்கு சிஷ்யன் பணிவிடை செய்யக் கடவன். நித்திய விபூதி லீலாவிபூதி என்ற இரண்டு உலகங்களை யும் அவருக்குக் கொடுக்கவேண்டும்; அங்ஙனம் அவற்றைக் கொடுத்தாலும் அதற்கு ஒப்பு ஆகாது' என்றுநின்றதிறே.

இதனால் ஆசாரியனுடைய, கைம்மாறு செய்தற்கு இடமில்லாத மிகப் பெரியதோர் உபகாரமாகிற பெருமை சொல்லப்பட்டது. (24)

## 436

[1]ஈச்வர சம்பந்தம் பந்தமோக்ஷங்கள் இரண் டுக்கும் பொதுவாய் இருக்கும்; ஆசாரிய சம்பந்தம் மோக்ஷத்துக்கே ஏதுவாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ:**—இன்னமும் ஒரு முகத்தாலே ஆசாரியனுடைய பெருமையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்:**—'ஈச்வர சம்பந்தம்' என்றது, [2]'ஈச்வரனைப் பற்றுகை' என்று மேலே கூறிய, அவனைப் பற்றுதல் வடிவ மான சம்பந்தத்தை. அது, 'பந்தமோக்ஷங்கள் இரண்டுக்கும் பொதுவாய் இருக்கும்' என்றது, கர்மங்களுக்குத் தகுதியாகப் பிறப்பிக்கவும், கிருபை அடியாக முக்தனாக்கவும் வல்ல தன் சுவதந்திரத்தன்மைக்கு எவ்வகையிலும் தடை இல்லாத இறைவ னோடு உண்டான சம்பந்தமாகையாலே, இரண்டற்கும் பொது வாக இருக்கும் என்றபடி. 'ஆசாரிய சம்பந்தம்' என்றது, [3]'ஆசாரியனைப் பற்றுகை' என்று மேலே சொன்ன, அவனைப் பற்றுதல் வடிவமான சம்பந்தத்தை. அது, [4]'மோக்ஷத்துக்கே

[1] ஈச்வர சம்பந்தம் - ஈச்வரனை உபாயமாகப்பற்றுகிற சம்பந்தம். ஆசார்ய சம்பந்தம் - ஆசாரியனை உபாயமாகப்பற்றுகிற சம்பந்தம்.

[2] 430ஆம் சூத்திரம்.

[3] 430ஆம் சூத்திரம்.
அவனை என்றது ஆசாரியனை.

[4] 'க்ஷிபாமி-தள்ளுகிறேன்' என்னும் எண்ணம் இவனுக்கு இன்மை யானும் கிருபையே இவனுக்குத்தன்மை ஆகையாலும் 'பொறுக்க வேண்டும்' என்று இவன் செய்யும் பிரார்த்தனையை அவன் ஒரு நாளும் தள்ள மாட்டான் ஆகையாலும் ஆசாரியனுடைய சம்பந்தம் மோக்ஷத் திற்கே காரணம் என்கிறார்.

ஏதுவாய் இருக்கும்' என்றது, கர்மங்கட்குத் தகுதியாகப் பிறப்பதற்கும் விடுகின்ற சுவதந்திரன் அன்றிக்கே, எல்லா வகையாலும் இவனை உஜ்ஜீவிப்பித்தேவிடுகின்ற எல்லையில்லாத கிருபையையுடையவனுடைய சம்பந்தமாகையாலே, பிறப்பிற்கும் மோக்ஷத்திற்கும் பொதுவன்றிக்கே, பிறப்பு அறுதலுக்கே காரணமாகவிருக்கும் என்றபடி.

இதனால், மோக்ஷத்திற்கே காரணமாதல் ஆகிற தன்மையதான வைபவம் சொல்லப்பட்டது. (23)

## 437

பகவல்லாபம் ஆசாரியனாலே.

என்பது சூத்திரம்.

அவ :—மோக்ஷத்திற்குக் கொண்டு போகும் தன்மையில் ஆசாரியனுடைய பெருமையை அருளிச்செய்தார் மேல். உபகாரம் செய்யும் தன்மையில் ஈச்வரனுடைய முதன்மையினை அருளிச்செய்கைக்காக [1] அடி கொண்டு எழுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'பகவல்லாபம் ஆசாரியனாலே' என்றது, ஒரு காரணம் பற்றாத சேஷியாய், தடையில்லாத சுவதந்திரத்தன்மையுடையனாயிருக்கும் பகவானைப் பெறுதல், [2] அவனுடைய நிறைவினையே பிரயோஜனமாக உடையவனாய்க் கொண்டு, மங்களாசாசனத்திற்கு ஆளாகவேண்டும் என்று தன்னை அங்கீகரித்து, அவனுடைய அன்பிற்கு விஷயமாக்கின தன் ஆசாரியனாலே என்றபடி. (24)

## 438

ஆசாரிய லாபம் பகவானாலே.

என்பது சூத்திரம்.

அவ :—'இத்தகையனான ஆசாரியனைப் பெறுதற்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆசாரிய லாபம் பகவானாலே' என்றது, பகவானைப் பெறுதற்குக் காரணனாய், பெறத்தக்க பேறுகளுள்

---

[1] அடி - மூலம். [2] அவனுடைய - இறைவனுடைய.

உயர்ந்த பேருக உள்ளவனுன [1] ஆசாரியனை அடைதல், [2]'ஈச்வர னுடைய நற்சிந்தையும், அப்படியே தன்னை அறியாமல் வருகின்ற புண்ணியங்களும், இறைவனுடைய அருளும், இறைவ னிடத்தில் வெறுப்பு இன்மையும், இறைவனுக்கு நேர்முக மாதலும், பெரியார்களோடு பேசுதலும் ஆகிற இந்த ஆறும் ஆசாரியனைப் பெறுதற்கு உரிய காரணங்களாம்,' என்கிற படியே ஒரு காரணமும் பற்ருமலே அன்புள்ளவனுய் விசேஷ கடாக்ஷத்திற்குப் [3] பற்ருசுகளையும் தானே கற்பித்துக்கொண்டு விசேஷகடாக்ஷம் பண்ணி, வெறுப்பின்மையைப் பிறப்பித்து, நேர்முகமாதலை உண்டாக்கி, பாகவதர்களுடைய வார்த்தை களைக் கேட்பதிலே விருப்பத்தை மூட்டி, நல்லாசிரியனை அடை விக்கும் நிர்ஹேதுகமான கிருபையையுடையவனுன பகவானுலே என்றபடி. (25)

## 439

[4]உபகார்யவஸ்து கௌரவத்தாலே ஆசாரிய னைக்காட்டிலும் மிகவும் உபகாரகன் ஈச்வரன்.

என்பது சூத்திரம்.

**அவ** :—'ஆனல், இருவரும் உபகாரத்தில் ஒத்தவர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் [5] இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—' உபகார்யவஸ்து கௌரவத்தாலே ஆசாரியனைக் காட்டிலும் மிகவும் உபகாரகன் ஈச்வரன்' என்றது, இருவரும் அருள்செய்த பொருள்களைச் சீர்தூக்கிப் பார்த்தால், ஆசாரிய

---

1 'ஆசாரியனை அடைதல்' என்றது, ஆசாரியனுடைய அபிமானத் திற்கும் முகமலர்ச்சிக்கும் உரியவனுக இருத்தலைக் குறித்தபடி.

2 'ஈஶ்வரஸ்யச ஸௌஹார்த்தம் யத்ருச்சா ஸுக்ருதம் ததா
விஷ்ணோ: கடாக்ஷாத் அத்வேஷம் ஆபிமுக்யஞ்ச ஸாத்விகை:
ஸம்பாஷணம் ஷடேதாநி ஆசார்ய ப்ராப்தி ஹேதவ:'
என்பது பிரமாணம்.

3 பற்ருசுகள் - தான் அறியாத புண்ணியங்கள்; யாதிருச்சிகம் முதலானவை. 484ஆம் சூத். பார்க்க.

4 உபகார்யவஸ்து - உபகரிக்கப்பட்ட - கொடுக்கப்பட்ட பொருள்.

5 437, 438, 439 என்னும் எண்ணுள்ள இம்மூன்று சூத்திரங்களா லும் ஆசாரியனுடைய பெருமையே கூறப்பட்டிருத்தல் உற்று நோக்கு வார்க்குப் புலனுகும்.

ஞலே அளிக்கப்பட்ட வஸ்துவான பிறப்பு வீடு என்னும் இரண்டற்கும் காரணமாய்ப் பிரதம பர்வமுமாய் இருக்கின்ற ஈச்வரனைக்காட்டிலும், பகவாஞலே அளிக்கப்பட்ட வஸ்துவான, மோக்ஷத்திற்கே காரணமாய்ச் சரம பர்வமுமாய் இருக்கிற ஆசாரியனுடைய பெருமையாலே, ஈச்வரனை அளித்த ஆசாரியனைக் காட்டிலும் ஆசாரியனை அளித்த இறைவன் மகா உபகாரகன் என்றபடி. (26)

## 440

[1]ஆசாரிய சம்பந்தம் குலையாதே கிடந்தால், ஞானபக்தி வைராக்கியங்கள் உண்டாக்கிக் கொள்ளலாம் ; ஆசாரிய சம்பந்தம் குலைந்தால், அவை உண்டாஞலும் பிரயோஜனம் இல்லை.

என்பது சூத்திரம்.

அவ :—[2] ‘ மனத்தால் அளவிடக் கூடாதவைகளாயும் வியக்கத்தக்கவைகளாயும் வருத்தமற்று இருப்பவைகளாயும் உள்ள ஞானம், வைராக்கியம் என்னும் இவற்றின் கூட்டமாக இருப்பவரும் இறைவனையே தியானம் செய்கின்றவரும் பக்திக்கு நிலை காணவொண்ணுத கடல் போன்றவரும் ஆன நாதமுனிகளை வணங்குகிறேன் ’ என்கிறபடியே ஆசாரியனுக்கு ஏற்றம் ஞானத்தாலும் பக்தியாலும் வைராக்கியத்தாலுமேயிறே. ‘ அந்த ஞானமும் வைராக்கியமும் பக்தியும் உண்டானவன் இந்த ஆசார்ய சம்பந்தம் நெகிழ நின்ருஞகிலும், [3] அவை பகவானைப் பெறுதற்கு உடலாமோ ?’ என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—‘ ஆசார்ய சம்பந்தம் குலையாதே கிடந்தால் ஞானபக்தி வைராக்கியங்களை உண்டாக்கிக் கொள்ளலாம் ’ என்

---

1 ‘ இச்சூத்திரம், “ இவையிரண்டும் உண்டாஞல் ஆசாரியன் கைபுகுரும் ” (97. சூ) என்றதனேடு மாறுகொளக் கூறலாகாதோ ?’ எனின், ஆகாது ; அச்சூத்திரத்திற்கூறியது ஆத்ம குணங்களின் ஆரம்ப நிலை ; இங்குக்கூறுவது அவை வளர்ந்து முடிந்து நிற்கும் நிலை.

2 ‘ நமோசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாந வைராக்ய ராசயே
நாதாயமுநயே அகாதபகவத் பக்தி ஸிந்தவே.’

என்பது தோத்திரரத்நம், 1.

3 அவை - ஞானம் பக்தி வைராக்கியங்கள்.

றது, மேலே கூறியவாறே மோக்ஷத்திற்குக் கொடுபோமவனு மாய் உபகாரகனுமாய் இருந்துள்ள தன் ஆசாரியன் 'இவன் என் னுடையவன்' என்று அபிமானித்திருக்கும்படி அவன் திருவடி களில் தனக்கு உண்டான சம்பந்தம், தன் மாறுபட்ட நினைவாலே குலையாதபடி அதை நோக்கிக்கொண்டு கிடந்தால், ஆன்மாவிற்கு அணிகலன்களான தத்துவஞானம், சிற்றின்பத்தில் வைராக் கியம், பகவானிடத்தில் பக்தி ஆகிற ஆன்ம குணங்கள் இல்லையா கிலும், அவ்வாசாரியனுடைய அருள் முதலானவைகளாலே காலக்கிரமத்திலே உண்டாக்கிக் கொள்ளலாம் என்றபடி. 'ஆசா ரிய சம்பந்தம் குலைந்தால், அவை உண்டானாலும் பிரயோஜனம் இல்லை' என்றது, எல்லா மங்களங்களுக்கும் காரணமான அந்த ஆசார்ய சம்பந்தம், தன் மாறுபட்ட நினைவாலே குலைந்தால், ஞானம் வைராக்கியம் பக்தி என்னும் [1] அவை முற்பிறவியிற் செய்த புண்ணியத்தாலே சிறிது உண்டாயிற்றாகிலும், பகவா னுடைய அங்கீகாரத்திற்குக் காரணம் ஆகாமையாலே பயன் அற்றவையாம் என்றபடி. (27)

## 441

தாலி கிடந்தால் பூஷணங்கள் பண்ணிப் பூணலாம்; தாலிபோனால் பூஷணங்கள் எல்லாம் அவத்யத்தை விளைக்கும்.[2]

என்பது சூத்திரம்.

அவ:—'பயன் இல்லாமை மாத்திரமே அன்று; தாழ்வினை யும் விளைக்கும்' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—'தாலி கிடந்தால் பூஷணங்கள் பண்ணிப் பூண லாம்' என்றது, கற்புடையளான ஒரு பெண்ணிற்குக் கணவனு டைய சம்பந்தத்திற்கு அறிகுறியான தாலி ஒன்றும் போகாமல் கிடந்தால், அணிகலன்கள் இல்லையேயாகிலும், [3] முதல் உண் டானபோது பண்ணிப் பூண்டுகொள்ளலாயிருக்கும் என்றபடி. 'தாலிபோனால் பூஷணங்கள் எல்லாம் அவத்யத்தை விளைக்கும்' என்றது, 'இத்துணை அணிகலன்கள் உளவே' என்று நினைத்

[1] 'அவை உண்டானாலும்' என்றதற்கு எழுதியுள்ள வியாக்கி யானத்தை உற்று நோக்குக.

[2] அவத்யம் - தாழ்வு. [3] முதல் - செல்வம்.

துத் தாலியை வாங்கிப் போகட்டால், விதவையினுடைய அலங்காரம் போன்றது ஆகையாலே அணிந்த அணிகலன்கள் எல்லாம் தாழ்வினுக்கு இடமாக இருப்பனவாம் என்றபடி.

இதனால், ஆன்மாவிற்கு அணிகலன்களான ஞானவைராக்கிய பக்திகள் இல்லையேயாகிலும், ஆசாரியனுடைய சம்பந்தம் மாத்திரம் குலையாமல் கிடந்தால், அவன் அருளாலே காலக்கிரமத்திலே அவற்றை உண்டாக்கிக்கொள்ளலாம். ஆசாரிய சம்பந்த மாத்திரம் குலைந்தால், ஆன்ம குணங்களான ஞானம் வைராக்கியம் பக்தி என்னும் இவையெல்லாம் உண்டானாலும் அவை உயர்விற்குக் காரணம் அன்றிக்கே தாழ்விற்கு இடமாய்விடும் என்றபடி. (28)

## 442

[1]தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்தியன் தானே, நீரைப் பிரிந்தால் அத்தை உலர்த்துமா போலே, சொரூப விகாசத்தைப் பண்ணும் ஈச்வரன்தானே, ஆசார்ய சம்பந்தம் குலைந்தால் அத்தை வாடப்பண்ணும்.

என்பது சூத்திரம்.

அவ :—'ஆசாரிய சம்பந்தம் கிடந்தாலும் சொரூபத்தை மலரச் செய்கிறவன் ஈச்வரன் அன்றோ? அவ்வாசாரிய சம்பந்தம் குலைந்ததாகிலும் ஆன்ம குணங்கள் பலவற்றையுமுடைய இவனுக்கு ஈச்வரன் சொரூபத்தை மலரச் செய்யானோ?' என்கிற வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்தியன் தானே நீரைப் பிரிந்தால் அத்தை உலர்த்துமாபோலே' என்றது, [2]'சலசம்' என்னும்படி தண்ணீரிலே பிறந்து, தண்ணீரே தாரகமாகவிருக்கும் தாமரைக்குச் [3]'செங்கமலம் அந்தரம் சேர் வெங்கதிரோற்கு அல்லால் அலராவால்' என்னும்படி எப்பொழுதும் மலரச்செய்கின்றவனாய்ப் போரும் சூரியன்தானே, தனக்குத் தாரகமாகவிருக்கிற தண்ணீரைப் பிரிந்தால், அந்தத் தாம

---

[1] சொரூபம் - ஆன்மா. விகாசம் - மலரச்செய்தல்.

[2] சலசம் - தண்ணீரிலே பிறந்தது; சம் - பிறத்தல்.

[3] பெருமாள் திருமொழி, 5 : 6.

ரையை மலர்த்தாத மாத்திரம் அன்றிக்கே, உலர்த்தவும் செய்யு மாறு போலே என்றபடி.

'சொரூப விகாசத்தைப் பண்ணும் ஈச்வரன்தானே ஆசாரிய சம்பந்தம் குலைந்தால் அத்தை வாடப் பண்ணும்' என்றது, ஆசாரியனுடைய சம்பந்தத்தாலே [1] சத்தை பெற்றுத் தன்னு டைய சத்தைக்குத் தாரகமான அவ்வாசாரிய சம்பந்தம் குலை யாதே நிற்குமளவில், இவனுடைய சொரூபத்தை ஞான வளர்ச்சி மூலமாக [2] 'உள்ள உலகளவும் யானும் உளன் ஆவன்' என் னும்படி மலரச் செய்யும் ஈச்வரன்தானே, தன்னுடைய சத்தைக் குத் தாரகமான ஆசாரியனுடைய சம்பந்தத்தைத் தனது மாறு பட்ட எண்ணத்தாலே இவன் குலைத்துக் கொண்ட காலத்தில், தான் மலர்த்த வேண்டிய அந்தச் சொரூபத்தை மலர்த்தாத மாத் திரமன்றிக்கே, நாளுக்கு நாளும் ஞானம் கெட்டுக் குறைந்து போம்படி செய்வான் என்றபடி. [3] 'நீரைப் பிரிந்த தாமரை யைச் சூரியன் உலர்த்துகிறானே ஒழிய, மலர்த்துவதில்லை; அது போன்று, ஆசாரியனுடைய சம்பந்தத்தைக் குலைத்துக்கொண்ட கெட்ட அறிவையுடைய ஒருவன் விஷயத்தில் நாராயணன் விகா ரத்தை அடைகிறான் - சொரூபத்தைக் குலைக்கிறான்' என்னக் கடவதிறே. (29)

## 443

[4]இத்தை ஒழியப் பகவத் சம்பந்தம் துர்லபம்.

என்பது சூத்திரம்.

அவ:—'இங்ஙன் சொல்லுகிறது என்? இவ்வாசாரிய சம்பந் தம் குலைந்ததாகிலும், [5] 'ஒழிக்க ஒழியாத' பகவானுடைய

---

[1] சத்தை - இருப்பு; உளதாந்தன்மை.

[2] பெரிய திருவந்தாதி, 76.

[3] சூத்திரப் பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நீரைப்பிரிந்த' என்று தொடங்கி.

'நாராயணோபி விக்ருதிம் யாதி குரோ: ப்ரச்யுதஸ்ய துர்புத்தே:
கமலம் ஜலாதபேதம் ஶோஷயதி ரவிர் நதோஷயதி.'

என்பது பிரமாணம்.

[4] 'இத்தை' என்றது, ஆசாரிய சம்பந்தத்தை.

[5] திருப்பாவை, 28.

சம்பந்தம் உஜ்ஜீவனத்திற்கு உடலாகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இத்தை ஒழியப் பகவத் சம்பந்தம் துர்லபம்' என்றது, அநாதிகாலமாகவே இருப்பதாக இருக்கச்செய்தேயும், ஆசாரியன் உணர்த்துவதற்கு முன்பு இல்லாததைப் போன்றதாகி, அவன் உணர்த்தின பின்பு இவனுக்குக் காரியத்தைச் செய்யக்கூடியதாகவிருக்கிற அந்தப் பகவானுடைய சம்பந்தமானது, இவ்வாசாரிய சம்பந்தம் குலைந்த போது, இவ்வாசாரிய சம்பந்தம் காரணமாக வந்த அந்தப் பகவத் சம்பந்தமும் குலைந்துபோமாகையாலே, இவ்வாசாரிய சம்பந்தம் இல்லாவிட்டால் பகவத் சம்பந்தம் இவனுக்குக் கிடையாது என்றபடி.

ஆகையால், 'இது போயிற்றுகிலும் அது நமக்கு உஜ்ஜீவனத்திற்கு உடலாகும்' என்றிருக்க விரகு இல்லை என்பது கருத்து. (30)

## 444

'இரண்டும் அமையாவோ? நடுவில் பெருங்
குடி என்?' என்னில்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி [1] ஆசாரியனுடைய சம்பந்தத்தை ஒழியப் பகவானுடைய சம்பந்தம் கிடையாமையாலே, ஆன்ம உஜ்ஜீவனத்திற்கு இரண்டும் வேண்டும் என்னுமதனை அருளிச்செய்த பின்பு, பாகவதர்களுடைய சம்பந்தமும் அந்த ஆசாரிய சம்பந்தத்தைப் போன்றே அவசியம் வேண்டற்பாலது என்னுமதனை அருளிச்செய்வதற்காக, அது சம்பந்தமான வினவினை அநுவதிக்கிறார் இச்சூத்திரத்தால்.

[1] 'ஆசாரியலாபம் பகவானாலே' என்ற சூத்திரத்தின் வியாக்கியானத்தில் பிரமாணமாக எடுத்துக்காட்டப்பட்ட சுலோகத்தில் 'ஸாத்விகைஃ ஸம்பாஷணம்' என்பது பாகவதர்களுடைய சேர்க்கையை ஆசாரியனுடைய சம்பந்தத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்டிருப்பதனால் அதனை உட்கொண்டு இச்சூத்திரம் எழுகின்றது. இரண்டு – பகவத் சம்பந்தமும் ஆசாரிய சம்பந்தமும். நடுவில் பெருங்குடி - கிராமங்களில் நடுவில் இருக்கும் தலைவர்களான கிராமணிகள். இங்கே பாகவதர்களைக் குறித்தபடி.

**வியாக் :**—'இரண்டும் அமையாவோ நடுவில் பெருங்குடி என் என்னில்' என்றது, ஆன்ம உஜ்ஜீவனத்திற்கு, பகவத் சம்பந்தத்தை நிலைநிறுத்துகிற ஆசாரிய சம்பந்தமும், அதனாலே நிலைநிறுத்தப்பட்ட பகவானுடைய சம்பந்தமும் ஆகிற இரண்டும் போதியனவாகாவோ, பேற்றிற்கு [1] மத்தியம பர்வமாகச் சொல்லப் பட்டதாகையாலே, நடுவில் பெருங்குடி போலே இருக்கிற பாக வதர்களோடு [2] 'பாகவதர்களோடு வார்த்தை' என்கிற சம்பந் தம் எந்தக் காரணத்தைக்கொண்டு வேண்டுகிறது என்னில் என்றபடி. (31)

## 445

[3] கொடியைக் கொள்கொம்பிலே துவக்கும் போது சுள்ளிக்கால் வேண்டுமா போலே, ஆசா ரிய அந்வயத்துக்கும் இது வேணும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே வினவிய வினவிற்கு விடை அருளிச்செய் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'கொடியைக் கொள்கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமாபோலே' என்றது, தான் படர்வதற்குத் தக்கது ஒரு பந்தலை விரும்பி வளர்வது ஒரு கொடியை அது படர்வதற்கெல்லாம் இடம் கொடுக்கத்தக்க பெரியதொரு பந்த லிலே சேர்க்கும்போது, முதலிலேயே அதனோடு சேர்க்கப் போகாமையாலே, தறைப்படாமல் முந்தறத் [4] தான் இதற்குப் பற்றுக்கோடாகக்கொண்டு அணுகி நின்று தன்னுடைய சேர்க்கை மூலமாகக் கொள்கொம்பிலே பற்றச் செய்யும் சுள்ளிக் கால் வேண்டுமாறு போலே என்றபடி.

'ஆசார்ய அந்வயத்துக்கும் இது வேணும்' என்றது, [5] கோல்தேடி ஓடும் கொழுந்து போன்று நேர்முகனை இச்

---

[1] 415ஆம் சூத்திரம் பார்க்க.

[2] இந்தச் சுலோகப்பகுதியை மேலே காண்க.

[3] அந்வயம் - சேர்க்கை. இது - பாகவதர்களுடைய சம்பந்தம். கொடியைப் போன்றவன் சேதனன். கொள்கொம்பு போன்றவள் ஆசாரியன். சுள்ளிக்கால் போன்றவன் பாகவதன்.

[4] தான் - சுள்ளிக்கால் [5] இரண்டாந்திருவந். 27.

சேதனன், தன்னைப்பற்றின அடியார்கள் கேடு உறாமல் உயர் நிலையையடையச் செய்யும் திண்ணிய பற்றுக்கோடாக இருக்கிற ஆசாரியன் திருவடிகளிலே சேரும்போது, முதலிலே அவனுடைய சேர்க்கை கிடைப்பது அரிதாகையாலே, முந்தறத் தாங்கள் அண்மையிலே நின்று தங்களோடே இணக்குவித்து அவ்வழியாலே ஆசாரிய விஷயத்திலே சேர்க்கும் பாகவதர்களுடைய சம்பந்தம் அவசியம் வேண்டப்படுவதாம் என்றபடி.

'இப்படி ஆசாரியனைச் சேர்தற்கு அடி பாகவதர்களாகில், [1]'ஆசாரியலாபம் பகவானாலே' என்பான் என்?' என்னில், அதற்குக் குறை இல்லை; பாகவதர்களுடைய சேர்க்கைக்கு அடி அவனாகையாலே. [2]ஆபிமுக்கியம் அளவாகத் தானே கிருஷி பண்ணிக்கொண்டு வந்து, பின் பாகவதர்களோடே இணக்கி, அவ்வழியாலேயிறே அவன் ஆசாரியனிடத்திலே சேர்ப்பிப்பது. இவை இத்தனையும் இவர் அருளிச்செய்த உவமையிலே தெளியக் காணலாம்.

'யாங்ஙனம்?' என்னில், கொடியினிடத்தில் சேதனனையும், கொள்கொம்பினிடத்தில் ஆசாரியனையும், சுள்ளிக்காலினிடத்தில் பாகவதர்களையும் அருளிச்செய்கையாலே. பயிர்த்தொழில் செய்பவனாய் இருப்பான் ஒருவன், தன்னுடைய பயனுக்காக முதலிலே வித்தை இட்டு முளைப்பித்துக் கொழுந்து உண்டாகுமளவும் வளர்த்துப் போந்ததொரு கொடியை, 'இதற்கு இனி ஓர் கொள்கொம்பு வேண்டும்' என்று தானே கொள்கொம்பையும் தேடி, அதிலே சென்று ஏறுகைக்குச் சுள்ளிக்காலும் நட்டு, இவ்வழியாலே கொள்கொம்பிலே சேர்க்குமாறு போன்று, எல்லாப் பொருள்களுக்கும் சேஷியான சர்வேச்வரன் தன்னுடைய பயனுக்காக இவனை முதலிலே படைத்து, [3]'ஈஶ்வரஸ்யச ஸௌஹார்த்தம்' என்ற சுலோகத்திற்கூறியபடியே முறையாக ஆபிமுக்கியம் அளவும் விளைத்து, இவனுக்கு ஓர் ஆசாரியனையும் 'இன்னான்' என்று தானே திருவுள்ளம்பற்றி, அவனோடே சேர்ப்பிக்கும் பாகவதர்களோடே முதலில் சேர்ப்பித்து, அவ்

---

[1] 438ஆம் சூத்திரம்.

[2] 'ஆபிமுக்கியம் அளவாக' என்ற இவ்விடத்தில் 438ஆம் சூத்திரம் பார்க்க. ஆபிமுக்கியம் - நேர்முகமாதல்.

[3] இந்தச் சுலோகத்தை 438ஆம் சூத்திர வியாக்கியானத்தில் காண்க.

வழியாலே ஆசாரியனிடத்தில் சேர்ப்பிக்கும் என்னுமிடம் தோற்றுகையாலே.

கொள்கொம்பிலே ஏறவிட்ட குடியானவனுக்கே அந்தக் கொடியால் ஆய பிரயோஜனம் ஆமாறு போன்று, ஆசாரியன் விஷயத்தில் ஈச்வரனால் சேர்ப்பிக்கப்பட்ட சேதனனால் ஆய பிரயோஜனமும் ஈச்வரனுடையதே என்னுமிடமும் தெளிவு.

[1] இனி அறிவில்பொருளான கொள் கொம்புபோல அன்றியே, சேதனர்களுள் உத்தமனான இவ்வாசாரியன் தானும், பிறருடைய நன்மையிலேயே நோக்கு உள்ளவனாகையாலே, தனக்குச் சேஷியான ஈச்வரனுடைய பிரயோஜனத்தையே தனக்கும் பிரயோஜனமாக நினைத்திருக்குமிறே. (32)

## 446

[2] 'ஸ்வ அபிமானத்தாலே ஈச்வர அபிமானத்தைக் குலைத்துக்கொண்ட இவனுக்கு, ஆசாரிய அபிமானம் ஒழியக் கதியில்லை' என்று பிள்ளை பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—இனி, 'ஸ்வ அபிமானத்தாலே' என்னும் இச் சூத்திர முதல் 'ஆசாரிய அபிமானமே உத்தாரகம்' என்னும் சூத்திரமுடிய, இப்படி, 'பாகவதர்கள் முன்னாகப் பற்றப்படும் ஆசாரியனுடைய அபிமானமே உஜ்ஜீவனத்திற்குத் தக்க உபாயம்' என்று, இப்பிரபந்தத்தின் கருத்துப் பொருளைத் தெளிவுபடுத்துகிறார். பெருவிலையதான ஆபரணத்திற்கு

1 ஆசாரியனைக் கொள்கொம்பாகக் கூறினாரேனும், ஆசாரியனுக்கு உள்ள சிறப்பினை அருளிச்செய்கிறார் 'இனி' என்று தொடங்கி. 'பிறர்' என்றது இறைவனை. 'நம்பினேன் பிறர் நன் பொருள் தன்னையும்' (கண்ணிநுண்சிறுத்) என்றவிடத்துப் பிறர் என்றதன் பொருளை ஈண்டு நோக்குக.

2 ஸ்வஅபிமானம் - தான் என்னும் செருக்கு. ஈச்வர அபிமானம் - ஈச்வரனுடைய அருள். பிள்ளை - வடக்குத் திருவீதிப்பிள்ளை. 'பிள்ளை' என்பது பெரியார் என்னும் பொருளது. 'கணபுரம் கைதொழும் பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுபவோ?' என்ற இடத்துப் பிள்ளை என்னும் சொல் இப்பொருளதாதல் காண்க.

நாயகக்கல் போலே ஆயிற்று, வசன பூஷணத்திற்கு [1] இந்த இடம் நாயகமணியாய் இருக்கும்படி. இப்பிரகரணத்தில் இப் பொருளை அருளிச்செய்கைக்காகவிறே மேலடங்கலும் அவதாரிகை இட்டுக்கொண்டு வந்தது. இனி, [2] இதற்குமேல் உள்ள பாகமெல்லாம் இதனுடைய நிஷ்டையை நிலைநிறுத்துகிறது. அவற்றுள், இவ்வர்த்தம் [3] சத்சம்பிரதாய சித்தம் என்று எல்லாரும் நம்புதற்கு உடலாக, இவ்வர்த்தம் [4] ஆப்தருடைய உபதேசத்தாலே தமக்குக் கிடைத்தது என்னுமிடத்தை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக்** :—' ஸ்வஅபிமானத்தாலே...கதியில்லை என்று பிள்ளை பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும் ' என்றது, ' அநாதி காலமாக ' நானே எனக்கு நிர்வாககன் ' என்று இருக்கும் தன்னுடைய [5] செருக்காலே, ' இவன் நமக்குச் சேஷம்; இவன் காரியம் நம்முடையது ' என்று இவனை உஜ்ஜீவிப்பிக்கைக்கு உடலான ஈச்வரனுடைய அருளை அழித்துக் கொண்ட இவனுக்கு, தீநெறிகளையே பற்றுசாக அங்கீகரித்து, இவனுடைய செயல்களைச் செய்துபோரும் பேரருளாளனான ஆசாரியன், ' இவன் நம்முடையவன் என்று அபிமானித்திருக்கும் அந்த அபிமானம் ஒழிய உஜ்ஜீவன உபாயம் வேறு இல்லை ' என்று, எல்லாச் சாஸ்திரங்களுடைய சாரப்பொருளை அறிந்த தலைவர்களுள் தலைவரான [6] நம்பிள்ளை திருவடிகளில்

---

[1] ' இந்த இடம் ' என்றது, இச்சூத்திர முதல் ' ஆசாரிய அபிமானமே உத்தாரகம் ' என்றது முடிய உள்ள சூத்திரங்களை நோக்கியது.

[2] ' மேல் உள்ள பாகமெல்லாம் ' என்றது, 450ஆம் சூத்திரத்திற்கு மேலே உள்ள சூத்திரங்களை.

[3] சத்சம்பிரதாயம் - பிரதாய: - சிறந்ததானம்; சம்பிரதாய: - நல்ல சிறந்ததானம்; சத்சம்பிரதாய: - பரம்பொருளையறிந்த பெரியோர்களால் கொடுக்கப்பட்ட நல்ல சிறந்த தானம். ' சத் ' என்றது, நம்மாழ்வாரை. ' தானம் ' என்றது, அவர் உபதேசத்தை.

[4] ஆப்தர் - நம்பத்தக்க பெரியோர்.

[5] செருக்காலே, அழித்துக்கொண்ட இவனுக்கு என்று மேலே கூட்டுக.

[6] நம்பிள்ளை - வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு ஆசாரியர். வடக்குத் திருவீதிப்பிள்ளை இந்நூலாசிரியருக்குத் திருத்தந்தையாரும் ஆசாரியருமாவர்.

பழுக்கத்தொண்டு செய்து அந்த ஆசாரியருக்கே பரதந்திரராய்ச் சகல சாஸ்திரங்களினுடைய தாத்பரியங்களையும் அவர் அருளிச் செய்யக் கேட்டு அப்பொருளிலேயே நிலை நின்றவராய் [1] இருக்கும் பிள்ளை, தஞ்சமாகப் பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும் என்றபடி.

ஆகையால், ஆசாரியனுடைய திருவருளே, இவ்வான்மா உஜ்ஜீவிப்பதற்கு உரிய உபாயம் என்பது கருத்து. (33)

## 447

ஸ்வ ஸ்வாதந்திரிய பயத்தாலே பக்தி நழுவிற்று.

என்பது சூத்திரம்.

**அவ :—**' இப்படி 'ஆசாரிய அபிமானம் ஒழியக் கதி இல்லை' என்பான் என்? சாஸ்திரங்களிலே சொல்லப்படுகின்றவையான பக்தி முதலான உபாய விசேடங்கள் உளவே?' என்ன, இஃது ஒழிந்தவை எல்லாம் இவனுக்கு உபாயம் அன்றிக்கே நின்றமையை அடைவே அருளிச்செய்கிறார் மேல். அவற்றுள், முதலில் பக்தி, உபாயம் அன்றிக்கே நின்றமையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**' ஸ்வ ஸ்வாதந்திரிய பயத்தாலே பக்தி நழுவிற்று' என்றது, பகவானை அடைவதற்குச் சாதனமாக விதிக்கப் பட்டதாய், தன் முயற்சியினாலே செய்யத்தக்கதான பக்தி, பகவானுக்கே பரதந்திரப்பட்டிருப்பதற்கு விரோதியான தன் ஸ்வாதந்திரியத்தை உண்டாக்கும் என்னும் அச்சத்தாலே இவனுக்கு உபாயம் அன்றியிலே நழுவி நின்றது என்றபடி. (34)

## 448

பகவத் ஸ்வாதந்திரிய பயத்தாலே பிரபத்தி நழுவிற்று.

என்பது சூத்திரம்.

**அவ :—**பின்பு, பிரபத்தி, உபாயம் அன்றியே நின்றமையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] 'இருக்கும்' என்பதற்குப்பின் 'நம்முடைய ஆசாரியரான' என்ற ஒரு சொற்றொடர் இப்பொழுது உள்ள அச்சுப்பிரதிகளில் காணப்படுகின்றது.

வியாக் :—'பகவத் ஸ்வாதந்திரிய பயத்தாலே பிரபத்தி நழுவிற்று' என்றது, தன்னுடைய பாரதந்திரியத்திற்குத் தக்கதாய் மகாவிசுவாசத்தின் வடிவமான பிரபத்தி, பிறப்பித்தற்கும் மோக்ஷத்தைக் கொடுத்தற்கும் உரியவனான பகவான் தன் [1] சுவாதந்திரியத்தாலே, மீளவும் கர்மங்கட்குத் தகுதியாக, வைத்த சிந்தை வாங்குவித்துப் பிறக்கும்படி செய்யில் செய்வது என்?' என்கிற மிகப் பெரிய அச்சத்தாலே இவனுக்கு உபாயம் அன்றியிலே நழுவி நின்றது என்றபடி. (35)

## 449

[2] ஆசாரியனையும் தான் பற்றும் பற்று, அகங்கார கர்ப்பமாகையாலே, காலன் கொண்டு மோதிரம் இடுமோபாதி.

என்பது சூத்திரம்.

அவ :—பின்பு, ஆசாரியன் திறத்தில் தான் பற்றும் பற்று, உபாயம் அன்றிக்கே ஒழிந்தமையை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—'ஆசாரியனையும் தான் பற்றும் பற்று அகங்கார கர்ப்பமாகையாலே காலன் கொண்டு மோதிரம் இடுமோபாதி' என்றது, ஆசாரியனையும் உபாயமாகத் தான் பற்றுகிற பற்றானது, தானே பலனை அநுபவிக்கிறவனுமாய், தானே கர்த்தாவுமாய், ஆன்ம சொரூபத்தினை அழிக்கக்கூடியதாகவிருக்கிற அகங்காரத்தை உள்ளே உடையதாயிருக்கையாலே, தனக்கு அழிவினைச் செய்கின்ற காலனை வாங்கி, அந்தப் பொன்னாலே மோதிரத்தைச்

---

1 'சுவாதந்திரியத்தாலே பிறக்கும்படி செய்யில் செய்வது என்?' என்று கூட்டுக. வைத்த சிந்தை - இறைவனிடத்தில் வைத்த சிந்தையை. வாங்குவித்து - நீங்கச் செய்து.

2 'ஆசாரியனையும்' என்புழி, உம்மை உயர்வு சிறப்பு. கர்ப்பம் - உள்ளே அடக்கிக்கொண்டிருப்பது. காலன் - யமன். இடுமோபாதி - இடுவதைப்போன்றது. பொன்னால் செய்யப்பட்ட யமனுடைய வடிவை ஒருவன் தானம் செய்ய, அதனை வாங்கினவன், யமன் வடிவில் அமைந்த அப்பொன்னை உருக்கி மோதிரமாகச் செய்து அதனை விரலில் அணிந்துகொண்டால் அச்செயல் எத்துணைத் தாழ்வினை விளைக்கும்? அது போன்று என அவ்வுவமையை விரித்துக்கொள்க.

செய்து அணிந்துகொண்டால் அது கேட்டினை உண்டாக்குமாறு போன்று, தன்னுடைய சொரூபத்திற்குத் தாழ்வினை உண்டாக்கும் என்றபடி. ஆகையால் இதுவும் உபாயம் அன்றியே நின்றது என்பது கருத்து. (36)

## 450

ஆசாரிய அபிமானமே உத்தாரகம்.[1]

என்பது சூத்திரம்.

அவ :—[2]பாரிசேடத்தாலே, மேலே தாம் அருளிச்செய்த அதுவே உபாயம் என்று தலைக்கட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'ஆசாரிய அபிமானமே உத்தாரகம்' என்றது, மோக்ஷத்திற்குச் சாதனங்களாகச் சாஸ்திரங்களால் சொல்லப்பட்டவைகளான பக்தி முதலானவைகள் ஒன்றும் உபாயம் அன்றியே நின்ற பின்பு, பேரருளாளனைக் காரணம் பற்றாமலே தன்னை அங்கீகரித்தருளிக் கேடு நேராமல் நோக்கிக்கொண்டு போரும் ஆசாரியன் 'இவன் நம்முடையவன்' என்று இருக்கும் அந்த அபிமானமே இவனைப் பிறவிப் பெருங்கடலினின்றும் கரையேறச் செய்யும் என்றபடி.

ஆக, [3]'ஸ்வதந்திரனை உபாயமாகத் தான் பற்றின போதிறே' என்று தொடங்கி அருளிச்செய்து கொண்டுவந்த சரமோபாய சொரூபத்தை உள்ளபடி [4]சோதித்து அறுதியிட்டருளினாராயிற்று. (37)

---

[1] உத்தாரகம் = மோக்ஷத்தைக் கொடுப்பது.

[2] 'பாரிசேடத்தாலே தலைக்கட்டுகிறார்' எனக் கூட்டுக. பாரிசேடம் = எஞ்சியது; எஞ்சி நின்றதனால் உணரப்படுவதோர் உத்தி; பிரமாணங்களுள் ஒன்று.

[3] 411ஆம் சூத்திரம்.

[4] சோதித்து - பூர்வபக்ஷங்களை நிராகரித்து.

## 451

**[1]கைப்பட்ட பொருளைக் கைவிட்டுப் புதைத்த பொருளைக் கணிசிக்கக் கடவன் அல்லன்.**

என்பது சூத்திரம்.

**அவ :—**பின்னர், இவ்வுபாயத்திலே நிலைநிற்கிற அதிகாரிக்கு, செய்யத்தக்க விஷயங்களை விரிவாக அருளிச்செய்கிருர். அவற்றுள் முன்னர் எளிதிற்கிடைக்கின்ற ஆசாரியனை விட்டு அரிதிற்கிடைக்கின்ற பகவானை இச்சிக்கக் கடவன் அல்லன் என்பதனை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'கைப்பட்ட பொருளைக் கைவிட்டுப் புதைத்த பொருளைக் கணிசிக்கக் கடவன் அல்லன்' என்றது, கையிலே இருக்கிற செல்வம் போன்று மிக எளியனாகவிருக்கிற ஆசாரியனைக் குறைய நினைத்து, விருப்பம் இன்மையாலே கைவிட்டு, பூமியிலே பிறர் புதைத்து வைத்த நிதி போலே, எட்டப்படாமையால்[2] 'அரும்பொருள்' என்னும்படி கிடைத்தற்கு அருமையான பகவானை தனக்குப் பாதுகாவலாக விரும்பக் கடவன் அல்லன் என்றபடி.

[3]'மிக எளியனான தன் ஆசாரியனை விட்டு எவன் அரியவனான பகவானை வணங்குகிருனே அந்த மூடன் கைப்பட்ட பொருளை விட்டுப் பூமியில் புதைக்கப்பட்டிருக்கிற பொருளைத் தேடுகிறவன் போன்றவன் ஆவான்' என்றும், [4]'பற்று குருவை' என்று தொடங்கி, 'தன், கைப்பொருளைவிட்டு ஆரேனும் காசினியில் தாம்புதைத்த, அப்பொருள் தேடித் திரிவான் அற்று' என்றும் சொல்லக் கடவதிறே. (38)

---

[1] இச்சூத்திரம் பிறிது மொழிதல் என்னும் அணி. 'கைப்பட்ட பொருள்' என்றது, இங்கு ஆசாரியனைக் குறிக்கிறது. புதைத்த பொருள் என்றது, சர்வேச்வரனைக் குறிக்கிறது. கணிசித்தல் - விரும்புதல்.

[2] 'ஸுலபம் ஸ்வகுரும் த்யக்த்வா துர்லபம் ய உபாஸதே
லப்தம் த்யக்த்வா தநம்மூடோ குப்தமந்வேஷதிக்ஷிதௌ.'

என்பது பிரமாணம்.

[3] ஞானசாரம், 34.

## 452

[1] விடாய் பிறந்த போது கரஸ்தமான உதகத்தை உபேக்ஷித்து, ஜீமூத ஜலத்தையும் சாகர சலிலத்தையும் சரித்சலிலத்தையும் வாபீ கூபபயஸ்ஸுக்களையும் வாஞ்சிக்கக் கடவன் அல்லன்.

என்பது சூத்திரம்.

அவ:—இன்னமும் ஓர் உவமை முகத்தாலே, 'எளியனான ஆசாரியனை விட்டு அடைதற்கு அரியனான பகவானை ஆசைப் படுவான் அல்லன்' என்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக்:—விடாய் பிறந்த போது கரஸ்தமான உதகத்தை உபேக்ஷித்து - நீர்வேட்கை விஞ்சின போது சடக்கெனப் பருக லாம்படி பாத்திரத்தில் இருப்பதாய்க்கொண்டு தன் கையில் இருக்கின்ற தண்ணீரை, எளிதாகவிருக்கிற தன்மையே காரண மாக அதனை விரும்பாமல் தரையிலே உகுத்து, ஜீமூதஜலத்தை யும்—ஆகாயத்தில் இருப்பதாய்க்கொண்டு எட்டாமல் இருக்கிற மேகத்தினீரையும், சாகரசலிலத்தையும்—பூமியிலே இருப்பதாக விருந்தும் சேய்மையிலிருக்கிற பாற்கடல் நீரையும், சரித்சலிலத் தையும்—அண்மையிலிருக்கச்செய்தே பெருகும் காலமொழிய வற்றின காலத்தில் கிடையாத ஆற்று நீரையும், வாபீ பயஸ்ஸை யும்—எப்பொழுதும் உண்டானாலும் அவ்வளவும் சென்று பருகு படியாக விருக்கிற குளத்து நீரையும், கூபபயஸ்ஸையும்—இருந்த விடத்திலேயிருந்தும் மண்வெட்டி முதலானவற்றைக்கொண்டு கல்லிப் பெற வேண்டியிருக்கும் கிணற்று நீரையும் ஆசைப் படுமவனைப் போலே, 'நம்மைக் காப்பாற்றும் பொருளைப் பெற

[1] கரஸ்தமான - கையிலே உள்ள. உதகம் - தண்ணீர். ஜீமூதம் - மேகம். சாகரசலிலம் - பாற்கடல் நீர். சரித்சலிலம் - ஆற்றுநீர். வாபீ பயஸ்ஸு, கூபபயஸ்ஸு என்று தனித்தனியே கூட்டுக. வாபீ - குளம். பயஸ்ஸு - தண்ணீர். கூபம் - கிணறு. வாஞ்சித்தல் - விரும்புதல். 42ஆம் சூத்திரத்தை இங்கு நினைவுகூர்தல் தகும். 'கரஸ்தமான உதகம்' என்றதனால் ஆசாரியனையும், 'ஜீமூதஜலம்' என்றதனால் பரத்துவத்தையும், 'சாகரசலிலம்' என்றதனால் வியூகத்தையும், 'சரித் சலிலம்' என்றதனால் அவதாரத்தையும், 'வாபீபயஸ்ஸு' என்றதனால் அர்ச்சாவதாரத்தையும், 'கூபபயஸ்ஸு' என்றதனால் அந்தர்யாமித்வத் தையும் தெரிவித்தவாறு. இதுவும் பிறிது மொழிதல் அணி.

வேண்டும்' என்ற விருப்பம் தோன்றிய நிலையில் அப்போதே தனக்கு உதவலாம்படி கைப்புகுந்திருக்கிற ஆசாரியனை அவன் எளியனாகவிருக்கும் தன்மை ஒன்றனையே பற்றாசாகக் கொண்டு விரும்பாது, பரமபதத்தில் வசிப்பவனாய் எளிதில் அடையக் கூடாதவனாயிருக்கிற பரமபதநாதனையும், பூமியிலேயாயிருந்தும் பாற்கடல் அளவும் செல்ல வல்லவர்களுக்கு அன்றி உதவாத திருப்பாற்கடல் நாதனையும், அண்மையில் வந்தும் அக்காலத்திலிருந்தவர்களுக்கு ஒழியப் பிற்காலத்தேயுள்ளவர்களுக்கு உதவாத அவதாரங்களையும், எப்பொழுதும் அண்மையிலிருந்தும் பேசுதல் முதலியவற்றால் இவனோடு கைகலந்திராத அர்ச்சாவதாரத்தையும், இருக்கிறவிடத்திலே உண்டாயிருந்ததேயாகிலும் இயமம் நியமம் முதலான யோகநெறிகளிலே முறையானே ஒழுகிக் காண வேண்டும்படியான அந்தர்யாமித்வத்தையும், வாஞ்சிக்கக் கடவனல்லன்—ஆசைப்படக் கடவன் அல்லன் என்றபடி.

[2] 'கண்களாலே பார்க்கக்கூடிய ஆசாரியனை விட்டு, சாஸ்திரங்களால் அறியவேண்டிய இறைவனை எவன் நினைக்கிறானோ, அவன் கையிலே கிடைத்த தண்ணீரை விட்டு மேகத்திலே உள்ள தண்ணீரை விரும்புகின்றவன் போன்றவன் ஆவான்' என்றும், [3]'எட்ட விருந்த குருவை இறையன்று என்று விட்டு' என்று தொடங்கி, 'அம்புதத்தைப் பார்த்திருப்பான் அற்று' என்றும் சொல்லக்கடவதிறே. [4]இது வியூகம் முதலானவற்றிற்கும் உபலக்ஷணம். (39)

---

[2] 'சக்ஷுர்கம்யம் குரும் த்யக்த்வா ஶாஸ்த்ரகம்யம்து யஃ ஸ்மரேத்
கரஸ்தம் உதகம் த்யக்த்வா கனஸ்தமபிவாஞ்சதி.'

என்பது பிரமாணம்.

[3] ஞானசாரம், 33.

[4] இங்குக் காட்டிய பிரமாணங்கள் இரண்டிலும் மேகநீரை மாத்திரம் கூறி, மற்றைய நான்கு நீரையும் கூறாதொழிந்ததனால், மேகநீர், என்றதனாலே பரத்துவத்தைக் கூறிய இது, வியூகம் முதலிய ஏனைய நான்கு நிலைகளுக்கும் உபலக்ஷணம் என்கிறார் 'இது' என்று தொடங்கி.

## 453

[1] பாட்டுக்கேட்குமிடமும், கூப்பீடு கேட்கு மிடமும், குதித்தவிடமும், வளைத்தவிடமும், ஊட்டுமிடமும் எல்லாம் வகுத்தவிடமே என்று இருக்கக்கடவன்.

என்பது சூத்திரம்.

அவ :—'இப்படிச் சுலபனுன ஆசார்யன், தன்னைக் காத்தற் குக் காரணனுகவிருக்க, இவனை விரும்பாமல், அடைதற்கு அரிய னுன பரமபதநாதன் முதலானவர்களை விரும்பக்கடவன் அல்லனேயாகிலும், பேறுகவிருப்பவன் என்பது காரணமாகப் பரமபதநாதன் முதலானவர்கள் இவனுக்கு விரும்பத்தக்கவர்கள் அல்லரோ?' என்ன, 'அவர்கள் எல்லாரும் ஆசாரியனே என் றிருக்கக்கடவன்' என்கிருர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—பாட்டுக் கேட்கும் இடமும்—[2] 'இந்தச் சாமத் தைப் பாடிக்கொண்டிருக்கின்ருர்கள்' என்கிறபடியே எப்பொழு தும் அநுபவத்திலே நோக்குள்ளவர்களான நித்தியரும் முக்த ரும் அநுபவத்திற்குப் போக்குவீடாகப் பண்ணும் சாமகானம் கேட்கும் இடமான பரமபதமும், கூப்பீடு கேட்கும் இடமும்—அசுரர்களாலும் இராக்கதர்களாலும் வருத்தப்பட்ட வர்களான பிரமன் முதலான தேவர்களுடைய துயரவொலி கேட்பதற்குச் செவிகொடுத்துக்கொண்டு கண்வளரும் திருப்பாற் கடலும், குதித்த இடமும்—அவர்களுடைய துயரவொலியைக் கேட்டுத் துடித்துக்கொண்டு எழுந்திருந்து, [3] 'ஆதிசேஷனுகிற கட்டிலை விட்டு மதுரை என்னும் நகரத்திற்கு எழுந்தருளினர்' என்கிறபடியே திருப்பாற்கடலில் திருவரவணையினின்றும் இவ்வருகே வரக் குதிப்பாரைப் போலே வந்து அவதரித்த அவதாரவிடமும், வளைத்த இடமும்—நினைத்தது தலைக்கட்டுமள

---

[1] பாட்டுக் கேட்குமிடம் - பரமபதம். கூப்பீடு கேட்குமிடம் - திருப் பாற்கடல். குதித்தவிடம் - அவதாரங்கள். வளைத்தவிடம் - அர்ச்சாவ தாரம். ஊட்டுமிடம் - அந்தர்யாமித்வம். வளைத்தவிடம் - அந்தர் யாமித்வமும், ஊட்டுமிடம் அர்ச்சாவதாரமும் ஆம்.

[2] 'ஏதத் ஸாமகாயந் நாஸ்தே' என்பது, உபநிடதம்.

[3] 'ஏஷநாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:' என்பது, ஹரி வம்சம், 113 : 62.

வும் மலையாளர் வளைப்புப் போலே இட்டவடி பேர விடாதே வளைத்துக்கொண்டிருக்கிற அர்ச்சாவதார இடங்களும், ஊட்டும் இடமும்—[1]'எவர்களுடைய இதயத்தில் கருநெய்தல் போன்ற பகவான் நன்கு அமைந்திருக்கின்றரோ' என்றும், [2]'ஒண் சங்கதைவாள் ஆழியான் ஒருவன் அடியேன் உள்ளானே' என்றும் சொல்லுகிறபடியே இதயகமலத்திலேயிருந்து தான் உகந்தார்க்குத் தன்னழகினை உண்பிக்கும் அந்தர்யாமித்வ இடமும், எல்லாம் வகுத்த இடமே என்று இருக்கக் கடவன்—ஆகிற இந்தப் பிராப்பிய இடங்கள் எல்லாம், தனக்கு வகுத்த இடமாய்ப் பிராப்பியமாயிருக்கும் ஆசாரியனே என்று அறுதியிட்டிருக்கக் கடவன் என்றபடி.

இனி, 'வளைத்தவிடம்' என்பதற்கு, பிறர் அறியாதபடி திரை வளைத்துக்கொண்டிருக்கும் அந்தர்யாமித்வ இடம் என்றும், ஊட்டும் இடம் என்பதற்கு, கண்களுக்குப் புலனாக நின்று தன் வடிவழகினையும் குணங்களையும் அடியார்களுக்கு உண்பிக்கும் அர்ச்சாவதாரவிடமும் என்றும் பொருள் கூறலுமாம்.

[3]'எந்த ஆசாரியனால் எந்த மனிதனுக்குச் சரணாகதி வித்யை கொடுக்கப்பட்டதோ, அந்த மனிதனுக்குப் பரமபதம் திருப்பாற்கடல் துவாரகை எல்லாம் ஆசாரியனே' என்றும், [4]'வில்லார் மணிகொழிக்கும்' என்று தொடங்கி 'அருளாலே வைத்த அவர்' என்றும் சொல்லக்கடவதிறே.

[1] 'யேஷாமிந்தீவர ஶ்யாமோ ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:' என்பது பிரமாணம்.

[2] திருவாய்மொழி, 81. 8 : 1.

[3] இதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் மேல்:
'யேநைவ குருணா யஸ்ய ந்யாஸவித்யா ப்ரதீயதே
தஸ்யவைகுண்ட துக்தாப்தி த்வாரகாஸ் ஸர்வஏவஸ:'
என்பது பிரமாணம்.

[4] 'வில்லார் மணிகொழிக்கும் வேங்கடப்பொற் குன்றுமுதல்
செல்லார் பொழில்சூழ் திருப்பதிகள்—எல்லாம்
மருளா மிருள்ஓட மத்தகத்துத் தன்தாள்
அருளாலே வைத்த அவர்.'

அன்றிக்கே, [1] இச்சூத்திரத்திற்கு, பாதுகாக்கும் பொருள்களாக அவற்றை ஆசைப்படக் கடவன் அல்லன் என்கிற அளவன்றிக்கே, 'அவையெல்லாம் தனக்கு ஆசாரியனே என்றிருக்கக் கடவன் என்கிறது' என்று மேலே போந்த சூத்திரத்திற்குச் சேரப் பொருள் கூறலுமாம். (40)

## 454

[2] இவனுக்குப் பிரதிகூலர், ஸ்வதந்திரரும் தேவதாந்தரபரரும்; அநுகூலர், ஆசாரிய பரதந்திரர்; உபேக்ஷணீயர், ஈச்வரபரதந்திரர்.

என்பது சூத்திரம்.

அவ :—இத்தகையனான [3] இவ்வதிகாரிக்குச் சொரூபத்தை அழிக்கும் தன்மையாலும் சொரூபத்தை வளர்க்கும் தன்மையாலும் இவ்விரண்டும் இல்லாத தன்மையாலும், பிரதிகூலராயும் அநுகூலராயும் நொதுமலராயும் இருக்குமவர்களை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவனுக்கு' என்றது, இப்படி ஆசாரிய அபிமானத்திலே நிலைநின்றவனாய், பரத்துவம் முதலான ஐந்து நிலைகளிலும் உள்ள அன்பு முழுதினையும் ஆசாரியன் திறத்திலே ஒருமடை படுத்தித் [4] 'தேவுமற்று அறியேன்' என்றிருக்கும் இவ்வதிகாரிக்கு என்றபடி. 'பிரதிகூலர் ஸ்வதந்திரரும் தேவ

---

[1] இச்சூத்திரத்தின் அவதாரிகையில், ஒரு வினாவினை எழுப்பிக் கொண்டு, அவ்வினாவிற்கு விடையாக இச்சூத்திரம் எழுந்தது என்றார். இப்பொழுது, மேலைச்சூத்திரத்தைச் சார்ந்தே இச்சூத்திரமும் எழுந்தது என்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'பாதுகாக்கும் பொருள்களாக' என்றது முதல் 'அளவன்றிக்கே' என்றது முடிய மேல் சூத்திரத்தின் கருத்து. 'அவையெல்லாம் தனக்கு ஆசாரியனே என்றிருக்கக் கடவன்' என்ற வாக்கியம் இச்சூத்திரத்தின் கருத்து.

[2] பிரதிகூலர் - விரோதிகள். ஸ்வதந்திரர் - தாம் தமக்கே உரியவர்கள். தேவதாந்தரபரர் - மற்றைய தெய்வங்கட்கு அடிமைப் பட்டிருப்பவர்கள். உபேக்ஷணீயர் - விருப்பு வெறுப்புகட்கு உரியர் அல்லாத அயலார்; நொதுமலர். 263, 267 என்னும் அச்சூத்திரங்களை ஈண்டு ஒப்பு நோக்குக.

[3] இவ்வாக்கியத்தை நிரல் நிறையாகப் பொருள் கொள்க.

[4] கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.

தாந்தரபரரும்' என்றது, அணுகில் ஆன்மாவிற்குக் கேட்டினைச் செய்யும் விரோதிகள், ஆன்மாவினைத் தனக்கு உரியது என்று இருக்கும் ஸ்வதந்திரரும், பாரதந்திரியத்திற்கு இசைந்து வைத்தும் பகவானுக்கு வேருன தேவர்களுக்குப் பரதந்திரராயிருக்குமவர்களும் என்றபடி. 'அநுகூலர் ஆசாரிய பரதந்திரர்' என்றது, தம்முடைய சேர்க்கையாலே சொரூபத்தை வளர்க்கும் அநுகூலர், சொரூபத்தை உள்ளவாறு உணர்ந்து அதன் எல்லை நிலத்தில் நிலைநின்றவர்களான நல்லாசிரியனுக்குப் பரதந்திரப்பட்டவர்கள் என்றபடி. 'உபேக்ஷணீயர் ஈச்வர பரதந்திரர்' என்றது, இப்படிச்[1] சொரூபத்தை அழிப்பவர்களும் சொரூபத்தை வளர்ப்பவர்களும் அல்லாமையாலே, வெருவுதலுக்கும் விரும்புவதற்கும் விஷயம் இல்லாத நொதுமலர், எல்லை நிலமான ஆசாரிய பாரதந்திரியத்தில் ஊற்றமில்லாமல் பிரதம பர்வமான ஈச்வரபாரதந்திரியத்திலே ஊன்றியிருப்பவர்கள் என்றபடி.

பிரதிகூலரைச் சொல்லுகிற இடத்தில் ஸ்வதந்திரர் தேவதாந்தரபரர் இருவரையும் சொன்னஇது, பிரபத்தியைச் சொல்லுகிற இடத்திலே சொன்ன மற்றுள்ள பிரதிகூலர்க்கும்[2] உபலக்ஷணம். [3] பிரதமபர்வத்தில் நிலைநின்ற பகவத்பக்தனுக்குப் பிரதிகூலமானவர்கள், சரமபர்வத்தில் நிலைநின்ற இவனுக்குப் பிரதிகூலர் அல்லாமை இல்லையிறே.

இதனுல், மேலே, பகவானைப்பற்றிய பிரபந்ந அதிகாரிக்குச் சேர்ந்து பழகுவதற்கும் சேர்ந்து பழகுவதினின்றும் நீங்குவதற்கும் உறுப்பாக அநுகூலரையும் பிரதிகூலரையும் அருளிச்செய்தாற்போன்று, ஆசாரிய அபிமானத்தில் நிலைநின்றவனுன இவனுக்கும் சேர்ந்து பழகுவதினின்றும் நீங்குதற்கு விஷயமான பிரதிகூலரையும் சேர்ந்து பழகுதற்கு விஷயமான அநுகூலரையும் அருளிச்செய்து, அவர்களுக்குக் கூறப்படாததான[4] நொது

[1] சொரூபம் - ஆன்மாவின் தன்மைகளான சேஷத்துவமும் பாரதந்திரியமும்.

[2] 'உபலக்ஷணம்' என்றது, மேலே 267ஆம் சூத்திரத்தில் கூறியுள்ளவர்களையெல்லாம் கோடல் வேண்டும் என்றபடி.

[3] அங்ஙனம் கொள்ள வேண்டும் என்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் 'பிரதம பர்வத்திலே' என்று தொடங்கி.

[4] 'நொதுமல் விஷயமும்' என்றது 'சூத்திரத்தில் உபேக்ஷணீயர் ஈச்வரபரதந்திரர்' என்றதனை நோக்கி.

மல் விஷயமும் இவனுக்கு ஒன்று உண்டு என்னுமிடத்தை அருளிச்செய்தாராயிற்று. (41)

## 455

ஞான அநுஷ்டானங்கள் இரண்டும், அல்லாதார்க்கு[1] உபாய அங்கமாய் இருக்கும்; இவனுக்கு உபேய அங்கமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

**அவ :—**இவ்வதிகாரிக்கு உண்டாக வேண்டும் ஞானத்தையும் அநுஷ்டானத்தையும் பலபடியாக அருளிச்செய்தார்மேல். இப்படி அருளிச்செய்து வந்த தன்மையிலே பக்தி முதலானவற்றை உபாயமாகக் கொண்டு அவற்றிலே நிலே நின்றவர்களுடைய ஞான அநுஷ்டானங்களுக்கும் ஆசாரிய அபிமானத்திலே நிலே நின்ற இவனுடைய ஞான அநுஷ்டானங்களுக்கும் உண்டான விநியோக விசேஷத்தை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'அல்லாதார்க்கு ஞான அநுஷ்டானங்கள் இரண்டும் உபாய அங்கமாய் இருக்கும்' என்றது, தத்துவஞானமும் அதற்குத் தகுந்ததான அநுஷ்டானமும், ஆசாரிய அபிமானத்திலே நிலே நின்றவனை இவனை ஒழிந்த அதிகாரிகளுக்கு; உபாயமானது, அதிகாரியை விரும்பியிருக்கையாலே, பலனைப் பெறுமளவும் உபாயம் சித்திப்பதற்கு அதிகாரம் நழுவாமல் நடக்கைக்கு உறுப்பாய்க் கொண்டு அவ்வழியாலே உபாயத்திற்கு உபகாரமாய் இருக்கும் என்றபடி. 'இவனுக்கு உபேய அங்கமாய் இருக்கும்' என்றது, ஆசாரிய அபிமானமே[2] உத்தாரகமாகையால் உபாய[3] அதிகார சேஷமாக வேண்டுவது ஒன்று இல்லாமையாலே, இவ்வதிகாரிக்கு உண்டான ஞான அநுஷ்டானங்கள் இரண்டும் ஆசாரியனுடைய முகமலர்த்தியாகிற பலத்திற்கு உபகாரமாகவிருக்கும் என்றபடி.

---

[1] அல்லாதார்க்கு - பக்தி நிஷ்டருக்கும், பிரபத்தி நிஷ்டருக்கும். இவனுக்கு - சரமபர்வ நிஷ்டனுக்கு.

[2] உத்தாரகம் - மோக்ஷத்தை அளிப்பது.

[3] அதிகாரசேஷம் - அதிகாரத்திற்கு உறுப்பு.

'இவனுக்கு உபேயமாகவிருக்கும்' என்று பாடமானபோது, ஆசாரியனுக்கு விரும்பத்தக்கனவாய்க்கொண்டு இவைதாம் இவனுக்குப் பலமாகவிருக்கும் என்றபடி. (42)

## 456

[1] இவனுக்கு நிஷித்தாநுஷ்டானம் தன்னை யும் பிறரையும் நசிப்பிக்கையாலே தியாஜ்யம்.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி, ஞானத்தையும் ஒழுக்கத்தையும் ஆசாரியனுடைய பிரீதிக்குக் காரணமாக நினைத்துக் குறிக்கொண்டு வாழ்கின்ற இவ்வதிகாரிக்கு, அவசியம் நீக்கத்தக்கவைகளை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம் பற்றி, முதலில், விலக்கியவற்றைச் செய்து போதல் நீக்கத்தக்கது என்னுமதனை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இவனுக்கு நிஷித்த அநுஷ்டானம் தன்னையும் பிறரையும் நசிப்பிக்கையாலே தியாச்சியம்' என்றது, இத்தன்மையனான இவ்வதிகாரிக்குப் பிறர்மனை நயத்தல் முதலான விலக்கியவற்றைச் செய்தல், தனக்குக் கேட்டினையும், தன்னுடைய ஒழுக்கத்தைக் கண்ட பிறருக்குக் கேட்டினையும் செய்விக்கையாலே விலக்கத்தக்கது ஒன்று என்றபடி. (43)

## 457

[2] தான் நசிக்கிறது, மூன்று அபசாரங்களிலும் அந்வயிக்கையாலே; பிறர் நசிக்கிறது, தன்னை அநாதரித்தும் தன்னுடைய அநுஷ்டானத்தை அங்கீகரித்தும்.

என்பது சூத்திரம்.

---

[1] நிஷித்த அநுஷ்டானம் - பிறர் மனை நயத்தல். நசிப்பிக்கையாலே - கெடுப்பதனாலே. தியாஜ்யம் - விடத்தக்கது.

[2] மூன்று அபசாரங்கள் - பகவத் அபசாரம், பாகவத அபசாரம், ஆசாரிய அபசாரம். அந்வயித்தல் - சேர்தல். அநாதரித்தல் - விரும்பாமலிருத்தல். அநுஷ்டானம் - ஒழுக்கம். அங்கீகரித்தும் 'போதருதலால்' என ஒரு சொல்லைக் கொணர்ந்து சூத்திரப் பொருளை முடிக்க.

**அவ :—**நிஷித்த அனுஷ்டானம் தன்னையும் கெடுக்கும்; பிறரையும் கெடுக்கும் என்பது யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**'தான் நசிக்கிறது மூன்று அபசாரங்களிலும் அந்வயிக்கையாலே' என்றது, ஆசாரியனுடைய அபிமானத்திலே ஒதுங்கி, பகவானுடையவும் பாகவதர்களுடையவும் ஆசாரியனுடையவும் ஆன மூவர் விருப்பத்திற்கு இலக்காகவிருக்கிறதான் கெடுவது, [1]அம்மூவர்க்கும் இது விருப்பம் இல்லாத காரியமாகையாலும், **அபசாரமாவது விருப்பமில்லாதனவற்றைச் செய்வதாகையாலும்**, மிகக் கொடியனவான மூன்று அபசாரங்களிலும் சேருகையாலும் என்றபடி. 'பிறர் நசிக்கிறது தன்னை அநாதரித்தும் தன் அநுஷ்டானத்தை அங்கீகரித்தும்' என்றது, பிறர் நசிக்கிறது, எல்லை நிலமளவும் வந்து நிற்கிற பாகவதோத்தமனை தன்னை 'விலக்கியனவற்றைச் செய்தவன்' என்று வெறுப்பதாலும், 'தத்துவ ஞானத்தையுடையவனை இவன் இப்படிச் செய்கிறான், இதில் குற்றம் இல்லை என்று நினைத்தன்றோ? நமக்குப்பின்னை என்?' என்று இவனுடைய செயலைத் தாங்கள் அங்கீகரித்துச் செய்வதனாலும் என்றபடி.

அநாதரிப்பவர், பாகவதர்களுடைய பெருமை அறியாதவர்கள்; அவர்கள் ஒழுக்கத்தை அங்கீகரிப்பவர்; செய்யத்தக்கது இது, செய்யத்தகாதது இது என்னும் பகுத்தறிவு இல்லாதவர். அவர்களுடைய ஒழுக்கத்தைப் பின்பற்றுகிறவர்கள் கெடுகிறார்கள்; 'அநாதரிப்பவர்கள் கெடுவதற்குக் காரணம் என்? குற்றம் கண்டால் அநாதரிக்கலாகாதோ?' என்னில், அரசபுத்திரன் ஒருவன் குற்றம் செய்தால் அக்குற்றத்திற்காக அவனைத் தண்டிப்பவன் அரசனே; அரச புத்திரன் செய்த குற்றத்தைப் பிறர் வாயினாலும் கூறலாகாது; கூறினால், கூறுகின்றவர்களுக்கு அரசனுடைய தண்டனை கிடைக்குமாறு போன்று, இறைவனுடைய அபிமானத்தில் ஒதுங்கிய இவனுக்குக் குற்றம் உண்டானாலும், சர்வேச்வரன்தானே திருத்திக்கொள்ளுமது

[1] இங்குக்கூறவேண்டிய காரணம், 'மிகக் கொடியனவான மூன்று அபசாரங்களிலும் சேருகையாலும்' என்பதேயாம். இதற்கு முன் உள்ள 'அம்மூவர்க்கும்' என்று தொடங்கும் வாக்கியமும், 'அபசாரமாவது' என்று தொடங்கும் வாக்கியமும் மேலே கூறும் காரணத்தை விளக்க வந்த காரண வாக்கியங்கள்.

ஒழியப் பிறர் அநாதரித்தலை அவன் பொறுக்குகையாலே, அநாதரிக்கின்றவர்களுக்கு விநாசமே பலிக்கும்; ஆதலால், அநாதரிக்கலாகாது. [1] 'வேறு ஒரு பயனையும் கருதாது என்னையே வணங்குகிற ஒருவன், தீய ஒழுக்கத்தையுடையவனு யினும், ஞானத்தால் மேம்பட்டவன் என்று எண்ணத்தகுந்தவன் ஆவன்; அவன் நல்ல ஆசாரமுடையவன் அல்லவா?' என்று பக்திமான்கள் விஷயத்தில் அருளிச்செய்தபடி கண்டால் எல்லை நிலத்தில் வந்து நிற்கிற இவ்வதிகாரி விஷயத்தில் அவன் இருக்கும்படி சொல்ல வேண்டாவிறே.

ஆகையால், இப்படித், தானும் பிறரும் நசிக்கும்படி இருக்கையாலே, பிறர்மனை நயத்தல் முதலான தீயவொழுக்கம் அடியோடு விடத்தக்கது என்றதாயிற்று. (44)

## 458

[2] விஹித போகம், நிஷித்த போகம் போலே லோக விருத்தமுமன்று; நரக ஏதுவும் அன்று. ஆயிருக்கச்செய்தே சொரூப விருத்தமுமாய் வேதாந்தவிருத்தமுமாய்ச் சிஷ்டகர்ஹிதமு மாய்ப் பிராப்பிய பிரதிபந்தகமுமாய் இருக்கை யாலே தியாஜ்யம்.

என்பது சூத்திரம்.

அவ:—'இப்படிப், பிறர்மனை நயத்தல் தன்னுடைய அழிவிற்கும் பிறருடைய அழிவிற்கும் காரணமாகைக்கு அடி, சாஸ்திரங்களாலே விலக்கப்பட்டதாகையாலேயிறே. இங்ஙன் அன்றிக்கே, சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்டதான தன் மனைவி

---

[1] அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'வேறு ஒரு பயனையும்' என்று தொடங்கி.

'அபிசேத்ஸு துராசாரோ பஜதே மாம் அநந்யபாக்
ஸாதுரேவ ஸமந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோஹி ஸ:'

என்பது, ஸ்ரீ கீதை, 9 : 30.

[2] விஹித போகம் - சாஸ்திரங்களால் அநுபவிக்கலாம் என்று விதிக்கப்பட்ட இன்பம்; மனைவியிடத்து அநுபவிக்கும் இன்பம்; சொரூபம் - பகவானையே அநுபவிக்கப்படும் பொருளாகவும் அவனையே உபாயமாகவும் கொண்டிருக்கும் ஆன்மாவினுடைய தன்மை. சிஷ்டர் - பெரியோர். கர்ஹிதம் - பழிக்கப்படுதல்.

யோடு கலக்கும் கலவிக்குக் குறை இல்லையே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—விஹிதபோகம் - சரீரத்தோடு கூடிய ஆன்மாவிலே குறிக்கோளுடைய சாஸ்திரத்தாலே விதிக்கப்பட்ட தன் மனையாளிடத்தில் அநுபவிக்கும் இன்பம், நிஷித்தபோகம் போலே - அத்தகைய சாஸ்திரங்களாலே விலக்கப்பட்ட பிறர் மனை நயத்தல் போன்று, லோகவிருத்தமும் அன்று—உலக வொழுக்கிற்கு முரண்பட்டதும் அன்று; நரக ஏதுவும் அன்று—[1] செம்பினால் இயன்ற பாவையைத் தழுவுகை முதலான கொடிய துக்கத்தை அநுபவிக்கின்ற நரகத்திற்குக் காரணமும் அன்று; ஆயிருக்கச்செய்தே—இப்படி, கண்கூடாகக் காண்கின்ற உலகவொழுக்கத்திற்கு மாறுபட்டதாதலும் சாஸ்திரங்களால் காண்கின்ற நரகத்திற்குக் காரணமாதலும் ஆகிற இரண்டும் அற்றிருக்கச் செய்தே, சொரூபவிருத்தமுமாய்—பகவானையே இனிய பொருளாகக் கொண்டிருக்கிற ஆன்மாவின் தன்மைக்கு முரண்பட்டதாய், வேதாந்த விருத்தமுமாய்—[2] 'ஐம்பொறிகளை அடக்கினவனும் மனத்தினை அடக்கினவனும் இவை இரண்டனையும் அடக்கியதால் உளதாகும் செருக்கு இல்லாதவனும் இந்திரியங்களை ஆன்மாவிற்கு விஷயமாக்கினவனும் வேறு செயல் அற்றவனும் ஆகி, ஆன்மாவிற்குள் இருக்கும் பரமான்மாவைப் பார்க்க வேண்டும்' என்பது போன்ற வாக்கியங்களாலும் திருமந்திரம் முதலான மந்திரங்களாலும் பக்தி நிஷ்டனோடு பிரபந்நனோடு வேற்றுமை அற இருவர்க்கும் மகளிர் இன்பம் ஆகாது என்று கூறுகிற வேதாந்தத்திற்கு முரண்பட்டதாய், சிஷ்டகர்ஹிதமுமாய்—மகளிர்பால் உள்ள குற்றத்தை அறிகையாலும் ஆன்ம சொரூபத்திற்கு மாறுபட்டது என்று அறிகையாலும் மகளிர் இன்பத்தை அருவருத்திருக்கும் நல்லொழுக்கமிகுந்தவர்களான பெரியோர்களால் 'இழிந்தது' என்று பழிக்கப்பட்டிருப்பதாய், பிராப்பியப் பிரதி பந்தகமுமாய்—மகளிர்பால் உள்ள விரக்தியை விரும்பியிருப்பவனை ஆசாரியனுக்கு விருப்பம் இல்லாததாகையாலே ஆசாரியனுடைய முகமாகிற தாமரையினது மலர்ச்சியை அநுபவித்துக்

---

[1] பெரிய திருமொழி, 1. 6 : 4.

[2] 'ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷுஸ் ஸமாஹிதோ
பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்.'
என்பது உபநிடதம்.

கொண்டிருத்தலாகிற பேற்றிற்குத் தடையுமாய் இருக்கையாலே தியாச்சியம்—இப்படிப் பல விதமான கேட்டிற்கு இடமாய் இருக்கையாலே இவ்வதிகாரிக்கு விலக்கத்தக்கது என்றவாறு. (45)

## 459

[1] போக்யதா புத்தி குலைந்து தர்மபுத்யா
பிரவர்த்தித்தாலும் சொரூபம் குலையும்.

என்பது சூத்திரம்.

**அவ :**—'இன்பம் என்ற புத்தியை விட்டுத் தர்மம் என்ற புத்தியோடு மனைவியைச் சேர்ந்தால் இவை ஒன்றும் இல்லையே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :**—'போக்கியதா புத்தி குலைந்து' என்றது, சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட மனைவியின் சேர்க்கையில் ஆசையாலே வருகின்ற இன்பம் என்ற புத்தியை விட்டு என்றபடி. 'தர்ம புத்யா பிரவர்த்தித்தாலும் சொரூபம் குலையும்' என்றது, பக்தி நிஷ்டர்களான முனிவர்கள் தொடக்கமான பெரியோர்கள், [2] 'பிதிரர் கடனைத் தீர்ப்பதற்காகப் புத்திரர்களைப் பெறவேண்டும்'

---

[1] போக்யதா புத்தி - இன்பம் என்ற எண்ணம். பிரவர்த்தித்தல் - ஒழுகுதல்.

[2] 'இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படூஉம் கடன் மூன்றனுள் முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப் படாமையின், அக்கடன் இறுத்தற்பொருட்டு நன்மக்களைப் பெறுதல்'— திருக்குறள், புதல்வரைப் பெறுதல், பரிமேலழகருரை.

'வேள்வியில் கடவுள் அருத்தினை; கேள்வி
உயர்நிலை யுலகத்து ஐயரின் புறுத்தினை;
வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்.'

என்பது பதிற்றுப்பத்து, 70. 18-22.

"புத்தான கொடுவினையோ டருந்துயரம்
போய்ஒளிப்பப் புவனம் தாங்கும்
சத்தான குணமுடையோன்"

என்பது, கம்பரா. திருவவதா, 33. என்பன ஈண்டு அறியத்தக்கன.

என்ற காரணத்தாலும் [1] 'பூத்தபின் நீராடிய நாளில் மனைவியைச் சேராவிடில் கருச்சிதைத்தல் முதலிய குற்றம் உண்டு என்னும் காரணத்தாலும் தர்மம் என்ற எண்ணத்தோடு மனைவியைச் சேருமாறு போன்று, இவனும் அப்படித் தர்மம் என்ற எண்ணத்தோடு சேர்ந்தாலும், [2] சித்த தர்மத்தில் நிலைநின்றவனான இவனுக்கு வேறு தர்மத்தைக் கடைப்பிடித்தல் விரோதியாகையாலே அவனையே உபாயமாகப் பற்றுதலாகிற சொரூபம் குலையும் என்றபடி.

இதனால், இன்பம் என்ற எண்ணத்தோடு சேர்ந்தால் பகவானையே இனிய பொருளாகக் கொண்ட சொரூபம் குலையுமாறு போன்று, தர்மம் என்ற எண்ணத்தோடு சேர்ந்தால் பகவானையே உபாயமாகப் பற்றியிருத்தலாகிற சொரூபம் குலையும். ஆன பின்பு, ஒருபடியாலும் இவ்வதிகாரிக்கு மனைவியின் சேர்க்கை ஆகாது என்றதாயிற்று. ஆகையால், ஏதேனும் ஒருபடியால் சேர்ந்தாலும் சொரூபம் கெடுதல் தப்பாது; ஆன பின்பு விலக்க வேண்டும் என்னுமிடம் உறுதியாயிற்று. (46)

## 460

'க்ஷேத்ராணி மித்ராணி' என்கிற சுலோகத்தில் அவஸ்தை பிறக்க வேணும் சொரூபம் குலையாமைக்கு.

என்பது சூத்திரம்.

---

[1] 'பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
பரத்தையர்ப் பிரிந்த காலை யான.'

என்பது தொல்காப். கற்பி. 46.

'பூத்த காலைப் புனைஇழை மனைவியை
நீரா டியபின் ஈராறு நாளும்
கருவயிற் றுறூஉம் கால மாதலின்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்.'

என்பது நம்பியகப்பொருள்.

[2] சித்த தர்மம் – சித்தோபாயமாகிற தர்மம்.

அவ :—இப்படிச் சொரூபத்திற்குக் கேடு வரும் என்னும் அச்சத்தாலே விடுகிற அளவு போராது; தகுதியுள்ள ஆசாரியனிடத்தில்—பகவானிடத்தில் வைத்துள்ள நிறைந்த அன்பினாலே, இவ்வுலகத்திலே இன்பத்தைத் தருவனவாக உள்ள எல்லாப் பொருள்களும் வெறுக்கத் தக்கனவாகத் தோற்றும் நிலை பிறக்கவும் வேண்டும் சொரூபம் குலையாமைக்கு என்கிறார் இச் சூத்திரத்தால்.

வியாக் :—[1] 'க்ஷேத்ராணி மித்ராணி' என்கிற சுலோகத்தில் 'அவஸ்தை பிறக்கவேணும் சொரூபம் குலையாமைக்கு' என்றது, 'ஏ நாதனே, தேவரீர் திருவடித்தாமரைகளில் பக்தியுள்ளவர்களுக்கு, நிலங்களும் உறவினர்களும் பிள்ளைகளும் வீடுகளும் ஆகிய இவையெல்லாம் விரும்பத்தகாதனவாக ஆகின்றன' என்று பேரருளாளரான பெருமாளைக் குறித்துப் பிரமன் விண்ணப்பம் செய்த சுலோகத்தில் சொல்லுகிற நிலம், உறவு, செல்வம் முதலான எல்லாப் பொருள்களும் நெருப்பைப்போன்று தோன்றும்படியான நிலைமை பிறக்க வேண்டும் சொரூபம் குலையாமைக்கு என்றபடி.

இந்தச் சுலோகத்தை [2] 'நல்ல புதல்வர்' என்ற பாட்டிலே அருளாளப் பெருமாள் எம்பெருமானாரும் அருளிச்செய்தாரிறே. (47)

---

[1] 'க்ஷேத்ராணி மித்ராணி தநாநி நாத
புத்ராம்ச தாரா: பசவோ க்ருஹாணி
த்வத் பாதபத்ம ப்ரவணாத்ம வ்ருத்தே:
பவந்தி ஸர்வே ப்ரதிகூல ரூபா:'
என்பது அத்திகிரி மஹாத்மியம்.

[2] 'நல்ல புதல்வர் மனையாள் நவையில்கிளை
இல்லம் நிலம்மா டிவையனைத்தும்—அல்லலெனத்
தோற்றிஎரி தீயிற் சுடுமேல் அவர்க்கெளிதாம்
ஏற்றருவை குந்தத் திருப்பு.'
என்பது ஞானசாரம், 19. அருளாளப்பெருமாள் - எம்பெருமானார். இவர், இராமாநுசருடைய மாணாக்கர்.

## 461

[1]பிராப்பியபூமியில்பிராவண்யமும், தியாஜ்ய பூமியில் ஜிஹாசையும், அநுபவ அலாபத்தில் ஆத்மதாரண அயோக்யதையும் உபாய சதுஷ்டயத்துக்கும் வேணும்.

என்பது சூத்திரம்.

அவ :—இனி, மேல், பிராப்பிய பூமியில் பேரவாவுடையனுதல் முதலிய மூன்றும் இவனுக்கு அவசியம் வேண்டத்தக்கனவாம் என்னுமதனை அருளிச்செய்கைக்காக, உபாய அதிகாரிகள் நால்வர்க்கும் பொதுவாக அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—பிராப்பிய பூமியில் பிராவண்யமும்—தனக்கு வகுத்த சேஷியானவன் எழுந்தருளியிருக்கின்ற தேசத்தைக் கிட்டியல்லது தரியாத நிலைமை உண்டாகின்ற அளவு கடந்த ஆசையும், தியாச்சிய பூமியில் ஜிஹாசையும்—வகுத்த சேஷியானவனைப் பிரிந்திருக்கத் தக்க இத்தேசத்தை விட்டே நிற்கவேண்டும் என்னும் இச்சையும், அநுபவ அலாபத்தில் ஆத்மதாரண அயோக்யதையும்—வகுத்த சேஷியானவனுடைய திருமேனி அநுபவம் பெறுதபோது, சரீரத்தைத் தரிக்கச் செய்கிற உணவு இல்லாத போது சரீரம் தரியாதது போன்று, தான் தரித்திருக்கைக்குத் தகுதியில்லாதவனுகை இருக்கையும் ஆகிற இம்மூன்றும், 'உபாய சதுஷ்டயத்துக்கும் வேணும்' என்றது, உபாய அதிகாரிகள் நால்வர்க்கும் அவரவர்கள் அதிகாரத்திற்குத் தகுதியாகவேண்டும் என்றபடி.

நால்வகைப்பட்ட உபாயங்களாவன: [2]'ஸ்வஸ்வாதந்திரியத்தாலே' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த பக்தியும், பிரபத்தியும், ஆசாரியனைத் தான் பற்றுகிற பற்றும், ஆசாரிய

---

[1] பிராப்பியபூமி - பரமபதமும் ஆசாரியன் வசிக்கும் இடமும். பிராவண்யம் - எல்லையில்லாத பேராவல். தியாஜ்ய பூமி - இவ்வுலகம். ஜிஹாசை - விட வேண்டும் என்னும் ஆசை. அநுபவ அலாபத்தில் ஆத்மதாரண அயோக்யதை - பகவானுடைய அநுபவமும் ஆசாரியனுடைய அநுபவமும் இல்லாத போது ஆன்மாவினைத் தரித்திருக்க இயலாமை. உபாய சதுஷ்டயம் - நால்வகையான உபாயங்கள்; இங்கு அவற்றையுடைய நால்வகை அதிகாரிகளையும் குறிக்கின்றது.

[2] 447 முதல் 450 முடிய உள்ள சூத்திரங்களைக் காண்க.

ஞலே 'இவன் நம்முடையவன்' என்று அபிமானிக்கிற அபிமானமும் ஆம். [1] அன்றிக்கே, பகவத் விஷயத்தில் [2] சுவகத பரகத சுவீகாரங்களும் ஆம். [3] இவற்றிலும் முற்கூறியதே பொருத்தமுடைத்தாம்; [4] மேலே நான்கு உபாயங்களேயும் சேர இவர் தாமே அருளிச்செய்திருப்பதற்குச் சேர்ந்திருக்கையாலே.

இதில் பக்தி நிஷ்டர் பிரபந்த நிஷ்டர் இருவர்க்கும் [5] 'மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகம் எண்ணும்' என்று பிராப்பிய பூமியான பரமபதத்தில் அளவு கடந்த ஆசையும், [7] 'நெருப்பினுடைய சுவாலேகளாகிற கூட்டினுள் அடங்கியிருத்தல் சிறந்தது; கிருஷ்ணனுடைய தியானத்தில் ஆசையற்றவர்களோடு சேர்ந்திருத்தல் சிறந்ததாகாது' என்றும், [6] 'கொடுவுலகம் காட்டேலே' என்றும் சொல்லுகிறபடியே அடையத்தக்க இறைவனே இழந்து இவ்வுலகத்தார் நடுவில் இருக்கைக்கு உடலான சம்சாரமாகிற விலக்கத்தக்க பூமியில் வெறுப்பும், [7] 'உன்னே விட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன்' என்கிற படியே பகவானுடைய அநுபவம் பெருதபோது ஆன்மாவைத் தரித்திருப்பதற்கு ஆற்றல் இல்லாமையும் அவசியம் உண்டாக வேண்டும்.

---

[1] 'அன்றிக்கே' என்றதற்கு, 'மேலே காட்டிய நால்வகை உபாயங்களுள் பின் உள்ள இரண்டு உபாயங்களும் அல்லவாயின்' என்பது பொருள்.

[2] சுவகத பரகத ஸ்வீகாரங்கள் - தான் பற்றும் பற்றும், இறைவனுலே அங்கீகரிக்கப்படுகின்ற அங்கீகாரமும்.

[3] 'இவற்றிலும்' என்றது, பகவத்விஷயத்தில் ஸ்வகத பரகத ஸ்வீகாரங்களே. 'முற்கூறியது' என்றது, ஆசாரியனேத் தான் பற்றும் பற்றும், ஆசாரியனுலே 'இவன் நம்முடையவன்' என்று அபிமானிக்கும் அபிமானமும்.

[4] அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் 'மேலே' என்று தொடங்கி. 'மேலே' என்றது, 447ஆம் சூத்திரம் முதலான நான்கு சூத்திரங்களே. அவற்றிற்கு முறையே உதாரணம் காட்டுகிருர் 'மாகவைகுந்தம்' என்று தொடங்கி. இது திருவாய்மொழி, 9.3 : 7.

[5] 'வரம் ஹுதவஹ ஜ்வாலா பஞ்சராந்தஃ வ்யவஸ்திதிஃ
நஶௌரி சிந்தா விமுகஜந ஸம்வாஸ வைஶஸம்.'
என்பது பிரமாணம்.

[6] திருவாய்மொழி, 4.9 : 7. [7] திருவாய்மொழி, 5.7 : 1.

ஆசாரிய விஷயத்தில் சுவகத பரகத சுவீகார நிஷ்டர்களான இருவர்க்கும், [1] 'எல்லாம் வகுத்த இடமே' என்றிருக்கை யாலே ஆசாரியன் எழுந்தருளியிருக்கிற தேசம் பிராப்பிய பூமியாய், அவனைப் பிரிந்திருக்கிற இடம் தியாச்சிய பூமியாய், அவனுடைய திருமேனி முதலானவைகளே அநுபவ விஷயங் களும் ஆகையாலே, பிராப்பிய பூமியில் பிராவண்யம் முதலான மூன்றும் அவசியம் உண்டாக வேண்டும் என்று அதிகாரத்திற்குத் தகுதியாக வேறுபடுத்திக் கூறிக்கொள்க.

அன்றிக்கே, [2] 'மதுரகவி சொன்ன சொல் நம்புவார் பதி வைகுந்தம்' என்று தாம் அருளிச்செய்த பிரபந்தத்தைக் கற்ற வர்களுக்கு வசிக்குமிடம், அடியார்களுடைய பெருமையே நடந்து செல்கின்ற ஸ்ரீவைகுண்டம் என்று ஸ்ரீமதுரகவி ஆழ்வார் அருளிச் செய்கையாலும், சரமபர்வ நிஷ்டரானவர்களுக்கும் தம் ஆசா ரியன் உகந்த பகவத் விஷயத்தில் நிறைந்த அநுபவம் முதலான வைகள் சித்திப்பது அந்தப் பரமபதத்திலேயாகையாலும், பிராப்பியபூமி பரமபதம்; இருள்தருமா ஞாலமாகையாலே அதற்கு விரோதியான சம்சாரம் தியாஜ்யபூமி; அநுபவ அலா பத்தில் ஆத்மதாரண அயோக்யதையாவது, தன் ஆசாரியன் திறத்திலும் அவன் உகந்த பகவான் திறத்திலும் உண்டான அநுபவம் பெறுதவளவில் தான் தரித்திருக்கமாட்டாமை என்று இங்ஙனே கோடலுமாம். (48)

## 462

[3] 'பழுதாகாதொன்று அறிந்தேன்' என்கிற பாட்டைப் பூர்வ உபாயத்துக்குப் பிரமாணமாக அநுசந்திப்பது.

என்பது சூத்திரம்.

**அவ :**—மேலே கூறிய நால்வகையான உபாயங்களுள் பக்தியும் பிரபத்தியும் ஆகிற இரண்டு உபாயங்களும் இந்த அதி

---

1 453ஆம் சூத்திரம் பார்க்க.

2 கண்ணிநுண் சிறுத்தாம்பு, 11.

3 பூர்வ உபாயம் - முன்னே உள்ள உபாயம். அதாவது, 'ஆசாரியனைத் தான் பற்றும் பற்று' என்று முன்னே கூறிய சுவகத ஸ்வீகாரத்தை.

காரிகளுக்கு நழுவி நின்ற வகையை [1] மேலே அருளிச்செய்த பின்பு 'ஆசாரியனையும் தான் பற்றும் பற்று' என்றும், 'ஆசாரிய அபிமானமே உத்தாரகம்' என்றும் அருளிச்செய்த ஆசாரிய விஷயத்தில் [2] சுவகத பரகத சுவீகாரங்களாகிற உபாயங்கள் இரண்டற்கும் பிரமாணங்களைக் காட்டவேண்டும் என்று திருவுள்ளம்பற்றி முதலில் சுவகத ஸ்வீகாரத்திற்குப் பிரமாணம் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

**வியாக் :—**[3] 'பழுதாகாது ஒன்று அறிந்தேன்' என்கிற பாட்டைப் பூர்வ உபாயத்துக்குப் பிரமாணமாக அநுசந்திப்பது என்றது,

'பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான் பாதம்,
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவாரைக்
கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்த வினைகெடுத்து
விண்திறந்து வீற்றிருப்பார் மிக்கு.'

[4] அதாவது, அமோகமாய் இருப்பதொரு உபாயம் அறிந்தேன், அடைகின்றவர்கட்கு நன்கு அடையத்தக்கவனைக் கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற அவனுடைய திருவடிகளைத் தப்பாதவகையை நினைத்து நாடோறும் கைங்கரியத்தைப் பண்ணிக்கொண்டு போரும் ஞானத்தில் உயர்ந்தோரைக் கண்டு தங்களுக்குப் பற்றுக்கோடாக அடைந்து உஜ்ஜீவிக்குமவர்கள், பிரிக்க முடியாதவாறு ஆன்மாவோடே கலந்திருக்கிற பாவத்தைப் போக்கி, ஸ்ரீவைகுண்டத்தில் திருவாசல் திறந்துகொண்டு அங்கே நிறைந்த ஞானம் முதலானவைகளையுடையராய், பாகவத கைங்கரியத்தில் ஊற்றமுள்ளவர்களாய்க் கொண்டு வேறுபட்ட சிறப்போடு இருப்பர் என்று பரம ஆப்தரான திருமழிசைப்பிரான் அருளிச்செய்த பாட்டை ஆசாரிய

---

[1] 'மேலே அருளிச்செய்த பின்பு' என்றது 447, 448ஆம் சூத்திரங்களில் கூறியுள்ளவற்றைக் குறித்தபடி.

[2] ஆசாரியனைத் தான் பற்றும் பற்று, சுவகதஸ்வீகாரம் (சூ. 449) ஆசாரிய அபிமானமே உத்தாரகம் என்றது, பரகதஸ்வீகாரம். (சூ. 450)

[3] நான்முகன் திருவந். 89.

[4] இத்திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'அதாவது' என்று தொடங்கி. . அமோகமாய் - பயன் இல்லாமற்போகாததாய்.

விஷயத்தில் முற்கூறிய சுவகத ஸ்வீகாரமாகிற உபாயத்திற்குப் பிரமாணமாக நினைப்பது என்றபடி.

இதனால், சுவகத ஸ்வீகாரம், அகங்காரத்தை உள்ளடக்கிக் கொண்டு தாழ்வினைச் செய்வதாக இருந்ததேயாகிலும், பலனைக் கொடுப்பதில் வந்தால் பழுதுபோகாது என்னுமிடம் சொல்லிற்று யிற்று. [1] 'ஆசாரியனால் எவன் அபிமானிக்கப்படுகிறானோ, ஆசாரியனை எவன் அபிமானிக்கின்றானோ, அவ்விருவரும் முறையாகப் பரமபதத்தை அடைகிறார்கள்' என்று பாரத்வாச சம்ஹிதையிலும் சொல்லப்பட்டதிறே. (49)

## 463

[2] 'நல்லஎன் தோழீ', 'மாறாய தானவனை' என்கிற பாட்டுகளையும், தோத்திரத்தில் முடிந்த சுலோகத்தையும், 'பசுர்மநுஷ்ய:' என்கிற சுலோகத்தையும் இதற்குப் பிரமாணமாக அநுசந்திப்பது.

என்பது சூத்திரம்.

அவ :—இனிமேல், பரகத ஸ்வீகாரமாகிற பரமோபாயத்திற்குப் பலப்பிரமாணங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

[1] சுவகதஸ்வீகாரமும் மோக்ஷத்தை அளிக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஆசாரியனால்' என்று தொடங்கி.

'குருணாயோபிமந்யேத குரும்வாயோபிமந்யதே
தாவுபௌ பரமாம் ஸித்திம் நியமாத்உபகச்சதঃ'

என்பது பிரமாணம்.

[2] 'நல்லஎன் தோழி' என்பது நாய்ச்சியார் திருமொழி, 10 : 10. 'மாறாய தானவனை' என்பது, நான்முகன் திருவந். 18. 'தோத்திரத்தில்' என்றது ஸ்ரீஆளவந்தார் அருளிச்செய்த தோத்திர ரத்தினத்தில் என்றபடி. முடிந்த சுலோகம் - ஈற்றிலே உள்ள சுலோகம்.

'நல்லஎன் தோழி நாகணைமிசை நம்பரர்
செல்வர் பெரியர் சிறுமா னிடவர்நாம் செய்வதென்
வில்லி புதுவை விட்டுசித்தர் நங்கள் தேவரை
வல்லபரிசு வருவிப்ப ரேல்அது காண்டுமே.'

என்னும் இத்திருப்பாசுரத்திற்கு அவதாரிகையும் பொருளும் அருளிச்செய்கிறார் 'தோழியானவள்' என்று தொடங்கி.

வியாக் :—‘நல்ல என் தோழி’ என்றது, தோழியானவள், இவளுடைய பேற்றிற்கு உடலாக நினைத்திருப்பது அவன் [1] ‘விடமாட்டேன்’ என்ற வார்த்தையையும், பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்பையுமாயிற்று. இப்போது அவன் வார்த்தை தனக்குப் பயன் தாராத மாத்திரத்தைக் கொண்டு இவ்வார்த்தை யிலும் ஐயப்படுகிருள். இனி, இவள் எங்ஙனே ஜீவித்துத் தலைக் கட்டப்போகிருள் என்னும் இழவு தோற்றவிருக்க, அவளைப் பார்த்து, ‘என்னிலும் என் துன்பத்திற்கு நோவுபடும்படி அன்புடையையாயிருக்கிற என்தோழீ, பாம்பினைப் படுக்கையாக வுடையவராகையாலே எல்லாரைக்காட்டிலும் மேம்பட்டவரா யிருக்கிறவர், அதற்குமேல் திருமகள் கேள்வனும் ஒருவருக்கும் எட்டாத பெருமையையுடையராயிருப்பார் ஒருவர், தெய்வப் பிறவியிலே பிறந்து சிறிது அணைய நிற்கையுமன்றிக்கே, அவருக்கும் நமக்கும் பர்வதத்திற்கும் பரமாணுவிற்கும் உள்ள வாசி போன்றது என்னலாம்படி சிறியரான மனிதர் நாம்; ஆன பின்பு நம்மால் செய்யலாவது உண்டோ? அவர் ஒரு வார்த்தை முன்பு சொல்லிவைத்தார் என்றதனைக்கொண்டு நம்மால் அவரை வளைக்கப்போமோ? அது கிடக்கிடும்; நமக்குப் பேற்றிற்கு வழி உண்டுகாண்; ஸ்ரீவில்லிபுத்தூரிலே அவதரித்த ஏற்றத்தை யுடையராய், எங்கும் பரந்துறையும் இறைவனைத் தம் திருவுள் ளத்திலே அடக்கிக்கொண்டிருக்கிறவராய் உள்ள [2] ‘ஆசாரியனைத் தெய்வமாகக் கொண்டவனுய் இருக்க வேண்டும்’ என்கிறபடியே நமக்குத் தேவரான பெரியாழ்வார் தமக்குத் தேவராகவிருக்கிற அவரை [3] ஓர் இசையைச் சொல்லி இசைக்கவுமாம், கிழியை அறுத்து வரப்பண்ணவுமாம், திருமஞ்சனத்தைச் சேர்த்து வைத்து அழைக்கவுமாம், திருக்குழல் பணியைச் சமைத்து வைத்து அழைக்கவுமாம், திருவந்திக்காப்பிட அழைக்கவுமாம், அன்றிக்கே நான் தம்மை முன்னிட்டாற்போலே தமக்குப் புருஷகாரமாவாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம், வல்லதொரு வகையில் வருவித்தாராகில் அதனைக் கண்டிருக்கக் கடவோம், நாம் மேல்விழக் கடவோம் அல்லோம்’ என்று ஆண்டாள்

---

[1] ‘நத்யஜேயம் கதஞ்சந’ என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 3.

[2] ‘ஆசார்ய தேவோபவ’ என்பது, உபநிடதம்.

[3] இங்கு எழுதப்படும் விசேஷணங்கள் பெரியாழ்வார் திரு மொழியை அடியொற்றி எழுதப்படுகின்றன.

அருளிச்செய்த 'நல்லஎன் தோழீ' என்கிற பாட்டையும் என்றபடி.

[1] 'மாறாயதானவனை' என்றது, 'ஈச்வரன் என்று பாராதே, தனக்கு எதிரியான இரணியாசுரனைக் கூரிய திருஉகிராலே, வரபலங்களாலே பூண் கட்டியிருக்கிற மார்வினைப் பொன்மலை பிளந்தாற்போலே இரண்டு கூறும்படி வருத்தம் சிறிதுமின்றிக் கிழித்துப் போகட்ட நரசிங்கத்தை [2] 'அந்தியம்போதில் அரியுருவாகி அரியை அழித்தவனை—பல்லாண்டு பாடுதும்' என்று வேறு பயன் ஒன்றையும் கருதாதவராய்க்கொண்டு மங்களாசாசனம் பண்ணியிருப்பாரை வெல்லுமே, வேறுபட்ட சிறப்பினையுடையவர்களாயிருக்கிற அவர்கள் பக்கல் தம் பாரத்தை வைத்தவர்களாய் அவர்கள் அபிமானத்திலே ஒதுங்கி யிருப்பவர்களுடைய புண்ணியம்' என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்த 'மாறாய தானவனை' என்கிற பாட்டையும் என்றபடி.

'தோத்திரத்தில் [3] முடிந்த சுலோகத்தையும்' என்றது, 'இயல்பாகவே அமைந்தனவாய் அடையத்தக்கனவாய் இனியனவுமான தேவரீருடைய திருவடிகளில் உண்டான அன்பின் மிகுதிக்கு எல்லை நிலமாயிருப்பாராய், அந்த அன்பின் மிகுதிக்கு அடியான உள்ளவாறு உணர்ந்த ஆன்ம ஞானத்தையுடையராய், கல்வியாலும் பிறப்பாலும் எனக்குப் பாட்டனாராயிருக்கிற நாதமுனிகளைப் பார்த்து, 'அடியேனுடைய ஒழுக்கத்தினைப் பாராமல் அருள் செய்ய வேண்டும்' என்று பரமாசாரியரான

---

[1] 'மாறாய தானவனை வள்ளுகிரால் மார்விரண்டு
கூறாகக் கீறிய கோளரியை—வேறாக
ஏத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சார்த்தி யிருப்பார் தவம்.' (நான்முகன் திரு. 18)

என்னும் இச்செய்யுளுக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஈச்வரன்' என்று தொடங்கி.

[2] திருப்பல்லாண்டு, 6.

[3] அக்ருத்ரிம த்வச்சரணாரவிந்தப்ரேம ப்ரகர்ஷாவதிம் ஆத்மவந்தம்,
பிதாமஹம் நாதமுநிம்விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா.

என்பது அச்சுலோகம். இதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இயல் பாகவே' என்று தொடங்கி.

ஆளவந்தார் அருளிச்செய்த வேதாந்த தாத்பர்யமான தோத்திரத்தில் ஈற்றிலே உள்ளதான சுலோகத்தையும் என்றபடி.

'பசுர்மநுஷ்யः என்கிற சுலோகத்தையும்' என்றது, [1] ஞானம் பிறத்தற்குத் தகுதியில்லாத பசுவும் பறவையும் ஆகவுமாம், ஞானத்திற்குத் தகுதியுள்ள மனிதனாகவுமாம், யாவர் சிலர், பகவானுடைய சம்பந்தத்தைக்கொண்டே நிரூபிக்கத் தக்கவனாயிருப்பான் ஒரு பாகவதனோடே சம்பந்தம் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் அந்த வைஷ்ணவனாலே, அடையத்தக்க பூமியான பரமபதத்தை அடைவார்கள் என்கையாலே, ஞானம் உண்டாகவுமாம், இல்லையாகவுமாம்; அடியார்களுடைய அபிமானமே மோக்ஷத்திற்குக் காரணமாம் என்னுமிடத்தை மிகத் தெளிவாகச் சொல்லுகிற 'பஶுர்மநுஷ்யः பக்ஷீ வா யேச வைஷ்ணவ ஸம்ஶ்ரயாः, தேநைவதே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோः பரமம்பதம்' என்கிற பௌராணிகர் சுலோகத்தையும் என்றபடி.

இதற்குப் பிரமாணமாக அநுசந்திப்பது - ஆசாரிய அபிமானமாகிற இந்தப் பரகத ஸ்வீகாரம் என்னும் உபாயத்திற்குப் பிரமாணங்களாக நினைப்பது என்றவாறு. (50)

## 464

[2] ஆசாரிய அபிமானந்தான், பிரபத்தி போலே உபாயாந்தரத்துக்கு அங்கமுமாய்ச் சுவதந்திரமுமாய் இருக்கும்.

என்பது சூத்திரம்.

அவ :—'மேலே கூறிய பிரபத்தி நிஷ்டனான அதிகாரிக்கு உபாய அதிகாரத்தில் குறை உண்டாகிலும், அதனைப் பாராமல் ஈச்வரன் காரியம் செய்கைக்கு உறுப்பாய்க் கொண்டு [3] அவ்வுபாயத்திற்கு அங்கமாகவிருந்த ஆசாரிய அபிமானத்தை, இப்போது சுவதந்திர உபாயமாகச் சொல்லுவான் என்?

---

[1] 'பசுர்மநுஷ்ய:' என்கிற சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'ஞானம்' என்று தொடங்கி.

[2] 'உபாயாந்தரங்களுக்கு' என்பது முன்புள்ள புத்தகங்களில் உள்ள பாடம்.

[3] அவ்வுபாயத்திற்கு - பிரபத்தியுபாயத்திற்கு.

ஒன்றற்கே [1] இரண்டு தன்மைகளும் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வியாக் :—ஆசாரிய அபிமானந்தான்-ஆசாரிய அபிமானமாகிற இதுதான், பிரபத்தி போலே உபாயாந்தரத்துக்கு அங்கமுமாய் சுவதந்திரமுமாய் இருக்கும்—[2] 'அந்த ஆதி புருஷனையே சரணம் அடைகின்றேன்', 'அவனையே சரணமாக அடைவாய்' என்று சொல்லுகிறபடியே விரோதியான பாவங்கள் அழிவதற்கும் பக்தி வளர்வதற்கும் காரணமாய்க்கொண்டு, வேறு உபாயமான பக்திக்கு அங்கமுமாய், அந்தப் பக்தியை விடுதல் முன்னாக [3] 'என்னையே உபாயமாகப்பற்று' என்று விதிக்கும்படி விரும்பினவற்றை அடைதற்கும் விருப்பமில்லாதனவற்றை நீக்குதற்கும் தானே உபாயமாய்க் கொண்டு சுவதந்திர உபாயமுமாகவிருக்கும் பிரபத்தி போன்று, [4] உபாயத்திற்கு வேண்டிய அதிகாரத்தின் குறைவினைப் பார்த்து ஈச்வரன் உபேக்ஷியாமல் காரியம் செய்கைக்கு உறுப்பாகையாலே, தன்னின்வேருய உபாயமான பிரபத்திக்குப் பலன் தரும் சக்தியை உண்டாக்காநின்றுகொண்டு அவ்வழியாலே அதற்கு அங்கமுமாய், அந்தப் பிரபத்தியை ஒழியத் தன்னையே உபாயமாகக் கொள்ளுமளவில் விருப்பம் இல்லாதனவற்றை நீக்குதல் முதலாயினவற்றிற்குத்

---

[1] இரண்டு தன்மைகள் - வேறு ஒன்றற்கு அங்கமாதலும் தானே சுவதந்திரமாகவிருத்தலும்.

[2] இச்சூத்திரத்திற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருளில், பிரபத்தி, பத்திக்கு அங்கமுமாய்த் தானே சுவதந்திரமுமாய் இருப்பது போன்று ஆசாரிய அபிமானமும் பிரபத்திக்கு அங்கமுமாய்த் தானே சுவதந்திரமுமாய் இருக்கும் என்பது கருத்து. இந்தப் பொருளுக்கு 'உபாயாந்தரத்துக்கு' என்கிற ஒருமைப் பிரயோகம் பொருந்துவது காண்க.

பிரபத்தி, பக்திக்கு அங்கமாகவிருத்தற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அந்த' என்றும், 'அவனையே' என்றும் தொடங்கி.

'தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே' என்பது, ஸ்ரீகீதை, 15 : 4.

[3] 'தமேவசரணம் கச்ச' என்பது, ஸ்ரீகீதை, 18 : 62.

[4] தானே சுவதந்திரமாக இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'என்னையே' என்று தொடங்கி.

'மாமேகம் சரணம் வ்ரஜ' என்பது, ஸ்ரீகீதை, 16.

தானே உபாயமாய்க்கொண்டு சுவதந்திரமுமாய் [1] இருக்கும் என்றபடி.

[2] அன்றிக்கே, [3] ‘ஆசாரியனால் உபதேசிக்கப்படாத இந்தக் கல்வியானது நிச்சயமாக அழிந்துவிடுகிறது’ என்றும், [4] ‘சாஸ்திரம் முதலானவைகளில் நன்றாகப் பார்த்திருந்தாலும் கல்வியானது சத்குருவின் உபதேசம் இல்லாதபோது அங்கங்களோடு கூடினதாயும் பல சித்தியோடு கூடினதாயும் சித்திக்கிறதில்லை’ என்றும் சொல்லுகையாலே, யாதேனும் ஒரு கல்வியைக் கற்கப் புகுமவனுக்கும் அதற்கு ஓர் ஆசாரிய உபதேசம் வேண்டுகையாலே, ஆசாரிய அபிமானம் எல்லா உபாயங்களுக்கும் அங்கமாகவிருக்க, [5] ‘அவர்கள் அந்த வைஷ்ணவர்களுடைய சம்பந்தத்தாலே விஷ்ணுவினுடைய உயர்ந்த உலகமாகிற பரம பதத்தை அடைகிறார்கள்’ என்று சுவதந்திர உபாயமாகச் சொல்லுவான் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால் என்னவுமாம்.

அதாவது, பிரபத்திதான் கர்மஞான பக்திகளாகிற மற்றைய உபாயங்களுக்கு, அவை உண்டாதற்கும் வளர்வதற்கும் அவற்றினுடைய விரோதிகள் நீங்குவதற்குமாகச் சொல்லப்பட்டதாய்க்

---

[1] ஆசாரிய அபிமானம் அங்கமுமாய்ச் சுவதந்திரமுமாக இருக்கும் என்பதனை விளக்குகிறார் ‘உபாயத்திற்கு’ என்று தொடங்கி.

‘இருக்கும்’ என்னும் இதற்கு எழுவாய் இச்சூத்திர வியாக்கியானத்தில் முதலில் தொடங்கும் ‘ஆசாரிய அபிமானமாகிற இதுதான்’ என்பது.

[2] இரண்டாவதாக வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் ‘அன்றிக்கே’ என்று தொடங்கி. இப்பொருளில் ‘உபாயாந்தரம்’ என்றது, தொகுதி ஒருமை.

[3] ‘அநாசார்யோபலப்தாஹி வித்யேயம் நஶ்யதித்ருவம்’ என்பது, பிரமாணம்.

[4] ‘ஶாஸ்த்ராதிஷு ஸுத்ருஷ்டாபி ஸாங்கா ஸஹபலோதயா
நப்ரஸித்யதிவை வித்யா விநாஸதுபதேஶத:’

என்பது பாரத்வாச சம்ஹிதை. இவ்விரு சுலோகங்களும் ஆசாரிய அபிமானம் அங்கமாய் இருத்தற்குப் பிரமாணங்கள்.

[5] ‘தேநைவதே ப்ரயாஸ்யந்தி’ என்பது, பிரமாணம். இச்சுலோகத்தை மேலே 207ஆம் சூத். வியாக்கியானத்தில் காண்க. இது ஆசார்ய அபிமானம் சுவதந்திரமாவதற்குப் பிரமாணம்.

கொண்டு அவற்றிற்கு அங்கமுமாய் [1] ‘மற்றைய உபாயங்களால் பெறக் கூடியதல்லாததான தன் விருப்பத்தில் மகா விசுவாசத்தை முன்னிட்டு அவன் ஒருவனே உபாயமாகவிருக்க வேண்டும் என்கிற ஆசையானது பிரபத்தியாகும்; அதுவே சரணுகதியுமாம்’ என்கிறபடியே மற்றைய உபாயங்களை நீக்கிப் பிரபத்தியையே உபாயமாகக் கொள்ளுமளவில், விருப்பமில்லாதவை நீங்குதல் முன்ஞக விருப்பமுள்ளனவற்றை அடைதற்குத் தானே நிர்வாஹகமாய்க் கொண்டு சுவதந்திரமாய் இருக்குமாறு போன்று, ஆசாரிய அபிமானமாகிற இதுதான், யாதேனும் ஓர் உபாயத்திற்கும் ஆசாரிய உபதேசம் அவசியம் வேண்டப்படுவதாகையாலே அவ்வழியாலே மற்றைய உபாயங்களுக்கு அங்கமாக இருந்ததேயாகிலும் [2] ‘குழந்தைகளும் ஊமையர்களும் அறிவில்லாதவர்களும் குருடர்களும் சத்குருவிஞலே பார்க்கப்பட்டவர்களாகிப் பரமபதத்தை அடைகிருர்கள்’ என்றும், [3] ‘பசுர் மநுஷ்ய: பக்ஷீவா’ என்றும் சொல்லுகிறபடியே தானே மோக்ஷத்தைக் கொடுப்பதாகையாலே சுவதந்திர உபாயமுமாகவிருக்கும் என்றபடி. (51)

## 465

பக்தியில் அசக்தனுக்குப் பிரபத்தி; பிர
[4] பத்தியில் அசக்தனுக்கு இது.

என்பது சூத்திரம்.

அவ :—இப்படி, சுவதந்திரமான இந்த உபாயத்திற்கு அதிகாரி இன்னுர் என்று அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

1 ‘அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம்
தததேகோபாயதா யாச்ஞா ப்ரபத்திஶ்ஶரணுகதி:’

என்பது, பிரமாணம். இது பிரபத்தி சுவதந்திரமாயிருப்பதற்குப் பிரமாணம்.

2 ‘பாலமூட ஜடாந்தஶ்ச பங்கவோ பதிராஸ்ததா
ஸதாசார்யேண ஸந்த்ருஷ்டா: ப்ராப்நுவந்தி பராங்கதிம்’

என்பது, பிரமாணம்.

3 ‘பசுர்மநுஷ்ய: பக்ஷீவா’ இச்சுலோகத்தை 207ஆம் சூத்திரத்தின் வியாக்கியானத்தில் காண்க.

இவை, ஆசாரிய அபிமானம் சுவதந்திரமாய் இருப்பதற்குப் பிரமாணம்.

4 அசக்தன் - ஆற்றல் இல்லாதவன். இது - ஆசாரிய அபிமானம்.

வியாக் :—பக்தியில் அசக்தனுக்குப் பிரபத்தி—[1]' கர்மத்தாலும் ஞானத்தாலும் அலங்கரிக்கப்பட்ட பரிசுத்தமான மனத்தினையுடையவனுக்கு' என்கிறபடியே முற்பிறவிகள் பலவற்றிலே ஈட்டப்பெற்ற கர்மத்தாலும் ஞானத்தாலும் நன்ருகத் தூய்மை செய்யப்பெற்ற மனத்தையுடையவனுக்கு உண்டாகுமதாய், தன்னுடைய பாரதந்திரியத்திற்கு விரோதியான தன் முயற்சியால் செய்யக்கூடியதாயிருக்கும் பக்தியாகிற உபாயத்தில், செய்தற்கு அரியது என்ற புத்தியாலும் [2]சொரூபத்திற்கு விரோதியானது என்ற புத்தியாலும் ' நாம் இதனைச் செய்தற்கு ஆற்றலுடையோம் அல்லோம்' என்று கைவாங்கினவனுக்கு, [3]நிவிருத்தியாலே சாதிக்கப்படுவதாகையாலே செய்தற்கு எளியதுமாய்ப் [4]பகவத் பாரதந்திரிய சொரூபத்திற்குத் தகுந்ததுமான பிரபத்தி உபாயமாகும்.

பிரபத்தியில் அசக்தனுக்கு இது—[5]அத்தியவசாய ஞானத்தின் வடிவமான பிரபத்தியுபாயத்தில் மஹாவிசுவாசம் உண்டாகை அரிதாகலானும், பந்தமோக்ஷங்கள் இரண்டற்கும் பொதுவான ஈச்வரனுடைய சுவாதந்திரியத்தாலும், ' நாம் இந்தப் பிரபத்தி உபாயத்திற்கு ஆற்றலுடையோம் அல்லோம்' என்று தேங்கினவனுக்கும் பசு முதலானவைகளுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கையாலே, விசுவாசத்தையும் வேண்டப்படுவதொன்றல்லாமையாலே, மோக்ஷத்திற்கே காரணமுமாகவிருக்கும் பரதந்திரனை ஆசாரியனுடைய அபிமானத்தின் வடிவமான இந்தச் சரமோபாயம் என்றபடி.

பக்தியைச் செய்வதற்கு ஆற்றல் இல்லாதவனுக்கு, செய்தற்கு அருமையும் சொரூபத்திற்கு விரோதியாக இருத்தலும் ஆகிற இரண்டும் காரணங்களாகிலும், இவ்விடத்தில் சொரூபத்திற்கு விரோதியாக இருக்கும் காரணமே முதன்மையான காரணம். பிரபத்தியைச் செய்தற்கு ஆற்றல் இல்லாதவனுக்கு, விசுவாசத்தில் குறைவும், பகவானுடைய சுவாதந்திரியத்தில்

---

[1] ' உபயபரி கர்மிதஸ்வாந்தஸ்' என்பது, சித்தித்திரயம்.

[2] சொரூபத்திற்கு - அத்யந்த பாரதந்திரிய சொரூபத்திற்கு.

[3] நிவிருத்தி - வேறு யாதொரு முயற்சியும் இன்றியிருத்தல்.

[4] பகவத் பாரதந்திரிய சொரூபம் - பகவானுக்கே பரதந்திரப்பட்டிருக்கிற ஆன்மாவின் சொரூபம்.

[5] அத்தியவசாய ஞானம் - உறுதியான ஞானம்.

அச்சமும் ஆகிற காரணங்கள் இரண்டும் உளவேயாகிலும், பகவானுடைய சுவாதந்திரியத்தால் ஆய அச்சமே முதன்மை யான காரணம்; [1] 'ஸ்வஸ்வாதந்திரிய பயத்தாலே பக்தி நழுவிற்று', 'பகவத் ஸ்வாதந்திரிய பயத்தாலே பிரபத்தி நழுவிற்று' என்றிறே இவர் தாம் மேலே அருளிச்செய்தது.

இவற்றால், வேறு உபாயங்களைச் செய்வதற்கு ஆற்றல் இல்லாமையாலே வேறு புகல் இல்லாதவனே பிரபத்திக்கு அதிகாரியாமாறு போன்று, இந்தச் சரமோபாயத்திற்கு [2]அதிகாரி யும், வேறு உபாயங்களைச் செய்வதற்கு ஆற்றல் இல்லாமை யாலே வேறு புகல் இல்லாதவன் என்றதாயிற்று.

அன்றிக்கே, ஆசாரிய அபிமானமாகிற இந்தச் சரமோ பாயத்தின் சுவதந்திரத் தன்மையை 'பக்தியில் அசக்தனுக்குப் பிரபத்தி; பிரபத்தியில் அசக்தனுக்கு இது' என்ற இதனாலே நிலை நிறுத்துகிறார் என்னவுமாம். மேலே கூறியதற்கும் இதற்கும் பொருளில் வேறுபாடு இல்லை. பக்தியைச் செய்வதற்கு ஆற்றல் இல்லாதவனைக் குறித்து விதிக்கப்பட்ட பிரபத்தி உபாயம் சுவ தந்திரமானாற்போன்று, பிரபத்தியைச் செய்வதற்கு ஆற்றல் இல்லாதவனைக் குறித்துச் சொல்லப்பட்ட இதுவும் சுவதந்திர மாகக் குறை இல்லை என்பது கருத்து. (52)

## 466

[3] இது, பிரதமம் சொரூபத்தைப் பல்லவம் ஆக்கும்; பின்பு புஷ்பிதம் ஆக்கும்; அனந்தரம் பலபர்யந்தம் ஆக்கும்.

என்பது சூத்திரம்.

---

[1] தாம் அருளிச்செய்த பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார். 'ஸ்வஸ்வாதந்திரிய பயத்தாலே' என்று தொடங்கி. இவை, 447, 448ஆம் சூத்திரங்கள்.

[2] 'அதிகாரியும் – வேறு புகல் இல்லாதவன்' என முடிக்க.

[3] பிரதமம் – முதலில். சொரூபம் – சேஷத்துவ பாரதந்திரிய சொரூ பத்தை. பல்லவமாக்கும் – தளிர் விட்டு எழச்செய்யும். பல்லவம் – தளிர். புஷ்பிதமாக்கும் – மலரச் செய்யும். புஷ்பம் – மலர். அநந்தரம் – பின்பு. பலம் – பழம். இது – இந்த ஆசாரிய அபிமானம். 'இது' என்பதனை, ஏனை இரண்டற்கும் தனித்தனியே கூட்டுக.

அவ :—இந்த ஆசாரிய அபிமானம், இவனுக்கு உண்டாக்கும் பலன்களின் பரம்பரையை அருளிச்செய்து இவ்வர்த்தத்தை முடித்தருளுகிறுர் இச்சூத்திரத்தால்.

வியாக் :—'இது பிரதமம் சொரூபத்தைப் பல்லவமாக்கும்' என்றது, இப்படி மேலே சொன்ன ஆசாரிய அபிமானமாகிற இது, முதலிலே இவனுக்குப் பிரணவத்தால் சொல்லப்படுகிற பகவானுக்கே உரிமைப்பட்டிருக்கிற சேஷமாகிற தன்மையை [1] முடிந்த எல்லையளவும் உணர்த்தி, அநாதி காலம் சுவாதந்திரியமாகிற நெருப்பிலே மண்டிச் சருகு எழுந்து கிடந்த சொரூபத்தைத் தளிர்த்து எழும்படியாக்கும் என்றபடி. 'பின்பு புஷ்பிதமாக்கும்' என்றது, இப்படித் தளிர்த்த பின்பு, [2] நடுப் பதத்தால் சொல்லப்படுகிற பகவானைத் தவிர வேறு புகல் இன்மையை முடிந்த எல்லையளவும் உணர்த்தி, பழத்திற்கு அறிகுறியான மலர் போன்று பலத்திற்கு அறிகுறியான [3] உபாய அத்யவசாயத்தாலே சொரூபத்தை மலரும்படி ஆக்கும் என்றபடி. 'அநந்தரம் பலபர்யந்தமாக்கும்' என்றது, இப்படி மலர்ந்த பின்பு, [4] மூன்ரும் பதத்தால் சொல்லப்படுகிற அநந்ய போகத்வத்தையும் முடிந்த எல்லையளவும் உணர்த்தி, நித்திய கைங்கரியத்தின் சேர்க்கையாலே சொரூபத்தைப் பலபர்யந்தமாக்கும் என்றபடி.

[5] முதல் இரஹஸ்யமான திருமந்திரத்தில் மூன்று பதங்களாலும் சொல்லப்படுகிற அநந்யார்ஹசேஷத்வம் முதலான

---

[1] முடிந்த எல்லை - சேஷத்துவத்திற்கு முடிவான எல்லை. அதாவது, அடியார்களுக்கு அடிமையாதல்.

[2] நடுப்பதம் - திருவெட்டெழுத்திலே உள்ள மூன்று பதங்களுள் நடுப்பதம்; நமঃ பதம்.

[3] உபாய அத்யவசாயம் - உபாயத்தினிடத்திலே கொண்ட உறுதியான ஞானம்.

[4] மூன்ரும் பதம் - திருவெட்டெழுத்திலே உள்ள மூன்ரும் பதம்; 'நாராயணுய' என்னும் பதம்.

[5] சூத்திரப் பொருளை முடித்துக் காட்டுகிறுர் 'முதல் இரஹஸ்யமான' என்று தொடங்கி. அதாவது, ஆசாரிய அபிமானமானது, திருமந்திரத்தில் உள்ள மூன்று பதங்களுள் முதல் பதமான பிரணவத்தால் தெரிவிக்கப்படுகின்ற அநந்யார்ஹசேஷத்துவ ஞானத்தை முதலில் உண்டாக்கும்; பின், நடுப்பதமான 'நமঃ' பதத்தால் தெரிவிக்கப்படுகின்ற அநந்ய சரணத்வ ஞானத்தை உண்டாக்கும்; பின், மூன்ரும்

மூன்று தன்மைகளும் ஆன்மாவிற்குச் சொரூபமாய், அவைதாம் சரம பர்வ பர்யந்தமாயிறே இருப்பன. இவைதாம், ஆசாரிய னுடைய உபதேசம் முதலானவைகளாலே பெறத்தகுவன வாகையாலும், அந்த உபதேசம் முதலானவற்றிற்கு அடி 'இவன் நம்முடையவன்' என்கிற ஆசாரிய அபிமானமே யாகையாலும், ஆசாரிய அபிமானம் இவற்றை உண்டாக்கும் என்கிறது.

ஆக, [1] இப்படி இருந்துள்ள மூன்று பதங்களின் பொருள் களில் நிலை நிற்கும் தன்மையை இவ்வாசாரிய அபிமானம் இவனுக்கு உண்டாக்கி உஜ்ஜீவிப்பித்தேவிடும்படி சொல்லிற்று யிற்று.

[2] அன்றிக்கே, இப்படிச் சுவதந்திர உபாயமான இது, இவன் சொரூபத்தைப் பர்வமுறையிலே உஜ்ஜீவிப்பிக்கும்படியை விளக்காநின்றுகொண்டு, இப்பொருளை முடித்தருளுகிறார் இச் சூத்திரத்தால் என்னவுமாம்.

அதாவது, இது பிரதமம் சொரூபத்தைப் பல்விதமாக்கும் - ஆசாரிய அபிமானமாகிற இது, முதலில், பகவத் விஷயத்திலே சேர்ப்பித்து, அநாதி காலம் அவனுடைய சம்பந்தம் இல்லாமை யாலே [3] 'வாடினேன்' என்னும்படி உருவிக்கிடந்த சொரூ

பதமான 'நாராயணாய' பதத்தால் தெரிவிக்கப்படுகின்ற அநந்ய போகத்வ ஞானத்தை உண்டாக்கிக் கைங்கரியத்திலே கொண்டுபோய் மூட்டும் என்றபடி. இவற்றையே தளிராகவும் மலராகவும் பலமாகவும் உருவகிக்கிறார் காரண காரிய முறை பற்றி. அநந்யார்ஹசேஷத்வம் - இறைவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல். அநந்யசரணத்வம் - இறைவன் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருத்தல். அநந்ய போகத்வம் - இறைவனையே இன்பமாகக் கொண்டிருத்தல். முதல் இரஹஸ்யம் என்றது, இரண்டாவது இரஹஸ்யமான துவயமும், மூன் றுவது இரஹஸ்யமான சரமச் சுலோகமும் உளவாதலின்.

[1] முதன்முதலில் உரைப்பாயிரத்தின் தொடக்கத்தில் 'வேதமனைத் திற்கும் சுருக்கமான திருமந்திரத்தில்' என்று தொடங்கிய பொருளை ஈண்டு முடித்துக்காட்டியிருக்கும் அழகு அறிந்து போற்றுதற்குரியதாம்.

[2] இச்சூத்திரத்திற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'பர்வமுறையிலே' என்றது, பிரதம பர்வம், மத்தியமபர்வம், சரமபர்வம் என்பனவற்றை. பிரதமபர்வம் - இறைவனைப் பற்றுதல். மத்தியமபர்வம் - பாகவதர்களைப்பற்றுதல். சரமபர்வம் - ஆசாரியனைப் பற்றுதல்.

[3] பெரிய திருமொழி, 1. 1 : 1.

பத்தைத் தளிர்க்கச் செய்யும். பின்பு புஷ்பிதமாக்கும்—பின்பு பாகவத விஷயத்திலே ஊன்றுவித்துப் பலத்திலே சேர்வதற்குத் தகுதி ஆக்குகையாலே, தளிராகவிருந்த இதனை மலரச் செய்யும். அநந்தரம் பலபர்யந்தமாக்கும்—பின்பு [1] ‘நின்று தன் புகழ் ஏத்த’ என்கிறபடியே சரமபர்வத்திலே நிலை பெறுத்தி, மலர்ந் திருந்தனவற்றைப் பலபர்யந்தமாக்கும் என்னவுமாம். (53)

[2] ஆக, இந்தப் பிரகரணத்தால், ஆசாரியனை உபாயமாகப் பற்றினர்க்கு அச்சம் அச்சமின்மை என்னும் இரண்டும் மாறி மாறி நடக்கும் தன்மை இல்லாமையும், [3] இப்பொருளை நிச்சயம் செய்வதற்கு உரிய பிரமாணம் இன்னது என்னுமதுவும், [4] இப் பொருளை உறுதிப்படுத்துவதற்குத் தக்க விளக்கமும், [5] ஐதிஹ்ய மும், [6] இப்பொருளை விளக்கும் நிமித்தமாகப் பேற்றின் நிச்சய மும், [7] இப்படிப் பேற்றினை நிச்சயம் செய்தால் இதற்கு ஒத்த தாகவே கொள்ள வேண்டும் அதற்கு உரிய வழியினையும் என்னு மதுவும், [8] அங்ஙனம் கொள்ளாத போது வரும் குற்றமும், [9] ஈச்வரன் திறத்தில் இவ்வாசாரியனுக்கு உள்ள சரணத்வ பாரதந்திரிய அநந்யத்வங்களை அறிவித்துக்கொண்டு ஈச்வரனைப் பற்றுவதனைக்காட்டிலும் இவனைப் பற்றுமதற்கு உள்ள விசேட மும், [10] ஈச்வரசேதநர்கள் இருவர்க்கும் இவன் உபகாரகன் என்றும், ஈச்வரனும் ஆசைப்படும்படியான பதத்தையுடையவன் என்றும், இவன் செய்யும் உபகாரத்திற்கு ஒப்பானதொரு உபகாரம் இல்லை என்றும், இவனுடைய சம்பந்தம் மோக்ஷத் திற்கே காரணமாகவிருக்கும் என்றும், ஈச்வரனை உபகரித்த

---

[1] கண்ணி நுண்சிறுத்தாம்பு, 6.

[2] இந்தப் பிரகரணத்தில் கூறப்பட்டவற்றைத் தொகுத்து அருளிச் செய்கிறார் ‘ஆக’ என்று தொடங்கி.

இதனை 411ஆம் சூத். காண்க.

[3] இதனை 412ஆம் சூத். காண்க.

[4] இதனை 413ஆம் சூத். காண்க.

[5] இதனை 414ஆம் சூத். காண்க.

[6] இதனை 415 முதல் 427 முடிய உள்ள சூத். காண்க.

[7] இதனை 428ஆம் சூத். காண்க.

[8] இதனை 429ஆம் சூத். காண்க.

[9] இதனை 430ஆம் சூத்.•காண்க.

[10] இவற்றை 431 முதல் 439 முடிய உள்ள சூத். காண்க.

இவனைக்காட்டிலும் இவனைத் தந்த ஈச்வரனே மகோபகாரகன் என்றும் இவ்வாசாரிய வைபவமும், [1] ஆத்ம குணம் உண்டானாலும் ஆசார்ய சம்பந்தம் நெகிழில் பயன் இன்மையும் தாழ்வு உண்டாதலும் ஈச்வரனுடைய தண்டனைக்குக் காரணமாதலுமாம் படியும், [2] ஆசாரிய சம்பந்தம் குலைந்தால் பகவானுடைய சம்பந்தம் அரிது என்பதும், [3] ஆசாரியனைச் சேர்வதற்கும் பாகவத சம்பந்தம் வேண்டத்தக்கது என்பதுவும், [4] ஆசாரிய அபிமானம் ஒழிய உய்வதற்கு வழியில்லை என்பதற்கு ஆப்த உபதேசமும், [5] இவ்வர்த்தத்தை உறுதிப்படுத்தி நிலைநிறுத்துதலும், [6] இவ்வாசாரிய அபிமானத்தில் நிலை நின்றவன் எளியதான இவ்விஷயத்தை விட்டு அரியனான பகவானைக் காப்பவனாக விரும்பக்கடவன் அல்லன் என்றும், பரத்துவம் முதலான அடையத்தக்க இடங்கள் எல்லாம் இவ்வாசாரியனே என்றிருக்கக் கடவன் என்றும், இவனுக்குப் பகைவரும் நட்டோரும் நொதுமலரும் இன்னார் என்றும், இவனுடைய ஞானத்திற்கும் ஒழுக்கத்திற்கும் உபயோகமும், [7] இவனுக்குப் பிறர்மனை நயத்தல் தன்மனை நயத்தல் முதலானவைகளும் விலக்கத் தக்கவை என்னுமிடமும், [8] சொரூபத்தினின்றும் நழுவுதல் வாராமைக்கு வேண்டும் நிலைகளும், [9] பரமபதத்தில் பிராவண்யம் முதலான மூன்றும் இவனுக்கு அவசியம் வேண்டப்படுவன என்னுமதுவும், [10] ஆசாரியன் திறத்தில் சுவகத ஸ்வீகாரமும் பரகத ஸ்வீகாரமும் உபாயமாகும் தன்மைக்குப் பிரமாணங்களும், [11] ஆசாரிய அபிமானம் சுவதந்திர உபாயமாகும் தன்மையும், [12] அதற்குரிய

---

1 இவற்றை 440 முதல் 442 முடிய உள்ள சூத். காண்க.

2 இதனை 443ஆம் சூத். காண்க.

3 இதனை 444, 445ஆம் சூத். காண்க.

4 இதனை 446ஆம் சூத். காண்க.

5 இதனை 447 முதல் 450 முடிய உள்ள சூத். காண்க.

6 இவற்றை 451 முதல் 455 முடிய உள்ள சூத். காண்க.

7 இவற்றை 456 முதல் 459 முடிய உள்ள சூத். காண்க.

8 இதனை 460ஆம் சூத். காண்க.

9 இதனை 461ஆம் சூத். காண்க.

10 இதனை 462, 463ஆம் சூத். காண்க.

11 இதனை 464ஆம் சூத். காண்க.

12 இதனை 465ஆம் சூத். காண்க.



**திரு அரங்கம் கிழக்கு சித்திர வீதியில் உள்ள**
**மணவாள மாமுனிகள் சந்நிதி**

(இப்பல்லவ மடத்திநுள் ஸ்ரீசைலேச மகாமண்டபமும்,
மறைபொருள் (இரகசியம்) விளைந்தமண் இடப்பட்ட ஆசனமும்,
முகப்பின் மேல் எண்திசைக் கஜங்களும் காணலாம்)



**இத்திருவடி வடிவில் உள்ள**
**இப்பேழைகளில் மணவாளமாமுனிகளது**
**'பொன்னடியாம் செங்கமலப்போது'களை அணிசெய்த**
**திருவடி நிலைகளை வைத்து,**
**சடாரியாகவே மடத்தில் பயன்படுத்தப்படுகிறது.**

மன்னுயிர்காள்! இங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

**—எறும்பியப்பா—உபதேச ரத்தினமாலை** (74)

அதிகாரி நிச்சயமும், [1] இவ்வாசாரிய அபிமானம் இவனுக்கு உண்டாக்கும் பலன்களின் பரம்பரையும் சொல்லுகையாலே சதாசாரிய அபிமானமே எல்லார்க்கும் மோக்ஷத்தைத் தரக் கூடியது என்னுமிடம் சொல்லப்பட்டது.

ஆக, இந்தப் பிரகரணத்தால், [2] இரண்டு வாக்கியங்களால் சொல்லப்பட்ட [3] உபாயத்தின் முடிந்த எல்லையையும் உபேயத்தின் முடிந்த எல்லையையும் அருளிச்செய்தாராயிற்று.

**ஆருவது பிரகரணம்**
**சரமபருவ நிஷ்டை நிரூபணம் முற்றிற்று.**

**ஸ்ரீவசனபூஷணமூலமும்**
**வியாக்கியானத்தின் தமிழ் ஆக்கமும்**
**முற்றுப்பெற்றன.**

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.
மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க !
மாறன் மலரடி வாழ்க !

---

[1] இதனை 466ஆம் சூத்திரத்திற் காண்க.

[2] 'இரண்டு வாக்கியங்களால்' என்றது, துவயம் என்னும் மந்திரத்தின் இரண்டு வாக்கியங்களால் என்றபடி.

[3] 'உபாயத்தின் முடிந்த எல்லையையும்' என்றது, ஆசாரிய அபிமானத்தை. 'உபேயத்தின் முடிந்த எல்லையையும்' என்றது, ஆசாரியனுடைய முகமலர்த்தியை.

# பிற்சேர்க்கை

## 1. சூத்திரங்களில் வந்துள்ள உவமைகள்

## 2. சூத்திரங்களில் பேசப்பட்டுள்ள தெய்வங்கள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள், ஏனையோர் பெயர்கள்

[எண்—சூத்திர எண்]

ஆழ்வார் களையும் அருளிச் செயல்களையும்
தாழ்வா நினைப்பவர்கள் தாம்நரகில்—வீழ்வார்கள்
என்று நினைத்து நெஞ்சே எப்பொழுதும் நீயவர்பால்
சென்றணுகக் கூசித் திரி. (35)

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மையறி வாரார்?
அருளிச் செயலைஅறி வாரார்?—அருள்பெற்ற
நாத முனிமுதலா நந்தே சிகரையல்லால்
பேதைமன மேயுண்டோ பேசு. (36)

எம்பெரு மானார் தரிசனமென் றேயிதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமா னார்வளர்த்த
அந்தச் செயல்அறிகைக் கா. (38)

—உபதேச ரத்தினமாலை

# சூத்திர முதற்குறிப்பு அகராதி

(சூத்திர எண்ணும் பக்க எண்ணும்)

பண்டித வித்வான் புருஷோத்தம நாயடு அவர்கள் சிதம்பரத்தை அடுத்த புவனகிரியில் தோன்றியவர். பாட்டனார்-கஸ்தூரி சின்னய்ய நாயடு. பெரிய தந்தையார் - ஸ்ரீமதி புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி சுவாமிகள் (1860—1927). தகப்பனார் - ராஜகோபால் நாயடு. இவர் இளமையில் 3 ஆண்டுகள், திருவரங்கம் பெரிய நிகமம் ஜமீன்தாரர் வைணவ பாடசாலையில் கல்வி பயின்றார். மதுரைச் செந்தமிழ்க் கலாசாலையில் திருநாராயண அய்யங்கார் சுவாமிகள், சேதுரார் கவிராயர் முதலியவர்களிடம் பாலபண்டிதம்வரை கற்று, தேர்ந்தார். இங்கு இவருடன் வேங்கடராஜுலு ரெட்டியார் ஒருசாலை மாணவராகப் பயின்றார். பண்டிதர் பட்டமும் வித்வான் பட்டமும் பெற்றபின், சிதம்பரம் இராமாநுஜ தரிசன வித்யாசாலையில் மேல் வகுப்புகளுக்குத் தமிழ் நூல்கள் பாடம் சொல்லி வந்தார். அப்போது சிதம்பரம் மீனாட்சித் தமிழ்க் கல்லூரியின் முதல்வரான டாக்டர் உ. வே. சா. அய்யர் அவர்கள், இவரது கல்வி, கற்பிக்கும் திறமை, அடக்கம், ஒழுங்கு முதலியவற்றை அறிந்து இவரைக் கல்லூரியில் ஆசிரியராக ஏற்றார். அவருடன் ரெட்டியாரும் ஆசிரியரானார். கரந்தை த. வே. உமா மகேஸ்வரம் பிள்ளை அவர்களால், திருவையாறு அரசர் கல்லூரியில் 1935 முதல் பேராசிரியராக அமர்த்தப்பட்டார். அங்கு அவரிடம் பயின்று வித்வான் பட்டம் பெற்ற மாணவர்கள் பலராவர். 1948 முதல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் துணைப் பேராசிரியராக அமர்ந்து, திருவாய்மொழியின் முப்பத்தாறுயிரப்படி (ஈடு) வியாக்கியானம், ஆசாரிய இருதயத்திற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் ஆகிய இரண்டையும் தமிழாக்கம் செய்தார். அவை சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்துள்ளன. தில்லி பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆதரவால் இந்நூலை எழுதி முடித்தார்.

இந்நூலை வெளியிடும் தி. கி. நாராயணசாமி நாயடு, திரு. வி. க. வின் வாழ்க்கைக் குறிப்புகளில் குறிப்பிடப்பட்டவர். ஞானியார் அடிகளின் அன்பர். கா. சு. பிள்ளையின் 'தமிழ் இலக்கிய வரலாறு', பண்டித மணியின் 'திருவாசக திருச்சதகக் கதிர்மணி விளக்கம்', மு. வ. வின் 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்', வை. சு. வாண்டையாரின் 'கல்வெட்டு', சைவ சித்தாந்த சமாஜத்தாரின் 'சங்க இலக்கியம்', 'சீவக சிந்தாமணி', புதுவை 'பாரதிதாசன் கவிதைகள்' முதலிய நூல்களின் முதற்பதிப்புகள் இவர் உதவியால் வெளியிடப் பட்டவை.

மேல் அட்டையை அணி செய்பவர்கள் ஸ்ரீ பெரும்பூதூரிலுள்ள பிள்ளை லோகாசார்யரும் மணவாள மாமுனிகளும் ஆவர்.